நவின்று— இடைவிடாமல்
உரைப்பார்— அநுஸந்திக்குமவர்கள்
நமோ நாராயணாய என்று—"நமோ நாராயணாய" என்று சொல்லி
பல் ஆண்டு— காலமுள்ளதனையும்
பரமாத்மனை—தன்னையொழிந்தசேதநாசேதநங்களை சரீரமாகவுடைய எம்பெருமானை
சூழ்ந்து இருந்து— சுற்றிநின்று
பல்லாண்டு ஏத்துவர்—மங்களாசாஸநம் பண்ணப் பெறுவர்கள்.
(ஏ - அசை.)

வ்யா.—பவித்திரனை. ஒருபாதியா லன்றிக்கே ஸ்வதச்சுத்தனானவனை. (க) "𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌶𑌿𑌵𑌮𑍍" என்னக்கடவதிறே. இத்தால் அசுசிபதார்த்த ஸம்யோகத்தால் தத்கததோஷாஸம்ஸ்பர்ஷ்டனாகையும், ஸ்வஸம்பந்தத்தாலே அசுத்தன் சுத்தனாகையுமாகிற பரமபாவநத்வம் சொல்லுகிறது. அதாகிறது சேதநாசேதநங்களில் வ்யாபித்தாலும் தத்கததோஷம் ஸ்பர்சியா தொழிகையும், நிர்ஹேதுகமாக நித்யஸம்ஸாரியை நித்யஸூரிகளோடே ஒரு கோவை யாக்குகையும். பரமேட்டியை. பரமே ஸ்தாநே ஸ்திதனானவனை.

சார்ங்கமென்னு மித்யாதி. இது மஹிஷீபூஷணாயுத பரிஜநங்களுக்கு முபலக்ஷணம். அங்குள்ளாரையிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும்படியிறே அவர்களுக்குத் தன்னோடுண்டான ப்ரத்யாஸத்தி. சார்ங்க மென்னும் வில்லாண்டான்றன்னை. சார்ங்கமென்னும் வில் லென்றே யாய்த்து அதுக்கு ப்ரஸித்தி; மத்தகஜத்தை யானுமவ னென்னுமாப்போலே, அத்தை யாளுமவ னென்றாய்த்து இவனுக்கேற்றம். (உ) "𑌆𑌵𑌿𑌰𑍍𑌭𑌤𑍍 𑌦𑌿𑌵𑌾𑌕𑌾𑌰 𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌮𑌹𑌤𑍍𑌧𑌨𑍁𑌃" என்னக்கடவதிறே. இத்தால் "மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா" என்கிற விடத்திலே பவித்ரதையை நினைத்து, "பரமேட்டியை" இத்யாதியாலே—இரண்டாம் பாட்டிற் சொன்ன நித்யவிபூதியோகத்தை நினைக்கிறது.

வில்லிபுத்தூர் விட்டுசித்தன் - பல்லாண்டென்று - விரும்பியசொல். இப்போது, பகவத்ப்ராப்திகாமர், ப்ரயோஜநாந்தரபரர் என்று அடைவடைவே வந்து நின்றாரில்லையிறே; அவ்வவருடைய பாசுரங்களாலே தாமே யருளிச்செய்தாரென்னுமிடம் தோற்றுகிறதிறே. தம்முடைய வார்த்தையாகத் தாம் தலைக்கட்டுகையாலே. அவர்கள் பாசுரமாக அங்குச் சொல்லிற்று— ப்ரயோஜநாந்தரபரர்க்கும் பகவத் ப்ரபாவத்தாலே மங்களாசாஸநம் பண்ணுகைக்கு யோக்யதையுண்டென்னு மிவ்வர்த்தத்தினுடைய ஸ்தைர்யத்துக்காகவும், மங்களாசாஸநத்தில் தமக்குண்டான ஆதராதிசயம் தோற்றுகைக்காகவும். வில்லிபுத்தூர் விட்டுசித்தன். அவ்வூரிற் பிறப்பாலே யாய்த்து பகவத் ப்ரத்யாஸத்தி; பகவத் ப்ரத்யாஸத்தியாலே யாய்த்து மங்களாசாஸந யோக்யமான ப்ரேமாதிசயம். "விட்டுசித்தன்" என்கிற திருநாம முண்டாய்த்து—ஆழ்வார் விடிலும் தான் விடமாட்டாதே தன்பேறாக விவர் திருவுள்ளத்தே நித்யவாஸம் பண்ணினபடியாலே. "விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலன்" என்னக்கடவதிறே.

நல்லாண்டென்று. இப்பாசுரஞ் சொல்லுகைக்கு ஏகாந்தமான காலமென்று காலத்தைக் கொண்டாடி. (ங) "𑌅𑌦𑍍𑌯 𑌮𑍇 𑌸𑌫𑌲𑌂 𑌜𑌨𑍍𑌮" என்னக்கடவதிறே. கண்டதுடைய

(க) "சாச்வதம் சிவம்." (உ) "ஆவிர்ந்த மிவாகார மவஷ்டப்ய மஹாத்ததநூ:"
(ங) "அத்யமே ஸபலம் ஜந்ம."

"மமேதம்" என்றுபோந்த அநாதிகாலம்போலன்றிக்கே, பகவத்ஸம்ர்த், சாஸநம் பண்ணக்கடவதாம்படி வந்ததொருகாலம் சேதநனுக்கு ஸ—துர்லட றுரைப்பார். நவிலுகை - பயிலுகை; இடைவிடாதே யுரைக்கை.

நமோ நாராயணாய வென்று. அநாதிகாலம் "மமேதம்" என்றத்தைத் "தவேதம்" என்கையும். இத்தால் மங்களாசாஸந யோக்யதை சொல்லு ண்டு. காலமெல்லாம். யாவதாத்மபாவி யென்கிறது. காலகர்தபரிணாமமி தில் ஆண்டையிட்டுச் சொல்லுகிறது – அந்த பரிணாமமுள்ள தேசத்தில் ராகையாலே. பரமாத்மனை. தனக்குமேலின்றிக்கே, தன்னை யொழிந்தா மாம்படி யிருக்கிறவனை. இத்தால் அமங்களங்களுக்கு அவகாசமின்றிக்கே ய ஒருவனுடைய மங்களாசாஸநத்தால் ஓரேற்றமுண்டாக வேண்டாதே யிருக்

சூழ்ந்திருந்தேத்துவர். (க) "நம:புரஸ்தா தத ப்ருஷ்டதஸ்தே ந என்கிறபடியே முன்பே நில்லா முறுவலை யநுபவித்து அதிலே யீடுபடும்; பின்பும் பிறகுவாளியுமான வழகை யநுபவித்து அதிலே யீடுபடும்; இப்ப டாநிற்கச்செய்தே, கால்வாங்கவொண்ணாத வடிவழகு அதிசங்கையை வி சாஸநத்திலே மூட்டு மென்கை.

"பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும் வில்லாண்டான் ற துார் விட்டுசித்தன் - பல்லாண்டென்று—விரும்பியசொல் நல்லாண்டென்று ந நமோ நாராயணாய வென்று – பரமாத்மனைச் சூழ்ந்திருந்து— பல்லாண்டுப் ஏத்துவர்" என்றந்வயம். ... ... ... ... ... ... ...

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சர

ஜீயர் திருவடிகளே சரணம்.

(*)

அடிவரவு.—பல் அடி வாழ் ஏடு அண்டம் எந்தை தீ நெய் உடுத்து எந்நாள் அல்வழக்குப் பல்லாண்டு வண்ணம்.

ஆதிகூறுதும், அநந்தரம்கூறுமின், அண்டம் என்மின், எந்தை தீ உடுத்து எந்நாள் கூறுதும், நெய்யும் அல்லும் க

# திருப்பல்லாண்டு வ்யாக்யா

முற்றிற்று.

---

(க) "நம:புரஸ்தா தத ப்ருஷ்டதஸ்தே நமோஸ்து தே"



பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

———(*)———

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

———

பெரியஜீயர் அருளிச்செய்த

# பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யாநம்.

———

## அவதாரிகை.

ஸ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஸர்வரக்ஷகனான ஸர்வேச்வரன், தமக்கு ஸந்நிஹிதனானவளவிலே, ப்ரணவத்தில் சொல்லுகிறபடியே அவனைத் தமக்கு ரக்ஷகனாகவும் தம்மை அவனுக்கு ரக்ஷ்யபூதனாகவும் அநுஸந்தித்து, ஸ்வசேஷத்வாநுரூபமான வ்ர்த்திவிசேஷங்களை அவன் திருவடிகளிலே செய்யவமைந்திருக்க, அவனுடைய ஸர்வரக்ஷகத்வாதிகளை அநுஸந்திப்பதற்குமுன்னே, முகப்பிலுண்டான ஸௌந்தர்யாதிகளிலே ஆழங்காற்பட்டு அவனைக் குழைச்சரக்காக நினைக்கையாலும், 'காலாதீதமானவஸ்து காலம் ஸாம்ராஜ்யம்பண்ணும் தேசத்திலே வந்து ஸந்நிஹிதமாவதே! இவ்வஸ்துவுக்கு என்னதீங்கு வருகிறதோ!' என்னும் பயத்தாலும், அவனை ரக்ஷ்யபூதனாக நினைத்து, தாம் ரக்ஷகராய் நின்று மங்களாசாஸநம் பண்ணுகிறவளவில், உபயவிபூதியுக்தனான நிலையிலே மங்களாசாஸநம் பண்ணினவளவன்றிக்கே, அவன் ஸம்ஸாரிஸம்ரக்ஷணார்த்தமாக ப்ரதிகூல பூயிஷ்டமான இத்தேசத்திலே வந்து அவதரித்துச் செய்தருளின சேஷ்டிதங்களை அநுஸந்தித்து, அதீதகாலங்களில் அபதாநங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரியும் ப்ரேமஸ்வரூபராகையாலே திருவவதார விசேஷங்களுக்கு மங்களாசாஸநம் பண்ணியருளினார் திருப்பல்லாண்டிலே. அதுதன்னிலும் "அந்தியம்போதிலரியுருவாகி யரியையழித்தவனைப் பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பாடுதும்" என்றும், "இராக்கதர்வாழிலங்கைபாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டு கூறுதும்" என்றும், ஸ்ரீநர்ஸிஹ்ம ப்ராதுர்ப்பாவத்துக்கும் ராமாவதாரத்துக்கும் மங்களாசாஸநம் பண்ணினவளவன்றிக்கே; "மாயப்பொருபடைவாணனை ஆயிரந்தோளும் பொழிகுருதிபாயச்சுழற்றிய வாழிவல்லானுக்குப் பல்லாண்டு கூறுதும்" என்றும், "ஐந்தலையபைந்நாகத்தலைப்பாய்ந்தவனே யுன்னைப் பல்லாண்டு கூறுதும்" என்றும், இவர் ப்ராசுர்யேண மங்களாசாஸநம் பண்ணிற்று க்ர்ஷ்ணாவதாரத்துக்கேயிறே. ஆழ்வார்களெல்லாரும் 'க்ர்ஷ்ணாவதாரம்' என்றவாறே போர மண்டியிருப்பார்கள். அதுக்கடி—அல்லாத அவதாரங்கள் போலன்றிக்கே, ஸமகாலமாகையாலே "ஒரு செவ்வாய்க்கிழமை முற்படப்பெற்றிலோம்! பாவியேன்! பல்லிலே பட்டுத் தெறிப்பதே!" என்னும் இழவும், பரிவர்த்தேட்டமான அவதாரமாகையாலே, அத்தை அநுஸந்திக்கையால் வந்த வயிற்றெரிச்சலும். ராமாவதாரத்திலே தம்பனார் சம்பராந்தகனாய் ஏகவீரனாயிருப்பானொருவன், பிள்ளைகள் தாங்களும் ஆண்புலிகள், குடிதானே வன்னியமறுத்திருப்பதொரு குடி; இவையெல்லாம் மிகையாம்படி, குணத்தாலே நாட்டையெல்லாம் ஒருமார்வெழுத்தாக்கிக் கொண்டு இருப்பார்கள்; ஆகையாலே எதிரிகள் என்கிற சப்தமில்லை. இங்ஙனன்றிக்கே,

தமப்பனொரு ஸாதுவர்த்தன், பிறந்ததும் கம்ஸன் சிறைக்கூடத்திலே, வளர்ந்ததும் அவன் அகத்தருகே; ஸ்ரீப்ருந்தாவநத்திலே எழும்பூண்டுகளகப்பட அஸுரமயமாயிருக்கும். ரக்ஷகரானவர்கள் ஓரடி தாழநிற்கில் பாம்பின்வாயிலே விழும்படியாயாய்த்து அவன்படியிருப்பது. இப்படியானால் வயிறெரியாதிரார்களே இவர்கள். அவர்களெல்லாரையும் போலல்லவிறே க்ர்ஷ்ணாவதாரத்தில் இவர்க்குண்டான ப்ராவண்யம். அதாவது— "விட்டுசித்தன்மனத்தே கோயில்கொண்ட கோவலன்" என்கிறபடியே தான் பிறந்தபடியும் வளர்ந்தபடியும் இவரைக்கொண்டு கொள்கைக்காக, அவன், இவர் திருவுள்ளத்திலே குடிகொண்டிருக்க, "போகத்தில்வழுவாத புதுவையர்கோன்" என்னும்படி அவதாராநுபவமாகிற போகத்திலொன்றும் நழுவாதபடி "கண்ணன்கேசவன் நம்பிபிறந்தினில்" என்று அவதார ஸமயமே தொடங்கி அதிலுண்டான ரஸமெல்லாம் தாமே முற்றூட்டாக அநுபவித்தாரிறே. இனி, இவ்விஷயத்தில் பரிவிலும் வந்தால், அவர்களுக்கு அது காதாசித்கமாய் இவர்க்கு நித்யமாயிறே யிருப்பது. ஆக, இப்படி க்ர்ஷ்ணாவதாராநுபவாதிகளிலே ப்ரவ்ர்த்தரான இவர், இவ்வவதாரத்துக் கடிசொல்லுகிற விடத்தில், திருக்கோட்டியூரினின்றும் வந்து பிறந்தானென்பானேன்? (க) "ஏஷ நாராயண ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந: । நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம் ॥" என்று க்ஷீராப்திநாதன், இவர்கள் கோஷ்டியிலே யெழுந்தருளி இவர்களுடைய ரக்ஷணசிந்தை பண்ணினமை தோற்றும்படி *உரகமெல்லணையணைப் பள்ளிகொண்டருளின ஸ்தலமாகையாலே அந்த ஐக்யத்தைப் பற்றவும், "அல்வழக்கொன்றுமில்லாவணிக்கோட்டியர்கோன்" என்னும் தமக்கு மங்களாசாஸநத்துக்கு ஸஹகாரியான செல்வநம்பியோடே திருக்கோட்டியூர் ப்ரஸ்துதமாகையாலே அவ்வுகப்பைப் பற்றவும், திருக்கோட்டியூரைத் திருவவதார(உ)கந்தமாக வருளிச்செய்த விதில் விரோதமில்லை. இப்படி க்ர்ஷ்ணாவதார ரஸத்தை அநுபவிக்கிறவளவில ருஷிகளைப்போலே கரையிலே நின்று அவதார குண சேஷ்டிதங்களைச் சொல்லிப்போகையன்றிக்கே, (ங)பாவநா ப்ரகர்ஷத்தாலே (ச)கோபஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணி, யசோதாதிகள் சொல்லும் பாசுரத்தை, தாம் அவர்களாகப்பேசி அநுபவித்துச் சொல்லுகிறார்.

அ.—திருவவதரித்தருளினவளவில் திருவாய்ப்பாடியிலுள்ளார் பண்ணின உபலாளநாதிகளை அநுஸந்தித்து இனியராகிறார் இத்திருமொழியில்.

மூ.—வண்ண மாடங்கள்சூழ் திருக்கோட்டியூர்
கண்ணன் கேசவனம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ண மெதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தளராயிற்றே. க.

பதவுரை.

| | |
|---|---|
| வண்ண மாடங்கள்—அழகிய மாடங்களாலே | திருக்கோட்டியூர்— திருக்கோட்டியூரில் |
| சூழ்— சூழப்பட்ட | கேசவன்— ப்ரசஸ்த கேசயுக்தனாய் |

(க) ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந: । நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம் ॥" (உ) கந்த. (ங) பாவநா ப்ரகர்ஷ. (ச) கோபஜந்ம.

நம்பி— கல்யாணகுணபரிபூர்ணனான
கண்ணன்— க்ர்ஷ்ணன்
இன் இல்— (ஸ்ரீநந்தகோபருடைய) இனிய மாளிகையிலே
பிறந்து— திருவவதரித்து (அதனால்,)
எண்ணெய்— எண்ணெயையும்
சுண்ணம்— மஞ்சள் பொடியையும்
எதிர் எதிர் தூவிட—ஒருவர்க்கொருவர் எதிர்த்துத் தூவ
கண் நல் முற்றம்— விசாலமாய் தர்சநீயமான முற்றமானது
கலந்து— (எண்ணெயும் மஞ்சள்பொடியும்) துகையுண்டு தன்னிலேசேர்ந்து
அளறு ஆயிற்று—சேறாய்விட்டது.
(ஏ - அசை.)

வ்யா.—முதற்பாட்டு. வண்ணமாடங்கள்சூழ் திருக்கோட்டியூர். "வண்ணநன்மணியும் மரகதமு மழுத்தி நிழலெழும் திண்ணைசூழ் திருக்கோட்டியூர்" என்கிறபடியே நாநாவிதமான ரத்நங்களை யழுத்திச் சமைக்கையால் வந்த அழகை யுடைத்தான மாடங்களாலே சூழப்பட்ட திருக்கோட்டியூரில். கண்ணன் கேசவன் நம்பி. ப்ரசஸ்தகேசனாய் பரிபூர்ணகுணனான க்ர்ஷ்ணன். பிறந்தினில். இன் - இல் - பிறந்து; ஸ்ரீமதுரையில் சிறைக்கூடம் போலே பிறந்தவிடம் தோன்றாமல் போகவேண்டாதே, எல்லா வுபலாளநத்துக்கும் யோக்யமான ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகிற இனிய இல்லிலே பிறந்து. அதவா, ப்ரஹ்மருத்ராதிகளுக்குக் காரணபூதனாய் பரிபூர்ணகுணனானவன் க்ர்ஷ்ணனாய் வந்தவதரித்த வளவிலென்னவுமாம். எண்ணெய் சுண்ணம் எதிரெதிர்தூவிட. எண்ணெயையும் மஞ்சள் பொடியையும் ஹர்ஷத்தாலே களித்து ஒருவர்க்கொருவர் எதிர்த்துத் தூவ. கண்ணன் முற்றம். க்ர்ஷ்ணனவதரித்தபோதே க்ர்ஹ நிர்வாஹகன் பிள்ளையாக ஸ்ரீநந்தகோபர் நினைத்திருக்கையாலே கண்ணனுடைய முற்றமென்னுதல்; கண் நல் முற்றம். இடமுடைத்தாய் தர்சநீயமான முற்ற மென்னுதல். கலந்தளறாயிற்றே. இவை இரண்டும் துகையுண்டு தன்னிலே சேர்ந்து சேறாய்விட்டது. ... ... ... ... ... ... ... * க.

மூ.—ஓடுவார் விழுவா ருகந்தாலிப்பார்
நாடுவார் நம்பிரா னெங்குற்றா னென்பார்
பாடுவார்களும் பல்பறை கொட்டநின்
றாடுவார்களு மாயிற் றாய்ப்பாடியே. உ.

பதவுரை.

ஆய்ப்பாடி— திருவாய்ப்பாடி
ஓடுவார்— ஸம்ப்ரமித்து ஓடுவாரும்
விழுவார் — சேற்றிலே வழுக்கி விழுவாரும்
உகந்து ஆலிப்பார்—ப்ரேமத்தாலே கோஷிப்பாரும்
நாடுவார்— பிள்ளையைத் தேடுவாரும்
நம் பிரான்—நமக்கு உபகாரகனான கண்ணன்
எங்கு உற்றான் என்பார்—எங்கேஉள்ளான்? என்பாரும்
பாடுவார்களும்— பாடுவார்களும்
பல் பறை— பல வாத்யங்களும்
கொட்ட— முழங்க
நின்று— அதற்குப் பொருந்தநின்று
ஆடுவார்களும்— ந்ர்த்தம் பண்ணுவாருமாக
ஆயிற்று— ஆயிற்று.
(ஏ - அசை.)

வ்யா.—இரண்டாம்பாட்டு. ஓடுவார். பிள்ளை பிறந்த ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே ஸம்ப்ரமித்து ஓடுவார். விழுவார். ஓடச்செய்தே அளற்றிலே வழுக்கி விழுவார். உகந்து ஆலிப்பார்.

ப்ரீதராய், அந்தப்ரீதி ப்ரகர்ஷத்தாலே ஆர்த்துக்கொள்ளுவார். நாடுவோர். 'பிள்ளை யெங்கே பிள்ளை யெங்கே?' யென்று தேடுவார். நம்பிரானெங்குற்றானென்பார். கண்டிருக்கச்செய்தேயும் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, தங்களுக்கு நிர்வாஹகரான ஸ்ரீநந்தகோபர்மகனை முதன்மை தோற்ற 'நமக்கு ஸ்வாமியானவன் எங்கே?' என்பார். பாடுவோர்களும். ப்ரீதிக்குப்போக்குவிட்டுப் பாடுவார்களும். பல்பறை கொட்டநின்று ஆடுவோர்களும். பலவாத்யங்களும் கொட்ட, அதுக்குப் பொருந்த நின்று ஆடுவார்களும். அங்ஙனன்றிக்கே, சிலர் தங்களுக்குத்தோன்றினபடியே கொட்ட, நிரந்வயமாகக் கூத்தாடுவார்களும் என்னுதல். "பாடுவார்களும்" இத்யாதிக்கு ஒக்க கீழ்ச்சொன்னவை யெல்லாவற்றையும், ஓடுவாரும் விழுவாரும் என்று இங்ஙனே ஸமுச்சயித்துக்கொள்வது. ஆயிற்றுப்பாடியே. இப்படி திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியிலுள்ளாரில் ஒருத்தரும் விக்ருதராகாமலிருந்தாரில்லை யென்றபடி. ...*௨.

மூ.—பேணிச் சீருடைப் பிள்ளை பிறந்தினில்
காணத் தாம்புகுவார் புக்குப் போதுவார்
ஆணொப்பா ரிவனேரில்லைகாண் திரு
வோணத்தா னுலகாளு மென்பார்களே. ௩.

பதவுரை.

சீர் உடை— குணங்களையுடைய
பிள்ளை— பிள்ளையான க்ர்ஷ்ணன்
பேணி— கம்ஸாதிகள் கண்படாதபடி தன்னைக்காத்துவந்து
பிறந்தினில்—பிறந்தவளவில்
தாம்— ஆய்ப்பாடி ஆயர்கள்
காண— (பிள்ளையைக்) காணஆசைப்பட்டு
புகுவார்— உள்ளே நுழைவாரும்
புக்கு— உள்ளேபோய் கண்டு
போதுவார்— புறப்படுவாரும்
ஆண் ஒப்பார்—பும்ஸ்த்வஸாம்யமுடையாரில்
இவன் நேர் இல்லைகாண்!—இவனோடு ஒத்தவர் இல்லைகாண்!
(இவன்,)
திரு ஓணத்தான்— ஸர்வேச்வரனுடைய
உலகு ஆளும்—லோகங்களையெல்லாம் ஆளக்கடவன்
என்பார்கள்— என்று சொல்லுவாருமாக ஆனார்கள்.
(ஏ - அசை.)

வ்யா.—மூன்றும்பாட்டு. பேணிச் சீருடைப் பிள்ளை பிறந்தினில். சீருடைய பிள்ளை பேணிப் பிறந்தினில். அவதரித்தபோதே மாதாபிதாக்கள் சொல்லிற்றுச் செய்கையாலே சீருடைய பிள்ளை யென்கிறது. சீர் - குணம். அதாவது - சிறைக்கூடத்தில் திருவவதரித்தபோதை திவ்ய வேஷத்தைக் கண்டு கம்ஸன் நிமித்தமாக பயப்பட்ட மாதாபிதாக்கள் (௨) "உபஸம்ஹர" என்று அபேக்ஷிக்க, அப்போதே அந்த திவ்யவேஷத்தை மறைத்தானிறே. இப்படி உகவாதார் கண்படாதபடி தன்னைப் பேணிக்கொடுவந்து திருவாய்ப்பாடியிலே புகுந்தபின்புகாணும் இவர் பிறந்தானாக நினைத்திருக்கிறது. காணத்தாம்புகுவார். பிள்ளையைக்காண வாசைப்பட்டுத் தாங்கள் புகுவார். புக்குப்போதுவார். புக்குக்கண்டு புறப்படுவார். ஆணொப்பாரித்யாதி. ஸாமுத்ரிக லக்ஷணம் போவார் இவனைப் பார்த்து, பும்ஸ்த்வஸாம்யமுடையவர்களில் இவனுக்கு ஸத்ர்சரில்லைகாண் என்பாரும், இவனுடைய லக்ஷண

(௨) "உபஸம்ஹர."

மிருந்தபடியால் திருவோணத்தானுன ஸர்வேச்வரனுடைய லோகமெல்லாம் இவன் ஆளும் என்பாருமாய், இப்படி ப்ரீதிவ்யவஹாரம் பண்ணினர்களென்கை. அன்றிக்கே, "ஆணைப்பான் இவன் நேரில்லை" என்று பாடமானபோது, ஆணைப்பென்றது- ஆண்படி; அதாவது- பும்ஸ்த்வ லக்ஷணம். ஒப்பானென்றது- ஒப்பாமென்றபடியாய், பும்ஸ்த்வலக்ஷணத்தால் இவனுக்கு எதிரில்லையென்று பொருளாகக்கடவது. புகுவாரும், போதுவாரும், உலகாளும் என்பார்களுமானர்கள். ... ... ... ... * ந.

மூ.—உறியை முற்றத் துருட்டிநின் ருடுவோர்
நறுநெய் பால்தயிர் நன்ருகத் தூவுவார்
செறிமென் கூந்த லவிழத் திளைத்தெங்கும்
அறிவழிந்தன ராய்ப்பாடி யாயரே. ச.

பதவுரை.

ஆய்ப்பாடி ஆயர் — திருவாய்ப்பாடியில் உள்ள கோபர்கள்
உறியை — (பாலும்தயிருமிருக்கிற) உறிகளை
முற்றத்து உருட்டிநின்று — முற்றத்திலே உருட்டிநின்று
ஆடுவார் — ஆடுவாரும்
நறும் நெய் பால் தயிர் — மணம்மிக்க நெய் முதலியவற்றை
நன்ருக — நிச்சேஷமாக
தூவுவார் — தாநம்பண்ணுவாருமாய்
செறி மென் — நெருங்கி மெத்தென்ற
கூந்தல் — மயிர்முடியானது
அவிழ — அவிழ்ந்து குலையும்படியாக
திளைத்து — ந்ர்த்தநம்பண்ணி
எங்கும் — சேரி அடங்கலும்
அறிவு அழிந்தனர் — க்ர்த்யாக்ர்த்ய விவேக சூந்ய ரானர்கள்.
(ஏ - அசை.)

வ்யா.—நான்காம்பாட்டு. உறியை முற்றத்துருட்டி நின்ருடுவோர். நறுவிதான நெய்யும் பாலும் தயிரும் இருக்கிற உறிகளை, த்ரவ்ய கௌரவம் பாராமல் அறுத்துக்கொடுவந்து ப்ரீதி பாரவச்யத்தாலே முற்றத்திலே யுருட்டி நின்ருடுவார். நறு நெய் பால் தயிர் நன்ருகத் தூவுவார். (க) க்ர்த க்ஷீர தத்யாதிகளை 'பிள்ளைக்கு நன்மை உண்டாகவேணும்' என்று தாநம் செய்வார். செறிமென் கூந்தலவிழத்திளைத்து. செறிந்து மெத்தென்ற மயிர்முடி யவிழும்படி ஸஸம்ப்ரம ந்ர்த்தம்பண்ணி. எங்கு மறிவழிந்தனர் ஆய்ப்பாடியாயரே. திருவாய்ப்பாடியிலுள்ள கோபரானவர்கள் எங்குமொக்க உகவை தலைமண்டையிட்டு க்ர்த்யாக்ர்த்ய விவேக சூந்யரானர்கள். சிலர் உறியை முற்றத்துருட்டிநின்ருட, சிலர் நறு நெய் பால் தயிர் நன்ருகத்தூவ, சிலர்செறிமென் கூந்தலவிழத்திளைத்து, இப்படி ஆய்ப்பாடியாயர் — எங்கும் அறிவழிந்தனரென்று க்ரியை: ... ... ... ... ... * ச.

மூ.—கொண்ட தாளுறி கோலக் கொடுமழுத்
தண்டினர் பறியோலைச் சயனத்தர்
விண்ட முல்லை யரும்பன்ன பல்லினர்
அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாடினர். ரு.

(க) க்ருத க்ஷீர தத்யாதி.

பதவுரை.

| | |
|---|---|
| கொண்ட தாள்— நெருக்கிப்பின்னப்பட்ட | சயனத்தர்— சயநத்தையுடையராய் |
| உறி— உறிகளையும் | விண்ட— விகஸித்த |
| கோலம்— அழகியதாய் | முல்லை அரும்பு அன்ன—முல்லையரும்புபோன்ற |
| கொடு— கூர்மையுடைத்தான | பல்லினர்— பல்லை யுடையரான |
| மழு தண்டினர்— மழுக்களையும் தடிகளையும் உடையராய் | அண்டர்— கோபர்கள் |
| பறி ஓலை— தாழைமடலினின்றும் பறிக்கப்பட்ட ஓலையால் சமைக்கப்பட்ட | மிண்டி புகுந்து— நெருங்கிப் புகுந்து |
| | நெய் ஆடினார்— நெய்யாடல் ஆடினார்கள். |

வ்யா.—ஐந்தாம்பாட்டு. கொண்டதாளித்யாதி. கால்நெருக்கத்தையுடைத்தான உறிகளையும், பரிசுஉண்டாய்க் கூரியதான மழுக்களையும் ஜாத்யுசிதமான தடிகளையு முடையராய், மடலில் நின்றும் பறிக்கப்பட்ட ஓலையாலே கோத்துச் சமைத்த (க) சய்யையு முடையராய்க்கொண்டு; ஹர்ஷம்தோற்ற ஸ்மிதம் பண்ணுகையாலே முல்லையரும்பு விண்டாப்போலே யிருக்கிற பல்லையுடையரான கோபரானவர்கள், நெருங்கிப் புகுந்து நெய்யாடலாடினார்க ளென்கை. "விண்டின்முல்லை" என்று பாடமானபோது, விண்டென்று- குன்றாய், குன்றின் முல்லை நெருங்கிப்பூத்தாற்போலே யிருக்கிற பல்லரென்னவுமாம். இடைக்கூத்தாடுவார் தோற்றுப்பல்லராயிற் றிருப்பது. அண்டர் - தேவரும், இடையரும்; இவ்விடத்தில்- இடையரைச் சொல்லுகிறது. ... ... ... ... ரு.

மூ.—கையும் காலும் நிமிர்த்துக் கடாரநீர்
பைய வாட்டிப் பசும்சிறு மஞ்சளால்
ஐய நா வழித்தாளுக்கங்காந்திட
வையமேழும் கண்டாள் பிள்ளை வாயுளே. சு.

பதவுரை.

| | |
|---|---|
| கையும் காலும்—திருக்கைகளையும் திருவடிகளையும் | அங்காந்திட— (பிள்ளையானவன்) வாயைத் திறக்க |
| நிமிர்த்து— நிமிர்த்து | பிள்ளை வாய் உள்— பிள்ளையாள க்ர்ஷ்ணனுடைய வாயினுள்ளே |
| கடார நீர்—கடாரத்தில் திருமஞ்சனத்தாலே | வையம் ஏழும்— ஸப்தலோகங்களையும் |
| பசும்சிறுமஞ்சளால்—சிறியபசுமஞ்சள்சாத்தி | கண்டாள்— பார்த்தாள். |
| பைய— திருமேனிக்குப் பாங்காக | |
| ஆட்டி— நீர்ஆட்டி | (ஏ - அசை.) |
| ஐய நா வழித்தாளுக்கு — மெல்லியதான நாக்கை வழித்த தாய்க்கு | |

வ்யா—ஆறும்பாட்டு. கையும் காலும் நிமிர்த்து. திருமஞ்சனம் செய்கைக்குடலாகத் திருக்கைகளையும்திருவடிகளையும்நீட்டி, திருமேனியின்மார்தவத்துக்கநுகுணமாகநிமிர்த்து. கடாரநீர்பையவாட்டி. திருமேனிக்கு அநுகுணமாக ஔஷதங்களும் ஸுகந்தத்ரவ்யங்களும்

(க) ஶய்யை.

கூட்டிக்காய்ச்சின கடாரத்தில் திருமஞ்சனத்தாலே திருமேனியலையாமல் மெள்ளத்திருமஞ்சனம் செய்து. பசும் சிறு மஞ்சளால். இது கீழ்மேலும் அந்வயித்துக்கிடக்கிறது. குறுங்கண்ணை பசுமஞ்சளைச்சாத்தியாய்த்து நீராட்டிற்றும். ஐயநாவித்யாதி. அப்படி யிருந்துள்ள மஞ்சளாலே மெல்லிதான திருநாவை வழித்தவளுக்கு— அதுக்கு உடலாக அங்காந்திட, பிள்ளையுடைய வாயுள்ளே ஸகலலோகங்களையும் கண்டாளென்கை. அதுக்கடி - அர்ஜுநனுக்கு திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்து வைச்வரூப்யம் காட்டினாற்போலே, இவளுக்கும் திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்து தன் வைபவத்தைக் காட்டுகையிறே. ... ...* சு.

மூ.—வாயுள் வையகம் கண்ட மடநல்லார்
ஆயர் புத்திர னல்ல னருந்தெய்வம்
பாய சீருடைப் பண்புடைப் பாலகன்
மாய னென்று மகிழ்ந்தனர் மாதரே. எ.

பதவுரை.

வாய் உள்— பிள்ளையுடைய வாயின்உள்ளே
வையகம்— உலகங்களை
கண்ட— பார்த்த
மட நல்லார்—மடப்பத்தையும் நன்மையையுமுடைய
மாதர்— (கோப) ஸ்த்ரீகள்
("இவன்,)
ஆயர் புத்திரன் அல்லன்—கோபகுமாரனல்லன்
அரும்தெய்வம்—பெறுதற்கு அரியதெய்வம்
பாய சீர் உடை—பரம்பினகுணங்களையுடையனும்
பண்பு உடை— நீர்மையையுடையனான
பாலகன்— (இந்த) சிறுப்பிள்ளை
மாயன்— ஆச்சர்யசக்தியுக்தன்"
என்று— என்று சொல்லிக்கொண்டு
மகிழ்ந்தனர்— மிகவும் ஆநந்தித்தார்கள்.
(ஏ - அசை.)

வ்யா.—ஏழாம்பாட்டு. வாயுள் வையகம் கண்ட மட நல்லார். இப்படி திருப்பவளத்தினுள்ளே லோகங்களைக்கண்ட—பவ்யதையையும் ஸ்நேஹத்தையுமுடையவர்கள். "வையமேழும் கண்டாள் பிள்ளைவாயுள்" என்று கீழ் ஒருத்தியாகச் சொல்லிற்றேயாகிலும், அநுபாஷணத்திலே பலராகச் சொல்லுகையாலே, பின்னையும் கூடக் கண்டவர்களுண்டென்று கொள்ளவேணும். அதாவது- இவள் கண்ட வநந்தரம், அருகு நின்றவர்களுக்கும் காட்ட, அவனும், தன் வைபவம் எல்லாரும் அறிகைக்காக அவர்களுக்கும் திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்துக் காட்டக் கூடுமிறே. ஆயர்புத்திரனல்ல னருந்தெய்வம். ஸ்ரீநந்தகோபர் மகனல்லன், பெறுதற்கரிய ஸர்வேச்வரன். பாயசீருடைப் பண்புடைப் பாலகன். பரம்பின கல்யாணகுணங்களை யுடையனாய் நீர்மையுடையனான சிறுப்பிள்ளை. மாயன். ஆச்சர்ய சக்தியுக்தன். என்று மகிழ்ந்தனர் மாதரே. இப்படி சொல்லி மிகவும் ப்ரீதைகளானார்கள் ஸ்த்ரீகளென்கை. "வாயுள் வையகம் கண்ட மடநல்லாரான - மாதர் - பாயசீருடைப் பண்புடைப் பாலகன்-ஆயர்புத்திரனல்லன் அரும் தெய்வம்-மாயனென்று மகிழ்ந்தனர்" என்றந்வயம்.*எ.

மூ.—பத்து நாளும் கடந்த விரண்டாநாள்
எத்திசையும் சயமரம் கோடித்து
மத்த மாமலை தாங்கிய மைந்தனை
உத்தானம்செய் துகந்தன ராயரே. அ.

பதவுரை.

பத்துநாளும் கடந்த— பத்துநாளும்கழிந்த
இரண்டாம் நாள்— இரண்டாநாளான நாமகரண தினத்திலே
எத்திசையும்— எல்லாதிக்குக்களிலும்
சய மரம்— ஜயஸூசகமான தோரணங்களை
கோடித்து— நாட்டி அலங்கரித்து
மத்த மா மலை—மதித்தயானைகளையுடைய(கோவர்த்தனமென்னும்) மலையை
தாங்கிய— தரித்துக்கொண்டுநின்ற
மைந்தனை— மிடுக்கனானகண்ணனை
ஆயர்— இடையர்கள்
உத்தானம் செய்து— கைத்தலத்திலே வைத்துக்கொண்டு
உகந்தனர்— ஸந்தோஷித்தார்கள்.

( ஏ - அசை. )

வ்யா.—எட்டாம்பாட்டு. பத்துநாளும் கடந்த விரண்டாநாள். பத்துநாளும்கடந்த விரண்டாம்நாளான நாமகரண திவஸத்திலே. எத்திசையும் சயமரம் கோடித்து. எல்லாதிக்குக்களிலும் ஜயஸூசகமான தோரணம் நாட்டி அலங்கரித்து. மத்தமாமலை தாங்கியமைந்தனை. வர்ஷாபத்ரக்ஷணார்த்தமாக, மத்தகஜங்களை யுடைத்தான பெரியமலையை தரித்துக்கொண்டு நின்ற மிடுக்கனை. பிற்பாடராகையாலே, தத்காலத்திலன்றிக்கே, பிற்காலத்திலுள்ள சேஷ்டிதங்களையும் அவ்வஸ்துவுக்கு நிரூபகமாக்கி அருளிச்செய்யலாமிறே ஆழ்வார்க்கு. உத்தானம்செய்து உகந்தனர் ஆயரே. இடையரெல்லாரும் ஸ்நேஹாதிசயத்தாலே தனித் தனியே தந்தாம் கைகளிலே யெடுத்துக்கொண்டு ப்ரீதரானார்களென்கை. ... ... ...* அ.

அ.—ஒன்பதாம்பாட்டு. திருவவதரித்தவளவில் ஊரடங்கலும் செய்த உபலாளந விசேஷங்களை அநுஸந்தித்து இனியரானார் - கீழ்; இப்பாட்டில் — பருவத்துக்குத் தகுதியல்லாத சேஷ்டிதங்களை யநுஸந்தித்து, திருத்தாயார், ஸந்நிஹிதரானவர்களுக்குச்சொன்ன பாசுரத்தை, அவளானபாவனையாலே தாம் அநுபவித்து இனியராகிறார்.

மு.—கிடக்கிற் றொட்டில் கிழிய வுதைத்திடும்
எடுத்துக்கொள்ளின் மருங்கை யிறுத்திடும்
ஒடுக்கிப் புல்கி லுதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய். ௯.

பதவுரை.

நங்காய்!—பூர்ணைகளான ஸ்த்ரீகளே!
கிடக்கில்— (இப்பிள்ளை தொட்டிலில்) கிடந்தானாகில்
தொட்டில்— தொட்டிலானது
கிழிய— சிதிலமாம்படி
உதைத்திடும்— உதையாநிற்கும்;
எடுத்துக்கொள்ளில்— (இப்பிள்ளையைஇடுப்பில்) எடுத்துக்கொண்டால்
மருங்கை— இடுப்பை
இறுத்திடும்— முறியாநிற்கும்;
ஒடுக்கி— வ்யாபாரக்ஷமமல்லாதபடி செய்து
புல்கில்— மார்வில் அணைத்துக்கொண்டால்
உதரத்து— வயிற்றிலே
பாய்ந்திடும்— பாயாநிற்கும்;
மிடுக்கு— இந்த சேஷ்டைகளைப் பொறுக்கவல்ல சக்தி
இலாமையால்— (பிள்ளைக்கு)இல்லாமையால்
நான்— (தாயான) நான்
மெலிந்தேன்— மிகவும் இளைத்தேன்.

(ஏ - அசை. )

வ்யா.—கிடக்கிலித்யாதி. தொட்டிலிலே வளர்த்தினால் அதிலே கிடந்தானாகில் தொட்டில் கிழியும்படி உதையாநிற்கும். எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும். 'திருவடிகளின் மார்தவத்துக்கு இது பொறாது' என்று அஞ்சி ஒக்கலையிலே எடுத்துக் கொள்ளில், புடைபெயர்ந்து ஒக்கலையை முறியாநிற்கும். ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும். 'இது அத்திருமேனியின் மார்தவத்துக்குப் பொறாது' என்று வ்யாபாரக்ஷமனல்லாதபடி ஒடுக்கி மார்விலே இட்டுக்கொள்ளில், திருவடிகளாலே வயிற்றிலே பாயாநிற்கும். மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய். 'இந்த செஷ்டிதங்களை யெல்லாம் பொறுக்கவல்ல சக்தி பிள்ளைக்குப் போராது' என்று நான் போர இளைத்தேன். நங்காயென்று ஜாத்யேகவசநமாய், நங்கைமீரென்றபடி. நீங்களெல்லாரும் பருவத்துக்குத்தக்க சேஷ்டிதங்களையுடைய பிள்ளையைப்பெற்று வளர்க்கையாலே பூர்ணைகளாயிருக்கிறீர்களித்தனை. ... * க.

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—செங்நெலார் வயல்சூழ் திருக்கோட்டியூர்
மன்னு நாரணனம்பி பிறந்தமை
மின்னுநூல் விட்டுசித்தன் விரித்தவிப்
பன்னு பாடல்வல்லார்க்கில்லை பாவமே. ய.

பதவுரை.

செம் நெல்— செந்நெல் தாந்யமானது
ஆர்— நிறைந்திருக்கிற
வயல்— கழனிகளாலே
சூழ்— சூழப்பட்ட
திருக்கோட்டியூர்— திருக்கோட்டியூரிலே
மன்னு — நித்யவாஸம் பண்ணுகிற
நாரணன் — நாராயணசப்தவாச்யனும்
நம்பி — குணபூர்ணனுமான கண்ணன்
பிறந்தமை— அவதரித்த ப்ரகாரத்தை,
மின்னு நூல்—விளங்காநின்ற யஜ்ஞோபவீதத்தை யுடைய
விட்டுசித்தன் — பெரியாழ்வார்
விரித்த— பரப்பி அருளிச்செய்ததாய்
இப்பன்னுபாடல்— ஜ்ஞாநிகள் அநவரதம் அநுஸந்திக்கும்படியான இப்பாசுரங்களை
வல்லார்க்கு— கற்குமவர்களுக்கு
பாவம் இல்லை — பாபமில்லை.
(ஏ - அசை.)

வ்யா.—செங்நெலித்யாதி. செந்நெலாலே நிறைந்திருக்கிற வயல்களாலே சூழப்பட்ட திருக்கோட்டியூரிலே, அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனாய்க்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற, நாராயணசப்தவாச்யனாய் கல்யாணகுணபூர்ணனானவன் திருவவதரித்த ப்ரகாரத்தை. மின்னுநூல் விட்டுசித்தன் விரித்த. பட்டர்பிரானாகையாலே விளங்காநின்றுள்ள திருயஜ்ஞோபவீதத்தை யுடையராய், ஸர்வவ்யாபகனான ஸர்வேச்வரனைத் தம் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்கையாலே விஷ்ணுசித்தரென்னும் திருநாமத்தையுடையரான பெரியாழ்வார், திருவவதரித்தகாலத்தில் உபலாளநாதிகளோடேகூட விஸ்தரேண அருளிச்செய்த. இப்பன்னுபாடல் வல்லார்க்கில்லை பாவமே. ரஸ்யதையாலே விசேஷஜ்ஞானவர்கள் எப்போ

தும் சொல்லும்படியான இப்பாட்டை ஸாபிப்ராயமாக வல்லவர்களுக்கு பக்வ தநுபவ விரோதியான பாபமில்லை. ... ... ... ... ... * ௰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு. வண்ண மோடு பேணி யுறி கோண்ட கை
வாய் பத்துக் கிடக்கில் செந்நெல் சீதம்.

(*)

ஆக- திருமொழி, க- க்கு பாட்டு - பத்து ௰.

அ.—கீழ்த்திருமொழியிலே, "திருக்கோட்டியூர் கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" என்று தொடங்கி, "திருக்கோட்டியூர் மன்னு நாரணன் நம்பி பிறந்தமை" என்று தலைக்கட்டுகையாலே திருவவதரித்தருளின ப்ரகாரத்தை தத்காலோபலாளநங்களோடே அநுபவித்து ஹர்ஷடரா யருளிச்செய்தார்; இனிமேல், இப்படி திருவவதரித்தருளினவனுடைய திவ்யவிக்ரஹ வைலக்ஷண்யத்தை தத்தத்காலத்தில் யசோதைப்பிராட்டி அநுபவித்தாற்போலே, தத்பாவயுக்தராய்க்கொண்டு திருவடிகளில் நின்றும் திருமுடியளவாக அநுபவித்த ப்ரகாரத்தை, அப்போது அவள் பேசின பாசுரத்தாலே ஆதரம் தோற்ற அருளிச்செய்கிறார்.

மூ.—சீதக் கடலுள் ளமுதன்ன தேவகி
கோதைக் குழலா ளசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக்கமலங்கள் காணீரே பவளவாயீர் வந்து காணீரே. க.

பதவுரை.

சீதக்கடல் உள் — குளிர்ந்தகடலில் உள்ளமு
அமுது அன்ன — தாகப்பிறந்த பிராட்டியோடு ஒத்த
தேவகி — தேவகிப்பிராட்டி
கோதை — பூமாலையால் அலங்கரிக்கப்பட்ட
குழல் ஆள் — கேசபாசத்தையுடைய
அசோதைக்கு — யசோதைப்பிராட்டிக்கு
போத்தந்த — போகவிட்ட
பேதை குழவி — பேதைமையையுடைய சிசுவானது
பிடித்து — (திருக்கைகளால்) பிடித்து
சுவைத்து — ஆஸ்வாதித்து
உண்ணும் — (திருப்பவளத்தில்வைத்து) புஜியா நின்றுள்ள
பாதக்கமலங்கள் — திருவடித்தாமரைகளை
வந்து காணீர்! — வந்துகாணுங்கோள்!
பவளவாயீர்! — பவளம்போல் சிவந்த அதரத்தை யுடைய பெண்டிர்காள்!
வந்து காணீர்! — (கடுக) வந்து பாருங்கோள்.
["காணீரே" என்றதை இரட்டித்துச் சொன்னதால் ஆதரத்தின் மிகுதி தோற்றுகிறது.]

வ்யா.—முதற்பாட்டு. சீதக்கடல் உள்ளமுதன்ன தேவகி. அகாதமாகையாலே குளிர்த்திமாறாத ஸமுத்ரத்திலே தேவபோக்யமாகப் பிறந்த அம்ர்தம் புறவமுதாம்படி, " அமு

தில் வரும் பெண்ணமுது" என்கிறபடியே உள்ளமுதாகப்பிறந்த பிராட்டியோடொத்த தேவகிப்பிராட்டி. அதாவது- அவள் பரோபகாரசீலையானாற்போலே, இவளும் பரோபகார சீலையென்றபடி. கோதைக் குழலா ளசோதைக்குப் போத்தந்த. பூமாலையாலே அலங்க்ருதமான குழலையுடைய யசோதைப் பிராட்டிக்கு, போகவிட்ட - வரவிட்ட வென்றபடி. போத்தந்த வென்று - ஒரு முழுச் சொல்லு. பேதைக் குழவி. (க) "[illegible]" என்னுமாப்போலே. பேதை பருவத்துக்குத் தக்கவறிவில்லாமை. குழவி - பருவம். பிடித்துச் சுவைத்துண்ணும். திருக்கையாலே பிடித்துத் திருப்பவளத்திலே வைத்து ஆஸ்வாதித்து புஜிக்கும். (உ) "[illegible]" இத்தால் (ங) "[illegible]" "தேனை மலரும் திருப்பாதம்" என்றும் சொல்லக்கேட்டிருக்கையாலே திருவடிகள்தன்னின் போக்யதைதன்னை பரீக்ஷிக்கைக்காக, பருவத்துக்கு அநுகுணமான வ்யாபாரம் செய்வாரைப்போலே செய்தானுதல்; "வையமேழும் கண்டாள்" என்னும்படி திருவயிற்றில்கிடக்கிற லோகங்களுக்கு, சிறைச்சோறுக்கிறானுதல். பாதக்கமலங்கள் காணீரே. இப்படி யிருந்துள்ள திருவடித்தாமரைகளை வந்து காணுங்கோள். கமலமென்கையாலே - திருவடிகளிலுண்டான நிறத்தையும், சைத்ய மார்தவ ஸௌரப்யாதிகளையும் சொல்லுகிறது. பவளவாயீர் வந்துகாணீரே. பவளம்போலே சிவந்த அதரத்தையுடையீர் வந்துகாணுங்கோளென்று, யசோதைப்பிராட்டி, தான் அநுபவித்த அம்சத்தை ஸஜாதீயைகளாய் அநுபுபூக்ஷைக்களா யிருப்பாரையும் ச்லாகித்துக்கொண்டு அழைத்துக்காட்டின பாசுரத்தாலே அருளிச்செய்தாராய்த்து. ... ௧.

அ.—இரண்டாம்பாட்டு. திருவடிகளின் அகவாயை அநுபவித்தாராய் நின்றார் கீழ்; இப்பாட்டில்- திருவடிகளின் திருவுகிருடனே திருவிரற்களை யநுபவிக்கிறார்.

மூ.—முத்து மணியும் வயிரமு நன்பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற் போலெங்கும்
பத்து விரலு மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட்டிருந்தவா காணீரே யொண்ணுதலீர்வந்து காணீரே. உ.

பதவுரை.

| | |
|---|---|
| முத்தும் மணியும்—முத்துக்களையும் ரத்நங்களையும் | பாதங்கள் — திருவடிகளிலுள்ள |
| வயிரமும் — வயிரத்தையும் | பத்து விரலும் — விரல்கள் பத்தும் |
| நன் பொன்னும் — நல்ல பொன்னையும் | ஒத்திட்டு — தன்னிலேசேர்ந்து |
| தத்திப்பதித்து — மாறிமாறிப் பதித்து | இருந்த ஆ — இருந்தபடியை |
| தலைப்பெய்தாப்போல் — சேர்த்தாப்போல் | காணீர்! — காணுங்கோள்! |
| எங்கும் — எங்கும் | ஒண் நுதலீர்!!— அழகிய நெற்றியை யுடைய பெண்டிர்காள்!! |
| மணிவண்ணன் — மணிபோன்ற வர்ணத்தை யுடைய கண்ணனுடைய | வந்து காணீர்!!— வந்துபாருங்கோள்!!. |
| | (ஏ - அசை.) |

(க) "முக்தச்சிசு:" (உ) "வடதளமதிசய்யரங்கதாமந் ! சயித இவார்ணவதர்ணகபேதாப்ஜும்- அதிமுகமுதரே ஜகந்தி மாதும் நிதகித வைஷ்ணவ போக்ய லிப்ஸயாவா" (ங) "விஷ்ணோ:பதே பரமே மத்வ உத்ஸ:"

வ்யா.—முத்துமித்யாதி. திருவடிகளுக்குச் செம்பஞ்சுசாத்துகிறபோது ஒன்பது விரலுக்கும் நவரத்நவர்ணத்தையும்; மற்றொரு விரலுக்கு ஸ்வர்ண வர்ணத்தையும் பரபாகம் தோற்ற மாறிமாறிச்சாத்துகையாலே நீலரத்நம்போன்ற வடிவை யுடையவனுடைய திருவடிகளில் பத்து விரலும், முத்துமாணிக்கம் வயிரம் முதலான நவரத்நங்களையும் நல்லபொன்னையும் மாறிமாறிப்பதித்துச் சேர்த்தாற்போலேயாய், திருவிரல்களினுடைய லக்ஷணத்தில் ஒன்றும் குறைவின்றிக்கே எங்கும் தன்னில் சேர்ந்திருந்தபடியைக் காணுங்கோள்; ஒள்ளிய நுதலையுடைய நீங்கள் வந்து காணுங்கோளென்கை. முத்தும் மணியும் வயிரமுமென்றவிது-அல்லாத ரத்நங்களுக்கும் உபலக்ஷணம். நுதல்-நெற்றி. ... ... ... ... ௨.

அ.—மூன்றாம்பாட்டு. திருவடிகளை அநுபவித்த வநந்தரம், திருக்கணைக்காலினழகை யநுபவிக்கிறார்.

மூ.—பணைத்தோ ளிளவாய்ச்சி பால்பாய்ந்த கொங்கை
அணைத்தாரவுண்டு கிடந்த விப்பிள்ளை
இணைக்காலில் வெள்ளித்தளைநின் றிலங்கும்
கணைக்காலிருந்தவா காணீரே காரிகையீர் வந்துகாணீரே. ௩.

பதவுரை.

பணை — மூங்கில் போன்ற
தோள்— தோள்களை யுடையளாய்
இள ஆய்ச்சி — இளமைப் பருவத்தையுடையளான ஆய்ச்சியின்
பால் பாய்ந்த கொங்கை — பால் சொரிகிற முலையை
அணைத்து— திருக்கைகளால் அணைத்து
ஆர— திருவயிறு பூர்ணமாம்படி
உண்டு— அமுதுசெய்து
கிடந்த— (களித்துக்) கிடந்த
இப் பிள்ளை — இந்த க்ர்ஷ்ணனுடைய
இணை — சேர்த்தியழகையுடைய
காலில் — திருவடிகளில்
வெள்ளி தளை நின்று — வெள்ளித் தண்டை நின்று
இலங்கும்— விளங்காநிற்கிற
கணை கால் இருந்தஆ— கணைக்காலிருந்தபடியை
காணீர்!— பாருங்கோள்!
காரிகையீர்!— அழகியபெண்களே!
வந்து காணீர்;-
(ஏ - அசை.)

வ்யா.—பணைத்தோளிளவாய்ச்சி. பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்விக்கும் வேய்போலேயிருந்துள்ள தோளையுடையளாய், பருவத்தால் இளையளுமான ஆய்ச்சியுடைய. இப்போது இவளை வர்ணிக்கிறது, அழகுக்கும் பருவத்துக்குமீடாக போகபரவசையாயிருக்கையன்றிக்கே, பிள்ளையை ஸ்நேஹித்து நோக்கிக்கொண்டு போருமவளொன்றுமிடம் தோற்றுகைக்காக. பால்பாய்ந்த கொங்கை. ஸ்நேஹத்தாலே நெறித்துப் பால் சொரிகிற முலையை. அணைத்தாரவுண்டு கிடந்த விப்பிள்ளை. திருக்கைகளாலே அணைத்து வயிறார வுண்டு, அத்தாலே ஹர்ஷ்டனாய்க்கிடந்த விப்பிள்ளையுடைய. இணைக்காலி லித்யாதி. அந்யோந்யம் சேர்த்தி யழகையுடைய திருவடிகளில் வெள்ளித்தண்டைநின்று விளங்காநிற்கிற கணைக்காலின் அழகிருந்தபடியை, அநுபவ யோக்யரானவர்கள் வந்து காணுங்கோள். காரிகையீர் வந்துகாணீரே. அழகுடையவர்களாகையாலே அழகின் வாசியறியும் நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... ... ... ௩.

அ.—நாலாம்பாட்டு. திருக்கணைக்காலி னழகை யநுபவித்த வநந்தரம், திருமுழந்தாளினழகை யநுபவிக்கிறார்.

மூ.—உழந்தா ணறுநெய் யோரோதடாவுண்ண
இழந்தாளெரிவிஞ லீர்த்தெழில்மத்தின்
பழந்தாம்பாலோச்சப் பயத்தாற் றவழ்ந்தான்
முழந்தா ளிருந்தவா காணீரே முகிழ்முலையீர்வந்து காணீரே. ௪.

பதவுரை.

உழந்தாள்— ச்ரமப்பட்டு தடாவில்சேர்த்தவளுடைய
நறும் நெய்— மணம்மிக்க நெய்யை
ஓரோ தடா— ஒவ்வொரு தடாவாக
உண்ண— அமுதுசெய்த வளவில்
இழந்தாள்— (பிள்ளையை) இழந்தாளாக நினைத்த தாய்
எரிவினால்— வயிற்றெரிச்சலாலே
ஈர்த்து— (கையைப்பிடித்து) இழுத்து
எழில் மத்தின்— அழகிய மத்திலே
பழம் தாம்பால்— (சுற்றிக்கடைந்து)பழகின தாம்பாலே
ஓச்ச— அடிப்பதாக ஓங்க
பயத்தால்— அச்சத்தாலே
தவழ்ந்தான்— (அத்தைத் தப்பிப்போவதாகத்) தவழ்ந்தவனுடைய
முழம் தாள்— முழங்கால்கள்
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்— காணுங்கோள்
முகிழ் முலையீர்!— முகிழ்த்த முலையையுடைய பெண்களே!
வந்துகாணீர்;—

வ்யா—உழந்தாள். ஆயாஸித்தவள். கறந்து காய்த்துத் தோய்த்துக் கடைந்து வெண்ணெயாக்கி யுருக்கித் தடாக்களிலே சேர்த்துவைத்த வருத்தத்தையெல்லாம் சொல்லுகிறது. நறுநெய் ஓரோதடாவுண்ண. நறுவிதான நெய்யை ஒவ்வொருதடாவாக ஒன்றும் சேஷியாதபடியுண்ண. இழந்தாள் எரிவினால் ஈர்த்து. 'உண்டநெய் பிள்ளைக்கு ஸாத்மியாது' என்று பிள்ளையை இழந்தாளாக நினைத்து, பயப்படுகைபால் வந்த வயிற்றெரிச்சலாலே கையைப்பிடித்திழுத்து. எழில்மத்தின் பழம் தாம்பாலோச்ச. அழகிய மத்திலே சுற்றிக் கடைந்து பழகின தாம்பாலே அடிப்பதாக ஓங்க. பயத்தால் தவழ்ந்தான். பயத்தாலே அத்தைத்தப்புவதாகத் தவழ்ந்தவனுடைய. முழந்தாளிருந்தவா காணீரே. முழந்தாளின் அழகிருந்தபடியைக்காணுங்கோள். முகிழ்முலையீர் வந்துகாணீரே. முகிழ்த்த முலையையுடையீர் வந்து காணுங்கோள். ... ... ... ... ... * ௪

அ—ஐந்தாம்பாட்டு. முழந்தாளினழகை யநுபவித்த வநந்தரம், திருத்துடையினழகை யநுபவிக்கிறார்.

மூ—பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத் துண்டிட்
டுறங்குவான் போலே கிடந்தவிப் பிள்ளை
மறங்கொ ளிரணியன் மார்வைமுன் கீண்டான்
குறங்குகளை வந்து காணீரே குவிமுலையீர் வந்து காணீரே. ௫.

பதவுரை.

முன்— முற்காலத்திலே
மறம் கொள்— த்வேஷம் கொண்ட
இரணியன்— ஹிரண்யனுடைய
மார்வை— மார்வை

உண்டான்— பின்னர்தவனுப்;
பிறங்கிய— (கொடுமையால் வந்த) ப்ரகாசத்தையுடைய
பேய்ச்சி— பூதனையின்
முலை— முலையை
சுவைத்து— (பகை அறும்படி) ஆஸ்வாதித்து
உண்டிட்டு— புஜித்து
உறங்குவான் போலே— ஒன்றும் அறியாதபடி உறங்குமவன் போல்,
கிடந்த— கிடந்த
இப்பிள்ளை— இந்தபிள்ளையின்
குறங்குகளை— திருத்துடைகளை
வந்துகாணீர்!— வந்து காணுங்கோள்!;
குவி முலையீர்!— குவியாநின்ற முலைகளையுடைய பெண்காள்!
வந்துகாணீர்-; (ஏ - அசை.)

வ்யா.—பிறங்கியபேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு. க்ரௌர்யத்தால் வந்த ப்ரகாசத்தையுடையளான பூதனையுடைய முலையைப் பகைபறச் சுவைத்து புஜித்து. உண்டிட்டு என்று—ஒரு முழுச் சொல்லு. உறங்குவான்போலே கிடந்தவிப்பிள்ளை. செய்த பராக்ரமம் ஒன்றும் தெரியாதபடி உறங்குமவன்போலக்கிடந்த இப்பிள்ளை. மறங்கொளித்யாதி. ப்ரஹ்லாத விஷயமான சீற்றத்தை யுடையனான ஹிரண்யனுடைய மார்வை முற்காலத்திலே பிளந்து பொகட்டவனுடைய அச்சுவடு தோற்றும்படியிருக்கிற திருத்துடைகளை வந்துகாணுங்கோள். குவிமுலையீர் வந்து காணீரே. குவிகிற முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ரு

அ.—ஆறும்பாட்டு. திருத்துடையினழகை யநுபவித்த வனந்தரம், திருக்கடிப்ரதேசத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—மத்தக்களிற்று வசுதேவர் தம்முடை
சித்தம் பிரியாத தேவகி தன் வயிற்றி
லத்தத்தின் பத்தாநாட் டோன்றிய வச்சுதன்
முத்த மிருந்தவா காணீரே முகிழ்நகையீர் வந்து காணீரே. ௬

பதவுரை.

மத்த களிறு— மத்த கஜங்களையுடையரான
வசுதேவர் தம்முடை— ஸ்ரீ வஸுதேவருடைய
சித்தம் பிரியாத— ஹ்ருதயத்தைப் பிரியாத
தேவகிதன்— தேவகிப்பிராட்டியின்
வயிற்றில்— வயிற்றிலே
அத்தத்தின் பத்தாம்நாள்— ஹஸ்த நக்ஷத்ரத்துக்குப் பத்தாவதான திருநாளிலே
தோன்றிய— ஆவிர்ப்பவித்த
அச்சுதன்— அடுத்தாரை நழுவவிடாதகண்ணனுடைய
முத்தம் இருந்த ஆ— ‡ சண்ணம் இருந்த படியை
காணீர்!— காணுங்கோள்!;
முகிழ் நகையீர்!—மந்தஸ்மிதமுடையபெண்காள்!
வந்துகாணீர்-; (ஏ அசை.)

‡ 'சண்ணம்' என்றும், 'முத்தம்' என்றும், 'மொட்டு' என்றும் இவை (பாலிசர்களின்) குஹ்யா வயவத்துக்குப் பர்யாய நாமங்களாக வழங்குதல் மரபு.

வ்யா.—மத்தவித்யாதி. மத்தகஜங்களை யுடையரான ஸ்ரீவஸுதேவர் தம்முடைய ஹ்ருதயத்துக்குத் தகுதியாகப் பரிமாறுகிற தேவகிப்பிராட்டிதன் வயிற்றிலே. அத்தத்தினித்யாதி. அத்தத்துக்குப் பத்தாநாளிலே. மங்களாசாஸந பராரகையாலே விரோதிகள் அறி

ந்து அபிசாிக்கைக்கு அவகாசமில்லாதபடி திருவவதரித்த நாளை மறைத்தருளிச் செய்கிறார். தோன்றிய வித்யாதி.(க) "அச்யுதபாநுநா- தேவகீபூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம்" என்கிறபடியே- கர்ப்பவாஸதோஷமற ஆவிர்ப்பவித்து, ஆச்ரிதரை ஒரு காலமும் நழுவ விடாதவனுடைய முத்தமிருந்தபடியைக்காணுங்கோள். முகிழ் நகையீர் வந்து காணீரே. முகிழா நின்றுள்ள நகையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். முத்தம்- சண்ணம். முகிழ்நகை- மந்தஸ்மிதம். ... ... ... ... ... ... ... சு

அ.—ஏழாம்பாட்டு. திருக்கடிப்ரதேசத்தினழகை யநுபவித்த வநந்தரம், திருமருங்கினழகை யநுபவிக்கிறார்.

மூ.—இருங்கை மதகளி றீர்க்கின்ற வனைப்
பருங்கிப் பறித்துக் கொண்டோடும் பரமன்றன்
நெருங்கு பவளமு நேர்நாணு முத்தும்
மருங்கு மிருந்தவா காணீரே வாணுதலீர் வந்து காணீரே. எ.

பதவுரை.

இரும் கை— பெரிய துதிக்கையையுடைய
மத களிறு— மத்த கஜமான குவலயா பீடத்தை
ஈர்க்கின்றவனை— தன்வசமாக நடத்தா நின்றுள்ள பாகனை
பருங்கி— கொன்று
பறித்துக் கொண்டு— (அந்த கஜத்தின் கொம்புகளை) முறித்துக் கொண்டு
ஓடும்— ஓடாநின்ற
பரமன் தன்— பரமனான கண்ணனுடைய
நெருங்கு பவளமும்— செறியக் கோத்த பவள வடமென்ன
நேர் நாணும்— நேரியதான அரைநாணென்ன
முத்தும்—முத்துவட மென்ன (இவற்றோடே சேர்ந்த)
மருங்கும்— திருமருங்கும்
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்!— காணுங்கோள்!;
வாள் நுதலீர்— ஒள்ளிய நெற்றியையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா.—இருங்கையித்யாதி. பெரிய துதிக்கையை யுடைய மத்தகஜமான குவலயாபீடத்தைத் தன்வசமாக நடத்தா நின்றுள்ள பாகனைக்கொன்று. பருங்குதல்- கொல்லுதல். பறித்தித்யாதி. அதின் கொம்புகளைப் பறித்துக்கொண்டு கம்ஸனிருந்த வுயர்ந்த நிலத்திலே ஓடிச்சென்று குதித்த பரமனுடைய. அன்றிக்கே, ஊரில் இடைப்பிள்ளைகள் விளையாடுகிறவர்களிலே லீலோபகரணங்களிலே ஆனையாகப்பண்ணி, பெரிய கையையுடைய மத்தகஜமென்று இழுத்துக்கொண்டு திரிகிறவனை, அடர்த்துப்பறித்துக்கொண்டோடாநிற்கும் பரமனென்னுதல். நெருங்கித்யாதி. செறியக்கோத்த பவளவடமும், நேரியதான பொன்னாணும், முத்துவடமும், இவற்றோடேசேர்ந்த திருமருங்கு மிருந்தபடியைக்காணுங்கோள். வாணுதலீர் வந்து காணீரே. ஒளிவிடாநின்ற நெற்றியையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... எ

அ. எட்டாம்பாட்டு. திருமருங்கினழகை யநுபவித்த வநந்தரம், திருவுந்தியினழகை யநுபவிக்கிறார்.

(க) "அச்யுதபாநுநா- தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்"

மூ.—வந்தமதலைக் குழாத்தை வலிசெய்து
தந்தக் களிறுபோற் றானே விளையாடும்
நந்தன் மதலைக்கு நன்று மழகிய
உந்தியிருந்தவா காணீரே யொளியிழையீர் வந்து காணீரே. அ

பதவுரை.

வந்த— தன்னோடு விளையாடவந்த
மதலை குழாத்தை— சிறு பிள்ளைகளின் கூட்டத்தை
வலி செய்து— பலாத்கரித்து
தந்த களிறுபோல்— (குவிந்த) கொம்பை யுடைய ஆனைக்குட்டிபோலே
தானே— தானே (முக்யனாய்)
விளையாடும்— விளையாடா நிற்கிற
நந்தன் மதலைக்கு— நந்தகோபர்குமாரனான கண்ணனுக்கு
நன்றும் அழகிய— மிகவும் அழகியதான
உந்தி— திருநாபி
இருந்த ஆ— இருக்கிற படியை
காணீர்!— காணுங்கள்!
ஒளி இழையீர்!— காந்தி மிக்க ஆபரணங்களையுடைய பெண்காள்!
வந்துகாணீர்-; (ஏ அசை.)

வ்யா.—வந்தவித்யாதி. தன்னோடே விளையாடவந்த*தன்னோராயிரம் பிள்ளைகளான மதலைக்குழாத்தை, தானும் மதலையாயிருக்கச் செய்தே, அத்தனைபேரும் ஒருதலை, தா னொருதலையாகநின்று பலாத்கரித்து, கொம்புமுகிழ்த்த இளவானை போலே தானே ப்ரதாநனாய் விளையாடும். நந்தனித்யாதி. இப்படி திரியா நிற்கச்செய்தே, ஸ்ரீநந்தகோபர் ஸந்நிதியில் ஸவிநயமாக வர்த்திக்கும் பிள்ளைத்தனத்தை யுடையவனுக்கு. நன்றுமித்யாதி. மிகவும் அழகியதான திருவுந்தி யிருக்கிறபடியைக் காணுங்கோள். ஒளியிழையீர் வந்து காணுங்கோள். இழை— ஆபரணம். ... ... ... ... அ.

அ.—ஒன்பதாம்பாட்டு. திருவுந்தியினழகை யநுபவித்த வநந்தரம், திருவுதரத் தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—அதிருங் கடல்நிற வண்ணனை யாய்ச்சி
மதுர முலையூட்டி வஞ்சித்து வைத்துப்
பதரப் படாமே பழந்தாம்பா லார்த்த
உதர மிருந்தவா காணீரே யொளிவளையீர் வந்து காணீரே. கூ

பதவுரை.

அதிரும் கடல்நிற வண்ணனை— கோஷிக்கிற கடலின் நிறம்போன்ற நிறத்தை யுடையவனை
ஆய்ச்சி— திருத்தாயாரான யசோதை
மதுர முலைஊட்டி—இனிய முலைப்பாலைஊட்டி
வஞ்சித்துவைத்து — வஞ்சனைசெய்துவைத்து
பதரப்படாமே— தன் நினைவு தப்பாதபடி
பழம் தாம்பால்— பழகின கயிற்றாலே
ஆர்த்த— கட்டின
உதரம்— திருவயிறு
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்!— காண்மின்!;
ஒளி வளையீர்! — ஒளிமிக்க வளையையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா.—அதிரும் கடல்நிற வண்ணனை. கோஷிக்கிற கடலின் நிறம்போலே ச்ரமஹர மான நிறத்தை யுடையவனை. "கடல்நிறவண்ணன்" என்னவமைந்திருக்கச் செய்தே, "அதிரும் கடல்" என்று விசேஷிக்கையாலே- இவனுடைய அடங்காமை தோற்றுகிறது. ஆச்சி மதுரமுலையூட்டி வஞ்சித்து வைத்து. பெற்ற தாயானவள் மதுரமான முலைப்பாலையூட்டி, மேல், தான் இவனைக் கட்டத் தேடுகிற தறியாதபடி வஞ்சித்துவைத்து. பதரவித்யாதி. தன்னினைவு தப்பாதபடி, கன்றுகளும் பசுக்களும் கட்டிப்பழகி¶ ஒழிஞ்சானமுட்டாய்க்கிடந்ததொரு தாம்பாலே கட்டின கயிற்றில் தழும்பு காணலாம்படி யிருக்கிற வயிற்றினழகிருக்கிறபடியைக் காணுங்கோள். ஒளிவளையீர் வந்து காணீரே. ஒளியையுடைத்தான வளையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ௯

அ.—பத்தாம்பாட்டு. திருவுதரத்தினழகை யநுபவித்த வநந்தரம், திருமார்வினழகை யநுபவிக்கிறார்.

மூ.—பெருமா வுரலில் பிணிப்புண் டிருந்தங்
கிருமா மருத மிறுத்த விப்பிள்ளை
குருமா மணிப்பூண் குலாவித் திகழும்
திருமார் விருந்தவாகாணீரே சேயிழையீர் வந்து காணீரே. ௰.

பதவுரை.

பெரு மா உரலில் — மிகவும் பெரிதான உரலோடு
பிணிப்புண்டு இருந்து— கட்டுண்டிருந்து
அங்கு— அத்தசையிலே
இரு மா மருதம்—இரண்டு பெரிய மருதமரங்களை
இறுத்த— முறித்த
இப்பிள்ளை— இந்தபிள்ளையுடைய
குரு மா மணிப்பூண்— மிகச் சிறந்ததான கௌஸ்துபாபரணம்
குலாவி திகழும் — அசைந்து விளங்காநின்றுள்ள
திருமார்வுஇருந்தஆ—திருமார்பிருந்தபடியை
காணீர்!— பாருங்கள்!
சே இழையீர்!—செவ்விய ஆபரணங்களையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா.—பெருமாவித்யாதி. மிகவும் பெரியவுரலோடு கட்டுண்டிருந்து அத்தசையிலே அத்தையு மிழுத்துக்கொண்டு தவழ்ந்துபோய், தன்னை நலிவதாகச் சேர்ந்துநின்ற இரண்டு பெரியமருதுகளின் நடுவேசென்றுபுக்கு அவற்றைமுறித்த(க)முக்தனனவிவனுடைய. குருமாவித்யாதி. ச்ரேஷ்ட்டமாய் ச்லாக்யமான ஸ்ரீகௌஸ்துபமாகிற ஆபரணம் அசைந்து விளங்காநின்றுள்ள திருமார்வினழகிருந்தபடியைக் காணுங்கோள். சேயிழையீர் வந்துகாணீரே. சிவந்த ஆபரணங்களையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ௰.

அ. பதினொராம்பாட்டு. திருமார்வினழகை யநுபவித்தவநந்தரம், திருத்தோள்களினழகை யநுபவிக்கிறார்.

---

¶ ஒழிஞ்சானமுட்டு-ஒன்றுக்கு முதவாத கயிறு. (க) உ-ஞு.

மூ.—நாள்களோர் நாலைந்து திங்க ளளவிலே
தாளைநிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்
வாள்கொள் வளையெயிற் றுருயிர் வவ்வினன்
தோள்களிருந்தவா காணீரே சுரிகுழலீர் வந்து காணீரே. கக

பதவுரை.

நாள்கள்— (திருவவதரித்தபின்புசென்ற) நாள்கள்
ஓர் நாலு ஐந்து திங்கள் அளவிலே — ஒரு நாலைந்து மாதத்தளவிலே
சகடத்தை— சகடாஸுரனை
தாளை நிமிர்த்து— காலைத்தூக்கி
சாடிப்போய்— உதைத்துவிட்டு,
வாள் கொள்— ஒளிகொண்டதாய்
வளை— வளைந்திருக்கிற
எயிறு— பற்களையுடைய பூதனையின்
ஆர் உயிர்— அரிய உயிரை
வவ்வினன்— அபஹரித்தவனுடைய
தோள்கள் இருந்தஆ—தோள்களிருந்தபடியை
காணீர்!— காணுங்கோள்!;
சுரி குழலீர்!— சுருண்ட குழலையுடையபெண்காள்!
வந்துகாணீர்!—; (ஏ - அசை.)

வ்யா. நாள்களோரித்யாதி. திருவவதரித்தபின்பு சென்ற நாள்கள் ஒருநாலைந்து மாஸத்தளவிலே. மாஸம் நாலென்றும், அஞ்சு என்றும் ஒன்பதென்றும் இருபதென்றும் தெரியாதபடி, இப்படி மயக்கி யருளிச்செய்தது மங்களாசாஸந பரராகையாலே; த்ருஷ்டிதோஷ பரிஹாரார்த்தமாக. தாளையித்யாதி. தனித்துக் கண்வளர்ந்தருளுகிற விடத்திலே அஸுராவேசத்தாலே நலிவதாக வந்து கிட்டுகிற சகடத்தை மூலைவரவுதாழ்த்துச் சீறி நிமிர்த்து, திருவடிகளாலே கட்டழியவுதைத்து. இவன் அந்யார்த்தமாகத் திருவடிகளை நிமிர்த்தாலும் ப்ரதிகூலித்து வந்து கிட்டுகையாலே சகடம் பக்நமாகத் தட்டில்லையிறே. சாடிப்போயென்றது- சாடிவிட்டென்றபடி. வாள்கோளித்யாதி. ஒளியையுடைத்தாய் வளைந்திருக்கிற எயிறுகளையுடையளான பூதனையுடைய முடித்தற்கரியவுயிரை அபஹரித்தவனுடைய. "பேய்ச்சி பெருமுலையூடுயிரை வற்றவாங்கியுண்டவாயான்" என்னக்கடவதிறே. சகடாஸுர நிரஸனத்துக்கு முன்னே பூதநாதி நிரஸநமாயிருக்க, மாறி யருளிச்செய்தது க்ரம விவக்ஷையாவன்று; ஹர்ஷாதிசயத்தாலே இன்னபடி சொல்லவேணுமென்றறியாமை. எயிற்றை யுடையவளை எயிறு என்கிறது, "ஒண்டொடி" என்னுமாபோலே. தோள்களித்யாதி. அவள் முலைப்பாலோடே உயிரை வற்றவாங்குகிறபோது நெறித்த தோள்களினுடைய அழகிருக்கிறபடியைக் காணுங்கோள்; சுருண்ட குழலையுடையரான நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... கக

அ. பன்னிரண்டாம்பாட்டு. திருத்தோளினழகை யநுபவித்த வநந்தரம், திருக்கைத்தலத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—மைத்தடங்கண்ணி யசோதைவளர்க்கின்ற
செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை
நெய்த்தலை நேமியுஞ் சங்குநிலாவிய
கைத்தலங்கள் வந்து காணீரே கனங்குழையீர் வந்து காணீரே. கஉ

பதவுரை.

| | |
|---|---|
| மை தடம் கண்ணி — கறுத்து விசாலமான கண்களையுடைய | தலை— நுதியையுடைய |
| அசோதை— யசோதைப்பிராட்டி | நேமியும்— திருவாழியும் |
| வளர்க்கின்ற—வளர்க்கிற | சங்கும்— திருச்சங்கும் |
| தலை செய்— உயர்ந்த வயலிலே | நிலாவிய— அமைந்திராநின்றுள்ள |
| நீலம் நிறத்து—கருநெய்தல்பூவின் நிறம் போன்ற நிறத்தையுடையனான | கைத்தலங்கள்— திருக்கைத்தலங்களை |
| சிறு பிள்ளை—சிறிய பிள்ளையுடைய | வந்துகாணீர்!— வந்துகாணுங்கள் ; |
| நெய்— கூரியதான | கனம் குழையீர்! —பொன்னால்செய்த ச்ரோத்ராபரணங்களையுடைய பெண்காள்! |
| | வந்துகாணீர்!-; ( ஏ-அசை. ) |

வ்யா. மைத்தடங்கண்ணி. கறுத்துப் பெருத்திருந்துள்ள கண்ணையுடையவளென்னுதல்; அஞ்சநாலங்க்ருதமாய் விஸ்த்ருதமாயிருந்துள்ள கண்ணையுடையவளென்னுதல். அசோதைவளர்க்கின்ற. இப்படி யிருந்துள்ள கண்ணழகையுடைய யசோதைப்பிராட்டி வைத்தகண் வாங்காமல் நோக்கிவளர்க்கிற. வளர்ப்பார் பலருண்டாயிருக்கச்செய்தேயும், அவர்கள்கையிற் காட்டிக்கொடாதே தானேயிறே வளர்ப்பார்கள். செய்த்தலையித்யாதி. பூஸாரமுள்ள க்ஷேத்ரத்திலே அப்போதலர்ந்த குவளைப்பூவின் நிறம்போலிருக்கிற நிறத்தையுடையனான சிறுப்பிள்ளையினுடைய. அவள் சீராட்டி வளர்த்த $முசுமுசுப்பெல்லாம் திருநிறத்திலே தோன்றும்படி யிருக்குமாயிற்று.

நெய்த்தலைநேமியும் சங்கும் நிலாவிய. கூரியநுதியை யுடைத்தான திருவாழி யென்னுதல்; ஆயுத ஸாமாந்யத்தாலே நெய்யணிந்திருக்கும் திருவாழி யென்னுதல்; "கையெல்லாம் நெய்" என்கிற திருக்கையின் ஸ்பர்சத்தாலே நெய்ச்சுவடுமாறாத திருவாழி யென்னுதல். இப்படியிருக்கிற திருவாழியும், இதுபோலே *கருதுமிடம் பொருதுவந்து கையில் நிற்கவும் வேண்டாதே, கைவிடாதேயிருந்து தன்னோசையாலே எதிரிகளை அழிக்கவல்ல ஸ்ரீபாஞ்சஜந்யமும் நிரந்தரமாக வர்த்தியாநின்றுள்ள கையும் ஆழ்வார்களுமான சேர்த்தியை ஒரோதசைகளிலே இவன்றான் இவளுக்கும் காட்டக்கூடுமிறே. கைத்தலமித்யாதி. திருக்கைத்தலத்தினழகை வந்து காணுங்கோள்; கனவிதாந காதில் நீங்கள் வந்து காணுங்கோள். கநமென்று - பொன்னாகவுமாம். ... ... ... ... கஉ

அ. பதின்மூன்றும்பாட்டு. திருக்கைத்தலத்தினழகை யநுபவித்த வநந்தரம், திருக்கழுத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—வண்டமர் பூங்குழ லாய்ச்சிமகனாகக்
கொண்டுவளர்க்கின்ற கோவலர்குட்டற்கு
அண்டமு நாடு மடங்க விழுங்கிய
கண்டமிருந்தவா காணீரே காரிகையீர் வந்து காணீரே. கங

பதவுரை.

| | |
|---|---|
| வண்டு அமர்— வண்டுகள் படிந்திருக்கிற | ஆய்ச்சி— யசோதைப் பிராட்டியானவள் |
| பூ குழல்—பூவோடுகூடினகுழலையுடையளான | மகனாக— (தன்) புத்திரனாக |

$ முசுமுசுப்பு- ச்ரத்தை. [ரு௦ஞ]

கொண்டு— ஸ்வீகரித்து
வளர்க்கின்ற— வளர்க்கிற
கோவலர் குட்டற்கு— கோபகுமாரனுக்கு
அண்டமும்— அண்டங்களையும்
நாடும்— (அவற்றினுள்ளே கிடக்கிற) சேதநா சேதநங்களையும்.
அடங்க— முழுதும்
விழுங்கிய— விழுங்கின (கபளீகரித்த)
கண்டம் – திருக்கழுத்து
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்!— காணுங்கள்;
காரிகையீர்!— அழகியபெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா. வண்டமரித்யாதி. பிள்ளைகள் அநுங்காமைக்காகத் தாய்மார் தங்களை யலங்கரித்துக்கொண்டிருப்பர்களாய்த்து; அப்படியே இவளும் காலபுஷ்பங்களைப்பலகாலும் முடிக்கையாலே மதுபாநம்பண்ணும் வண்டுகளுக்கு வஸ்தவ்யபூமி இவள் குழலிறே. ஆகையாலே வண்டுகள் படிந்துகிடக்கிறபூவோடேகூடின குழலையுடையளான யசோதைப்பிராட்டி தன்மகனை ஸ்நேஹித்துக்கொண்டு வளர்க்கிற ஸ்ரீநந்தகோபர்மகனுக்கு. இவர் அடியறிந்தவராகையாலே "மகனைக்கொண்டு" என்கிறார்; அவள், "தன்மகன்" என்றிறே நினைத்திருப்பது.

அண்டமித்யாதி. அண்டத்தையும் அண்டாந்தர்வர்த்திகளான சேதநாசேதநங்களையும் திருவயிற்றில் ஒருபுடையிலே அடங்கும்படி விழுங்கினவென்னுதல்; என்றும் பிறிகதிர்ப்படாதபடி எல்லாவற்றையும் சேரவிழுங்கினவென்னுதல். கண்டமித்யாதி. இப்படியிருந்துள்ள திருக்கழுத்தி னழகிருந்தபடியைக் காணுங்கோள்; அபிரூபைகளான நீங்கள் வந்து காணுங்கோள். காரிகையார் - அழகுடையஸ்த்ரீகள். ... ... *கரு

அ. பதினாறாம்பாட்டு. திருக்கழுத்தினழகை யநுபவித்த வநந்தரம் திருப்பவளத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—என் தொண்டைவாய்ச் சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு
அந்தொண்டைவா யமுதா தரித்தாய்ச்சியர்
தந்தொண்டை வாயாற் றருக்கிப் பருகுமிச்
செந்தொண்டைவாய் வந்துகாணீரே சேயிழையீர் வந்துகாணீரே. கசு

பதவுரை.

தொண்டை வாய்— "கொவ்வைக்கனிபோன்ற அதரத்தையுடைய
என் சிங்கம்!— என்னுடைய சிங்கக்குட்டிபோன்ற குமாரனே!
வா என்று— வருக" என்று
எடுத்துக்கொண்டு— ஒக்கலையி லெடுத்துக்கொண்டு
ஆய்ச்சியர்— இடைப்பெண்கள்
அம் தொண்டை – அழகிய கொவ்வைக்கனி போன்ற
வாய்— திருஅதரத்தில் (ஊறுகிற)
அமுது— அம்ர்தத்தை
ஆதரித்து— விரும்பி
தம்— தங்களுடைய
தொண்டை வாயால் – கோவை வாயாலே
தருக்கி— நெருக்கி
பருகும்— பாநம் பண்ணுகிற
இச்செம் தொண்டைவாய்—இந்த சிவந்த கோவைவாயை
வந்துகாணீர்! – வந்துபாருங்கள்;
சேஇழையீர்!—செவ்விய ஆபரணத்தையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா. என் தோண்டையித்யாதி. ஆ தொண்டைபோலே யிருக்கிற திருப்பவளத்தையும் ஸிஹ்மக் கன்றுபோலே செருக்கையுமுடையனு யிருக்கிறவிவனை யென்னுடையவனென்று அபிமாநித்து வாவென்று அழைத்து எடுத்துக்கொண்டு இடைப்பெண்களெல்லாரும் அழகிய தொண்டைபோலே யிருக்கிற திருவதரத்திலூறுகிற அம்ர்தத்தை ஆதரித்துத் தங்கள் கோவைவாயாலே நெருக்கிப் பாநம்பண்ணுகிற. தருக்கிப் பருகுமென்றது - செருக்கிப்பருகு மென்னவுமாம். இச்சேந்தோண்டை யித்யாதி. இப்படி அவர்கள் பருகப் பருகப்பின்னையும் சிவப்புமாறுதேயிருக்கிற திருப்பவளத்தை வந்து காணுங்கோள்; சிவந்த ஆபரணங்களை யுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... * கச.

அ. பதினைந்தாம்பாட்டு. திருப்பவளத்தி னழகை யநுபவித்த வநந்தரம் திருமுகமண்டலத்தின் ஸமுதாய சோபையை யநுபவிக்கிறார்.

மூ.—நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்குவழித்து நீராட்டு மிந்நம்பிக்கு
வாக்கு நயநமும் வாயு முறுவலும்
மூக்கு மிருந்தவா காணீரே மொய்குழலீர் வந்துகாணீரே. கரு.

பதவுரை.

| | |
|---|---|
| அசோதை— யசோதைப்பிராட்டி | நயநமும்— திருக்கண்களும் |
| நோக்கி — (திருமேனியின் மென்மைக்குத் தகுதியாம்படி) பார்த்து | வாயும்— திருவதரமும் (அல்லது) வாய்ந்திருக்கிற |
| நுணுக்கிய— அரைத்த | முறுவலும்— மந்தஸ்மிதமும் |
| மஞ்சளால்— மஞ்சள்காப்பாலே | மூக்கும்— மூக்கும் |
| நாக்கு வழித்து— நாக்கை வழித்து | இருந்த ஆ— இருந்தபடியை |
| நீராட்டும்— திருமஞ்சனம் பண்ணுகிற | காணீர்!— பாருங்கள்; |
| இந்நம்பிக்கு— இந்த பூர்ணகுணனை கண்ணனுக்கு | மொய் குழலீர்!— செறிந்த குழலையுடைய பெண்காள்! |
| வாக்கும்— வாக்கும் | வந்துகாணீர்!-; (ஏ - அசை.) |

வ்யா. நோக்கியித்யாதி. திருமேனியின் ஸௌகுமார்ய மறியும் யசோதைப்பிராட்டி அதுக்குத் தகுதியாம்படி பார்த்து நேராகவரைத்த மஞ்சள் காப்பாலே திருநாவைவழித்து திருமஞ்சனம் செய்யும்படி விதேயதயா பூர்ணனை இவனுக்கு. வாக்குமித்யாதி. மாதா முதலானாரை நாமக்ரஹணம் பண்ணுகிற வாக்கும், 'என்னைப்பாரீர் என்னைப்பாரீ' என்ன அவர்களைக் கடாக்ஷிக்கிற திருநயநங்களும் மந்தஸ்மிதம்செய்ய உபக்ரமிக்கிற திரு அதரஸ்புரணமும் அந்த ஸ்புரணத்தோடே கூடின மந்தஸ்மிதமும், "மாட்டியர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ வறியேன்" என்று நித்ய ஸந்தேஹஜநகமான திருமூக்குமாகிற விச்சேர்த்தி யழகிருந்தபடி காணுங்கோள்; செறிந்த குழலையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... ... ... * கரு.

அ. பதினாறும்பாட்டு. ஸமுதாய சோபையின் நடுவே அநுபவித்த திருக்கண்களின் அழகு பின்னாட்ட, அத்தை யநுபவிக்கிறார். அதுதன்னில் எல்லாவற்றுக்கும் பின்பநுப

வித்தது திருமூக்கினழகிறே. திருமூக்குக்கும் திருக்கண்களுக்கும் ஒருசேர்த்தி யுண்டே; அத்தாலும், பாதாதிகேசமநுபவித்து வருகிற அடைவுக்குச் சேர்ந்த தாகையாலும் திருக்கண்களிலே சுழியாறுபட்டு அநுபவிக்கிறார்.

மூ.—விண்கொ ளமரர்கள் வேதனைதீர முன்
மண்கொள் வசுதேவர் தம் மகனாய் வந்து
திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான்
கண்களிருந்தவா காணீரே கனவளையீர் வந்துகாணீரே. ௰சு.

பதவுரை.

விண் கொள்— ஸ்வர்காதிலோகங்களை யிருப்பிட மாகவுடைய
அமரர்கள்— இந்த்ராதி தேவதைகளின்
வேதனை— துன்பமானது
தீர— தீரும்படியாக
முன்— முன்னே
மண் கொள்— பூமியை இருப்பிடமாகவுடைய
வசுதேவர் தம்— வஸுதேவருக்கு
மகனாய்வந்து— புத்ரனாய்வந்து அவதரித்து
திண் கொள்— வலிமை கொண்ட
அசுரர்— அஸுரர்கள்
தேய— க்ஷயிக்கும்படி
வளர்கின்றான்— வளராநிற்கிற கண்ணனுடைய
கண்கள் இருந்த ஆ— திருக்கண்களிருந்தபடியை
காணீர்!— காணுங்கள்!;
கனம் வளையீர்! — பொன் வளையையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ- அசை.)

வ்யா. விண்கொளித்யாதி. அவதாரப்ரயோஜநம் ஸாது பரித்ராணாதிக ளாகையாலே ஸ்வர்காதி லோகங்களை யிருப்பிடமாக வுடைய இந்த்ராதி தேவர்களுக்கு ஆஸுரப்ரக்ருதிகளால் வரும் துக்கம் போம்படியாக முன்னே பூமியை யிருப்பிடமாகவுடைய ஸ்ரீவஸுதேவருக்கு புத்ரனாய் வந்தவதரித்து, தன்னைப்பற்றச் சிறைப்பட்டிருக்கிற ஸ்ரீவஸுதேவர் துக்கத்தைத்தீர்த்து, பின்னை தேவர்கள் துக்கம் தீர்க்கைக்காக முன்னே யிங்கேவந்தவரித்தானாய்த்து. "தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றிய தோன்றல்" என்னக்கடவதிறே. திண்கொளித்யாதி. காயபலமும் மனோபலமுமுடையரான அஸுரர்களானவர்கள் க்ஷயித்துச் செல்லும்படியாகத் தான் வளராநிற்கிறவனுடைய. இவன் கால் நெடுக நெடுக அஸுரவர்கம் க்ஷீணமாய்விட்டதிறே. கண்களித்யாதி. இப்படி அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமும் பண்ணுமிடத்தில் இவர்கள் தழைக்கவும் அவர்கள் க்ஷயிக்கவும் கடாக்ஷிக்கும் திருக்கண்களினழகிருக்கிறபடியைக் காணுங்கோள்; பொன்னாலே செய்தவளையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... ... ௲கசு.

அ. பதினேழாம்பாட்டு. திருக்கண்களினழகை யநுபவித்த வநந்தரம் திருப்புருவத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—பருவம் நிரம்பாமே பாரெல்லாமுய்ய
திருவின்வடிவொக்குந் தேவகிபெற்ற
உருவுகரிய வொளி மணிவண்ணன்
புருவமிருந்தவா காணீரே பூண்முலையீர் வந்து காணீரே. கஎ.

பதவுரை.

| | |
|---|---|
| பருவம்— வயது | ஒளி— உஜ்ஜ்வலமான |
| நிரம்பாமே— முதிருவதற்கு முன்னமே | மணி— மணிபோன்ற |
| பார் எல்லாம்— உலகமெல்லாம் | வண்ணன்— வடிவையுடையவனுடைய |
| உய்ய— உஜ்ஜீவிக்கும்படியாக | புருவம்— திருப்புருவங்கள் |
| திருவின் வடிவு ஒக்கும்— பெரியபிராட்டியோடொத்த ஸ்வபாவத்தையுடையளான | இருந்த ஆ— இருந்தபடியை |
| தேவகி— தேவகிப்பிராட்டி | காணீர்!— காணுங்கோள்! ; |
| பெற்ற— (நோற்றுப்) பெற்ற | பூண் முலையீர்!— ஆபரணம் பூண்ட முலையை உடைய பெண்காள்! |
| உருவு கரிய— ரூபத்தால் கறுத்தாய் | வந்துகாணீர்!-; (ஏ-அசை.) |

வ்யா. பருவமித்யாதி. சக்ரவர்த்தித் திருமகனைப்போலே பருவம் நிரம்பினபின்பு விரோதிகளை நிரஸித்து லோகத்தை உஜ்ஜீவிப்பிக்கையன்றிக்கே, பருவம் நிரம்புவதுக்குமுன்னே *திண்கொள் அசுரரைத் தேயவளருகைபாலே லோகமெல்லா முஜ்ஜீவிக்கும்படியாக, பூதநாசகடயமளார்ஜுநாதிகளைத் தொட்டில் பருவமே பிடித்திறே நிரஸித்துச் சென்றது. திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற. லக்ஷ்மீதுல்யஸ்வபாவையான தேவகிப்பிராட்டி இப்படிக்கீடாக நோற்றுப் பெற்ற. திருவின்வடிவொக்கு மென்கைபாலே- கீழ் " உள்ளமுதன்ன தேவகி " என்றது இங்கே ஸ்பஷ்டமாயிற்றிறே.

உருவித்யாதி. ரூபத்தால் கரியதாய் உஜ்ஜ்வலமாயிருந்துள்ள மணிபோன்ற வடிவை யுடையவனுடைய. புருவமித்யாதி. மதநன் கருப்புச்சிலைபோலே யிருக்கிற திருப்புருவங்களினழகைக் காணுங்கோள்; ஆபரணாலங்க்ருதமான முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... ... ... *கஎ.

அ. பதினெட்டாம்பாட்டு. திருப்புருவத்தினழகை யநுபவித்த வநந்தரம், திருமகரக்குழையி னழகை யநுபவிக்கிறார்.

மூ.—மண்ணு மலையுங் கடலு முலகேழும்
உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு
வண்ணமெழில்கொண் மகரக்குழையிவை
திண்ணமிருந்தவா காணீரே சேயிழையீர் வந்து காணீரே. கஅ

| | |
|---|---|
| மண்ணும்— பூமியையும் | எழில் வண்ணம் கொள்— அழகிய திருநிறங் கொண்ட |
| மலையும்— பர்வதங்களையும் | மகரக்குழை— திருமகரக்குழைகளான |
| கடலும்— ஸமுத்ரங்களையும் | இவை— இவற்றின் |
| உலகு ஏழும்— ஸப்தலோகங்களையும் | திண்ணம்— திண்மை |
| உண்ணும் திறத்து— திருவயிற்றில் வைக்கிற வளவில் | இருந்த ஆ— இருந்தபடியை |
| மகிழ்ந்து— உகந்து | காணீர்!— காணுங்கோள்! ; |
| உண்ணும்— திருவயிற்றிலே வைத்த | சே இழையீர்! — அழகிய ஆபரணங்களையுடைய பெண்காள்! |
| பிள்ளைக்கு— பாலனுக்கு | வந்துகாணீர்!-; (ஏ-அசை.) |

வ்யா. மண்ணுமித்யாதி. ஸர்வாதாரமான பூமியும், பூமிக்காதாரமான பர்வதங்களும், பூமிக்கு ரக்ஷகமான ஸமுத்ரங்களும், மற்றுமுண்டான ஸகலலோகங்களும் ப்ரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைக்கிறவளவில், 'இவற்றை ரக்ஷிக்கப்பெற்றோமே!' என்னும் உகப்பாலே இதுவே தாரகமாகத் திருவயிற்றிலேவைத்த பாலனுக்கு. வண்ணமித்யாதி. திருமேனிக்கு பரபாகமான திருநிறத்தையும் ஸ்வஸம்ஸ்தாந வைசித்ரியால் வந்த அழகையுமுடைய திருமகரக்குழைகளான விவற்றினுடைய, கண்டவர்கள் கண்ணையும் நெஞ்சையும் கவரும்படியான திண்மையிருக்கிறபடியைக் காணுங்கோள்; அழகிய ஆபரணங்களாலே அலங்க்ருதைகளான நீங்கள் வந்து காணுங்கோள். ... ... கஅ

அ. பத்தொன்பதாம்பாட்டு. திருமகரக் குழையினழகை யநுபவித்த வநந்தரம், திருநெற்றியினழகை யநுபவிக்கிறார்.

மூ.—முற்றிலுந் தூதையு முன்கைமேற் பூவையும்
சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களைப்
பற்றிப் பறித்துக் கொண்டோடும் பரமன்றன்
நெற்றியிருந்தவா காணீரே நேரிழையீர் வந்து காணீரே. கக

பதவுரை.

சிறு இல்— சிறிய வீடுகளை
இழைத்து— கட்டி
திரிதருவோர்களை— திரிகிறபெண்களுடைய
முற்றிலும்— (மணல்கொழிக்கிற) சிறு சுளகுகளையும் [சிறு முறம்]
தூதையும்—(மணற்சோறுக்குகிற)சிறியபானைகளையும்
முன்கைமேல்—முன் கைமேல் நின்று விளையாடுகிற
பூவையும்— நாகணவாய்ப் புள்ளையும்
பற்றி— கையைப்பிடித்து
பறித்துக்கொண்டு – அபஹரித்துக்கொண்டு
ஓடும் – ஓடுகிற
பரமன் தன்– (தீம்பில்) தலைவனானவனுடைய
நெற்றி – திருநெற்றி
இருந்த ஆ– இருந்தபடியை
காணீர்! – காணுங்கோள்;
நேர் இழையீர் ! – நேரிதான ஆபரணங்களை உடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா. முற்றிலுமித்யாதி. கொட்டகமிட்டு விளையாடித்திரிகிற பெண்களை, மணல் கொழிக்கிற சிறு சுளகையும் மணற் சோறுக்குகிற சிறுபானையையும், முன்கைமேல்வைத்துப் பேசிக்கொண்டு விளையாடும் பூவையையும். பூவை- நாகணவாய்ப்புள். பற்றியித்யாதி. கையைப்பிடித்து, வன்மையாலே பறித்துக்கொண்டு பிடிகொடாமல் ஓடும் தீம்பில் தலைவனானவனுடைய. நெற்றியித்யாதி. அந்த ஆயாஸத்தாலே குறுவெயர்ப்பு அரும்பின திருநெற்றியினழகைக் காணுங்கோள்; நுண்ணியதான ஆபரணங்களையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ஆபரணத்துக்கு நுட்பமாவது- தொழிலினுடைய ஸௌக்ஷ்ம்யமாதல்; ஸௌகுமார்யாநுகுணமான லாகவமாதல். ... ... ... ... ... ... ... ... கக

அ. இருபதாம்பாட்டு. திருநெற்றியினழகை யநுபவித்த வநந்தரம், திருக்குழலினழகை யநுபவிக்கிறார்.

மூ.—அழகிய பைம்பொன்னின் கோலங்கைக்கொண்டு
கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப
மழகன்றினங்கண் மறித்துத் திரிவான்
குழல்களிருந்தவா காணீரே குவிமுலையீர் வந்து காணீரே. உ0

பதவுரை.

அழகிய — அழகியதாய்
பை பொன்னின்— பசும்பொன்னால் செய்யப்பட்ட
கோல் — கோலை
அம் கை— அழகிய கையாலே
கொண்டு — பிடித்துக்கொண்டு
கழல்கள் — திருவடிகளில் சாத்தி யிருக்கிற வீரக்கழல்களும்
சதங்கை — சதங்கைகளும்
கலந்து — சேர்ந்து
எங்கும் ஆர்ப்ப — எங்கும் ஒலிக்க
மழம் — இளமை பொருந்திய
கன்று இனங்கள் — கன்றுகளின் கூட்டங்களை
மறித்து — மடக்கி
திரிவான்— திரிகிறவனுடைய
குழல்கள் — திருக்குழல்கள்
இருந்த ஆ — இருந்தபடியை
காணீர் ! — பாருங்கள்;
குவி முலையீர்! — குவியும் முலைகளையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா. அழகியவித்யாதி. கண்டவர்கள் கண்ணுக்கழகியதாய், பசும்பொன்னாலே சமைந்திருப்பதான கோலை, கன்றுகளைம றிக்கைக்கு உபகரணமாக வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படி அழகியதான கையிலே பிடித்துக்கொண்டு. கழல்களித்யாதி. கன்றுகளை மறிக்கைக்காக அதிரவோடுகையாலே திருவடிகளிலே சாத்தியிருக்கிற வீரக்கழல்களும் சதங்கைகளும் தன்னிலே கலந்து எங்குமொக்க த்வனிக்க. மழகன்றித்யாதி. இளங்கன்றுகளினுடைய திரள்களைக் கைகழியப்போகாமல் மடங்குவித்து ஸஞ்சரியாநின்றுள்ளவனுடைய. குழல்களித்யாதி. "நெறித்த குழல்களை நீங்க முன்னோடி" என்கிறபடியே அதிரவோடுகையாலே அசைந்து நீங்கிச்செல்லும் திருக்குழலின் அழகிருக்கிறபடியைக்காணுங்கோள்; குவிகிற முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... உ0

அ. நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—சுருப்பார் குழலி யசோதை முன்சொன்ன
திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப்பட்டன்
விருப்பாலுரைத்த விருபதோடொன்றும்
உரைப்பார்போய் வைகுந்தத் தோன்றுவர் தாமே. உக

பதவுரை.

சுரும்பு ஆர்— வண்டுகள் படிந்து கிடக்கும்படியான
குழலி— மயிர்முடியையுடைய
அசோதை— யசோதைப் பிராட்டியானவள்
முன்— அவதாரஸமயத்தில்
சொன்ன— (அயல்பெண்களுக்கு அழைத்துக் காட்டிச்) சொன்ன
திருப்பாத கேசத்தை— பாதாதிகேசாந்த வர்ணநத்தை

தென் புதுவை— அழகிய வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகனான
பட்டன்— பட்டர்பிரான்
விருப்பால்— மிக்க ஆதரத்தால்
உரைத்த— அருளிச்செய்த
இருபதோடு ஒன்றும்—இருபத்தொரு பாசுரங்களையும்
உரைப்பார்தாம்— கற்குமவர்கள்
போய்— (ப்ரக்ருதி மண்டலத்தைக்கடந்து) போய்
வைகுந்தத்து— ஸ்ரீவைகுண்டத்திலே
ஒன்றுவர்—பொருந்தி யிருப்பர்கள்.

(ஏ - அசை.)

வ்யா. சுருப்பார்குழலியித்யாதி. மெல்லொற்று வல்லொற்றாய், சுரும்பாரென்கிறவிது, சுருப்பாரென்று கிடக்கிறது. குழலில் முடித்த பூக்களின் மதுவைப்பாநம் பண்ணுகைக்காக வண்டுகள் எப்போதும் படிந்து கிடக்கும்படியான குழலையுடைய யசோதைப்பிராட்டி. முன்சொன்ன. திருப்பாதகேசத்தை. அவதார ஸமகாலத்திலே அநுபவித்து, பிறர்க்கும் அழைத்துக்காட்டிச்சொன்ன பாதாதிகேசத்தை. தென்னித்யாதி. அழகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் அத்யாதரத்தோடே அருளிச்செய்த. அவளுடைய ஆதரத்தளவு மன்றிறே யிவருடையவாதரம்.

"கோதைக்குழலாளசோதை" "பணைத்தோளிளவாய்ச்சி" "மைத்தடங்கண்ணியசோதை" இத்யாதிகளாலே யசோதைப்பிராட்டியை வர்ணித்துச் சொன்னவையும், "உழந்தாள் நறுநெய்" "அதிருங் கடல்நிற வண்ணன்" "நோக்கி யசோதை" இத்யாதிகளாலே அவனுடைய சேஷ்டிதங்களாகச் சொன்னவையும், "மறங்கொளிரணியன் மார்வை முன்கீண்டான்" "இருமாமருதமிறுத்த விப்பிள்ளை" "சகடத்தைச் சாடிப்போய் வாள்கொள்வளை யெயிற்றுருயிர் வவ்வினன்" இத்யாதிகளாலே இவனுக்கு நிருபகமாக வருளிச்செய்த அவதாராந்தர சேஷ்டிதங்களும், இவ்வவதாரந்தன்னில் உத்தரகால சேஷ்டிதங்களுமெல்லாம், அவதாரகாலத்துக்குப் பிற்பாடராயிருக்கச்செய்தேயும் மயர்வற மதிநலமருளப் பெறுகையாலே ஸர்வகாலத்திலுள்ளதும் ப்ரகாசிக்கும்படியான தசை பிறந்த இவர் இவ்விஷயத்தில் ஆதராதிசயத்தாலே அருளிச்செய்தாராயித்தனை.

யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹத்தை யுடையராய்க்கொண்டு அநுபவித்ததும் இவள் பாதாதிகேசமநுபவித்துப்பிறர்க்குக்காட்டின கட்டளையிலே பேசினதுமான விதுவே, அவளோடு இவர்க்கு ஸாம்யம். ஆகையாலே, "அசோதை முன்சொன்ன திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப் பட்டன் விருப்பாலுரைத்த" என்றருளிச்செய்தாராய்த்து. இந்த ந்யாயத்தாலே மேலில் திருமொழிகளிலும் இப்படி வந்தவற்றிற்கு வகையிட்டுக்கண்டு கொள்வது. இருபதோடொன்றுமுரைப்பார். இருபத்தொருபாட்டையும்ஸாபிப்ராயமாகச்சொல்லுவாரென்னுதல்; பாவபந்தமில்லையே யாகிலும் சப்தமாத்ரத்தைச் சொல்லுவாரென்னுதல். போயித்யாதி. இவ்விஷயத்தை பரிபூர்ணாநுபவம் பண்ணலாம்படியான ஸ்ரீவைகுண்டத்திலேபோய் "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்கிறபடியே அவனை யநுபவித்து மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு ஒரு காலமும் பிரிவின்றி யிருக்கப்பெறுவர். ... உக.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

——oo✿oo——

அடிவரவு—சீத முத்துப் பிணை உழ பிற மத்தம் இருங்கை வந்த அதிரும் பெருமா நாள் மை வண்டு என் நோக்கி விண் பருவ மண் முற்றில் அழகிய சுருப்பார் மாணிக்கம்.

—(*)—

ஆக- திருமொழி, உ- க்கு, பாட்டு- ௩௧.

---

அ. கீழ்த்திருமொழியிலே- திருவடிகள் தொடங்கி திருமுடியளவுமுண்டான திவ்யாவயவங்களை யசோதைப்பிராட்டி அநுபவித்த ப்ரகாரத்தை, தத்காலம்போலே மிகவும் விரும்பி யநுபவித்தாராய்நின்றார்; இனிமேல், வளர்பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்தித் தாலாட்டின ப்ரகாரத்தை, தத்காலம்போலே விரும்பி யநுபவித்துப் பேசுகிறார். ஸர்வஸ்மாத்பரனாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் ஸர்வப்ரகார நிரபேக்ஷனாய் நாராயணசப்தவாச்யனான ஸர்வேச்வரன், யாதொரிடத்திலே யாதொரு திருமேனியோடே அவதரித்தாலும் அவனுடைய ஸ்திதி கமந சயநாதிகளைக் கண்டால் மிகவும் விரும்பித்தங்களால் ஆனவளவும் கிஞ்சித்கரித்தன்றி நிற்க வொண்ணாதிறே ப்ரஹ்மேசாநாதிகளுக்கும். இத்தை, யசோதைப்பிராட்டி மநோரதித்துக் கண்டாளாகச்சொல்லித் தாலாட்டின ப்ரகாரத்தை, தாம் * மயர்வற மதிநல மருளப்பெற்றவராகையாலே தத்காலம்போலே ப்ரத்யக்ஷமாகக்கண்டு மிகவும் உகந்து அவனுடைய மேன்மையையும் நீர்மையையு மருளிச்செய்து தாலாட்டுகிறார்.

அ. முதற்பாட்டு. அண்டாதிபதியான ப்ரஹ்மா, இவனுடைய பருவத்துக் கநுகுணமாகப் பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

மூ.—மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி
ஆணிப்பொன்னாற்செய்த வண்ணச்சிறுத்தொட்டில்
பேணியுனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக்குறளனே தாலேலோ வையமளந்தானே தாலேலோ ௧.

பதவுரை.

மாணிக்கம்— (இரண்டருகும்) மாணிக்கத்தை
கட்டி—கட்டியும்
இடை— நடுவில்
வயிரம்— வயிரத்தை
கட்டி—கட்டியும்
ஆணி பொன்னால்-மாற்றுயர்ந்த பொன்னாலே
செய்த—செய்யப்பட்ட
வண்ணம்—அழகிய
சிறு தொட்டில்—சிறிய தொட்டிலை
பிரமன்— ப்ரஹ்மாவானவன்
பேணி— உகந்து
உனக்கு— உனக்கு
விடுதந்தான் – அனுப்பினான்;
மாணி—ப்ரஹ்மசாரியாய்க்கொண்டு
குறளனே!—வாமநனானவனே!
தாலேலோ—‡தாலேலோ;
வையம்—உலகங்களை
அளந்தானே!–த்ரிவிக்ரமனாய் அளந்தவனே!
தாலேலோ–;

‡ தால் ஏல் ஓ. தால்—நாக்கு. ஏல் ஓ என்னு மிவை அசைச்சொற்கள். குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு பெண்கள் நாவை அசைத்து ஒலித்துச் சீராட்டுதலை 'தாலேலோ' என்று வழங்குதல் மரபு.

மாணிக்கமித்யாதி. இரண்டருகும் மாணிக்கத்தையும் நடுவே வயிரத்தையும் பகைத் தொடையாகக் கொண்டு ஒழுங்குபடக் கட்டி, "இதுக்குமேலே மாற்றில்லை" என்னும்படியான பொன்னாலே சமைத்ததாகையாலே அழகியதாய்ப் பருவத்துக்குத் தகுதியாம்படி சிறியதாயிருந்துள்ள தொட்டிலை. பேணியித்யாதி. ஆதரித்து உனக்கு ப்ரஹ்மா வரவிட்டான். மாணியித்யாதி. உன்னுடைமை பெறுகைக்காக இரப்பிலே தழும்பேறின ப்ரஹ்மசாரியாய்ச் சென்று இரந்த வாமநரூபியானவனே! தாலேலோ; இரப்புப்பெற்ற ஹர்ஷத்தாலே வளர்ந்து லோகத்தை யளந்த த்ரிவிக்ரமனானவனே! தாலேலோ. ... ... க

அ. இரண்டாம்பாட்டு. ப்ரஹ்மாவுக்கநந்தரம் பரிகணிதனாய் ஈச்வராபிமாநியான ருத்ரன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—உடையார் கனமணியோ டொண்மாதளம்பூ
இடை விரவிக் கோத்த வெழிற்றெழ்கினோடு
விடையேறு காபாலி ஈசன் விடுதந்தான்
உடையாயழேலழேல் தாலேலோ வுலகமளந்தானே தாலேலோ உ.

பதவுரை.

உடை ஆர்—திருவரைக்குப் பொருந்தின
கனமணியோடு—பொன்மணியோடு
இடை—நடு நடுவே
விரவி—கலந்து
கோத்த—கோக்கப்பட்ட
எழில்—அழகியதான
தெழ்கினோடும்—¶இடைச்சரிகையோடுகூட
ஒண்—அழகிய
மாதளம்பூ—மாதளம்பூக்கோவையான அரைவடத்தை
விடை ஏறு—ரிஷபவாஹநனாய்
காபாலி—கபாலதாரியாய்
ஈசன்—ஸ்வவ்யூஹத்துக்கு நியாமகனான ருத்ரன்
விடுதந்தான்—கொடுத்தனுப்பினான்;
உடையாய்!—எல்லாவற்றையு முடையவனே!
அழேல்! அழேல்!!—அழாதேகொள், அழாதேகொள்;
தாலேலோ—;
உலகம் அளந்தானே!—உலகங்களை அளந்தருளினவனே!
தாலேலோ—;

¶ இடைச்சரிகை—இடையில் சொருகுகிறகத்தி.

வ்யா. உடையித்யாதி. திருவரைக்குச் சேர்த்திருப்பதான பொன்மணியோடு நடு நடுவே கலசிக்கோத்த அழகிய இடைச்சரிகையோடும் கூடியிருந்துள்ள அழகிய மாதளம்பூக்கோவையான அரைவடத்தை. விடையித்யாதி. ரிஷபவாஹநனாய் கபால நிரூபகனாய் ஸ்வகோஷ்டிக்கு நியந்தாவா யிருக்கிற ருத்ரன் வரவிட்டான். உடையாயித்யாதி. ஒருவர் 'என்னது' என்று வரவிடாதபோதும் அவர்களோடு அவர்களுடைமையோடு வாசியற எல்லாவற்றையுமுடையவனே! அழாதேகொள்! அழாதேகொள்!! தாலேலோ. உலகமித்யாதி. திருவுலகளந்தருளின வ்ருத்தாந்தத்தாலே உன்னுடைய ஸர்வ ஸ்வாமித்வத்தை அடிப்படுத்தி வைத்தவனே! தாலேலோ வென்று தாலாட்டினதா யிருக்கிறது. தாலாட்டாவது - நாவசைத்தல். ... ... ... ... .... ... ...* உ.

அ. மூன்றாம்பாட்டு. ப்ரஹ்மருத்ரர்களை எண்ணினால், பின்பு தன்னை யெண்ணும்படியான முதன்மையையுடையனான இந்த்ரன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ·—என் தம்பிரானு ரெழிற்றிருமார்வற்குச்
சந்த மழகிய தாமரைத் தாளற்கு
இந்திரன்றானு மெழிலுடைக் கிண்கிணி
தந்துவனாய்நின்றான்றாலேலோ தாமரைக்கண்ணனே தாலேலோ. ௩.

பதவுரை.

என்—எனக்கு
தம் பிரானார் — ஸ்வாமியாய்
எழில்—அழகிய
திருமார்வற்கு—திருமார்வை யுடையவனாய்
அழகிய சந்தம்—அழகியநிறத்தையுடைய
தாமரைத் தாளற்கு—தாமரைப் பூபோன்ற திருவடிகளையுடையவனான உனக்கு
இந்திரன்தானும்—தேவேந்த்ரனும்
எழில் உடை—அழகை உடையதான
கிண்கிணி—கிண்கிணியை
தந்து—கொணர்ந்து ஸமர்ப்பித்து
உவனாய் நின்றான்—*அதூர விப்ரக்ர்ஷ்டனாய் நின்றான்;
தாலேலோ—;
தாமரைக்கண்ணனே!—தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனே!
தாலேலோ—;

* அதூரவிப்ரக்ர்ஷ்டன்—ஸமீபத்திலும் தூரத்திலுமின்றியே மத்யஸ்தனாயிருக்குமவன்.

வ்யா. என்னித்யாதி. என் தம்பிரானார் எழில் திருமார்வற்கு. எழில் - அழகு. என் தம்பிரானாரென்கிறவிது - திருமார்பினழகுக்குத் தோற்றுச்சொன்ன வார்த்தை. சந்தமித்யாதி. சிவப்பாலும் விகாஸாதிகளாலும் நிறமழகிய தாமரைப் பூப்போலே யிருக்கிற திருவடிகளை யுடையவனுக்கு. இந்திரனித்யாதி. த்ரைலோக்ய நிர்வாஹகனான முதன்மையை யுடைய இந்த்ரன் தானும், அழகை யுடைத்தான கிண்கிணியைக் கொடுவந்து ஸமர்ப்பித்து ஸ்வனைச்யம்தோற்ற அதூர விப்ரக்ர்ஷ்டனாய் நின்றான், தாலேலோ. தாமரையித்யாதி. கிஞ்சித்கரித்தவர்களைக் குளிரக் கடாக்ஷிக்கும் தாமரைபோன்ற திருக்கண்களை யுடையவனே! தாலேலோ. ... ... ... ... ... ... ... ... ... *௩.

அ. நாலாம்பாட்டு. இந்த்ரனுக்குக் கீழாய், தனித்தனி ப்ரதாநரான தேவர்கள் ஸமுதாயேந பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

மூ—சங்கின் வலம்புரியுஞ் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச் சரிவளையு நாணு மரைத்தொடரும்
அங்கண் விசும்பிலமரர்கள் போத்தந்தார்
செங்கட் கருமுகிலே தாலேலோ தேவகிசிங்கமே தாலேலோ ௪.

பதவுரை.

சங்கில்—சங்குகளில் சிறந்த
வலம் புரியும்— வலம்புரிச் சங்கும்
சே அடி— செவ்விய திருவடிகளில் சாத்தத்தகுந்த
கிண்கிணியும்— சதங்கையும்
அம் கை— அழகிய திருக்கைக்கு அலங்காரமான
சரி வளையும்— முன்கைவளைகளும், திருத்தோள்வளைகளும்
நாணும் — திருமார்வில் சாத்தத்தக்க பொன் நாணும்

அரை தொடரும்— அரைநாணும் (ஆகியஇவற்றை,)
அம் கண்— அழகியதாய் விசாலமான
விசும்பில்— ஸ்வர்காதி லோகங்களிலுள்ள
அமரர்கள்— தேவர்கள்
போத்தந்தார்— கொடுத் தனுப்பினார்கள்,
செம் கண்— சிவந்த கண்களையும்

கரு முகிலே!— கறுத்தமேகம்போன்ற வடிவையு முடையவனே!
தாலேலோ-;
தேவகி— தேவகிப் பிராட்டியின் வயிற்றில் பிறந்த
சிங்கமே!—சிங்கக்கன்றுபோன்ற பிள்ளாய்!
தாலேலோ-;

வ்யா. சங்கித்யாதி. சங்குகளில் வைத்துக்கொண்டு உத்க்ர்ஷ்டமாய் மங்களாவஹமான வலம்புரியும், சிவந்த திருவடிகளிலே சாத்தத்தக்க சதங்கையையும். "சேவடிக் கிண்கிணி" யென்கையாலே, "கிண்கிணி" யென்று-பாதச்சதங்கையைச் சொல்லுகிறது. அங்கைச் சரியித்யாதி. அழகிய திருக்கைக்கு ஆபரணமான முன்கைச்சரிகளும், திருத்தோள்வளைகளும், திருமார்புக்கலங்காரமாகச் சாத்தத்தக்க நாணும், அரை வடமும். அன்றிக்கே, அரைத்தொடரோட்டைச்சேர்த்தியாலே, நாணென்றது - அரைநாணாகவுமாம். அங்கணித்யாதி. அழகியதாய் இடமுடைத்தான ஸ்வர்காதி லோகங்களில் தேவர்கள் வரவிட்டார்கள். செங்கணித்யாதி. ஓராபரணமும் வேண்டாதபடி தாமரை பூத்த காளமேகம்போலே சிவந்த திருக்கண்களோடே சேர்ந்த ச்யாமளமான வடிவையுடையவனே! தாலேலோ. தேவகியித்யாதி. தேவகிப் பிராட்டிவயிற்றில் பிறப்பாலே ஸிஹ்மக்கன்றுபோலே யிருக்கிற செருக்கையுடையவனே! தாலேலோ. ... ... ... ... ௪.

அ. ஐந்தாம்பாட்டு. உத்தரதிக்பாலனாய் உதாரனான வைச்ரவணன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—எழிலார் திருமார்வுக்கேற்கு மிவையென்று
அழகிய வைம்படையு மாரமுங்கொண்டு
வழுவில் கொடையான் வயிச்சிராவணன்
தொழுதுவனாய் நின்றான் தாலேலோ தூமணிவண்ணனே தாலேலோ ௫.

பதவுரை.

எழில் ஆர்— "அழகு விஞ்சியிருந்துள்ள
திரு மார்வுக்கு— பிராட்டி உறையும் மார்வில் சாத்துகைக்கு
இவை ஏற்கும்—இவை பொருந்தியிருக்கும்"
என்று— என்றெண்ணி
அழகிய— அழகியதான
ஐ படையும்— பஞ்சாயுதமாகிற ஆபரணத்தையும்
ஆரமும்— முத்துவடத்தையும்
கொண்டு— எடுத்துக்கொண்டு

வழு இல்— குற்றம் அற்ற
கொடையான்— தானத்தையுடையனான
வயிச்சிராவணன்— வைச்ரவணன்
தொழுது—(இதைத் திருவுள்ளம்பற்றவேணுமென்று) அஞ்ஜலிபண்ணிக்கொண்டு
உவனாய்— அதூரவிப்ரக்ர்ஷ்டனாய்
நின்றான்—; தாலேலோ-;
தூ— பரிசுத்தமான
மணி வண்ணனே— நீலமணிபோன்றவர்ணத்தையுடைய கண்ணனே!
தாலேலோ-;

வ்யா. எழிலித்யாதி. வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படி அழகு மிக்கிருந்துள்ள திருமார்புக்குச் சேருமிவை யென்று. அழகியவித்யாதி. அழகியதாயிருந்துள்ள ஸ்ரீபஞ்சாயுதமாகிற ஆபரணமும் *கோலமாமணியாரமும் கொண்டு. வழுவிலித்யாதி. கொடுத்துக் கொள்ளுதல், கொடுக்க முசித்தல்செய்கையாகிற குற்றமில்லாத கொடையையுடையவனான வைச்ரவணன். அரவை, "அரா" என்னுமாபோலே, "வைச்ரவணன்" என்கிறவித்தை, வயிச்சிராவணனென்கிறது. தொழுதித்யாதி. இத்தை யங்கீகரிக்கவேணுமென்று அஞ்ஜலிபண்ணிக்கொண்டு அநுராவிப்ர க்ர்ஷ்டனாய் நின்றான், தாலேலோ. தூமணியித்யாதி. ஓராபரணமும் வேண்டாதபடி பழிப்பற்ற நீலரத்நம்போலே யிருக்கிற வடிவையுடையவனே! தாலேலோ. ... ... ... ... ... ௫

அ. ஆறும்பாட்டு. பச்சிம திக்பாலனாய் ஸமுத்ராதிபதியான வருணன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—ஓதக்கடலி லொளிமுத்தினாரமும்
சாதிப்பவளமுஞ் சந்தச் சரிவளையும்
மாதக்கவென்று வருணன் விடுதந்தான்
சோதிச் சுடர்முடியாய்! தாலேலோ சுந்தரத்தோளனே தாலேலோ. ௬

பதவுரை.

ஓதம்— அலையெறியாநின்ற
கடலில்— ஸமுத்ரத்தில் உண்டாய்
ஒளி— ஒளியை உடையதான
முத்தின்— முத்துக்களாலே கோக்கப்பட்ட
ஆரமும்— ஹாரத்தையும்
சாதி— (நல்ல) ஜாதியிலுண்டான
பவளமும்— பவளவடத்தையும்
சந்தம்— அழகியதான
சரி— முன்கை வளைகளையும்
வளையும்— தோள் வளைகளையும்
மாதக்க என்று— "விலையில் சிறந்ததாய் தகுதியாயிருந்துள்ளவை" என்று
வருணன்— வருணதேவனானவன்
விடுதந்தான்— கொடுத்தனுப்பினான்
சோதி சுடர்—மிக்கதேஜஸ்ஸை உடைத்தான
முடியாய்!— கிரீடத்தையுடையவனே!
தாலேலோ-;
சுந்தரத்தோளனே!— அழகிய தோள்களையுடையவனே!
தாலேலோ.

வ்யா. ஓதமித்யாதி. திரைக்கிளப்பத்தை யுடைத்தான கடலிலே யுண்டாய் ஒளியோடே கூடின முத்துக்களாலே சேர்க்கப்பட்ட ஆரமும். அதுக்கு பரபாகமாம்படி ஆக்கனன்றிக்கே ஜாதியமான பவளப்படியும். சந்தச்சரிவளையும். திருக்கைக்குத் தகுதியாம்படி அழகியதாயிருந்துள்ள சரிகளும் வளைகளும். மாதக்கவித்யாதி. ஆதிராஜ்ய ஸூசகமாய் மிக்க தேஜஸ்ஸை யுடைத்தான திருவபிஷேகத்தை யுடையவனே! தாலேலோ. சுந்தரத்தோளித்யாதி. ஆபரணங்கள் மிகையாம்படி அழகிய திருத்தோள்களை யுடையவனே! தாலேலோ.

அ. ஏழாம்பாட்டு. திவ்யமஹிஷிகளில் ப்ரதானையான பெரிய பிராட்டியார் வரவிட்ட உபஹாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—கானார் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்
வானார் செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்
தேனார் மலர்மேற் றிருமங்கை போத்தந்தாள்
கோவே! அழேலழேல் தாலேலோ குடந்தைக் கிடந்தானே! தாலேலோ. எ

பதவுரை.

தேன் ஆர்— தேன் நிறைந்துள்ள
மலர்மேல்—செந்தாமரை மலர்மேலுறைகின்ற
திரு மங்கை—பெரிய பிராட்டியார்
கான் ஆர்— காட்டில் உண்டான
நறு துழாய்—மணம்மிக்க திருத்துழாயாலே
கை செய்த— கைத்தொழில் தோன்றப்பண்ணின
கண்ணியும்— மாலையையும்
வான் ஆர்— ஆகாசம் முழுதும் நிறையும்படி
செழும்— செழுமைதங்கிய
சோலை— சோலைசெய்து நிற்கிற
கற்பகத்தின்— கற்பகப்பூவாலேசெய்த
வாசிகையும்— திருநெற்றிமாலையையும்
போத்தந்தாள்— கொடுத்து அனுப்பினாள்;
கோவே!— ஸர்வசேஷியானவனே!
அழேல்! அழேல்!! – அழாதேகொள்! அழாதேகொள்!!,
தாலேலோ-;
குடந்தைக் கிடந்தானே!—திருக்குடந்தையில் திருக்கண்வளர்ந்தருளினவனே!
தாலேலோ.

வ்யா. கானாரித்யாதி. தன் நிலத்திலே வளருகையாலே தழைத்து பரிமளோத்தரமாயிருந்துள்ள திருத்துழாயாலே கைத்தொழில் தோன்றப்பண்ணின திருமாலையும். வானாரித்யாதி. ஆகாசப்பரப்படங்கலும் நிறையும்படி அழகியதாய்ச் சோலை செய்து நிற்கிற கற்பகப்பூவாலே செய்த திருநெற்றி மாலையும். தேனாரித்யாதி. தேன்மாறாத செந்தாமரை மலரின்மேலே நித்யவாஸம் செய்யா நிற்பாளாய், (க) "யுவதிஶ்ச குமாரிணீ" என்னும் பருவத்தை யுடையளான பெரியபிராட்டியார் வரவிட்டாள். கோவேயித்யாதி. எல்லாரும் கிஞ்சித்கரிக்க வேண்டும்படி ஸர்வ சேஷியா யுள்ளவனே! அழாதேகொள் அழாதேகொள் தாலேலோ. குடந்தையித்யாதி. அந்த மேன்மைக் கெதிர்த்தட்டான நீர்மை தோன்றத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தவனே! தாலேலோ. ... ... ... ... ... ... எ

அ. எட்டாம்பாட்டு. பெரிய பிராட்டியாருக்கு அநந்தரம் பரிகணிதையான ஸ்ரீ பூமிப்பிராட்டி வரவிட்ட உபஹார விசேஷத்தைச் சொல்லுகிறது.

மூ.—கச்சொடு பொற்சுரிகைக் காம்பு கனகவளை
உச்சிமணிச் சுட்டி யொண்டாணிரைப் பொற்பூ
அச்சுதனுக் கென்றவனியாள் போத்தந்தாள்
நச்சு முலையுண்டாய்! தாலேலோ நாராயணா அழேல் தாலேலோ அ.

பதவுரை.

கச்சொடு—திரு அரைப்பரியட்டத்தின்மேல் கட்டுமதான கச்சோடேகூட
பொன்— ஸ்வர்ணமயமான
சுரிகை— உடைவாளையும்
காம்பு— ¶ சிறுக்காம்பன் சேலையையும்
கனகம்— பொன்னால் செய்யப்பட்ட

¶ சிறுக்காம்பன்சேலை- சிறிய கீற்றுக்களையுடைய வஸ்த்ரம்.

(க) "யுவதிச்ச குமாரிணீ"

வளை— தோள்வளைகளையும்
உச்சி— திருமுடியின்மேல் சாத்தத்தக்க
மணி— ரத்நங்கள் இழைத்த
சுட்டி— திருநெற்றியில் சாத்தும்சுட்டியையும்
ஒண் தாள்— ஒள்ளிய தாளையுடைத்தாய்
நிரை— ஒழுங்கான
பொன் பூ— பொற்பூவையும்
அச்சுதனுக்குஎன்று— "அடுத்தாரை ஒருகாலும் நழுவவிடாதவனுக்கு" என்று
அவனியாள்— ஸ்ரீபூமிப்பிராட்டியானவள்
போத்தந்தாள்— வரவிட்டாள்
நஞ்சு முலை— விஷமேற்றின (பூதனையின்) முலையை
உண்டாய்!— உண்டவனே!
தாலேலோ-;
நாராயணா!; அழேல்; தாலேலோ-;

வ்யா. கச்சித்யாதி. திருவரையில் சாத்தின பரியட்டத்தின் மேலே கட்டுமதான கச்சோடே அதிலே சொருகத்தக்க அழகிய சுரிகையாகிற ஆயுதமும், திருவரைக்கு அநுகுணமாகச் சாத்தும் சிறுக்காம்பன் சேலையும், திருத்தோள்களுக்கு அலங்காரமான பொன் வளையும், திருமுடியிலே சாத்துகைக்கு ரத்நாலங்க்ருதமான சுட்டியும், ஒள்ளியதாளை யுடைத்தாய், திருமுடியிலே ஒழுங்குபடச் சாத்துகைக்கிடான பொற்பூவும். அச்சுதனித்யாதி. ஆச்ரிதரை ஒருகாலமும் நழுவவிடாதவனுக்கென்று ஸ்ரீபூமிப்பிராட்டி வரவிட்டாள். நச்சுமுலையித்யாதி. பூபார நிரஸநம் பண்ணுகைக்கு அடியிட்டு, பூதனையை முடிக்கைக்காக அவளுடைய நஞ்சேற்றின முலையை யுண்டவனே! தாலேலோ. நாராயணவித்யாதி. உபயவிபூதியிலுள்ளாரும் கிஞ்சித்கரிக்க வேண்டும்படி உபவிபூதி நாதத்வ ஸூசகமான நாராயணசப்த வாச்யனானவனே! அழாதே கொள் தாலேலோ. ... ... ... அ

அ. ஒன்பதாம்பாட்டு. அவதாரகாலத்திலே ஒக்கப்பிறந்து இத்தலையைப் பேணிப் போன பாந்தவ விசேஷத்தாலே கீழ்ச்சொன்னவர்க ளெல்லாரிலும் வ்யாவ்ருத்தையான துர்க்கை, தன்னுடைய ஸ்நேஹாநுகுணமாகப் பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

மூ.—மெய் திமிரு நானப்பொடியோடு மஞ்சளும்
செய்ய தடங்கண்ணுக் கஞ்சநமுஞ் சிந்தூரமும்
வெய்ய கலைப்பாகிக் கொண்டு வளாய் நின்றாள்
அய்யா வழேலழேல் தாலேலோ வரங்கத்தணையானே! தாலேலோ ௯.

பதவுரை.

மெய்— திருமேனியிலே
திமிரும்— மர்திக்கைக்கு ஈடான
நானப்பொடியோடு — கஸ்தூரி, கருப்பூரம், சந்தனம்முதலியஸுகந்தப்பொடியோடுகூட
மஞ்சளும்— மஞ்சள் பொடியையும்
செய்ய— சிவந்ததாய்
தடம்— விசாலமான
கண்ணுக்கு— கண்களில் சாத்துகைக்குத் தகுதியான
அஞ்சனமும்— மையையும்
சிந்தூரமும்— ஸிந்தூரத்தையும்
வெய்ய— வெவ்விய
கலை— ஆண்மானை
பாகி— வாஹநமாகவுடைய துர்க்கையானவள்
கொண்டு— எடுத்துக்கொண்டு
உவளாய் நின்றாள்— அதூரவிப்ரக்ர்ஷ்டையாய் நின்றாள்,
அய்யா!—ஸ்வாமியானவனே!
அழேல்! அழேல்!-, தாலேலோ-;
அரங்கத்து அணையானே— திரு அரங்கத்தில் அரவணையில் பள்ளிகொண்டருளுமவனே! தாலேலோ.

வ்யா. மெய்யித்யாதி. திருமேனியிலே மர்திக்கைக் கீடான சந்தந கஸ்தூரீ கர்ப்பூராதி ஸுகந்தத்ரவ்ய ஸமுதாய சூர்ணத்தோடே நிறம்பெறச் சாத்தத்தக்க மஞ்சள் பொடியும், சிவந்து புடை பரந்து நீண்ட திருக்கண்களுக்குச் சாத்துகைக்குத் தகுதியான அஞ்சநமும், திருநெற்றியில் அழகுபெறச் சாத்துகைக்குச் சிந்தூரமும். வெய்யவித்யாதி. வெவ்விதான கலையை வாகநமாகவுடைய துர்கையானவள் கொண்டுவந்து அதூரவிப்ரகர்ஷமுடையாய் நின்றாள். அய்யாவித்யாதி. ஸர்வஸ்வாமியானவனே அழாதே கொள் அழாதே கொள் தாலேலோ. அரங்கத்தித்யாதி. அந்தஸர்வஸ்வாமித்வத்தை நிர்வஹிக்கைக்கீடாகக் கோயிலில் திருவரவணையிலே பள்ளிகொண்டருளினவனே ! தாலேலோ. அன்றிக்கே, வெய்ய கலைப்பாகி என்கிறது, வெம்மை - விருப்பத்துக்கு வாசகமாகையாலே ஸ்ப்ருஹணீயமான கலைகளை நாவிலே நின்று நடத்துகிற ஸரஸ்வதியைச் சொல்லுகிறதாய், அடியிலே எல்லாருக்கும் ப்ரதாநனாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மாவுக்கு ப்ரதாந மஹிஷியானவள் பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறதென்று வாக்யார்த்தமாக்கி, மேலுடைய, அதுக்குச்சேர நிர்வஹிக்கவுமாம்· ... ... ... ... கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட
அஞ்சனவண்ணனை யாச்சி தாலாட்டிய
செஞ்சொன் மறையவர் சேர்புதுவைப் பட்டன் சொல்
எஞ்சாமை வல்லவர்க்கில்லை யிடர்தானே ௰.

பதவுரை.

வஞ்சனையால்வந்த — பேய்வடிவைமறைத்து, தாய்வடிவு கொண்டுவந்த
பேய்ச்சி— பூதனையின்
முலை— முலையை
உண்ட— அவள் முடியும்படி உண்ட
அஞ்சனவண்ணனை—கரியமேனியை உடைய கண்ணனை
ஆய்ச்சி— தாயான யசோதை
தால் ஆட்டிய— தாலாட்டின படிகளை
செம் சொல்— செவ்விய சொல்லை உடைய
மறையவர்—வேதத்தை நிரூபகமாக உடையவர்கள்
சேர்— சேர்ந்துவர்த்திக்கிற
புதுவை—ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த
பட்டன் — ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் அருளிச்செய்த
சொல்— பாசுரங்களை
எஞ்சாமை— குறைவுபடாமல்
வல்லவர்க்கு— ஓதவல்லவர்களுக்கு
இடர்தான்— துன்பமானது
இல்லை— இல்லையாம்.

(ஏ - அசை.)

வ்யா. வஞ்சனையித்யாதி. “ தாயாய்வந்தபேய் ” என்கிறபடியே பேயான தன் வடிவை மறைத்துத் தாய்வடிவைக் கொண்டு வஞ்சித்து வந்த பூதனையுடைய முலையை, அவள் தாயாய்வந்தாற்போலே, தானும் பிள்ளையாய்க்கொண்டு, தாய்முலை யுண்ணுமாபோலே உண்ணு நிற்கச்செய்தே அவள் முடியும்படியாகவுண்ட. அஞ்சனவண்ணனை. விரோதிபோகப்பெற்றோமென்னும் ஹர்ஷத்தாலே திருமேனியிற் பிறந்த புகரைச் சொல்லுகிறது. ஆய்ச்சியித்யாதி. மாதாவான யசோதைப்பிராட்டி தாலாட்டினபடிகளை. செஞ்சொலித்யாதி. யதா

தகவாதியாகையாலே செவ்வியசொல்லை யுடைத்தான வேதத்தைத் தங்களுக்கு நிரூபகமாக வுடையவர்கள் சேர்ந்து வர்த்திக்கிற ஸ்ரீவில்லிபுத்தூரில் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரருளிச்செய்த சப்தத்தை. எஞ்சாமைபித்யாதி. ஸங்கோசமற அதிகரிக்கவல்லவர்களுக்கு ஒரு துக்கமில்லை. ... ... ... ... ம.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—மாணி உடை என் சங்கின் எழி லோதக் காணுர் கச்சு மெய் வஞ்சனை தன்.

—(*)—

ஆக - திருமொழி, ந - க்கு, பாட்டு-சக.

---

அ. கீழ்த்திருமொழியிலே - யசோதைப் பிராட்டி அவனுடைய சைசவாநுருணமாக அழுகையை மாற்றிக் கண்வளரப்பண்ணுகைக்காகச் சீராட்டிக்கொண்டு தாலாட்டின ப்ரகாரத்தை தத்பாவயுக்தராய்க்கொண்டு தாமும் அப்படி அருளிச்செய்தார்; இனிமேல், தொட்டில் பருவம்போய், தவழ்ந்து விளையாடத்தக்க பருவமானபின்பு அவன் *நீணிலாமுற்றத்தேபோந்து தவழ்ந்து புழுதியளைவது, சந்த்ரனை யழைப்பதான ப்ரகாரத்தை, அவள் அநுபவித்து அவனுக்குகப்பாகச்சந்த்ரனை வரச்சொல்லித் தான்பலகாலும் அழைத்தப்ரகாரத்தை, தாமும் அநுபவபூர்வகமாகப் பேசி யினியாகிறார். பரமபதத்தில்(க)"அவாக்யநாதரம்" என்கிறபடியே பெருமதிப்பனுய் ஒருவார்த்தை சொல்லக்கடவனன்றிக்கே, தன்னோடொக்க முகம்பார்த்து வார்த்தை சொல்லுகைக்கு ஒரு தத்வாந்தர மில்லாமையாலே அநாதரித்திருக்குமவன், லீலாவிபூதியிலே ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகத் தன் இச்சையாலே இதரஸஜாதியனுய் வந்தவதரித்து அவதாரத்தின் மெய்ப்பாடு தோற்ற சைசவாத்யவஸ்தைகளை அடைந்து தத்ததவஸ்தாநுகுணமாகச்செய்த சேஷ்டிதாதிகளை அநுஸந்தித்தால் *மயர்வற மதிநல மருளப்பெறுகையாலே அவன் மேன்மையையும் நீர்மையையும் தெளியக்கண்டவர்கள் அதிலே வித்தராய் அநுபவிக்கச் சொல்ல வேண்டாவிறே. மற்றுள்ள வாழ்வார்களையும்போலன்றிக்கே இவ்வவதாரவிஷயத்தில் அதிப்ரேமாதிசயத்தாலே கோபஜந்மத்தை ஆஸ்தாநம் பண்ணி, இவ்வவதார ரஸமெல்லாம் அநுபவிப்பதாக இழிந்தவிவர் அவனுடைய பாலசேஷ்டிதங்களில் ஒன்றும் நழுவவிடாரிறே; ஆகையாலே, அவன் புழுதியளைவது சந்த்ரனை அழைப்பதான சேஷ்டிதங்களை தத்காலத்தில் யசோதைப் பிராட்டி அநுபவித்தாற்போலே தாமும் அநுபவித்துப் பேசுகிறார்.

மூ.—தன்முகத்துச்சுட்டித் தூங்கத்தூங்கத் தவழ்ந்துபோய்
பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான்
என் மகன் கோவிந்தன் கூத்தினை யிளமாமதீ !
நின்முகங் கண்ணுளவாகி னீயிங்கே நோக்கிப்போ: க.

---

(க) "அவாக்யநாதரம்"

பதவுரை.

தன் முகத்து— தன்முகத்தில் (விளங்குகின்ற)
சுட்டி— சுட்டியானது
தூங்கத்தூங்க— பலகாலும் அசையும்படியாகவும்
பொன் முகம்— அழகிய முகத்தையுடைய
கிண்கிணி— கிண்கிணியானது
ஆர்ப்ப— (கணகணஎன்று) ஒலிக்கும்படியாகவும்
தவழ்ந்துபோய்— தவழ்ந்துபோய்
புழுதி— தெருப்புழுதியை
அளைகின்றான்— அளையாநின்றவனும்
என் மகன்— என்பிள்ளையான
கோவிந்தன்— கோவிந்தனுடைய
கூத்தினை— அழகிய சேஷ்டைகளை
மா— மிகவும்
இளம்— இளமை பொருந்திய
மதி!— சந்த்ரனே!
நின்முகம்— உன்முகத்தில்
கண்— கண்கள்
உள ஆகில்— உண்டேயானல்
நீ இங்கே நோக்கி போ— நீ இங்கே பார்த்துப்போ.

வ்யா. முதற்பாட்டு. தன்னித்யாதி. வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியான தன் திருமுகத்திலே அழகுக்கு உடலாக ‡ நாலும்படிகட்டின சுட்டியானது தவழுகைக்காகத் திருமுடியை நாற்றுகையாலே பலகாலும் அசையும்படியாகவும் திருவரையிலே சாத்திக்கிடக்கிற அழகிய முகத்தை யுடைத்தான கிண்கிணியானது த்வநிக்கும்படியாகவும் தவழ்ந்துபோய்ப் புழுதி யளையாநின்றான். பொன்முகக் கிண்கிணியென்றது- சேவடிக்கிண்கிணியாகிற பாதச்சதங்கையாகவுமாம். அதிறே தவழும்போது மிகவும் சப்திப்பது. என்மகனித்யாதி. என்னுடைய பிள்ளையான கோவிந்தனுடைய, மநோஹாரிசேஷ்டிதத்தை. இளமாமதீ. இத்தைக்கண்டு கால் தாழ்ந்து நிற்கவேண்டியிருக்க, அது செய்யாதே போகிற அதிமுக்தனான சந்த்ரனே. இளமாமதி யென்றது இளமையால்மிக்க மதியென்றபடி. நின்முகமித்யாதி. உன்னுடைய முகத்தில் கண்ணுண்டாமாகில் கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி நீ இங்கே பார்த்துப்போ. ... .... ... ... க

மூ.—என் சிறுக்குட்டனெனக்கோ ரின்னமு தெம்பிரான்
தன் சிறுக்கைகளாற் காட்டிக் காட்டி யழைக்கின்றான்
அஞ்சனவண்ணனோடாடலாட வுறுதியேல்
மஞ்சின் மறையாதே மாமதீ! மகிழ்ந்தோடிவா உ.

பதவுரை.

எனக்கு— எனக்கு
ஓர்— அத்விதீயமாய்
இன் அமுது— மதுரமான அம்ருதம்போன்றவனும்
எம்பிரான்— எனக்கு உபகாரகனான
என் சிறு குட்டன்— என் சிறுப்பிள்ளையானவன்
தன்— தன்னுடைய
சிறு கைகளால்— சிறிய கைகளால்
காட்டிக் காட்டி— பலகாலும் உன்னையே காட்டி
அழைக்கின்றான்— அழையாநின்றான்,
அஞ்சன வண்ணனோடு— கறுத்த வடிவையுடைய இப்பிள்ளையோடுகூட

‡ நாலும்படி- தொங்கும்படி.

ஆடல் ஆட— விளையாடல் ஆட
உறுதியேல்— கருதினையாகில்
மா— வடிவாலும் குளிர்த்தியாலும் உயர்ந்த
மதி!— சந்த்ரனே!
மகிழ்ந்து— உகப்புத்தோற்ற
ஓடிவா— கடுநடை இட்டுவா.

வ்யா. இரண்டாம்பாட்டு. என்சிறுக்குட்டன். என்னுடைய சிறுப்பிள்ளை. எனக்கோரின்னமுது. பருவத்தாலும் சேஷ்டிதங்களாலும் அத்விதீயமாய் இனிதான அம்ருதம் போலே எனக்கு ரஸாவஹனானவன். எம்பிரான். எனக்கு புத்ரனாய்வந்தவதரித்தும், தன் சேஷ்டிதங்களை யெல்லாம் அநுபவிப்பித்தும், இப்படியே எல்லாப்படியாலும் எனக்கு உபகாரகனானவன். தன்னித்யாதி. தனக்குத்தகுதியான சிறுக்கைகளாலே பலகாலும் உன்னையே அழையா நின்றான். அஞ்சனமித்யாதி. கண்டவர்கள் கண்குளிரும்படி அஞ்சநம்போலே யிருக்கிற திருநிறத்தை யுடையனான இவனோடே விளையாடலாட வேண்டுதியாகில். மஞ்சில் இத்யாதி. மேகத்திலே சொருகி மறையாதே வடிவாலும் குளிர்த்தியாலும் சிலாக்யனான சந்த்ரனே! "நம்மை யழைக்கப்பெற்றோமே" என்று உகந்து ஆதரந்தோற்றக் கடுநடை யிட்டுவா. ... ... ... ... ... ... ௨

மூ.—சுற்று மொளிவட்டஞ் சூழ்ந்து சோதிபரந்தெங்கும்
எத்தனை செய்யிலு மென்மகன் முகநேரொவ்வாய்
வித்தகன் வேங்கடவாண னுன்னை விளிக்கின்ற
கைத்தலநோவாமே யம்புலீ! கடிதோடிவா ௩.

பதவுரை.

அம்புலீ!— சந்திரனே!
ஒளி— ஒளியை உடைய
வட்டம்— மண்டலமானது
சுற்றும்— நாற்புறமும்
சூழ்ந்து— சூழ்ந்து
எங்கும்— எல்லாத்திசைகளிலும்
சோதி— ஜ்யோதிஸ்ஸாலே
பரந்து— வ்யாபித்து
எத்தனை செய்யிலும்— எல்லாம்செய்தாலும்
என்மகன்— என் குமாரனுடைய
முகம்— திருமுக மண்டலத்துக்கு
நேர் ஒவ்வாய்— எல்லாவிதத்தாலும் ஒத்தவனாக மாட்டாய்;
வித்தகன்— ஆச்சர்யப் படத்தக்கவனாய்
வேங்கடம்— திருவேங்கடமலையில்
வாழ்நன்— எழுந்தருளியிருக்குமவன்
உன்னை— உன்னை
விளிக்கின்ற— உகந்து அழைக்கின்ற
கை தலம்— திருக்கைத்தலமானது
நோவாமே— நோவாதபடியாக
கடிது— மிகவும் விரைந்து
ஓடிவா— நடைஇட்டுவா.

வ்யா. மூன்றாம்பாட்டு. சுற்றுமித்யாதி. ஒளியை யுடைத்தான மண்டலமானது அகூபமாய்க்கொண்டு சுற்றும் சூழ்ந்து அகளங்கமாய்க்கொண்டு எங்கும் தேஜஸ்ஸாலே வ்யாப்தமாய் எல்லாம் செய்தாலும். என்மகனித்யாதி. என்மகனுடைய ஸௌவர்த்தமாய் ஜ்யோதிர்மயமான முகத்துக்கு (க)ஸர்வதா ஸத்ருசமாகமாட்டாய். வித்தகனித்யாதி. அழகாலும் குணசேஷ்டிதங்களாலும் விஸ்மயநீயனாய்துர்மாநிகளான உன்போல்வாரை அநாதரித்து-

(க) ஸவ —ர்பா.

* கானமும் வானரமுமான வற்றை ஆதரித்துக்கொண்டு திருமலையிலே வர்த்திக்கிறவன், உன்னை ஆதரித்து அழைக்கிற திருக்கைத்தலம் நோவாநடபடியாக அம்புலீ! மிகவும் விரைந்தோடி வா. ... ... ... ... ... ௩

மூ.—சக்கரக்கையன் றடங்கண்ணாலன் மலரவிழித்து
ஒக்கலைமேலிருந்துன்னையே சுட்டிக்காட்டுங்காண்
தக்கதறிதியேற் சந்திரா! சலஞ் செய்யாதே
மக்கட்பெறுத மலடனல்லையேல் வாகண்டாய் ௪.

பதவுரை.

சந்திரா— சந்த்ரனே!
சக்கரம்— திருவாழி ஆழ்வானை
கையன்— திருக்கையிலே கொண்டவன்
தடம்— கர்ணாந்தவிச்ராந்தமான
கண்ணால்— திருக்கண்களால்
மலரவிழித்து— மலரப்பார்த்து
ஒக்கலைமேல் இருந்து— என் இடுப்பிலே இருந்துகொண்டு
உன்னையே— உன்னையே
சுட்டி காட்டும்காண்!— குறித்துக் காட்டா நிற்கும் காண்!;
தக்கது— உனக்குத்தகுதியானத்தை
அறிதியேல்— உணருவாயாகில்
சலம் செய்யாதே— வெறுப்புச்செய்யாதே [சலம்-கபடம்.]
மக்கள் பெறுத— பிள்ளைகளைப் பெறுத
மலடன்— வந்த்யனாக
அல்லையேல்— அல்லாமற் போனாயாகில்
வா கண்டாய்!— வந்து நில் கிடாய்!.

வ்யா. நாலாம்பாட்டு. சக்கரக்கையன். * கருதுமிடம் பொருதும் திருவாழியைக் கையிலே யுடையவன். இத்தால்- நீ வாராதொழிந்தால் உன்னை சிக்ஷிக்கைக்கிடான பரிகரமுடையவனென்கை. தடங்கணித்யாதி· இடமுடைத்தான திருக்கண்களாலே உன்னளவில் ப்ரீதி தோற்ற மலரப்பார்த்து. ஒக்கலைமேலிருந்து. என்னுடைய மருங்கிலே யிருந்து· உன்னையித்யாதி. வேறொன்றில் கண்வையாதே உன்னையே குறித்துக்காட்டா நிற்குங்காண்· தக்கதறிதியேல். உனக்குத்தகுதியானது அறிதியாகில். சந்திரா சலஞ்செய்யாதே. எல்லார்க்கும் ஆஹ்லாதகரனாயிருக்கிற நீ இவனுக்கு வெறுப்புச் செய்யாதே. மக்களித்யாதி. பிள்ளைகள் பெறுத வந்த்யனல்லவாகில் வந்துகொடு நில் கிடாய். ... ... ௪

மூ.—அழகிய வாயிலமுதவூறற்றெளிவுற
மழலைமுற்றாத விளஞ் சொல்லாலுன்னைக் கூவுகின்றான்
குழகன்சிரீதரன் கூவக்கூவ நீபோதியேல்
புழையிலவாகாதே நின்செவி புகர்மாமதீ. ரு.

பதவுரை.

புகர்— தேஜஸ்ஸையும்
மா— பெருந்தன்மையையுமுடைய
மதீ!— சந்த்ரனே!
அழகிய— அழகான
வாயில்— திருப்பவளத்திலே
ஊறல்— ஊறாநின்றுள்ள
அமுதம்— ஜலமாகிற அம்ர்தத்தோடேகூடி
தெளிவு உற— உருத்தெரியாததாய்
மழலை— மழலைத் தன்மைக்கு உள்ள
முற்றாத— முற்றுதலு மில்லாதிருக்கிற

இளம் சொல்லால்— இளம் பேச்சாலே
உன்னை— உன்னை
கூவுகின்றான்— அழையாநின்றான்;
குழகன்— எல்லாரோடும் கலந்திருப்பவனும்
சிரீதரன்— பிராட்டியைத் திருமார்விலே தரியாநின்றவனுமான இவன்
கூவக்கூவ— பலகாலு மழையாநிற்க
நீ போதியேல்— நீ போவாயேயானால்
நின் செவி— உன்காதுகள்
புழை இல— துளை இல்லாதவையாக
ஆகாதே!— ஆகாதோ?.
[ ஆகவே ஆகுமென்று கருத்து. ]

வ்யா. ஐந்தாம்பாட்டு. அழகியவித்யாதி. அழகிய திருப்பவளத்திலே ஊறுநின்ற ஜலமாகிற அம்ருதத்தோடேகூடி உருத்தெரியாததாய் மழலைத்தனத்துக்குள்ள முற்றுதல் தானு மின்றிக்கேயிருக்கிற இளஞ்சொல்லாலே உன்னையழையாநின்றான். குழகன். கொடுத்தார் கொடுத்தார் முலைகளெல்லாமுண்டு, எடுத்தாரெடுத்தாரோடெல்லாம் பொருந்தியிருக்கும் கலப்புடையவன். சிரீதரன். கீழ்ச்சொன்ன நீர்மைக்கு எதிர்த்தட்டான மேன்மையையுடையவன். ஸ்ரீதரத்வம் ஸர்வாதிகத்வ ஸூசகமிறே. கூவக்கூவ நீபோதியேல். ஒருகால் போலே பலகாலும் அழையாநிற்க, கேளாதாரைப்போலே நீபோவுதியாகில். புழையித்யாதி. உன்னுடைய செவி துளையிலவாகாதோ. புழை-ஸுஷிரம். உன்னுடைய ச்ரவணேந்த்ரியத்துக்கு ப்ரயோஜநமில்லை யாகாதோவென்கை. புகர் மா மதீ!. உன்னுடைய தேஜஸ்ஸுக்கும் பெருமைக்கும் போருமோ இது. ... ... ... ... * ரு.

மூ.—தண்டொடு சக்கரஞ்சார்ங்கமேந்துந் தடக்கையன்
கண்டுயில்கொள்ளக் கருதிக்கொட்டாவி கொள்கின்றான்
உண்டமுலைப் பாலறுகண்டாயுறங்கா விடில்
விண்டனில் மன்னிய மாமதீ! விரைந்தோடிவா. ௬.

பதவுரை.

விண்தனில்— ஆகாசத்தில்
மன்னிய— பொருந்திய
மா மதீ!— வடிவில்பெருமைதங்கியசந்த்ரனே!
தண்டொடு— ("கௌமோதகி") என்னும் கதையோடு
சக்கரம்— திரு ஆழியையும்
சார்ங்கம்—("ஸ்ரீசார்ங்கம்" என்கிற) தநுஸ்ஸையும்
ஏந்தும்— தரியாநின்ற
தடம்— விசாலமான
கையன்— கைகளையுடைய இவன்
கண் துயில் கொள்ள— திருக்கண்வளர்ந்தருளுவதாக
கருதி— நினைத்து
கொட்டாவி கொள்கின்றான் — கொட்டாவி விடாநின்றான்,
உறங்காவிடில்— கண்வளராமற்போனால்
உண்ட— அமுதுசெய்த
முலை பால்— முலைப்பாலானது
அறு கண்டாய்— ஜரிக்கமாட்டாது கிடாய்;
( ஆகையால், நீ, )
விரைந்து— த்வரையாக
ஓடி வா—ஓடிவா.

வ்யா. ஆறும்பாட்டு. தண்டித்யாதி. கதையும் திருவாழியும் ஸ்ரீசார்ங்கமும் மற்றவிரண்டுக்கும் உபலக்ஷணம். ஏந்தும் தடக்கையன். இவற்றை, பூவேந்தினாப்போலே ஸர்வகாலமும் தரித்துக்கொண்டிருக்கும் இடமுடைத்தான திருக்கைகளை யுடையவன். இவை

தான் ஆபரணகோடியிலும் ஆயுதகோடியிலுமாயிறே யிருப்பது. இத்தால் - இவ்வழகை அநுபவித்து வாழலாயிருக்க, இவற்றின் வீர்யத்துக்கிலக்காய் முடிந்துபோகாதேகொள் ளென்கை. கண்டேயித்யாதி. கண்வளர்ந்தருளுவதாக நினைத்து, அதுக்கு ஸூசகமாகக் கொட்டாவி கொள்ளாநின்றான். உண்டவித்யாதி. கண்வளர்ந்தருளா தொழியில், அமுது செய்தமுலைப்பால் ஜரியாது கிடாய். ஆனபின்பு விண்டனில் மன்னியமாமதீ விரைந்தோடிவா. உச்சஸ்த்தலத்திலே வர்த்தியாநிற்பானாய் வடிவிற் பெருமையையுடையனாயிருக்கிற சந்த்ர னே! உன்னுடைய உயர்த்திக்கும் பக்வதைக்குமீடாக ஸத்வரனாய்க்கொண்டு ஓடிவா. சு.

மூ.—பாலகனென்று பரிபவஞ்செய்யேற் பண்டோருநாள்
ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்
மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல்
மாலைமதியாதே மாமதீ! மகிழ்ந்தோடிவா.

பதவுரை.

மா மதீ!—பெருந்தன்மை தங்கிய சந்த்ரனே!
பாலகன் என்று— 'இவன் சிறுப்பிள்ளை' என்று நினைத்து
பரிபவம்— திரஸ்காரத்தை
செய்யேல்— செய்யாதேகொள்;
பண்டு ஒருநாள்— முன்பொருகாலத்திலே
ஆலின் இலை— ஆலந்தளிரிலே
வளர்ந்த— திருக்கண்வளர்ந்த
சிறுக்கன் அவன் – சிறுப்பிள்ளையானவன்
இவன்— இவன்காண்;
வெகுளும் ஏல்— (இவன்) சீறினனாகில் [வெகுட்சி—கோபம்]
மேல் எழ பாய்ந்து – மேலெழக் குதித்து
பிடித்துக்கொள்ளும்– (உன்னைப்) பிடித்துக் கொள்வான்;
(ஆகையால்)
மாலை— இப்படி பெரியனானவன்விஷயத்தில்
மதியாதே — சிறியன் என்று அலக்ஷ்யமாக நினையாமல்
மகிழ்ந்து- ("இவன் நம்மை அழைக்கப்பெற் றோமே" என்னும்) உகப்பை உடையனாய்க்கொண்டு
ஓடிவா. -

வ்யா. ஏழாம்பாட்டு. பாலகனித்யாதி. இவன் சிறுப்பிள்ளையன்றோவென்று பருவத்தைப்பார்த்துக் குறைய நினைக்கையாகிற பரிபவத்தைப் பண்ணாதேகொள். பண்டோருவித்யாதி. முன்பொருகாலத்திலே ஜகத்தையடையத் திருவயிற்றிலே வைத்து, ஒரு பவனாய ஆலந்தளிரிலே கண்வளர்ந்த சிறுப்பிள்ளையானவன் இவன் காண். அந்த அகடிதகடநா ஸாமர்த்தயமெல்லா முடையவனென்கை. மேலெழவித்யாதி. இவன் சீறுமாகில் மேலே எழக் குதித்து உன்னைப்பிடித்துக்கொள்ளும். மாலையித்யாதி. ஆனபின்பு இப்படி பெரியனானவனைச் சிறியனென்று பரிச்சேதியாதே, பெருமையையுடைய சந்த்ரனே! உன் பெருமைக்கீடாக 'இவன் நம்மை ஆதரித்து அழைக்கப்பெற்றோமே' என்னும் உகப்புத்தோற்ற ஓடிவா.

மூ:—சிறியனென் றென்னிளஞ்சிங்கத்தை யிகழேற் கண்டாய்
சிறுமையின் வார்த்தையை மாவலி யிடைச்சென்று கேள்
சிறுமைப் பிழைகொள்ளி னீயுமுன்றேவைக்குரியை காண்
நிறைமதி! நெடுமால் விரைந்துன்னைக் கூவுகின்றான். அ.

பதவுரை.

நிறை மதி!— பூர்ணசந்த்ரனே!
என்— என்னுடைய
இளம் சிங்கத்தை—சிங்கக்குட்டிபோன்ற பிள்ளையை
சிறியன் என்று— சிறுப்பிள்ளையென்று
இகழேல் கண்டாய்— அவமதி செய்யாதேகொள்;
சிறுமையின் — இவன் பால்யத்தினுடைய
வார்த்தையை— சர்யாவிசேஷத்தை
மா வலி இடை— மஹாபலியிடத்திலே
சென்று கேள் — போய் கேட்டுக்கொள்;
சிறுமை— ("இப்படியுள்ளவன் விஷயத்தில் ) சிறுமை நினைத்தவிது
பிழை கொள்ளில்—அபாரதம்" என்று நினைத்தாயானால்
( அப்போது, )
நீயும்— நீயும்
உன் தேவைக்கு—அவன் விஷயத்தில் தாஸ்யத்துக்கு.
உரியை காண்— தகுந்தவனுவாய்;
நெடு மால்— ஸர்வாதிகனான இவன்
விரைந்து— த்வரித்து
உன்னை— உன்னை
கூவுகின்றான்— அழையாநின்றான்.

வ்யா. எட்டாம்பாட்டு. சிறியனித்யாதி. பால ஸிஹ்மம்போலே செருக்கையும் வீர்யத்தையு முடையனுயிருக்கிற என்னுடைய பிள்ளையை, பருவத்தைப் பார்த்துச் சிறுப்பிள்ளை யென்று அநாதரியாதே கிடாய். சிறுமையித்யாதி. இவனுடைய பால்யத்தினுடைய விசேஷத்தை வாமனனுய்ச் சென்று, தன்னை வசீகரித்து " மூவடி " என்று இரந்து இரண்டடியாலே ஜகத்தையடைய வளர்ந்து ஓரடிக்குத் தன்னைச் சிறையிலே வைக்கப்பட்ட மஹாபலி பக்கலிலே சென்று கேட்டுக்கொள். சிறுமையித்யாதி. இப்படி யிருக்கிறவன் விஷயத்தில் சிறுமையை நினைத்தவிது நமக்கு அபாரதமென்று புத்திபண்ணுவுதியாகில், அப்போது நீயும் அவன் திறத்தில் அடிமைக்கு ப்ராப்தன் காண். நிறையித்யாதி. பரிபூர்ணனை சந்த்ரனே! ஸர்வாதிகனான வவன், பெரிய த்வரையோடே உன்னை யழையா நின்றான்; ஆனபின்பு பூர்த்திக்கீடாக ஓடிவாவென்று கருத்து. ... ... ... அ.

மூ. —தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய
பேழைவயிற் றெம்பிரான் கண்டாயுன்னைக் கூவுகின்றான்
ஆழிகொண்டுன்னை யெறியுமையுற வில்லைகாண்
வாழவுறுதியேல் மாமதீ! மகிழ்ந்தோடிவா. கூ.

பதவுரை.

மா மதீ!— பெருமையுடைய சந்த்ரனே!
தாழியில்— தாழியிலே சேர்த்திருந்த
வெண்ணெய்— வெண்ணெயை
தட— விஸ்த்ர்தமான
கை ஆர— கை நிறையும்படி
விழுங்கிய— அள்ளி அமுதுசெய்த
பேழை— விசாலமாய் பருத்த
வயிறு— திருவயிற்றையுடையனாய்
எம் பிரான் கண்டாய்— எங்கள் குலத்துககு உபகாரகனுயிருக்கிறவன்காண்
உன்னை— உன்னை
கூவுகின்றான்— அழையாநின்றான்;
( அழைக்கச்செய்தேயும் நீ வாராதிருந்தால் உன் தலையை அறுக்கைக்காக)
உன்னை— உன்மேல்
ஆழி கொண்டு— திருவாழியைக்கொண்டு

| | |
|---|---|
| எறியும்— எறிவான்; | வாழ உறுதி யேல்— நீ ஜீவிக்கவேண்டியிரு ந்தாயாகில் |
| ஐயுறவு— இதில் ஒருஸம்சயம் | மகிழ்ந்து— ப்ரீதனாய்க்கொண்டு |
| இல்லைகாண்— இல்லைகாண்; | ஓடிவா— ஓடிவா. |

வ்யா. ஒன்பதாம்பாட்டு. தாழியித்யாதி. தாழியிலே சேர்த்திருக்கிற வெண்ணெயை அபிநிவேசாதிசயத்தாலே பருவத்துக்குத்தக்க கையன்றே வென்னும்படி வெண்ணெயைக் கண்டவாறே விஸ்த்ர்தமான கைநிறையும்படி அள்ளி அமுதுசெய்த. பேழையித்யாதி. உள்ளுப்புக்க த்ரவ்ய கௌரவத்தாலே விசைத்துப் பெருத்திருக்கிற திருவயிற்றையுடையனாய் எங்கள்குலத்துக்கு உபகாரகனா யிருக்கிறவன்காண் உன்னை யழையா நிற்கிறான். இத்தால் - தன்பருவத்துக்கீடாக வெண்ணெயை விரும்பி விழுங்கினாற்போலே யிருப்ப தொன்றுகாண் உன்னை யழைக்கிறதுமென்கை. ஆழியித்யாதி. அவ் வெண்ணெய்த்தாழியை எட்டாதபடி வைக்கில் கல்லைக்கொண்டு எறிந்து உடைக்குமாப்போலே, நீயும் வாராதிருக்கில் தலையை யறுக்கைக்காகத் திருவாழியைக்கொண்டு உன்னை யெறியும்; இதில் ஒரு ஸம்சய மில்லைகாண். வாழவித்யாதி. அப்படி அவன் க்ரோதத்துக்கு விஷயமாய் முடிந்து போகாதே ஜீவிக்கவேண்டி யிருந்தாயாகில், பெருமையையுடைய சந்த்ரனே! உன் பெருமைக்கீடாம்படி ப்ரீதனாய் ஓடிவா. ... ... ... ... * கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—மைத்தடங்கண்ணி யசோதை தன்மகனுக்கிவை
ஒத்தனசொல்லி யுரைத்தமாற்ற மொளி புத்தூர்
வித்தகன் விட்டுசித்தன் விரித்ததமிழிவை
எத்தனையுஞ் சொல்லவல்லவர்க் கிடரில்லையே.

பதவுரை.

| | |
|---|---|
| மை— கறுத்த | வித்தகன் — மங்களாசாஸந ஸமர்த்தரான |
| தட கண்ணி— பெரிய கண்களை உடையளான | விட்டுசித்தன்— பெரியாழ்வார் |
| அசோதை — யசோதையானவள் | விரித்த— விஸ்தரித்து அருளிச்செய்ததாய் |
| தன் மகனுக்கு—தன் புத்ரனான இவனுக்கு | தமிழ்— த்ராவிடபாஷா ரூபமான |
| ஒத்தன— நினைவுக்கும் சொல்லுக்கும் சேர்ந்தவையான | இவை— இப்பாசுரங்கள் பத்தையும் |
| இவை சொல்லி—இவற்றைச் சொல்லி | எத்தனையும்— ஏதேனும் ஒருபடியாக |
| உரைத்த — சந்த்ரனை நோக்கிச்சொன்ன | சொல்ல வல்லவர்க்கு — ஓதவல்லவர்களுக்கு |
| மாற்றம் — பாசுரத்தை | இடர்— துக்கம் |
| ஒளி — தேஜஸ்ஸை உடைத்தான | இல்லை— ஒன்றுமில்லை. |
| புத்தூர்—ஸ்ரீவில்லிபுத்தூரில்அவதரித்தவராய் | |

( ள - அரை. )

வ்யா. மைத்தடங்கண்ணி அசோதை. கறுத்துப் பெருத்திருந்துள்ள கண்ணையுடையளான யசோதை. அஞ்சநத்தாலே அலங்க்ர்தமாய்ப் பரந்திருந்துள்ள கண்ணையுடையளென்னுதல்; *அஞ்சனவண்ணனை யிவனை அநவரதம் பார்த்துக்கொண் டிருக்கையாலே,

இவனுடைய திருமேனியின் நிறம் ஊறி, அத்தாலேமைத்து, இவன் பக்கல் ஸ்நேஹத்தாலே விகஸிதமான கண்ணையுடையவ னென்னுதல். நன்னித்யாதி. தன்னுடைய புத்ரனான இவனுக்கு நினைவுக்கும் சொல்லுக்கும் சேர்ந்தவையாயிருக்கிற இவற்றைச்சொல்லி மென்மையும் வன்மையும் தோன்றும்படியாகச் சந்த்ரனைக்குறித்துச் சொன்ன பாசுரத்தை. ஒளியித்யாதி. நிலமிதிதானே ஜ்ஞாநப்ரேமங்களை விளைக்கும் தேஜஸ்ஸை யுடைத்தான ஸ்ரீவில்லிபுத்தூரில் மங்களாசாஸந ஸமர்த்தரான பெரியாழ்வார் விஸ்தரித் தருளிச்செய்ததாய் த்ராவிடரூபமா யிருக்கிற இவை பத்துப்பாட்டையும் ஏதேனுமொருபடி சொல்ல வல்லவர்களுக்கு துக்கமென்பது ஒன்றுமில்லை. ... ... ... ... ... ௧0.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு. தன் என் சுற்றுச் சக்கரம் அழகிய தண்டு
பாலகன் சிறியன் தாழி மை உய்ய.

---(*)---

ஆக - திருமொழி, ௪ - க்கு, பாட்டு-ருக.

---

அ. கீழிற்றிருமொழியிலே, அவன் நிலாமுற்றத்திலே யிருந்து புழுதியளைவது, அம்புலியை யழைப்பதானபடியை, யசோதைப்பிராட்டி, தானநுபவித்து, அவைதன்னைச் சந்த்ரனைப் பார்த்துச்சொல்லி, இவனோடே விளையாடவேண்டி யிருந்தாயாகில் விரைந்துவாவென்று பலஹேதுக்களாலும் அவனையழைத்த ப்ரகாரத்தை, தாமும்பேசி, பிற்காலமா யிருக்கச்செய்தே தத்காலம்போலே அவனுடைய அந்த சேஷ்டிதத்தை யநுபவித்தாராய் நின்றார்; இனிமேல் அவனுடைய பருவத்துக்கீடாக அவன் செங்கீரையாடுகிறது காணவேணுமென்று ஆசைப்பட்டு, அவனைப் பலபடியாகப் புகழ்ந்து “ எனக்கு ஒருகால் செங்கீரை ஆடவேணும் ” என்று பலகாலும் அபேக்ஷித்து அந்த சேஷ்டிதரஸத்தை அவளநுபவித்தபடியைத், தாமும் தத்காலம்போலே அநுபவித்து, அவள் பேசினாற்போலே பேசி இனியராகிறார்.

அவனை ஸ்தோத்ரபூர்வகமாகச் செங்கீரை யாடவேணுமென்று பலகாலு மபேக்ஷிக்கிறதும் அந்த சேஷ்டிதாநுபவம் பண்ணுகிறதுமே அவளோடு இவர்க்கு ஸாம்யம். * மயர்வறமதிநலம் பெற்றவராகையாலே அவன்படிக ளடங்கலும் ப்ரகாசிக்கையாலே தர்ம்மைக்யத்தாலே அவதாராந்தர சேஷ்டிதங்களையும் இவ்வவதாரந்தன்னில் உத்தரகாலசேஷ்டித விசேஷங்களையும் பரத்வாதிகளிலுண்டானபடிகளையும், உகந்தருளின நிலங்களில் நிலையால் தோற்றுகிற குணவிசேஷங்களையு மெல்லாம் தம்முடைய ப்ரேமாதிசயத்தாலே இவ்வஸ்துவுக்கு விசேஷணமாக்கிக்கொண்டு புகழ்ந்து, அந்த சேஷ்டிதரஸத்தை அநுபவிக்கிறது இவர்க்கு விசேஷம். ... ... ... ... ... ... ... *.

மூ.—உய்ய வுலகுபடைத்துண்ட மணிவயிறு!
ஊழிதோறூழி பலவாலினிலை யதன்மேல்
பையவுயோகுதுயில்கொண்ட பரம்பரனே!
பங்கயநீணயனத்தஞ்சனமேனியனே!
செய்யவளின்னகலஞ் சேமமெனக்கருதிச்
செல்வுபொலி மகரக்காது திகழ்ந்திலக
ஐய! எனக்கொருகாலாடுக செங்கீரை
யாயர்கள் போரேறே! ஆடுகவாடுகவே.

பதவுரை.

உய்ய— ஆத்மாக்கள் உஜ்ஜீவிக்கைக்காக
உலகு— உலகங்களை
படைத்து— ஸ்ர்ஷ்டித்து [உண்டாக்கி]
உண்ட— பின்பு அவற்றை உள்ளே வைத்து ரக்ஷித்த
மணி வயிறு! — அழகிய வயிற்றை உடையவனே!
பல ஊழி ஊழி தோறு— பல கல்பங்கள்தோறும்
ஆலின் இலை அதன்மேல் — ஒரு ஆலிலையின் மேலே
பைய— மெள்ள [அவ்வாலிலை அசையாதபடி]
உயோகு துயில் கொண்ட — யோகநித்ரை பண்ணியருளின
பரம் பரனே!— பரனில்காட்டிலும் பரனாயிருக்குமவனே!
பங்கயம்— தாமரைமலரை ஒத்ததாய்
நீள்— நீண்டிருக்கிற
நயனம்— திருக்கண்களை உடையனாய்
அஞ்சனம்— மைபோன்ற
மேனியனே!— திருமேனியை உடையவனே!
செய்யவள்— செந்தாமரையிற் பிறந்த பிராட்டிக்கு வாஸஸ்தாநமான
நின் அகலம்— உன் திருமார்வானது
சேமம் என— ரக்ஷையை உடைத்தாக வேணும் என்று
கருதி— நினைத்து
செல்வு பொலி— ஐச்வர்ய ஸம்ருத்திக்குக் குறிப்பான
மகரம்— திருமகரக் குழைகளோடு கூடின
காது— திருக்காதுகளானவை
திகழ்ந்து இலக— மிகவும் விளங்க
ஐய!— ஐயனே!
எனக்கு— எனக்கு
ஒருகால்— ஒருவிசை
செங்கீரை ஆடுக— $ செங்கீரை ஆடியருளவேணும்;
ஆயர்கள்— இடையர்களுக்கு பவ்யனாய்
போர்— யுத்தோந்முகமான
ஏறே!— ரிஷபம்போலே செருக்கி இருக்கிறவனே!
ஆடுக! ஆடுக!— ஆடவேணும் ஆடவேணும்!!

$ செங்கீரை— தாய்மார் முதலானோர் பிள்ளைகளைத் தாங்களே அசைத்து ஆடுவிப்பதொரு ந்ருத்த விசேஷம்.

வ்யா. முதற்பாட்டு. உய்யவித்யாதி. கரண களேபர விதுரராய் (க) போகமோக்ஷ சூந்யராய்க் கிடக்கிற ஆத்மாக்கள் உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாக லோகத்தை ஸ்ர்ஷ்டித்து, பின்பு அவாந்தரப்ரளயம்வர, அதில் அழியாதபடி உள்ளேவைத்து நோக்கின அழகிய திருவ

(க) ஹா ஹரௌ கூ.ஶு ம நு.

யிற்றை யுடையவனே. ஊழிதோறித்யாதி. ப்ரவாஹரூபேண வருகிற பல கல்பங்கள் தோறும் ஜகத்தை யடங்க விழுங்கின திருவயிற்றோடே ஒரு பவனான ஆலிலையின்மேலே அது அசையாதபடி மெள்ள யோகநித்ரை பண்ணின பராத்பரனானவனே. பங்கயமித்யாதி. அந்த ஸர்வஸ்மாத்பரத்வஸூசகமாய் விகாஸாதிகளால் தாமரையை ஒருபோலியாகச் சொல்லலாம் படியாய், அவ்வளவன்றிக்கே நீண்டிருக்கிற திருக்கண்களை யுடையனாய், அதுக்கு பரபாகமாய் அஞ்சனம்போலே யிருக்கிற திருமேனியையுடையவனே. செய்யவளித்யாதி. பெரிய பிராட்டியாருக்கு வாஸஸ்தாநமான உன்னுடைய திருமார்வானது இந்த ந்ர்த்தத்தால் அசையாதே ரக்ஷையையுடைத்தாகவேணுமென்று நினைத்துக்கொண்டு ஐச்வர்யஸம்ர்த்திக்கு ஸூசகமான திருமகரக்குழைகளோடு கூடின திருக்காதுகளானவை உஜ்ஜ்வலமாய்க்கொண்டு விளங்க. ஐயவித்யாதி. ஐயனே! என்பொருட்டாக ஒருகால் செங்கீரையாடி யருளவேணும். ஆயர்களித்யாதி. ஆயர்களுக்கு என்னுடையவனென்னும்படி பவ்யனாய், அத்தாலே யுத்தோந்முகமான ரிஷபம்போலே செருக்கியிருக்கிறவனே! ஆடியருளவேணும் ஆடியருளவேணும். செங்கீரையாவது- தாய்மார் முதலானோர், பிள்ளைகளைத்தாங்களே அசைத்தாடுவிப்பதொரு ந்ர்த்த விசேஷம். ... ... ... ... க.

மூ.—கோளரியின்னுருவங்கொண்ட வுணனுடலங்
குருதிகுழம்பியெழக் கூருகிராற்குடைவாய்!
மீளவவன்மகனை மெய்ம்மைகொளக்கருதி
மேலையமரர் பதிமிக்கு வெகுண்டுவரக்
காளநன்மேகமவை ¶ கல்லொடுகார்பொழியக்
கருதிவரைக்குடையாக் காலிகள் காப்பவனே!
ஆளவெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. உ.

பதவுரை.

கோள் அரியின்— மிடுக்கை உடைய நரசிங்கத்தின்
உருவம் கொண்டு— வேஷத்தை தரித்துக் கொண்டு
அவுணன்— ஹிரண்யாஸுரனுடைய
உடலம்— சரீரமானது
குருதி— ரக்தம்
குழம்பி எழ— குழம்பிக் கிளரும்படியாகவும்
மீள— மறுபடியும்
அவன்— அவ்வஸுரன்
மகனை— தன்புத்ரனை ப்ரஹ்லாதனை
மெய்ம்மைகொள—'ஸத்யவாதி' என்று நினைக்கும் படியாகவும்
கருதி— திருவுள்ளம்பற்றி
கூர் உகிரால்— கூர்மையான நகங்களாலே
குடைவாய்!— (அவ்வஸுரன் உடலைக்) கிழித்தவனே!,
மேலை— மேன்மை தங்கிய
அமரர் பதி— தேவேந்த்ரனானவன்
மிக்கு வெகுண்டு வர — மிகவும் கோபித்து வந்த வளவிலே
காளம்— கறுத்த
நல்— (ஸ்வாமியிட்டகார்யத்தை நிறைவேற்றுகைக்குடலான) நன்மையை உடைய
மேகம் அவை— மேகங்களானவை
கல்லொடு— கல்லோடுகூடின
கார் பொழிய— வர்ஷத்தைச் சொரிய

¶ "கல்லோடு கால்பொழிய" என்றும் பாடம்.

கருதி— ("இம்மலையே உங்களுக்கு ரக்ஷகம்; இச்சோற்றை இதுக்கிடுங்கோள்" என்று முன்பு தான் அருளிச்செய்ததை ) நினைத்து
வரை— அந்த கோவர்த்தநமலையை
குடையா — குடையாகக்கொண்டு
காலிகள் — பசுக்களை
காப்பவனே!— ரக்ஷித்தவனே!
ஆளா!— இப்படிரக்ஷித்த ஆண்பிள்ளைத்தன முடையவனே!
எனக்கு—, ஒருகால்-, ஆடுக செங்கீரை-, ஆயர்கள் போரேறே!-, ஆடுக ஆடுக-;

வ்யா. இரண்டாம்பாட்டு. கோளரியி னுருவங்கொண்டு. தேவர்கள் கொடுத்த வரத்துக்கு விரோதமற அவனை நிரஸிக்கைக்காக மிடுக்கையுடைத்தான நரஸிம்ஹவேஷத்தை பரிக்ரஹித்துக் கொண்டு. அவுண னித்யாதி. பாபிஷ்டனான ஹிரண்யாஸுரனுடைய வரபல புஜபலங்களாலுண்டான செருக்காலே மிடியுறவளர்ந்த சரீரமானது ரத்தங்குழம்பிக் கிளரும்படியாகவும், (க) "ஸர்வத்ராஸ்தி" என்று சொன்ன வார்த்தையைப் பொய்யென்று, * இங்கில்லையென்று தான் * அறைந்திட்ட தூணைத்தட்டின அவன் மநஸ்ஸு புரிந்து ஸ்வபுத்ரனானவனை "ஸத்யவாதி" என்று கொள்ளும்படியாகவும் திருவுள்ளம்பற்றி ஆயுதம் எடுக்கவொண்ணாததுகொண்டு முழுக்கூர்மையான திருவுகிர்களாலே *ஒள்ளியமார்பு உறைக்க ஊன்றிக் குடைந்தவனே. மீளவென்றது - "இல்லை" என்ற மநஸ்ஸு புரிந்தென்றபடி. மெய்ம்மைகொளவென்றது-மெய்ம்மையையுடையவனாக நினைக்கவென்றபடி. மேலையித்யாதி. ஐச்வர்யத்தாலும் ஆயுஸ்ஸாலும் இவ்வருகுள்ளாரிற்காட்டில் மேலாயிருக்கிற தேவர்களுக்கெல்லா மதிபதியான இந்த்ரன் "எனக்கிட்ட சோற்றை யுண்டவனார்?" என்று பசியாலே மிகவும் கோபித்துவர, கடலை வறளாக்கப் பருகுகையாலே கறுத்து, ஸ்வாமிசொன்ன கார்யம் செய்கையாகிற நன்மையையுமுடைய மேகங்களானவை, பெருங்காற்றோடே கல்வர்ஷமாகவர்ஷிக்க. அன்றிக்கே, "கார்" என்று பாடமானபோது - கல்லோடேகூட வர்ஷத்தைச் சொரியவென்று பொருளாகக்கடவது. கருதியித்யாதி. "இம்மலையே உங்களுக்கு ரக்ஷகம், இச்சோற்றை இதுக்கு இடுங்கோள்" என்று அடியில் அருளிச்செய்ததை நினைத்து அம்மலைதன்னையே குடையாகக்கொண்டு பசுக்களை ரக்ஷித்தவனே. "இடையரையும் இடைச்சிகளையும் ரக்ஷித்த" என்னாதே, "காலிகள் காப்பவனே" என்றது - ரக்ஷ்யவர்க்கத்தில் ப்ரதாநம் இவையென்று தோற்றுகைக்காக. பண்ணின உபகாரமறிவதும் இவையேயிறே. ஆள. இப்படிரக்ஷித்த ஆண்மையை யுடையவனே! என்னுதல்; என்னுடைய அபேக்ஷிதம்செய்து என்னையாளும்படியாக வென்னுதல். எனக்கித்யாதி. எனக்காக ஒருகால் செங்கீரையாடி யருளவேணும். ஆயர்களித்யாதி. பூர்வவத். ... ... உ.

மூ.—நம்முடை நாயகனே! நான்மறையின் பொருளே!
நாபியுணற்கமல நான்முகனுக் கொருகால்
தம்மனையானவனே! தரணி தலமுழுதுந்
தாரகையின்னுலகுந்தடவி யதன்புறமும்
விம்மவளர்ந்தவனே! வேழமு மேழ்விடையும்
விரவியவேலைதனுள் வென்றுவருமவனே!
அம்ம! எனக்கொருகாலாடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே! ஆடுகவாடுகவே. ௩.

(க) "ஸர்வத்ராஸ்தி."

பதவுரை.

நம்முடை— எங்களுடைய
நாயகனே!— நாதனே!
நால் மறையின்— நாலு வேதங்களின்
பொருளே!— பொருளாயிருப்பவனே!
நாபி உள்— திருநாபியுள்உண்டான
நல் கமலம்— நல்தாமரைமலரில் பிறந்த
நான் முகனுக்கு— சதுர்முகப்ரஹ்மாவுக்கு
ஒருகால்— வேதத்தைப் பறிகொடுத்த காலத்தில்
தம்மனை ஆனவனே!— தாய்போலே பரிவனானவனே!
தரணி தலம் முழுதும் — பூதலம் அடங்கலும்
தாரகையின் உலகும்— நக்ஷத்ரலோகமும்
தடவி— திரு அடிகளால் ஸ்பர்சித்து
அதன்புறமும்— அதற்குப் புறம்பாய் உள்ள தேசமெங்கும்
விம்ம— பரிபூர்ணமாம்படி
வளர்ந்தவனே!— த்ரிவிக்ரமனாய் வளர்ந்தவனே!
வேழமும்— "குவலயாபீடம்" என்னும் யானையும்
ஏழ் விடையும்— ஏழுரிஷபங்களும்
விரவிய— ஹிம்ஸிப்பதாக உன்னோடு வந்து கலந்த
வேலைதனுள்— ஸமயத்திலே
வென்று— அவற்றை ஜயித்து
வருமவனே!— வந்தவனே!
அம்ம!— ஸ்வாமியே!
எனக்கொருகால்இத்யாதி பூர்வவத்.

வ்யா. மூன்றாம்பாட்டு. நம்முடை நாயகனே. எங்களுக்கு நிர்வாஹகனானவனே. நான்மறையின்பொருளே. நாலுவகைப்பட்ட வேதங்களுக்கும் ப்ரதாந ப்ரதிபாத்யனானவனே. (க) "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்றானிறே. நாபியுளித்யாதி. திருநாபியிலே உத்பந்நமாய் விலக்ஷணமாயிருந்துள்ள தாமரையைப் பிறப்பிடமாக வுடைய சதுர்முகனுக்கு ஒருகாலத்திலே தாய்போலே பரிவனானவனே. தம்மனை- தாய். மதுகைடபர்கள் கையிலே வேதத்தைப்பறிகொடுத்து, (உ) "வேதா மே பரமம் சக்ஷுர் வேதா மே பரமம் தநம்" என்று அவன் 'கண்ணிழந்தேன், தநமிழந்தேன்' என்று க்லேசப்பட, அவற்றை மீட்டுக்கொடுத்து ரக்ஷித்தபடியாலே "ஒருகால் தம்மனையானவனே" என்கிறது. தரணிதலமித்யாதி. பூதலமடங்கலும் நக்ஷத்ரலோகமும் நிலாத்தென்றல்போலே திருவடிகளாலே ஸ்பர்சித்து, அதுக்குப்புறம்புள்ள தேசமெங்குமொக்கப் பரிபூர்ணமாம்படிவளர்ந்தவனே. இத்தால்-ஆச்ரிதனான இந்த்ரனுடைய அபேக்ஷித ஸம்விதாநம் தலைக்கட்டுகைக்காகச்செய்த வ்யாபாரம் சொல்லிற்று. வேழமுமித்யாதி. குவலயாபீடமும் ஸப்தரிஷபங்களும் நலிவதாக உன்னோடே வந்து கலசினவளவிலே அவற்றை ஜயித்துவருமவனே. வேழத்தையும் ரிஷபத்தையும்ஜயித்தது (ங) பிந்நகாலத்திலே யாயிருக்கச்செய்தேயும், ஏககாலத்திற்போலே யருளிச்செய்தது, விரோதிநிரஸநத்தில் த்வரையாலே. இத்தால் ஸ்ரீமதுரையில் பெண்களுக்கும் நப்பின்னைப்பிராட்டிக்கும் ப்ரியகரமாம்படிசெய்த வ்யாபாரங்கள் சொல்லப்பட்டன. அம்ம - ஸ்வாமீ. எனக்கித்யாதி. பூர்வவத். ... ... ... ... ௩.

மூ.—வானவர்தாமகிழ வன்சகடமுருள
வஞ்சமுலைப்பேயி னெஞ்சமதுண்டவனே!
கானகவல்விளவின் காயுதிரக்கருதிக்
கன்றதுகொண்டெறியுங் கருநிறவென்கன்றே!

(க) "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" (உ) "வேதா மே பரமம் சக்ஷுர் வேதா மே பரமம் தநம்" (ங) ஷிஞகாஉ.

தேனுகனும் முரனுந் திண்டிறல் வெந்நரக
னென்பவர்தாமடியச் செருவதிரச்செல்லும்
ஆனை! எனக்கொருகாலாடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே! யாடுகவாடுகவே. ௯

பதவுரை.

வானவர்தாம்— தேவர்கள்
மகிழ— ப்ரீதி அடையும்படியாகவும்
வல் சகடம்— வலிவுள்ள சகடாஸுரன்
உருள— உருளும்படியாகவும்
வஞ்சம்— வஞ்சனையை உடைய
பேயின்— பூதனையின்
முலை— முலைமேலிருந்த
நஞ்சு— விஷத்தை
அமுது— அம்ருதமாக
உண்டவனே!— அமுதுசெய்தவனே!
கானகம்— காட்டிலுள்ள
வல்— பலிஷ்டமான
விளவின்— விளாவின் [ விளாமரம் ]
காய்— காய்களானவை
உதிர— உதிரும்படியாக
கருதி— நினைத்து
கன்று— கன்றை
அது— அந்த தேனுகாஸுரனை
கொண்டு— கையில் கொண்டு
எறியும்— எறிந்தவனாய்
கரு நிறம்— கறுத்த நிறத்தை யுடையவனாய்
என் கன்றே!—என்னுடைய கன்றானவனே!
தேனுகனும்— தேனுகாஸுரனும்
முரனும்— முராஸுரனும்
திண் திறல்—ப்ரபலமானவலிமை உடையவனும்
வெம்— கொடியவனை
நரகன்— நரகாஸுரனும்
என்பவர்தாம்—என்று சொல்லப்படுகிறவர்கள் ஆகிய இவர்களெல்லாரும்
மடிய— மாளும்படியாக
செரு— யுத்தத்திலே
அதிர— மிடுக்கையுடையவனாய்க்கொண்டு
செல்லும்— சென்ற
ஆனை!— ஆனையானவனே!
எனக்கித்யாதி பூர்வவத்.

வ்யா. நாலாம்பாட்டு. வானவரித்யாதி. பூபார நிரஸநார்த்தமாக அர்த்தித்து அவதரிப்பித்த தேவர்கள், பருவம் நிரம்புவதுக்குமுன்னே தொடங்கி ஆஸுரப்ரக்ருதிகளை நிரஸிக்கிறபடியைக்கண்டு ப்ரீதராம்படியாக, அஸுராவிஷ்டமாய்க்கொண்டு, கண்வளருகிற விடத்திலே நலியவந்த ப்ரபலமான சகடத்தை, முலைவரவு தாழ்த்துச் சீறிநிமிர்த்த திருவடிகளாலே கட்டழிந்து சிதறியுருளப்பண்ணி, பெற்றதாய்போல் வஞ்சித்துவந்த பேய்ச்சியுடைய முலையில் அந்தக் கொடிதான நெஞ்சை ப்ராணஸஹிதமாக உண்டவனே. “நஞ்சமுதுண்டவனே” என்று பாடமானபோது- நஞ்சை அமுதாக வுண்டவனே யென்று பொருளாகக் கடவது. (க) “ஸ்தந்யம் தத்விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீஜ் ஜகத்குரோ:” என்னக்கடவதிறே. கானகமித்யாதி. காட்டில் கன்றுகள் மேய்க்கப்போன விடத்திலே விளாவான வடிவைக்கொண்டும் கன்றான வடிவைக்கொண்டும் சிலவஸுரர்கள் தன்னை நலிவதாகவந்து நிற்க, அவற்றிலே ஒன்றையிட்டு ஒன்றையெறிந்து இரண்டையும் முடித்தபடியைச் சொல்லுகிறது. காட்டிலே நிற்கிற வலிய விளாவினுடைய காய்களானவை யுதிரும்படியாகக்கருதி, கன்றானவத்தைக்கொண்டு எறிந்து கறுத்த நிறத்தையுடைய என்னுடைய கன்றாய் நின்றவனே. இத்

(க) “ஸ்தந்யம் தத்விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீஜ் ஜகத்குரோ:”

தால்- விரோதிநிரஸநம் பண்ணுகையாலே திருமேனி புகர் பெற்றபடியும், எல்லாத்தசையிலும் ஆச்ரிதர்க்கு பவ்யனாயிருக்கும்படியும் சொல்லுகிறது. "என்கன்றே" யென்றது - உகப்பின் கார்யமான அஃறிணைச்சொல்லு. [அஃறிணைச் சொல்லு- அசேதநவாசியான சொல்லு.] தேனுகனித்யாதி. (க) தேநுகனுகிற அஸுரனும், மூராஸுரனும், திண்ணிதான திறலையுடையனுய் அதிக்ரூரனுமாயிருக்கிற நரகாஸுரனும் என்று சொல்லப்படுகிறவர்கள் தாங்களுடைய நசித்துப் போம்படியாக யுத்தத்திலே முடுகிச்சென்ற ஆனையானவனே. ஆனைபோல் என்னுதே, ஆனையென்றது- (உ) முற்றுவமை. ... ... ... ... ... * ச.

மூ.—மத்தளவுந் தயிரும் வார்குழனன்மடவார்
வைத்தனநெய் களவால் வாரிவிழுங்கியொருங்
கோத்தவிணைமருத முன்னியவந்தவரை
யூருகரத்தினொடு முந்திய வெந்திறலோய்!
முத்தினிளமுறுவல் முற்றவருவதன்முன்
முன்னமுகத்தணியார் மொய்குழல்களலைய
அத்த! எனக்கொரு காலாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறே யாடுகவாடுகவே. ரு.

பதவுரை.

வார் குழல் — நீண்ட மயிர்முடியை உடையராய்
நல் மடவார்— நன்மையையும் மடப்பத்தையும் உடையரான ஸ்த்ரீகள்
வைத்தன— சேமித்து வைத்தவையாய்
மத்து— மத்தாலே
அளவும் — அளாவிக்கடைகைக்கு யோக்யமான
தயிரும்— தயிரையும்
நெய்— வெண்ணெய் உருக்கின நெய்யையும்
களவால்— க்ருத்ரிமத்தாலே
வாரி— கைகளால் அள்ளி
விழுங்கி— வயிறார உண்டு
உன்னிய – உன்னை ஹிம்ஸிக்கவேணுமென்னும் நினைவை யுடையராய்
ஒருங்கு— ஒருபடிப்பட
ஒத்த— மனம் ஒத்தவர்களாய்
இணைமருதம்—இரட்டை மருதமரமாய்க்கொண்டு
வந்தவரை— வந்து நின்ற அஸுரர்களை
ஊரு கரத்தினொடும்— துடைகளாலும் கைகளாலும்
உந்திய—இரண்டுபக்கத்திலும் சரிந்துவிழும்படி தள்ளின
வெம் திறலோய்!– வெவ்விய வலிவையுடையவனே!
அத்த!— அப்பனே!
முத்து— திரு முத்துக்கள் தோன்றும்படி [ முத்து - பல் ]
இன்— இனியதான
இள முறுவல் – மந்தஸ்மிதமானது
முற்ற— பூர்ணமாக
வருவதன்முன்– வருவதற்குமுன்னே
முன்னம் முகத்து– முன் முகத்திலே
அணி ஆர்— அழகு மிகுந்ததாய்
மொய்— நெருங்கி இராநின்ற
குழல்கள்—திருக்குழல்களானவை [ குழல் - கேசம். ]
அலைய— தாழ்ந்து அசையும்படி
எனக்கித்யாதி பூர்வவத்.

(க) யெநாக. (உ) முற்றுவமையாவது- பூர்ணோபமை.

வ்யா. ஐந்தாம்பாட்டு. மத்தளவுமித்யாதி. வார்குழல் நன்மடவார் வைத்தன. நீண்ட கேசபாசத்தையும் நன்றான மடப்பத்தையும் உடையரான ஸ்த்ரீகள் சேமித்து வைத்தவையான. மத்தளவும்தயிரும்- நெய்யும் களவால் வாரிவிழுங்கி. மத்தாலே அளாவிக்கடைகைக்கு யோக்யமான தயிரும், முன்புகடைந்த வெண்ணெய் உருக்கின நெய்யும், வைத்தவர்கள் அறியாதபடி க்ர்த்ரிமத்தாலே அபிநிவேசாநுகுணமாக வாரி பூமுதுசெய்து. உன்னிய-ஒருங்கொத்த விணைமருதம்- வந்தவரை. உன்னை நலியவேணுமென்னும் நினைவையுடையராய் அதுக்கீடாக வொருபடிப்பட நெஞ்சு ஒத்துள்ளவர்களாய் ஸ்வவேஷம் தெரியாதபடி இரட்டை மருதாய்வந்து நின்ற வஸுரர்களை. ஊருவித்யாதி. நடுவே தவழ்ந்து போகையாலே திருத்துடைகளாலும் திருக்கைகளாலும் இரண்டருகும் சரிந்துவிழும்படி தள்ளிப்போகட்ட தூய திறலை யுடையவனே. முத்தித்யாதி. திருமுத்துக்கள் தோன்றும்படி இனிதான மந்தஸ்மிதமானது பூர்ணமாக வருவதற்குமுன்னே, முன்முகத்திலே அழகுமிக்குச் செறிந்துள்ள திருக்குழல்களானவை "வந்துன்பவளவாய்மொய்ப்ப" என்கிறபடியே திருப்பவளத்தை மறைக்கும்படி தாழ்ந்தலையும்படியாக. அணி-அழகு. மொய்- செறிவு. அத்த-அப்பனே. ௫.

௬.—காயமலர்நிறவா! கருமுகில்போலுருவா!
கானகமாமடுவிற் காளியனுச்சியிலே
தூயநடம்பயிலுஞ் சுந்தரவென்சிறுவா!
துங்கமதக்கரியின் கொம்புபறித்தவனே!
ஆயமறிந்து பொருவானெதிர் வந்தமல்லை
யந்தரமின்றியழித்தாடிய தாளிணையாய்!
ஆய! எனக்கொருகாலாடுக செங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. ௬.

பதவுரை.

காய மலர் — காயாம்பூப்போன்ற
நிறவா!— திரு நிறத்தை உடையவனே!
கருமுகில்போல் — நீலமேகம்போன்ற
உருவா!— வடிவை உடையவனே!
கானகம்— காட்டிலே
மா மடுவில்— பெரியமடுவினுள்ளே கிடந்த
காளியன்— காளியனுடைய
உச்சியிலே— தலையிலே
தூய— மநோஹரமான
நடம்— நர்த்தநத்தை
பயிலும்— செய்த
சுந்தர— அழகையுடைய
என் சிறுவா!— என் பிள்ளையானவனே!
துங்கம்— அத்யுந்நதமாய்
மதம்— மதத்தை உடைத்தான
கரியின்—குவலயாபீடமென்னும் யானையின்,
கொம்பு— கொம்புகளை [தந்தங்களை]
பறித்தவனே!—சுலபமாகப் பிடுங்கினவனே!
ஆயம் அறிந்து— மல்லயுத்தம் செய்யும் வகை அறிந்து
பொருவான்— யுத்தம் செய்வதற்காக
எதிர்வந்த— எதிர்த்துவந்த
மல்லை— மல்லர்களை
அந்தரம் இன்றி — உனக்கொரு அபாயமுமில்லாதபடி
அழித்து— த்வம்ஸம் செய்து
ஆடிய— "இன்னம் வருவார் உண்டோ?", என்று கம்பீரமாய் ஸஞ்சரித்த
தாள் இணையாய்!—திருவடிகளை உடையவனே!
ஆய!— ஆயனே!
எனக்கித்யாதி பூர்வவத்.

வியா. ஆறும்பாட்டு. காயவித்யாதி. "காயா" என்கிற இத்தை "காய" என்று குறுக்கிக்கிடக்கிறது. செப்பாலும் சைத்யத்தாலும் காயாம்பூப்போலே யிருக்கிற நிறத்தை யுடையவனே. கருமுகிலித்யாதி. இருட்சியாலும் குளிர்த்தியாலும் காளமேகம்போ லிருக்கிற வடிவை யுடையவனே. காணகமித்யாதி. காட்டிடத்திலே பெரியபுலியினுள்ளே கிடந்ததொரியை அலைத்துக்கிளப்பி, க்ரோதத்தாலே விஸ்த்ருதமான அவன் சிரஸ்ஸிலே, லக்ஷணமாகையாலே அழகியதாயிருந்துள்ள நேத்ரத்தை நெருங்கச்செய்த அழகையு டைய என்பிள்ளையானவனே. ஸுந்தரம்- அழகு. சிறுவன்- பிள்ளை. துங்கமித்யாதி. பெரிய உயர்த்தியை யுடைத்தாய் (க) மதமுதிதமான குவலயாபீடத்தினுடைய கொம்புகளை அநாயா ஸேநப் பிடுங்கினவனே. ஆயமித்யாதி. மல்பொரும் கூறறிந்து பொருவதாக எதிர்ந்து வந்த மல்லரை, அவர்களுக்கு வ்யாபரிக்கைக்கு இடமறும்படி சீக்கிரமாகச்சென்று ஓடிப் பொருதழித்து, 'இன்னம் வருவாருண்டோ' என்று பார்த்து மநோஹரமாம்படி ஸஞ்சரித்த திருவடிகளை யுடையவனே. அதன்றிக்கே, அந்தரமின்றி என்றது - மற்பொருகிறபோது உடலும் உடலும் இடைவெளியறப் பொருதும்படி பொருதபடியைச் சொல்லுகிறதாகவு மாம். அன்றிக்கே, அந்தரமாவது- அபாயமாய், உனக்கொரு அபாயமில்லாதபடி. அவர்களை அழித்து என்கிறதாகவுமாம். ஆய- ஆயனே. ... ... ௬.

மூ.—துப்புடையாயர் கடஞ்சொல் வழுவாதொருகாற்
றாயகருங்குழனற் றோகைமயிலனைய
நப்பினைதன்றிறமா நல்விடையேழவிய
நல்லதிறலுடைய நாதனுமானவனே!
தப்பினபிள்ளைகளைத் தனமிகுசோதிபுகத்
தனியொருதேர் கடவித் தாயொடு கூட்டியவென்
அப்பு! எனக்கொருகா லாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறே யாடுகவாடுகவே. ௭.

பதவுரை.

துப்பு உடை— மிடுக்கை உடையரான
ஆயர்கள் தம்— இடையர்களுடைய
சொல்— வார்த்தையை
வழுவாது— தப்பாமல்
ஒருகால்— ஒருகாலத்திலே
ஆய— அழகியதாய்
கரு குழல்— கறுத்திருந்துள்ள மயிர் முடியை யுடையளாய்
நல் தோகை— நல்லதோகையையுடைய
மயில் அனைய— மயில்போன்ற சாயலையுடையளான.
நப்பினை தன் திறமா— நப்பின்னைப் பிராட்டி ஹேதுவாக
நல்— கொடுமையில் நன்றான
விடை ஏழ்— ரிஷபங்களேழும்
அவிய— மாளும்படியாக
நல்ல திறல் உடைய— நன்றான மிடுக்கை உடையனாய்
நாதனும் ஆனவனே!— அவ்விடையர்களுக்கு ஸ்வாமியுமானவனே!
தப்பின— கைதப்பிப்போன
பிள்ளைகளை— வைதிகன் பிள்ளைகளை,

(க) ஜீ.ஊ-ஙி.க.

தன— தன்னுடைய
மிருசோதி — நிரவதிகதேஜோரூபமான பரமபதத்திலே
புக— செல்லும்படியாக
தனி— தனியே
ஒரு— ஒப்பற்ற
தேர்— தேரை
கடவி— நடத்தி
(அங்குநின்றும் பிள்ளைகளைக் கொணர்ந்து)
தாயொடு— தாயோடு
கூட்டிய— கூட்டின
என்அப்ப!— என் அப்பனே!
எனக்கித்யாதி பூர்வவத்.

வ்யா. ஏழ்ப்பாட்டு இத்யாதி. துப்பு - மிடுக்கு. இத்தால்- ஏறுதழுவவல்ல ஸாமர்த்த்யத்தைச் சொல்லுதல்; அன்றிக்கே, ரிஷபங்களின் வன்மையும் இவன் மென்மையும் பாராதே இவற்றைத் தழுவவேணுமென்ற நெஞ்சுரமாதல். இப்படியிருந்துள்ள இடையர் தங்களுடைய வசநத்தைத்தப்பாதே ஒரு காலவிசேஷத்திலே. தூயவித்யாதி. அழகிய தாய்க்கழுத்திருந்துள்ள குழலையுடையளாய், அத்தாலே நன்றான தோகைமயில்போலே யிருக்கிற சாயலையுடைய நற்பின்னைப்பிராட்டிக்கே ஹேதுவாக. இவ்வளவேசேரலாமாகில், "ஆர் சொல்லிற்றுச்செய்தாலும் நல்லது" என்றிறே ஆயர்கள் தம் சொல்வழுவாதொழிந்தது. நல் விடையித்யாதி. கொடிதான ரிஷபங்கள் ஏழும் விளக்குப்பிணம்போலே அவியும்படியாக, நன்றான மிடுக்கை யுடையனாய், அத்தாலே இடையரும் "எங்கள் குலநாதன்" என்று கொண்டாடும்படி அவர்களுக்கு நாதனுமானவனே. நல்விடை யென்றது- "நல்லபாம்பு" என்னுமாபோலே க்ரௌர்யத்தைப்பற்ற. தப்பினவித்யாதி. ப்ரஸவஸமநந்தரம் மாதாவானவள் காண்பதற்குமுன்னே கைதப்பிப்போன வைதிக புத்ரர்களை "தன்னுடைச்சோதி" என்கிறபடியே தனக்கு அஸாதாரணமாய் நிரவதிகதேஜோரூபமான பரமபதத்திலே செல்லும்படியாகத், தனியே அத்விதீயமான தேரைநடத்தி, அத்தை ப்ரக்ருதி மண்டலத்தளவிலே நிறுத்தி, தானே அருகேசென்றுபுக்கு அங்குநின்றும் கொடுபோந்து, மாதாவானவள் "என் பிள்ளைகள்" என்று உச்சி மோந்து எடுக்கும்படி அவளோடேகூட்டினவனாய், ஆச்ரிதர் கார்யஞ்செய்து அவ்வழியாலும் எனக்கு உபகாரகனானவனே. ... ... எ.

மூ.—உன்னையுமொக்கலையிற் கொண்டுதமின்மருவி
யுன்னொடுதங்கள் கருத்தாயின செய்துவரும்
கன்னியருமகிழக் கண்டவர் கண்குளிரக்
கற்றவர்தெற்றிவரப் பெற்றவெனக்கருளி
மன்னுகுறுங்குடியாய்! வெள்ளறையாய்! மதிள்சூழ்
சோலைமலைக்கரசே! கண்ணபுரத்தமுதே!
என்னவலங்களைவாயாடுகசெங்கீரை
யேழுலகுமுடையா யாடுகவாடுகவே. அ.

பதவுரை.

மன்னு— ப்ரளயத்திலும் அழியாத
குறுங்குடியாய்!— திருக்குறுங் குடியிலே எழுந்தருளியிருக்குமவனே!
வெள்ளறையாய்!— திருவெள்ளறையிலே வர்த்திக்கிறவனே!
மதிள்சூழ்— மதிளாலே சூழப்பட்ட

சோலைமலைக்கு — திருமாலிருஞ் சோலை மலைக்கு
அரசே!— அதிபதியானவனே!
கண்ணபுரத்து— திருக்கண்ணபுரத்திலே நிற்கிற
அமுதே!— அம்ருதம்போல் போக்யனானவனே!
என்— என்னுடைய
அவலம்— துன்பத்தை
களைவாய்!— நீக்குமவனே!
உன்னையும்— (மநோஹாரியான) உன்னையும்
ஒக்கலையில்— இடுப்பிலே
கொண்டு— எடுத்துக்கொண்டு
தம் இல்— தங்கள் அகங்களிலே
மருவி— சேர்ந்து
உன்னொடு— உன்னோடு
தங்கள்— தங்களுடைய
கருத்து ஆயினசெய்து— நினைவுக்குத் தக்கபடி பரிமாறி
வருபவர்— மறுபடியும் கொண்டு வாராநிற்கிற
கன்னியரும்— இளம்பெண்களும்
மகிழ— இச்செய்தியைக்கண்டு ஸந்தோஷிக்கும் படியாகவும்
கண்டவர்— பார்த்தவர்களுடைய
கண்— கண்களானவை
குளிர— குளிரும்படியாகவும்
கற்றவர்—நாலுசொல் தொடுக்கக் கற்றவர்கள்
தெற்றிவர— பிள்ளைக்கவிகள் தொடுத்துவர
பெற்ற— உன்னைமகனாகப்பெற்ற
எனக்கு— என்விஷயத்திலே
அருளி— க்ருபைசெய்து
செங்கீரையாடுக;
வம் உலகும்— ஸப்தலோகங்களுக்கும்
உடையாய்!— ஸ்வாமியானவனே!
ஆடுக ஆடுக.

வ்யா. எட்டாம்பாட்டு. உன்னையுமித்யாதி. ஸௌந்தர்யாதிகளாலே ஸர்வஜித்தாபஹாரியான வுன்னையும் மருங்கிலே எடுத்துக்கொண்டு தங்கள் க்ருஹங்களிலே சேர்ந்து. 'இதென்னவருமைதான், இவன் மருங்கிலேயிருக்க இவர்கள் தங்கள் க்ருஹங்களறிந்து போனபடியென்!' என்று கருத்து. உன்னித்யாதி. ஈத்ருசனான வுன்னோடே தங்கள் நினைவுக்குத்தக்கபடி பரிமாறி, மீளவும் கொண்டுவாராநிற்கும் பாலைகளானவர்களும் இச்சேஷ்டிதத்தைக்கண்டு உகக்கும்படியாக. இத்தால்- தனியிடத்திலே யௌவநாவஸ்த்தனாய்த்தங்களோடே பரிமாறுமவன், மாத்ர்ஸந்நிதியில் இப்படி சைசவாவஸ்த்தனாய்ச்செய்கிற சேஷ்டிதம் கண்டால் அவர்கள் உகப்பார்களென்று கருத்து. கண்டவர் கண்குளிர. ஆரேனுமாக, இச்சேஷ்டிதங்களைக் காண்பவர்கள் கண்கள் இளநீர்க்குழம்பிட்டாற்போலே குளிரும்படியாக. கற்றவர் தெற்றிவர. நாலுசப்தம் தொடுக்கக்கற்றவர்கள், உன்னுடைய பாலசேஷ்டிதங்களைத்தைக்கண்டு பிள்ளைக் கவிகள் தொடுத்துவர. பெற்றவெனக்கருளி. உன்னைப்பிள்ளையாகப் பெற்றவெனக்கு ப்ரஸாதத்தைப்பண்ணி. இது மேலே அந்வயிக்கக்கடவது. மன்னுகுறுங்குடியாய். (க)"ந ஜஹாதி கதாசந" என்கிறபடியே ப்ரளயத்துக்குமழியாத திருக்குறுங்குடியிலே வர்த்திக்கிறவனே. வெள்ளறையாய். அவ்வளவன்றிக்கே, திருவெள்ளறையிலேயும் நித்யவாஸம்பண்ணுகிறவனே. மதிள்சூழ் சோலைமலைக்கரசே. அரணாகப்போரும்படியான மதிளாலே சூழப்பட்ட திருமலைக்கு ராஜாவாய்க்கொண்டு ஈராசுதவிர்த்து நின்றவனே. கண்ணபுரத்தமுதே. ஸர்வஜந போக்யமாம்படி திருக்கண்ணபுரத்திலே நிற்கிற அம்ருதமே. என் அவலம்களைவாய். என்னுடைய அவத்யத்தைப்போக்குமவனே. அதாவது-எனக்கு பவ்யனாய் நான்சொன்னபடி செய்கையாலே நீ அநியாம்யனானபோது நான்படும் க்லேசத்தைப் போக்குமவனே யென்கை.

---

(க) "ந ப்லாவயதி ஸாகரஃ"

ஆடுகசெங்கீரை. இப்படியிருக்கிற நீ செங்கீரைபாடியருளவேணும். ஏழுலகித்யாதி. ஸமஸ்த லோகங்களுக்கும் ஸ்வாமியானவனே! ஆடியருளவேணுமென்கை. "மன்னு குறுங்குடியாய்" என்றுதொடங்கி "என் அவலங்களைவாய்" என்று ஸம்போதித்து, "உன்னையுமொக்கவெயில்" என்று தொடங்கி - பெற்றவெனக்கருளி - ஆடுக செங்கீரை என்று அந்வயம். ... ... அ.

மூ.—பாலொடுநெய்தயிரொண் சாந்தொடுசெண்பகமும்
பங்கயநல்ல கருப்பூரமு நாறிவரக்
கோலநறும்பவளச் செந்துவர்வாயினிடைக்
கோமளவெள்ளி முளைப்போல் சிலபல்லிலக
நீலநிறத்தழகாரைம்படையின் நடுவே
நின்கனிவாயமுதமிற்று முறிந்துவிழ
ஏலுமறைப் பொருளேயாடுகசெங்கீரை
யேழுலகுமுடையா யாடுகவாடுகவே. கூ.

பதவுரை.

பாலொடு— பாலோடேகூட
நெய்— நெய்யும்
தயிர்— தயிரும்
( ஆகியஇவற்றைப் பலகால் அமுதுசெய்கையாலும் )
ஒண் சாந்தொடு— அழகியசந்தனத்தோடு
செண்பகமும்— செண்பகம்முதலிய மலர்களும்
( ஆகியஇவற்றைப் பலகால் சாத்துகையாலும் )
பங்கயம்— தாமரையும்
நல்ல— உத்தமமான
கருப்பூரமும்— கர்ப்பூரமுமாகிய இவை
நாறிவர— கலந்துபரிமளிக்க
கோலம்— அழகிய
நறு பவளம்— நற்பவளம்போல்
செம்— அழகியதாய்
துவர்— சிவந்திருக்கிற
வாயின் இடை— திருஅதரத்தினுள்ளே
கோமளம்— இளையதான
வெள்ளிமுளைப்போல்—வெள்ளி முளைபோலே
சில பல்— சிலதிருமுத்துக்கள்
இலக— விளங்க
நீலம் நிறத்து— நீல நிறத்தாலே
அழகு ஆர்— அழகுமிக்கிராநின்ற
ஐ படையின்நடுவே—பஞ்சாயுதத்தின்நடுவே
நின்— உன்னுடைய
கனிவாய்— கொவ்வைக்கனிபோன்றவாயில் ஊறுகிற
அமுதம்— அம்ருதஜலமானது
இற்று முறிந்துவிழ— இற்றிற்றுவிழ
ஏலும்— தகுதியான
மறை— வேதத்தினுடைய
பொருளே!— அர்த்தமானவனே!

ஆடுக இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. பாலித்யாதி. பாலோடேகூட நெய்யும் தயிருமாகிற (க) கவ்யங்களைப் பலகாலும் அமுதுசெய்கையாலும், திருமேனியிலே அழகிய சாந்து, செண்பகம் முதலானவற்றைப் பலகாலும் சாத்துகையாலும், திருமேனி அசைகையாலே அவையும் ஹர்ஷத்தாலே "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ" என்னும்படியான திருப்பவளம் விகஸிக்கையாலே பங்கஜமும் நல்ல கர்ப்பூரமுமாகிற வவையும் தன்னிலேகலந்து கந்தித்துவர. கோலமித்யாதி. தர்சநீயமாய் பரிமளிதமான பவளம்போலே அழகியதாய்ச் சிவந்திருக்கிற திருவதரத்தினுள்ளே இளையதான வெள்ளியரும்புபோலே சிலமுத்துக்கள் விளங்க.

(க) மவ்யு.

நீலமித்யாதி. நீலமான திருமேனி நிறத்துக்கு பரபாகத்தாலே அழகுமிக்கிருக்கிற ஸ்ரீபஞ்சாயுதத்தின் நடுவே உன்னுடைய பக்வபலம்போலே யிருக்கிற திருப்பவளத்திலூறுகிற அம்ர்தஜலமானது இற்றிற்றுவிழ. ஏலுமித்யாதி. தகுதியான வேதார்த்தமானவனே. (க) " [illegible] " என்கிறபடியே வேதத்துக்கு அநுரூபமான அர்த்தமிவனேயிறே. ... ... ... ... ... ௯.

மூ.—செங்கமலக்கழலிற் சிற்றிதழ்போல்விரலிற்
சேர்திகழாழிகளுங் கிண்கிணியுமரையில்
தங்கியபொன்வடமுந்தாள நன்மாதளையின்
பூவொடுபொன்மணியும் மோதிரமுங்கிறியும்
மங்கலவைம்படையுந் தோள்வளையுங்குழையும்
மகரமும்வாளிகளுஞ் சுட்டியுமொத்திலக
எங்கள்குடிக்கரசே யாடுகசெங்கீரை
யேழுலகுமுடையா யாடுகவாடுகவே. ௰.

பதவுரை.

செம் கமலம்— செந்தாமரை மலரை ஒத்த
கழலில்— திருவடிகளில்
சிறு இதழ்போல்— (அம்மலரின்) உள்ளிதழ் போலே சிறுத்திருக்கிற
விரலில்— திருவிரல்களில்
சேர்— சேர்ந்து
திகழ்— விளங்காநிற்கிற
ஆழிகளும்— திருவாழிமோதிரங்களும்
கிண்கிணியும்— திருவடிச்சதங்கையும்
அரையில் தங்கிய—அரையில்சாத்தியிருக்கிற
பொன்வடமும்— பொன் அரைநாணும்
தாள— தாளை உடைத்தாய்
நல்— நல்ல
மாதளையின் பூவொடு — மாதளம்பூவோடே
பொன்மணியும் — நடுநடுவே கலந்து கோத்த பொன்மணிக்கோவையும்
மோதிரமும்— மோதிரங்களும்
கிறியும்— மணிக்கட்டில்சாத்தின சிறுப்பவளவடமும்
மங்கலம்— மங்களாவஹமான
ஐ படையும்— பஞ்சாயுதமும்
தோள்வளையும்— திருத்தோள் வளைகளும்
குழையும்— ச்ரோத்ராபரணங்களும்
மகரமும்— மகர குண்டலங்களும்
வாளிகளும் — திருச்செவிமடல்மேல்சாத்தின வாளிகளும்
சுட்டியும்— திருநெற்றிச்சுட்டியும்
ஒத்து— அமைந்து
இலக— விளங்க
எங்கள் — எங்களுடைய
குடிக்கு— வம்சத்துக்கு
அரசே!— ராஜாவானவனே!
ஆடுக இத்யாதி.

வ்யா. பத்தாம்பாட்டு செங்கமலமித்யாதி. சிவந்த கமலம்போலே யிருக்கிற திருவடிகளில், அதில் உள்ளிதழ்போலே சிறுகியிருக்கிற திருவிரல்களிலே ஸஹஜமென்னும்படி சேர்ந்து விளங்காநின்ற திருவாழி மோதிரங்களும், திருவரையில் கிண்கிணியும். அன்றிக்கே கிண்கிணி யென்கிற வித்தைக் கீழோடே சேர்த்து, பாதச்சதங்கையாகச் சொல்லவுமாம். " சேவடிக்கிண்கிணி " என்னக்கடவதிறே. அரையில்தங்கிய பொன்வடமும். திருவரையில் ஸர்வகாலமும் சாத்தியிருக்கும் பொன்னரைநாணும். தாளநன்மாதளையின் பூவொடுபொன்ம

(க) " வேதைச்சஸர்வை ரஹமேவ வேத்ய: "

ணியும். "உடையார்கனமணியோடொண்மாதளம்பூ" என்கிறபடியே தாளையுடைத்தாய் நன்றான மாதளம் பூவோடே நடுநடுவே கலந்துகோத்த பொன்மணிக்கோவையும். மோதிரமும் கிறியும். திருக்கையில் திருவிரலில் சாத்தின மோதிரங்களும், மணிக்கட்டிற்சாத்தின சிறுப்பவளவடமும். மங்கலவைம்படையும். திருமார்விற்சாத்தின மங்களாவஹமான ஸ்ரீபஞ்சாயுதமும். தோள்வளையும். அதுக்கு பரபாகமாய்க்கொண்டு இரண்டருகும் விளங்காநின்றுள்ள திருத்தோள்வளைகளும். குழையும். திருக்காதுப் பணிகளும். மகரமும். திருமகரக்குழைகளும். வாளிகளும். திருச்செவிமடல்மேல் சாத்தின வாளிகளும். சுட்டியும். திருக்குழலிலே சாத்தித் திருநெற்றிக்கலங்காரமாக ‡நாலும் சுட்டியும். ஒத்திலக. இரண்டருகு மசைந்தாடுகையாலே எல்லாம் சேர வொளிவிட வென்னுதல்; திருமேனிக்குத் தகுதியாய் ப்ரகாசிக்க வென்னுதல். எங்கள் குடிக்கரசே. எங்களுடைய குலத்துக்கு ராஜாவானவனே. ... ௰.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அன்னமுமீனுருவு மாளரியுங்குறளு
மாமையுமானவனே! ஆயர்கணாயகனே!
என்னவலங்களைவா யாடுகசெங்கீரை
யேழுலகமுடையாய்! ஆடுகவாடுகவென்று
அன்னநடைமடவா ளசோதையுகந்தபரி
சானபுகழ்ப்புதுவைப் பட்டனுரைத்ததமிழ்
இன்னிசைமாலைகளிப் பத்தும்வல்லாருலகி
லெண்டிசையும் புகழ்மிக் கின்பமதெய்துவரே. ௧௧.

பதவுரை.

அன்னமும்— "ஹம்ஸமும்
மீன் உருவும்— மத்ஸ்யமும்
ஆள் அரியும்— நரஸிஹ்மமும்
குறளும்— வாமநனும்
ஆமையும்— ஆமையும்
(ஆக இப்படி எல்லாம்)
ஆனவனே!— அவதரித்தவனே!
ஆயர்கள்— இடையர்களுக்கு
நாயகனே!— தலைவனானவனே!
என் அவலம்— என்துன்பத்தை
களைவாய்!— நீக்கினவனே!
சங்கீரை ஆடுக—சங்கீரை ஆடியருளவேணும்,
ஏழ் உலகும்— ஸப்தலோகங்களுக்கும்
உடையாய்!— ஸ்வாமியானவனே;
ஆடுக ஆடுக என்று— "ஆடவேணும் ஆடவேணும்" என்று
அன்னம்— ஹம்ஸம் போன்ற
நடை— நடையழகையுடையவளாய்
மடவாள்— மடப்பத்தையுடையளான
அசோதை— யசோதைப்பிராட்டி
உகந்த— உகந்து சொன்ன
பரிசு— ப்ரகாரத்தை
ஆன— ஸமர்த்தமான
புகழ்— யசஸ்ஸையுடையரான
புதுவைப் பட்டன்— ஸ்ரீ வில்லிபுத்தூரிலவதரித்த பட்டர்பிரான்
உரைத்த— அருளிச்செய்த
இன் இசை— இனிய இசையை உடைய
தமிழ்மாலைகள்— தமிழ்த் தொடைகளான
இப்பத்தும்— இப்பத்துப்பாசுரங்களையும்
வல்லார்— ஓதவல்லவர்கள்
உலகில்— இந்தலோகத்தில் இருக்கச்செய்தே
எண் திசையும்— எட்டுத்திசைகளிலும்
புகழ்— கீர்த்தியையும்
மிகு இன்பமது— மிக்கஸுகத்தையும்
எய்துவர்— பெறுவர்கள்.

‡ நாலும்- தொங்குகின்ற.

வ்யா. அன்னமுமித்யாதி. வேதப்ரதமான ஹம்ஸமும், ப்ரளயாபத்ஸகமான மத்ஸ்யமும், ஹிரண்ய நிரஸநார்த்தமா(ன)க ந்ருஸிஹ்மமும், இந்த்ராபேக்ஷித ஸம்விதாநம் பண்ணும் வாமநனும், மந்த்ராதாரமான கூர்மமுமானவனே. இத்தால்- ஆச்ரித ஸம்ரக்ஷணார்த்தமாக அஸாதாரண திவ்ய விக்ரஹத்தை அழிய மாறிக்கொண்டு அவ்வவ தசாநுகுணமாக ரக்ஷிக்குமவனென்கை. ஆயர்கள் நாயகனே. அவையெல்லாம் போலன்றிக்கே பூபார நிர்ஹரணார்த்தமாக அவதரித்து இடையர்க்குத் தலைவனானவனே. என் அவலம்களைவாய். எல்லாத்தசையிலும் "உனக்கென்வருகிறதோ" என்று வயிறெரியாநிற்கு மென்னுடைய க்லேசத்தை, உன்னை நோக்கித்தருகையாலே போக்கினவனே. ஆடுக செங்கீரை. செங்கீரை ஆடியருளவேணும். ஏழுலகுமித்யாதி. ஸர்வலோகங்களுக்கும் ஸ்வாமியானவனே யாடவேணுமாடவேணுமென்று. அன்னமித்யாதி. அன்னம்போலே நடையழகையும் பவ்யதையையுமுடையளான யசோதைப்பிராட்டி உகந்து சொன்ன ப்ரகாரத்தை. ஆனவித்யாதி. ப்ராஹ்மணோத்தமராய் வைத்து கோபஜந்மத்தை ஆஸ்த்தாநம் பண்ணி, அவள் தத்காலத்திலே அநுபவித்தாற்போலே பிற்காலத்திலே அநுபவிக்கையாலே அவளிலுங்காட்டில் ஸம்ர்த்தமான புகழை யுடையராய் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான ஆழ்வாருளிச்செய்த த்ராவிடரூபமாய் இனியதான இசையோடே கூடியிருந்துள்ள தொடைகளான விப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். உலகிலித்யாதி. இந்த லோகத்திலே இருக்கச்செய்தே எட்டுதிக்கிலுமடங்காத பெரியபுகழை யுடையராய், அவர்களுக்கு நிலமல்லாத பகவதநுபவ பரமஸௌ கத்தை ப்ராபிக்கப் பெறுவர்கள். ... ... ... ... கக.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—உய்யக் கோளரி நம்முடை வானவர் மத்துக் காய்
துப் புன்னைப் பால் செங்கமல மன்ன மாணிக்கம்.

———(*)———

ஆக - திருமொழி, ரு - க்கு, பாட்டு-௬௨.

அ. கீழ்- செங்கீரையாடுகையாகிற அவனுடைய பாலசேஷ்டிதத்தை, தத்காலத்திலே யசோதைப்பிராட்டி ப்ரார்த்தித்தநுபவித்தாற்போலே * மயர்வற மதிநல மருளப்பெறுகையாலே அந்த ஸ்நேஹத்தை யுடையராய்க்கொண்டு, தாமும் அநுபவித்தாராய் நின்றார்; இனி, சப்பாணி கொட்டுகையாகிற பாலசேஷ்டிதத்தைச் செய்தருள வேணுமென்று அவனை ப்ரார்த்தித்து, அந்த சேஷ்டித ரஸத்தை யவளநுபவித்தாற்போலே ஒருசேஷ்டிதத்தை அநுபவித்தவளவில் பர்யாப்தி பிறவாத அபிநிவேசாதிசயத்தாலே அந்த சேஷ்டித ரஸத்தையுமநுபவிக்க வாசைப்பட்டு, அவள் பேசினாற்போலே பேசித் தாமு மநுபவிக்கிறார். ... *.

மூ.—மாணிக்கக்கிண்கிணியார்ப்ப மருங்கின்மேல்
ஆணிப்பொன்னாற்செய்தவாய் பொன்னுடைமணி
பேணிப்பவளவாய் முத்திலங்கப்பண்டு
காணிகொண்டகைகளாற்சப்பாணி கருங்குழற்குட்டனே! சப்பாணி க.

பதவுரை.

ஆணி— மாற்று உயர்ந்த
பொன்னால்— பொன்னாலே
செய்த— செய்யப்பட்டதாய்
ஆய்— பழிப்பு அற்ற
பொன்— ஸ்பர்ஹணீயமான
உடைமணி— அரைவடத்தை உடைத்தான
மருங்கின்மேல்— இடுப்பிலே
மாணிக்கம்— மாணிக்கத்தால் செய்த
கிண்கிணி—கிண்கிணியானது
ஆர்ப்ப—சப்திக்க
பேணி—விரும்பி
பவளம்—பவளம்போன்ற
வாய்— திருவதரமும்
முத்து—திருமுத்துக்களும்
இலங்க— ப்ரகாசிக்கும்படி [ மந்
பண்ணிக்கொண்டு என்று
பண்டு— முன்னே
காணி— பூமியை
கொண்ட— ( மஹாபலியிடத்தின்
நீரேற்றுவாங்கிக்
கைகளால்— திருக்கைகளாலே
சப்பாணி— ‡ சப்பாணிகொட்டவே
கரு குழல்— கறுத்தமயிர் முடியை
குட்டனே!— பிள்ளாய்!
சப்பாணி.

‡ சப்பாணிகொட்டுதலாவது— திருக்
களைத்தட்டிக்கொண்டு செய்யும் ஒருவித

வ்யா. முதற்பாட்டு. மாணிக்கமித்யாதி. மாற்றெழும்பின பொன்னாலே
கப்பட்டதாய்ப் பழிப்பற்று அழகியதாயிருந்துள்ள அரைவடத்தை யுடைத்தான ம
மேலே மாணிக்கக் கிண்கிணியானது த்வநிக்க. "ஆய் பொன்னுடைமணி" என்கி
தில், ஆய்தல்- தெரிதலாய், பழிப்பறுதலைச் சொல்லுகிறது. "ஆணிப்பொன்னாற் 
என்று கீழே சொல்லுகையாலே, மேல், பொன்னென்று அழகைச் சொல்லுகிறது
க்கக்கிண்கிணி சப்திக்குமோ வென்னில்; ¶நல்மாணிக்க மாகையாலே சப்திக்கும். இல
குப் புறம்பே மாணிக்கம் பதித்தாலும் சப்தியாது. பேணியித்யாதி. என்னுடை
ந்தத்துக்காகவன்றிக்கே, விருப்பத்தோடே, பவளம்போலே யிருக்கிற திருவதரமு
முத்தும் பரபாகத்தாலே விளங்கும்படி ஸ்மிதம் செய்துகொண்டு. அன்றிக்கே,
பென்றது - உன் திருமேனி யலையாதபடி பேணிக்கொண்டென்னவுமாம். பண்டி
முன்பு, "குடங்கையில் மண்கொண்டு" என்கிறபடியே உன்னுடைமையான
மஹாபலி பக்கலிலே சென்று உதகபூர்வகமாக பரிக்ரஹித்த திருக்கைகளாலே. இ
தன்மேன்மைபாராதே ஆச்ரிதர்க்காகத் தன்னை யழியமாறிக் காரியம் செய்யும் கையெ
சப்பாணி. சப்பாணி கொட்டியருளவேணும். கருங்குழலித்யாதி. கருகின திரு
யும், பிள்ளைத்தனத்தையு முடையவனே சப்பாணிகொட்டி யருளவேணும். ...

மூ.—பொன்னரைநாணொடு மாணிக்கக்கிண்கிணி
தன்னரையாடத் தனிச்சுட்டிதாழ்ந்தாட
என்னரைமேனின்றிழிந் துங்களாயர்தம்
மன்னரைமேற்கொட்டாய் சப்பாணி மாயவனே! கொட்டாய்சப்பா

பதவுரை.

பொன்— பொன்னால்செய்த
அரைநாணொடு— அரைநாணொடு சேர்ந்த
மாணிக்கம்— மாணிக்கத்தால் செய்ய
கிண்கிணி— கிண்கிணியானது

¶ (பா) "நாகமாணிக்க மாகையாலே."

தன்—தனக்கு இருப்பிடமான
அரை—கடிப்ரதேசத்திலே
ஆட—சப்திக்கவும்
தனி—அத்விதீயமான
சுட்டி—சுட்டியானது
தாழ்ந்து—நெற்றியில்தாழ்ந்து
ஆட—அசையவும்
என் அரைமேல் நின்று—என் அரையில் நின்றும்
இழிந்து—இறங்கி
உங்கள்—உங்கள் தமப்பனாராய்
ஆயர்தம்—இடையர்களுக்கு
மன்—அரசரான ஸ்ரீ நந்தகோபருடைய
அரைமேல்—மடியில் இருந்து
சப்பாணிகொட்டாய்;
மாயவனே!—விஸ்மயநீயனே!
சப்பாணிகொட்டாய்.

வ்யா. இரண்டாம்பாட்டு. பொன்னித்யாதி. பொன்னாலே செய்யப்பட்ட திருவரைநாணோடே சேர்ந்த மாணிக்கக் கிண்கிணியானது தனக்கு வாஸஸ்தாநமான கடிப்ரதேசத்திலே கிடந்து சப்திக்க. தனியித்யாதி. திருக்குழலிற் சாத்தின அத்விதீயமான சுட்டியாகிற ஆபரணம் திருநெற்றியிலே தாழ்ந்தசைய. என்னித்யாதி. என்னுடைய மடியில் நின்று மிழிந்து உங்கள் தமப்பனாராய் ஆயர்க்கெல்லாம் நிர்வாஹகராயிருக்கிறவர் மடியிலேயிருந்து சப்பாணிகொட்டியருளாய். இத்தால் - தன்மடியிலே யிருந்து சப்பாணிகொட்டுகிறதிலும், அவர் மடியிலிருந்து சப்பாணிகொட்டக்காண்கை தனக்கு உகப்பாகையாலே அத்தைச் செய்யவேணுமென்று அபேக்ஷித்தாராய்த்து. மாயவனே. ஆச்சர்ய பூதனானவனே. உ.

மூ.—பன்மணிமுத்தின் பவளம்பதித்தன்ன
என்மணிவண்ண னிலங்குபொற்றோட்டின்மேல்
நின்மணிவாய் முத்திலங்க நின்னம்மைதன்
அம்மணிமேற்கொட்டாய் சப்பாணி யாழியங்கையனே சப்பாணி.




பதவுரை.

என்—என்னுடையவனும்
மணி வண்ணன்!—நீலமணிபோன்ற வடிவையுடையனானவனே!
பல் மணி—நாநாவிதரத்நங்களும்
முத்து—முத்துக்களும்
இன்—போக்யமான
பவளம்—பவளமும்
பதித்து—அழுத்தி
அன்ன— பரம்பின அழகையுடையதாய்க் கொண்டு
இலங்கு—ப்ரகாசிக்கிற
பொன் தோட்டின்மேல்— ஸ்வர்ணகர்ணகுண்டலத்தின் அழகுக்குமேலே
நின்—உன்னுடைய
மணி—அழகிய
வாய்—திருவாயில்
முத்து—திருமுத்துக்கள்
இலங்க—விளங்க
நின்—உன்னைமகனாகப்பெற்ற
அம்மைதன்—தாயானயசோதையின்
அம்மணிமேல்—மடியின்மேலிருந்து
சப்பாணிகொட்டாய்;
ஆழி—திருவாழியாழ்வானை
அம் கையனே!—அழகியகையிலுடையவனே!
சப்பாணி.

வ்யா. மூன்றும்பாட்டு. என்மணிவண்ணன். என்னுடையவனென்று அபிமாநிக்கலாம்படி எனக்கு ப்வ்யனாய் நீலரத்நம்போன்ற வடிவையுடையனாயிருக்கிறவனே. பன்மணி யித்யாதி. மாணிக்கம், மரதகம், புஷ்பராகம், வைரம்; நீலம், கோமேதகம், வைடூர்யமென்கிற பலவகைப்பட்ட ரத்நங்களும், முத்தும், இனிய பவளமும் பகைத்தொடையாக வழுத்தி மஹாமநோஹரமான அழகை யுடைத்தாய்க்கொண்டு விளங்காநின்ற பொற்சுட்டி னழகுக்கு மேலே. நின்னித்யாதி. உன்னுடைய அழகிதான திருப்பவளத்தில் திருமுத்துக்கள் ப்ரகாசிக்க. நின்னம்மையித்யாதி. உன்னைப் பிள்ளையாகப் பெற்ற பாக்யத்தை யுடையளான அவளுடைய மடிமேலே யிருந்து சாப்பாணிகொட்டாய். அம்மணி யென்று அரைக்குப்பேர். இத்தால் ஸ்ரீநந்தகோபர் தம்முடைய மடியிலிருந்து சப்பாணி கொட்டுகிறதிலும் தாயார்மடியிலிருந்து சப்பாணி கொட்டக்காண்கை தமக்குகப்பாகையாலே அத்தைச்செய்ய வேணுமென்று அபேக்ஷித்தாராய்த்து. ஆழியங்கையனே. திருவாழியை அழகிய திருக்கையிலே யுடையவனே யென்னுதல்; ஆழியென்று- திருவாழி மோதிரமாதல். ... ௩.

மூ:—தூநிலாமுற்றத்தே போந்துவிளையாட
வானிலாவம்புலீ! சந்திரா! வாவென்று
நீநிலாநின்புகழாநின்ற வாயர்தம்
கோ நிலாவக்கொட்டாய் சப்பாணி குடந்தைக்கிடந்தானே! சப்பாணி. ௪.

பதவுரை.

வானிலாம்—ஆகாசத்தில்ஸஞ்சரிக்கிற
அம்புலீ!—ஓ! அம்புலீ!!
சந்திரா!—ஓ! சந்த்ரனே!!
போந்து—வந்து
தூநிலா—அழகிய நிலவையுடைய
முற்றத்தே—முற்றத்திலே
விளையாட—விளையாடுவதற்காக
வா என்று—வா வென்றழைத்து
நின்—உன்னை
புகழாநின்ற—ச்லாகியாநிற்கிற
ஆயர்தம்—இடையர்களுக்கு
கோ—தலைவனான நந்தகோபர்
நிலாவ—ஹர்ஷிக்கும்படி சப்பாணிகொட்டாய்.
குடந்தை—திருக்குடந்தையில்
கிடந்தானே!—கண்வளர்ந்தருளுமவனே!
நீ நிலா— நீ நின்று சப்பாணி.

வ்யா. நாலாம்பாட்டு. தூநிலாவித்யாதி. தூய்தான நிலா முற்றத்திலே போந்து. விளையாடவித்யாதி. 'ஆகாசத்திலே வர்த்திக்கிற அம்புலீ ! சந்திரா ! விளையாடவா' என்று, அம்புலியை யழைத்து. நீ நிலா. நீ நின்று. நின்னித்யாதி. உன் சேஷ்டிதங்களிலே (௧)வித்தராய்க்கொண்டு உன்னைப்புகழாநிற்கிற(௨)ஸர்வகோபநிர்வாஹகரான உங்களையன் உன்னுடைய சேஷ்டிதத்தைக் கண்ட ஹர்ஷத்தாலே உஜ்ஜ்வலமாம்படியாகச் சப்பாணிகொட்டவேணும். குடந்தை யித்யாதி. ஆச்ரிதபராதீநனாய்க்கொண்டு திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறவனே. ... ... ... ... ... ... ... ... ... * ௪.

மூ.—புட்டியிற்சேறும் புழுதியுங்கொண்டுவந்து
அட்டியமுக்கி யகம்புக்கறியாமே

(௧) விதராய். (௨) ஸவநிர்வாஹ.

சட்டித்தயிருந்தடாவினில் வெண்ணெயுமுண்
பட்டிக்கன்றே! கொட்டாய்சப்பாணி பற்பநாபா! கொட்டாய்சப்பாணி. ரு.

பதவுரை.

புட்டியில்— திரு அரையிலே
சேறும்— சேற்றையும்
புழுதியும்— புழுதியையும்
கொண்டுவந்து— கொண்டுவந்து
அட்டி— மேலே இட்டு
அமுக்கி— உறைக்கும்படி பூசி
அகம் புக்கு— உள்ளே நுழைந்து
அறியாமே— ஒருவருமறியாதபடி
சட்டி— சட்டிகளில் சேமித்துவைத்த
தயிரும்— தயிரையும்
தடாவினில்— தாழிகளில் சேர்த்துவைத்த
வெண்ணெயும்— வெண்ணெயையும்
உண்— வாரிவிழுங்ாநின்றவனாய்
பட்டி— பட்டிதின்று திரிகிற
கன்றே!— கன்றுபோல் செருக்கனாயிருக்குமவனே!
சப்பாணி கொட்டாய்.
பற்பம்— திருத்தாமரைமலரை
நாபா!— திருநாபியிலுடையவனே!
சப்பாணி கொட்டாய்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. புட்டியித்யாதி. மத்யமாங்கத்தில் சேற்றையும் புழுதியையும் கொண்டுவந்து * சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்கப் புழுதியிலே யிருந்து விளையாடுகையாலே திருவரையில் நனைந்தவிடம் சேறும், நனையாதவிடம் புழுதியுமாயிருக்குமிறே. அட்டியமுக்கி. இப்படியிருக்கிற ஆகாரத்தோடேவந்து மேலேயணைகையாலே அந்தச் சேற்றையும் புழுதியையும் கொண்டுவந்து மேலேயிட்டு உறைக்கப்பூசி. அகம்புக்கித்யாதி. ஓடிப்போய் உள்ளேபுக்கு, வைத்தநான் அறியாதபடியாக, சட்டிகளிலே தோய்த்துவைத்த தயிரையும் தடாக்களிலே சேர்த்துவைத்த வெண்ணெயையும் அமுதுசெய்யாநிற்கும். பட்டியித்யாதி. பட்டிதின்று திரியும் கன்றுபோலே களவே யாத்ரையாய்த் திரியுமவனே! சப்பாணிகொட்டு. பற்பநாபா. ஸகல ஜகத்காரணமான தாமரையைத் திரு நாபியிலேயுடையவனே!. ... ... ... ... ... ... ... * ரு.

மூ.—தாரித்துநூற்றுவர் தந்தைசொற்கொள்ளாது
போருய்த்துவந்து புகுந்தவர்மண்ணாளப்
பாரித்தமன்னர்படப் பஞ்சவர்க்கன்று
தேருய்த்தகைகளாற்சப்பாணி தேவகிசிங்கமே! சப்பாணி. ௬.

பதவுரை.

தந்தை— ஸர்வலோக பிதாவான உன்னுடைய
சொல்— வார்த்தையை
தாரித்து கொள்ளாது— தரித்துக் கொள்ளாமல்
போர்— யுத்தத்தை
உய்த்து— நடத்துவதாக
வந்து— கர்விஷ்டராய்வந்து
புகுந்தவர்— அமர்க்களத்திலே புகுந்தவர்களாய்
மண் ஆள— (பாண்டவர்களைக் கொன்று தாங்களே) பூமிமுழுதும் ஆளுவதாக
பாரித்த— வெகுதூரம்யோசித்த
மன்னர்— அரசர்களான

நூற்றுவர்— நூறுபேரும்
பட— மாளும்படியாக
பஞ்சவர்க்கு— பாண்டவர்கள் ஐவர்க்கும்
அன்று— அவர்கள்உன்னை வேண்டிக் கொண்டவன்று
தேர்— தேரை
உய்த்த— நடத்தின

கைகளால்— திருக்கைகளாலே சப்பாணி;
தேவகி— தேவகிப்பிராட்டி வயிற்றில்பிறந்த
சிங்கமே!— சிங்கம்போல் செருக்கியிருக்குமவனே!

சப்பாணி.

வ்யா. ஆறும்பாட்டு. தாரித்து. "தரித்து" என்கிறவித்தை நீட்டிக்கிடக்கிறது. தரித்து - பொறுப்புண்டாயென்னுதல்; புத்திபண்ணியென்னுதல். நூற்றுவர். இதுக்கு-மேலே அந்வயம். தந்தைசோற்கோள்ளாது. (க) "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதாமாதாச மாதவ:" என்கிறபடியே ஸர்வலோகத்துக்கும் பிதாவாகையாலே தங்களுக்கும் பிதாவான நீ இரண்டு தலையையும் சேர்க்கைக்குத் தூதாகவெழுந்தருளி, 'பாண்டவர்களும் நீங்களும் பரஸ்பரம் விரோதித்திருக்கவேண்டா, ப்ராப்தி எல்லார்க்குமொக்கும்; ஆனபின்பு, ராஜ்யத்தை ஸமவிபாகம் பண்ணி புஜித்துச் சேர்ந்திருங்கோள்; அது செய்யமாட்டிகோளாகில், தலைக்கு இரண்டு ஊராக அவர்களுக்குப் பத்தூர்தன்னைக் கொடுங்கோள்; அதுவும் செய்யிகோளாகில் அவர்கள்தங்களுக்குக் குடியிருக்கைக்கு ஒரூர்தன்னையாகிலும் கொடுங்கோள் என்று இப்படி அருளிச்செய்தவசநத்தில் ஒன்றையும் கைக்கொள்ளாதே. போருய்த்திதியாதி. பின்பு ரோஷத்தாலே (உ) *வீரபோக்யா வஸுந்தராவன்றோ, யுத்தத்தைப் பண்ணி ஜயித்தவர்களொருவர் ராஜ்யத்தையாளுங்கோள் என்றபடியாலேயுத்தத்தைநடத்துவதாக கர்வோத்தராய்வந்துயுத்தபூமியிலேபுகுந்தவர்களாய், பாண்டவர்களை யழியச்செய்து, பூமிப்பரப்படங்கலும் தாங்களே ஆளுவதாகப்பாரித்த ராஜாக்களான நூற்றுவரும், ஒருவர் சேஷியாதபடிபட்டுப் போம்படியாக. பஞ்பவர்க்கித்யாதி. உன்னையல்லது வேறு துணையில்லாத பாண்டவர்கள் ஐவர்க்கும் தங்கள் வெறுமைதோன்ற நின்றவன்று, 'ஆயுதமெடுக்க வொண்ணாது' என்கையாலே ஸாரத்யத்திலே அதிக்ர்தனுப் ப்ரதிபக்ஷ மித்தனையும் தேர்க்காலிலே நெரிந்துபோம்படி தேரைநடத்தின கைகளாலே சப்பாணி கொட்டவேணும். தேவகி சிங்கமே! தேவகிப்பிராட்டி வயிற்றிற்பிறப்பாலே ஸிஹ்மக்கன்றுபோலே செருக்கி யிருக்கிறவனே! சப்பாணி. ... ... ... ... ... ... ※ ※

மூ.—பரந்திட்டுநின்ற படுகடல் தன்னை
யிரந்திட்டகைமே லெறிதிரைமோதக்
கரந்திட்டுநின்ற கடலைக்கலங்கச்
சரந்தொட்டகைகளாற்சப்பாணி சார்ங்கவிற்கையனே! சப்பாணி. எ.

பரந்திட்டுநின்ற— விஸ்தீர்ணமாய்
படு— ஆழ்ந்திராநின்ற
கடல்— ( தக்ஷிண ) ஸமுத்ரமானது
தன்னை— தன்னைக்குறித்து
இரந்திட்ட— சரணாகதி பண்ணின
கைமேல்— திருக்கைகளின்மேல்

எறி— திவலைகளை எறியாநின்ற
திரை— அலையை
மோத— வீசாநின்றுகொண்டு
கரந்திட்டுநின்ற— முகங்காட்டாமல் மறைந்துநின்ற
கடலை— ஸமுத்ரேச்வரனை வருணன்மேல்

(க) "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதாமாதாச மாதவ:"
(உ) "வீரபோக்யா வஸுந்தரா"

கலங்க— அவன்குடல் குழம்பும்படி
சரம்— பாணங்களை
தொட்ட— ஏவின
கைகளால்— திருக்கைகளால்
சப்பாணி-;

சார்ங்கம்— "ஸ்ரீ சார்ங்கம்" என்கிற
வில்— வில்லை
கையனே!— திருக்கையில்தரித்தவனே!
சப்பாணி.

வ்யா. ஏழாம்பாட்டு. பரந்தித்யாதி. (க) "அப்ரமேயோ மஹோததி:" என்கிறபடியே ஒருவரால் எல்லைகாணவொண்ணாதபடி விஸ்தீர்ணமாய்நின்ற ஆழ்ந்தகடலானது. படு என்று - ஆழம். அன்றிக்கே, ரத்நாதிகள் படுகிற கடலென்றுமாம். தன்னையித்யாதி. (உ) "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" என்கிறபடியே- "லங்கையிலே போம்படியாக வழிதரவேணும்" என்று தன்னைக்குறித்துச் சரணம் புகுந்த கைமேலே அலைவெறிகிற திரைகளானவை மோத. கரந்தித்யாதி. முகம்காட்டாதே மறைந்துநின்ற கடலை (ந)பீதியாலே கீழ்மண்கொண்டு மேல்மண்ணெறியும்படி கலங்க. (ச)"சாபமானய ஸௌமித்ரே! சராம்சாசீவிஷோபமாந்" என்கிறபடியே சீறி, சரம் தொட்ட கைகளாலே சப்பாணி. கடல் என்கிற சப்தத்தாலே- அபிமாநியான வருணனைச் சொல்லுகிறது. சார்ங்கவிற்கையனே. அப்போது, கையும் வில்லுமாய் நின்ற அழகையுடையவனே! யென்னுதல்; கையிலே வில்லை வாங்கினபோதை வீரப்பாட்டைச் சொல்லுதல். * எ.

மூ.—குரக்கினத்தாலே குரைகடறன்னை
நெருக்கியணைகட்டி நீணீரிலங்கை
அரக்கரவிய வடகேணையாலே
நெருக்கியகைகளாற்சப்பாணி நேமியங்கையனே! சப்பாணி. அ.

பதவுரை.

குரை கடல்தன்னை— கோஷியாநின்றகடலை
குரங்கு இனத்தாலே— வாநரஸமூஹத்தாலே
நெருக்கி— இரண்டுபக்கமும் நீர்தேங்கும்படி
அணை கட்டி— (நடுவே) ஸேதுவைக்கட்டி
நீள் நீர்— பரந்த கடலை அகழாகவுடைய
இலங்கை— லங்கையில் உள்ள
அரக்கர்— ராக்ஷஸர்கள்
அவிய— நசிக்கும்படி

அடு— ஹிம்ஸியாநின்ற
கணையாலே— பாணத்தாலே
நெருக்கிய— நெருக்கியுத்தம்செய்த
கைகளால்— திருக்கைகளால்
சப்பாணி.
நேமி— திரு ஆழியாழ்வானை
அம்— அழகிய
கையனே!— திருக்கையி லுடையவனே!
சப்பாணி.

வ்யா. எட்டாம்பாட்டு. குரக்கித்யாதி. நீருக்கு அஞ்சி உயர்ந்தநிலங்களிலே வர்த்திக்கும் குரங்குகளினுடைய திரளாலே, ஆழத்தாலும் பரப்பாலும் திரைக்கிளப்பத்தையுடைத்தாய்க்கொண்டு கோஷியாநின்ற ஸமுத்ரத்தை இரண்டருகும் தேங்கிப்போம்படி நடு

(க) "அப்ரமேயோ மஹோததி:" (உ) "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" (ந) பீதி. (ச) "சாபமானய ஸௌமித்ரே! சராம்சாசீவிஷோபமாந்."

வே யணைகட்டி. நீணீரித்யாதி. "நீள்கடல்சூழிலங்கை" என்கிறபடியே - பரந்தகடலை அகழாகவுடைத்தான லங்கையை யிருப்பிடமாகவுடைய ராகையாலே, இந்த அரண் உண்டா யிருக்க, நமக்கொரு குறையு மில்லையென்று செருக்கி யிருக்கும் ராக்ஷஸரானவர்கள் முழுக்காயாக அவியும்படியாக, ப்ரதிபக்ஷ நிரஸநசீலமான அம்புகளாலே நெருங்கப்பொருத கைகளாலே சப்பாணி. நேமியங்கையனே சப்பாணி. திருவாழியை அழகிய திருக்கையிலே யுடையவனே சப்பாணி. விரோதி நிரஸநத்துக்கு * அடிகளேதானே அமைந்திருக்கையாலே திருவாழி அழகுக்குடலா மித்தனையிறே. ... ... ... ... ... *அ.

மு.—அளந்திட்டதூணையவன் தட்டவாங்கே
வளர்ந்திட்டுவாளுகிர்ச் சிங்கவுருவாய்
உளந்தொட்டிரணிய னொண்மார்வகலம்
பிளந்திட்டகைகளாற்சப்பாணி பேய்முலையுண்டானே! சப்பாணி. ௯.

பதவுரை.

அளந்து இட்ட— ஹிரண்யன் அளந்துநட்ட
தூணை— ஸ்தம்பத்தை
அவன்— அவன்தானே
தட்ட— சீறி உதைக்க
ஆங்கே— அந்த ஸ்தம்பத்திலே [அவன் அடித்த இடத்திலேயே]
வாள்— கத்திபோல் க்ரூரமான
உகிர்— நகங்களையுடைய
சிங்கம் உரு ஆய்— நரஸிம்ஹ ரூபியாய்,
வளர்ந்திட்டு— வளர்ந்து
உளம்— அவன் மநஸ்ஸை
தொட்டு— ("இப்போதாகிலும் மநுகூலிக்கக் கூடுமோ" என்று) பரீக்ஷித்து
இரணியன்— ஹிரண்யனுடைய
ஒள்— ஒள்ளியதாய்
அகலம்— அகன்றிருக்கிற
மார்வு— மார்வை
பிளந்திட்ட— கிழித்த
கைகளால் சப்பாணி;
பேய்— பூதனையின்
முலை— (விஷந்தடவின) முலையை
உண்டானே!— (அவள் உயிரோடு) உண்டவனே!
சப்பாணி.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. அளந்தித்யாதி. "முன்பே நரஸிம்ஹத்தை வைத்து நட்ட தூண்" என்ன வொண்ணுதபடி தானேதனக்குப் பொருந்தப்பார்த்து அளந்து நட்டதூணை. அவன்தட்ட. வேறேசிலர்தட்டில், கையிலே நரஸிம்ஹத்தை யடக்கிக்கொண்டுவந்து தூணிலே பாய்ச்சினர்களென்ன ஒண்ணுதபடி அவன்தானே, "எங்கு முளன்" என்ற ப்ரஹ்லாதன் பண்ணின ப்ரதிஜ்ஞை பொறுமல், "பிள்ளையைச்சீறி வெகுண்டு தூண் புடைப்ப" என்கிறபடியே அவனைச்சீறி, அந்தச் சீற்றத்தினுடைய அதிசயத்தாலே, "ஆனால், நீ சொல்லுகிறவன் இங்கில்லை" என்று அழன்று அடிக்க. ஆங்கே. அடித்த விடமொழிய ஸ்த்தலாந்தரத்திலே தோன்றிலும் "இவன் இங்கில்லை" என்ற ப்ரதிஜ்ஞை நிலைநின்றதாமென்று, அத்தூணில் அவன் அடித்த விடந்தன்னிலே. வளர்ந்திட்டு. "பரியவிரணியன்" என்னும் படி பருத்துவளர்ந்த வடிவை யுடையனானவன் கீழ்ப்படும்படியாகத்தான் வளர்ந்து. வாளுகிர்ச்சிங்கவுருவாய். அஸ்த்ர சஸ்த்ரங்களில் ஒன்றாலும் படக்கடவனல்லவாகவும், தேவாதி சதுர்வித ஜாதியிலுள்ளவற்றில் ஒன்றின்கையிற் படக்கடவனல்லனாகவும், ப்ரஹ்மருத்ராதிகள் கொடுத்த வரத்துக்கு விரோதம் வாராதபடி, ஒளியையுடைத்தான உகிர்களையுடைய நர

விஹ்மரூபியாய், உளம்தொட்டு, "எங்குமுளன்" என்று ப்ரஹ்லாதன் சொன்னபடியே, தான் "இல்லை" என்று சொன்ன ஸ்தலந்தன்னிலே "உண்டு" என்னும்படியாகத் தோற்றுகையாலும், "சீரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க வாயலறத் தெழித்தான்" என்கிறபடியே ஓரொன்றே துஸ்ஸஹமாம்படி பண்ணின பீடாவிசேஷங்களாலும், (க)பீதியாலே நெஞ்சிளகி அநுகூலிக்கக்கூடுமோவென்று ஹர்தய பரிக்ஷைபண்ணி. இரணியனொண்மார்வகலம். ஹிரண்யனுடைய ஒள்ளியதாய் விஸ்தீர்தமான மார்வை. ஒண்மையாவது- நாஸிஹ்மத்தினுடைய கோபாக்நியாலும் தன்னுடைய உதரத்தில் பயாக்நியாலும் பிறந்த பரிதாபத்தாலே அக்நிமுகத்தில் பொன்போலே உருகிப் பதம் செய்து ஒளிவிடுகை. இத்தால்- திருவுகிர்க்கு அநாயாஸேந கிழிக்கலாம்படியானபடியைச்சொல்லுகிறது. அகலமென்கையாலே-வரபல புஜபலங்களாலே மிடியுறவளர்ந்த பரப்பாலே திருவுகிர்கட்கெல்லாம் இரைபோந்தபடிசொல்லுகிறது. பிளந்திட்டகைகளால். "உடலை யிருபிளவாக்கையில் நீளுகிர்ப்படையது வாய்த்தவனே" என்கிறபடியே-திருவுகிர்களாலே இரண்டு கூறாகப் பிளந்து பொகட்ட திருக்கைகளாலே சப்பாணி. பேய்முலையித்யாதி. அவனைப்போலே ப்ராதிகூல்யம் தோற்ற நிற்கையுமன்றிக்கே, "தாயாய்வந்தபேய்" என்கிறபடியே வஞ்சகையாய்வந்த பூதனையுடைய முலையை ப்ராண ஸஹிதமாகவுண்டு முடித்தவனே சப்பாணி. ... ... ... கூ

மூ.—அடைந்திட்டமரர்களாழ்கடறன்னை
மிடைந்திட்டுமந்தரம்மத்தாகநாட்டி
வடஞ்சுற்றிவாசுகிவன் கயிறாக்
கடைந்திட்டகைகளாற்சப்பாணி கார்முகில்வண்ணனே! சப்பாணி. ய,

பதவுரை.

அமரர்கள்— தேவர்கள்
அடைந்திட்டு— சரணம்புகுந்த வளவிலே
ஆழ்— கம்பீரமான
கடல்தன்னை— க்ஷீரஸமுத்ரத்தை
மிடைந்திட்டு— நெருக்கி
மந்தரம்— மந்தர பர்வதத்தை
மத்தாக— கடையும் மத்தாக
நாட்டி— நிறுத்தி
வாசுகி— வாஸுகி நாகமாகிற
வல் வடம்— வலிய கயிற்றை
கயிறாக— கடைகயிறாக
சுற்றி— சுற்றி
கடைந்திட்ட— (அமிர்தம் கிளரும்படி) கடைந்தருளின கைகளால் சப்பாணி.
கார் முகில்— கரிய மேகம்போன்ற
வண்ணனே!— வர்ணத்தையுடையவனே! சப்பாணி.

வ்யா. பத்தாம்பாட்டு. அடைந்தித்யாதி. துர்வாஸச்சாபோபஹதராய் அத்தாலே நஷ்டைச்வர்யராய் அஸுராக்ராந்தராய் அமரத்வஸாபேக்ஷரான தேவர்கள் (உ) "ஶரணம் த்வாமநுப்ராப்தா ஸமஸ்தா தேவதாகணா:" என்கிறபடியே ரக்ஷித்தருளவேணுமென்று சரணம்புகுர். அடைந்திட்டு என்கிற வினையெச்சம் திரிந்து, அடைந்திட என்னும் பொருள் பெற்றுக் கிடக்கிறது. "நலங்கழல் வணங்கி" என்கிற விது திரிந்து, வணங்க வென்னும் பொருளாகிறாப்போலே. ஆழ்கடலித்யாதி. அத்யகாதமான க்ஷீராப்தியை நம்முடைய படுக்

(க) வீதி. (உ) "சரணம் த்வாமநுப்ராப்தா ஸ்ஸமஸ்தா தேவதாகணா:."

கையென்று பாராதே நெருக்கி. மந்தரமித்யாதி. (க) "மந்தாநம் மந்தரம் க்ருத்வா" என்கிறபடியே (உ) மஹாசலமான மந்தரத்தை, கடைகைக்கு மத்தாக நாட்டி. வடமித்யாதி. (ந) "யோக்த்ரம் க்ருத்வா ச வாஸுகிம்" என்கிறபடியே- வாஸுகியாகிற வலிய கயிற்றை அதிலே கடைகயிறுகச்சுற்றி. கடைந்திட்டவித்யாதி. தேவர்களையும் அஸுரர்களையும் முந்துறக்கடையவிட்டு, அவர்கள் இளைத்துக் கைவாங்கினவாறே "அலைகடல் கடைந்தவப்பன்" என்கிறபடியே அம்ர்தம் கிளருந்தனையும் நின்று கடைந்தருளின கைகளாலே சப்பாணி. கார்முகிலித்யாதி. ஆச்ரிதருடைய அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணின ஹர்ஷத்தாலே காளமேகம்போலே குளிர்ந்து புகர்பெற்ற வடிவை யுடையனாய் நின்றவனே சப்பாணி. ... ய.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆட்கொள்ளத்தோன்றிய வாயர்தங்கோவினை
நாட்கமழ்பூம்பொழில் வில்லிபுத்தூர்ப்பட்டன்
வேட்கையாற்சொன்ன சப்பாணியீரைந்தும்
வேட்கையினாற் சொல்லுவார்வினைபோமே. கக.

பதவுரை.

ஆள்கொள்ள— எல்லாரையும் அடிமைப் படுத்திக் கொள்ள
தோன்றிய— திருவாய்ப்பாடியில் அவதரித்தவனாய்
ஆயர்தம்— இடையர்களுக்கு
கோவினை— தலைவனானவனை
நாள்— நாடோறும்
கமழ்— பரிமளியாநின்ற
பூ— புஷ்பங்களையுடைய
பொழில்— சோலைகளாலே சூழப்பட்ட
வில்லிபுத்தூர்— ஸ்ரீ வில்லிபுத்தூருக்குநிர்வாஹகரான
பட்டன்— பட்டர்பிரான் [ பெரியாழ்வார் ]
வேட்கையால்— விருப்பத்தாலே
சொன்ன— அருளிச்செய்த
சப்பாணி— சப்பாணிவிஷயமான
இரண்டு ஐந்தும்— இப்பத்து பாசுரங்களையும்
வேட்கையினால்— ஆதரத்தோடு
சொல்லுவார்— ஓதுகிறவர்களுடைய
வினை— துன்பங்கள்யாவும்
போம்— தன்னடையேவிட்டு ஓடிப்போம்.

வ்யா. ஆட்கொள்ளத் தோன்றிய. ஸர்வரையும் அடிமை கொள்வதாகவந்து ஆவிர்ப்பவித்த. அவதார ப்ரயோஜநம்- லீலாவிபூதியிலுள்ள சேதநரைத்திருத்தி அடிமை கொள்ளுகையென்கை. "பிறந்த" என்னாதே, தோன்றிய என்றது, (ச) "தேவகீ பூர்வ ஸந்த்யாயா மாவிர்ப்பூதம்" என்கிறபடியே கர்ப்பவாஸதோஷமற வந்தவதரித்தமை தோற்றுகைக்காக. ஆயர்தம்கோவினை. ஆவிர்ப்பவித்தது ஸ்ரீமதுரையிலேயாகிலும், அது ப்ரகாசித்ததும் ப்ரயோஜநப்பட்டதும் திருவாய்ப்பாடியிலேயிறே. தான் தாழ நின்று ஏவிற்றுச்செய்து, தன் நீர்மையாலே எல்லாரையும் வசீகரித்து ஆளாக்கிக்கொண்டு ஸர்வகோப நிர்வாஹகனானவனை. நாட்கமழித்யாதி. ஸர்வகாலத்திலும் கமழாநின்றுள்ள பூம்பொழில்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார். வேட்கையித்யாதி. அவ

(க) "மந்தாநம் மந்தரம் க்ர்த்வா." (உ) மஹாசலம். (ந) "யோக்த்ரம் க்ர்த்வாசவாஸுகிம்."
(ச) "தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்."

தார சேஷ்டிதாநுபவத்தில் ஆசையாலே அருளிச்செய்த சப்பாணிவிஷயமான பத்துப்பாட்டையும் ஆசா பூர்வகமாகச் சொல்லுமவர்களுடைய அகில பாபங்களும் தன்னடையேபோம்.

அடிவரவு.—மாணி பொன் பன் தூநிலாப் புட்டித் தூரி பரந்து
குரக்கினம் அளந் தடைந்து ஆட்கொள் தொடர்.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

———(*)———

ஆக - திருமொழி, ரு- க்கு, பாட்டு-எ௯.

---

அ. கீழ்த்திருமொழியிலே- சப்பாணி கொட்டுகையாகிற அவனுடைய பாலசேஷ்டிதத்தை, தத்காலத்திலே யசோதைப்பிராட்டி யநுபவித்தாற்போலே, பிற்பாடராயிருக்கிற தாமும் அதில் ஆதராதிசயத்தாலே அவளுடைய (க) பாவயுக்தராய்க்கொண்டுபேசி யநுபவித்தாராய் நின்றார்; அவன் தளர் நடை நடக்கையாகிற சேஷ்டிதத்தை தத்காலம்போலே அநுபவித்து இனியாகிறாரிதில்.

மூ.—தொடர்சங்கிலிகை சலார்பிலாரென்னத் தூங்குபொன்மணியொலிப்பப்
படுமும்மதப்புனல்சோர வாரணம்பையநின்றூர்வதுபோல்
உடன்கூடிக் கிண்கிணியாரவாரிப்பவுடைமணி பறைகறங்கத்
தடந்தாளிணைகொண்டு சார்ங்கபாணிதளர்நடைநடவானோ. க.

பதவுரை.

சார்ங்கபாணி— ஸ்ரீ சார்ங்கத்தைக்கையிலே யுடையவன்
சங்கிலிகைத்தொடர் — சங்கிலித்தொடரானது
சலார் பிலார் என்ன— 'சலார்பிலார்' என்று சப்திக்கவும்
பொன்தூங்கு— பொற்கயிற்றில் தொங்குகின்ற
மணி— மணியானது
ஒலிப்ப — த்வநிக்கவும்
படு— உண்டாக்கப்பட்ட
மூன்று— இரண்டுகன்னமும் சிச்நமுமாகிற மூன்றிடங்களினின்றும்
மதம் புனல்— மதநீரானது
சோர—பெருகும்படியாக
வாரணம்—யானையானது
பைய நின்று—மெள்ளநின்று
ஊர்வதுபோல்—நடக்குமாப்போலே
கிண்கிணி—திருவடிச்சதங்கைகள்
உடன்கூடி—ஒன்றோடொன்றுகூடி
ஆரவாரிப்ப—சப்திக்கவும்
உடைமணி— திருவரையில் சாத்தினமணியானது
பறை—பறைபோலே [பறை-படஹம்.]
கறங்க—ஒலிக்கும்படியாகவும்
தட—பருத்து
தாள் இணைகொண்டு—ஒன்றுக்கொன்றொத்த திருவடிகளால்
தளர்நடை நடவானோ— ¶தளர்நடை நடவானோ.

¶தளர்நடையாவது— திருவடிகள்ஊன்றி நடக்கும் பருவமன்றிக்கே, நடைகற்கும்பருவமாகையாலே தவறித்தவறி நடக்கும்நடை.

(க) ஹாவயுக்த.

வ்யா. முதற்பாட்டு. தூடரித்யாதி. மதாதிசயத்தாலே கட்பத்தை முறித்துத் தாவிக் குடையா யி முத்துக்கொண்டு நடக்கையாலே காலிற் கிடக்கிற சங்கிலிகைத் தூடரானது சலார் பிலாரென்று சப்திக்க. தூடரென்று - விலங்கு. ஆனைவிலங்கு சங்கிலிகையாயிறே யிருப்பது. சலார்பிலார் - என்கிறது - சப்தாநுகாரம். தூங்கித்யாதி. முதுகில் கட்டின பொன்கயிற்றில் தூங்குகிறமணியானது த்வநிக்க. "பொன்மணி" என்கிறவிடத்தில், பொன் என்கிறவித்தால் - பொற்கயிற்றைச் சொல்லுகிறது. படுவித்யாதி. உண்டாக்கப்பட்ட மூன்று வகையான மதஜலம் அருவி குதித்தாற்போலே வடிய. மும்மதப்புனலையுடைய - மதத் தாலே கபோலத்வயமும்(க)மேட்ர ஸ்த்தாநமுமாகிற த்ரயத்தில்நின்றும் வடிகிறஜலம். வாரணை மித்யாதி. ஆனையானது அந்த மதபாரவச்யத்தாலே அலஸமாய்க்கொண்டு மெள்ள நடக்கு மாபோலே. உடனித்யாதி. "சேவடிக்கிண்கிணி" என்கிறபடியே திருவடிகளிற்சாத்தின சதங்கைகளானவை தன்னிலேகூடிசப்திக்க. அன்றிக்கே, திருவரையிற் சாத்தின சதங்கை வடமானது நழுவி விழுந்து திருவடிகளோடே சேர்ந்து இழுப்புண்டு வருகையாலே அங்கு உண்டான சதங்கைகள் தன்னிலேகூடி சப்திக்க வென்னவுமாம். உடையித்யாதி. திரு வரையிற்கட்டின மணியானது பறைபோலே சப்திக்க. தடந்தாளித்யாதி. பருவத்துக் கீடாய் விசாலயுக்தமாய் பரஸ்பரஸத்ருசமாயிருக்கிற திருவடிகளைக்கொண்டு. சார்ங்கபாணி. ஸ்ரீ சார்ங்கத்தைத் திருக்கையிலேயுடையவன். இது ஈச்வரத்வ சிஹ்நங்களுக்கெல்லாம் உபலக்ஷ ணம். அவதரிக்கிறபோதே ஈச்வரத்வ சிஹ்நங்கள் தோன்றும்படியாகவிறே வந்தவதரித்தது. தளர் நடை நடவானோ. தளர் நடையாவது- திருவடிகள் ஊன்றி நடக்கும் பருவமன்றிக்கே நடைகற்கும் பருவமாகையாலே தள்ளப்பாறி நடக்கும் நடை, தள்ளம் பாறுகை-தவறுகை. ௧.

மூ.—செக்கரிடை நுனிக்கொம்பிற்றோன்றுஞ் சிறுபறைமுளைப்போல்
நக்கசெந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர்வெண்பல்முளையிலக
அக்குவடமுடுத்தாமைத்தாலி பூண்டவநந்தசயநன்
தக்கமாமணிவண்ணன் வாசுதேவன்தளர் நடைநடவானோ. ௨.

பதவுரை.

அக்குவடம்— சங்குமணி வடத்தை
உடுத்து— திருவரையிலே தரித்து
ஆமைத்தாலி— கூர்மாகாரமான ஆபரணத்தை
பூண்ட— திருக்கழுத்தில் சாத்திக்கொண்டவனாய்
அநந்தசயநன் — திருவனந்தாழ்வான் மேல் கண்வளர்ந்தருளுமவனாய்
தக்க— தகுதியான
மா மணி— நீலமணிபோன்ற
வண்ணன்— வடிவையுடையவனாய்
வாசுதேவன்— ஸ்ரீ வஸுதேவர் திருமகனான கண்ணன்
செக்கர் இடை— செம்மானத்திலே
நுனி கொம்பில்— நுனிக் கிளையிலே
தோன்றும்— தோன்றும்படி விளங்காநின்ற
சிறு பிறை— இளம் திங்களுடைய
முளைப்போல்— முளைபோலே
நக்க— சிரிக்குமளவில்
செம் துவர்— மிகவும் சிவந்திருந்துள்ள
வாய்— அதரமாகிற
திண்ணை மீது— உந்நத ஸ்த்தாநத்தின்மேலே
நளிர்— குளிர்ந்ததாய்
வெண்— வெளுத்திரா நின்றுள்ள
பல்— திருமுத்துக்களுடைய
முளை— அங்குரங்கள்
இலக— விளங்கும்படி.
தளர்நடை நடவானோ.

வ்யா. இரண்டாம்பாட்டு. சேக்கரித்யாதி. செக்கர்வானத்திடையிலே, (க) சாகாக்ரத்திலே தோன்றும்படி உந்நேயமான பாலசந்த்ராங்குரம்போலே. நக்கவித்யாதி. ஸ்மிதம் செய்கையாலே மிகச்சிவந்திருந்துள்ள திருவதரமாகிற உயர்ந்த நிலத்தின்மேலே குளிர்ந்து வெளுத்திருக்கிற திருமுத்தின் அங்குரத்தினுடைய தேஜஸ்ஸானது ப்ரகாசிக்க. அக்குவடமுடுத்து. சங்குமணி வடத்தைத் திருவரையிலே சாத்தி. ஆமைத்தாலிபூண்ட. கூர்மாகாரமான தாலியாகிற ஆபரணவிசேஷத்தைத் திருக்கழுத்திலே சாத்தியிருக்கிற. அநந்த சயநன். அவதாரத்தினுடைய மூலத்தை நினைத்துச்சொல்லுகிறது. (உ) "நாம ஸஹஸ்ர ஸ்ரஷ்டா ஸ்ராமகம்" என்னக்கடவதிறே. தக்கமாமணி வண்ணன். தகுதியான நீலரத்நம்போன்ற திருநிறத்தையுடையவன். வாசுதேவனித்யாதி. ஸ்ரீவஸுதேவர் திருமகன், தளர்நடை நடவானோ. ... ... ... ... ... ... ... உ.

மூ.—மின்னுக்கொடியுமோர் வெண்டிங்களுஞ் சூழ்பரிவேடமுமாய்ப்
பின்னல்துலங்குமரசிலையும் பீதகச்சிற்றாடையோடும்
மின்னிற்பொலிந்ததோர் கார்முகில்போலக் கழுத்தினிற்காறையோடுந்
தன்னிற்பொலிந்த விருடீகேசன் தளர்நடைநடவானோ. ௩

பதவுரை.

§ மின் கொடியும்— மின்னல் கொடியும்
ஓர்— அத்விதீயமாய்
வெண்— வெளுத்திராநின்ற
திங்களும்— சந்த்ரமண்டலமும்
சூழ்— அதைச் சூழ்ந்த
பரிவேடமுமாய்— பரிவேஷமும் போலே
பின்னல்— அரையில்பூண்ட பொற்பின்னலும்
துலங்கும்— அதில்கோக்கப்பட்டு விளங்காநின்ற
அரசு இலையும்— அரசிலைக் கோவையும்
பீதகம்— பொன்வர்ணமான
சிறு ஆடையொடும்— சிற்றாடையுமாகிற இவற்றோடும்
மின்னில்— மின்னலாலே
பொலிந்தது— விளங்குவதாய்
ஓர்— அத்விதீயமாய்
கார்— கறுத்திராநின்ற
முகில்போல— மேகம்போலே
கழுத்தினில்— திருக்கழுத்தில் பூண்ட
காறையொடும்— "காறை" என்னுமாபரணத்தோடுங்கூட
தன்னில் பொலிந்த— ஸ்வதஸ் ப்ரகாசனாய்
இருடீகேசன் — கண்டவர்களுடைய இந்த்ரியங்களைக் கவருமவனான கண்ணன் [ ஹ்ருஷீகேசன் ]
தளர்நடைநடவானோ.

§ "மின்னுக்கொடி" என்கிறவிடத்தில் "மின்" என்னும் சொல்லுக்குமேல் "கொடி" என்று-க்கர வெய்யத்தால் உகரச்சாரியை பொருந்திற்று.

வ்யா. மூன்றாம்பாட்டு. மின்னித்யாதி. மின்கொடியும் அத்தோடு சேர்ந்ததோர் அகளங்க சந்த்ரமண்டலமும் அத்தைச்சூழ்ந்த பரிவேஷமும்போலே. பின்னலித்யாதி. திருவரையிற் சாத்தின பொற்பின்னலும், அதிலேகோவைப்பட்டு ப்ரகாசிக்கிற வெள்ளி அரசிலைப்பணியும், இவற்றுக்கு மேலேசாத்தின பொன்னின் சிற்றாடையுமாகிற இவற்றோடும். மின்னிலித்யாதி. மின்னாலே விளங்கப்பட்டதொரு காளமேகம்போலே திருக் கழுத்திற்

(க) ஸாவாஸ்ரு. (உ) "நாகபர்யங்கமுத்ஸ்ரூஜ்ய ஹ்யாகதஃ"

சாத்தின காறையோடும். தன்னிலித்யாதி. இவ்வொப்பனைகள் மிகையாம்படி தன்னழகாலே (க) ஸமர்த்தனாயிருப்பானாய் அவ்வழகாலே கண்டவர்களுடைய இந்த்ரியங்களைத் தன் வசமாக்கிக்கொள்ளுமவன் தளர்நடை நடவானோ. ... ... ... ௩.

மூ.—கன்னற்குடந்திறந்தாலொத்தூறிக் கணகணசிரித்துவந்து
முன்வந்துநின்று முத்தந்தருமென் முகில்வண்ணன்திருமார்வன்
தன்னைப்பெற்றேற்குத் தன்வாயமுதந் தந்தென்னைத் தளிர்ப்பிக்கின்றான்
தன்னேற்றுமாற்றலர் தலைகண்மீதே தளர்நடைநடவானோ. ௪.

பதவுரை.

கன்னல் குடம்— கரும்பு ரஸக்குடமானது
திறந்தால் ஒத்து— வாய்திறந்தாற்போலே
ஊறி— திருப்பவளத்தில் அம்ர்தம் ஊறி வடிய
கணகண சிரித்து— 'கணகண' என்று சிரித்து
உவந்து— ஸந்துஷ்டனாய்க் கொண்டு
முன்வந்து நின்று— முன்னேவந்து நின்று
முத்தம் தரும்— அதராம்ர்தம் தருமவனாய்
என்— எனக்கு பவ்யனாய்
முகில்— நீலமேகம்போன்ற
வண்ணன்— திருநிறத்தை யுடையனாய்
திரு— பெரியபிராட்டியாரை
மார்வன்— மார்விலேயுடையனாய்
தன்னை— தன்னை
பெற்றேற்கு— பிள்ளையாகப்பெற்ற எனக்கு
தன்— தன்னுடைய
வாய் அமுதம்— திருப்பவளத்தில் ஊறுகின்ற அம்ர்தத்தை
தந்து— கொடுத்து
என்னை— தாயான என்னை
தளிர்ப்பிக்கின்றான்— தழைப்பியாநின்ற இவன்
தன் ஏற்று— தன்னோடு எதிர்த்த
மாற்றலர்— சத்ருக்களுடைய
தலைகள்மீது— தலைகள்மேல்
தளர்நடைநடவானோ.

வ்யா. நாலாம்பாட்டு. கன்னலித்யாதி. (௨) கருப்பஞ்சாற்றுக்குடம் ‡இல்லி திறந்தால் பொசிந்து புறப்படுமாபோலே, திருப்பவளத்தில் ஜலமானது ஊறிவடிய, கணகணவெனச் சிரித்து ப்ரீதனாய்க்கொண்டு. கணகணவென்றது - விட்டுச்சிரிக்கிறபோதை சப்தாநுகாரம். முன்னித்யாதி. முன்னேவந்து நின்று தன்னுடைய அதராஸ்வாதத்தைத் தாராநிற்கும். முத்தம் - அதரம். என்னித்யாதி. எனக்குபவ்யனாய் காளமேகம்போன்ற வடிவையுடையனாய், அந்த பவ்யதைக்கு ஊற்றுவாயான லக்ஷ்மீஸம்பந்தத்தை யுடையவன். தன்னையித்யாதி. தன்னைப் பிள்ளையாகப்பெற்ற பாக்யத்தையுடைய வெனக்குத் தன்னுடைய (௩) வாகம்ர்தத்தைத்தந்து என்னை தழைப்பியாநின்றான். இங்கே "வாயமுதந் தந்து-தளிர்ப்பிக்கின்றான்" என்று - வர்த்தமாநமாகச் சொல்லுகையாலே, முன்பு "முத்தம்தரும்" என்றது - எப்போதும் தன்விஷயத்தில் அவன்செய்துபோரும் ஸ்வபாவகதநம் பண்ணினபடி. தன்னேற்றித்யாதி. தன்னோடெதிர்த்த சத்ருக்களானவர்களுடைய தலைகள்மேலே தளர்நடை நடவானோ. ... ... ... ... ... ... ௪.

(க) ஸமர்த்த. (௨) கரும்பு, சாறு, குடம் என்னுமிப்பதங்கள் சேர்ந்து 'கறுப்பஞ்சாற்றுக்குட' மென்று கிடக்கிறது. ‡இல்லி - ரந்த்ரம். (௩) வாமர்த.

மூ.—முன்னலோர்வெள்ளிப் பெருமலைக்குட்டன் மொடுமொடுவிரைந்தோடப்
பின்னைத்தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல்
பன்னியுலகம்பரவியோவாப் புகழ்பலதேவனென்னும்
தன்னம்பியோடப் பின்கூடச்செல்வான் தளர்நடைநடவானோ. ரு.

பதவுரை.

முன்— முன்னே
நல்— நன்றாய்
ஓர்— அத்விதீயமாய்
பெரு வெள்ளிமலை— பெரிய வெள்ளிமலை ஈன்ற
குட்டன்— குட்டியானது
மொடுமொடு— "திடுதிடு"வென்று
விரைந்து ஓட— வேகமாய் ஓடச்செய்தே
பின்னை— அந்தகுட்டியின் பின்னே
தொடர்ந்தது— தொடர்ந்த
கரு— கறுத்த
மலை— மலைஈன்ற [ மலையா லுண்டாக்கப் பட்ட]
ஓர்குட்டன்— ஒருகுட்டியானது
பெயர்ந்து— பேர்ந்து
அடி இடுவதுபோல்— அடியிடுமாப்போலே

உலகம்— ‡ உயர்ந்தவர்கள்
பன்னி— ஆராய்ந்து
பரவி— துதித்து
ஓவா— எல்லை காணவொண்ணாத
புகழ்— கீர்த்தியையுடையனாய்
பலதேவன் என்னும்— "பலதேவன்" என்னும் பெயரை உடையனான
தன் நம்பி— தன் தமையனானவன்
ஓட— முன்னே ஓட
பின்— பின்னே
கூட— அவனைக் கூடுவதற்காக
செல்வான்— விரைந்து நடக்கிறவன்
தளர்நடைநடவானோ.

‡ "உலகமென்பது உயர்ந்தோர்மாட்டே" என்று தொல்காப்பியத்தில் ஸூத்திரம்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. முன்னலித்யாதி. முன்னே விலக்ஷணமாய் அத்விதீயமாய்ப் பெரிதாயிருந்துள்ள வெள்ளிமலையீன்ற குட்டியானது தன்செருக்காலே திடுதிடென விரைந்தோட. பின்னையித்யாதி. அந்தக்குட்டியின் பின்னே தன்செருக்காலே அதனைப்பிடிக்கைக்காகத் தொடர்ந்து, அஞ்சநகிரி யீன்றதொருகுட்டி, தன் சைசவாநுகுணமாகக் காலுக்குக் கால் பேர்ந்தடியிட்டுச் செல்லுமாபோலே. பன்னியித்யாதி. லோகமெல்லாங்கூடி, தங்கள் ஜ்ஞாநசக்திகளுள்ள வளவெல்லாங்கொண்டு ஆராய்ந்து ஸ்துதித்தாலும் முடிவு காணவொண்ணாத புகழையுடையனாய் பலதேவனென்னும் பேரை யுடையனான தன்னுடைய தமையனானவன் செருக்கி முன்னே ஓட, அவன்பின்னே அவனைக் கூடவேணுமென்று தன் சைசவாநுகுணமாக த்வரித்து நடக்குமவன் தளர்நடை நடவானோ. ... ... ரு.

மூ.—ஒருகாலிற் சங்கோருகாலிற்சக்கரமுள்ளடி பொறித்தமைந்த
இருகாலுங்கொண் டங்கங்கெழுதினற்போ லிலச்சினைபடநடந்து
பெருகாநின்ற வின்பவெள்ளத்தின்மேற் பின்னையும் பெய்துபெய்து
கருகார்க்கடல்வண்ணன் காமர்தாதை தளர்நடை நடவானோ. சு.

பதவுரை.

கரு— கறுத்ததாய்
கார்— குளிர்ந்திராநின்ற

கடல்— கடல்போன்ற
வண்ணன்— திருநிறத்தையுடையனாய்

காமர்தாதை— மந்மதனுக்குப் பிதாவானவன்
ஒருகாலில்— ஒருதிருவடியில்
சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யமும்
ஒருகாலில்— மற்றொரு திருவடியில்
சக்கரம்— ஸ்ரீஸுதர்சநாழ்வானுமாக
உள்அடி— உள்ளடிகளிலே [ உள்ளங்காலில் ]
பொறித்து— ரேகையாகப் பொறித்து
அமைந்த— சமைந்த
இருகாலும் கொண்டு — இரண்டு அடிகளாலும்
அங்குஅங்கு— அடியிட்ட அவ்வவ் விடங்களிலே
எழுதினாற்போல்— எழுதினாற்போலே [
இலச்சினை— லக்ஷணம் [ அடையாளம் ]
பட— படிம்படி
நடந்து— நடந்து
பெருகா நின்ற— ப்ரவஹியாநிற்கிற
இன்ப வெள்ளத்தின் மேல்— ஆநந்தப்ரவாஹத்தின் மேலே
பின்னையும்— மேன்மேலும்
பெய்து பெய்து— ஆநந்தத்தை வர்ஷித்துக் கொண்டு
தளர்நடைநடவானோ.

வ்யா. ஆறும்பாட்டு. ஒருகாலித்யாதி. ஒரு திருவடிகளிலே ஸ்ரீ பாஞ்சஜந்யமும் ஒருதிருவடிகளிலே திருவாழியாழ்வானுமாக உள்ளடிகளிலே ரேகாரூபேண பொறித்துச் சமைந்த விரண்டு திருவடிகளையுங்கொண்டு. அங்கங்கித்யாதி. அடியிட்ட அவ்வவ ஸ்த்தலங்களிலே ¶ தூலிகைகொண்டு எழுதினாற்போலே அடையாளப் படிம்படிநடந்து. பெருகாவித்யாதி. இந்த நடையழகையும் வடிவழகையும்கண்டு மேன்மேலனப்பெருகாநின்ற ஆநந்தஸாகரத்துக்குமேலே பின்னையும் உத்தரோத்தரம் ஆநந்தத்தையுண்டாக்கி. கருகாரித்யாதி. இருண்டு குளிர்ந்திருக்கிற கடல்போன்ற திருநிறத்தையுடையவன். கருமை-இருட்சி. கார்-குளிர்த்தி. அன்றிக்கே, கருமை - பெருமையாய், கார் - இருட்சியாகவுமாம். அன்றிக்கே, காரென்று - மேகமாய், காளமேகம்போலேயும் கடல்போலேயுமிருக்கிற திரு நிறத்தையுடையவ னென்னவுமாம். காமர்தாதை. அழகாலேநாட்டைவெருட்டித் திரிகிற காமனுக்கு உத்பாதகனானவன். * காமனைப்பயந்த காளையிறே. (க) "ப்ரஸவாந்தஞ்ச யௌவநம்" என்னும்படியன்றிக்கே, காமனைப் பயந்தபின்பு கீழ்நோக்கிப் பிராயம்புகுமாய்த்து.

காமர்தாதை இன்ப வெள்ளத்தின்மேல் பின்னையும் பெய்து பெய்து - தளர்நடை நடவானோ என்று அந்வயம். ... ... ... ... ... சு

மூ.—படர்பங்கயமலர்வாய் நெகிழப்பனிபடுசிறுதுளிபோல்
இடங்கொண்டசெவ்வா யூறியூறியிற்றிற்றுவீழநின்று
கடுஞ்சேக்கழுத்தின்மணிக்குரல் போலுடைமணிகணகணெனத்
தடந்தாளிணைகொண்டு சார்ங்கபாணி தளர்நடைநடவானோ. எ.

பதவுரை.

படர்— படாநின்ற
பங்கயமலர்— தாமரைமலரானது
வாய் நெகிழ— விகஸித்தவளவிலே
பனி படு— குளிர்ந்தமதுவானது
சிறு துளி போல்— சிறுக்கத்துளித்து விழுமாப் போலே
இடம்கொண்ட— விசாலமாய்
செம்— சிவந்திராநின்ற
வாய்— திருப்பவளத்தில் அம்ர்தமானது
ஊறி ஊறி— நிரந்தரமாக ஊறி
இற்று இற்றுவீழ— முறிந்து விழும்படி
நின்று— நின்று

¶ தூலிகை- சித்ரமெழுதும் கருவி. (க) "ப்ரஸவாந்தஞ்ச யௌவநம்"

கடும்— க்ரூரமான
சே— ரிஷபத்தின்
கழுத்தில்— கழுத்திற்கட்டின
மணி— மணியினுடைய
குரல் போல்— ஒலியைப்போலே.
உடைமணி— அரையில் சாத்தின மணியானது
கணகணென— கணகணவென்று ஒலிக்க
தட— பருத்த
தாள் இணைகொண்டு— ஒன்றோடொன்றொத்த திருவடிகளால்
சார்ங்கம்— ஸ்ரீசார்ங்கதநுஸ்ஸை
பாணி— திருக்கையிலுடையவன்
தளர்நடை நடவானோ.

வ்யா. ஏழாம்பாட்டு. படரித்யாதி. பெருத்திருந்துள்ள தாமரைப்பூவானது முகுளிதமாயிருக்கையன்றிக்கே, வாய்நெகிழ்ந்தவளவிலே, குளிர்த்தியையுடைத்தான அகவாயில் மதுவானது சிறுகத்துளித்து விழுமாப்போலே. இடங்கொண்டவித்யாதி. இடமுடைத்தாய்ச் சிவந்திருந்துள்ள திருப்பவளத்தில் ஜலமானது நிரந்தரமாக ஊறிமுறிந்து விழும்படிநின்று. கடுஞ்சேக்கழுத்தித்யாதி. கடிதான சேவின்கழுத்தில் கட்டின மணியினுடைய த்வநிபோலே திருவரையில் கட்டின மணியானது கணகணவென்று சப்திக்கும்படி. தடந்தாளித்யாதி. ஸவிகாஸமாய் பரஸ்பர ஸத்ர்சமான திருவடிகளைக்கொண்டு சார்ங்கபாணியானவன் தளர்நடை நடவானோ. ... ... ... ... ௭.

மூ.—பக்கங்கருஞ்சிறுப்பாறைமீதே யருவிகள்பகர்ந்தனைய
அக்குவடமிழிந்தேறித்தாழ வணியல்குல்புடைபெயர
மக்களுலகினிற்பெய்தறியா மணிக்குழவியுருவின்
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. அ.

பதவுரை.

கரு— கறுத்த
சிறு பாறை— சிறியமலையின்
பக்கம் மீது— தாழ்வரையின் மேலே
அருவிகள்— அருவிகளானவை
பகர்ந்து அனைய— ஒளிவிடுமாப் போலே
அக்குவடம்— (திருவரையில் சாத்தின) வளைமணிவடமானது
இழிந்து— தாழ்ந்தும்
ஏறி— உயர்ந்தும்
தாழ— தொங்கும்படியாகவும்
அணி அல்குல்— அழகியநிதம்பமானது
புடை பெயர— பக்கங்களில் அசையும்படியாகவும்
உலகினில்— உலகத்திலே
மக்கள்— மநிசர்கள்
பெய்து அறியா— பெற்று அறியாத
மணி— மநோஹரமான
குழவி உருவின்— சிறுப்பிள்ளை வடிவையுடையவனாய்
தக்க— தகுந்த
மா மணி— நீலமணி போன்ற
வண்ணன்— திருநிறத்தை யுடையனான
வாசுதேவன்— ஸ்ரீவஸுதேவர் திருமகன்
தளர்நடை நடவானோ.

வ்யா. எட்டாம்பாட்டு. பக்கமித்யாதி. கறுத்த நிறத்தையுடைத்தாய்ச் சிறுத்திருந்துள்ள மலையினுடைய பார்ச்வத்திலே நிம்நோந்நதமான அருவிகள் ஒளிவிடுமாபோலே. பகர் - ஒளி. அக்கித்யாதி. திருவரையிற்சாத்தின வளைமணி வடமானது தாழ்ந்தும் உயர்ந்தும் நாலும்படியாக. அணியித்யாதி. அழகிய நிதம்ப ப்ரதேசமானது பார்ச்வங்களிலே அசைய. மக்களித்யாதி. லோகத்தில் மநுஷ்யர் பெற்றறியாத அழகிய குழவிவடிவையுடைய. தக்கவித்யாதி. தகுதியான நீலரத்நம்போன்ற நிறத்தையுடையனான ஸ்ரீவஸுதேவர் திருமகன் தளர்நடை நடவானோ. ... ... ... ... ... அ.

மூ.—வெண்புழுதிமேற்பெய்துகொண்டளைந்ததோர் வேழத்தின்கருங்கன்றுபோல்
தெண்புழுதியாடித்திரிவிக்கிரமன் சிறுபுகர்படவியர்த்து
ஒண்போதலர்கமலச் சிறுக்காலுறைத்தொன்றுநோவாமே
தண்போதுகொண்ட தவிசின்மீதே தளர்நடைநடவானே. கூ.

பதவுரை.

வெண் புழுதி— வெள்ளைப் புழுதியை
மேல் பெய்துகொண்டு— மேலே ஏறிட்டுக் கொண்டு
அளைந்தது— அளைந்த
ஓர்— ஒரு
கரு— கறுத்த
வேழத்தின் கன்றுபோல்— ஆனைக் குட்டி போலே
தென்— தெள்ளிய
புழுதி— புழுதியிலே
ஆடி— விளையாடி
திரிவிக்கிரமன்— மூன்றடியால் உலகத்தை யளந்தவன்
சிறு புகர்பட— சிறிது திருமேனி புகர்த்துத் தோன்றும்படி
வியர்த்து— ஸ்வேதம் கொண்டு
ஒண்— அழகியதாய்
போது— உரிய காலத்திலே
அலர்— விகஸித்த
கமலம்— தாமரைப்பூப் போன்ற
சிறு— சிறிய
கால்— திருவடிகள்
உறைத்து— மிதித்தவிடத்திலே
ஒன்றும் நோவாமே— ஒன்றும் நோவாதபடி
தண்— குளிர்ந்த
போதுகொண்ட— பூக்களையுடைய
தவிசின் மீது— மெத்தையின் மேல்

தளர்நடை நடவானே.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. வெண்புழுதியித்யாதி. வெளுத்த புழுதியை மேலே ஏறிட்டுக்கொண்டு அளைந்ததொரு கரிய ஆனைக்கன்றுபோலே. தெண்ணித்யாதி. தெள்ளிய புழுதியைத் திருமேனியிலே ஏறிட்டுக்கொண்டு. திரிவிக்கிரமன். ஆச்ரிதரை இந்த்ரன பேக்ஷிதம் செய்கைக்காகத் திருவடிகளின் மார்த்தவம்பாராதே லோகத்தை யளந்தவன். சிறு புகர்பட வியர்த்து. ஏறிட்டுக்கொண்ட புழுதி ஸ்வேதபிந்துக்களாலே நனைந்தவிடங்களிலே திருமேனி சிறிது புகர்த்துத்தோன்றும்படி வியர்த்து. ஒண்போதித்யாதி. அழகியதாய்த் தனக்கடைத்தகாலத்திலே யலர்ந்த தாமரைப்பூப்போலே யிருக்கிற சிறியதான திருவடிகள் மிதித்த விடத்திலே ‡ ஒன்றுறைத்து நோவாதபடியாக. தண்ணித்யாதி. குளிர்ந்த பூக்களை யுடைத்தான மெத்தைமேலே தளர்நடை நடவானே. தவிசு-மெத்தை. ... சு.

மூ.—திரைநீர்ச்சந்திரமண்டலம்போல் செங்கண்மால்கேசவன்றன்
திருநீர்முகத்துத்துலங்குசுட்டி திகழ்ந்தெங்கும்புடைபெயரப்
பெருநீர்த்திரையெழுகங்கையிலும் பெரியதோர்தீர்த்தபலம்
தருநீர்ச்சிறுச்சண்ணந்துள்ளஞ் சோரத்தளர்நடைநடவானே. ய.

பதவுரை.

திரை— அலை எறிகிற
நீர்— கடலின் இடையில் சலித்துத்தோற்றுகிற
சந்திர மண்டலம் போல்— சந்த்ர மண்டலம் போலே

‡ (பா) "ஒன்றுறுத்து."

செம் கண்—சிவந்த திருக்கண்களையும்
மால்—கறுத்தநிறத்தையு முடையனாய்
கேசவன்—ப்ரசஸ்தகேசனான இவன்
தன்—தன்னுடைய
திரு—உஜ்ஜ்வலமாய்
நீர்—நீர்மையையுடைத்தான
முகத்து—திருமுகமண்டலத்தில்
துலங்கு—ப்ரகாசியாநின்ற
சுட்டி—சுட்டியானது
எங்கும் திகழ்ந்து—எங்கும் விளங்கி
யுடைபெயர—இடமும் வலமுமாய் அசைய
பெரு—புண்யதீர்த்தங்களிற் சிறந்ததாய்
நீர்திரை எழு— வெள்ளநீர் அலைபெறியா நின்ற
கங்கையிலும்— கங்காநதியிலுங் காட்டில்
பெரியது—பெரியதாய்
ஓர்—அத்விதீயமான
தீர்த்தபலம்—தீர்த்தபலத்தை
தரும் நீர்—தரத்தக்க ஜலத்தையுடைய
சிறு சண்ணம்—சிறியசண்ணமானது [சண்ணம் - குஹ்யாவயவம்.]
துள்ளம் சோர—துளிக்கத் துளிக்க
தளர்நடை நடவானோ.

வ்யா. பத்தாம்பாட்டு. திரைநீரித்யாதி. திரைக்கிளப்பத்தை யுடைத்தான ஸமுத்ரமத்த்யத்திலே சலித்துத் தோற்றுகிற சந்த்ரமண்டலம்போலே. செங்கண்மாலித்யாதி. சிவந்ததிருக்கண்களையும் அதுக்குப் பரபாகமான கறுத்த நிறத்தையு முடையனாய் ப்ரசஸ்த கேசனாயிருக்கிறவன். மால்- கரியவன். தன்னித்யாதி. தன்னுடைய அழகியதாய் நீர்மையை யுடைத்தான திருமுகமண்டலத்தில் விளங்குகிற சுட்டியானது எங்குமொக்க ப்ரகாசித்து இடம் வலம் கொண்டசைய. பெருநீரித்யாதி. தீர்த்தங்களில் ப்ரஸித்தமாய் ப்ரவாஹஜலம் மாறாமல் அலைபெறிகிற கங்கையிலுங்காட்டில் பெரியதாய் அத்விதீயமான தீர்த்தபலத்தைத் தரும் ஜலத்தை யுடைத்தான சிறுச்சண்ணமானது துளிக்கத் துளிக்கத் தளர்நடை நடவானோ. ௰.

அ. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆயர்குலத்தினில்வந்துதோன்றிய வஞ்சநவண்ணன்றன்னைத்
தாயர்மகிழவொன்னார் தளரத்தளர்நடைநடந்ததனை
வேயர்புகழ்விட்டுசித்தன்சீரால் விரித்தனவுரைக்கவல்லார்
மாயன்மணிவண்ணன்றாள் பணியுமக்களைப்பெறுவர்களே. கக.

பதவுரை.

ஆயர் குலத்தினில்—இடைக்குலத்திலே
வந்து தோன்றிய—வந்து ஆவிர்ப்பவித்த
அஞ்சன வண்ணன் தன்னை— மைபோன்ற வடிவையுடைய கண்ணனை
தாயர்— பெற்ற தாயான யசோதையும், அவளையொத்த பரிவர்களும்
மகிழ—ஹர்ஷிக்கவும்
ஒன்னார்—கம்ஸாதிசத்ருக்கள்
தளர—மனமொடுங்கிப் போகவும்
தளர்நடை நடந்ததனை—தளர்நடை நடந்தப்ரகாரத்தை
வேயர்—வேயரானவர்கள்
புகழ்—ச்லாகிக்கும்படியான
விட்டுசித்தன்—பெரியாழ்வார்
சீரால்—சீர்மையோடே
விரித்தன—விஸ்தரித்தருளிச்செய்தஇவற்றை
உரைக்க வல்லார்—ஓதவல்லவர்கள்
மாயன்—ஆச்சர்ய சக்தியுக்தனாய்
மணி வண்ணன்— நீலமணி போன்ற வர்ணத்தையுடையனான எம்பெருமானுடைய
தாள்—திருவடிகளிலே
பணியும்—அடிமைசெய்யத்தக்க
மக்களை—பிள்ளைகளை
பெறுவர்கள்— பெறுவார்கள்.

வ்யா. ஆயரித்யாதி. கோபகுலத்திலே வந்து ஆவிர்ப்பவித்த. ராஜகுலத்திலா
ர்ப்பவித்தமை அடியறிவாரறியுமித்தனையிறே. இதிறே எல்லாரும் அறிந்தது. அஞ்சன
ணன்றன்னை. கண்டவர் கண்குளிரும்படி அஞ்சனம் போலே யிருக்கிற திருநிறத்தையுடை
யவனை. தாயரித்யாதி. பெற்றதாயாரான யசோதையும் அவளோபாதி ஸ்நேஹிகளான
ளும் ப்ரீதராம்படியாகவும், தொட்டில் பருவத்திலே பூதநாசகடாதிகள் நிரஸ்தரானவ
ந்த கம்ஸாதிகளான சத்ருக்கள், தலையெடுத்து நடக்க வல்லனானமை கண்டு "நாம்
யப்புகுகிறோம்" என்று பீதராய் அவஸந்நராம்படியாகவும் தளர்நடை நடந்த ப்ரகார,
வேயரித்யாதி. * வேயர்தங்கள் குலத்துதித்தவராகையாலே அக்குடியிலுள்ளார் செல்வ
தம்முடைய வைபவத்தைச் சொல்லிப்புகழும்படியான பெரியாழ்வார். சீராவி
சீர்மையோடே விஸ்தரித்துச்சொன்ன விவற்றை யேதேனுமொருபடி சொல்லவல்லவ
மாயனித்யாதி. ஆச்சர்யமான குணங்களையுடையனுய் நீலரத்நம்போன்ற வடிவையுடை
னவனுடைய திருவடிகளிலே ஸ்வசேஷத்வாநுரூபமான வ்ருத்தி விசேஷத்தைப்பண்
ஸத்புத்ரர்களைப் பெறுவர். மக்களென்று- அவிசேஷமாகச் சொல்லுகையாலே வித்யையா
ஜந்மத்தாலும் வரும் உபயவித புத்ரர்களையும் சொல்லுகிறது. ... ...

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

———(*)———

அடிவரவு.—தொடர் செக்கர் மின்னுக் கன்னல் முன்னலொருகால்
படர் பக்கம் வெண் திரை ஆயர் பொன்.

---

அ. திருமொழி- எ-க்கு, பாட்டு- அச.

---

அ. அவன் தளர்நடையாகிற பாலசேஷ்டிதத்தினுடைய ரஸத்தை, பெற்றா
ரான யசோதைப்பிராட்டி தத்காலத்தில் அவனைக்குறித்து அபேக்ஷித்து அநுபவி
போலே, பிற்காலமாயிருக்கச்செய்தேயும் * மயர்வற மதிநல மருளப்பெற்றவராகை
தத்காலத்தில் போலே ப்ரகாசித்து, தாமும் அந்த ரஸத்தை அநுபவித்தாராய்
கீழ்; இனிமேல் அவனுடைய சைசவாநுகுணமாக ஓடிவந்து தன்னை அணைத்துக்கொ
படியை, யசோதைப்பிராட்டி அநுபவிக்கவாசைப்பட்டு, அதுதன்னை அவனைக்குறித்த
த்து, அவன் வந்து தன்னையணைக்கையாகிற ரஸத்தை அவள் அநுபவித்த ப்ரகாரத்தை,
படியே தாமும் அநுபவித்து ஹ்ர்ஷ்டராகிறார். அச்சோவென்று - அவன்வந்து அணை
கொள்ளுகையை அபேக்ஷிக்கையும், அந்த சேஷ்டிதரஸத்தை அநுபவிக்கையுமே அவ
டிவர்க்கு ஸாம்யம். *மயர்வற மதிநலம் பெற்று, பாத்வாதிகளை யெல்லாம் தெளியக்க
ராகையாலே அவதாராந்தர சேஷ்டிதங்களையும் இவ்வவதாரந்தன்னில் உத்தரகாலத்தி
சேஷ்டிதங்களையும் தர்ம்யைக்யத்தாலே வஸ்து விசேஷணமாக்கிக்கொண்டு அவனைப்
அந்த பாலசேஷ்டித ரஸத்தை அநுபவித்தவிது இவர்க்கு விசேஷம். ... ...

மூ.—பொன்னியற்கிண்கிணி சுட்டிபுறங்கட்டித்
தன்னியலோசை சலன்சலனென்றிட
மின்னியன்மேகம்விரைந்தெதிர்வந்தாற்போல்
என்னிடைக்கோட்டரா வச்சோவச்சோ எம்பெருமான்! வாரா வச்சோவச்சோ. க.

பதவுரை.

பொன் இயல்— பொன்னால் பூசப்பட்ட
கிண்கிணி— கிண்கிணியையும்
சுட்டி— திருநெற்றிச் சுட்டியையும்
புறம்கட்டி— அவ்வவ ஸ்த்தாநங்களில்கட்டி
தன்— அந்தக் கிண்கிணியின்
இயல் ஓசை— ஸ்வாபாவிக த்வநியானது
சலன் சலன் என்றிட— "சலன்சலன்" என்றொலிக்க
மின் இயல்— மின்னலை இயல்வாகவுடைய (அல்லது,) மின்னலாலே அழகிய
மேகம்— மேகமானது
விரைந்து— த்வரித்து
எதிர் வந்தாற்போல்— எதிரே வருமாப்போலே
என் இடைக்கு— என் இடுப்பிலிருப்புக்கு
ஓட்டரா— ஓடிவந்து
‡ அச்சோ அச்சோ— என்னை அணைத்துக்கொள்ளவேணும்
எம் பெருமான்!— எனக்கு ஸ்வாமியானவனே!
வாரா— வந்து
அச்சோ அச்சோ.

‡ "அச்சோ அச்சோ" என்றிரட்டித்துச் சொன்னமையால் அதிலுள்ள ஆதரத்தின் மிகுதி தோற்றுகிறது.

வ்யா. முதற்பாட்டு. பொன்னியல்கிண்கிணி. பொன்னாலே இயலப்பட்டகிண்கிணி. அழகுக்குடலாக மேலேபொன்தோய்த்துச் சமைத்த கிண்கிணியென்றபடி. பொன்னே உபாதாநமாகச் சமைத்ததென்னில் த்வநிக்கக்கூடாதிறே. அன்றிக்கே, பொன்வடத்திலே கோவைப்பட்ட கிண்கிணியென்னவுமாம். "மேலே சலன்சலனென்றிட" என்கையாலே, கிண்கிணியென்றவிது திரு அரையில் சாத்தும் கிண்கிணியையும், சேவடிக்கிண்கிணியையும் சொல்லுகிறது. சுட்டி- லலாடபூஷணம். இவற்றை, புறங்கட்டியென்றது, புறமென்று-இடமாய், அவற்றுக்கு அடைத்தஸ்த்தலங்களிலே கட்டியென்றபடி. "கண்கால்புறமகம்" என்கையாலே, புறமென்றசப்தம்-இடத்துக்குவாசகமிறே. தன்னியலித்யாதி. திருவரையில் கிண்கிணியினுடையவும் திருவடிகளில் சதங்கைகளினுடையவும் தனக்கு இயல்வானத்வநி சலன்சலனென்று த்வநிக்க. சலன்சலன் என்கிறவிது- அநுகாரசப்தம். மின்னியலித்யாதி. மின்னையியல்வாக வுடைத்தானமேகமானது கால்படைத்துக் கடுநடையிட்டுக்கொண்டு எதிரேவருமாபோலே. கீழ்- கிண்கிணி, சுட்டியென்றவை, "செங்கமலக்கழல்" என்கிறபாட்டிற்சொன்ன ஸர்வாபரணங்களுக்கு முபலக்ஷணமாய், திருமேனிக்கு பரபாகமான அவ்வாபரணதேஜஸ்ஸோடேகூட நடந்துவரவேணுமென்னு மபேக்ஷையைப்பற்ற இந்தத்ருஷ்டாந்த மருளிச்செய்தது. என்னிடைக்கித்யாதி. என்னுடைய வொக்கலையிலிருப்புக் காசைப்பட்டு ஓடிவந்து என்னை யணைத்துக்கொள்ளவேணும். இருகாற் சொல்லுகிறது-அதில் ஆதராதிசயத்தாலே. எம்பெருமானித்யாதி. முன்சொன்னவிடத்தில் அல்பம்விளம்பிக்கையாலே, என்னுடைய நாதனே வாரா அச்சோவச்சோ வென்கிறது. அச்சோவென்றது- அணைத்துக் கொள்ளென்றபடி. க.

மூ.—செங்கமலப்பூவிற் றேனுண்ணும்வண்டேபோல்
பங்கிகள்வந்துன்பவளவாய்மொய்ப்பச்

சங்குவில்வாடண்டுசக்கரமேந்திய
அங்கைகளாலேவந்தச்சோவச்சோ வாரத்தழுவாய்வந்தச்சோவச்சோ. ௨.

பதவுரை.

செங்கமலப்பூவில்— செந்தாமரை மலரிலே
தேன் உண்ணும்— மதுபாநம் பண்ணுகின்ற
வண்டே போல்— வண்டுகள்போலே
பங்கிகள்— சுருண்ட கேசங்கள்
வந்து— வந்து
உன்— உன்னுடைய
பவள வாய்— பவளம்போன்ற அதரத்தை
மொய்ப்ப— மொய்க்கும்படியாக
சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
வில்— ஸ்ரீசார்ங்கதநுஸ்ஸையும்
வாள்— "ஸ்ரீநந்தகம்" என்னும் வாளையும்
தண்டு— ஸ்ரீகௌமோதகீ கதையையும்
சக்கரம்— ஸ்ரீஸுதர்சநாழ்வானையும்
ஏந்திய— தரித்துக்கொண்டிருக்கிற
அம் கைகளாலே— அழகிய கைகளாலே
வந்து அச்சோ அச்சோ;
ஆர— பரிபூர்ணமாக
தழுவாய்— தழுவியருள வேணும்;
வந்து அச்சோ அச்சோ.

வ்யா. இரண்டாம்பாட்டு. செங்கமலமித்யாதி. செந்தாமரைப் பூவிலே மதுபாநம் பண்ணுகிற வண்டுகள் போலே. பங்கிகளித்யாதி. சுருண்ட திருக்குழல்கள் வந்து உன் திருப்பவளத்தை மொய்க்கும்படியாக. சங்கித்யாதி. ஆச்ரிதவிரோதி நிரஸநத்துக்கும் அழகுக்கு முடலாய் உனக்குப்பரிகைபே யாத்ரையாயிருக்கும் ஸ்ரீபஞ்சாயுதங்களை பூவேந்திறுற்போலே தரித்துக்கொண்டிருக்கு மவையாய், அவைதானும் மிகையாம்படி வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டும்படியான அழகையுடைய திருக்கைகளாலே வந்து அணைத்துக்கொள்ளவேணும். ஆரவித்யாதி. $அபர்யாப்தமாக வன்றிக்கே, பரிபூர்ணமாக வணைத்துக்கொள்ளவேணும். ... ... ... ... ... ... ௨.

மூ.—பஞ்சவர்தூதனாய்ப் பாரதங்கைசெய்து
நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு
அஞ்சப்பணத்தின்மேற் பாய்ந்திட்டருள்செய்த
அஞ்சநவண்ணனேயச்சோவச்சோ வாயர்பெருமானேயச்சோவச்சோ. ௩.

பதவுரை.

பஞ்சவர் தூதனாய்— பாண்டவ தூதனாய்
பாரதம்— பாரதயுத்தத்திலே
கை செய்து— உதவி செய்து
நஞ்சு உமிழ்— விஷத்தை கக்காநின்ற
நாகம்— காளியநாகமானது
கிடந்த— வஸித்துக்கிடந்த
நல் பொய்கை— க்ரூரமான பொய்கையிலே
புக்கு— புகுந்து
அஞ்ச— அஞ்சும்படியாக
பணத்தின்மேல்— அக்காளியனுடைய படங்களின்மேல்
பாய்ந்திட்டு— கொன்றுகுதித்து
(அவ்வளவிலே அவன் சரணம்புக)
அருள்செய்த— அவன்மேல் க்ருபைபண்ணின
அஞ்சனவண்ணனே! அச்சோ அச்சோ;
ஆயர் பெருமானே!— இடைக் குலத்துக் காசனே!
அச்சோ அச்சோ.

$ "பர்யாப்தமாக வன்றிக்கே" என்று சில ஸ்ரீகோசங்களில் பாடம்.

வ்யா. மூன்றாம்பாட்டு. பஞ்சவரித்யாதி. துர்யோதநாதிகளாலே நெருக்குண்டு; ராஜ்யாதிகளை யிழந்து, உன்னையொழிய வேறொரு துணையின்றிக்கே நின்ற பாண்டவர்களை வர்க்கும் பாதந்த்ரனாய்க்கொண்டு தூதகர்த்யத்திலே அதிகரித்து, துர்யோதநாதிகள் பக்கலிலே சென்று அவர்களையும் இவர்களையும் சேர்க்கப்பார்த்த விடத்தில் அவர்கள் இசையாமையாலே, 'ஆனால் யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் ஒருவர் ராஜ்யத்தை ஆளுங்கோள்'என்று சொல்லிப்போந்து, பின்பு பாண்டவர்களுக்காய் நின்று பாரதயுத்தத்திலே கையும் அணியும் வகுத்து யுத்தத்தை நடத்தி. நஞ்சித்யாதி. விஷத்தை யுமிழாநின்ற காளியனென்கிற ஸர்ப்பங்கிடந்த கொடிய பொய்கையிலே அத்தை மதியாமற் சென்றுபுக்கு. நற்பொய்கையென்றது- விபரீதலக்ஷணையாய், காளியவிஷதூஷித மாகையாலே க்ரூரமான பொய்கை யென்றபடி. அஞ்சவித்யாதி. "ஆய்ச்சிமார்களு மாயருமஞ்சிட" என்கிறபடியே இந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்ட அநுகூல ஜநங்களெல்லாரும் "என்னாகப்புகுகிறதோ" என்று பயப்படும்படியாக. "ஐந்தலைய பைந்நாகத்தலைப் பாய்ந்தவனே" என்கிறபடியே அந்தக்காளியனுடைய பணங்களின்மேலே சென்று குதித்து ந்ருத்தம் செய்து அவனை யிளைப்பித்து, (க) "க்ருபா ... ... வ்யவஸ்யது" என்று தன்னுடைய ப்ராணரக்ஷணத்துக்காக அவன் சரணம்புகுந்த பின்பு அவன் பக்கலிலே அருளைப்பண்ணின. அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டென்றது-காளியன்தானஞ்சும்படியாக அவன் பணத்தின்மேலே பாய்ந்தென்னவுமாம். அஞ்சநவண்ணனே. சரணாகதரக்ஷணம் பண்ணுகையாலே அஞ்சநம்போலே குளிர்ந்து புகர் பெற்ற திருமேனியை யுடையவனே யச்சோவச்சோ. ஆயர்பெருமானே. அமரர்பெருமானான மேன்மைக்கெதிர்த்தட்டாக ஆயர்பெருமானான நீர்மையையுடையவனே யச்சோவச்சோ. ௩.

மூ.—நாறிய சாந்த நமக்கிறைநல்கென்னத்
தேறியவளுந் திருவுடம்பிற்பூச
ஊறிய கூனினை யுள்ளே யொடுங்கவன்
றேறவுருவினாயச்சோவச்சோ வெம்பெருமான்! வாரா வச்சோவச்சோ. ௪.

பதவுரை.

நமக்கு— "நம் உடம்புக்குத் தக்கதாய்
நாறிய— பரிமளிதமாயிராநின்ற
சாந்தம்— சந்தநம்
இறை— கொஞ்சம்
நல்கு என்ன— கொடுக்கவேணும்" மென்று கூனியைக் கேட்க
அவளும்— அந்த கூனியும்
தேறி— மனம் தேறி
திரு உடம்பில்— திருமேனியிலே
பூச— நல்லசாந்தைப் பூச
அன்று— அப்போது
ஊறிய— அவள்முதுகில் புறப்பட்டிருந்த
கூனினை— கூனை [கூன்-குப்ஜத்வம்.]
உள்ளே ஒடுங்க— சரீரத்தினுள்ளே அழுந்தும்படி
ஏற உருவினாய்!— கைகளால்நிமிர்த்து உருவினவனே!
அச்சோ அச்சோ;
எம் பெருமான்!— எங்கள்குலத்துக்தரசே!
வாரா— வந்து,- அச்சோ அச்சோ.

வ்யா. நாலாம்பாட்டு. நாறியவித்யாதி. ¶ ஈரங்கொல்லியைக் கொன்று பரிவட்டங்கள் சாத்தி ஸ்ரீமதுரையிலே போய்ப்புகுந்தவளவிலே, கம்ஸனுக்குச் சாந்திட்டுப்போரும் கூனி,

(க) "க்ருபாமாத்ர மநோவ்ருத்தி: ப்ரஸீதமே." ¶ ஈரங்கொல்லி- கம்ஸனுடைய வண்ணான்.

சாந்துகொண்டுபோகா நிற்கச்செய்தே வழியிலே கண்டு, "அண்ணர்க்கும் நமக்கும் பூசு ளாம்படி சாந்திட வல்லையோ" என்ன; அபேக்ஷித்தது மறுக்கமாட்டாமையாலும் "வெண் ணெய் நாற்றத்திலே பழகின இவர்கள் சாந்தின் வாசி யறிவார்களோ" என்னுமதனாலும் மட்டமான சாந்துகளைக்காட்ட; (க) "ஸாகந்தமேதத்" இத்யாதிப்படியே அவற்றுக் கெல்லாம் ஒரு குறைசொல்லிக் கழித்து, (உ) "ஆவயோர்காத்ர ஸத்ர்சம் தீயதாமநு லேபநம்" என்று "அண்ணருடம்புக்கும் நம்முடம்புக்கும் அநுரூபமான பரிமளத்தையு டைய சாந்திலே அல்பம் தா" என்று அபேக்ஷிக்க; சாந்தை, தரமிட்டுக்கழித்தபடியையும் அபேக்ஷித்த சீர்மையையும் வடிவழகையும் கண்டு ஹர்ஷடையாய் "கம்ஸனுக்குக் கொடு போகிற வித்தை இவர்களுக்குக் கொடுத்தால் அவன் தண்டிக்கிற் செய்வதென்" என்று அஞ்சாதே நெஞ்சம்தேறி அவளும் உத்தமமான சாந்தை யெடுத்துத் திருமேனியிலே சாத்த. ஊறியவித்யாதி. அநந்யப்ரயோஜநமாக அவள் கிஞ்சித்கரிக்கையாலுண்டான ப்ரீதி யாலே "இவள் முதுகில் கூனை நிமிர்த்துவிடக்கடவோம்" என்று திருவுள்ளம் பற்றி அவள் முதுகிலே "வேர்விழுந்ததோ" என்னும்படி உறைத்துப் புறப்பட்டு நிற்கிற கூனை அவள் சரீரத்திலுள்ளே அடங்கும்படியாக அக்காலத்திலே நிமிர்த்து, திருக்கைகளாலே யுருவினவனே! அச்சோவச்சோ; எங்கள் குலத்துக்கு ஸ்வாமியானவனே வாராவச் சோ வச்சோ. வாரா- வந்து. ... ... ... ... ச.

மூ.—கழன்மன்னர் சூழக் கதிர்போல்விளங்கி
எழலுற்றுமீண்டே யிருந்துன்னைநோக்கும்
சுழலைப்பெரிதுடைத் துச்சோதனனை
அழலவிழித்தானேயச்சோவச்சோ வாழியங்கையனேயச்சோவச்சோ. ரு.

பதவுரை.

கழல் மன்னர்—வீரக்கழலையுடைய ராஜாக்கள்
சூழ— சுற்றும் ஸேவித்திருக்க
கதிர்போல்— ஸூர்யனைப்போலே
விளங்கி— ப்ரகாசித்துக்கொண்டு,
எழல் உற்று— எழுந்திருக்க முயன்று
மீண்டே— மறுபடியும்
இருந்து— கறுவுதலாலே தெரியாதபடி யிருந்து
உன்னை— உன்னை
நோக்கும்— நலிவதாகப் பார்த்தவனும்
பெரிது— பெரும்பாலும்
சுழல் உடை— சூழ்ச்சிகளைச்செய்யு
துச்சோதனனை— துர்யோதநனை
அழல— அத்யுஷ்ணமாக
விழித்தானே!— பார்த்தவனே!
அச்சோ அச்சோ;
ஆழி அம் கையனே!— திருவாழியை அழ கிய கையிலேந்தினவனே!
அச்சோ அச்சோ.

வ்யா. ஐந்தாம்பாட்டு. கழலித்யாதி. பாண்டவர்களுக்காக ஸ்ரீதூதெழுந்தருளு கிற விசேஷத்தைக் கேட்டு, வீரக்கழலிட்டு ஸமர்த்தராயிருக்கும் ராஜாக்கள் பலரும் சூழ ஸே வித்திருக்க, தான் ஸிஹ்மாஸநஸ்த்தனாய்க்கொண்டு, அபிஷேகாத்யாபரண தேஜஸ்ஸாலும் ப்ரதாபத்தாலும் ஆதித்யனைப்போல் விளங்கி, "க்ர்ஷ்ணன் வந்தால் ஒருவரும் எழுந்திருத் தல், குசலப்ரச்நம் பண்ணுதல் செய்யாதே கொள்ளுங்கோள்" என்று நியமித்து, பொய்யா

(க) "ஸாகந்தமேதத்." (உ) "ஆவயோர்காத்ர ஸத்ர்சம் தீயதாமநுலேபநம்"

ஸங்கமிட்டு வைத்திருக்கிற வளவிலே, எழுந்தருளிச் சென்று புகுந்தபோது, இருந்த ராஜாக்களெல்லாரும் (க) "அவஸர ப்ரதிபேதிரே" என்கிறபடியே எழுந்திருப்பார் அநுவர்த்திப்பாராக, தானும் அடைய நடுங்கி எழுந்திருக்க வுத்யோகித்து, மீண்டும் கறுவுதலாலே தெரியாதபடியிருந்து. உன்னையித்யாதி. பொய்யாஸநம் முதலாக முன்பு பண்ணி வைத்த சூழ்ச்சிகளாலே நலிவதாகக்கோலி உன்னைப்பார்த்த துர்யோதநனை, உன்னகவாயிற் சீற்றமெல்லாம் பார்க்கிற பார்வையிலே தோற்றும்படி அத்யுஷ்ணமாகப் பார்த்தவனே யச்சோவச்சோ. ஆழியங்கையனித்யாதி. திருவாழியை அழகிய திருக்கையிலே யுடையவனே அச்சோவச்சோ. ... ... ... ... ... ரு.

மூ.—போரொக்கப்பண்ணியிப் பூமிப்பொறைதீர்ப்பான்
தேரொக்கவூர்ந்தாய்! செழுந்தார்விசயற்காய்க்
காரொக்குமேனிக்கரும் பெருங்கண்ணனே!
ஆரத்தழுவாய்வந்தச்சோவச்சோ வாயர்கள்போரேறே யச்சோவச்சோ. ௬.

பதவுரை.

இப் பூமி— இந்த பூமியின்
பொறை— பாரத்தை
தீர்ப்பான்— ஒழிப்பதற்காக
போர் ஒக்கப் பண்ணி— துர்யோதநாதிகளை யுத்தத்திலே பொருந்தும்படி பண்ணி
செழும்— செழுமைதங்கிய
தார்— தும்பைமாலையை யுடைய
விசயற்கு— "விஜயன்" என்னும் அர்ஜுநனுக்கு
ஆய்— ஸஹாயமாய்நின்று
தேர்— அவன் தேரை
ஒக்க— எதிரிகள் தேருக்கு ஸமமாக
ஊர்ந்தாய்!— நடத்தினவனே!
கார் ஒக்கும்— மேகத்தை ஒத்திராநின்ற
மேனி— திருமேனியை உடையனாய்
கரு— கறுத்து
பெரு— கர்ணாந்தவிச்ராந்தமான
கண்ணனே!— கண்களை யுடையவனே!
வந்து— அருகேவந்து
ஆர— பூர்ணமாக
தழுவாய்— தழுவியருளவேணும்;
அச்சோ அச்சோ;
ஆயர்கள்— இடைக்குலத்திற் பிறந்தவனாய்
போர்— யுத்தோந்முகமான
ஏறே!— ரிஷபம்போல் செருக்கியிரா நின்றவனே!
அச்சோ அச்சோ.

வ்யா. ஆறும்பாட்டு. போரித்யாதி. பதினொரு அக்ஷௌஹிணிபரிகரமும் நூறு ராஜாக்களும் பீஷ்மத்ரோணாதிகளுமான அத்திரளோடு ஸமமாக ஏழக்ஷௌஹிணி பரிகரத்தையும், பாண்டவர்களைவரையுங் கொண்டு யுத்தம் பண்ணி யென்னுதல்; "பாண்டவர்களுக்கு ஓர் கோல்குத்துநிலமும் கொடோம்" என்று வெட்டிதாக வார்த்தை சொன்னபின்பு துர்யோதநாதிகளை யுத்தத்திலே பொருந்தும்படியாகப் பண்ணி யென்னுதல். இப்பூமிப்பொறை தீர்ப்பான். இதுதான் செய்தது, அதார்மிகராய் ஆஸுரப்ரக்ருதிகளாயிருப்பாரெல்லாரையும் யுத்தபூமியிலே கொன்று, இந்த பூமியினுடைய பாரத்தைப் போக்குகைக்காக வாய்த்து. "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்" என்கையாலே அவதார ப்ரயோஜநமு மிதுவேயிறே. தேரித்யாதி. யுத்தத்துக்கும் விஜயத்துக்கும் தகுதியாகச்சூடும் தும்பை, வாகைமுதலான அழகியமாலையையுடைய அர்ஜுநனுக்கு (உ) "யஸ்யமந்த்ரீ ச கோப்தா ச"

(க) "அவஸர ப்ரதிபேதிரே" (உ) "யஸ்யமந்த்ரீ ச கோப்தா ச"

இத்யாதிப்படியே ஸர்வமுமாய்நின்று, ப்ரதிபக்ஷ பூதரானவர்களுடைய அநேகம் தேருக்கு ஸமமாக அவனுடைய தேரை நடத்தினவனே. "ஆயுதமெடுக்க வொண்ணாது" என்கையாலே ஸாரத்யத்திலே அதிகரித்து, தேர்க்காலாலே ப்ரதிபக்ஷஸேனையைத் தூளாக்கினுய்த்து. "கொல்லாமாக்கோல்" இத்யாதிப்படியே ஸாரத்யம் பண்ணின ஸாமர்த்யத்தாலேயிறே பூபாரநிரஸநம் பண்ணிற்று. காரோக்குமித்யாதி. வர்ஷுகவலாஹகம்போலேயிருக்கிற திருமேனியை யுடையனாய், * கரியவாகிப் புடைபரந்திருக்கிற திருக்கண்களை யுடையனு யிருக்கிறவனே. இத்தால்- பூபாரத்தைப் போக்குகையாலும், ஆச்ரிதனான அர்ஜுநனை விஜயியாக்குகையாலு முண்டான ஹர்ஷம வடிவிலும் கண்ணிலும் தோற்றும்படி நின்ற நிலையைச் சொல்லுகிறது. ஆரவித்யாதி. என்னுடைய அபிநிவேசம் தீரும்படி வந்து பூர்ணமாக வணைத்தருளவேணும். ஆயர்களித்யாதி. கோபர்க்கு பவ்யனாய், அத்தாலே யுத்தோந்முகமான ரிஷபம்போலே செருக்கியிருக்கிறவனே யச்சோவச்சோ. ... ... சு

மூ.—மிக்கபெரும்புகழ் மாவலிவேள்வியில்
தக்கதிதன்றென்று தானம்விலக்கிய
சுக்கிரன்கண்ணைத் துரும்பாற்கிளறிய
சக்கரக்கையனேயச்சோவச்சோ சங்கமிடத்தானேயச்சோவச்சோ. எ.

பதவுரை.

மிக்க பெரு— மிகவும் பெருத்த
புகழ்— (ஔதார்யத்தாலுண்டான) கீர்த்தியையுடைய
மா வலி— மஹாபலியின்
வேள்வியில்— யாகத்திலே
(சென்று மூவடியாசித்தவளவிலே,)
இது— "இவனுக்கு தாநம்செய்வது
தக்கது அன்று என்று—தகுந்ததன்று" என்று
தானம்— பூமிதாநத்தை
விலக்கிய— தடுத்த
சுக்கிரன்— அஸுரகுருவான சுக்ரனுடைய
கண்ணை— கண்ணை
துரும்பால் — திருக்கையில் பவித்ரத்தின் நுனியாலே
கிளறிய— கலக்கின
சக்கரக்கையனே!— திருவாழியைக்கையிலே உடையவனே!
அச்சோ அச்சோ—;
சங்கம்— ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
இடத்தானே!— இடக்கையில் தரித்தவனே!
அச்சோ அச்சோ.

வ்யா. ஏழாம்பாட்டு. மிக்கவித்யாதி. ஔதார்யத்தாலே மிகவும் பெரிய புகழையுடையனான மஹாபலியஜ்ஞவாடத்திலே இந்த்ரனுக்காக வாமநவேஷத்தைக்கொண்டு சென்று "கொள்வன், நான், மாவலி, மூவடி, தா" என்ன; "புலன்கொண் மாணாய்" என்கிறபடியே ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமான விவனுடையவடிவழகாலும், அநந்விதமாகச்சொன்ன (க)முக்தோக்தியாலும் மஹாபலி அபஹ்ருதசித்தனாய், இவனபேக்ஷித்தது கொடுப்பதாக உத்யோகிக்கிறவளவிலே, குருவான சுக்ரன், இவன் வடிவும், வாத்தும், சொன்ன வார்த்தையும் அதிமாநுஷமா யிருக்கையாலே நிரூபித்து, "இவன் ஸர்வேச்வரன், தேவகார்யம் செய்யவந்தான், உன் ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கவந்தான்; ஆனபின்பு, நீ தாநம் பண்ணுகிற விது தகுதியன்று" என்று தாநத்தை நிரோதிக்க; அவன் அதுகேளாதே உதகம்

(க) 8-ம் பாட்டு.

யண்ணப் புகுந்தவளவிலே, உதகபாத்ர த்வாரத்திலே சுக்ரன் ப்ரவேசித்து உதகம் விழாத படி தகைய; அந்த த்வாரசோதநம் பண்ணுவாரைப்போலே திருக்கையில் திருப்பவித்ரத்தி னுடைய அக்ரத்தாலே அவன் கண்ணைக்கலக்கின திருவாழியைக் கையிலே யுடையவனே. "ஆரும்பாற் கிளறிய சக்கரக்கையன்" என்கையாலே - அந்த பவித்ராக்ரமாய்ப் புகுந்து அவன் கண்ணைக்கலக்கிற்று - '*கருதுமிடம் பொரும் திருவாழி' என்று தோற்றுகிறது. சங்கமிடத்தானே. ஒருகாலும் திருவாழிக்கும் ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கும் பிரிவில்லையிறே. ஆகையாலே, அவன் வலங்கையிலே தோன்றும்போது இவன் இடங்கையிலே தோன்றும் படியாயிறே யிருப்பது. அச்சோவச்சோ. இப்படி யிருந்துள்ள கையு மாழ்வார்களுமான சேர்த்தியோடேவந்து அணைத்துக்கொள்ள வேணுமென்கை. ... ... ... எ.

மூ.—என்னிதுமாயமென் னப்பனறிந்திலன்
முன்னையவண்ணமே கொண்டளவாய்$யென்ன
மன்னுநமுசியை வானிற்சுழற்றிய
மின்னுமுடியனேயச்சோவச்சோ வேங்கடவாணனேயச்சோ வச்சோ. அ.

பதவுரை.

(திருக்கையிலே உதகம் விழுந்தவுடனே திருவடிகளை வளர்த்து அளக்கப்புக;)
இது— "நீ இப்படிசெய்வது
என் மாயம்— என்ன மாயமாயிராநின்றதே!
என் அப்பன்— என்னுடைய தகப்பன்
அறிந்திலன்— (நீ இப்படிசெய்வாய் என்று முன்பு) அறியவில்லை;
(ஆதலால்;)
முன்னைய வண்ணமே கொண்டு— யாசிக்கும் போதிருந்த வடிவையே கொண்டு
அளவாய்— அளக்கக்கடவாய்"
என்ற— என்றுசொன்ன

மன்னு— தான்பிடித்த நிலைவிடாதேநிற்கு மவனான
நமுசியை— (மஹாபலிபுத்ரனான) நமுசியை
வானில்— ஆகாசத்திலே
சுழற்றிய— சுழற்றியெறிந்தவனாய்
மின்னு— விளங்காநின்ற
முடியனே!— திருவபிஷேகத்தை யுடையனானவனே!
அச்சோ அச்சோ-;
வேங்கடம்— திருவேங்கடமலையிலே
வாழ் நனே!—வாழும்படியானவனே!
அச்சோ அச்சோ.

வ்யா. எட்டாம்பாட்டு. என்னித்யாதி. திருக்கையிலே உதகம் விழுந்தவநந்தரம் திருவடிகளை வளர்த்து அளக்கப்புகவாறே, இத்தைக்கண்ட மஹாபலிபுத்ரனான நமுசி ஓடிவந்து "இதுவென்" என்று வளருகிற திருவடிகளைத் தகைய; "நீ தகைகிறதென்? நான் உதகமேற்றது அளந்துகொள்ள வேண்டாவோ" என்ன; "நீ செய்தது க்ர்த்ரிம மன்றோ" என்ன; "நீ க்ர்த்ரிமமென்பானேன்? என்னுடைய ப்ரஹ்மசர்ய வேஷத்தை யும் அர்த்தித்வத்தையும்கண்டு உன்னுடையபிதா உதகதாநம்பண்ணிப்போந்ததுபொய்யோ?" என்ன; "என்னுடைய பிதாவானவன் உன்னுடைய வஞ்சநத்திலேயகப்பட்டு உன்னுடைய படியொன்று மறிந்திலன்" என்ன; "நான் செய்தது வஞ்சநமென்று நீ சொல்லுகிறது என்கொண்டு?" என்ன; "வஞ்சநமன்றாகில் நீ முற்பட்ட வடிவைக்கொண்டு அளவாய்"

$ "யென்ற" என்னும் பாடம்.

என்ன; "முன்னைவண்ணம் கூடுமோ, விகாரியான சரீரமன்றோ" என்றவளவிலும், தான் பிடித்த நிலைவிடாதே நின்ற நமுசியை ஆகாசத்திலே சுழற்றி யெறிந்துவிட்ட உஜ்ஜ்வலமான திருவபிஷேகத்தை யுடையவனே. திருவுலகளந்த வ்ருத்தாந்தத்தாலே சேதநருடைய அநந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களை அறுத்தபின் பார்த்து சேஷித்வ ப்ரகாசகமான திருவபிஷேகமொளிபெற்றது. வேங்கடமித்யாதி. "அன்று ஞாலமளந்தபிரான் - சென்று சேர் திருவேங்கடமாமலை" என்னும்படி அந்த வாமநாவதார சேஷ்டிதமடையத் தோன்றத் திருமலைக்கு நிர்வாஹகனாய் நிற்கிறவனே! அச்சோவச்சோ. ... ... ... அ.

மூ.—கண்டகடலுமலையுமுலகேழும்
‡முண்டத்துக்காற்ரு முகில்வண்ணவோவென்று
இண்டைச்சடைமுடியீசனிரக்கொள்ள
மண்டைநிறைத்தானேயச்சோவச்சோ மார்வின்மறுவனே யச்சோவச்சோ.

பதவுரை.

இண்டை— நெருங்கியிராநின்ற
சடைமுடி— ஜடாபந்தத்தையுடைய
ஈசன்— ருத்ரனானவன்
கண்ட— "கண்ணாற்காணப்பட்ட
கடலும்— கடல்களும்
மலையும்— மலைகளும்
ஏழு உலகும்— ஸப்தலோகங்களும்
(ஆகியஎல்லாவற்றையுமிட்டு நிறைக்கப் பார்த்தாலும்)
முண்டத்துக்கு— என்கையில் கபாலத்துக்கு
ஆற்ரு — போராதாயிராநின்றன;
ஓ! முகில்வண்ணா!!— ஓ! தாநத்தில் மேகத்தின்படியை ஒத்தவனே!
என்று— என்றிப்படிதன் ஆர்த்திக்கீடாகக்
இரக்கொள்ள—யாசித்தவளவிலே [கதறி
மண்டை— (அக்) கபாலத்தை
நிறைத்தானே!— பூரித்தவனே!
அச்சோ அச்சோ-;
மார்வில்— திருமார்பிலே
மறுவனே!— ஸ்ரீவத்ஸத்தை யுடையவனே!
அச்சோ அச்சோ.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. கண்டவித்யாதி. கண்ணாற்கண்ட கடல்களும் மலைகளும் ஸப்த லோகங்களும் எல்லாவற்றையுமிட்டு நிறைக்கப்பார்க்கிலும் என்கையில் கபாலத்துக்குப் போராதா யிராநின்றன. முண்டம் - கபாலம். இத்தால் - கண்டவிடமெங்கும் பிக்ஷைபுகுந்து திரிந்தும் நிறையக்காணாமையாலே இதினுடைய துஷ்பூரதையைச் சொன்னபடி. அன்றிக்கே, கண்டகடலும்மலையு முலகேழும் தட்டித்திரிந்துபிக்ஷைபுகுந்தவிடத்திலும்என் கையில் கபாலத்துக்குப் போருகிறதில்லை யென்னவுமாம். முகில்வண்ண. ஜலஸ்தலவிபாகம்பாராமல் உபகரிக்கும் மேகம்போன்ற ஔதார்ய ஸ்வபாவத்தை யுடையவனே. இத்தால்- நீ நிறைக்கிலொழிய நிறைக்கவல்லாரில்லை யென்கை. ஓவென்று. தன் ஆர்த்தி தோற்றக் கூப்பிட்டு. இண்டையித்யாதி. நெருங்கப்பின்னின ஜடாபந்தத்தையுடையனாய் ஈச்வராபிமாநியான ருத்ரன். இத்தால் - இவனுடைய ஈச்வரத்வம் தபஃபலமாய் வந்ததென்னுமிடமும் இவனுடைய துர்மாநமும்சொல்லுகிறது. இரக்கொள்ள. (க) தத்ர நாராயண ஸ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசிதஃ" என்கிறபடியே வந்து பிக்ஷையிரக்க. இரக்கொள்ள என்று

‡ "உண்டத்துக்காற்ரு" என்றும் பாடம். (க) "தத்ரநாராயணச்ச்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசிதஃ."

ஒரு முழுச்சொல்லாய், இரக்கவென்றபடி. மண்டை நிறைத்தானே. (க)“ விஷ்ணுப்ரஸாதாத் ஸுச்ரோணி! கபாலம் தத்ஸஹஸ்ரதா । ஸ்புடிதம் பஹுதா யாதம் ஸ்வப்நலப்தம் தநம் யதா ” என்கிறபடியே பஹுதாவாக ஸ்புடிதமாய், போனவழிதெரியாதே போம்படி, “ ஊனுடை செங்குருதியால் நிறைத்த ” என்கிறபடியே திருமார்வில் செங்குருதியாலே அந்தக்கபாலத்தை நிறைத்தவனே. மார்வில் மறுவனே. ஸர்வேச்வரத்வசிஹ்நமான ஸ்ரீவத்ஸத்தைத் திருமார்விலே யுடையவனே அச்சோவச்சோ.

அதவா, “ உண்டத்துக்கு ” என்று பாடமானபோது, “ கண்ட ” இத்யாதிக்கு-கண்டகடலிலும் மலையிலும் உலகேழிலும் சாபோபஹதனாய்த் திரிந்து பிக்ஷை புகுந்து “ முடைத்தலையூன் ” என்கிறபடியே துர்கந்தியான கபாலத்தில், அத்தை யுண்டுண்டு ஜீவித்துத்திரிந்து, அதுக்கு ஆற்றாதே, நெருங்கப்பின்னின ஜடையையுடைய ஈச்வராபிமாநியான ருத்ரன் அந்த ஆற்றாமையைப்பரிஹரிக்கைக்காக முகில்வண்ணாவோவென்று உன்னுடைய வெளதார்யகுணத்தைச் சொல்லி ஆர்த்தியோடே கூப்பிட்டு, “ இத்தைப் போக்கவேணும் ” என்று அர்த்திக்கவளவிலே, “ நம்மையொழிய விவனுக்கு கதியில்லை ” என்று “ அரர்க்குப் பிச்சைபெய் கோபாலகோளரி ” என்கிறபடியே அவன்கையில்கபாலத்தை நிறைத்தவனே யென்னுமாம். ... ... ... ... ... ... கூ.

மூ.—துன்னியபேரிருள் சூழ்ந்துலகைமூட
மன்னியநான்மறைமுற்றுமறைந்திடப்
பின்னிவ்வுலகினிற்பேரிருணீங்கவன்
றன்னமதானானேயச்சோவச்சோ வருமறைதந்தானேயச்சோவச்சோ. ய.

பதவுரை.

துன்னிய— நிரந்தரமான
பேர் இருள் — அஜ்ஞானமாகிற மஹாந்தகாரமானது
சூழ்ந்து— பரவி
உலகை— உலகத்தை
மூட— மூடும்படியாக
மன்னிய— அநாதியான
நான்கு மறை— நால்வேதங்கள்
முற்றும்— முழுதும்
மறைந்திட— திரோஹிதங்களாய்ப்போக
பின்— பின்பு
இவ்வுலகினில்— இந்தலோகத்தில் உண்டான
பேர் இருள்— பெருத்த இருளானது
நீங்க— நீங்கும்படி
அன்று— அக்காலத்திலே
அன்னமது ஆனானே!— ஹம்ஸமாய் வந்து தோன்றினவனே!
அச்சோ அச்சோ—;
அரு மறை— துர்லபமான வேதத்தை
தந்தானே!— தந்தருளினவனே!
அச்சோ அச்சோ.

வ்யா. பத்தாம்பாட்டு. துன்னியவித்யாதி. தேஜஸ்ஸினுடைய அஸந்நிதாநத்தில் திமிரம் வ்யாப்தமாமாபோலே கர்மப்ரஹ்ம ஸ்வரூபாதிகளுக்குக் கண்காட்டியான வேதம் போகையாலே நெருங்கின அஜ்ஞாநரூப மஹாந்தகாரமானது வ்யாப்தமாய்க்கொண்டு லோக

(க) “ விஷ்ணுப்ரஸாதாத் ஸுச்ரோணி ! கபாலம் தத்ஸஹஸ்ரதா - ஸ்புடிதம் பஹுதாயாதம் ஸ்வப்நலப்தம் தநம் யதா. ”

த்தை யெங்கும்மறைக்கும்படியாக. மன்னியவித்யாதி. நித்யமாய் ‡ரிகாதிபேதத்தாலே நாலு வகைப்பட்டிருந்துள்ள வேதமெல்லாம் திரோஹிதமாய்விட. பின்னித்யாதி. பின்பு இந்த லோகத்திலுண்டான மஹாந்தகாரமானது நீங்கும்படியாக. அன்றித்யாதி. அக்காலத்திலே வேதத்தை வெளிப்படுத்துகைக்காக ஸாராஸார விவேகசக்திகமான ஹம்ஸமாய்வந்து தோற்றினவனே. அருமறையித்யாதி. உன்னைப் பெறிலும் பெறுதற்கரிதான வேதத்தை உபகரித்தவனே! அச்சோ வச்சோ. ... ... ... ... ... ௰.

அ. நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ—நச்சுவார்முன்னிற்கு நாராயணன்றன்னை
அச்சோவருகவென்றாச்சியுரைத்தன
மச்சணிமாடப்புதுவைக் கோன் பட்டன்சொல்
நிச்சலும்பாடுவோர் நீள்விசும்பாள்வரே. கக.

பதவுரை.

நச்சுவார்— தன்னைக்காண விரும்புகிறவர்களுடைய
முன் நிற்கும்— முன்னேவந்து நிற்கிற
நாராயணன் தன்னை— ஸ்ரீ மந்நாராயணனை
அச்சோ வருக என்று—அணைத்துக்கொள்ள வரவேணுமென்று
ஆச்சி— மாதாவான யசோதை
உரைத்தன— அழைத்துச் சொன்ன பாசுரங்களை
மச்சு அணி மாடம் — பலநிலமான மாடங்களையுடைய[மச்சு-ஒருவிதக் கட்டிடம்.]
புதுவை— ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு
கோன்— ஸ்வாமியாய்
பட்டன்— ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார்
சொல்— அருளிச்செய்த இத்தை
நிச்சலும்— ஸர்வகாலமும்
பாடுவோர்— அன்புடன் ஓதவல்லவர்கள்
நீள் விசும்பு — பரமாகாசமென்னும் பரமபதத்தை
ஆள்வர்— நிர்வஹிக்கக் கடவர்கள்.

வ்யா. நச்சுவாரித்யாதி. ஜந்மவர்த்தாதிகளாலுண்டான தாதம்யவிபாகம் பாராதே, தன்னையாசைப்பட்டவர்களெல்லார்க்கும் அவர்களாசைப்பட்ட வடிவைக்கொண்டு முன்னே வந்துநிற்கும் நாராயணன் தன்னை. அச்சோவித்யாதி. அவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்த சைசவாநுகுணமாக அவன் தன்னை யணைத்துக் கொள்ளுகையில் அபேக்ஷை தோற்ற அச்சோவச்சோவென்றும்வருகவென்றும்தாயானயசோதைப்பிராட்டி சொன்னபாசுரங்களை. மச்சணியித்யாதி. பலநிலமான மாடங்களையுடைய ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரருளிச்செய்தவித்தை. நிச்சலும்பாடுவோர். ப்ரீதியுக்தராய்க் கொண்டு $போகரூபமாகச் சொல்லுமவர்கள், காலதத்த்வமுள்ளதனையும் பரமாகாசசப்தவாச்யமான பரமபதத்தை ஸ்வாதீநமாக நடத்தப்பெறுவர். அதாவது. அங்குள்ள ஸகலபோகத்துக்கும் தாங்களே நிர்வாஹகராவரென்றபடி. ... ... ... ... கக.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

———(*)———

அடிவரவு.—பொன் செங்கமலம் பஞ்சவர் நாறிய கழல் போர் மிக்க வென்னிது கண்ட துன்னிய நச்சு வட்டு.

ஆ திருமொழி- அ-க்கு, பாட்டு- கூ௦.

‡ ஜாதிபேத. $ போகரூப.

அ. கீழிற்றிருமொழியிலே - யசோதைப்பிராட்டி, இவனுடைய சைசவாநுகுணமாக முன்னே யோடிவந்து மேல்விழுந்து அணைத்துக்கொள்ளும் ரஸத்தை யநுபவிக்க வாசைப்பட்டு அச்சோ வென்கிற தன்னுடைய உக்தியாலும் அதுக்கு அநுகுணமான தன்னுடைய ஹஸ்தமுத்ரையாலும் வந்தணைத்துக்கொள்ளவேணுமென்று அவனை யபேக்ஷித்து அந்த ரஸத்தை யநுபவித்தபடியை, தம்முடைய ப்ரேமாநுகுணமாக, தாமும் அப்படியே அபேக்ஷித்து அநுபவித்தாராய் நின்றார்; அவ்வளவன்றிக்கே, அவன் தன்னுகப்பாலே யோடிவந்து முதுகிலே மேல்விழுந்து அணைத்துக்கொள்ளும் சேஷ்டிதரஸத்தையும் அநுபவிக்க வாசைப்பட்டு, "புறம்புல்குவான்" என்று அதுதன்னை அவனைக்குறித்தபேக்ஷித்து, அவனும் அப்படிசெய்ய அவளநுபவித்த ப்ரகாரத்தை, அவ்வளவுமல்லாத ப்ரேமத்தையுடைய தாம், அந்த சேஷ்டிதத்தை யநுபவிக்கையிலுண்டான ஆசையாலே அவனுடையமேன்மையையும் நீர்மையையும் சொல்லிப்புகழ்ந்துகொண்டு, "புறம்புல்குவான், புறம்புல்குவான்" என்று பலகாலுமபேக்ஷித்து, தத்காலம்போலே தர்சித்து ப்ரீதரா யநுபவிக்கிறா ரித்திருமொழியில். ... ... ... ... ... *

மூ.—வட்டுநடுவே வளர்கின்றமாணிக்க
மொட்டுநுனையின்முளைக்கின்றமுத்தேபோல்
சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்கவென்
குட்டன்வந்தென்னைப்புறம்புல்குவான் கோவிந்தனென்னைப்புறம்புல்குவான். க.

பதவுரை.

வட்டு நடுவே — இரண்டு நீலரத்ந வட்டின்
வளர்கின்ற— வளராநிற்கிற [நடுவே
மாணிக்கம்— மாணிக்கத்தால் செய்யப்பட்ட
மொட்டு— மொட்டினுடைய [மொட்டு- குஹ்யாவயவம்.]
நுனையில்— நுனியிலே
முளைக்கின்ற— அரும்பியாநிற்கிற
முத்து போல்— முத்துக்கள்போலே
சொட்டுச்சொட்டு என்ன-"சொட்டுசொட்டு" என்று
துளிக்கத்துளிக்க— (உள்ளில்நின்றும் புறப்படுகிற ஜலபிந்துக்கள்) பலகாலும்துளிக்க
என்— எனக்கு பவ்யனான
குட்டன்— குழந்தையானவன்
வந்து— தானாகவேவந்து
என்னை— என்னை
புறம்புல்குவான்— முதுகிலணைத்துக்கொள்வானாக; (அல்லது;) முதுகிலணைத்துக் கொள்ளாநின்றான்.
கோவிந்தன்— பசுமேய்க்கப்பிறந்தவன் என்னைப்புறம்புல்குவான்.

வ்யா. முதற்பாட்டு. வட்டித்யாதி. இரண்டு நீலரத்நவட்டின் நடுவே வளராநிற்பதொரு நீலரத்நத்தாலுண்டான மொட்டினுடைய அக்ரத்திலே அரும்பியாநிற்கிற முத்துக்கள் போலே. நீலரத்ந மொட்டென்றது - நிறத்தையும் ஆகாரத்தையும்பற்ற. சொட்டித்யாதி. உள்ளினின்றும் புறப்படுகிற ஜலபிந்துக்களிற்று முறிந்து சொட்டுச்சொட்டென்னப் பலகாலும் துளியாநிற்க. சொட்டுச் சொட்டென்கிற விது அநுகாரம். என்குட்டனித்யாதி. என் பிள்ளைவந்து என்னைப் புறம்புல்குவான். கோவிந்தன். ஸௌலபனானவன் என்னைப் புறம்புல்குவான். புறமென்று - முதுகு. புல்குதலாவது - தழுவுகை. புல்குவான் என்று- அபேக்ஷிக்கை. அன்றிக்கே, புல்குவான் என்றது- புல்குகிறவ னென்றபடி. அப்போது - இத்தலை அபேக்ஷிக்கவன்றிக்கே, அவன் தானேவந்து புல்குகிறபடியைச் சொல்லுகிறதாம். இது " ஆழிப்பிரான் புறம்புல்கிய " என்கிற நிகமத்துக்கு மிகவும்சேரும். ... ... க.

மூ.—கிண்கிணிகட்டிக் கிறிகட்டிக் கையினில்
கங்கணமிட்டுக்கழுத்திற்றோடர்கட்டித்
தன்கணத்தாலே சதிராநடந்துவந்து
என்கண்ணனென்னைப்புறம்புல்குவா னெம்பிரானென்னைப்புறம்புல்குவான். ௨.

பதவுரை.

கிண்கிணி— சதங்கையை
கட்டி— திருவரையில் கட்டியும்
கிறி— சிறுப்பவளவடத்தை
கட்டி— முன்கையிலே கட்டியும்
கையினில்— புஜத்திலே
கங்கணம்— திருத்தோள்வளையை
இட்டு— சாத்தியும்
கழுத்தில்— கண்டத்திலே
தோடர்—கண்டிகையை
கட்டி— சாத்தியும்
தன் கணத்தாலே— அந்த திருவாபரணத் திரளோடே
சதிரா— அழகிதாக
நடந்து வந்து— நடந்து வந்து
என்— என்னுடைய
கண்ணன்— கண்ணனானவன்
என்னைப் புறம்புல்குவான்;
எம் பிரான்— எனக்குஸ்வாமியானவன்
என்னைப்புறம்புல்குவான்.

வ்யா. இரண்டாம்பாட்டு. கிண்கிணியித்யாதி. திருவரையிலே கிண்கிணியைக்கட்டித் திருமுன்கையிலே கிறியைக்கட்டி. கிறி- சிறுப்பவள வடம். கங்கணமித்யாதி. திருத்தோள் வளையிட்டுத் திருக்கழுத்திலே சங்கிலியாகிற வாபரணத்தைச்சாத்தி.தன்கணத்தாலே. திருவா பரணத் தன்னுடைய திரளோடே. திருவாபரண ப்ரகரணமாகையாலே அநுக்தமான திருவா பரணங்களையும் கூட்டி, கணமென்கிறது. அன்றிக்கே, தன்கண்ணாலே என்னைக் கடாக்ஷி த்துக்கொண்டென்னுதல். அத்து- சாரியை. சதிராநடந்துவந்து. நானறியாதபடி நடந்து வந்து. அன்றிக்கே, அழகிதாக நடந்துவந்தென்னுதல். என்கண்ணன். எனக்கு ஸுலப னானவன், என்னைப் புறம்புல்குவான். எம்பிரான். எனக்கு ஸ்வாமியானவன், என்னைப் புறம்புல்குவான். ... ... ... ... ... ... ௨.

மூ. — கத்தக்கதித்துக் கிடந்தபெருஞ்செல்வம்
ஒத்துப்போதிந்துகொண் டுண்ணாதுமண்ணாள்வான்
கோத்துத்தலைவன் குடிகெடத்தோன்றிய
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவானுயர்களேறென்புறம்புல்குவான். ௩.

பதவுரை.

கத்தக்கதித்து கிடந்த— மிகவும் கொழுத்துக் கிடந்த
பெரும் செல்வம்— பெரிதான ஐச்வர்யத்தை
ஒத்து— பாண்டவர்களோடு ஒத்து
பொதிந்துகொண்டு— நெஞ்சுபொருந்திக் கொண்டு
உண்ணாது— ஜீவியாமல்
மண்— பூமிப்பரப்படங்கலும்
ஆள்வான்— தானொருவனுகவே ஆளுவதாக யோசித்திருந்தவனுய்
கொத்து — துச்சாஸநாதி ப்ராதர்பந்து ஸமூஹத்துக்கு

தலைவன் — முதல்வனாயிருந்துள்ள துர்யோதநன்
குடிகெட— ஸந்ததி அற்றுப்போம்படி
தோன்றிய— ஸாரத்யம்செய்து விளங்கின
அத்தன்— ஸ்வாமியானவன்
வந்து என்னைப் புறம்புல்குவான்;
ஆயர்கள்— இடைக்குலத்துக்கு
ஏறு— தலைவனானவன்
என்புறம்புல்குவான்.

வ்யா. மூன்றாம்பாட்டு. கத்தவித்யாதி. அஹம்மமதைகளாலே உனக் கெனக் கென்று பிணங்கும்படி. கொழுத்துக்கிடந்த மஹைதைச்வர்யத்தை. கதிப்பு - கொழுப்பு. அன்றிக்கே, "தக்கத்தடித்து, பக்கப்பருத்து" என்னுமாபோலே, கத்தக்கதித்தென்று ஒரு முழுச்சொல்லாய், மிகவும் கொழுத்துக்கிடந்த மஹைதைச்வர்யத்தை யென்னவுமாம். ஒத்தித்யாதி. பந்துக்களான பாண்டவர்களோடேகூடி நெஞ்சு பொருந்திக்கொண்டு ஜீவியாதே. மண்ணாள்வான். பூமிப்பரப்படங்கலும் தானே ஆள்வானாகப் பாரித்திருந்த. கோத்துத்தலைவன். துச்சாஸநாதிகளான ப்ராதாக்களும் பந்துக்களுமானவர்களுக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு ப்ரதாநனாயிருந்துள்ள துர்யோதநனுடைய. குடிகெட. குலமாக நசிக்கும்படி. தோன்றியவித்யாதி. (க) "பார்த்தம் ரதிநமாத்மாநஞ்ச ஸாரதிம் ஸர்வலோகஸாக்ஷிகம் சகார" என்கிறபடியே பார்த்தனுக்கு ஸாரதியாய்க்கொண்டு ப்ரகாசகனான ஸ்வாமியானவன், வந்து என்னைப்புறம்புல்குவான். ஆயர்களித்யாதி. கோபர்களுக் கெல்லாம் தலைவனானவன், என்னைப் புறம்புல்குவான். ... ... ... ௩.

மூ—நாந்தகமேந்திய நம்பி சரணென்று
தாழ்ந்த தனஞ்சயற் காகித் தரணியில்
வேந்தர்களுட்க விசயன் மணித் திண்டேர்
ஊர்ந்தவனென்னைப் புறம்புல்குவா னும்பர்கோ னென்னைப்புறம்புல்குவான். ௪.

பதவுரை.

நாந்தகம்— நந்தகமென்னும்வாளை
ஏந்திய— திருக்கையில் தரித்துக் கொண்டிருக்கிற
நம்பி— கல்யாணகுணபூர்ணனான கண்ணனே!
சரண் என்று— நீ ரக்ஷகனாகவேணுமென்று
தாழ்ந்த— சரணாகதனான
தனஞ்சயற்கு ஆகி— அர்ஜுநனுக்காக
தரணியில்— பூமியிலுள்ள
வேந்தர்கள்— அரசர்கள்
உட்க— நெஞ்சு உளுக்கும்படியாக
விசயன்— அர்ஜுநனுடைய
மணி— மநோஹரமாய்
திண்— த்ருடமான
தேர்— தேரை
ஊர்ந்தவன்— ஸாரத்யம்பண்ணிநடத்தினவன்
என்னைப்புறம்புல்குவான்;
உம்பர்கோன்— தேவர்களுக்கு நாதனானவன்
என்னைப்புறம்புல்குவான்.

வ்யா. நான்காம்பாட்டு. நாந்தகமித்யாதி. நாந்தகமென்னும் பேரையுடைத்தான திருக்குற்றுடைவாளை ஆச்ரிதரக்ஷணத்தில் விளம்பாஸஹதையாலே ஸர்வகாலமும் பூவேந்தினாற்போலே திருக்கையிலே தரித்துக்கொண்டு ரக்ஷிக்கைக்கீடான குணங்களால் பூர்ணனாயிருக்கிற நீ ரக்ஷகனாகவேணுமென்று. தாழ்ந்தவித்யாதி. ப்ரபதநம்செய்த அர்ஜுந பக்ஷபாதியாய். தரணியிலித்யாதி, பூமியிலுள்ள ராஜாக்களெல்லாரும் அர்ஜுநனளவில் பக்ஷபாதத்

(க) "பார்த்தம்ரதிநமாத்மாநஞ்ச ஸாரதிம் ஸர்வலோகஸாக்ஷிகம் சகார"

தையும் தேரை நடத்துகிற ஸாமர்த்யத்தையும்கண்டு "நாம் இனிஜீவிக்கையென்ப தொன்றுண்டோ" என்று நெஞ்சுளுக்கும் படியாக. விசயனித்யாதி. அர்ஜுநனுடைய அழகியதாய்த் திண்ணியதான தேரை ஸாரதியாய்நின்று நடத்தினவன், என்னைப்புறம் புல்குவான். உம்பரித்யாதி. இப்படி துர்வர்க்கத்தை நிரஸிக்கையாலே, பூபாரத்தைப் போக்குகைக்காக அவதரித்தருள வேணுமென்று அபேக்ஷித்த தேவர்களுக்கு நிர்வாஹகனானவன், என்னைப் புறம்புல்குவான். ... ... ... ... ... ... ... ௪.

ரு.—வெண்கலப்பத்திரங்கட்டிவிளையாடிக்
கண்பலபெய்த கருந்தழைக்காவின்கீழ்ப்
பண்பலபாடிப்பல்லாண்டிசைப்பப்பண்டு
மண்பலகொண்டான்புறம்புல்குவான் வாமனனேன்னைப்புறம்புல்குவான்.

பதவுரை.

வெண்கலம்— வெண்கலத்தாலே பண்ணின
பத்திரம்— பத்ரத்தை
கட்டி— (ஜாத்யுசிதமாக) திருவரையிலே கட்டிக்கொண்டு
விளையாடி— விளையாடி
பல கண்— பலமயில்கண்களை
பெய்த— இட்டுச்சமைக்கப்பட்ட
கரு— பெருமைதங்கிய
தழை— குடையாகிற
காவின் கீழ்— சோலைநிழலின்கீழே
பல பண் பாடி— பலராகங்களால்பாடி
பல்லாண்டு இசைப்ப— (அநுகூலர்கள்) மங்களாசாஸநம்பண்ண
பண்டு— *மாவலிவேள்வியில் மாணுருவாய்ச் சென்றகாலத்திலே
மண் பல— பூமிமுதலிய உலகங்களெல்லாவற்றையும்
கொண்டான்— திருவடிகளாலளந்து கொண்டவன்
புறம்புல்குவான்;
வாமனன்— அளப்பதற்குமுன் வாமநனானவன்
என்னைப்புறம்புல்குவான்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. வெண்கலமித்யாதி. வெண்கலத்தாலே பண்ணின பத்ரத்தை ஜாத்யுசிதமாகத் திருவரையிலே கட்டிக்கொண்டுவிளையாடி. கண்பலவித்யாதி. பலபீலிக்கண்களையுமிட்டுக்கட்டின பெரியகுடையாகிறசோலைநிழலின்கீழே. கண்-பீலிக்கண். பெய்தல்-அத்தையிட்டுச் சமைத்தலைச்சொல்லுகிறது. கருமை- பெருமை. தழை-குடை. அத்தை, "கா" என்கிறது பீலியினுடைய தழைவால்வந்த குளிர்த்தியைப்பற்ற. அன்றிக்கே, "கண்பலபெய்து" என்றுபாடமானபோது, கருந்தழை-கண்பலபெய்து என்று அந்வயித்து-பலபீலிக் கண்களையும் திருமுடியிலே அலங்காரமாகச்சாத்தியென்று பொருளாகக்கடவது. கருந்தழை-பீலிப்பிச்சம். கண்ணென்றது-அதினுடையகண். தலையிலே பீலித்தழைகட்டுகை ஜாத்யுசிதவ்ருத்திறே. காவின்கீழ். இப்படிக்கொத்த அலங்காரத்தோடே சோலை நிழலிலே விளையாடியென்கை.

பண்ணித்யாதி. (க) "ஸ்ரோஜைஸ் ஸாமாநி" என்றும் "திசைவாழியெழ" என்றும் சொல்லுகிறபடியே திக்குகள்தோறும் அநுகூலரானவர்கள் பண்கள் பலவற்றாலும் பாடி. மங்களாசாஸநம்பண்ண. இசைப்பவென்று- சொல்லவென்றபடி. பண்டித்யாதி. மஹா

(க) "ஸங்கைஸ் ஸாமாநி"

பலிபக்கலிலே அர்த்தியாய்ச்சென்று நீரேற்றவக்காலத்திலே பூமிதொடக்கமான ஸகலலோகங்களையும் திருவடிகளாலே அளந்துகொண்டவன், புறம்புல்குவான். வாமனன். அளப்பதற்கு முன்னே இரக்கைக்கு வாமநனானவன், என்னைப்புறம்புல்குவான். ... ... ரு.

மூ.—சத்திரமேந்தித் தனியொருமாணியாய்
உத்தரவேதியினின்றவொருவனைக்
கத்திரிவர்காணக் காணிமுற்றுங்கொண்ட
பத்திராகாரன் புறம்புல்குவான் பாரளந்தானென்புறம்புல்குவான். சு.

பதவுரை.

சத்திரம்— குடையை [ ஸ த்ரு ]
ஏந்தி— தரித்துக்கொண்டு
தனி— வேறொருஸஹாயமின்றி
ஒரு— அத்விதீயனான
மாணி ஆய்— ப்ரஹ்மசாரியாய்க் கொண்டு (யஜ்ஞவாடத்தினருகேசென்று,)
உத்தரவேதியில் — யாகோத்தரவேதியிலே
நின்ற— நின்ற
ஒருவனை— உதாரர்களில் அத்விதீயனான மஹாபலியை
கத்திரிவர்— க்ஷத்ரியர்கள்
காண— காணும்படி
காணிமுற்றும்— பூமிமுதலிய உலகங்களெல்லாவற்றையும்
கொண்ட— உதகமேற்று வாங்கிக்கொண்ட
பத்திரம்— மங்களகரமான [ ஸ ஶ்ரு. ]
ஆகாரன்— வடிவையுடையவன் புறம்புல்குவான்;
பார்— (முன்புஇரந்த) பூமியை
அளந்தான்— திருவடிகளாலளந்து கொண்டவன் என்புறம்புல்குவான்.

வ்யா. ஆறும்பாட்டு. சத்திரமித்யாதி. (க) சத்ரத்தையும் கையிலே தரித்துக்கொண்டு அஸஹாயனாய் க்ர்ஷ்ணாஜிநமும் யஜ்ஞோபவீதமும் முஞ்சியுமான விநீத வேஷத்தாலும் வடிவழகாலும் அத்விதீயமான வாமநனாய்க்கொண்டு யஜ்ஞவாடத்திலே சென்று. உத்தரமித்யாதி. அத்விதீயமான ஔதார்யகுணத்தை யுடையனாய், உத்தரவேதியிலே நின்ற மஹாபலியை. கத்திரிவரித்யாதி. ராஜாக்களெல்லாரும் காண தனக்கு ஸ்வமான பூமியை, அவன் தன்னதாகக் கொண்டிருக்கையாலே தான் அர்த்தியாய் உதகமேற்றுப் பரிக்ரஹித்த. பத்திராகாரன். (உ) பத்ரமானஆகாரத்தை யுடையவன் - விலக்ஷணமான வடிவையுடையவனென்கை. "புலன்கொண்மாணாய்" என்றாரிறே. பாரளந்தானித்யாதி. முன்பு இரந்த பூமியைத் திருவடிகளாலே அளந்துகொண்டவன், என்புறம் புல்குவான். ... ... ... ... சு.

மூ.—பொத்தவுரலைக்கவிழ்த்ததன்மேலேறித்
தித்தித்தபாலுந் தடாவினில்வெண்ணெயும்
மெத்தத்திருவயிறாரவிழுங்கிய
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவா னாழியானென்னைப்புறம்புல்குவான். எ.

(க) ஸ த்ரு. (உ) ஸ ஶ்ரு.

பதவுரை.

பொத்த உரலை— அடிப்பொத்தலான உரலை
கவிழ்த்து— (உறியின்கீழே) கவிழ்த்து
அதன்மேல் ஏறி— அவ்வுரலின் மேலேறி நின்று
தடாவினில்— பானையிலே சேமித்து வைத்ததாய்
தித்தித்த— மதுரமான
பாலும்— திரட்டுப்பாலையும்
வெண்ணெயும்— நவநீதத்தையும்
திருவயிறு— திருவயிறுனது
மெத்த ஆர— மிகவும் நிறையும்படி
விழுங்கிய— அமுதுசெய்த
அத்தன்— ஸ்வாமியானவன்
வந்து என்னைப் புறம்புல்குவான்;
ஆழியான்— க்ர்த்ரிமத்தில்மிகவும்ஆழ்ந்தவன் என்னைப்புறம் புல்குவான்.

வ்யா. ஏழாம்பாட்டு. பொத்தவித்யாதி. பால் வெண்ணெய் முதலான த்ரவ்யங்களைக் களவிலே ஜீவித்துத்திரியப் புக்கவாறே, " அவற்றை இவனுக்கெட்டாதபடி வைக்கக்கடவோம் " என்று உறிமேலே உயரச் சேமித்துவைக்க; அடிப்பொத்து உபயோகயோக்யமன்றிக்கே எல்லாரும் உபேக்ஷித்துக்கிடந்ததொரு வுரலையுருட்டிக்கொண்டுபோய்உறிக்கீழே கவிழவிட்டு அதின்மேலேயேறி நின்று. நல்லவுரலானால் நம்மேவ தேடுவாருண்டாயிருக்குமென்றுப்த்துப் பொத்தவுரலைத்தேடி யிட்டுக்கொண்டது. தித்தித்தவித்யாதி. காய்ச்சித்திரட்டித்தடாவிலே வைத்த ரஸ்யமான பாலையும், கடைந்து தடாவிலே சேர்த்து வைத்த வெண்ணெயையும். தடாவினி லென்கிறவிது, கீழும் மேலும் அந்வயித்துக் கிடக்கிறது. விழுங்கியவென்கையாலே பாலும் திரட்டுப்பாலென்றே கொள்ளவேணும்.

மெத்தவித்யாதி. இவற்றை அமுது செய்கிற விடத்தில் அபிநிவேசாதிசயத்தாலே மிகவும் திருவயிறு நிறைய வமுது செய்த. அத்தன். ஸ்வாமியானவன். கீழ்ச்சொன்ன வ்ர்த்தாந்த விசேஷத்தைப்பற்ற வுகந்து சொல்லுகிற வார்த்தை. வந்தென்னைப் புறம்புல்குவான். ஆழியான். க்ர்த்ரிமத்தில் மிகவும் அவகாஹந முடையவனென்னுதல்; கையிலே திருவாழியை யுடையவனென்னுதல். திருவாழியை யுடையவன் என்றபோது, ஸர்வாதிகனனவன் இதர! க்ஷுத்ரரைப்போலே யிப்படிசெய்தவனென்று கருத்து. என்னைப் புறம்புல்குவான். எ.

அ.—மூத்தவைகாண முதுமணற்குன்றேறிக்
கூத்துவர்தாடிக் குழலாலிசைபாடி
வாய்த்த மறையோர் வணங்க விமையவர்
ஏத்தவந்தென்னைப்புறம்புல்குவா னெம்பிரானென்னைப்புறம்புல்குவான் அ.

பதவுரை.

மூத்து அவை— வ்ர்த்த ஜநஸபையானது
காண— காணும்படி
முது— உந்நதமான
மணல் குன்று ஏறி— மணற்குன்றிலே ஏறி
குழலால்— வேய்ங்குழலாலே [முரளி]
இசை பாடி— இசைகளைப்பாடிக் கொண்டும்
உவந்து— உகப்புத்தோற்ற
கூத்து ஆடி— ந்ர்த்தநம் பண்ணிக்கொண்டும்
வாய்த்த— தன்னையடியொத்தின
மறையோர்— வைதிகமுநிகள்
வணங்க— வணங்கும்படி
இமையவர்— தேவர்கள்
ஏத்த— ஸ்தோத்ரம்பண்ணும்படியாகவும்
வந்து— இப்படிக்கூத்தாடின செவ்வியோடேவந்து
என்னைப் புறம்புல்குவான்;
எம்பிரான் — அஸ்மத்ஸ்வாமியானவன் என்னைப் புறம்புல்குவான்.

வ்யா. எட்டாம்பாட்டு. மூத்தவைகாண. வயஸ்ஸாலும் ஜாத்யுசிதமான வடிவா லும் மூத்த கோபஜநங்களானவை தன்னுடைய சேஷ்டிதரஸத்தைக் காணும்படியாக. அன் றிக்கே, மூத்த என்கிற விடத்தை, மூத்து என்று கடைக்குறைத்தலாய், அவை என்று- ஸபையாய், (க)வ்ர்த்தஜநஸபை யென்னவுமாம். முதுமணவித்யாதி. எல்லார்க்கும் தெரியும்ப டியான உயர்ந்த மணற்குன்றிலேயேறி. முதுமையால் - கிளர்த்தியைச் சொல்லுகிறது. கூத் தித்யாதி. நிலவறையிற் கிடக்கிற பெண்களும் விட்டுவந்துகாண்கைக்கு உறுப்பாகையாலே ப்ரீதனாய்க்கொண்டு கூத்தாடி. குழலாலிசைபாடி. திருப்பவளத்தில் வைத்து ஊதுகிற குழல்வழியே இசைகளைப்பாடி. குழலின் த்வநி வாய்ப்பிறே மூத்தவையறிவது. தான் நினைத்த பெண்களுடைய பெயரைச்சொல்லியழைக்கையும், வெறுத்தவர்களைக் கால்கட்டிப் பொறை கொள்ளுகையும் முதலான சப்தவிசேஷங்கள் இவனோடு பழகிப் போரும் பெண்க ளுக்கிறே தெரிவது. "குழலாலிசைபாடி-கூத்துவந்தாடி" என்றதுவாயித்துக்கொள்வது. குழ லோசையாலே அபிமதரைத்திரட்டி, "அவர்கள் காணப்பெற்றோமே" என்று உகந்து கொண்டாய்த்துக் கூத்தாடுவது. மரக்கால்கூத்து, குடக்கூத்து என்று விசேஷியாமையாலே, இவற்றில் ஏதேனுமொரு கூத்தாகக்கடவது.

வாய்த்தவித்யாதி. ஸ்வசேஷ்டிதங்காண வாசைப்பட்டு, தன்னை அடிபொத்தித்திரியும் விலக்ஷணரான (உ)ரிஷிகளானவர்கள் இந்த சேஷ்டிதத்திலே தோற்று வணங்க, தேவர்களா னவர்கள் இதைக்கண்டு (௩)வித்தராய்நின்று ஸ்துதிக்க. அன்றிக்கே, வாய்த்த என்கிற வல் லொற்றை- மெல்லொற்றாக்கி, வாய்ந்தவென்றாய், மறையோரென்கிறது - நிலவறையிலே மறைந்து நின்றவர்களென்றபடியாய், முன்பு நிலவறைகளிலே மறைந்துகிடந்து குழலோசை வழியே கிட்டின பெண்கள், திருவடிகளின் மார்த்தவத்தை நினைத்து இந்தக்கூத்தை அமை க்கைக்காக வணங்க, அநிமிஷராய்க் கூத்தைப்பார்த்துக்கொண்டிருந்த முன்பு சொன்ன(க)வ்ர் த்தஜநங்கள் (௩)வித்தராய் ஸ்துதிக்கும்படியாகவென்னவுமாம். வந்தித்யாதி. இப்படிக்கூத்தா டினசெவ்வியோடே வந்தென்னைப் புறம்புல்குவான். எம்பிரான். எங்களுக்கு மஹோபகாரக னானவனென்னைப் புறம்புல்குவான். ... ... ... ... அ.

௯.—கற்பகக்காவு கருதியகாதலிக்
கிப்பொழுதீவனென் றிந்திரன்காவினில்
நிற்பனசெய்துநிலாத்திகழ்முற்றத்துள்
உய்த்தவனென்னைப்புறம்புல்குவானும்பர்கோனென்னைப்புறம்புல்குவான்.

பதவுரை.

இந்திரன்— தேவேந்த்ரனுடைய
காவினில்— நந்தநவநத்திலிராநின்ற
கற்பகக்காவு— கல்பவ்ருக்ஷத்தை
கருதிய— (தன் அகத்து முற்றத்தில் நட்டுத் தரவேணுமென்று) ஆசைப்பட்ட
காதலிக்கு— அபிமதையான ஸத்யபாமைப் பிராட்டிக்கு
இப்பொழுது— இப்போதே
ஈவன் என்று— அவற்றைக்கொணர்ந்து தரக் கடவேனென்று
நிலா திகழ்— நிலவால் விளங்காநின்ற
முற்றத்துள்— அவளகத்து முற்றத்திலே
நிற்பன செய்து— (கல்பகத்தைப் பிடுங்கிக் கொண்டுவந்து)நட்டு

(க) வ்ருத்த. (உ) ருஷி. (௩) விஸ்த.

உய்த்தவன்— அந்த கல்பகத்தைச் செழிப் பித்தவன்
என்னைப் புறம்புல்குவான்;

உம்பர்— நித்யஸூரிகளுக்கு
கோன்— ஸ்வாமியானவன்
என்னைப் புறம்புல்குவான்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. கற்பகமித்யாதி. தேவலோகத்திலே இந்த்ரனுடைய காவிலே நிற்கிற கற்பகக்காவை, (க)சசிபண்ணின அவமதிபடியாக "பிடுங்கிக்கொண்டுபோய் பூலோகத்திலே என்னுடைய நிலாமுற்றத்திலே நட்டுத்தரவேணும்" என்று ஆசைப்பட்ட அபிமதையான ஸத்யபாமைப்பிராட்டிக்கு, நாளையென்னுதல், பின்னையென்னுதல் செய்யாதே, இப்பொழுதே தரக்கடவேனென்று பிடுங்கிக்கொண்டு போராநிற்கச்செய்தே, முற்பட ஆதரித்தஇந்த்ரன், தன்புழைக்கடையிலே ஒருபூண்டைப் பிடுங்கிக்கொண்டு போரப்பொறுமையாலே குபிதனாய் வஜ்ரத்தைவாங்கி, தொடர்ந்து யுத்தம்செய்வானாகவந்து, வந்தகார்யம் பலியாமையாலே ஸ்தோத்ரம் செய்ய, "இப்போதுதானே கொடுபோகவேணும்; பின்பு அங்கே வந்து நிற்கக்கடவது" என்று ஸங்கல்பம் செய்துகொண்டுபோந்து, "வண்துவரை நட்டான்" என்கிறபடியே ஸ்ரீமத்த்வாரகையிலே நிலாமுற்றத்திலே நட்டவன். உய்த்தவன் என்கையாலே இங்கே கொடுவந்து நட்டபின்பு அங்குத்தையிலுங்காட்டில் தழையும் பூவும் கொழுந்துமாய்க்கொண்டு ஸம்ருத்தமானபடி சொல்லுகிறது. என்னையித்யாதி. இப்படி அபிமதவிஷய பரதந்த்ரனானவன் என்னைப் புறம்புல்குவான். உம்பர்கோன். பிராட்டி புகப்புச் செய்கையாலே இஸ்ஸ்வபாவத்துக்குத் தோற்று எழுதிக்கொடுக்கும் நித்யஸூரிகளுக்கெல்லாம் நிர்வாஹகனானவன் என்னைப்புறம் புல்குவான். ... ... கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆய்ச்சியன்றுழிப்பிரான் புறம்புல்கிய
வேய்த்தடந்தோளிசோல் விட்டுசித்தன்மகிழ்ந்து
ஈத்ததமிழிவை யீரைந்தும்வல்லவர்
வாய்த்தநன்மக்களைப் பெற்றுமகிழ்வரே. ய.

பதவுரை.

வேய்— மூங்கிலைபொத்ததாய்
தட— பெருத்திராநின்ற
தோளி— தோள்களையுடைய
ஆய்ச்சி— (தாயான) யசோதைப்பிராட்டி
அன்று— அக்காலத்திலே
ஆழி— திருக்கையில் திருவாழியை யுடைய
பிரான்— கண்ணபிரான்
புறம்புல்கிய— புறம்புல்கின ப்ரகாரங்களைச்
சொல்— சொல்லை சொன்ன
விட்டு சித்தன்— பெரியாழ்வார்
மகிழ்ந்து— உகந்து

ஈத்த— அருளிச்செய்த்தாய்
தமிழ்— த்ராவிடமான
இவை இரண்டு ஐந்தும்— இப்பத்துப் பாசுரங்களையும்
வல்லவர்— ஓதவல்லவர்கள்
வாய்த்த— எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுகைக் கீடாகப் பொருந்தின
நல் மக்களை— விலக்ஷண சிஷ்யபுத்ரர்களை
பெற்று— பெற்று
மகிழ்வர்— ஸந்தோஷிப்பர்கள்.

வ்யா. வேய்த்தடந்தோளி-ஆய்ச்சி. பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேய்போலேயாய்ப் பெருத்திருந்துள்ள தோள்களையுடையளான யசோதைப்பிராட்டி. அன்

(க) ஶசி. [ இந்த்ராணீ ]

றித்யாதி. அக்காலத்திலே கையிலே திருவாழியையுடைய ஸர்வேச்வரன் அவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்த சைசவாநுகுணமாகத் தன்னைப் புறம்புல்கின ப்ரகாரங்களைச் சொன்ன சொல்லை. விட்டுசித்தனித்யாதி. பெரியாழ்வார் தத்காலம்போலே அநுபவித்து ப்ரீதராய், அது தன்னை யெல்லாருமறியும்படி உபகரித்ததாய் ஸர்வாதிகாரமான த்ராவிடமாயிருக்கிற இவை பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். வாய்த்தவித்யாதி. ஸர்வேச்வரனுக்கு மங்களாசாஸநம் பண்ணுகைக்கிடாக வாய்த்த விலக்ஷணரான சிஷ்யபுத்ரர்களை லபித்து, அத்தால் வந்த ஆநந்தத்தை யுடையராவர். ... ... ... மு.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.— வட்டுக் கிண்கிணி கத்த நாந்தகம் வெண்கலச் சத்திரம் போத்த மூத்த கற்பகம் ஆய்ச்சி மேச்சு.

ஆக - திருமொழி, கூ- க்கு, பாட்டு-கoச.

முதற்பத்து முற்றிற்று.

(*)

## இரண்டாம்பத்து.

அ. கீழிரண்டு திருமொழியிலும் – "அச்சோ" என்றும், "புறம்புல்குவான்" என்றும் அவன், சைசவாநுகுணமாக ஓடிவந்து மேல்விழுந்து முன்னும் பின்னுமணைக்கும் ரஸத்தை, தானநுபவிக்க வாசைப்பட்டு அவனைக்குறித்து ப்ரார்த்தித்து அவன் அப்படி செய்ய யசோதைப்பிராட்டி அநுபவித்தாற்போலே, இந்த சேஷ்டிதங்களினுடைய ரஸத்தை யநுபவிக்க வாசைப்பட்டு,தாமும் அப்படி ப்ரார்த்தித்து தத்காலம்போலே யநுபவித்தஇனியரானார்; சிறுப்பிள்ளைகள் அப்பூச்சிகாட்டி விளையாடுமத்தையும் அவதாரத்தின் மெய்ப்பாடு தோற்ற அவன் ஆசரித்தத்தை தத்காலத்திலுள்ளா ரநுபவித்து ஹர்ஷ்டராய்ப் பேசினாற்போலே, பிற்காலமாயிருக்கச் செய்தேயும் தத்காலம்போலே தாமுமநுபவித்துப்பேசி ஹர்ஷ்டராகிறா ரித்திருமொழியில். ... ... ... ... ... *

மூ.—மெச்சூதுசங்கமிடத்தானல்வேயூதி
பொய்ச்சூதிற்றோற்றபொறையுடைமன்னர்க்காய்ப்
பத்தூர்பெறாதன்று பாரதங்கைசெய்த
அத்தூதனப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். க.

## பதவுரை.

மெச்ச— கொண்டாடும்படி
ஊது— ஊதுகிற
சங்கம்— ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
இடத்தான்— இடக்கையிலுடையனாய்
நல்— கர்ணச்ராவ்யத்வநியையுடைய
வேய்— வேய்ங்குழலை [முரளியை]
ஊதி— ஊதுகிறவனான கண்ணன்
பொய்— க்ர்த்ரிமமான
சூதில்— த்யூதத்திலே
தோற்ற— பராஜயமடைந்த
பொறை உடை— க்ஷமாவான்களான
மன்னர்க்கு ஆய்— பாண்டவர்களுக்குத் துணையாய்
பத்து ஊர்— பத்து ஊரையுங்கூட
பெறாத— அடையாத

அன்று— அக்காலத்திலே
பாரதம்— பாரதயுத்தத்திலே
கை செய்த— ஸஹகரித்தருளின
அத்தூதன்— அந்த தூதனானவன்
அப்பூச்சிகாட்டுகின்றான்—‡ அப்பூச்சிகாட்டாநின்றான்!
§ அம்மனே!— அஹஹ!
அப்பூச்சிகாட்டுகின்றான்.

‡ அப்பூச்சி காட்டுகையாவது— பாலர்கள் எதிர்த்தலைக்கு பயங்காட்டுவதற்காகச் செய்யும் கண்ணை யிறுத்துவது, மயிரால் முகத்தை மறைத்துக் காட்டுவது முதலான சில சேஷ்டிதங்கள்.

§ அம்மனே — இது கண்டு பயப்பட்டுச் சொல்லும் சொல்.

வ்யா. முதற்பாட்டு. மெச்சூது சங்கமிடத்தான். "ஆச்ரிதபாதந்த்ரனான பாண்டவ பக்ஷபாதி" என்று எல்லாரும் மெச்சும்படியாக ஊதுகிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யிடத்திருக்கையிலேயுடையவன். "மெச்ச" என்கிறவிது, "மெச்சு" என்று கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது. மெச்ச ஊதுகிறவென்றபடி. மெச்சுதல் - கொண்டாட்டம். ஸ்ரீ பாஞ்சஜந்ய த்வநிதான் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியும் அநுகூலர் வாழும்படியு மாயிறே யிருப்பது. (க) [illegible] " என்கிறபடியே. நல்வேயூதி. இதிறே அவதாரத்துக் கநுகுணமான நிரூபகம். அநுகூலர் வாழும்படி நல்லகுழலை யூதுமவன். குழலுக்கு நன்மையாவது - "நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தந்தம் வீணைமறந்து" "மரங்கள்நின்று மதுதாரைகள்பாயும்" இத்யாதிப்படியே தன்னுடைய த்வநியாலே சேதநா சேதநவிபாகமற ஈடுபடுத்தவற்றாகை. ஸ்ரீபாஞ்சஜந்யமும் திருக்குழலும் இவ்வவதாரத்தில் கைதொடானியிறே யிருப்பது. பசுமேய்த்துத் திரியுங்காலத்திலும், "ஆநிரையினம் மீளக் குறித்த சங்கம்" என்றும், "கேயத்தீங்குழ லூதிற்றும் நிரைமேய்த்ததும்" என்றும் சொல்லக்கடவதிறே.

பொய்ச்சூதில் தோற்ற. க்ர்த்ரிமமானசூதிலே பராஜிதராய் ஸர்வஸ்வத்தையு மிழந்த. செவ்வையில் இவர்களை ஜயிக்கப்போகாதிறே; க்ர்த்ரிமத்தாலேயிறே இவர்களை ஜயித்தது. பொறையுடை மன்னர்க்காய். அவர்கள்செய்தது க்ர்த்ரிமமென்று அறிந்திருக்கச்செய்தேயும் க்ரோதவிக்ர்தியின்றிக்கே, க்ஷமையை யுடையராயிருந்த ராஜாக்களுக்காய். துர்யோதநாதிகள், இவர்கள் ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்குமித்தனையல்லது இவர்கள் க்ஷமையை அபஹரிக்கமாட்டார்களிறே. ஆகையாலே பொறையுடை மன்னரென்று - பொறையை யிவர்க

(க) "யஸ்ய நாதேந தைத்யாநாம் பலஹாநிரஜாயத - தேவாநாம் வவ்ர்தே தேஜஃ பாஞ்சஜந்யஸ் ஸ யோகிநாம்."

ருக்கு நிரூபகமாகச்சொல்லுகிறது. மன்னர்க்காய். (க)" யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸாஹர்ச்சைவ ஜநார்த்தந:" என்கிறபடியே அவர்களுக்கு ஸர்வவிதமான துணையும் தானேயாய்க் கொண்டு பாதந்த்ரனாய்.

பத்தூரித்யாதி. இவர்களுக்காக ஸ்ரீதூதெழுந்தருளி " பாண்டவர்களும் நீங்களும் விரோதித்திராதே உள்ளார்க்குள்ள அம்சங்களை விபஜித்துக்கொடுத்து, கூடிக்கலந்திருக்கில் (உ)தீர்க்கஜீவிகளாகலாம் " என்ன; அவர்கள், " நாங்கள் அதுசெய்யோம் " என்ன; "ஆனால், சிறிது குறையவாகிலுங் கொடுங்கோள், அவர்களை நான் பொருத்துகிறேன் " என்ன; அதுக்கும் அவர்களிசையாமையாலே, " ஆனால், அவர்களைவர்க்கும் தலைக் கிரண்டோகப் பத்தூர்தன்னைக் கொடுங்கோள்" என்ன; "இவையொன்றும் நாங்கள் செய்வதில்லை, வீரபோக்யை யன்றோ வஸுந்தரை, யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் ஜீவிக்கு மித்தனை " என்ன; ஆனால், " அது தன்னைச்செய்யுங்கோள் " என்று போந்து, இத்தலையையும் யுத்தத்திலே பொருத்தி, அன்று பாரதயுத்தத்திலே கையுமணியும்வகுத்து, ஸாரதியாய் நின்று நடத்தின ஆச்ரிதபக்ஷபாதியான அந்தத்தூதனைவன். அப்பூச்சி - பயங்கரமா யுள்ளது. அதாவது- லோகத்தில் பாலரானவர்கள் எதிர்த்தலைக்கு பயங்கரமாகக் காட்டுவன சில சேஷ்டிதங்கள்.

இவ்விடத்தில் விசேஷமுண்டு. அதேதென்னில்; நீர்மையைக்கண்டு " நம்மிலே யொருவன் " என்றிருக்குமவர்கள் பயப்படும்படி ஈச்வரத்வசிஹ்நங்களைக்காட்டுகை. " இவ்விடத்தை, ¶ உய்ந்தபிள்ளை பாடாநிற்க, திருவோலக்கத்திலே, அத்தூதனென்று - பெருமாளைக்காட்டுவது, அப்பூச்சியென்று - கண்ணை யிறுத்துக்கொண்டு வருவதாய் அபிநயிக்க; உடையவர்பின்னே ஸேவித் தெழுந்தருளியிருந்த எம்பார் - திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அவரும், அப்படியே அபிநயித்துக்கொண்டுவர, ' இதுக்கடியென் ' என்று விசாரித்துப் புரிந்து பார்த்தருளி, 'ஸ்ரீகோவிந்தப் பெருமாள்! இருந்தீரோ ' என்றருளிச்செய்தார் " என்று ப்ரஸித்தமிறே. அப்பூச்சி யென்கிறது – இரண்டு திருக்கையி லாழ்வார்களையும். அம்மனே யென்கிறது - கண்டு பயப்பட்டுச் சொல்லுகிற வார்த்தை. ... ... ... ... ... க.

மூ.—மலைபுரைதோண்மன்னவருமாரதருமற்றும்
பலர்குலையநூற்றுவரும் பட்டழியப்பார்த்தன்
சிலைவளையத் திண்டேர்மேன் முன்னின்றசெங்கண்
அலைவலைவந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். உ.

பதவுரை.

| | |
|---|---|
| மலை புரை— மலைபோலே திண்ணிதான | மற்றும் பலர் — மற்றுமுள்ள பல அதிரத மஹாரதர்களும் |
| தோள்— தோள்களையுடைய | குலைய— நடுங்கும்படியாகவும் |
| மன்னவரும்— அரசர்களும் | நூற்றுவரும் — துர்யோதநன் முதலிய நூற்றுவரும் |
| மாரதரும் :— பீஷ்மர்முதலிய மஹாரதர்களும் | |

(க) " யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸாஹர்ச்சைவ ஜநார்த்தந:" (உ) தீர்க்கஜீவி.

¶ "உய்ந்தபிள்ளை" என்பவர்- திருவரங்கம் பெரியகோயிலில் எம்பெருமானார் காலத்திலெழுந்தருளியிருந்தாரொரு அரையர்.

| | |
|---|---|
| பட்டு அழிய— வேரற்றமரம்போலேபட்டு அழிந்துபோம்படியாகவும் | முன் நின்ற— முன்னே ஸாரதியாய் நின்ற |
| பார்த்தன்— அர்ஜுநனுடைய | செம் கண்— சிவந்தகண்களை யுடையனும் |
| சிலை— காண்டீவமென்னும் வில்லானது | ஆலை வலை— அவன் ஜயத்தைச் சொல்லிப் புகழுமவனை கண்ணன் |
| வளைய— வளையும்படியாகவும் | வந்து அப்பூச்சி காட்டுகின்றான் |
| திண் தேர் மேல்- திண்ணிய தேரின்மேலே | இத்யாதி பூர்வவத். |

வ்யா. இரண்டாம்பாட்டு. மலையித்யாதி. மலைபோலே ஒருவரால் சலிப்பிக்க வொண்ணாதபடி திண்ணிதான தோள்களையுடைய ராஜாக்களும். இத்தால் - அதி பலபராக்ரமராகையாலே ஒன்றுக்கு மஞ்சாதவர்களென்கை. மாரதரும். பீஷ்ம த்ரோணாதிகளான மஹாரதரும். பீஷ்மர், த்ரோணாசார்யர், கர்ணன் என்கிற இவர்கள் ஒவொருவரே அதிரதராகையாலே ஒ ரெதிரிகளுக்கு மஞ்சாதவர்களிறே. மற்றும்பலர். தனித்தனியே யெண்ணி முடியாமையாலே மற்று மிவர்களோடொக்க விகல்பிக்கலாம்படி யிருப்பா ரநேகரென்கிறார். பதினோரக்ஷௌஹிணியானால் அதில் எத்தனைசூரருண்டாயிருக்கும்; ஆகையாலே ஸமுச்சயித்துச் சொல்லுமித்தனையிறே. குலைய. "க்ருஷ்ணன் ஸாரத்யம் பண்ணுவதாகவேறினான்." என்று கேட்டபோதே "நாம் இனி ஜீவிக்கை யென்றொரு பொருளுண்டோ" என்று பீதராய் நடுங்கும்படியாக. கீழே, அவர் இவர் என்றாற்போலே விசேஷந்தோற்றச்சொல்லி, "குலைய" என்கையாலே- இந்நடுக்கத்தில் வந்தால் ஒருவர்க்கு மொரு விசேஷமு மில்லையென்கை.

நூற்றுவரும்பட்டழிய. கீழே - மன்னவருமென்று - ராஜாக்களைச்சொல்லி யிருக்கச் செய்தே, இவர்களைப் பிரித்தெடுக்கையாலே- கோபதீவ்ரத்தங்யாயத்தாலே ஆங்கு இவர்களையொழிந்தவர்களைச் சொல்லிற்றாகக்கடவது. பாண்டவர்களோடே யுத்தம்பண்ணி ஜயித்து பூமிப்பரப்படங்கலும் தாங்களே யாளுவதாகக் கோலியிருந்த துர்யோதநாதிகள் நூற்றுவரும் பட்டழிய, (க) "மயைவைதே நிஹதா꞉ பூர்வமேவ" என்கிற படியே க்ருஷ்ணன் அழியச்செய்வதாக ஸங்கல்பித்தபோதே நின்று நின்று வேரற்றமரம்போலே பட்டு பின்னை யுருவழிந்துபோம்படியாக.

பார்த்தன்சிலைவளைய. அர்ஜுநன்கையில் காண்டீவம் வளைய. அதாவது - அதி ரத மஹாரதரான பீஷ்மாதிகளை மதியாதே, அர்ஜுநன் எதிர்த்து நின்று வில்வலித்து யுத்தம் பண்ணவல்லனாய்த்து இவனுடையஸஹாயபலத்தாலென்கை. திண்டேர்மேல்முன்னின்ற. மஹாரதரான பீஷ்மாதிகள்விட்ட ஆக்நேயாஸ்த்ராதிகளாலே (உ) தக்தமாய்விழாமல் தன் திருவடிகளின் ஸம்பந்தத்தாலே திண்மையை யுடைத்தாய்நின்ற தேரின்மேலே (ங) "த்ரோணாஸ்த்ராத்யை ரஸௌ [illegible]" என்கிறபடியே அர்ஜுநனால் பொறுக்க வொண்ணாத அஸ்த்ரசஸ்த்ரங்கள் வந்தாலும் தன்மேலே யேற்றுக்கொள்ளும்படி ஸாரதியாய் முன்னின்ற.

செங்கணலவலை. தான் ஸாரத்யம் பண்ணின ஸாமர்த்யத்தாலே ப்ரதிபக்ஷத்தை வென்று அந்த விஜயத்தை அர்ஜுநன் மேலே யேறிட்டு அவன்பக்கல் வாத்ஸல்யந்தோற்றக் கடாக்ஷித்து நின்று அவன் விஜயந்தோற்றப் பலவற்றையும் சொல்லிப் புகழுமவன்.

(க) "மயைவைதே நிஹதா꞉ பூர்வமேவ." (உ) தக்தம்.
(ங) "த்ரோணாஸ்த்ராத்யைரஸௌ பார்த்தம் ஸஞ்சாத்ய ப்ரததௌ."

(க) "அவாக்யநாதரஃ" என்றிருக்கக்கடவவன் அதனுடைய அழிந்து கலகலென வேத்தா நிற்குமாய்த்து. "புகழ்ந்தாய் சினப்போர்ச்சுவேதனைச் சேனாபதியாய் மனப்போர் முடிக்கும் வகை" என்கிறபடியே. அதவா, பார்த்தன் சிலையைத் திண்டேர்மேல் முன்னின்ற செங்கணலவலை யென்கையாலே- (உ) அர்த்தஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியா குலனாய், (ங) "நகாங்க்ஷே விஜயங்க்ருஷ்ண" இத்யாதிப்படியே விஜயமும் வேண்டா, ராஜ்யாதிகளும் வேண்டாவென்று உபேக்ஷித்து (ச) "ரதோபஸ்த்த உபாவிசத்" (ரு) "விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்நமாநஸஃ" என்கிறபடியே சோகத்தாலே வெருவின மநஸ்ஸையுடையனாய் வில்லையும் பொகட்டு யுத்தாந்நிவர்த்தனாய்த் தேர்த்தட்டிலே யிருந்த அர்ஜுநன் தெளிந்து (சு) "கரிஷ்யே வசநம் தவ" என்றெழுந்திருந்து வில்லெடுத்து யுத்தம்பண்ணும்படியாக, ப்ரக்ருத்யாத்ம விவேகந்தொடங்கி பரமரஹஸ்யமான பரபக்தி பர்யந்தமாக வுபதேசித்த அலவலைத்தனத்தைச் சொல்லவுமாம்.

அலவலையென்பது - அர்த்த கௌரவமும் அதிகார கௌரவமும் பாராதே தன் நெஞ்சில் ப்ரதிபந்நமானவற்றைச் சொல்லுமவனிறே. அது இங்குமுண்டாகையாலே இவனையும் அலவலை யென்னலாமிறே. இப்படி தான் அருளிச்செய்தது சரணாகதியானவள் குழல் முடிப்பிக்கைக்காகவிறே. வந்தித்யாதி. இப்படி பலர் குலையவும் பட்டழியவும் சிலவனையும் தேர்முன்னின்று ஸாரத்யம்பண்ணின, ஆச்ரித விரோதிநிரஸநம், ஆச்ரிதபாரதந்த்ர்யம் முதலான ஸ்வபாவங்களையுடையவன் வந்து அப்பூச்சிகாட்டுகின்றான். அம்மனே. பூர்வவத். உ.

மூ.—காயுநீர்புக்குக் கடம்பேறிக் காளியன்
தீயபணத்திற் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற
ஆயன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். ங.

பதவுரை.

காயும்— காளியன்விஷாக்நியால் கொதிக்கிற
நீர்— மடுவின் ஜலத்திலே
புக்கு— புகுந்து
கடம்பு ஏறி— (அருகேநின்ற) கடம்ப மரத்தின்மேலேறி
காளியன்— காளிய நாகத்தினுடைய
தீய— கொடியதான
பணத்தில்— படத்திலே
சிலம்பு— திருவடிச்சிலம்புகள்
ஆர்க்க— கலகலவென்று சப்திக்கும்படி
பாய்ந்து— குதித்து
ஆடி— கூத்தாடி
வேயின் குழல்— வேய்ங்குழலை
ஊதி— ஊதி
வித்தகனாய்நின்ற—விஸ்மய நீயனாயிராநின்ற
ஆயன்— இடைப்பிள்ளையான கண்ணன்
வந்து இத்யாதி பூர்வவத்.

---

(க) "அவாக்யநாதரஃ."
(உ) "அர்த்தஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியாகுலம்."
(ங) "நகாங்க்ஷே விஜயம் க்ர்ஷ்ண," (ச) "ரதோபஸ்த்த உபாவிசத்." (ரு) "விஸ்ருஜ்ய ஸசரஞ்சாபம் சோகஸம்விக்நமாநஸஃ." (சு) "கரிஷ்யே வசநந்தவ."

வ்யா. மூன்றாம்பாட்டு. காயுநீரித்யாதி. காயுநீர் புக்கு. அருகணைந்த வ்ருக்ஷங்கள் பக்ஷிகளுட்பட பட்டுவிழும்படி காளியன் விஷாக்நியாலே தப்தமாய் நின்று கொதிக்கிற மடுவின் ஜலத்திலே மதியாமல் சென்றுபுக்கு. "கடுவிடமுடைய காளியன் தடத்தைக் கலக்கி" என்கிறபடியே அந்த தடாகத்தைக்கலக்கி, காளியன் க்ருத்தனாய்த் தலையெடுத்தெழுந்திருக்கும்படி பண்ணி. கடம்பேறி. அந்த விஷாக்நியாலே அருகே பட்டு நிற்கிற தொருகடம்பை, தன் கடாக்ஷத்தாலே *பசிலைப் பூங்கடம்பாக்கி அதின்மேலேயேறி. காளியனித்யாதி. காளியனுடைய- விஷாச்ரயமாகையாலே க்ரூரமான பணத்திலே திருவடிகளில் திருச்சிலம்பு த்வநிக்கும்படி சென்று குதித்து, அவன் பணங்கள் நெரிந்து வாய்களாலே ரக்தம் சொரியும்படி விளைத்து சரணம் புகுருமளவும் அதின்மேலே நின்று ந்ருத்தம் செய்து. வேயித்யாதி. இந்த வ்ருத்தாந்தத்தைக் கண்டும் கேட்டும் "என்னைகப்புகுகிறதோ" என்று தறைப்பட்டுக் கிடந்து ஈடுபடுகிற இவ்வநுகூல ஜநங்கள் தலையெடுத்து ப்ரீதராய் வாழும்படி திருக்கையில் வேயின் குழலையூதி, இவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தாலே விஸ்மயநீயனாய் நின்ற. ஆயன். எல்லாம்செய்தாலும் ஜாத்யுசிதமான இடைத்தனத்தில் கு(றை)லையாதவன். வந்தப்பூச்சிகாட்டுகின்றான். ... ... ... ... ... ௩.

மூ.—இருட்டிற்பிறந்துபோ யேழைவல்லாயர்
மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப்
புரட்டியந்நாளெங்கள் பூம்பட்டேக்கொண்ட
அரட்டன்வந்தப்பூச்சிகாட்டுகின்று னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். ௪.

பதவுரை.

இருட்டில்— அந்தகாரத்திலே
பிறந்து— திருவவதரித்து
போய்—(பின்பு) திருவாய்ப்பாடியிலேபோய்
ஏழை— தன்பக்கல் சாபல்யமுடையராய்
வல்— க்ருஷ்ணாச்ரயத்தாலுண்டான பலத்தை யுடையரான
ஆயர்— இடையர்களுடைய
மருட்டை— மதிமயங்கிப்பேசும் பேச்சுக்களை
தவிர்ப்பித்து— தவிரும்படிபண்ணி
வன் கஞ்சன்— வன்னெஞ்சனான கம்ஸன்
மாள— மாளும்படியாக
புரட்டி— மயிரைத் தூக்கிப் பிடித்துப் புரட்டி
அந் நாள்— பனி நீராட்டின அந்த நாளிலே
எங்கள்— எங்களுடைய
பூ பட்டு — அழகிய பட்டுக்களை
கொண்ட— வாரிக்கொண்டுபோன
அரட்டன்— தீம்பனானவன்
வந்து இத்யாதி பூர்வவத்.

வ்யா. நாலாம்பாட்டு. இருட்டில் பிறந்து. (க) "ஜபூ்ராமெத்ரவிஜாயாமெ ஜாய ஜீமெநஜநாதஒனெந" என்கிறபடியே கம்ஸன் முதலான துஷ்ப்ரக்ருதிகள் கண்படாதபடி அருகுநின்றாரைத் தெரியாத விருளிலேவந்தவதரித்து. "எப்போது பிறப்பது" என்று ஹிம்ஸிக்கைக்காக வுருவின வாளை உறைபிலிடாம லிருக்கிறவன், கண்ணால் கண்டால் விடானிறே. (உ) "ஜாநாதஹுமாவதாரஜெ கஂஜெஸாயஂ கிகிஜநஜஃ" என்றாளிறே தேவ

(க) "மத்யராத்ரே கிலாதாரே ஜாயமாநே ஜநார்த்தநே." (உ) "ஜாநாம்யவதாரம்தே கம்ஸோயம்கிகிஜந்மஜஃ."

கிப்பிராட்டி. போய். "வீங்கிருள்வாய் அன்றன்னை புலம்பப்போய்" என்கிறபடியே அந்தச் செறிந்த விருளிலே பெற்ற தாயானவள் விரஹகாதரதையாலே கால்லைக்கட்டிக்கொண்டுகிடந்து கதறுகிற்கத் திருவாய்ப்பாடியிலே போய்.

ஏழைவல்லாயர் மருட்டைத்தவிர்ப் பித்து. தன்பக்கல் சபலராய், (க) "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா:" என்கிறபடியே தன்னைப்பற்றி யிருக்கும் பலத்தையுடையரான கோபரானவர்கள், செருக்காலே தாங்கள் கம்ஸனை அழிக்கவல்லாரைப்போலே சொல்லும் (உ)ப்ராமகோக்திகளை, "நீங்களெல்லாரும் வேணுமோ, நானே செய்கிறேன்" என்றாற்போலே சொல்லும் தன்னுடைய உக்திவிசேஷங்களாலே தவிரும்படி பண்ணி. வன்கஞ்சன் மாளப்புரட்டி. நான் செய்கிறே னென்றது உக்திமாத்ரமாய்ப் போகாமே கம்ஸ ப்ரேரிதனாய், தன்னையழைத்துக்கொண்டுபோகவந்த அக்ரூரனுடனே ஸ்ரீமதுரையிலே யெழுந்தருளி, உத்ஸவத்துக்கென்றழைத்துவிட்டு, வழியிலே நலியும்படியாக தன் குவலயாபீடத்தையும் மல்லரையும் நிறுத்தி (ங) "துங்கமஞ்சவ்யவஸ்தித:" என்கிறபடியே, தான் உயர்ந்த நிலத்திலேயேறிப் பார்த்துக்கொண்டிருந்த வன்னெஞ்சனான கம்ஸன் முடியும்படியாக, அவன் வழியில் நிறுத்தின விரோதிகளை நிரஸித்துக்கொண்டு சென்று அவனிருக்கிற மஞ்சஸ்தலத்திலே யெழுப்பாய்ந்து, (ச) "கேசேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாத ச" என்கிறபடியே அபிஷேகத்தைத் தட்டிப்போகட்டு, மயிரைப் பிடித்திழுத்து, கீழே பூமியிலே விழத்தள்ளி, அவன்மேலே குதித்து, "கஞ்சன் குஞ்சிபிடித்தடித்த" என்கிறபடியே மயிரைத் தூக்கிப்பிடித்து, நிலத்திலேயிட்டுப் புரட்டி. அந்நாளித்யாதி. பனிநீராட்டின வந்நாளிலே எங்களுடைய அழகிய பட்டுக்களை வாரிக்கொண்ட திம்பனானவன். அரட்டு-தீம்பு; மிடுக்காகவுமாம். வந்தப் பூச்சிக்காட்டுகிறான். ... ச.

மூ.—சேப்பூண்டசாடுசிதறித் திருடிநெய்க்
காப்பூண்டு நந்தன்மனைவிகடைதாம்பால்
சோப்பூண்டுதுள்ளித் துடிக்கத்துடிக்கவன்
றாப்பூண்டானப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். ரு.

பதவுரை.

சே பூண்ட— எருதுகள் பூண்டு வலிக்கப்பட்ட
சாடு— சகடத்தை [ சகடாஸுரனை ]
சிதறி— உதைத்து
நெய்க்கு— நெய்க்கு ஆசைப்பட்டு
திருடி— களவுகண்டு
ஆப்பு உண்டு— இடைச்சிகளால் கட்டப்பட்டு
நந்தன்— நந்தகோபருடைய
மனைவி— பத்நியான யசோதைப்பிராட்டியானவள்
கடைதாம்பால்— கடைகிற கயிற்றாலே
துள்ளி துடிக்கத்துடிக்க— மிகவும் துள்ளித்துடிக்கும்படி
சோப்பு உண்டு— அடியுண்டு
அன்று— அப்போது
ஆப்பு உண்டான்— கட்டுண்டிருந்தவன்
அப்பூச்சி இத்யாதி பூர்வவத்.

(க) "க்ர்ஷ்ணாச்ரயா: க்ர்ஷ்ணபலா:." (உ) ப்ராமகோக்தி. (ங) "துங்கமஞ்சவ்யவஸ்தித:." (ச) "கேசே ஷ்வாக்ர்ஷ்ய விகளத் கிரீடமவநீதலே - ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாத ச."

வ்யா. ஐந்தாம்பாட்டு. சேப்பூண்டித்யாதி. "வன்பாரச்சகடம்" என்கிறபடியே ஏறுதுகள் பூண்டுவலிக்கப்பட்ட அதிபாரமான சகடம் அஸுராவேசத்தாலே நலிவதாக ஆர்த்துக் கொண்டுவர, முலைவாய் தாழ்த்துச் சீறிமிதித்த திருவடிகளாலே அத்தை உருக்குலையும்படி யுதைத்து. திருடியித்யாதி. நெய்க்காசைப்பட்டு களவு கண்டு த்ரவ்யமுடையவர்கள் கையிலே யகப்பட்டுக்கட்டுண்டு. நந்தன்மனைவி யித்யாதி. "என் பிள்ளையைக் களவேற்றுதல், உண்டாகில் கொண்டுபோடே கண்டுபிடித்துக் கட்டிக்கொண்டு வாருங்கோள்" என்று முன்பே சொல்லிவைக்கையாலே, தாயாரான தன்முன்னே யவர்கள் கட்டோடே கொண்டுவர, நந்தன் மனைவி, "பிள்ளை பெற்று வளர்த்தபடி யழகிதாயிருந்தது" என்று தன்னைத்தானே மோதிக்கொண்டு, அவர்கள் முன்னே தன்னைமுற்றியெல்லாந் தோற்றுப்படி, கடைகயிற்றாலே யடிக்கையாலே துள்ளித் துடிக்கத் துடிக்க அடியுண்டு. அன்றித்யாதி. அடித்தவளவுமன்றிக்கே, ஓரிடத்தில் போகாதபடி அவள் பிடித்துக்கட்டி, அப்போது கட்டுண்டிருந்தவன் இன்று அப்பூச்சிக் காட்டுகின்றான். சோப்பூண்டு, ஆப்பூண்டு என்கிற விவை கிட்டிச் சொல்லிக்கிடக்கிறது. ... ... ... ... ரு.

மூ.—செப்பிளமென்முலைத் தேவகிநங்கைக்குச்
சோப்படத்தோன்றித் தொறுப்பாடியோம்வைத்த
துப்பமும்பாலுந் தயிரும்விழுங்கிய
அப்பன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். சு.

பதவுரை.

செப்பு— செப்புப்போலே யிருக்கிற ஸந்நிவேசத்தையுடைத்தாய்
இள— இளையதாய்
மெல்— ம்ருதுவாயிருக்கிற
முலை— ஸ்தநங்களையுடையளாய்
தேவகி நங்கைக்கு— ஆத்மகுண பூர்ணையான தேவகிக்கு
சோப்பட— நன்றாக
தோன்றி— ப்ரகாசித்து
தொறுப்பாடியோம்— ஆய்ப்பாடியிலுள்ள நாங்கள்
வைத்த— சேமித்துவைத்த
துப்பமும்— நெய்யையும்
பாலும்— பாலையும்
தயிரும்— தயிரையும்
விழுங்கிய— அமுதுசெய்த
அப்பன்— உபகாரகனான க்ருஷ்ணன்
வந்து இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஆறாம்பாட்டு. செப்பித்யாதி. செப்புப்போலே யிருக்கிற ஸந்நிவேசத்தை யுடைத்தாய், இளகிப்பதித்து ம்ருதுவாயிருக்கிற முலைகளை யுடையளாய் ஆத்மகுணபூர்ணையான தெவகிப்பிராட்டிக்கு. இப்போது இவளுடைய முலைகளை வர்ணிக்கிறது க்ருஷ்ணன் பிடித்து அமுதுசெய்கைக்கு யோக்யமான முலைகளென்று தோற்றுகைக்காக. கம்ஸபீதியாலே அவனை ஸ்தலாந்தரத்திலே போகவிட்டவித்தனையிறே யுள்ளது. நங்கை யென்கிறது மேல்விளைவதறியவல்லவறிவும், பிள்ளையை அவஸ்தாநுகுணமாக நோக்கவல்ல ப்ரேமமும், பரஸம்ருத்திபரதையும் முதலான குணங்களை யுடையவளாகையாலே.

சோப்படத்தோன்றி. நன்றாகத்தோன்றி. அதாவது- "ஸர்வேச்வரனைப் பிள்ளையாகப் பெறவேணும்" என்று நோன்பு நோற்றதுக்கீடாக, (க) "ஜாதோஸி தேவதேவேச ஶங்கசக்ரகதாதர!" என்கிறபடியே ஸர்வேச்வரத்வ சிஹ்நங்களான திவ்யாயுதங்க

(க) "ஜாதோஸிதேவதேவேச சங்கசக்ரகதாதர."

னோடே வந்து பிறந்து, (க) "ஸபலம் தேவி! ஸஞ்ஜாதம் ஜாதோஹம் யத் தவோதராத்" என்று அவனுடைய அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுகை. "பிறந்து" என்னுதே "தோன்றி" என்றது, (உ) "தேவகீ பூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம்" என்கிறபடியே கர்ப்பவாஸ தோஷமற ஆவிர்ப்பவித்தமையைப் பற்ற. (ஈ) "நைஷகர்ப்பத்வமாபேதே நயோந்யா மவஸத்ப்ரபு" என்னக்கடவதிறே.

தோறுப்பாடியோம். தோறு- பசு. தொறுவர்- ஆயர். தோறுப்பாடியோமென்றது- ஆய்ப்பாடியிலுள்ளோமான நாங்களென்றபடி. வைத்த. சேமித்துவைத்த. துப்பமித்யாதி. துப்பம்- நெய். நெய்யையும் பாலையும் தயிரையு மமுதுசெய்த. எல்லாவற்றையும் சேர விழுங்கினவென்கையாலே—"துப்பமும் பாலும்" என்கிற விடத்தில், தூஞ்சின நெய்யும் காய்ந்த பாலும் விவக்ஷிதம். அன்றிக்கே, "விழுங்கிய" என்கிறவிது- அமுதுசெய்கிறத்துக்கு பர்யாயமான சொல்லாய், த்ரவ்யாநுகுணமாகக் கொள்ளவுமாம். அப்பன். உபகாரகன். இவ்வோ த்ரவ்யங்களை விரும்பியமுது செய்து வுபகாரந்தன்னைச் சொல்லுகிறது. வந்துப்பூச்சிகாட்டுகின்றான். ... ... ... ... ... ... சு.

மூ.—தத்துக்கொண்டாள்கொலோ தானேபெற்றாள்கொலோ
சித்தமனையா ளசோதை யிளஞ்சிங்கம்
கொத்தார்கருங்குழற் கோபாலர் ¶ கோளரி
அத்தன்வந்துப்பூச்சிகாட்டுகின்றா னம்மனே யப்பூச்சிகாட்டுகின்றான். எ.

பதவுரை.

தத்து— ஸ்வீக்ருதபுத்ரனாக
கொண்டாள் கொல் ஓ— வளர்த்துக்கொண்டாளோ;
(அன்றிக்கே,)
தானே— தானே [மெய்நொந்து]
பெற்றாள்கொல் ஓ— பெற்றாளோ;
சித்தம் அனையாள்— தன்கருத்துக்கு ஒத்து நடக்குமவளான
அசோதை— யசோதையின் வயிற்றில் பிறந்தவனாய்
இள சிங்கம்— பாலஸிம்ஹம் போலேயிரா நின்றவனாய்
கொத்து— பூங் கொத்துக்களாலே
ஆர்— நிறைந்திரா நின்றதாய்
கரு— கறுத்திராநின்ற
குழல்— கேசபாசத்தையுடையனாய்
கோபாலர்— இடையர்களுக்கு
கோள்— மிடுக்கையுடைய
அரி— ஸிம்மம் போன்றவனாய்
அத்தன்— ஸ்வாமியானவன்
வந்து இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஏழாம்பாட்டு. தத்தித்யாதி. (ச) தத்த புத்ரனாக வளர்த்துக்கொண்டாளோ; அன்றியே, தானே மெய் நொந்து பெற்றாளோ. அதாவது-"அசோதையிளஞ்சிங்கம்" என்ன; இவள் (ச) தத்தஸ்வீகாரம் செய்யக்கண்டிலோம், இவள் பெறுகிறபோது இவளைப்பார்த்

(க) "ஸபலம் தேவி! ஸஞ்ஜாதம் ஜாதோஹம் யத் தவோதராத்."
(உ) "தேவகீ பூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம்."
(ஈ) "நைஷகர்ப்பத்வமாபேதே நயோந்யா மவஸத்ப்ரபு."
¶ (பா) "கோபால கோளரி." (ச) ஒத்தீ.

துப் பேணிக்கொண்டிருந்த நாமெல்லாம், இவள் பெறக்கண்டிலோம், அயர்த்துறங்கிவிட்
டோம், இவள்தான் "நான் பெற்றேன்" என்று சொல்லக்கேட்டோ மித்தனையிறே.
(க) "ததர்சச ப்ரபுத்தாஸா யசோதா ஜாதமாத்மஜம்" என்கிறபடியே அவளும் அப்
போது மோஹித்துக்கிடந்து உணர்ந்த பின்பிறே யிவனைக்கண்டது. இப்படி தான் சொல்லு
கிறது அதிலோகமான விவனுடைய ரூபகுணசேஷ்டிதங்களைக் கண்டால் "இவள்பிள்ளை"
என்று சொல்லப்போகாதபடி யிருக்கையாலே. அவள் தானும், "இம்மாயம் வல்ல பிள்ளை
நம்பீ யுன்னை யென்மகனே யென்பர் நின்றார்" என்று இவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்
களைக்கண்டால் நீ என்னுடைய பிள்ளையாகக்கூடாது, நடுநின்றவர்கள் உன்னை என்னு
டைய பிள்ளை என்றே சொல்லாநின்றார்கள் என்னும்படியாயிறே யிருப்பது.

சித்தமித்யாதி. தீம்புகண்டாலும் நியமியாதே தன் நெஞ்சுக்கு ஒத்து நடக்கும் ய
சோதையுடைய பிள்ளையாய் பாலஸிஹ்மம்போலே அவளுக்கு அடங்காதே திரிகிறவன்.
நியமித்தாளாகிலும் "அங்ஙனும் தீமைகள் செய்வர்கொலோ நம்பீ! ஆயர் மடமக்களை"
என்று இவன் தீம்பிலே கைவளரும்படியாக வாய்த்து நியமிப்பது. "அஞ்சவுரப்பாளசோ
தையாணாடவிட்டிட்டிருக்கும்" என்னக்கடவதிறே. கர்வத்தாலும் அநபிபவநீயதையா
லும்- இளஞ்சிங்கமென்கிறது. கோத்தாரித்யாதி. உகந்தார் உகந்தபடி சூட்டின பூங்கொத்
துக்களாலே நிறைந்திருப்பதாய் (உ) "அஞ்ஜநபுஞ்ஜச்யாமகுந்தளம்" என்கிறபடியே
இருண்டிருப்பதான திருக்குழலை யுடையனாய், கோபாலர் கீழடங்காமல், மிடுக்கையுடைத்
தான ஸிஹ்மம்போலே செருக்கி மேனாணித் திருக்குமவன். அசோதை யிளஞ்சிங்கம்- கோபா
லர் கோளரி. தாய்க்கடங்காதவன் ஊர்க்கடங்கானிறே. கோள்- மிடுக்கு. அத்தன். ஸ்வாமி.
கீழ்ச்சொன்ன ஸ்வபாவங்களுக்குத் தோற்றுச் சொல்லுகிற வார்த்தை. வந்தப்பூச்சி காட்
டுகின்றான். ... ... ... ... ... ... ௭.

மூ.—கொங்கைவன்கூனி சொற்கொண்டு குவலயத்
துங்கக்கரியும் பரியுமிராச்சியமும்
எங்கும்பரதற்கருளி வன்கானடை
அங்கண்ணனப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். ௮.

பதவுரை.

கொங்கை — முதுகிலே முலைபுறப்பட்டாப்போலே கிளர்ந்ததாய்
வன்— வலியதான
கூனி— கூனையுடைய மந்தரையின்
சொல் கொண்டு— வார்த்தையைக்கொண்டு
குவலயம்— பூமண்டலத்திலுள்ள ஆனைகளுக்குள்ளே
துங்கம்— உயர்ந்திருப்பதான
கரியும்— ஆனைகளையும்
பரியும்— குதிரைகளையும்
இராச்சியமும்— ராஜ்யத்தையும்
எங்கும்— எழுந்தருளுகிற காட்டையும்
பரதற்கு— பரதாழ்வானுக்கு
அருளி— கொடுத்து
வன்— ஒருவராலும் புகுதற்கரிதான
கான் — காட்டை
அடை— அடைந்த
அம்— அழகிய
கண்ணன்— கண்களையுடையவன்
அப்பூச்சி இத்யாதி பூர்வவத்.

(க) "ததர்சச ப்ரபுத்தாஸா யசோதா ஜாதமாத்மஜம்." (உ) "அஞ்ஜநபுஞ்ஜச்யாமகுந்தளம்"

வ்யா. எட்டாம்பாட்டு. கொங்கையித்யாதி. முதுகிலே முலைபுறப்பட்டாற் போலே திரண்டு கிளர்ந்த வலிய கூனையுடையளான மந்தரையுடைய வசநத்தைக் கொண்டு. காட்டுக்குப்போயிற்று பித்ர்வசநங்கொண்டாயிருக்க, குப்ஜையுடைய வசநங்கொணடென்பா னென்னென்னில்; (க) " நம்ந்த்ராயா நஸமாதுரஸ்ய தோஷோ ந ராஜ்ஞ꞉ " என்கிறபடியே வநப்ரவேசஹேதுக்கள் சொல்லுகிறவிடத்தில் முந்துறவெடுத்தது இவளையிறே. இவளுடைய வசநத்தாலே *கலக்கிய மாமனத்தனளாயிறே கைகேசி வரம் வேண்டிற்று; அதடியாகவிறே சக்ரவர்த்தி போகச்சொல்ல வேண்டிற்றும். ஆகையால் எல்லாவற்றுக்கும் மூல மிது வாகையாலே இவளுடைய சொல்கொண்டு போனானென்கிறது.

குவலயத்துங்கக்கரியும். பூமியிலானைக ளெல்லாவற்றிலும் விஞ்சின சத்ருஞ்சயன் முதலானவானைகளும். பரியும். அப்படி லோகவிலக்ஷணமான குதிரைகளும். இராச்சியமும். அகண்டகமான ராஜ்யமும். எங்கும். (உ) " இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ்ஸஸைலவநகாநநா " என்கிறபடியே எழுந்தருளுகிற காடுதானும். பரதற்கருளி. கைகேயீவராநுகுணமாக சக்ரவர்த்திவசநத்தின்படியே ஸ்ரீ பரதாழ்வானுக்குக் கொடுத்து. வன்கானடையித்யாதி. ஒருவரால் ப்ரவேசிக்க வரிதான வலிய காட்டையடைந்த வழகிய ஸாலபனானவன். கட்டினகாப்போடே காடேறப் போகச் சொன்ன விடத்தில் முகத்தில் கருகுதலின்றிக்கே முடியைத் தவிர்ந்து ஜடையைப் புனைந்து நாட்டை விட்டுக் காடேறப் போனபடியை நினைத்து, அழகிய ஸாலபனென்கிறது. அன்றிக்கே, (ங) " ராமꣳ கமலபத்ராக்ஷம் " என்கிறபடியே அழகிய திருக்கண்களை யுடைய னென்னவுமாம். அப்போது, " ராஜ்யைச்வர்யத்தைவிட்டுக் காட்டிற்போந்தோம் " என்னும் க்லேசமின்றிக்கே அகவாயில் ஹர்ஷம் திருக்கண்களிலே தோன்றும்படியாகப் போனபடியைச் சொல்லுகிறது. ... ... அ.

மூ.—பதகமுதலைவாய்ப் பட்டகளிறு
கதறிக்கைகூப்பி யென்கண்ணாகண்ணாவென்ன
உதவப்புள்ளூர்ந்தங் குறுதுயர்தீர்த்த
அதகன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். கூ.

பதவுரை.

பதகம்— கொடிதான
முதலை— முதலையின்
வாய்— வாயில்
பட்ட— அகப்பட்ட
களிறு— ஸ்ரீ கஜேந்த்ராழ்வான்
கதறி— கதறிக்கொண்டு
கை கூப்பி— அஞ்சலிபண்ணி
என் கண்ணா! கண்ணா! என்ன— "எனக்கு நிர்வாஹகனானவனே!" என்று பலகாலும் கூப்பிட
உதவ— அவ்வாபத்காலத்தில் உதவுகைக்கு
புள்— பெரியதிருவடி நாயனாரை
ஊர்ந்து— வேகமாய் நடத்திக்கொண்டு சென்று

(க) " நமந்த்ரியா நசமாதுரஸ்யா தோஷோ ந ராஜ்ஞꣳ. "
(உ) இக்ஷ்வாகூணா மியம் பூமி ஸ்ஸசைல வநகாநநா. " (ங) "ராமꣳ கமலபத்ராக்ஷꣳ"

அங்கு— அந்தக்குளத்தில்
உழு- முதலையின்வாயிலகப்பட்டுக் கொண்டு
ஸ்ரீ கஜேந்த்ரன்பட்ட
துயர்— துக்கத்தை
தீர்த்த— நீக்கின
அதகன்— மிடுக்கனானவன்
வந்து இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. பதகமுதலை. பதகம்-கொடுமை. "கொடியவாய்விலங்கு" என்னக்கடவதிறே. "அதின்விடத்திலுக் கனுங்கியழுங்கியவானை" என்னும்படி. ஸ்ரீகஜேந்த்ராழ்வானை நோவுபடுத்தின கொடுமையைச் சொல்லுகிறது. அன்றிக்கே, "பாதகம்" என்கிறத்தை, "பதகம்" என்று குறைத்துக்கிடக்கிறதாய் - பாதகத்தை யுடைத்தான முதலை யென்னவுமாம். அதாவது- சாபோபஹதமாய் வந்து கிடந்ததிறே. இம்முகத்தாலே தன்னுடைய சாபமோக்ஷமென்று அறிகையாலே தன்கார்யஸித்தியளவும் இவன் காலைப்பிடித்த பிடி நழுவவிடாதென்றபடி. வாய்ப்பட்டகளிறு. அதன்வாயிலே அகப்பட்ட யானையானது. தன்னிலமல்லாமையாலே ஒரு நீர்ப்புழுவின்கையிலே யகப்பட்டதாய்த்து. வெளிநிலமாகில் இதின் அருகுவரமாட்டாதிறேயது.

கதறியித்யாதி அதின்வாயிலே யகப்பட்டவிடத்தில் "நம்முடைய பலத்தாலே தள்ளிக் கரையேறுகிறோம்" என்று (க) "[illegible]" என்கிறபடியே ஆயிரம் தேவஸம்வத்ஸரம் அது நீருக்கிழுக்க, தான் கரைக்கிழுக்கச் சென்றவிடத்திலே, அதுக்குத் தன்னில மாகையாலும் அபிமத ஸித்தியாலும் "முழுவலிமுதலை" என்னும்படி பலமதிசயித்து, தனக்குத் தன்னிலமல்லாமையாலும் அபிமதாலாபத்தாலும் பலம் க்ஷீணமாய், துதிக்கை முழுத்தும்படியாகையாலே "இனி நம்மால் செய்யலாவதொன்றுமில்லை" என்று (உ) "[illegible]" என்கிறபடியே அத்தசையில் ஸர்வேச்வரனையே தனக்கு ரக்ஷகனாக நினைத்து, தன்கையையெடுத்து அஞ்சலிபண்ணி, தன்னார்த்தியெல்லாம் தோற்றும்படி கூப்பிட்டுக்கொண்டு, எனக்கு நிர்வாஹகனானவனேயென்று பலகாலும்சொல்ல. "நாராயணா! ஓ!மணிவண்ணா! நாகணையாய்! வாராய்" என்று கூப்பிட்டானாகவருளிச்செய்தார் திருமங்கையாழ்வார்; இவர் "என்கண்ணா கண்ணா" என்று கூப்பிட்டானாக வருளிச்செய்தார்; (ங) "[illegible]" என்று கொண்டு- "ஆதிமூலமே" என்றுகூப்பிட்டானாக பௌராணிகர் சொன்னார்களிறே. இவை தன்னில் சேரும்படி யென்னென்னில்; "மூலம்" என்கிறவிடத்தில் அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனான ஆகாரத்தை நினைத்துக் கூப்பிட்டானாகையாலே, அதுக்கு பர்யாய சப்தங்களையிட்டு ஆழ்வார்களருளிச்செய்தார்களாகையால் ஒன்றாம் சேரக்குறையில்லை.

உதவவித்யாதி. இந்த ஆர்த்தத்வநி திருச்செவிப்பட்டபோதே திருப்படுக்கையில் நின்றும் பதறியெழுந்திருந்து (ச) "[illegible]" இத்யாதிப் படியே ஸேனைமுதலியார் திருக்கைகொடுக்கவும்பற்றாமல் திருவடிநிலைகோத்து எழுந்தருளுகையுமின்றிக்கே, வெறும்தரையிலே பத்தெட்டடியிட்ட பதற்றத்தைக்கண்டு "இதுக்கடியென்" என்றுபயப்பட்டு திவ்யாந்தப்புரம் கைநெரிக்க, பெரியதிருவடியைப் பண்செய்து

(க) "கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே."
(உ) "பரமாபதமாபந்நோ மநஸா சிந்தயத்தரிம்."
(ங) "மூலேதி முக்த பதமாலபதி த்விபேந்த்ரே."
(ச) "அதந்த்ரித சமூபதி ப்ரஹிதஹஸ்தம்."

ஏறப்பெறாமல், வெறும்புறத்திலே மேற்கொண்டு, "அந்த ஆர்த்திக்குதவவேணும்" என்னு மதைப்பற்ற அவனை ப்ரேரித்துவிரைய நடத்திக்கொண்டுசென்று, அந்தப் பொய்கையில் முதலையின்கையிலே யகப்பட்டு ஸ்ரீகஜேந்த்ரன்பட்ட அதிமாத்ர து:க்கத்தைப்போக்கின. ஸ்ரீகஜேந்த்ரனுக்கு து:க்கமாவது (௧) "நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணாய மதுஸூதந! கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் ஹரே:" என்கிறபடி பொய்கையிற்பூ, செவ்விபழியாமல் திருவடிகளிற்சாத்தப் பெறுகிறிலோமென்னுமது. அதுகன். மிடுக்கன். இப்படி ஆச்ரித ரக்ஷணம்பண்ணின சக்திவிசேஷத்தைச் சொல்லுகிறது. வந்தப்பூச்சிகாட்டு கின்றான். ... ... ... ... ... ... ... ... ... ௯.

மூ.—வல்லாளிலங்கைமலங்கச் சரந்துரந்த
வில்லாளனை விட்டுசித்தன்விரித்த
சொல்லார்ந்தவப்பூச்சிப் பாடலிவைபத்தும்
வல்லார்போய்வைகுந்த மன்னியிருப்பரே. ௰.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| வல் ஆள்— | வலிய ஆள்களையுடைய | அப்பூச்சி— | அப்பூச்சி விஷயமான |
| இலங்கை— | லங்காபுரியானது | பாடல்— | பாட்டுக்களாயிருக்கிற |
| மலங்க— | கலங்கும்படி | இவைபத்தும்— | இப்பத்தையும் |
| சரம்— | பாணங்களை | வல்லார்— | அதிகரிக்கவல்லவர்கள் |
| துரந்த— | ஏவின | போய்— | ப்ரக்ருதிமண்டலத்தைக் கடந்து போய் |
| வில் ஆளனை— | வில்லை ஆண்டவனை | வைகுந்தம்— | ஸ்ரீவைகுண்டத்திலே |
| விட்டுசித்தன்— | பெரியாழ்வார் | மன்னி இருப்பர்— | பொருந்தியிருப்பார்கள். |
| விரித்த— | பரப்பி அருளிச்செய்த வையாய் | | |
| சொல் ஆர்ந்த— | சொற்களால்நிறைந்திருப்பதாய் | | |

வ்யா. பத்தாம்பாட்டு. வல்லாளிலங்கை. வலிய ஆள்களை யுடைத்தாகையாலே ஒருவரால் அடக்கவொண்ணாத பரிகரக்கட்டுடைத்தான லங்கையானது. ராவணன் மதிக்கும்படியான ஆண்பிள்ளைகள் வர்த்திக்கிறவூரிறே. மலங்க. செருப்பும் தேவாரமும் ஒக்கக்கட்டிப் போக்கிடந்தேடி மலங்கும்படியாக. சரந்துரந்த வில்லாளனை. திருச்சரங்களை மேன்மேலும் நடத்தின வில்லையுடையவனை. இத்தால்-ஈச்வரத்வப்ரகாசமன்றிக்கே, அவதாரத்துக் கநுகுணமாகநின்ற அப்பாலே அவ்வாளுடைமையடர்த்த ஆண்பிள்ளைத் தனத்தைச் சொல்லுகிறது. இத்திருமொழி க்ருஷ்ணாவதார விஷயமாயிருக்க, நிகமத்தில் இப்படியருளிச் செய்தது, அவ்வவதாரத்துக்கும் இவ்வவதாரத்துக்குமுண்டான ஐக்யத்தைப்பற்றவிறே. "வன்கானடை யங்கண்ணன்" என்று இந்த ஐக்யம் கீழும் சொல்லப்பட்டதிறே.

விட்டுசித்தன்விரித்த. பெரியாழ்வார் விஸ்தரேணவருளிச் செய்தவையான. சொல்லார்ந்தவித்யாதி. சொல்நிரப்பத்தையுடைத்தாய் அப்பூச்சிவிஷயமான பாட்டுக்களாயிருக்கிற விப்பத்தையும் ஏதேனுமொருபடிவல்லவர்கள். சொல்லார்ந்தவென்றது- அதிகரிப்பார்க்கு

(௧) "நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந!- கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் ஹரே:."

இதினர்த்தத்தில் போகவேண்டா, சப்தாஸந்தானே அமையுமென்னும்படியிருக்கு மென்னவுமாம். வல்லாரென்றது-ஸாபிப்ராயமாக வல்லாரென்னவுமாம். போயித்யாதி. இதினுடைய வ்யவஸாயமே ஹேதுவாக அர்ச்சிராதி மார்க்கத்தாலேபோய் ஸ்ரீவைகுண்டத்திலே பவனையநுபவித்து மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு யாவத்காலமு மிருக்கப்பெறுவர். ... ய.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—மெச்சு மலை கா யிருட்டே சேப்பூண்ட செப்புத்
தத்துக் கோங்கை பதகம் வல்லா ளரவணை.

ஆக - திருமொழி, ய- க்கு, பாட்டு-ககரு.

அ. ஆழ்வார்களெல்லாரும் க்ர்ஷ்ணாவதார ப்ரவணராயிருந்தார்களேயாகிலும், அவர்களெல்லாரையும் போலன்றிக்கே, க்ர்ஷ்ணாவதாரத்திலே அதிப்ரவணராய், அவ்வவதார ரஸாநுபவத்துக்காக கோபஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணி, "போகத்தில் வழுவாத புதுவையர்கோன்" என்கிறபடியே அவ்வவதார ரஸமுள்ளதெல்லாம் அநுபவிக்கிற வராகையாலே, முதல் திருமொழியிலே - அவன் அவதரித்த ஸமயத்தில் அங்குள்ளார்செய்த உபலாளந விசேஷங்களையும், அநந்தரம், யசோதைப்பிராட்டி அவனுடைய பாதாதி கேசாந்தமான அவயவங்களிலுண்டான வழகை ப்ரத்யேகம் ப்ரத்யேகமாகத் தானநுபவித்து, அநுபூஷைக்களையும் தான் அழைத்துக்காட்டினபடியையும், அநந்தரம், அவள் அவனைத் தொட்டிலேற்றித் தாலாட்டினபடியையும், பிற்காலமாயிருக்க, தத்காலம்போலே பாவநாப்ரகர்ஷத்தாலே யசோதாதிகளுடைய ப்ராப்தியையும் ஸ்நேஹத்தையுமுடையராய்க்கொண்டு தாமநுபவித்து அநந்தரம், அவன் அம்புலியை யழைக்கை, செங்கீரையாடுகை, சப்பாணிகொட்டுகை, தளர்நடை நடக்கை, அச்சோவென்னும், புறம்புல்குவானென்னும், யசோதைப்பிராட்டி அபேக்ஷிக்க முன்னும்பின்னும் வந்தணைக்கையாகிற பாலசேஷ்டிதங்களை, (க) தத்பாவயுக்தராய்க்கொண்டு அடைவே அநுபவித்துக்கொண்டுவந்து, கீழ்த்திருமொழியிலே-அவன் திருவாய்ப்பாடியிலுள்ளாரோடே அப்பூச்சிகாட்டிவிளையாடின சேஷ்டிதத்தையும் தத்காலத்திலே அவள் அநுபவித்துப் பேசினாற்போலே தாமும் அநுபவித்துப்பேசி ஹ்ருஷ்டரானார்; இனி, அவன் லீலா வ்யாபாரச்ராந்தனாய் முலையுண்கையையும் மறந்து நெடும்போதாகக்கிடந்து உறங்குகையாலே "உண்ணாப்பிள்ளையைத்தாயறியும்" என்கிறபடியே யசோதைப் பிராட்டி அத்தையறிந்து, "அம்ம முண்ணத்துயிலெழாயே" என்று அவனை யெழுப்பி, நெடும்போதாக முலையுண்ணாமே கிடந்தமையை அவனுக்கறிவித்து, நெறித்துப்பாய்கிற தன் முலைகளை யுண்ணவேணுமென்று அபேக்ஷித்து, அவன் இருய்த்திருந்தவளவிலும் விடாதே நிர்ப்பந்தித்துமுலையூட்டின ப்ரகாரத்தை, தாமநுபவிக்க வாசைப்பட்டு, (க) தத்பாவயுக்தராய்க்கொண்டு அவனை அம்ம முண்ண வெழுப்புகை முதலான ரஸத்தை யநுபவித்துப்பேசி ஹ்ருஷ்டராகிறார் - இத்திருமொழியில். ... ... ... ... ... ... *

(க) தத்பாவயுக்த.

மூ.—அரவணையா யாயரேறே யம்மமுண்ணத் துயிலெழாயே
இரவுமுண்ணா துறங்கிநீபோ யின்றுமுச்சி கொண்டதாலோ
வரவுங்காணேன் வயிறசைந்தாய் வனமுலைகள் சோர்ந்துபாயத்
திருவுடையவாய்மடுத்துத் திளைத்துதைத்துப் பருகிடாயே. க.

பதவுரை.

அரவு— திரு அனந்தாழ்வானை
அணையாய்— படுக்கையாகவுடையனாய்
ஆயர்— இடையர்களுக்கு
ஏறே!— தலைவனானவனே!
அம்மம் உண்ண— முலைப்பாலுண்ண
துயில்— திருப்பள்ளியில் நின்றும்
எழாய்— எழுந்திருக்கவேணும்;
நீ— நீ
இரவும்— நேற்றுராத்திரியும்
உண்ணாது— முலையுண்ணாமல்
உறங்கி போய்—உறங்கிப்போனதுமன்றிக்கே
இன்றும்— இன்றைக்கும்
உச்சி கொண்டது— நடுப்பகலாயிற்று;
வரவும் காணேன்— (நீயாக எழுந்திருந்து அம்மமுண்ண வேணுமென்று) வந்த படியும் கண்டிலேன்,
வயிறு அசைந்தாய்— (அபேக்ஷை யில்லை யென்ன வொண்ணாதபடி) வயிறு தளர்ந்திரா நின்றாய்,
வனம் முலைகள்— அழகியமுலைகள்
சோர்ந்து பாய— பால் சொரிந்து பாயும் படியாக
திரு உடைய— அழகு பொருந்திய
வாய்— திருப்பவளத்தை
மடுத்து— வைத்து
திளைத்து— கர்வித்து
உதைத்து — கால்களா லென்னுடம்பி லுதைத்துக் கொண்டிருந்து
பருகிடாய்— பாநம் பண்ணவேணும்,
(ஆல், ஓ, ஏ, - இவை அசைச்சொற்கள்.)

வ்யா. முதற்பாட்டு. அரவணையித்யாதி. மென்மை, குளிர்த்தி, நாற்றம் தொடக்கமா னவற்றை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வானைப்படுக்கையாகவுடையனாயிருந்துவைத்து (க) "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகத:" என்கிறபடியே அப்படுக்கையை விட்டுப் போந்து அவதீர்ணனாய் ஆயர்க்கு ப்ரதாநனானவனே. அப்படுக்கைவாய்ப்பாலே பள்ளிகொண்டு போந்தவாஸநையோ ஆயரேறானவிடத்திலும் படுக்கைவிட்டெழுந்திராதே பள்ளிகொள்ளுகிறது? அவன்தான் இதர ஸஜாதீயனா யவதரித்தால் "சென்றால் குடையாம்" என்கிற படியே (உ) சந்தாநுவர்த்தியாய் அடிமைசெய்யக்கடவ திருவனந்தாழ்வானும் அவனுடைய அவஸ்த்தாநுகுணமாகப் பள்ளிகொள்வதொரு திருப்படுக்கையான வடிவைக் கொள்ளக்கூடுமிறே. ஆகையால் அங்குண்டானஸுகமெல்லாம் இங்குண்டாயிருக்குமிறே கண்வளர்ந்தருளுகிறவனுக்கு. அம்மமுண்ணத்துயிலெழாயே. "முலையுண்ண" என்னாதே, அம்மமுண்ண வென்றது - சைசவாநுகுணமாக அவள்சொல்லும் பாசுரமதுவாகையாலே. துயில்-நித்ரை. எழுகையாவது - அது குலைந்தெழுந்திருக்கை. எழா யென்கிறது - எழுந்திருக்க வேணுமென்கிற ப்ரார்த்தனை. இரவுமித்யாதி. நீ ராத்ரியுண்ணாதே யுறங்கி, அவ்வளவுமன்றிக்கே இன்றும் போது உச்சிப்பட்டது. ராத்ரி அலைத்தலாலே கிடந்துறங்கினால் விடிந்தாற்றானுமுண்ணவேண்டாவோ; விடிந்தவளவேயோ, போது உச்சிப் பட்டதுகாண். ஆலும் ஓவு

(க) "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகத:." (உ) ஸாநுவ்ருத்தி.

மாகிற அவ்யபதிசம்டும் விஷாதாதிசய ஸூசகம். வரவித்யாதி. நீயாக வெழுந்திருந்து அம்மே முலைதா வேணுமென்று வாயும் கண்டிலேன்; அபேக்ஷையில்லையென்ன வொண்ணுத படி வயிறு தளர்ந்திராநின்றாய். வன்முலைகள்சோர்ந்துபாய. வனப்பு- அழகும், பெருமையும். முலைகளானவை யுன்பக்கல் ஸ்நேஹத்தாலே நெறித்து, பால் உள்ளடங்காமல் வடிந்து பாக்க. உனக்குப் பசியுண்டாயிருக்க, இப்பால் இப்படி வடிந்துபோக உண்ணுதொழிவதே! என்று கருத்து. திருவுடையவாய்மடுத்து. அழகிய திருப்பவளத்தைமடுத்து. திரு- அழகு. இவ்வளமுலையிலே உன்னுடைய திருவுடையவாயை அபிநிவேசம் தோற்ற மடுத்து. திளைத்தித்யாதி. முலையுண்கிற ஹர்ஷந்தோற்ற க்ரீடித்துக் கால்களாலே யென்னுடம்பிலே புதைத்துக் கொண்டிருந்து உண்டிடாய். பருகுதல்- பாநம்பண்ணுதல். ... ... க.

மூ.—வைத்தநெய்யுங்காய்ந்தபாலும் வடிதயிரு நறுவெண்ணெயும்
இத்தனையும் பெற்றறியே னெம்பிரான்! நீபிறந்தபின்னை
எத்தனையுஞ் செய்யப்பெற்றா யேதுஞ்செய்யேன் கதம்படாதே
முத்தனைய முறுவல்செய்து மூக்குறிஞ்சி முலையுணாயே. உ.

பதவுரை.

எம்பிரான்!— எனக்கு ஸ்வாமியானவனே!
நீ பிறந்தபின்னை — நீ எனக்குப் பிள்ளையாக வந்து பிறந்ததற்குப்பின்பு
வைத்த நெய்யும்— உருக்கிவைத்த நெய்யும்
காய்ந்த பாலும்— காய்ச்சின பாலும்
வடி தயிரும்— கட்டியாகத் தோய்த்ததயிரும்
நறு வெண்ணெயும்— மணம்மிக்க வெண்ணெயும்
இத்தனையும்— (ஆகிய) இவற்றிலொன்றும்
பெற்று அறியேன்— பெற்றறியவில்லை
எத்தனையும்— உனக்குத் தோன்றின படியெல்லாம்
செய்ய பெற்றாய்— செய்யக்கடவை,
ஏதும் செய்யேன்— நானுன்னைப் பிடித்தலடித்தல் முதலியவையொன்றும் செய்யக் கடவேனல்லேன்;
கதம் படாதே— நீ கோபியாதேகொள்;
முத்து அனைய— முத்துப்போன்ற
முறுவல் செய்து — ஸ்மிதம் பண்ணிக்கொண்டு
மூக்கு உறிஞ்சி— மூக்காலே உரோசிக்கொண்டு
முலை உணாய்— முலைப்பாலுண்ண வேணும்

வ்யா. இரண்டாம்பாட்டு. வைத்தவித்யாதி. பழுதற வுருக்கிவைத்த நெய்யும், செறிவுறக்காய்ந்த பாலும், நீருள்ளது வடித்துக் கட்டியாயிருக்கிற தயிரும், செவ்வையிலே கடைந்தெடுத்த நறுவிய வெண்ணெயும். எம்பிரான் நீபிறந்தபின்னை - இத்தனையும் பெற்றறியேன். என்னுடைய நாயகனே! நீ பிறந்தபின்பு இவையொன்றும் பெற்றறியேன். அன்றிக்கே, இத்தனையுமென்றது- ஏகதேசமுமென்றபடியாய், இவற்றில் அல்பமும் பெற்றறியேனென்னுதல். இப்படி யென்னைக் களவேற்றுவதே! என்னைப் பிடித்தல் அடித்தல் செய்யவன்றோ நீ இவ்வார்த்தை சொல்லிற்றென்று குபிதனாக; எத்தனையும் செய்யப்பெற்றாய். உனக்கு வேண்டினதெல்லாம் செய்யக்கடவை. ஏதும்செய்யேன் கதம்படாதே. நான் உன்னைப் பிடித்தல் அடித்தல் ஒன்றும் செய்யக்கடவேனல்லேன், நீ கோபிக்க வேண்டா. கதம்- கோபம். முத்தனையவித்யாதி. முத்துப்போலே யொளி விடாநிற்கும் முறுவலைச்செய்து.

அதாவது- கோபத்தைத்தவிர்ந்து ஸ்மிதம் பண்ணிக் கொண்டென்கை. முக்குறிஞ்சி முலை யுணாயே. முலைக்கீழை ‡முழுசி மூக்காலே யுரோசியிருந்து முலையையமுதுசெய்யாய். உ.

மூ.—தந்தம்மக்க ளழுதுசென்றாற் றாய்மாராவார் தரிக்ககில்லார்
வந்துநின்மேற் பூசல்செய்ய வாழவல்ல வாசுதேவா!
உந்தையாருன் றிறத்தரல்ல ருன்னைநானொன் றுரப்பமாட்டேன்
நந்தகோப னணிசிறுவா! நான்சுரந்த முலையுணாயே. ௩.

பதவுரை.

| | |
|---|---|
| தம் தம்— தங்கள் தங்களுடைய | வாசுதேவா! — ஸ்ரீ வஸுதேவர் திருமகனான கண்ணனே! |
| மக்கள்— பிள்ளைகள் | உந்தையார்— உன் தமப்பனார் |
| அழுது சென்றால்— அழுது கொண்டு போனால் | உன் திறத்தர் அல்லர்— உன் சேஷ்டைகளை நோக்குந் தன்மையை யுடையரல்லர், |
| தாய்மார் ஆவார்— அவர்களுடைய தாயாரானவர்கள் | நான்— நானோ |
| தரிக்க கில்லார்— பொறுத்திருக்க மாட்டார்கள் [ கில்லார்- ஸமர்த்தைகளாக மாட்டார்கள். ] | உன்னை— பெருந்தீம்பனான உன்னை |
| வந்து— ஊரார் தங்கள் பிள்ளைகளைப்பிடித்துக் கொண்டு வந்து | ஒன்று— ஒருபடியாகவும் |
| நின்மேல்— உன்மேல் | உரப்ப மாட்டேன்— நியமிக்க வல்லளல்லேன் ( அவையெல்லாம் கிடக்க; ) |
| பூசல் செய்ய— சண்டையிட | நந்த கோபன்— நந்த கோபருடைய |
| வாழவல்ல—இதுவே வாழ்ச்சியாயிருக்கவல்ல | அணி சிறுவா!— அழகிய பிள்ளாய்! |
| | நான் சுரந்த—: (இப்போது) நான் சுரந்த |
| | முலை உணாய்—முலைப்பாலை உண்ணவேணும். |

வ்யா. மூன்றாம்பாட்டு. தந்தமித்யாதி. ஊரில் பிள்ளைகளோடே விளையாடப் புக்கால் எல்லாரையும் போலன்றிக்கே, நீ அவர்களை அடித்துக் குத்தி விளையாடா நின்றாய்; இப்படி செய்யலாமோ, தந்தம் பிள்ளைகள் அழுது சென்றால் அவர்கள் தாய்மாரானவர்கள் பொறுக்கமாட்டார்கள். வந்துநின்மேல் பூசல் செய்ய. அவர்கள் தாங்கள், தங்கள் பிள்ளைகளையும் பிடித்துக்கொடுவந்து உன்மேலே $ சிணுகிட்டுப் பிணங்க. வாழவல்ல. அதில் ஒரு சற்று மிளைப்பின்றிக்கே ப்ரியப்பட்டு இதுவே போகமாக இருக்கவல்ல. வாசுதேவா. வஸுதேவ புத்ரனானவனே. பசுவின் வயிற்றிலே புலியாயிருந்தாயீ!. உந்தையாரித்யாதி. உன்னுடைய தமப்பனாரானவர் உன்னிடையாட்ட மிட்டெண்ணார். உன்னை சிக்ஷித்து வளர்க்காரென்றபடி. உன்னையித்யாதி. தீம்பனான வுன்னை அபலையான நான் ஒருவழியாலும் தீர நியமிக்கமாட்டேன். நந்தகோபனணிசிறுவா. ஸ்ரீநந்தகோபர்க்கு வாய்த்த பிள்ளாய்!. அணி- அழகு. இவன் தீம்பிலே உளைந்து சொல்லுகிறவார்த்தை. நான்சுரந்தமுலையுணாயே. அவையெல்லாம் கிடக்க; இப்போது நான் சுரந்தமுலையை அமுது செய்யாய். ... ... ௩.

மூ.—கஞ்சனன்றாற் புணர்க்கப்பட்ட கள்ளச்சகடு கலக்கழியப்
பஞ்சியன்ன மெல்லடியாற் பாய்ந்தபோது நொந்திடுமென்று

‡ முழுசி- முட்டி. $ சிணுகு- சண்டை.

அஞ்சினேன்காண மரர்கோவே! யாயர்கூட்டத் தளவன்றுலோ
கஞ்சனையுன் வஞ்சனையால் வலைப்படுத்தாய்! முலையுணாயே. ச.

பதவுரை.

அமரர் கோவே!— தேவாதிராஜனே!
கஞ்சன் தன்னால்— (உன்மேல் கறுவா நின்ற) கம்ஸனாலே
புணர்க்கப்பட்ட— (உன்னை நலிவதற்காக) கற்பிக்கப்பட்ட
கள்ளம்— க்ருத்ரிமமான
சகடு— சகடமானது
கலக்கு அழிய— ஸந்திபந்தங்கள் குலைந்து உருமாய்ந்து போம்படி
§பஞ்சி அன்ன— பஞ்சுபோலே
மெல்— ம்ருதுவான
அடியால்— திருவடிகளாலே
பாய்ந்தபோது— உதைத்தகாலத்திலே
நொந்திடும் என்று— நோவுண்டாகுமென்று
அஞ்சினேன் காண்— பயப்பட்டேன் காண்;
ஆயர் கூட்டத்து அளவு அன்று— நான் பயப்பட்டது இடையருடைய திரள் பயப்பட்ட வளவல்ல;
ஆல் ஓ!— ஐயோ!
கஞ்சனை— உன் விஷயத்தில் வஞ்சனைகளைச் செய்த கம்ஸனை
உன் வஞ்சனையால்— நீ அவன் விஷயத்தில் செய்த வஞ்சனையினாலே
வலைப்படுத்தாய்!— தப்பாதபடி அகப்படுத்தி முடித்தவனே!
முலை உணாய்.

§ "பஞ்சி" என்கிறவிது "பஞ்சு" என்பதற்குப் போலி.

வ்யா. நாலாம்பாட்டு. கஞ்சனித்யாதி. உன்மேலே கறுவுதலையுடையனான கம்ஸனாலே உன்னை நலிகைக்காகக் கற்பிக்கப்பட்ட க்ருத்ரிமமான சகடமானது. அஸுராவிஷ்டமாய் வருகையாலே- கள்ளச்சகடென்கிறது. கலக்கழிய. "தளர்ந்தும் முறிந்தும் உடல் வேறாகப் பிளந்துவீய" என்கிறபடியே கட்டுக்குலைந்து உருமாய்ந்து போம்படியாக. பஞ்சியித்யாதி. பஞ்சுபோலே ம்ருதுவான திருவடிகளாலே உதைத்தபோது 'திருவடிகள் நோம்' என்று பயப்பட்டேன் காண். அமரர்கோவே. தேவர்களுக்கு நிர்வாஹகனானவனே. உன்னைக்கொண்டு தங்கள் விரோதியைப் போக்கி வாழவிருக்கிறவர்கள் பாக்யத்தாலேயிறே உனக்கொரு நோவு வாராமலிருந்ததென்கை. ஆயர்கூட்டத்தளவன்றுலோ. ஆயருடைய திரள் அஞ்சினவளவல்லகாண் நானஞ்சினபடி. ஆல், ஓ என்றவை விஷாதஸூசகமான அவ்யயங்கள். கஞ்சனையித்யாதி. உன் திறத்திலே வஞ்சனைகளைச்செய்த கம்ஸனை நீ அவன் திறத்திற் செய்த வஞ்சனையாலே தப்பாதபடி யகப்படுத்தி முடித்தவனே. முலையுணாயே. இப்போது முலையை யமுதுசெய்யவேணும். ... ... ... ... ச.

மூ.—தீயபுந்திக் கஞ்சனுன்மேற் சினமுடையன் சோர்வுபார்த்து
மாயந்தன்னால் வலைப்படுக்கில் வாழகில்லேன் வாசுதேவா!
தாயர்வாய்ச்சொற் கருமங்கண்டாய் சாற்றிச்சொன்னேன் போகவேண்டா
ஆயர்பாடிக் கணிவிளக்கே யமர்ந்துவந்தென் முலையுணாயே. ரு.

பதவுரை.

வாசுதேவா!— வஸுதேவபுத்ரனான கண்ணனே!
தீய புந்தி— துஷ்டபுத்தியையுடைய
கஞ்சன்— கம்ஸனானவன்
உன்மேல்— உன்மேலே
சினம் உடையன்— கோபமுடையனாயிரா[நின்றான்;

சோர்வு பார்த்து— நீ தனியே திரியுங் காலம் பார்த்து
மாயம் தன்னால்— கபடத்தாலே
வலை படுக்கில்— (நழுவாதபடி) பிடித்துக் கொண்டால்
வாழகில்லேன்— (நான் பின்பு) ஜீவித்திருக்கமாட்டேன்
தாயர்— தாய்மாருடைய
வாய் சொல்— வாயால் சொல்லப்படுமது
கருமம் கண்டாய்— பிள்ளைகளுக்கு அவச்யம் ஆதரிக்கத் தக்கதுகாண்;
சாற்றி சொன்னேன்— எல்லாருமறியும்படி வெளிப்படையாகச் சொன்னேன்;
போகவேண்டா— நீ விளையாடுவதற்கும் தனியனாய் எங்கும்போகவேண்டா;
ஆயர் பாடிக்கு— திரு ஆய்ப்பாடிக்கு
அணி விளக்கே!— மங்கள தீபமானவனே!
அமர்ந்துவந்து— பொருந்திவந்து என் முலை உணாய்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. தீய புந்திக் கஞ்சன். துர்புத்தியான கம்ஸன். பிள்ளைக்கொல்லியிறே. *மக்களறுவரைக்கல்லிடைமோதின பாபிஷ்ட்டனிறே. உன்மேல்சினமுடையன். "தேவகியுடைய அஷ்டமகர்ப்பம் உனக்கு சத்ரு" என்று அசரீரிவாக்யத்தாலே கேட்டிருக்கையாலும், பின்பு துர்க்கை சொல்லிப்போன வார்த்தையாலும் "நமக்கு சத்ருவானவன் கைதப்பிப்போய் நம்மால் கிட்டவொண்ணாத ஸ்த்தலத்திலே புகுந்தான், இவனை யொருவழியாலே ஹிம்ஸித்தாய்விடும்படியென்" என்றிருக்கையாலும், உன்னுடையமேலே மிகவும் க்ரோதமுடையவன். சோர்வுபார்த்து. அவிழ்ச்சிபார்த்து. அதாவது - நீ அஸஹாயனாய்த்திரியும் அவஸரம் பார்த்தென்கை. மாயந்தன்னால் வலைப்படுக்கில். உன்னை நலிகைக்காக மாயாரூபிகளான ஆஸுரப்ரக்ருதிகளை திர்யக்காயும் ஸ்த்தாவரமாயுமுள்ள வடிவுகளைக்கொண்டு நீ வ்யாபரிக்கும் ஸ்த்தலங்களிலே நிற்கும்படிபண்ணி, நீ அறியாமல் வஞ்சநத்தாலே நழுவாதபடி பிடித்துக்கொள்ளில். வாழகில்லேன். நான்பின்னை ஜீவித்திருக்க க்ஷமையல்லேன்; முடிந்தேவிடுவன். வாசுதேவா. உன்னாலேயிறே ஸாதுவான¶வவரும் சிறைப்படவேண்டிற்று. தாயரித்யாதி. தாய்மார்சொல்லு கார்யங்காண். அதாவது - உத்தேசப்பதையாலும் பரிவாலும் தாய்மார் வாக்கால் சொல்லுவது பிள்ளைகளுக்கு அவச்யகரணீயங்காணென்கை. சாற்றிச்சொன்னேன் போகவேண்டா. இதுதன்னைக் † குன்றுங்குருச்சியாக வன்றிக்கே எல்லாருமறியும்படி ப்ரஸித்தமாகச்சொன்னேன்; ஸீலார்த்தமாகவும் நீ தனித்து ஓரிடத்தில் போகவேண்டா. ஆயர்பாடிக்கணிவிளக்கே. திருவாய்ப்பாடிக்கு ஒருமங்களதீபமானவனே. அணி - அழகு. இத்தால் எனக்கேயன்று, உனக்கொரு தீங்குவரில் இவ்வூராக இருள்மூடிவிடுங்கிடாயென்கை. அமர்ந்தித்யாதி. ஆனபின்பு, பரபரப்பைவிட்டு ப்ரதிஷ்ட்டிதனாய்வந்து உனக்கென்று சரந்திருக்கிற முலையை யமுதுசெய்யவேணும். ... ... ... ரு.

மூ.—மின்னனைய நுண்ணிடையார் விரிகுழன்மே னுழைந்தவண்டு
இன்னிசைக்கும் வில்லிபுத்தூ ரினிதமர்ந்தா யுன்னைக்கண்டார்
என்னநோன்பு நோற்றாள்கோலோ விவனைப்பெற்ற வயிறுடையாள்
என்னும்வார்த்தை யெய்துவித்த விருடீகேசா முலையுணாயே. சு.

பதவுரை.

மின் அனைய— மின்னலையொத்ததாய்
நுண்— ஸூக்ஷ்மமாயிராநின்ற
இடையார்— இடுப்பையுடைய ஸ்த்ரீகளுடைய

¶ அவரும் - வஸுதேவரும். † குன்றுங் குருச்சி - ரஹஸ்யம்.

விரி— பரம்பின
குழல் மேல்— கேசபாசத்தின் மேலே
நுழைந்த— மதுபானார்த்தமாகப் படிந்த
வண்டு— வண்டுகளானவை
இன் இசைக்கும்— இனிதாக இசைகளைப் பாடா நிற்கிற
வில்லிபுத்தூர்— ஸ்ரீ வில்லிபுத்தூரிலே
இனிது— திருவுள்ளம் பொருந்தி
அமர்ந்தாய்!— வர்த்திக்கிறவனே!
உன்னை கண்டார்— உன்னைப் பார்த்தவர்கள்
இவனை— "லோகவிலக்ஷணனான இவனை
பெற்ற வயிறு உடையாள்— பெற்றவயிற்றை உடையவள்
என்னநோன்பு நோற்றாள் கொல்லோ— (இதுக்குடலாக) என்ன தபஸ்ஸு பண்ணினளோ"
என்னும் வார்த்தை— என்று புகழ்ந்துசொல்லும் சொல்லை
எய்துவித்த— எனக்கு உண்டாக்கித்தந்த
இருடீகேசா!— ஹ்ருஷீகேசனே!
முலை உணாய்.

வ்யா. அரும்பாட்டு. மின்னித்யாதி. மின்னோடொத்த நுண்ணிய இடையையுடையவர்களென்னுதல்; மின்னை ஒருவகைக்கு ஒப்பாகவுடைத்தாய், அவ்வளவன்றிக்கே, ஸூக்ஷ்மமான இடையையுடையவர்களென்னுதல். விரிகுழல்மேல் நுழைந்தவண்டு. விஸ்தீர்ணமான குழல்மேலே மதுபானார்த்தமாக அவகாஹித்த வண்டுகளானவை. இன்னிசைக்குமித்யாதி. மதுபானத்தாலே செருக்கியினியவிசைகளைப் பாடாநிற்கும் ஸ்ரீவில்லிபுத்தூரிலே, பரமபதத்திலுங்காட்டில் இனிதாகப்பொருந்தி வர்த்திக்கிறவனே. தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கலான தேசமாகையாலே திருவுள்ளம்பொருந்தி வர்த்திப்பது இங்கேயிறே. பரமஸாம்யாபந்நர்க்கு முகங்கொடுத்துக் கொண்டிருக்குமித்தனையிறே பரமபதத்தில்; இங்கு இரண்டும் ஸித்திக்குமே. உன்னைக்கண்டாரித்யாதி. நாட்டிற் பிள்ளைகளைப்போலன்றிக்கே, ரூபகுண சேஷ்டிதங்களால் வ்யாவர்த்தனாயிருக்கிற வுன்னைக்கண்டவர்கள், நாட்டிலே பாக்யாதிகைகளாய் விலக்ஷணமான பிள்ளைகளைப் பெறுவாருமுண்டிறே. அவ்வளவன்றிக்கே, லோகத்தில் கண்டறியாத வைலக்ஷண்யத்தையுடைய விவனைப்பெற்ற வயிறுடையவள் இதுக்குடலாக என்ன தபஸ்ஸைப் பண்ணினளோவென்று ச்லாகித்துச்சொல்லும் வார்த்தையை யெனக்குண்டாக்கித்தந்த. இருடீகேசா. கண்டவர்களுடைய ஸர்வேந்த்ரியங்களையும் வ்யக்த்யந்தரத்தில் போகாதபடி உன் வசமாக்கிக்கொள்ளும் வைலக்ஷண்யத்தை யுடையவனே, முலையுணாயே. சு.

மூ.—பெண்டிர்வாழ்வார் நின்னொப்பாரைப் பெறுதுமென்னு மாசையாலே
கண்டவர்கள் போக்கொழிந்தார் கண்ணிணையாற் கலக்கநோக்கி
வண்டலோம்பூங் குழலினாருன் வாயமுத முண்ணவேண்டிக்
கொண்டுபோவான் வந்துநின்றார் கோவிந்தா! நீமுலையுணாயே. எ.

பதவுரை.

பெண்டிர்— தந்தாமுடைய பர்த்தாக்களுக்கு பார்யைகளாய்
வாழ்வார்— வாழாநின்றவர்களாய்
கண்டவர்கள்— உன்னைக் காணாநின்றவர்கள்
நின் ஒப்பாரை— உன்னைப்போன்றபிள்ளைகளை
பெறுதும் என்னும்— பெறவேணுமென்கிற
ஆசையாலே— ஆசையாலே
போக்கு ஒழிந்தார்— கால் வாங்கிப் போகமாட்டாதே நின்றுவிட்டார்கள்;
வண்டு உலாம்— வண்டுகள்படிந்து உலாவாநின்ற
பூ— புஷ்பங்களினலங்கரிக்கப்பட்ட
குழலினார் — குழலையுடையவர்கள்
கண் இணையால்— தங்கள் கண்களாலே

கலக்க நோக்கி— உன் திருமேனியின் ஸமுதாய சோபையைப் பார்த்து
உன் வாய் அமுதம்— உனது வாகம்ருதத்தை
உண்ண வேண்டி— உண்ண விரும்பி
கொண்டு போவான்— உன்னைக் கொண்டு போவதாக
வந்துநின்றார்— வந்திரா நின்றார்கள்
(ஆதலால்,)
கோவிந்தா!— ஸர்வ ஸுலபனானகண்ணனே!
நீ முலை உணாய்.

வ்யா. ஏழாம்பாட்டு. பெண்டிரித்யாதி. ஸ்வபர்த்தாக்களுக்கு பார்யைகளாய் வர்த்திப்பாராய் உன்னைக் கண்டவர்கள், உன்னைப்போலேயிருக்கும் பிள்ளைகளைப் பெறவேணுமென்னு மாசைபாலே கால்வாங்கிப் போகமாட்டாதபடியாய் விட்டார்கள். வண்டலாம் பூங்குழலினார்- கண்ணிணையால் கலக்க நோக்கி. பெருக்காற்றிலே இழியமாட்டாமல் கரையிலே நின்று ஸஞ்சரிப்பாரைப் போலே, மதுவின் ஸம்ருத்தியாலே உள்ளே அவகாஹிக்கமாட்டா வண்டுகளானவை மேலேநின்று ஸஞ்சரிக்கும்படி பூவாலே அலங்க்ருதமான குழலையுடையவர்கள் தங்களுடைய கண்களாலே உன்னுடைய ஸமுதாய சோபாதர்சநஞ் செய்து. கலக்க நோக்குகையாவது- ஓரவயவத்திலே உற்று நிற்கையன்றிக்கே, திருமேனியை வெங்குமொக்கப் பார்க்கை. கீழ்- "பெண்டிர் வாழ்வார்" என்று - பக்னைகளாய் பர்த்ர்பாதந்த்ரைகளாய் புத்ரஸாபேக்ஷைகளானவர்களைச் சொல்லிற்று; இங்கு, வண்டலாம் பூங்குழலினாரென்று- ப்ராப்த யௌவனைகளாய் போகஸாபேக்ஷைகளானவர்களைச் சொல்லுகிறது. உன்னித்யாதி. உன்வாகம்ருதம் புஜிக்கவேண்டி புன்னை யெடுத்துக்கொண்டு போவதாக வந்து நின்றார்கள். கோவிந்தா. ஸர்வஸுலபனானவனே. உன் ஸௌலப்யத்துக்கு இது சேராது. நீ முலையுணாயே. அது வேண்டினபடியாகிறது, நீ இப்போது முலை யுண்ணவேணும். ... ... எ.

மூ.—இருமலைபோ லெதிர்ந்தமல்ல ரிருவரங்க மெரிசெய்தாயுன்
திருமலிந்து திகழ்மார்வு தேக்கவந்தென் னல்குலேறி
ஒருமுலையை வாய்மடுத் தொருமுலையை நெருடிக்கொண்டு
இருமுலையு முறைமுறையா ஏங்கியேங்கி யிருந்துணாயே. அ.

பதவுரை.

‡இரண்டுமலைபோல்-இரண்டுமலைகள் போலே
எதிர்ந்த— மல் பொருவதாக எதிர்ந்துவந்த
மல்லர் இருவர்— சாணூர முஷ்டிகராகிற இரண்டு மல்லர்களுடைய
அங்கம்— சரீரத்தை
எரி செய்தாய்!— பயாக்நியாலே கொளுந்தி விழும்படி பண்ணினவனே!
உன்— உன்னுடைய
திரு மலிந்து— அழகு மிகுந்து
திகழ்— விளங்காநின்ற
மார்வு— மார்பானது
தேக்க— முலைப்பாலாலே நிறையும்படி
வந்து என் அல்குல் ஏறி— என்மடியிலே வந்தேறி
ஒரு முலையை— ஒரு முலையை
வாய் மடுத்து— திருப்பவளத்திலே வைத்து
ஒரு முலையை— மற்றொருமுலையை
நெருடிக்கொண்டு— திருக்கையாலே பற்றி நெருடிக்கொண்டு
‡ இரண்டு முலையும்— இரண்டு முலைகளையும்
முறை முறையா— மாறி மாறி
ஏங்கி ஏங்கி இருந்து—நடுவே நடுவே இளைத்திளைத்திருந்து
உணாய்— உண்ணவேணும்.

---

‡ "இரண்டனொற்றுயிரேக வுவ்வருமே" என்னும் நன்னூற் சூத்திரங்கொண்டு "இருமுலையும்" என்னும் பதத்தை "இரண்டு முலையும்" என்று பிரித்தெழுதிற்று. இவ்வாறே கீழும் மேலும் கண்டுகொள்வது.

வ்யா. எட்டாம்பாட்டு. இருமலையித்யாதி. வடிவின் பெருமையாலும் திண்மையாலும் இரண்டு மலைபோலே வந்து அறப்பொருவதாக வெதிர்ந்த சாணூரமுஷ்டிகராகிறவிரண்டு மல்லருடையவும் சரீரமானது(க)பயாக்நியாலே(உ)தக்தமாய்விழும்படி பண்ணினவனே. உன்னித்யாதி. உன்னுடைய அழகுமிக்கு விளங்காநின்றுள்ள மார்வானது. மலிதல்-மிகுதி. திகழ்ச்சி- விளக்கம். அன்றிக்கே, திருவென்று- பிராட்டியைச் சொல்லுகிறதாய், அவளெழுந்தருளி யிருக்கையாலே மிகவும் விளங்காநின்றுள்ள வுன்னுடைய மார்வென்னவுமாம். தேக்க. தேங்க. முலைப்பாலாலே நிறையும்படியாக. வந்தென்னல்குலேறி. என்மடியிலே வந்தேறி. ஒருமுலையித்யாதி. ஒருமுலையைத் திருப்பவளத்திலே வைத்து ஒருமுலையைத் திருக்கையாலே பற்றி நெருடிக்கொண்டு இரண்டு முலையையும் மாறி மாறி, பால் பரவின மிகுதி திருப்பவளத்தில் அடங்காமையாலே நடுநடுவே இளைத்திளைத்து அமரவிருந்து அமுது செய்யவேணும். ... ... ... ... ... அ.

மூ.—அங்கமலப் போதகத்தி லணிகோண்முத்தஞ் சிந்தினாற்போல்
செங்கமல முகம்வெயர்ப்பத் தீமைசெய்திம் முற்றத்தூடே
அங்கமெல்லாம் புழுதியாக வளையவ்வேண்டா வம்மவிம்ம
அங்கமரர்க் கமுதளித்த வமரர்கோவே முலையுணாயே. கூ.

பதவுரை.

அம்ம!— ஸ்வாமீ!
அம்— அழகிய
கமலப்போது அகத்தில்—தாமரைப் பூவினிடத்தில்
அணி கொள்— அழகு கொண்ட[அழகிய]
முத்தம்— முத்துக்கள்
சிந்தினால்போல்— சிதறினாற்போலே
செம் கமலம்— செந்தாமரை மலர்போன்ற
முகம்— முகமானது
வெயர்ப்ப— குறுவெயர்ப்பு அரும்பும்படி
இம்முற்றத்தூடே—இந்த முற்றத்துள்நின்று
தீமை செய்து—தீம்புகளைச் செய்து
அங்கம் எல்லாம்— உடம்பு முழுதும்
புழுதி ஆக— புழுதியாகும்படி
விம்ம— நிரந்தரமாக
அளைய வேண்டா— புழுதியளையாதேகொள்;
அங்கு— துர்வாஸச் சாபத்தால் வருந்தின அக்காலத்திலே
அமரர்க்கு— தேவர்களுக்கு
அமுது அளித்த— அம்ருதத்தைக் கடைந்தெடுத்துக் கொடுத்த
அமரர் கோவே!— தேவாதிராஜனே!
முலை உணாய்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. அங்கமலமித்யாதி. நிறத்தாலும் மணத்தாலும் செவ்வியாலும் விகாஸத்தாலும் அழகியதாயிருக்கும் தாமரைப்பூவினிடத்தில். போது - புஷ்பம். அகம்- இடம். அணியித்யாதி. நீர்மையாலும் ஒளியாலும் அழகை யுடைத்தான முத்துக்களானவை சிதறினாற்போலே. செங்கமலமித்யாதி. சிவந்து மலர்ந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற திருமுகமானது குறுவெயர்ப் பரும்பும்படியாக. தீமையித்யாதி. இம்முற்றத்துள்ளே நின்று தீம்புகளைச் செய்து உடம்பெல்லாம் புழுதியாகவிருந்து புழுதி யளையவேண்டா. அம்ம. ஸ்வாமீ! யென்னுதல்; இவன் சேஷ்டித தர்சநத்தால் வந்த ஆச்சர்யோக்தியாதல். விம்மவித்யாதி.துர்வாஸச் சாபோபஹதராய் அஸுரர்கள் கையிலே யீடுபட்டுச் சாவாமைக்கு

(க) ஸயாஹ்நி. (உ) தக்த,

மருந்து பெறுகைக்கு உன்னை வந்தாச்ரயித்த தேவர்களுக்கு, அத்தசையிலே வயிறு நிரம்ப அம்ருதத்தை யிடுகையாலே அவர்களுக்கு நிர்வாஹகனானவனே. முலையுணாயே. அப்போது அவர்களபேக்ஷைக்காக அது செய்தாற்போலே, இப்போது என்னுடைய வபேக்ஷைக்காக நீ முலை புண்ணவேணுமென்கை. ... ... ... ... சு.

மூ.—ஓடவோடக் கிண்கிணிக ளொலிக்குமோசைப் பாணியாலே
பாடிப்பாடி வருகின்றாயைப் பற்பநாப னென்றிருந்தேன்
ஆடியாடி யசைந்தசைந்திட் டதனுக்கேற்ற கூத்தையாடி
ஓடியோடிப் போய்விடாதே யுத்தமா! நீ முலையுணாயே. ம.

பதவுரை.

உத்தமா!— புருஷோத்தமனானவனே!
ஓட ஓட— மிகவும் பதறி ஓட
கிண்கிணிகள்— திருவடிச்சதங்கைகள்
ஒலிக்கும்— த்வநிக்கிற
ஓசை— த்வநியாகிற
பாணியாலே— சப்தத்தாலே
பாடிப்பாடி— நிரந்தரமாகப் பாடிக்கொண்டும்
அதனுக்கு ஏற்ற— அந்தப்பாட்டுக்குத் தகுதியான
கூத்தை— ந்ருத்தத்தை
அசைந்தசைந்திட்டு ஆடி ஆடி ஆடி— அதிகம்பீரமாய் அசைந்தசைந்தாடிக்கொண்டும்
வருகின்றாயை— என்னை நோக்கி வருகிறவுன்னை
பற்பநாபன் என்று— "இவன் பத்மநாபன் அன்றோ" என்று
இருந்தேன்— ஆச்சர்யப்பட்டுக்கொண்டிருந்தேன்,
(ஆனபின்பு,)
ஓடி ஓடி போய்விடாதே — ஓடியோடிப்போ
நீ முலை உணாய். [காமல்

வ்யா. பத்தாம்பாட்டு. ஓடவோடவித்யாதி. நடக்கும்போது மெத்தென நடக்கையன்றிக்கே, பால்யத்துக்கீடான செருக்காலே பதறிப்போடவோட, பாதச்சதங்கைகளான கிண்கிணிகள் த்வநிக்கும் த்வநியாகிற சப்தத்தாலே, பாடிப்பாடி- அதனுக்கேற்ற கூத்தை- அசைந்தசைந்திட்டு-ஆடியாடி. அந்த பாட்டுக்குத் தகுதியான ந்ருத்தத்தை, திருமேனி யிடம் வலங்கொண்டு அசைந்தசைந்திட்டு நடக்கிற நடையாலே ஆடியாடி. *கூத்தன் கோவலனிறே. நடக்கிற நடையெல்லாம் வல்லாராடினாற்போலேயிறே யிருப்பது. ஆகையால் விரைந்து நடந்துவரும்போது திருவடிகளிற் சதங்கைகளினுடைய வோசைகள்தானே பாட்டாய், நடக்கிற நடையெல்லாம் ஆட்டமாயிருக்குமாய்த்து. அன்றிக்கே, கிண்கிணிகளொலிக்குமோசை தாளமாக, வாயாலே பாடிப்பாடி, அதனுக்கேற்ற கூத்தை அசைந்தசைந்திட்டாடியாடி யென்று பொருளாகவுமாம். வருகின்றாயைப் பற்பநாபனென்றிருந்தேன். இப்படி யென்னை நோக்கி வாராநின்றுள்ள வுன்னை "கொப்பூழி லெழுகமலப் பூவழகர்" என்கிறபடியே வேறோராபரணம் வேண்டாதே திருநாபீகமலந்தானே ஆபரணமாம்படி யிருப்பானொருவனன்றோ, இவனுக்கு வேறொரு பாட்டும் ஆட்டும் வேணுமோ, சதங்கையோசையும் நடையழகுந்தானே பாட்டுமாட்டுமா யிருந்தபடியென்! என்று ஆச்சர்யப்பட்டிருந்தேனென்னுதல். அழிந்து கிடந்தத்தை யுண்டாக்குமவனன்றோ, நம்முடைய ஸத்தையைத் தருகைக்காக வருகிறானென்றிருந்தேனென்னுதல். ஓடியோடியித்யாதி. இவள் சொன்னதின் கருத்தறியாதே, "இவள் நம்முடைய நீர்மையைச் சொல்லாமல் ஸ்வாதந்த்ர்ய ப்ரகாசகமான மேன்மையைச் சொல்லுவதே!" என்று மீண்டு ஓடிப்போகத் தொடங்குகையாலே, இப்படியாடிக்

கொணடு என் கைக்கெட்டாதபடி ஓடியோடிப் போய்விடாதே நீ புருஷோத்தமனுகையாலே ஆச்ரிதபரதந்த்ரனுனபின்பு என்வசத்திலே வந்து என்முலையை யுண்ணவேணு மென்கிருள்.

அ. நிகமத்தில் இத்திருமொழி கற்ருர்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிருர்.

மூ.—வாரணிந்த கொங்கையாச்சி மாதவாவுண் ணென்றமாற்றம்
நீரணிந்த குவளைவாச நிகழ்நாறும் வில்லிபுத்தூர்ப்
பாரணிந்த தொல்புகழான் பட்டர்பிரான் பாடல்வல்லார்
சீரணிந்த செங்கண்மான்மேற் சென்றசிந்தை பெறுவர்தாமே. கக.

பதவுரை.

வார் அணிந்த—கச்சாலே அலங்கரிக்கப்பட்ட [கச்சு-கஞ்சுகம்.]
கொங்கை— முலைகளை யுடைய
ஆச்சி— தாயாரான யசோதைப்பிராட்டி
மாதவா!— " ஸ்ரீயபதியானவனே!
உண்— முலை உண் " [யை
என்ற மாற்றம்— என்று சொன்ன வார்த்தை
நீர் அணிந்த— நீருக்கு அலங்காரமாக அலர்ந்த
குவளை— செங்கழுநீர்ப் பூவின்
வாசம்— வாஸனையானது
நிகழ்— ஒருபடிப்பட
நாறும்— பரிமளியா நின்றுள்ள
வில்லி புத்தூர்— ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய்
பார்— பூமியடங்கலும்
அணிந்த— பரவினதாய்
தொல்— ஸ்வபாவஸித்தமான
புகழான்— கீர்த்தியை யுடைய
பட்டர்பிரான்— ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் அருளிச்செய்த
பாடல்— பாட்டுக்களை
வல்லார் தாம்— ஓதவல்லவர்கள்
சீர் அணிந்த— கல்யாணகுணகணபூஷிதனுய்
செம் கண்— சிவந்த கண்களையுடையனுய்
மால்மேல்— ஆச்ரிதர் திறத்தில் வ்யாமோஹமுடையனுன எம்பெருமான் விஷயத்தில்
சென்ற சிந்தை— சென்ற மநஸ்ஸை
பெறுவர்— உடையராவர்கள்.

வ்யா. வாரணிந்த கொங்கையாச்சி. ராஜாக்களுக்கு அபிமதமான த்ரவ்யங்களை பரிசாரகரானவர்கள் கட்டி இலச்சினை யிட்டு, கொண்டுதிரியுமாபோலே, க்ர்ஷ்ணனுக்கு போக்யமானமுலைகள் பிறர்கண்படாதபடி கச்சாலே சேமித்துக்கொண்டு திரிகையாலே வாராலே அலங்க்ர்தமான முலையையுடையவளான ஆய்ச்சியென்று ச்லாகித்துக்கொண்டு அருளிச்செய்கிருர். மாதவா வுண்ணென்றமாற்றம். ஸ்ரீயபதியாகையாலே அவாப்த ஸமஸ்த காமனுனவனை அவதாரத்தின் மெய்ப்பாட்டுக்கீடாக முலை யுண்ணென்ற சப்தத்தை. நீரித்யாதி. நீருக்கலங்காரமாக அலர்ந்த செங்கழுநீரினுடைய பரிமளமானது ஒருபடிப்பட ப்ரகாசியாநிற்கிற ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய். பாரித்யாதி. பூமியில் ராஜாக்களில் ப்ரதானனை பாண்டியனும், ஜ்ஞாதாக்களில் ப்ரதானரான செல்வநம்பி தொடக்கமானவர்களளவன்றிக்கே பூமியெங்கும் கொண்டாடும்படி வ்யாப்தமாய், வந்தேறி யன்றிக்கே, ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமான புகழையுடையராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரருளிச்செய்த பாடலை அப்யஸிக்க வல்லவர்கள். சீரித்யாதி. ஆத்மகுணங்களாலே அலங்க்ர்தனுய், அவயவ சோபைக்கு ப்ரகாசகமான சிவந்த திருக்கண்களை யுடையனுய், இவையிரண்டையும் ஆச்ரிதரநுபவிக்கும்படி அவர்கள்பக்கல் வ்யாமோஹத்தை யுடையனு யிருக்குமவன் விஷயத்தில். அன்

றிக்கே, சீரித்யாதிக்கு - ஆச்ரித பாரதந்த்ர்யமாகிற குணத்தாலே யலங்க்ர்தனாய், இந்நீர்மைக்கும் மேன்மைக்கும் ப்ரகாசகமான சிவந்த திருக்கண்களை யுடையனாய் ஸர்வஸ்மாத்பரனாயிருக்கிறவன் விஷயத்திலே யென்று பொருளாகவுமாம். சென்றவித்யாதி. பாடல் வல்லார்தாம் செங்கண்மால் பக்கலிலே யொருபடிப்படச் சென்ற மநஸ்ஸை யுடையவராவர். கக.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—அரவணை வைத்த தந்தம் கஞ்சன் தீய மின்
பெண்டிர் இருமலை யங்கமல மோட வாரணி போய்.

---

ஆக - திருமொழி, கக - க்கு, பாட்டு - கஉகூ.

---

அ. கீழ்த்திருமொழியிலே- இவனுடைய பால்யாநுகுணமாக முலை யுண்கையை மறந்துகிடந்து உறங்குகிறவனை யெழுப்பி, முலையுண்ணவேணுமென்றபேக்ஷித்து, அவன் இருப்த்திருந்தவள்விலும் விடாதே பஹுமுகமாக நிர்ப்பந்தித்து யசோதைப்பிராட்டி முலையூட்டினப்ரகாரத்தை, அவளுடைய ப்ராப்தியையும் ஸ்நேஹத்தையு முடையராய்க்கொண்டு தத்காலம்போலே அவனைக்குறித்துப் பேசி யநுபவித்து இனியரானார்; அவள் அவனுக்குக் காதுகுத்திக் காதுபெருக்கிக் காதுப்பணிகளுமிட்டநுபவிக்க வாசைப்பட்டு, காதுகுத்துகையாகிற உத்ஸவத்துக்கு ஊரில் பெண்களை யெல்லாம் அழைத்துவிட்டு, வந்தவர்களை ஸம்பாவிக்கைக்கீடான பதார்த்தங்களும் ஸம்பாதித்துவைத்து, "அவனைக் காதுகுத்த" என்று அழைக்க, அவன் "நோம்" என்று அஞ்சி, "மாட்டேன்" என்னச்செய்தேயும் அவனஞ்சாதபடியான் வசநங்களைச் சொல்லியும் அவனுக்கு அபிமதமான பதார்த்தங்களைக் காட்டியும் உடன்படுத்திக்கொண்டு காதுபெருக்கின ப்ரகாரத்தை, தாமும் அவளைப்போலே அநுபவிக்கவாசைப்பட்டு, ததவஸ்த்தாபந்நராய்க்கொண்டு தத்காலம்போலே அவனைக்குறித்து 'அப்பாசுரங்களைப் பேசி யநுபவித்து ப்ரீதராகிறா ரித்திருமொழியில். ... ... ... *

மூ.—போய்ப்பாடுடைய நின்தந்தையுந் தாழ்த்தான் பொருதிறற் கஞ்சன்கடியன்
காப்பாருமில்லைக் கடல்வண்ண வுன்னைத்தனியே போயெங்குந்திரிதி
பேய்ப்பால் முலையுண்ட பித்தனே கேசவநம்பீ யுன்னைக்காதுகுத்த
ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தாரடைக்காய் திருத்திநான்வைத்தேன். க.

பதவுரை.

| | |
|---|---|
| பாடு உடைய— ஸ்வஜநரக்ஷணத்தில் பரிவையுடைய | தாழ்த்தான்— வருவதற்குத் தாமஸித்தான்; |
| நின் தந்தையும்— உன் தமப்பனும் | பொரு— யுத்தம் செய்யத்தக்க |
| போய்— பசுமேய்க்கப்போய் | திறல்— மிடுக்கையுடைய |
| | கஞ்சன்— கம்ஸனானவன் |

கடியன்— உன்திறத்தில் மிகவும் க்ரூரனு யிராநின்றான்;
கடல் வண்ணா!— கடல்போலே ச்ரமஹர மான வடிவையுடைய கண்ணனே!
உன்னை— உன்னை
காப்பாரும்— ரக்ஷிக்கவல்லவரும்
இல்லை— (இங்கே) இல்லை;
(நீயோ வென்றால்,)
தனியே— அஸஹாயனாய்
எங்கும் போய்- எல்லாவிடங்களிலும் போய்
திரிதி— யதேச்சமாகத் திரியாநின்றாய்;
பேய்— பூதனையின்
முலை பால்— முலைப்பாலை
உண்ட— உண்ட
பித்தனே!— பேயனே!
கேசவ!— கேசியைக்கொன்றவனே!
நம்பீ!— தீம்பில் கைதேறினவனே!
உன்னைக்காதுகுத்த- உன்காதுகுத்துகைக்கு
ஆய்— ஆய்ப்பாடியிலுள்ள
பாலர்— பாலர்களும்
பெண்டுகள்— இடைப்பெண்களும்
எல்லாரும்— ஆகிய இவர்களெல்லாரும்
வந்தார்— வந்திராநின்றார்கள்;
(அவர்களை ஸம்பாவிக்கைக் கீடாக)
அடைக்காய்- அடைக்காய் முதலானவற்றை
நான் திருத்தி வைத்தேன்— நான் ஸந்நத்த மாக்கிவைத்தேன்.

வ்யா. முதற்பாட்டு. போயித்யாதி. பாடேடைய நின்தந்தையும்- போய்- தாழ்த்தான். புத்ரரக்ஷணத்திலும் ஸ்வஜாநரக்ஷணத்திலும் இடமுடைய நெஞ்சையுடையனான உன்னுடைய பிதாவும் "பசுக்கடையிலே சென்றுவருகிறேன், வருமளவும் நீ பிள்ளையை ரக்ஷித்துக் கொள்" என்று போய் வரவுதாழ்த்தான். அன்றிக்கே, "போய்" என்கிற விது - மிகுதிக்கு வாசகமாய், ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே மிகவுமளவுடையனாய் "கூர்வேற் கொடுந்தொழிலன்" என்கிறபடியேநீபிறந்தவன்றுதொடங்கி வேலைப்புகரெழக்கடைந்துபிடித்து, தொட்டிற்கீழே ஒரெறும்பூரிலும் ஸிம்ஹத்தின்மேலே சீறுமாப்போலே சீறி, உன்னை நோக்கிக்கொண்டு திரியும் பிதாவானவனும் கார்யார்த்தமாகப் போனவிடத்தே விளம்பித்தானென்னவுமாம். பொருதிறல்கஞ்சன்கடியன். பொருகையிலே மிடுக்கையுடைய கம்ஸன் உன்னளவில் மிகவும் க்ரூரன். உன்னை நலிகைக்கு இடம்பார்த்துத் திரிகிறவனாகையாலே ஆரைவரவிட்டு, ஏது செய்விக்கும் என்று தெரியாது.

காப்பாருமில்லை. அதுக்குமேலே விரகறிந்து ரக்ஷிக்கவல்லாருமிங்கில்லை. ரக்ஷகரான வவர் வந்திலர், நானோ அபலை, வேறொரு பரிவர் காணவில்லை, யார்தான் ரக்ஷிப்பார். கடல் வண்ணா வுன்னை. "தன்னேராயிரம் பிள்ளைகள்" என்கிறபடியே இவ்வூரில் திரிகிற வநேகம் பிள்ளைகளுக்குள்ளே நானுமொருவனாய்த் திரியாநின்றால் என்னை அவர்கள் அறியப்புகாநின்றார்களோவென்று நீ நினைக்கவேண்டா, கடல்போலே ச்ரமஹரமாயிருக்கிற வுன்வடிவழகே உன்னைக் காட்டிக்கொடாதோ; இப்படியிருக்கிற வுன்னையுணர்ந்து ரக்ஷிப்பாருமில்லை யென்னுதல்; ஒரு விரோதிகளில்லையேயாயினும் *அஸ்த்தாநே பயசங்கை பண்ணி மங்களாசாஸநம் பண்ணவேண்டும்படியான அழகுடைய வுன்னை விரோதி பூயிஷ்டமான விவ்விடத்தில் பரிவராய் ரக்ஷிப்பாருமில்லை யென்னுதல். தனியேபோ யெங்குந்திரிதி. பிள்ளைகள் தன்னோடே திரிகிறு யென்னவுமொண்ணாதபடி அவர்களையும் விட்டுத் தனியேபோய் எங்கும் ஸஞ்சரியா நின்றாய்.

அவர்கள் தன்னோடேகூடப் போனாற்றான் ப்ரயோஜநமென்; பேய்ப்பால் முலையுண்ட பித்தனே. பேயானவள் தாய்வடிவைக்கொண்டுவர, அவளைத் தாயாகவே நினைத்து அவள்

முலைப்பாலை யிருந்துண்ட (க) ப்ராந்தன் நீ யல்லையோ. ஆகையால், மாயாரூபிகளான வஸுரர்கள், ஒக்க விளையாடுகிற பிள்ளைகளோடொத்த வடிவைக்கொடுவந்து கலசிநின்றாலும் அவர்களைப் பிள்ளைகளோபாதி தோழன்மாராக நினைப்பானொருவனிறே நீயென்கை. கேசவநம்பீ. இப்படி நீயென்செய்ய பயப்படுகிறது, நான் கேசவநம்பியன்றோ, என் கையிலேகேசிபட்டதறியாயோவென்று தன் சௌர்யபூர்த்தியைக்காட்ட, அத்தை யவ்வளவிலே விட்டு, தான் உபக்ரமித்த கார்யத்திலே புரிந்து, நானேயன்றுகாண், உன்னைக்காதுகுத்துவதாக ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தார்கள்; வந்தவர்களை ஸம்பாவிக்கைக்கிடான அடைக்காய் முதலானவையும் நான் திருத்திவைத்தேன்; ஆனபின்பு, நீ காதுகுத்தும்படி வரவேணுமென்கிறாள். ... ... ... ... ... க.

மூ.—வண்ணப்பவள மருங்கினிற் சாத்திமலர்ப்பாதக் கிண்கிணியார்ப்ப
நண்ணித்தொழுமவர் சிந்தைபிரியாத நாராயணா விங்கேவாராய்
எண்ணற்கரியபிரானே திரியையெரியாமே காதுக்கிடுவேன்
கண்ணுக்குநன்று மழகுமுடைய கனகக்கடிப்பு மிவையா. உ

பதவுரை.

நண்ணி— உன்னை அணுகி
தொழுமவர்— தொழாநின்றவர்களுடைய
சிந்தை— மநஸ்ஸில் நின்றும்
பிரியாத— நீங்காத
நாராயணா!— நாராயணனே!
வண்ணம்— நல்ல நிறத்தையுடைய
பவளம்— பவழ வடத்தை
மருங்கினில்— அரையிலே
சாத்தி— தரித்து
மலர்— தாமரைப்பூப் போன்ற
பாதம்— திருவடிகளில் சாத்தியிருக்கிற
கிண்கிணி— சதங்கையானது
ஆர்ப்ப— த்வநிக்கும்படி
இங்கே— நானழைக்கு மிவ்விடத்துக்கு
வாராய்— வந்தருளாய்;

எண்ணற்கு— "இப்படிப்பட்டவன்" என்று நினைக்கைக்கும் கூட
அரிய— அநர்ஹனாயிராநின்ற
பிரானே!— உபகாரகனானவனே!
காதுக்கு— உன்காதுகளுக்கு
திரியை— திரியை
எரியாமே— நோவாதபடி
இடுவன்— இடுவேன்;
கண்ணுக்கு— பார்வைக்கு
நன்றும்— மிகவும்
அழகு உடைய— அழகியதாயிராநின்ற
கனகம்— ஸ்வர்ணமயமான
கடிப்பு இவை— இந்த கர்ண பூஷணங்கள்
ஆ— ஆச்சர்யகரமாயிராநின்றன.
[ இவற்றைப்பாராய் என்றுகருத்து. ]

வ்யா. இரண்டாம்பாட்டு. வண்ணமித்யாதி. ஆகரத்திலே பிறக்கையாலே நிறமுடைத்தாயிருந்துள்ள பவளத்தினுடைய வடத்தை அது தனக்கும் அழகு கொடுக்கவற்றான திருவரையிலே சாத்தி. மலரித்யாதி. தாமரைப்பூப்போலே யிருக்கிற திருவடிகளிற் சதங்கைகளானவை த்வநிக்க. திருவரையும் பவளவடமுமான சேர்த்தியழகு தோற்றும்படியாகவும் திருவடிகளிற்சாத்தின சதங்கைகள் த்வநிக்கும்படியாகவும் வரவேணுமென்று கருத்து. நண்ணியித்யாதி. அஹங்காராதிகளாலே உன்னையகன்று திரிகையன்றிக்கே, தத்ராஹித்யத்தாலே உன்னைக்கிட்டி ஸ்வசேஷத்வாநுரூபமாகத் தொழுகையே யாத்ரையாயிருக்கு

(க) ஹ்ராஹன்.

மவர்களுடைய நெஞ்சை, "நின்று மிருந்துங்கிடந்துந் திரிதந்தும்" என்கிறபடியே இஷ்டஸர்வசேஷ்டா விஷயமாகக்கைக்கொண்டு க்ஷணகாலமும் விட்டுப்பிரியாதே வர்த்திக்கும் நாராயணனே நானழைக்கிற விவ்விடத்தே வாராய். எண்ணற்கரியபிரானே. உன்பக்கல் ஸ்நேஹமில்லாதார்க்கு நினைக்கைக்குங்கூடவரியனாயிருக்கும் உபகாரகனானவனே. ஆச்ரிதர்க்கு ஸுலபனாயிருக்கையும், அநாச்ரிதர்க்கு துர்லபனாயிருக்கையும், மங்களாசாஸந பரராயிருப்பார்க்குத் தம்பேறாயிறேயிருப்பது. நீஎன்னை யழைக்கிறது, திரியை என்காது எரிய இடுகைக்கன்றோ வென்ன; திரியையெரியாமே காதுக்கிடுவேன். திரியை யுன்காதுகளுக்கு எரிச்சல் வாராதபடி அநுகூலமாக இடுவேன். கண்ணுக்கித்யாதி. திரியேற்றிக் காதுபெருக்கினால் உனக்கிடுவதாகச்சமைத்த, கண்ணுக்கு மிகவும் அழகையுடைத்தாயிருக்கிற பொற்கடிப்புக்களான விவையு மிருக்கிறபடி பாராய். அழகும் என்றவிடத்தில், (க) சசப்தம் அவ்யயம். நன்று மழகுடையவென்றும் கநகக்கடிப்பென்றும் சொன்னவிவை யிரண்டாலும்- பணித்திருத்தமும் உபாதாந வைலக்ஷண்யமும் சொல்லுகிறது. ... ... ... உ..

மூ.—வையமெல்லாம்பெறும் வார்கடல்வாழு மகரக்குழை கொண்டுவைத்தேன்
வெய்யவேகாதிற் றிரியையிடுவேன் நீ வேண்டியதெல்லாந் தருவன்
உய்யவிவ்வாயர் குலத்தினிற்றோன்றிய வொண்சுடராயர் கொழுந்தே
மையுன்மைசெய்திள வாய்ச்சியருள்ளத்து மாதவனே யிங்கேவாராய். ௩

பதவுரை.

உய்ய— யாவரும் உஜ்ஜீவிக்கும்படி
இவ்வாயர் குலத்தினில்— இவ்விடைக்குலத்திலே
தோன்றிய— ஆவிர்ப்பவித்தவனாய்
ஒண் சுடர்— மிக்க தேஜஸ்ஸையுடையனாய்
ஆயர்— இடையர்களுக்கு
கொழுந்தே!— தலைவனானவனே!
வையம் எல்லாம்— பூமியெல்லாம்
பெறும்— விலைபெறும்படி பெருவிலையனாய்
வார் கடல்— விசாலமான கடலிலே
வாழும்— வாழாநின்ற
மகரம்— முதலைகள் போன்ற
குழை— காதுப்பணிகளை [மகரகுண்டலம்.]
கொண்டு வைத்தேன்— சேமித்துக் கொண்டு வைத்தேன்;
காதில்— காதுகளில்
திரியை— திரியை
வெய்யவே— கொஞ்சம் உஷ்ணமாக
இடுவன்— இடுவேன்;
நீ வேண்டியது எல்லாம்— நீ அபேக்ஷிக்கிற பக்ஷ்யபூபபலாதிகளெல்லாம்
தருவன்— கொடுப்பேன்;
இள ஆய்ச்சியர்— இடைப்பெண்களை
மையன்மை செய்து— உன்வடிவழகாலே மதிமயங்கும்படி பண்ணி
உள்ளத்து— அவர்கள் நெஞ்சில் எப்போது மிருப்பவனாய்
மா தவனே!— ஸ்ரீயப்பதியானவனே!
இங்கே வாராய்.

வ்யா. மூன்றும்பாட்டு. வையமித்யாதி. பொற்கடிப்பளவேயல்ல, காதுபெருக்கினால் இடும்படியாக பூமியெல்லாம் பெறும் பெருவிலையனான, நீண்டகடலிலே வர்த்திக்கும் மகரம்போலேயிருக்கிற காதுப்பணிகொண்டு வைத்தேனென்ன; நீ யிது சொல்லுகிறது— இப்போது என்காதுக்குத் திரியிடுகைக்காகவன்றோ, திரியிட்டபோதே காது தினவுதின்று

(க) உபமை.

வரும், எனக்கு வேண்டாவென்ன; வெய்யவேகாதில் திரியையிடுவேன். (க) சுண்டீதி சமிக்கும்படி ¶வெச்சாப்போடே காதுகளிலே திரியையிடுவனென்றவிடத்திலும் அவனிசையாமையாலே, இசைகைக்காக, நீவேண்டியதெல்லாம் தருவன். நீ விரும்பியிருக்கும் அபூபபலாதிகளெல்லாம் தருவேனென்ன; அவ்வளவிலும் அவன் வாராமையாலே, உய்ய வில்வாயர் குலத்தினிற்றோன்றிய வொண்சுடராயர் கோழுந்தே!. இருந்ததேதகுடியாக வுஜ்ஜீவிக்கும்படி இவ்விடைக்குலத்திலேவந்து பிறந்து, அதுதானே யுனக்கு மிகவும் தேஜஸ்ஸாம்படியிருப்பானாய், வேரிலே வெக்கைதட்டினால் கொழுந்து முற்படவாடுமாபோலே இடையருக்கு ஒருவ்யஸநம்வரில் முந்துறவுன்முகம் வாடும்படி அவர்களுக்குத் தலைவனானவனே. மையன்மை செய்திளவாய்ச்சி யருள்ளத்து மாதவனே!. ஒருபருவத்தி னிடைப்பெண்களை உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே மதிமயங்கும்படிபண்ணி, அவர்களுடைய நெஞ்சுக்கு ஸர்வகாலமும் விஷயமாம்படியிருப்பானாய், உன்னுடைய நெஞ்சைத்$திறைகொள்ளும்பிராட்டிக்கு வல்லபனானவனே! இங்கு வாராய் என்று ஸ்துதிபூர்வகமாக வழைக்கிறாள். ... ... ... ௩.

மூ.—வணநன்றுடைய வைரக்கடிப்பிட்டு வார்காதுதாழப் பெருக்கிக்
குணநன்றுடையர்க் கோபாலபிள்ளைகள் கோவிந்தாநீ சொல்லுக்கொள்ளாய்
இணைநன்றழகிய விக்கடிப்பிட்டா லினியபலாப்பழந்தந்து
சுணநன்றணிமுலை யுண்ணத்தருவன்நான் சோத்தம்பிரா னிங்கேவாராய்.

பதவுரை.

நன்று— நன்றான
வ(ண்)ணம் உடைய— வர்ணத்தையுடைய
வைரக்கடிப்பு— வஜ்ரகுண்டலத்தை
இட்டு— தரித்துக்கொண்டு
வார் காது— நீண்டகாதானது
தாழ— தோள்வரைக்கும் தாழும்படி
பெருக்கி— (காதுகளை) வளர்த்துக்கொண்டு
இக்கோபால பிள்ளைகள்— இவ்விடைப்பிள்ளைகள்
நன்று குணம் உடையர்— (தாய்மார் முதலானோர் சொன்னதைச்செய்து) நல்ல குணமுடையவர்களாயிரா நின்றார்கள்;
கோவிந்தா!— ஸுலபனானவனே!
நீ— அப்பிள்ளைகளோடே சேரவிரும்புகிற நீ
சொல்லு— என் வார்த்தையை
கொள்ளாய்— கைக்கொள்ள மாட்டுகிறிலை;
இணை— ஒன்றுக் கொன்றொத்ததாய்
நன்று அழகிய— மிகவுமழகிய
இக்கடிப்பு— இக்காதுப்பணிகளை
இட்டால்— நீ இட்டுக்கொள்ளு வதியாகில்
இனிய— உனக்கு ருசிரமான
பலா பழம்— பலாப்பழத்தை
தந்து— கொடுத்து
சுண(ங்கு)ம்— தேமலையுடைத்தாய்
நன்று அணி— மிகவுமழகிதான
முலை— முலையை
உண்ண— நீ உண்ணும்படி
நான் தருவன்— நான் கொடுப்பேன்;
பிரான்!— உபகாரகனானவனே!
சோத்தம்— உன்னைத்தொழுகிறேன்;
இங்கே வாராய்.

வ்யா. நான்காம்பாட்டு. வணமித்யாதி. இப்படி ஸ்துதித்துக்கொண் டழைத்தவிடத்திலும் வாராமையாலே, இது தன்னைச் சொன்னாலாகிலும் வருமோவென்று இந்த இடைப்

(க) சுண்டுதி— தினவு. ¶ வெச்சாப்பு— அல்பமான உஷ்ணதை.
$ திறைகொள்ளுகை— அபஹரிக்கை.

பிள்ளைகளானவர்கள் நல்ல நிறத்தை யுடைத்தான வயிரக்கடிப்பிட்டு, ஒழுகுநீண்ட காதானது தோளளவும் தாழும்படி பெருக்கி, தாய்மார் முதலானோர் சொல்லிற்றுச்செய்து மிகவும் குணமுடையரா யிருக்கிறபடி பாராய்; நீயு மிப்படி யிருக்கவேண்டாவோ. கோவிந்தா! நீ சொல்லுக்கோள்ளாய். ஸௌலப்யத்துக்கு "கோவிந்தன்" என்று பேரிட்டுக் கொண்டிருக்கிற நீ என்சொல்லு கைக்கொள்ளுகிறா யில்லை யென்ன; உன்சொல்லுக்கேட்டு, நான் கடிப்பிடுவித்துக்கொண்டால் எனக்கென்னன்பு தருவாயென்ன; இணைநன்றழகிய விக்கடிப்பிட்டால். ஒன்றுக் கொன்றொப்பாய் மிகவு மழகியதாயிருக்கிற விந்தக்கடிப்பை யிட்டால். இனிய பலாப்பழம்தந்து. உனக்கினிதான பலாப்பழம் தந்து. சுணைநன்றணி முலையுண்ணத்தருவன்நான். சுணங்கையுடைத்தாய் நன்றாய் அழகியதான முலையை நீ யமுது செய்யும்படி தருவன் நானென்ன. சுணங்கு- முலைமேல் தோன்றும் நிறம். நன்றாகையாவது - மார்வாயிருக்கை. சோத்தம் பிரானிங்கே வாராய். இப்படி சொன்ன வளவிலும் வாராமையாலே, பிரானே உன்னைக்கும்பிடுகிறேன், இங்கேவாராயென்று இரந்தழைக்கிறாள். சோத்தமென்கிறவிது- அஞ்சலி பண்ணுமவர்கள் அதுச்கு அநுகூலமாகத் தாழ்ச்சி தோற்றச் சொல்லுவதொரு சப்த விசேஷம். ... ... ... ... ... ௪.

மூ.—சோத்தம்பிரா னென்றிரந்தாலுங் கோள்ளாய் சுரிகுழலாரோடு நீபோய்க்
கோத்துக்குரவை பிணைந்திங்குவந்தாற் குணங்கொண்டிடுவேனோ நம்பீ!
பேர்த்தும்பெரியன வப்பந்தருவன் பிரானேதிரியிட வொட்டில்
வேய்த்தடந்தோளார் விரும்புகருங்குழல் விட்டுவே! நீ யிங்கேவாராய். ௫.

பதவுரை.

பிரான்!— "உபகாரகனானவனே!
சோத்தம் என்று— உன்னைத் தொழுகிறேன்" என்று
இரந்தாலும்— வேண்டினாலும்
கொள்ளாய்— அதை நீ அங்கீகரிக்கிறிலை;
நம்பீ!— தீம்பில் கைதேறினவனே!
நீ— நீ
சுரி குழலாரொடு போய்— சுருண்ட குழலையுடைய பெண்களோடே போய்
கோத்து— கைகோத்து
குரவை பிணைந்து— ‡ குரவைக் கூத்தாடி
இங்கு வந்தால்— இங்கே வந்தால்
குணம் கொண்டிடுவேனோ — அதை நான் குணமாகக் கொள்ளுவேனோ;
பிரானே!— உபகாரகனே!
திரி இடவொட்டில்— உன்காதில் திரியை இடவொட்டினாயாகில்
பேர்த்தும்— பின்னையும்
பெரியன— பெரியவையான
அப்பம்— அப்பங்களை
தருவன்— தருவேன்;
வேய்— மூங்கில் போன்ற
தட— பெருத்திரா நின்ற
தோளார்— தோள்களையுடைய பெண்கள்
விரும்பு— விரும்பும்படியான
கரு— கறுத்த
குழல்— குழலையுடைய
விட்டுவே!— விஷ்ணுவே!
நீ இங்கே வாராய்.

‡ குரவைக்கூத்தாவது— "அங்கநாமங்கநா மந்தரே மாதவ:" இத்யாதிப்படியே- ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும், ஒவ்வொரு கண்ணனாக இருந்தாடுவதொரு கூத்து. இதைத்தான் "ராஸக்ரீடை" என்பர்கள்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. சோத்தமித்யாதி. "சோத்தம்பிரானிங்கே வாராய்" என்றவிடத்திலும் அவன் வாராமையாலே, பிரானே உன்னைத் தொழுகிறேனென்று இரந்தாலும் என் சொல்லைக் கைக்கொண்டு நீ வருகிறாயில்லையென்றவாறே, நீ யழைக்க நான் வந்த விடத்

தில் குணங்கொள்ளாமல் நேற்று என்னை யடித்தவளன்றோ நீ யென்ன; அதுவோ? சுரிகுழலாரோடு நீ போய் கோத்துக்குரவை பிணைந்திங்குவந்தால் குணங்கொண்டிடுவேனோ நம்பீ. ஆனற்றவிடத்திலே நீ போய், சுருண்டகுழலை யுடையபராயிருக்கும் பெண்களோடே கைகோத்துக்குரவை பிணைந்தாடியிங்கேவந்தால் பொடியாதே குணவானென்று உன்னைக்கொள்வனோ நம்பீ என்று இவள் சொன்னவாறே, நிருத்தராய் நிற்க, அவ்வளவிலே கையிலே திரியை எடுத்து இத்தை யிடும்படிவாராயென்ன; அவன் "அது இடவொட்டேன்" என்ன; பிரானே திரியிடவொட்டில் - பேர்த்தும் பெரியனவப்பம் தருவன். எனக்கெல்லாப்படியாலும் உபகாரகனானவனே திரியித்தனையு மிடவொட்டுதியாகில், நீ சிறிது சிறிதென்று பொகடப் பொகட, நீ விரும்பும்படி பெரியனவான அப்பங்களைத் தருவேன் என்றவிடத்திலும் அவன் வாராமையாலே; வேயித்யாதி. பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் மூங்கில்போலேயாய், பெருத்திருந்துள்ள தோள்களையுடையரான பெண்கள் விரும்பும்படியாய், இருண்டுநீண்டதிருக்குழலையுடையனை விஷ்ணுவே! நீ இங்கே வாராயென்று அவன் வைலக்ஷண்யத்தைச்சொல்லிப் புகழ்ந்துகொண்டழைக்கிறாள். ... ... ரு.

மூ:—விண்ணெல்லாங்கேட்க வழுதிட்டாயுன் வாயில்விரும்பி யதனைநான்நோக்கி
மண்ணெல்லாங்கண்டேன் மனத்துள்ளேயஞ்சி மதுசூதனே யென்றறிந்தேன்
புண்ணேதுமில்லையுன் காதுமறியும் பொறுத்திறைப்போதிருநம்பீ!
கண்ணாவென்கார்முகிலே கடல்வண்ணா காவலனே முலையுணாயே. சு.

பதவுரை.

"மண்தின்றாய்" என்று அடித்தவாறே,
விண் எல்லாம்— ஆகாசப்பரப் படங்கலும்
கேட்க— கேட்கும்படி
அழுதிட்டாய்— அழுத
உன்— உன்னுடைய
வாயில்— வாயிலே
விரும்பி— ("மண்தின்ற சுவடுண்டாகில் பார்ப்போம்" என்று) ஆசைப்பட்டு
அதனை— அத்தை
நான் நோக்கி— நான் பார்த்தவளவிலே
மண் எல்லாம்— பூமியெல்லாம்
கண்டு — உன் திருவயிற்றிலிருக்கிற படியைக் கண்டு
என் மனத்துள்ளே— என் நெஞ்சினுள்ளே
அஞ்சி— ("நம்முடைய பிள்ளையென்றிவனை அடித்தோமே" என்று) அஞ்சி
மதுசூதனே என்று— 'இவன் மதுவை நிரஸித்த ஸர்வேச்வரனே' என்று
அறிந்தேன்— தெரிந்து கொண்டேன்;
புண் ஏதும் இல்லை— புண் ஒன்றுமில்லை;
உன் காது— உன்னுடைய காதானது
மறியும்— தண்டு புரளும்;
இறைப்போது— சற்றுப்போது
பொறுத்து இரு— பொறுத்துக் கொண்டிரு;
நம்பீ!— பூர்ணனே!
கண்ணா!— கண்ணனே!
என்— எனக்கு
கார் முகிலே!— காளமேகம் போல் உதாரனானவனே!
கடல் வண்ணா!— கடல்போன்ற நிறத்தையுடையவனே!
காவலனே!— எனக்கு ரக்ஷகனானவனே!
முலை உணாய்.

வ்யா. ஆறும்பாட்டு. விண்ணித்யாதி. "மண்தின்றாய்" என்று அடித்தவாறே "ஆ" என்ன, ஆகாசப் பரப்படங்கலும் கேட்கும்படியழுத வுன்னுடைய வாயிலே "மண் தின்ற சுவடுண்டாகில் பார்ப்போம்" என்றுவிரும்பி அத்தை நான் பார்த்தவளவிலே, மூன்

புபோலே வாய்வழியே பூமியெல்லா முள்ளேயிருக்கிற படிகண்டு "நம்முடைய பிள்ளை யென்று இவனை நலிந்தோமே" என்று என்மநஸ்ஸினுள்ளே பயப்பட்டு "இவன் நம் முடைய பிள்ளையல்லன், ஸர்வேச்வர னென்றறிந்தேன்" என்றவாறே, "அஹம்வோ பாந்தவோ ஜாத:" என்னுமவனுகையாலே இவள் அந்யனுக்கி வார்த்தை சொன்னது ஸஹியாமல் அத்தைமறப்பித்து, "தன்பிள்ளை" என்று இவளணைத்துக் கொள்ளும்படி வந்து கிட்டி நிற்க; அவ்வளவிலே இவள், காதுக்குக் கடிப்பிடுவதாக வுத்யோகிக்க; "என்னுடைய காது புண், எனக்கு அது வேண்டா" என்று அவன் சொல்ல; புண்ணேதுமித்யாதி; புண்ணொன்றுமில்லை, உன்னுடையகாது தண்டுபுரளும், சற்றுப்போது பொறுத்திரு நம்பீ யென்ன; அவன் பொறுத்தபடியாலே ப்ரீதையாய்; கண்ணா. எனக்கு ஸுலபனானவனே. என்கார்முகிலே. ஜலஸ்தலவிபாகம் பாராமல் உபகரிக்கும் காளமேகம்போலே யெனக்கு உன்னையுபகரித்தவனே. கடல்வண்ணா. எனக்கு அநுபாவ்யமான கடல்போன்ற நிறத்தை யுடையவனே. காவலனே. எனக்குரக்ஷகனானவனே என்று ஸ்தோத்ரம்பண்ணி முலையுண்ணவேணுமென்றபேக்ஷிக்கிருள். ... ... ... ... ... ௬.

மூ.—முலையேதும்வேண்டேனென்றோடி நின்காதிற்கடிப்பைப் பறித்தெறிந்திட்டு
மலையையெடுத்து மகிழ்ந்து கன்மாரிகாத்துப் பசுநிரைமேய்த்தாய்!
சிலையொன்றிறுத்தாய்! திரிவிக்கிரமா! திருவாயர்பாடிப்பிரானே!
தலைநிலாப்போதே யுன்காதைப்பெருக்காதே விட்டிட்டேன் குற்றமேயன்றே. ௭.

பதவுரை.

முலை— "நீ கொடுக்கும் முலையையும்
ஏதும்— மற்றுமுள்ள பக்ஷ்யாதிகளையும்
வேண்டேன்— நான் விரும்புகிறிலேன்"
என்று ஓடி— என்று சொல்லி என்னை கழிய ஓடி
நின்— உன்னுடைய
காதில்— காதில் இட்ட
கடிப்பை— பூஷணத்தை
பறித்து எறிந்திட்டு— பிடுங்கி யெறிந்து பொகட்டு,
(அவ்வளவிலே இந்த்ரன் பசிக்கோபத்தாலே வர்ஷிப்பிக்க;)
மலையை— கோவர்த்தந பர்வதத்தை
எடுத்து— குடையாக எடுத்து
மகிழ்ந்து— ஆயாஸம் தோற்றுதபடி மன முகந்து
கல் மாறி— அக்கல் வர்ஷத்தினின்றும்
காத்து— இடையர்களையும் பசுக்களையும் ரக்ஷித்து
பசுநிரை— பசுக்கூட்டங்களை
மேய்த்தாய்!— இடையர் மேய்க்கும் படி பண்ணினவனே!
ஒன்று— அத்விதீயமான
சிலை— ஸீதாவிவாஹ சுல்கமான ருத்ர தநுஸ்ஸை
இறுத்தாய்!— முறித்தவனே!
திரி விக்கிரமா!— திருவடிகளை வளர்த்து உலகங்களை யளந்தருளினவனே!
திரு ஆயர்பாடி— திரு ஆய்ப்பாடியிலுள்ள ஜநங்களுக்கு
பிரானே!— ஸ்வாமியானவனே!
தலை— தலையானது
நிலா— நில்லாத
போது— இளம் பருவத்திலே
உன் காதை— உன் காதை
பெருக்காது— பெருக்காமல்
விட்டிட்டேன்— விட்டுவைத்த என்னுடைய
குற்றம் அன்றே— குற்றமன்றோ.

(க) "அஹம்வோ பாந்தவோ ஜாத:."

வ்யா. ஏழூர்ம்பாட்டு. முலையித்யாதி. இப்படி ஸ்தோத்ரம் பண்ணி முலையுண்ணாச் சொன்னவாறே, முலையுண்பானாகத் தொடங்கினவளவிலே கடிப்பையெடுத்துக் காதிலே யிட, அதுக்தாலே சீறி; முலையேதும் வேண்டேனென்றோடி. நீ தருகிற முலையும் மற்றுமுண்டான அபூபாதிகளும் வேண்டேனென்று எனக்குப்பிடிபடாது என்கைகழியவோடி. நான் பின்தொடர்ந்துவந்தவளவில் எனக்கு தரிப்பாக, நின்காதில் கடிப்பைப் பறித்தெறிந்திட்டு. உன் காதிலிட்ட கடிப்புக்களை க்ரோதந்தோற்றப் பிடுங்கி என்முன்னே எறிந்து போகட்டு. அவ்வளவிலே இந்த்ரன் பசிக்கோபத்தாலே வர்ஷிப்பிக்க, அதில் ரக்ஷ்யவர்க்கம் நோவுபடாதபடி மலையையெடுத்து. முன்பு ரக்ஷகமென்று சொன்ன கோவர்த்தநகிரிதன்னையே குடையாக வெடுத்து. மகிழ்ந்து. மலையைச் சுமந்துகொடுநிற்கிறவளவில் சற்றுமிளைப்பின்றிக்கே, “ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணம் பண்ணப் பெற்றோம்” என்று உகந்து. கன்மாரிகாத்து. அந்தக் கல்வர்ஷத்தில் ஒருபசுவின்மேலேயாதல், ஓரிடையன்மேலே யாதல் ஒருதுளிவிழாதபடி ரக்ஷித்து. பசுநிரைமேய்த்தாய். “இனவாநிரைபாடி யங்கேயொடுங்க” என்கிறபடியே-மலை, பசுமேய்க்கிறவிடந்தன்னிலே சென்று எங்குமொக்கக் கவிகையாலே, பசுக்களை இடையர் மேய்க்கும்படி பண்ணினவனே. சிலையொன்றிறுத்தாய். ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு சுல்கமாகவிட்டதாய் ஒருவரால் பேர்க்க வொண்ணாதபடி அதிதீயமாயிருந்துள்ள ரௌத்ரமான வில்லை முறித்தவனே. திரிவிக்கிரமா. இந்த்ரன் இழந்த ராஜ்யத்தை மீட்டுக்கொடுக்கைக்காக, எல்லை நடப்பாரைப்போலே திருவடிகளால் ஸர்வ லோகத்தையு மளந்தவனே. திருவாயர்பாடிப்பிரானே. திருவாய்ப்பாடியிலுள்ள ஜநங்களுக்கு ஸர்வப்ரகாரத்தாலும் உபகாரகனானவனே. இப்படி, எல்லார்க்குமுபகாரகனான நீ என்னுடைய அபேக்ஷிதமும் செய்யவேணுங் காணென்று, முன்பு பறித்தெறிந்த கடிப்புக்களை யிடுவதாக உத்யோகிக்க; அதுக்கவ னிசையாதொழிய; தலைநிலாவித்யாதி. தலை செவ்வே நில்லாத இளம்பருவத்திலே யுன்னுடைய காதுகளைப்பெருக்காதே விட்டிட்டுவைத்த வென்னுடைய குற்றமன்றோ, உன்னை வெறுக்கிறதென்னென்று தன் செய்தித்தாழ்வைச்சொல்லி நோவுபடுகிறாள். ... ... ... ... ... ... எ.

மூ.—என்குற்றமேயென்று சொல்லவும் வேண்டாகா ணென்னை நான் மண்ணுண்டே-
அன்புற்றுநோக்கி யடித்தும் பிடித்து மனைவர்க்குங் காட்டிற்றிலையே [னுகை
வன்புற்றரவின் பகைக்கொடி வாமன நம்பியுன் காதுகரூம்
துன்புற்றனவெல்லாந் தீர்ப்பாய்! பிரானே! திரியிட்டுச்சொல்லுகேன் மெய்யே. அ.

பதவுரை.

என் குற்றம் என்று— ‘என்னுடையகுற்றம்’ என்று

சொல்லவும் வேண்டா காண்— நீ சொல்ல வேண்டுவதில்லை காண்;

நான் மண் உண்டேனாக— நான் மண் தின்றதாக நினைத்து

அன்புற்று— அன்புடையளாய்க்கொண்டு

நோக்கி — என் வாயில் மண்தின்ற சுவடுண்டோ என்று பார்த்து

என்னை பிடித்தும்— சுவடு கண்டாரைப் போலே என்னைப் பிடித்தும்

அடித்தும்— அடித்தும்

அனைவர்க்கும்— எல்லார்க்கும்

காட்டிற்றிலையே— ‘இவன் மண்ணுண்ணும் படியைப் பாருங்கள்’ என்று காட்டவில்லையோ?

(என்று அவன் சொல்ல;)

வன் புற்று அரவின்— வலியபுற்றிலே பதுங்கிக் கிடக்கிற பாம்புக்கு
பகை— சத்ருவான கருடனை
கொடி— த்வஜமாகவுடையனாய்
வாமன நம்பீ!— * குறள் பிரமசாரியாகப் போய் அபிமதம்பெற்று பூர்ணனானவனே!
உன் காதுகள்— உன்னுடைய காதுகள்
தூரும்— தூர்ந்துவிடும்
உற்றன— அச்ரிதர்கள்பட்ட
துன்பு எல்லாம்— துன்பத்தை யெல்லாம்
தீர்ப்பாய்!— தீர்க்குமவனே!
பிரானே!— உபகாரகனானவனே!
திரி இட்டு— உன்காதில் திரியை இட்டு
மெய் ¶ சொல்லுகேன்— மெய்யே சொல்லக்கடவேன்.

---

¶ "செல்லுகேன்" என்று பாடமானபோது "உன்காதில் திரியை இட்டுவிட்டு மெய்யே கடக்கப்போய் விடுகிறேன்" என்று பொருளாகக்கடவது.

வ்யா. எட்டாம்பாட்டு. என்குற்றமித்யாதி. "நீ உன் குற்றம் சொல்லி வெறுக்கிறது நான் உன்சொல்லிற்றுச் செய்திலன் என்று என் குற்றத்தை நினைத்தன்றோ, என் குற்றமேயென்று சொல்லவும்வேண்டாகாண்" என்ன; "பின்னை யார்குற்றம்" என்ன; "உன்குற்றமில்லையோ" என்ன; "உன்னை நான் என் செய்தேன்" என்ன; என்னை நான்மண்ணுண்டேனாக. மண்ணுண்ணுதவென்னை நான் மண்ணுண்டேனாக நினைத்து. அன்புற்றுநோக்கி - ஸ்நேஹிகளைப்போலே யென்னுடைய வாயிலும் கையிலும் மண்சுவடுண்டோவென்று பார்த்து. அடித்தும்பிடித்து மனைவர்க்கும் காட்டிற்றிலையே. சுவடு கண்டாரைப்போலே என்னைப் பிடித்தும், அவ்வளவன்றிக்கே அடித்தும், "பாரீர்கோள் இவன் மண்தின்னும்படி" என்று எல்லார்க்கும் காட்டிற்றில்லையோ வென்ன; வன்புற்றரவின் பகைக்கோடி வாமன நம்பீ. வலியபுற்றிலே (க) பாதகபீதியாலே கிடக்கும் பாம்புக்குப் பகையான கருடனை த்வஜமாகவுடையனாய், *கொடுங்கோளால் நிலங்கொண்டவாமனனை முதலியானவனே. இத்தால்- திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு பெரியதிருவடியை த்வஜமாகக்கொண்டிருப்பானொருவனாகையாலே, லோகத்தில் ஒன்றுக்கொன்று சேராததாயுள்ளவற்றைச் சேர்த்து நடத்தவல்லனுமாய், க்ரூரமாகச் செய்தவற்றை ந்யாயமாக்கவும் வல்லவனன்றோ வென்கை. உன்காதுகள் தூரும். இப்படி நீயொன்றுசொல்ல நானொன்றுசொல்லிப் போதுபோக்கியிருந்தால் உன்னுடைய காதுகள் தூருங்காண். துன்புற்றனவெல்லாம் தீர்ப்பாய்பிரானே. ஆச்ரிதரானவர்கள் து:கப்படுமவையெல்லாம் போக்குமுபகாரகனானவனேயென்ன; நீ என்னை ஸந்தர்ப்பண்ணவேண்டா, 'இனியுன்னை முன்போல் பிடிக்குதல், அடிக்குதல் செய்யேன்' என்று மெய்யாக ஒரு வார்த்தை சொல்லு - நான் திரியிடுகைக்கு இசையும்படியென்ன; திரியிட்டுச் சொல்லுகேன்மெய்யே. திரியையிட்டுவிட்டவாறே பின்னை மெய்யே சொல்லக்கடவேனென்கிறாள். ... ... ... ... ... ௮/.

மூ.—மெய்யென்றுசொல்லுவார் சொல்லைக்கருதித் தொடுப்புண்டாய் வெண்ணெயை
கையைப்பிடித்துக் கரையுரலோடென்னைக் காணவே கட்டிற்றிலையே [யென்று
செய்தனசொல்லிச் சிரித்தங்கிருக்கிற் சிரீதரா வுன்காதுதூரும்
கையிற்றிரியை யிடுகிடா யிந்நின்ற காரிகையார் சிரியாமே. ௯.

---

(க) ஹாயகபீதி.

பதவுரை.

சொல்லுவார்— இவன் வெண்ணெய் திருடினனென்றாற் போலே சொல்லுகிறவர்களுடைய
சொல்லை— வார்த்தையை
மெய் என்று கருதி — உண்மையாக நினைத்து
வெண்ணெயை— வெண்ணெயை
தொடுப்பு உண்டாய் என்று — களவுகண்டு உண்டாய் என்று
கையை பிடித்து— என்கையைப் பிடித்து
கரை— விளிம்பையுடைய
உரலோடு— உரலோடே
காண— எல்லாரும் பார்க்கும்படி
என்னை— வெண்ணெய் திருடாதவென்னை
கட்டிற்றிலையே— கட்டவில்லையோ?
( என்று அவன் சொல்ல; )
சிரீதரா!— ஸ்ரீய: பதியானவனே!
செய்தன— இப்படி நான்செய்தவற்றை
சொல்லி— சொல்லிக்கொண்டு
சிரித்து— சிரித்துக்கொண்டு
அங்கு இருக்கில்— என்னிடம் வாராமல் காலயாபநம் பண்ணிக்கொண்டு அங்கிருந் தாயாகில்
உன் காது தூரும்— உன் காதுகள் தூர்ந்து விடும்;
( ஆதலால், )
நின்ற— இங்கு நிற்கிற
இக்காரிகையார்— இப்பெண்கள்
சிரியாமே— 'கூழைக்காது' 'குணக்காது' என்றிப்படி சொல்லிச்சிரியாதபடி
கையில் திரியை — என்கையி லிருக்கிற திரியை
இடு கிடாய் — உன்காது பெருக்கும்படி இட்டுக் கொள்கிடாய்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. மெய்யித்யாதி. " திரியிட்டுச் சொல்லுகேன் மெய் " என்றவாறே, உன் வார்த்தை விச்வஸிக்கப்போகாது, சொன்னார் சொன்னவார்த்தை கேட்டு என்னை சிக்ஷிப்பாளொருத்தியன்றோ வென்ன; நான் அப்படி செய்ததுண்டோ வென்ன; மெய்யென்று சொல்லுவார் சொல்லைக்கருதி. " இவன் வெண்ணெய் களவு கண்டான் " என்று சொல்லுவார் சொல்லும் வார்த்தையை மெய்யென்று புத்திபண்ணி. தொடுப்புண்டாய் வெண்ணெயை யென்று. வெண்ணெயைக் களவிலே ஜீவித்தாயென்று. தொடுப்பு- களவு. கையைப் பிடித்தித்யாதி. என்கையைப் பிடித்துக்கொண்டு (க) பாரமான கரையுரலோடே யெல்லாரும் காணும்படி என்னைக் கட்டிற்றில்லையோ வென்று சொல்லி மந்தஸ்மிதஞ் செய்திருக்க. கரையுரலாவது- விளிம்பு சுற்றணையான வுரல். செய்தனவித்யாதி. இப்படி நான்செய்த குற்றங்களைச் சொல்லி ஸ்மிதம் பண்ணிக்கொண்டு என்பக்கல் வாராமல் போதுபோக்கி நீ அங்கே யிருக்கில், ஸ்ரீதரனே! உன்காது தூருங்காண். அவர்களுக்காகவாகிலும் வாவென்ன; அவ்வளவிலும் அவன் வாராமையாலே, கையில் திரியையித்யாதி. நீ விரும்பத்தக்க அழகையுடையார் உன் பக்கல் ப்ராவண்யத்தாலே உன்னைவிட்டுப் போகமாட்டாமல் ஸந்நிஹிதைகளாய்நிற்கிற இப்பெண்களானவர்கள், " கூழைக்காது, குணக்காது " என்றாற்போலே சொல்லிச் சிரியாதபடி உன் காது பெருக்கும்படி யென்கையில் திரியையிடுகிடா யென்கிறாள். ௯.

மூ.—காரிகையார்க்கு முனக்கு மிழுக்குற்றேன் காதுகள் வீங்கியெரியில்
தாரியாதாகிற்றலை நோந்திடுமேன்று விட்டிட்டேன் குற்றமேயன்றே

(க) ஊரு.

சேரியிற்பிள்ளைக ளெல்லாருங் காதுபெருக்கித் திரியவுங்காண்டி
ஏர்விடைசெற்றிளங்கன் றெறிந்திட்ட விருடீகேசா வென்றன்கண்ணே. ய.

பதவுரை.

காதுகள்— என்காதுகளானவை
வீங்கி எரியில்— தடித்து எரியுமாகில்
காரிகையார்க்கும் — சிரிக்கிற அப்பெண்களுக்கும்
உனக்கும்— திரியிட வந்துநிற்கிற உனக்கும்
இழுக்குற்று என் — சேதமென்ன ?
( என்று அவன் சொல்ல; )
தாரியாது ஆகில்— திரியிடுகிறது பொறாதாகில்
தலை நொந்திடும் என்று— தலை நோமென்று
விட்டிட்டேன்— இளம்பருவத்தில் விட்டு வைத்த என்னுடைய
குற்றம் அன்றே— குற்றமன்றோ;
ஏர் விடை— எதிர்ந்துவந்த ‘அரிஷ்டநேமி’ என்னும்ரிஷபத்தை
செற்று— முடித்து
இள கன்று— இளங்கன்றின் வடிவாய் நின்ற அஸுரனை
எறிந்திட்ட— விளாவாய் நின்ற அஸுரன் மேல் எறிந்துபோகட்ட
இருடீகேசா!— ஹ்ருஷீகேசனே!
என் தன் கண்ணே!— எனக்குக் கண்ணானவனே!
சேரியில்— இவ்விடைச் சேரியிலுள்ள
பிள்ளைகள் எல்லாரும்— எல்லாப் பிள்ளைகளும்
காது பெருக்கி— திரியிட்டுக் காதுகளைப் பெருக்கிக்கொண்டு
திரியவும்— திரியா நிற்கவும்
காண்டி— காணுகின்றாய்.

வ்யா. பத்தாம்பாட்டு. காரிகையார்க்கித்யாதி. “ காரிகையார்சிரியாமே- கைகளில் திரியையிடுகிடாய் ” என்றவாறே, “ சிரிக்கிறகாரிகையார்க்கும், திரியிட வந்துநிற்கிற உனக்கும் ஏதேனும் சேதமுண்டோ- என்னுடைய காதுகள் வீங்கியெரியுமாகில்” என்று அவன் சொல்லி கைக்கெட்டாதபடி நிற்க; தாரியாதாகிலித்யாதி. இளம்பருவத்திலே காதைப்பெருக்கலாயிருக்க, திரிமுதலானவற்றை யிடுகிறது பொறாதாகில் உன்தலையிலே நோக்காடுண்டாமென்று அப்போது செய்யாமல் விட்டுவைத்த வென்னுடைய குற்றமேயன்றோ வென்று தன்னை வெறுத்து, பின்னையும் விடாதே, சேரியித்யாதி. இவ்வூரில் உன்திறத்திலே பிள்ளைகளெல்லாரும் காதுபெருக்கித் திரியவும் காணுகின்றாயிறே யென்றவாறே, அவன் அதுபாதி தோற்றநிற்க; ஏர்விடையித்யாதி. “ வம்பவிழ்கானத்துமால்விடை ” என்கிறபடியே- காட்டுக்குள்ளே உன்னை நலிவதாக எதிர்ந்துவந்த அரிஷ்டநேமியாகிற ரிஷபத்தை நிரஸித்து, கன்றுகள் மேய்க்கிற விடத்திலே இளங்கன்றின வடிவைக்கொண்டுவந்து ஓரஸுரன் நிற்க, அந்தக்கன்றை யெடுத்து விளவாய்நின்ற அஸுரன்மேலே யெறிந்து இரண்டுதலையையும் முடித்து அவற்றின் கையில் அகப்படாதே உன்னை நோக்கித்தந்தவனாய், உன்னைக்கண்டவர்களுடைய ஸர்வேந்த்ரியங்களையும் உன்வசமாக்கிக் கொள்ளுகைபாலே ஹ்ருஷீகேசனென்னும் திருநாமத்தை யுடையவனாய், எனக்கு (க) த்ருஷ்டிபூதனானவனேயென்று உகந்து சொல்லுகிறாள். ... ... ... ... ... ... ... ய.

(க) த்ருஷ்டி - கண்.

மூ.—கண்ணைக்குளிரக் கலந்தெங்கு நோக்கிக் கடிகமழ் பூங்குழலார்கள்
எண்ணத்துளென்று மிருந்துதித்திக்கும் பெருமானே! எங்களமுதே!
உண்ணக்கனிகடருவன் கடிப்பொன்று நோவாமே காதுக்கிடுவன்
பண்ணைக்கிழியச் சகட முதைத்திட்ட பற்பநாபா விங்கேவாராய். கக.

பதவுரை.

கடி கமழ் — பரிமளம் வீசாநின்ற
பூ குழலார்கள் — பூக்களணிந்த கூந்தலையுடைய ஸ்த்ரீகள்
‡ கண் குளிர — தங்கள் கண் குளிரும்படி
எங்கும் கலந்து நோக்கி — உன்னுடைய அவயவசோபையை எங்குமொக்க ஸமுதாய மாகப்பார்த்து
எண்ணத்துள் — உன்னோடு கலக்கவேணுமென்னும் நினைவில்
என்றும் இருந்து — என்றும் பொருந்தியிருந்து
தித்திக்கும் — அவர்களுக்கு போக்யனாகாநின்ற
பெருமானே! — பெருமையை யுடையவனே!
எங்கள் அமுதே! — எங்களுக்கு அம்ருதமானவனே!
சகடம் — சகடாஸுரனை
பண்ணை கிழிய உதைத்திட்ட — கட்டுக்குலையும்படி உதைத்த
பற்பநாபா! — பத்மநாபனே!
உண்ண — நீ அமுது செய்ய
கனிகள் தருவன் — பழங்கள் கொடுப்பேன்;
ஒன்றும் நோவாமே — சற்றும் நோவாதபடி
காதுக்கு — உன்காதுகளுக்கு
கடிப்பு இடுவன் — பூஷணமிடுவேன்;
இங்கே வாராய் — அதற்கிசைந்து இங்கேவா.

‡ "கண்ணை" என்கிறவிடத்தில் "ஐ" என்னுமது சாரியை.

வ்யா. பதினோராம்பாட்டு. கண்ணையித்யாதி. * இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவேசெய்து விழிக்குமவனுகையாலே கண்ணைக்குளிரக்கலந்து. உன்னுடைய கண்ணை அவர்களுடைய கண்களோடே குளிரக்கலந்து. இத்தால் - கண்கலவியைச் சொன்னபடி. எங்கும்நோக்கி. அவர்களுடைய வடிவை ஸமுதாயேந பார்த்து. கடிகமழ் பூங்குழலார்கள். பரிமளப்ரசுரமான பூக்களாலே அலங்க்ருதமாயிருந்துள்ள குழலை யுடையவர்களுடைய. எண்ணத்து ளென்றுமிருந்து தித்திக்கும் பெருமானே. நெஞ்சுக்குள்ளே ஸர்வகாலமுமிருந்து ரஸிக்கும் பெரியோனே. அன்றிக்கே, கண்ணை யென்கிறவிடத்தில், ஐகாரத்தை அவ்யயமாக்கி, கடிகமழ் பூங்குழலாரானவர்கள் தங்கள் கண்குளிரும்படி உன்னுடைய அவயவசோபையைக் கலக்கக்கொண்டு எங்குமொக்கப்பார்த்து, உன்னோட்டைக்கலவியின் ப்ரகாரங்களையெண்ணா அவர்களுடைய அபிமதாநுரூபமான எண்ணங்கடவாமல் அதுக்குள்ளே யென்று மொக்க விருந்து அவர்களுக்கு நிரதிசயபோக்யனாகாநிற்கும் பெருமையை யுடையவனே யென்னுமாம். எங்களமுதே. எங்களுக்கு நிரதிசயபோக்யனுமாய் ஸத்தாதா(ய)கனுமாயிருக்கிறவனே. உனக்கபிமதைகளான வவர்களுக்கும் பரிவரான வெங்களுக்கு முகப்பாம்படி உன் காது பெருக்குகைக்கு வாவென்ன; நான் வருகிறேன், நீ எனக்கு என்னம்புதருவாயென்ன; உண்ணக்கனிகள் தருவன். நீ விரும்பி யமுதுசெய்யும்படி யுனக்குப் பழங்கள் தருவேனென்ன; ஆனாலும் கடிப்பிடப்புகுந்தால் காதுநோமே யென்ன; கடிப்பொன்றும் நோவாமே காதுக்கிடுவேன். சற்றும் நோவுவாராதபடி உன்காதுகளுக்குக் கடிப்பிடுவேனென்றவாறே உடன்பட்டமை தோற்றநிற்க; பண்ணையித்யாதி. கண்வளர்ந்தருளுகிற தனியிடத்திலே காவல்வைத்த சகடம் அஸுராவிஷ்டமாய் உன்னை நலியவர, அத்தைக்கோப்புக்குலையவுதைத்

துப்போகட்டு ஜகத்துக்கு வேர்ப்பற்றுனவுன்னை நோக்கித் தந்தவனல்லையோ, இங்ஙனே வாராயென்று புகழ்ந்துகொண்டழைக்கிறாள். ... ... ... ... கக.

மூ.—வாவென்றுசொல்லி யென்கையைப்பிடித்து வலியவேகாதிற்கடிப்பை
நோவத்திரிக்கிலுனக் கிங்கிழுக்குற்றேன் காதுகணொந்திடுங் கில்லேன்
நாவற்பழங்கொண்டு வைத்தேனிவையாணுய் நம்பீ முன்வஞ்சமகளைச்
சாவப்பாலுண்டு சகடிறப்பாய்ந்திட்ட தாமோதரா விங்கேவாராய். கஉ.

பதவுரை.

வா என்று சொல்லி— 'வா' என்று சொல்லி யழைத்து
என் கையை— என்னுடைய கையை
பிடித்து— சிக்கெனப் பிடித்துக் கொண்டு
வலிய— பலாத்காரமாக
காதில்— என் காதில்
கடிப்பை— கடுக்கனை
நோவ— நோம்படி
திரிக்கில்— திரிகி இட்டாயானால்
உனக்கு— உனக்கு
இங்கு— இப்போது
இழுக்குற்று என்— சேதமாவ துண்டோ?
காதுகள் நொந்திடும்— என்காதுகள் நோம், (ஆதலால்)
கில்லேன்— (வர)மாட்டேன்; (என்று அவன் சொல்ல;)
நம்பீ!— பூர்ணனானவனே
நாவல் பழம்— (நீயுகக்கும்) நாவற்பழங்களை
கொண்டு வைத்தேன் — ஸம்பாதித்துக் கொண்டுவந்து வைத்தேன்;
இவை ஆணுய்— இவற்றைப்பார்;
முன்— முன்பு
‡ வஞ்சமகள்— வஞ்சகையான பேய்ச்சி
சாவ— மாளும்படி
பால் உண்டு— அவள் முலைப் பாலையுண்டு
சகடு— சகடமானது
இற— இற்று முறிந்துவிழும்படி
பாய்ந்திட்ட— அவன்மேல் பாய்ந்த
தாமோதரா!— தாமோதரனே! இங்கேவாராய்.

‡ "வஞ்சமகளை" என்கிறவிடத்தில் ஐகாரம் சாரியை.

வ்யா. பன்னிரண்டாம்பாட்டு. வாவித்யாதி. "பற்பநாபாவிங்கேவாராய்" என்றவாறே வாவென்றுசொல்லி யென்கையைப் பிடித்து. என்னை வாவென்றுசொல்லியழைத்து, நான் வரக்கொள்ள, என்கையை யுறைக்கப்பிடித்துக்கொண்டு. வலியவே காதில் கடிப்பை நோவத்திரிக்கிலுனக் கிங்கிழுக்குற்றேன். பலாத்காரேண என்காதில் கடிப்பை நோம்படி திரிகி யிடுவதியாகில் உனக்கு இங்குச் சேதமாவதுண்டோ, என்காதுகள் நோங்காண், வரமாட்டேனென்ன; நாவற்பழம் கொண்டுவைத்தே னிவையாணுய் நம்பீ. இவன் வருகைக்காக, "நீயுகக்கும் நாவற்பழம் கொண்டுவைத்தேன்; இவற்றைப் பாராய் நம்பீ" என்று காட்ட, அத்தைக்கண்டவாறே வருவாரைப்போலே நிற்க, முன்னித்யாதி. முன்பு தன்வடிவை மறைத்துத் தாய்வடிவுகொண்டு வஞ்சகையாய்வந்த பேய்ச்சியைச் சாம்படியாக முலைப்பாலை யுண்டு, நலிவதாக மேலிட்டுவந்த சகடத்தை முறியவுதைத்துப்பொகட்டு, அவ்விரோதிகள் கையில் அகப்படாமல் உன்னைநோக்கித் தந்தவனுய், அந்தசக்திமானு யிருக்கச்செய்தே அசக்தரைப்போலே யென்கையிலே பிடியுண்டு நான் கட்டின கயிற்றின் தழும்பு உன்வயிற்றிலே கிடக்கையாலே தாமோதரனென்று பேராம்படி யென்கையாலே கட்டுண்டிருந்த நீர்மையை யுடையவனன்றோ, இங்கே வாராயென்று- உகந்தழைக்கிறாள். ... ... கஉ.

அ. நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வார்காதுதாழப் பெருக்கியமைத்து மகரக்குழையிட வேண்டிச்
சீராலசோதை திருமாலைச் சொன்னசொற் சிந்தையுணின்றுதிகழப்
பாரார்தொல்புகழான் புதுவைமன்னன் பன்னிரு நாமத்தாற் சொன்ன
ஆராதவந்தாதி பன்னிரண்டும் வல்லாரச்சுதனுக் கடியாரே. ௧௩.

பதவுரை.

வார்— இயல்பாகவே நீண்டிரா நின்ற
காது— காதானது
தாழ— தாழும்படியாக
பெருக்கி— பெருக்கச் செய்து
அமைத்து— அளவிலே அமைத்து
மகரக்குழை— மகரகுண்டலங்களை
இடவேண்டி— சாத்த ஆசைப்பட்டு
சீரால்— சீர்மையோடே
அசோதை— யசோதைப்பிராட்டி
திருமாலை— ஸ்ரியப் பதியானவனைக் குறித்து
சொன்ன— சொன்ன
சொல்— சொலவுகளானவை
சிந்தையுள்— தம் திருவுள்ளத்தில்
நின்று— ஸர்வகாலமும் நின்று
திகழ— விளங்கும்படி
பார் ஆர்—பூமிப்பரப்படங்கலும்நிறைந்ததாய்
தொல்— ஸ்வாபாவிகமான
புகழான்— கீர்த்தியை யுடையராய்
புதுவை— ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
மன்னன்— நிர்வாஹகரான பெரியாழ்வார்
பத்து இரண்டு நாமத்தால் — கேசவாதி த்வாதச நாமத்தோடு
சொன்ன— அருளிச் செய்ததாய்
ஆராத— அநுபவித்து முடியாததாய்
அந்தாதி— அந்தாதியான
பத்து இரண்டும்— இப்பன்னிரண்டு பாசுரங்களையும்
வல்லார்— ஓதவல்லவர்கள்
அச்சுதனுக்கு— ஆச்ரிதரை ஒருகாலும் நழுவவிடாதவனுக்கு
அடியார்— அந்தரங்க கிங்கரராவர்.

வ்யா. வாரித்யாதி. ஸ்வபாவமே.பொழுகுநீண்டகாதுவேண்டுமளவும்தாழப்பெருக்கி, மட்டிலேயமைத்து, மகரக்குழை சாத்தவேணுமென்றாசைப்பட்டு. சீராலித்யாதி. சீர்மைகுன்றாதபடி யசோதைப்பிராட்டி ஸ்ரியப்பதியானவனைக் குறித்துச்சொன்ன சொலவுகளானவை, சிந்தையுள் நின்று திகழ. தம்முடைய திருவுள்ளத்திலுள்ளே ஸர்வகாலமும் நின்றுவிளங்க. பாராரித்யாதி. பூமியிலுள்ளாருடைய ஹ்ருதயங்கள் நிறையும்படி பழையதான புகழை யுடையராய்த் திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார். பன்னிருநாமமித்யாதி. வைலக்ஷண்யஸித்தமான திருத்வாதசநாமங்களோடே யருளிச்செய்ததாய், அதனை அநுபவிதாக்களுக்கு ஒருகாலும் த்ருப்திபிறவாதே மேன்மேலுமபேக்ஷிக்கும்படி நிரதிசயபோக்யமாயிருக்கிற அந்தாதியான இவை பன்னிரண்டு பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். அச்சுதனுக்கடியாரே. ஆச்ரிதரை யொருகாலும் நழுவவிடாத ஸ்வபாவனானவனுக்கு அநவரத கைங்கர்ய பரராகப்பெறுவர். ... ... ... ... ... ௧௩.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

——(*)——

அடிவரவு.—போய் வண்ண வையம் வணம் சோத்தம்
விண் முலை என் மெய் காரிகை கண்ணை வா வார்காது வெண்ணெய்.

ஆக திருமொழி-௧உ-க்கு, பாட்டு - ௧௩௧.

## இரண்டாம்பத்து- நாலாந்திருமொழி- வெண்ணெயளைந்த- ப்ரவேசம்.

மாதாவான யசோதைப்பிராட்டி அவனுடைய வவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்த பால்யா தநுகுணமாக அவனை யநுஸரித்துக்கொண்டு, காதுபெருக்கி, திரியும் கடிப்பும் முதலானவையிட்டுக் காதுகுத்திப் பெருக்கித் தலைக்கட்டினவநந்தரம், பிள்ளைகளைக் காது பெருக்கினால் அந்தச்செடி நீங்கக் குளிப்பாட்டும் க்ரமத்திலே இவனைமஞ்சனமாட்டவேணு மென்று உத்யோகித்து, அதுக்கு வேண்டு முபகரணங்களையும் ஸம்பாதித்து வைத்து நீராட வாவென்றழைத்து, அவன் இசையாதவளவிலும் விடாதேநிர்ப்பந்தித்து, அவச்யம் இன்று திருமஞ்சனம் செய்யவேண்டின ஹேதுவையு மவனுக்கறிவித்து, திருமஞ்சனம் செய்தால் பின்பு திருமேனிக்கலங்காரமாகச் சாத்துகைக் குறுப்பானவையாகத்தான் தேடிவைத்த அங் கராகாதிகளையும் காட்ட இசைந்துவருகைக்குடலாக அவனுக்கு அபிமதமான அபூபலாதி களையும் முன்னிட்டு அவன்பக்கல் தனக்குண்டான ஸ்நேஹாதிகளையும் சொல்லி, * புழுதி யளைந்த பொன்மேனிகாண நான் மிகவும் விரும்பியிருப்பன், ஆனாலும் கண்டவர்கள் "ஒரு த்தி பிள்ளைவளர்த்தபடியென்" என்று பழிப்பார்கள்; அவ்வளவேயுமன்று. நீபுழுதியும் உடம்புமாயிருக்கிறபடியைக் காணில் உனக்கபிமதையான நப்பின்னைப்பிராட்டி சிரிக்கும், என்றாற்போலே சிலவற்றைச் சொல்லியும் அவனைவருந்தி யுடன்படுத்தி மஞ்சனமாட்டின ப்ரகாரத்தையும் தாமநுபவிக்க வாசைப்பட்டு, பாவநாப்ரகர்ஷத்தாலே ததவஸ்தாபந்நரா ய்க்கொண்டு அவள் அப்போது பேசின பாசுரங்களையெல்லாம் தத்காலம்போலே அவனைக் குறித்துப் பேசி, அவனை மஞ்சனமாட்டுகையாகிற ரஸத்தைத் தாமநுபவித்து ஹர்ஷடரா கிறா ரித்திருமொழியில். ... ... ... ... ... *

மூ.—வெண்ணெயளைந்த குணுங்கும் விளையாடு புழுதியுங்கொண்டு
திண்ணெனவிவ்விரா வுன்னைத் தேய்த்துக்கிடக்க நானொட்டேன்
எண்ணெய்புளிப் பழங்கொண்டிங் கெத்தனைபோது மிருந்தேன்
நண்ணலரிய பிரானே! நாரணா! நீராட வாராய். க.

### பதவுரை.

வெண்ணெய் அளைந்த — வெண்ணெயை அளைகையாலுண்டான
குணுங்கும்— முடை நாற்றத்தையும்
விளையாடு — விளையாடுகையாலுண்டான
புழுதியும்— புழுதியையும்
கொண்டு— கொண்டு
இவ்விரா— இன்றிரவில்
உன்னை— உன்னை
தேய்த்து— தினவால் உடம்பைப் படுக்கையிலே தேய்த்துக் கொண்டு
கிடக்க— கிடக்கும்படி
நான்— உன்விஷயத்தில் பரிவையுடையநான்
திண்ணென— நிச்சயமாக
ஒட்டேன்— ஸம்மதிக்க மாட்டேன்

எண்ணெய் [ எள் நெய் ]— ( உன் உடம்பில் பூசுகைக்கு உரிய ) எண்ணெய்க்காப்பும்
புளிப் பழம்— அந்த எண்ணெயைக் கழற்று வதற்குப் புளிக்காய்யையும்
கொண்டு— கையில் கொண்டு
இங்கு— இவ்விடத்தில்
எத்தனை போதும்— நெடும் போதாக
இருந்தேன்— இராநின்றேன்;
நண்ணல் அரிய— ஸ்வயத்நத்தால் ஒருவர்க்கும் கிட்டவொண்ணாத
பிரானே—! உபகாரகனே!
நாரணா!— நாராயணனே!
நீர் ஆட— திருமஞ்சனம் கொண்டருள
வாராய்— வந்தருள வேணும்.

வ்யா. முதற்பாட்டு. வெண்ணெயளைந்த குணுங்கும். வெண்ணெயமுதுசெய்யும்போது ஆண்டான அதிநிவேசாதிசயத்தாலே "தாரார்தடந்தோள்களுள்ளளவும்கைநீட்டி" என்று றையுந்தனையும் வயிறுநிறையுமென்னும் (க)மௌக்த்யத்தாலே வெண்ணெய்த்தாழிக்கு ா திருக்கைகளுள்ளளவும் நீட்டி யள்ளியும் " முழுதும்வெண்ணெயளைந்து " என்கிறப வெண்ணெயை முழுக்க விருந்தளைந்து அமுது செய்கையாலே திருமேனி யெங்கும் ண்ணெய் முடையாயிறே யிருப்பது. விளையாடுபுழுதியும். அதுக்குமேலே விளையாட ால் புழுதியிலேபோயிருந்து அளைந்துவிளையாடுகையாலே அந்த வெண்ணெய்ப்பசையோ திருமேனியெங்கும் புழுதியும்பற்றியிறே கிடப்பது. கொண்டு. இப்படி வெண்ணெ கையால்வந்த குணுங்குநாற்றத்தையும் விளையாடினபோதைப் புழுதியையும் கொண்டு. ணென. திண்ணியதாக- நிச்சயமாக வென்றபடி. இவ்விராவித்யாதி. இந்தாத்ரியில் ஊ கண்டுதியாலே உடம்பைப் படுக்கையிலே தேய்த்துக்கொண்டுகிடக்க நான் ஸம்வதி ன். திண்ணென- ஒட்டேன். நிச்சயமாக வுன்னை யிப்படி கிடக்கவொட்டேன், நான் ட்டியேவிடுவேனென்ன; எனக்கு குளிக்கைக்கு வேண்டுமவை கொண்டுவந்தாயோ வெ ; எண்ணெயித்யாதி. உன் திருமேனிக்கு முந்துறச்சாத்துகைக்கு எண்ணெய்க்காப்பும், பு அது கழற்றுகைக்குப் புளிக்காப்பும் கொண்டு அநேகம்போதில்லையோ இங்கே நானி கிறது. நண்ணலரியபிரானே. ஸ்வயத்நத்தால் ஒருவர்க்கும் கிட்டவொண்ணாத வுபகார னவனே. நாரணா. மேன்மைக்கும் நீர்மைக்கும் ப்ரகாசகமான திருநாமமிறே யிது. மையிலேயிறே யிவளுக்கிப்போதுநோக்கு. நீராடவாராய். ஒட்டேனென்று ப்ரேமத்தா சொன்னாலும் உபகரணங்களை முன்னிட்டாலும் ப்ரயோஜநமில்லையே, நீவந்தாலிறே ப்ர ஜநமுள்ளது; ஆனபின்பு, நீராடவரவேணுமென்றபேக்ஷிக்கிறாள். ... ... க.

மூ.—கன்றுகளோடச் செவியிற் கட்டெறும்பு பிடித்திட்டால்
தென்றிக்கெடுமாகில் வெண்ணெய்திரட்டி விழுங்குமா காண்பன்
நின்றமராமரம் சாய்த்தாய்! நீ பிறந்த திருவோணம்
இன்றுநீ நீராடவேண்டு மெம்பிரா னோடாதேவாராய். உ.

பதவுரை.

றுகள்— கன்றுகளானவை
— வெருண்டோடும்படி
வியில்— அவற்றின் காதுகளில்
டெறும்பு— கட்டெறும்பை
டித்து இட்டால்— பிடித்து விட்டாயாகில்
ன்றி— ஒன்று போனவழி ஒன்று போகாமல் சிதறி
டும் ஆகில்— ஓடிப்போய் விடுமாகில் (பிறகு நீ,)
வண்ணெய் திரட்டி— வெண்ணெயைத் திரட்டி
விழுங்கும் ஆ— விழுங்கும்படியை
காண்பன்— காண்பேன்; [காணமாட்டேன் என்றபடி.]

[கன்றுகள் சிதறி ஓடிப்போனால், பசுக் கறவாதாகையால் பால் கிடைக்காமற் போகவே உனக்கு ஜீவநமான வெண்ணெய் குறைந்து விடும் என்று கருத்து.]

நின்ற— நெருங்கி நின்ற
மராமரம்— ஸப்தஸால வ்ருக்ஷங்களை
சாய்த்தாய்!— முறித்துச் சாய்த்தவனே!
இன்று— இந்நாள்

(க) ஊ ஷ்யு.

நீ பிறந்த— நீ அவதரித்த
திரு ஓணம்— ச்ரவண நக்ஷத்ரங்காண்;
(ஆதலால்,)
நீ நீர் ஆடவேண்டும்— நீ திருமஞ்சனம் கொண்டருள வேணும்;
எம் பிரான்!— என் நாயனே!
ஓடாதே— (என்னை வஞ்சித்து) ஓடிப் போகாமல்
வாராய்— வந்தருளவேணும்.

வயா. இரண்டாம்பாட்டு. கன்றித்யாதி. இவளழைக்கச்செய்தேயும் வாராதே, லீலாபரனாய்நின்று கன்றுகள் வெருண்டோடுகிறது காண்கைக்காக அவற்றின் செவியிலே கட்டெறும்புகளைப் பிடித்திட அத்தைக்கண்டு சொல்லுகிறாள்;— கன்றுகள் வெருண்டோடும்படியாக அவற்றின் செவியிலே முறியக்கடிக்கும் கட்டெறும்புகளைப் பிடித்திட்டால். தேன்றியித்யாதி. வெருண்டு ஒன்றுபோனவழி ஒன்றுபோகாதே சிதறி, காணவொண்ணாதபடி ஓடிப்போய்விடுமாகில். வெண்ணெய்திரட்டி விழுங்குமாகாண்பன். வெண்ணெயிலுண்டான விருப்பத்தாலே அத்தைத்திரட்டி யிருந்து நீவிழுங்கும்படியைக்காணக்கடவேன். கன்றுண்டானாலன்றோ பசு கறக்கலாவது, பசு கறந்தாலன்றோ பாலுண்டாவது; பாலுண்டாய்: வெண்ணெயுண்டாகவேணும், ஆகையால் உன்னுடைய ஜீவநங்கிடாய் குறைப்படப்புகுகிறதென்கை. நின்ற மராமரம் சாய்த்தாய். ‡ ஓராச்ரிதனுடைய அதிசங்கையைப் போக்குகைக்காக நினைத்தபடி இலக்குக் குறிக்கவொண்ணாதபடி நெருங்கிநின்ற மராமரங்களை மறுபாடுருவ எய்து சாய்த்தவனே. நீ பிறந்த திருவோணமின்று. நீயவதரித்த திருவோணநக்ஷத்ரங்காணின்று. இதுதான் வைஷ்ணவ நக்ஷத்ர மாகையாலும் அவதாராந்தரங்களிலே இந்த நக்ஷத்ராந்வய முண்டாகக்கூடுகையாலும் தர்ம்யைக்யத்தைப் பற்றச்சொல்லுகிறது. நீ நீராடவேண்டும். பிறந்தநாளைக்கும் குளியா திருப்பாருண்டோ;(க)ஸர்வதா நீயின்று திருமஞ்சனஞ்செய்யவேணுமென்ன; "மாட்டேன்" என்று ஓடப்புக்கவாறே எம்பிரானோடாதேவாராய். என்னுடைய நாயனே! ஓடலாகாது காண், வாராயென்கிறாள். ... ... ... உ.

மூ.—பேய்ச்சிமுலையுண்ணக்கண்டு பின்னையு நில்லாதென்னெஞ்சம்
ஆய்ச்சியரெல்லாருங் கூடியழைக்கவு நான்முலைதந்தேன்
காய்ச்சின நீரோடு நெல்லிக் கடாரத்திற் பூரித்துவைத்தேன்
வாய்த்த புகழ்மணிவண்ணா! மஞ்சனமாட நீவாராய். ௩.

பதவுரை.

பேய்ச்சி— பூதனையின்
முலை— முலைப்பாலை
உண்ண— அவள் மாளும்படி நீ அமுது செய்யாநிற்க
கண்டு பின்னையும்— கண்டபின்பும்
என் நெஞ்சம்— என் நெஞ்சானது
நில்லாது— (உன்னிடத்தில் ப்ரீதியாலே) தரிக்கமாட்டாமல்
ஆய்ச்சியர் எல்லாரும்— இடைச்சிகளெல்லாரும்
கூடி— ஒன்றுசேர்ந்து
அழைக்கவும்— ("அவன் பூதனையின் முலையுண்ட போதைச் செய்தி கண்டறியாயோ? நீயுமவனுக்கு முலைகொடுக்கப் புகுகிறாயே" என்று-பயந்து) என்னை அழையாநிற்கச்செய்தேயும்

‡ ஓராச்ரிதன்-ஸுக்ரீவன். ரிச்யமூகபர்வதத்தில் வ்ருத்தாந்தம். (க) ஸர்வதா.

முலைதந்தேன் நான்— உனக்கு அஞ்சாமல் முலை கொடுத்த நான்;
நெல்லியொடு— நெல்லியோடே
காய்ச்சின— காய்ச்சின
நீர்— தீர்த்தத்தை
கடாரத்தில்— திருமஞ்சனத் தாழியிலே
பூரித்து வைத்தேன்— நிறைத்துவைத்தேன்;
வாய்த்தபுகழ்— நல்லயச்ஸ்ஸை யுடையனாய்
மணி வண்ணா!— நீலமணி போன்ற வர்ணத்தை யுடையனான கண்ணனே!
மஞ்சனம் ஆட— (புழுதிமுதலியவை போம்படி) நீராட
நீ வாராய்.

வ்யா. மூன்றாம்பாட்டு. பேய்ச்சியித்யாதி. "வஞ்சனையால்வந்த பேய்ச்சி" என்கிறபடியே- தன்வடிவை மறைத்து என்வடிவைக்கொண்டுவந்த பேய்ச்சியுடைய முலையை அவள் முடியும்படி யுண்டமைகண்டிருக்கச்செய்தே. பின்னையும் நில்லாதென் னெஞ்சம். இத்தைக்கண்டால் அஞ்சியோடவேண்டியிருக்க, பின்னையும் என்னுடைய நெஞ்சானது உன் பக்கல் ஸ்நேஹமடியாக (க) தரிக்கமாட்டாதே. ஆய்ச்சியரெல்லாருங் கூடியழைக்கவும். பேய்ச்சி பட்டுக்கிடக்கிறபடியையும் நீ அவள்மேலே யிருந்து முலையுண்கிறபடியையும் கண்டு, இடைச்சிகளெல்லாரும் (உ) பீதைகளாய்க் கூப்பிடச்செய்தேயும் நானஞ்சாமல்வந்து உன்னை யெடுத்து முலையைத்தந்தேன். இப்படியன்றோ எனக்கு உன்பக்கலுண்டான ஸ்நேஹம்; ஆன பின்பு நான்சொன்னது செய்யவேணுங் காணென்கை. காய்ச்சினநீரித்யாதி. உன்னுடைய திருமேனிக்கநுகுணமாக நெல்லியோடே காய்ச்சின திருமஞ்சநத்தைக் கடாரத்திலேபூரித்து வைத்தேன். வாய்த்தவித்யாதி. பேய்ச்சியுடைய வஞ்சனையிலே அகப்படாதே அவளை நிரஸித்து உன்னைநோக்கித் தருகையாலே நன்றான புகழையுடையனாய், அநுபவிப்பார்க்கு ஆகர்ஷகமாம்படி நீலரத்நம்போன்ற வடிவையுமுடையவனே. மஞ்சனமாட நீவாராய். மாணிக்கத்துக்கு மாசேறினாற்போலே உன் திருமேனியில் வந்தேறியான புழுதி முதலானவை போம்படி திருமஞ்சநம் செய்யவரவேணும். ... ... ... ... ௩.

மூ.—கஞ்சன் புணர்ப்பினில்வந்த கடியசகடமுதைத்து
வஞ்சகப்பேய் மகளுஞ்ச வாய்முலைவைத்த பிரானே!
மஞ்சளும் செங்கழுநீரின் வாசிகையு நாறுசாந்தும்
அஞ்சனமுங் கொண்டுவைத்தே னழகனே! நீராடவாராய் ச.

பதவுரை.

கஞ்சன்— கம்ஸனுடைய
புணர்ப்பினில் வந்த— ப்ரேரணையினால் வந்த
கடிய— க்ரூரமான
சகடம்— சகடாஸுரனை
உதைத்து— திருவடிகளால் முறித்து
வஞ்சகம்— வஞ்சனையையுடைய
பேய் மகள்— பூதனையானவள்
துஞ்ச— மாண்டுபோம்படி
முலை— அவள் முலையில்
வாய் வைத்த— வாய் வைத்தமுது செய்த
பிரானே!— நாயனே!
மஞ்சளும்— மஞ்சள் காப்பும்
செம் கழுநீரின் வாசிகையும் — செங்கழுநீர்மாலையும்
நாறு— கஸ்தூரி, பனி நீர் முதலியவற்றால் பரிமளியாநின்ற
சாந்தும்— (கலவைச்) சந்தநமும்
அஞ்சனமும்— (திருக்கண்களுக்குச் சாத்த) அஞ்சநமும்
கொண்டு வைத்தேன்— ஸம்பாதித்துவைத்திருக்கிறேன்;
(ஆதலால்,)
அழகனே!— அழகையுடைய கண்ணனே!
நீராடவாராய்.

(க) யரிக்க. (உ) வீதைகளாய்.

வ்யா. நான்காம்பாட்டு. கஞ்சனித்யாதி. கம்ஸப்ரேரிதனாய்வந்த அதிக்ரூரனான சகடாஸுரனை, முலைவரவு தாழ்த்துச்சிறி நிமிர்த்த திருவடிகளாலே கலக்கழியும்படி யுதைத்து. வஞ்சகமித்யாதி. தாய்வடிவுகொண்டுவந்த வஞ்சகியான பேய்ச்சி முடியும்படியாக அவள் முலையிலே உன் திருப்பவளத்தைவைத்து உண்ட வுபகாரகனானவனே. சகடாஸுரன் கையிலும் பூதனைகையிலும் அகப்படாமல் உன்னை நோக்கித்தந்த வுபகாரகனானவனன்றோவென்கை. மஞ்சளுமித்யாதி. உன் திருமேனிக்கு நிறம்பெறச் சாத்துகைக் கீடான மஞ்சளும், உன் திருமுடிக்கலங்காரமாகச் சாத்தத்தக்க செங்கழுநீர் வாசிகையும், உன் திருமேனிக்கநுகுணமாம்படி ஆறிக்குளிர்ந்து மணத்திருக்கிற சாந்தும், உன்னுடைய திருக்கண்களுக்குச் சாத்துகைக்கீடான அஞ்சநமும் கொண்டுவந்து வைத்தேன். அழகனே நீராட வாராய்· இவையெல்லாம் மிகையாம்படியான வழகையுடையவனே! உன்னழகு தோன்றும்படி திருமஞ்சநம் செய்ய வரவேணும். ... ... ... ... ச.

மூ.—அப்பங்கலந்த சிற்றுண்டி யக்காரம் பாலிற்கலந்து
சொப்படநான் சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேனம்பி!
செப்பிள மென்முலையார்கள் சிறுபுறம்பேசிச் சிரிப்பர்
சொப்பட நீராடவேண்டுஞ் சோத்தம்பிரா னிங்கேவாராய். ரு.

பதவுரை.

நம்பி!— பூர்ணனானவனே!
நான்— தாயான நான்
அப்பம் கலந்த— அப்பத்தோடே சேர்ந்த
சிறு உண்டி— சிற்றுண்டியை
பாலில்— பாலிலே
அக்காரம் கலந்து— $ கருப்புக்கட்டியை இட்டுப் பிசைந்து
சொப்பட— நன்றாக
சுட்டு வைத்தேன்— பக்வமாக்கி வைத்தேன்;
தின்னல் உறுதியேல் — அவற்றை அமுது செய்ய விருப்புற்றிருந்தாயாகில்
சொப்பட— நன்றாக
நீர் ஆடவேண்டும்— திருமஞ்சனம் கொண்டருள வேணும்;
(நீ நீராடா திருந்தால்,)
செப்பு— செப்புப்போன்ற ஸந்நிவேசத்தை யுடைத்தாய்
இள— இளையதாய்
மெல்— ம்ர்துவான
முலையார்கள்— முலையை யுடையவர்கள்
சிறு — தோற்றின நீசபாஷிதங்களை
புறம்பேசி— காணாதவிடங்களிலே சொல்லி
சிரிப்பர்— பரிஹஸியா நிற்பர்கள்;
பிரான்!— நாயனே!
சோத்தம்— உன்னைத் தொழுகிறேன்;
இங்கேவாராய்— (அவர்கள் பரிஹாஸத்துக் கிடமறும்படி) இங்கே வரவேணும்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. அப்பமித்யாதி. அப்பத்தையும் அத்தோடே சேர்ந்த சிற்றுண்டியாகிற அபூப விசேஷத்தையும். அக்காரம் பாலில்கலந்து. பாலிலே $கருப்புக்கட்டியையிட்டுப் பிசைந்து. சொப்படவித்யாதி. நன்றாக நான் சுட்டுவைத்தேன். சொப்பட - நன்றாக. தின்னலுறுதியேல் நம்பி. பிள்ளைத்தனத்தில் பூர்த்தியை யுடையவனே! அமுது செய்யவேணுமென்று அதிலே உற்றிருந்தாயாகில், நீராடவேண்டுமென்று மேலே அந்வயம். செப்புப்போலே யிருக்கிற ஸந்நிவேசத்தையுடைத்தாய் இளையதாய் ம்ர்துவாயிருக்கிற முலை

$ கருப்புக் கட்டி-இக்ஷு கண்டம்.

யையுடையவர்கள். சிறுபுறம் பேசிச்சிரிப்பர். நீ நீராடாமலிருக்கிற வடிவைக்கண்டால் தோற்றின புன்மைகளைக் காணுதவிடங்களிலே சொல்லிச் சிரியாநிற்பர்கள். சிறுமை - புன்மை. புறம்பேசுகையாவது - காணுதவிடத்தே சொல்லுகை. சொப்படநீராடவேண்டும். அதுக்கிடமறும்படியாகவும் நன்றாக நீராடவேணுமென்ன; அவ்வளவிலும் அவன்வாராமையாலே சோத்தம்பிரா னிங்கேவாராய். பிரானே! உன்னைத்தொழுகிறேன், இங்கே வாராயென்று அழைக்கிருள். ... ... ... ... ... ரு.

மூ.—எண்ணெய்க்குடத்தையுருட்டி யிளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக்
கண்ணைப்புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும்பிரானே!
உண்ணக்கனிகடருவ னொலிகடலோத நீர்போலே
வண்ணமழகியநம்பி! மஞ்சனமாட நீ வாராய். சு.

பதவுரை.

எண்ணெய்க்குடத்தை—எண்ணெய்க்குடத்தை
உருட்டி— உருட்டியும்
இள பிள்ளை— (தூங்குகிற) சிறுப் பிள்ளையை
கிள்ளி எழுப்பி— வீரிட்டுக் கூப்பிடும்படியாகக் கிள்ளி எழுந்திருக்கச் செய்தும்
கண்ணை— கண் இமையை
புரட்டி விழித்து— அகவாய் புறவாயாகப் புரட்டி விழித்து [அப்பூச்சி காட்டி என்றபடி.]
கழகண்டு— இப்படி பொறுக்க முடியாத தீம்புகளை
செய்யும்— செய்யா நின்ற
பிரானே!— ஸ்வதந்த்ரனே!
உண்ண— நீ புஜிக்கும்படி
கனிகள் தருவன்— பழங்கள் கொடுப்பேன்; (ஆனபின்பு,)
ஒலி— கோஷியா நின்ற
கடல்— ஸமுத்ரத்தின்
ஓதம்— திரைக் கிளப்பத்தையுடைய
நீர் போலே— ஜலம்போலே
அழகிய வண்ணம் — அழகிய நிறத்தையுடைய
நம்பி!— பூர்ணனே!
மஞ்சனம் ஆட நீ வாராய்.

வ்யா. ஆரும்பாட்டு. எண்ணெயித்யாதி. அகத்திலுள்ளாரெல்லாரும் அங்யபராம்படியாக எண்ணெய்க்குடத்தை யுருட்டி. அத்தை யிறைப்பார் வழிப்பாராய்க்கொண்டு வ்யாகுலப்படாநிற்கச்செய்தே; இளம்பிள்ளை கிள்ளியெழுப்பி. அத்தைவிட்டிங்கே யோடிவரவேண்டும்படி-கிடந்துறங்குகிற சிறுப்பிள்ளையைத் தேளெறிந்தாற்போலே வீரிட்டுக்கூப்பிடும் படியாகக் கிள்ளியெழுப்பி. கண்ணைப்புரட்டிவிழித்து. அருகுநின்றவர்கள் முகத்திலே "அப்பூச்சி" என்று கண்ணினிமையை அகவாய் புறவாயாகப்புரட்டி விழித்து. கழகண்டு செய்யும் பிரானே. இப்படி துஸ்ஸஹமான தீம்புகளைச் செய்யும் ஸ்வதந்த்ரனானவனே. ஒருத்தர் கையிலும் அடங்காதானு யிராநின்றாயே யானாலும், நான் இப்போது சொல்லிற்றுச் செய்ய வேணுங்காணென்று கருத்து. உண்ணக்கனிகள்தருவன். நீ விரும்பி யமுது செய்யும்படி நாவல்பழம் முதலான பழங்களைத்தருவேன். ஒலிகடலித்யாதி. கோஷிக்கிறகடலின் திரைக்கிளப்பத்தை யுடைத்தான ஜலம்போலே திருமேனியின் நிறமழகிய நம்பீ!. மஞ்சனமாட நீ வாராய். உன் திருமேனியில் அழகு தோன்றும்படி திருமஞ்சனமாட நீ வரவேணும்....சு

மூ.—கறந்தநற்பாலுந்தயிருங் கடைந்துறிமேல் வைத்தவெண்ணெய்
பிறந்ததுவேமுதலாகப் பெற்றறியே னெம்பிரானே!
சிறந்தநற்றா யலர்தூற்று மென்பதனாற் பிறர்முன்னே
மறந்து முரையாடமாட்டேன் மஞ்சனமாட நீ வாராய். எ.

பதவுரை.

எம் பிரானே!— என் நாயனே!
பிறந்தது முதலாக — நீ பிறந்தவன்று தொடங்கி
கறந்த— ப்ராப்தகாலங்களில் கறக்கப்பட்ட
நல் பாலும்— நல்ல பாலையும்
தயிரும்— தயிரையும்
கடைந்து— கடைந்து
உறி மேல் வைத்த — உறி மேல் வைக்கப்பட்ட
வெண்ணெய்— வெண்ணெயையும்
பெற்று அறியேன்— நான் பெற்றதேயில்லை;
சிறந்த நல்தாய்— "பிள்ளைமேல் குற்ற முண்டானாலும் மறைக்கக் கடவ மிக்க ப்ரீதியை யுடைய தாயானவள்
அலர் தூற்றும்— பழி தூற்றா நின்றாள்"
என்பதனால்— என்று உலகத்தார் சொல்லுமத்தைப்பற்ற
பிறர் முன்னே— அயலார் முன்பு
மறந்தும்— ஞாபகம் தப்பியும் கூட
உரையாட மாட்டேன்— வாய்விடமாட்டேன்;
மஞ்சனம் ஆட நீ வாராய்.

வ்யா. ஏழாம்பாட்டு. கறந்தவித்யாதி. ப்ராப்தகாலங்களிலே கறந்த நல்லபாலும். நன்மையாவது - நாழியும் உழக்குநெய்போருகை. தயிரும். அந்தப்பாலிலேயுறைந்ததயிரும். கடைந்துறிமேல் வைத்தவெண்ணெய். அப்படியிருந்துள்ள தயிரைக் கடைந்து தாழியிலே சேர்த்து உறிமேலேவைத்த வெண்ணெயும். பிறந்ததித்யாதி. நீபிறந்தவன்றுதொடங்கி, என் நாயனே! இவை நான் பெற்றறியேன். சிறந்தவித்யாதி. குற்ற முண்டானாலும் மறைக்கக் கடவ மிகவும் ஸ்நேஹிநியான தாயானவள்தான் பழிதூற்றாநின்றாளென்று லோகம்சொல்லுமத்தைப்பற்ற அந்யருடையமுன்பு அபுத்திபூர்வகமாகவும் வாய்விடமாட்டேன். மஞ்சனமாடநீவாராய். இப்படி உனக்கு ஸ்நேஹிநியான வெனக்கு ப்ரியமாக நீ மஞ்சநமாட வரவேணும். ... ... ... ... ... ... எ.

மூ.—கன்றினை வாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து
பின்றொடர்ந்தோடியோர் பாம்பைப் பிடித்துக்கொண் டாட்டினாய்போலும்
நின்றிறத்தேனல்லே னம்பி! நீபிறந்த திருநன்னாள்
நன்று நீ நீராடவேண்டும் நாரணாவோடாதேவாராய். அ.

பதவுரை.

கன்றினை— ஒரு கன்றை
வால் ஓலை கட்டி— வாலில் ஓலையைக்கட்டி
கனிகள் உதிர எறிந்து— பழங்கள் உதிரும்படி மரத்தின்மேல் வீசியெறிந்து
பின் தொடர்ந்து— பின்னே தொடர்ந்து
ஓடி— ஓடிச்சென்று
ஓர் பாம்பை— ஒரு பாம்பை
பிடித்துக் கொண்டு— பிடித்துக் கொண்டு
ஆட்டினாய் போலும்— ஆட்டினாயோதான்;
நம்பீ!— தீம்பில் கைதேறினவனே!

நின் திறத்தேன் அல்லேன்— உன் படி
களொன்றும் நானறியேன்;
நீ பிறந்த— நீ அவதரித்த
நல்— விலக்ஷணமான
திரு நாள்— திரு நக்ஷத்ரங்காண் இன்று;
(ஆதலால்,)
நீ நன்று நீர் ஆடவேண்டும் — நீ நன்றாக
நீராடவேண்டும்;
நாரணா!— நாராயணனே!
ஓடாது வாராய்— ஓடாமல் வந்தருளாய்.

வ்யா. எட்டாம்பாட்டு. கன்றினையித்யாதி. கன்றுகள் மேய்க்கப்போனவிடத்தே வெருண்டு துள்ளியோடுமது காண்கைக்காக ஒருகன்றை வாலிலே ஓலையைக்கட்டி, உன்னை நலிகைக்காகக் கன்றுகளின் நடுவே கலசிவந்து நின்றதோர் ஆஸுரமானகன்றைக்குணிலாகக்கொண்டு ஆஸுரமான விளாவினுடைய பழங்கள் உதிரவெறிந்து. பின்னித்யாதி. அதுக்குப் பின்பாக வோடிச்சென்று ஒருபாம்பைப் பிடித்துக்கொண்டு ஆட்டினாயோதான். நீ யிப்போது செய்கிற தீம்பால் அவையும் செய்தாயாக நான் கேட்டதுங்கூடுமிறே. துடர்ந்தென்றது - (க) கதிவாசியாய், சென்றென்றபடி. நின்னித்யாதி. உன்படிகளொன்றும் தெரிகிறதில்லை. அதுகிடக்கிடு, நீபிறந்த திருநன்னாள். நீ யவதரித்த விலக்ஷணமான திருநக்ஷத்ரங்காணின்று. நன்று நீ நீராடவேண்டும். நன்றாக நீ திருமஞ்சனம் செய்யவேணும். ஒருநாளும் நீராடாதாரும் பிறந்தநாளில் நீராடாதாரில்லையிறே. நாரணா வோடாதேவாராய். ஸர்வாத்மாக்களோடும் ஒழிக்கவொழியாத ஸம்பந்தத்தை யுடையவனே! என்னுடைய சொல்லை மறுத்து ஓடலாகாதுகாண், வாராய். ... ... ... அ

மூ.—பூணித்தொழுவினிற்புக்குப் புழுதியளைந்த பொன்மேனி
காணப்பெரிது முகப்பனாகிலுங்கண்டார் பழிப்பர்
நாணெத்தனையுமிலாதாய்! நற்பின்னை காணிற்சிரிக்கும்
மாணிக்கமே! என்மணியே! மஞ்சனமாட நீவாராய். கூ.

பதவுரை.

பூணித் தொழுவினில்— பசுக்களை யடைத்துத் திறந்து விடும் தொழுவிலே
புக்கு— ப்ரவேசித்து
புழுதி அளைந்த— புழுதியை அளைந்த
பொன் மேனி — பொன் போன்ற திருமேனியை
காண— காண்கைக்கு
பெரிதும்— மிகவும்
உகப்பன்— விரும்பியிருப்பேன்;
ஆகிலும்— நானுகந் திருந்தாலும்
கண்டார்— உன்னைப் பார்த்தவர்கள்
பழிப்பர்— ("ஒருத்திபிள்ளை பெற்று வளர்த்தபடியென்!" என்று) ஏசுவர்கள்;
எத்தனையும்— சற்றேனும் [துளிகூட]
நாண் இலாதாய்!— வெட்க மில்லாதவனே!
நற் பின்னை— நப்பின்னை யானவள்
காணில்— உன் உடம்பைக் கண்டாளாகில்
சிரிக்கும்— சிரியாநிற்கும்;
(ஆதலால்,)
என்— எனக்கு
மாணிக்கமே!— மாணிக்கம் போன்றவனே!
மணியே!— மணிபோன்றவனே!
மஞ்சனம் ஆட நீ வாராய்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. பூணியித்யாதி. பசுக்களையடைத்துத் திறந்துவிடும் தொழுவிலேபுக்கு. ஜாத்யுசிதமாகத் தொழுக்களிலே புகுந்து விளையாடாநிற்குமிறே. புழுதி

(க) மதிவாசி.

யளைந்த பொன்மேனி. பால்யாநுகுணமாகப் புழுதியையிருந்தளைகையாலே, அது திருமேனியெங்கும் வ்யாப்தமானுலும் பொன்னுக்குப் புழுதியேறினாற்போலே யிருக்கும்படியைப் பற்றச்சொல்லுகிறது. காணப்பெரிதுமுகப்பன். நீராட்டிக்காண்பதிலும் (க) முக்தபாவம் தோற்றுகையாலே, இப்படி யிருக்கிற வுன்திருமேனியைக் காண்கைக்கு மிகவும் விரும்பியிருப்பன். ஆகிலும் கண்டார் பழிப்பர். நானுகந்திருந்தாலும் உன்னைக்கண்டவர்கள் "ஒருத்தி பிள்ளை பெற்றுவளர்த்தபடியென்!" என்று ஏசுவர்கள். நாணெத்தனையுமிலாதாய். ஏகதேசமும் லஜ்ஜையில்லாதவனே. நற்பின்னைகாணிற் சிரிக்கும். நீ புழுதியும் உடம்புமாயிருக்கிற படியை நற்பின்னை காணுமாகில் மைத்துனமையாலே சிரிக்கும். நாட்டார் பழிக்கு அஞ்சுகிறமாத்ரமோ, நற்பின்னை சிரிப்புக்கு லஜ்ஜிக்கவேண்டாவோ. நீ அதுசெய்யாதொழிகிறது நிர்லஜ்ஜனுகையாலேயென்று கருத்து. மாணிக்கமேயென்மணியே. வடிவழகுக்கு ஒன்றே உபமாநமாவதொன்றில்லாமையாலே அங்குமிங்கும் கதிர் பொறுக்குகிறாள். மாணிக்கம்போலேயும் மரகதம்போலேயு மிருக்கிற வடிவழகை யுடையவனே யென்கை. மஞ்சனமாட நீ வாராய். இப்படி யிருக்கிற வுன்திருமேனியில் வந்தேறியான அழுக்குக் கழிந்து விளங்கும்படி திருமஞ்சநமாட வரவேணும். ... ... ... ... சா௯

அ. நிகமத்தில்- இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித்தலைக்கட்டுகிறார்.

மூ.—கார்மலிமேனிநிறத்துக் ¶கண்ணபிரானையுகந்து
வார்மலிகோங்கையசோதை மஞ்சனமாட்டியவாற்றைப்
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான் சொன்னபாடல்
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே. ௰.

பதவுரை.

| | |
|---|---|
| கார்— நீர் கொண்டெழுந்த காளமேகத்திற் காட்டில் | பார் மலி — பூமியி லடங்காத ஏற்றத்தை யுடையதாய் |
| மலி— மிகுத்திருந்துள்ள | தொல்— ப்ராசீநமான |
| மேனி நிறம்— திருமேனி நிறத்தை யுடையனுன | புதுவை— ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு |
| கண்ண பிரானை— கண்ண பிரானை | கோன்— நிர்வாஹகரான |
| உகந்து— ஆதரித்து | பட்டர் பிரான்— பெரியாழ்வார் |
| வார் மலி கொங்கை— கச்சி லடங்காமல் விம்மும்படியான முலையையுடைய | சொன்ன— அருளிச்செய்ததாய் |
| அசோதை— யசோதையானவள் | சீர் மலி— லக்ஷணங்களமைந்ததாய் |
| மஞ்சனம் ஆட்டிய— நீராட்டின | செம் தமிழ்— செந்தமிழா யிருந்துள்ள |
| ஆற்றை— ப்ரகாரத்தை | பாடல்— (இப்)பாடலை |
| | வல்லார்— ஓதவல்லவர்கள் |
| | தீவினை யாதும் இலர்— தீவினை யொன்று மில்லாதவர்கள். |

வ்யா. கார்மலிமேனிநிறத்து. நீர்கொண்டெழுந்த காளமேகத்திற்காட்டில் மிகுத்திருந்துள்ள திருமேனி நிறத்தையுடைய. கண்ணபிரானையுகந்து. ஆச்ரிதர்க்கு ஸுலபனுமாய் உபகாரகனுமானவனை ஆதரித்துக்கொண்டு. வார்மலியித்யாதி. கச்சி லடங்காமல்

(க) முக்தபாவம்.

¶ (பா) "நிறத்தென் கண்ணபிரானை."

விம்மும்படியான முலையையுடைய யசோதைப்பிராட்டிமஞ்சநமாட்டின ப்ரகாரத்தை. பார்மலி யித்யாதி. பூமியிலடங்காத ஏற்றத்தையுடைத்தாய்ப் பழையதாயிருந்துள்ள திருப்புது வைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த. சீர்மலிசெந்தமிழ்வல்லார். சீர்மலிகை யாவது- சப்தலக்ஷணங்களில் குறைவற்றிருக்கையாலே அழகுமிக்கிருக்கை. அன்றிக்கே, பகவத்குணங்களால் நிறைந்திருக்கிற வென்னுதல். செந்தமிழ். ஆர்ஜவயுக்தமான தமிழ். அதாவது- சப்தத்தினுடைய ப்ரஸந்நதையாலே உள்ளில் கிடக்கிற அர்த்தம் தானே ப்ரகாசிக் கும்படி யிருக்கை. பாடல். பாட்டுக்கள். வல்லார். இவற்றை ஸாபிப்ராயமாகவல்லவர்கள். தீவினையாதுமிலரே. தீவினையொன்று மில்லாதவராவர். அவர்களுக்கு ஒரு துஷ்கர்மங்களுமி ல்லை யென்கை. ... ... ... ... ... ய.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—வெண்ணெய் கன்று பேய்ச்சி கஞ்ச னப்ப மெண்ணெய்
கறந்த கன்றினை பூணி கார் பின்னை.

(*)

ஆ - திருமொழி, கரு - க்கு, பாட்டு- கசக.

---

அ. "எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே" என்கிறபடியே அவதார ஸமயமே தொடங்கி இவ்வவதாரசேஷ்டித ரஸமெல்லாம் தானே முற்றூட்டாக வநுபவித்த யசோதைப்பிராட்டி, அவனுடைய அவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்த பால்யாநுகுண மாக அவள் அவனை "மஞ்சனமாடவாராய்" என்று அர்த்தித்து, அவன் அதுக்கிசையா மையாலே அநேக ப்ரகாரேண அநுஸரித்து உடன்படுத்தி மஞ்சனமாட்டித் தலைக்கட்டின வநந்தரம், அவனுக்குத் திருக்குழல்வாருவதாக உத்யோகித்து அவன் பிணங்கியோடாமல் இசைந்து நிற்கைக்காக, லோகத்தில் சிறுப்பிள்ளைகளைக் குழல்வாருவார், அவர்களை வசப் படுத்துகைக்காக மருட்டிச் சொல்லுமாபோலே, இவனுடைய பால்யாநுகுணமாக "அக் காக்காய் குழல்வாரவா" என்று பலகாலு மிவன் செவிகேட்கச் சொல்லிச் சீராட்டிக்கொ ண்டிருந்து திருக்குழல்வாரின ப்ரகாரத்தையும் தாமநுபவிக்க வாசைப்பட்டு, பாவநாப்ரகர் ஷத்தாலே தததவஸ்தாபந்நராய்க்கொண்டு, தத்காலம்போலே தாம் அவனைக்குறித்து அப்பா சுரங்களைச் சொல்லி, திருக்குழல் வாருகையாகிற ரஸத்தை யநுபவிக்கிறார். ... ... *

மூ.—பின்னைமணாளனைப் பேரிற்கிடந்தானை
முன்னையமரர் முதற்றனி வித்தினை
என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட
மன்னனைவந்து குழல்வாராயக் காக்காய்
மாதவன்றன்குழல் வாராயக்காக்காய். க.

பதவுரை.

| | |
|---|---|
| பின்னை— நப்பின்னைப் பிராட்டிக்கு | பேரில்— "திருப்பேர்" என்னும் திவ்ய தேசத்தில் |
| மணாளனை— வல்லபனைப் | |

கிடந்தானை— பள்ளிகொண் டருளினவனைப்
முன்னை அமரர்— நித்ய ஸூரிகளுக்கு
முதல்— தலைவனைப்
தனி வித்தினை— அத்விதீயகாரண பூதனைப்
என்னையும்— என்னையும்
எங்கள் குடிமுழுது— * ஏழாட்காலும் பழிப்பில்லாத எங்கள்குடியி லுள்ளாரெல்லாரையும்
ஆள் கொண்ட— அடிமை கொண்ட
மன்னனை— ராஜாவானவனை
வந்து— அருகே வந்து
‡ குழல்வாராய் அக்காக்காய்;

மாதவன் தன்— ஸ்ரிய:பதியான வனுக்கு
‡குழல்வாராய் அக்காக்காய்.

‡ இது சிறுப் பிள்ளைகளைக் குழல் வாருவார் சீராட்டாகச் சொல்லுகிற பாசுரம். மேலில் "உற்றன பேசி நீயோடித்திரியாதே" என்றும், "பிண்டத்திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறு முண்டற்கு வேண்டி நீயோடித் திரியாதே" என்று மருளிச்செய்தமையால் காகத்தை நோக்கிச் சொல்லும் பாசுரமென்று கொள்ளவேணும். "அக்காக்காய்" என்பது வ்யாவஹாரிகச் சொல்லு.

வ்யா. முதற்பாட்டு. பின்னைமணாளனை. நற்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனானவனை. இவ்வவதாரத்துக்கு ப்ரதாநமஹிஷி யிவளிறே. மேன்மைக்கு ஸ்ரிய:பதியென்னுமாபோலேயிறே நீர்மைக்கு இவளுக்கு வல்லபனென்கிறதும். பேரில் கிடந்தானை. அதுக்குமேலே ஒரு நீர்மையிறேயிது. அவதார ஸௌலப்யம் போலன்றிறே அர்ச்சாவதார ஸௌலப்யம். "கொம்பினார் பின்னை கோலங்கூடுதற்கேறுகொன்றான் - தென் திருப்பேருள் மேவு மெம்பிரான்" என்கையாலே - பின்னைக்கு மணாளனானதுக்கும் பேரில்கிடந்ததுக்கு மொரு சேர்த்தியுண்டிறே. நற்பின்னைப்பிராட்டியைத் திருமணம் புணர்ந்து, பின்பு அவளோடேகூடவந்து கண்வளர்ந்தருளிற்றுத் திருப்பேரிலேபோலே காணும். முன்னையமரரித்யாதி. கீழ்ச்சொன்ன நீர்மைக்கெதிர்த்தட்டான மேன்மையைச்சொல்லுகிறது.(க)"ய‌த்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:" என்கிறபடியே பகவதநுபவத்துக்கு முற்பாடரான நித்யஸூரிகளுக்கு சேஷித்வேநப்ரதாநனாய் அவர்களுடைய ஸத்தாதிகளுக்கும்(உ)தாரகாதிகளுக்கும் தானே ஹேதுவானவனை. என்னையுமித்யாதி. தன்னைப் பரிந்தன்றி உளனாகாதவென்னையும் *ஏழாட்காலும் பழிப்பில்லாத எங்கள்குடியிலுள்ளாரெல்லாரையும் ஸ்வரூபாநுரூபமான வடிமையைக்கொண்ட. மன்னனை. ராஜாவானவனை. வந்துகுழல்வாராயக்காக்காய். இது சிறுப்பிள்ளைகளைக் குழல்வாருவார் சீராட்டாகச் சொல்லும் பாசுரம். மாதவனித்யாதி. நீர்மைக்குப் பின்னைமணாளனாற்போலே, மேன்மைக்கு ஸ்ரிய:பதியானவனுடைய குழல்வாராய் வந்துக் காக்காய். ... ... ... ... ... ... ... க.

மூ.—பேயின்முலையுண்ட பிள்ளையிவன் முன்னம்
மாயச்சகடு மருது மிறுத்தவன்
காயாமலர் வண்ணன் கண்ணன் கருங்குழல்
தூய்தாகவந்து குழல்வாராயக் காக்காய்
தூமணிவண்ணன் குழல்வாரா யக்காக்காய். உ.

பதவுரை.

இவன்— இச்சிறுப் பிள்ளையானவன்
முன்னம்— முன்பு
பேயின்— பூதனையின்
முலை— முலைப்பாலை

(க) "யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:." (உ) யாரசாதி.

உண்ட— அமுது செய்த
பிள்ளை— பிள்ளைகாண்;
மாயம்— க்ருத்ரிமமான
சகடம்— சகடத்தையும்
மருதும்— யமளார்ஜுநங்களாகிற இரட்டை மருத மரத்தையும்
இறுத்தவன்— முறித்துப் போகட்டவன் காண்;
காயா மலர்— காயாம் பூப்போன்ற
வண்ணன்— திருநிறத்தையுடையவன்காண்;
கண்ணன் — (இப்படியிரா நின்ற) கண்ணனுடைய
கரு குழல்— கறுத்திரா நின்ற திருக்குழலை
தூய்தாக— நன்றாக
வந்துகுழல் வாராய் அக்காக்காய்;
தூ மணி— பழிப்பற்ற நீலமணி போன்ற
வண்ணன்— திருநிறத்தையுடைய வனுடைய குழல்வாராய் அக்காக்காய்.

வ்யா. இரண்டாம்பாட்டு. பேயின்முலையுண்ட பிள்ளையிவன்முன்னம். முன்னம் தாய் வடிவுகொண்டுவந்த பூதனையுடைய முலையை, தாய்முலையுண்ணுமாபோலே யிருந்துண்ட (க)முக்தனிவன். இவனுக்குப் பிள்ளைத்தனத்தில் புரையில்லையாகில் அவள் முடிந்தபடியென் னென்னில்; ப்ரதிகூலித்துக் கிட்டினார் முடியக்கடவ வஸ்து ஸ்வபாவத்தாலே முடிந்த வித் தனை. மாயச்சகடுமேருது மிறுத்துவன். அதுக்குப் பின்பு, கண்வளர்ந்தருளா நிற்கச்செய்தே அஸுர விஷ்டமாய் நலியவந்த க்ருத்ரிமமான சகடத்தையும், தவழ்ந்து போகா நிற்கச் செய்தே நடுவே நலிவதாகநின்ற யமளார்ஜுநங்களையும் காலாலும் துடையாலும் தள்ளி முறித்துப் பொகட்டவன். காயாமலர்வண்ணன். ஆத்மகுணங்கள் மிகையாம்படி அப்போ தலர்ந்த செவ்விக்காயாம் பூப்போலேயாய், அநுகூலரை எழுத்திடுவித்துக் கொள்ளும் வடி வழகு படைத்தவன். கண்ணன். விரூபனுைம் விடவொண்ணுத ஸௌலப்யத்தை யுடையவன். கருங்குழல். குழலுக்கு ஒரு போலி காணுமையாலே வெறும் கருங்குழ லென்கிருள். தூய்தாகவந்து குழல்வாராய். நன்றாகவந்து குழல்வாராய். தூய்தாக வாரு கையாவது - அலகலகாய்ச் செப்பம் கிடக்கும்படி வாருகை. தூம்ணிவண்ணன். பழிப் பற்ற நீலரத்நம் போலேயிருக்கிற வடிவையுடையவன். காயாம் பூப்போலே போது செய் யாதே ஒரு படிப்பட்டிருக்கும் நீலரத்நம் போன்ற வடிவழகையுடையவனென்கை. ... உ.

மூ.—திண்ணக் கலத்துத் திரையுறி மேல் வைத்த
வெண்ணெய் விழுங்கி விரையனுறங்கிடும்
அண்ணலமரர் பெருமானை யாயர்தம்
கண்ணனைவந்து குழல்வாரா யக்காக்காய்
கார்முகில்வண்ணன் குழல்வாரா யக்காக்காய். ௩.

பதவுரை.

திண்ணம்— திண்ணிதான்
கலத்து—கலத்திலே
திரை— கயிறுகளால் பின்னப்பட்டுப் பெரிதாயிருந்துள்ள
உறிமேல்— உறியில்
வைத்த— பத்ரப்படுத்தி வைக்கப்பட்ட
வெண்ணெய்— வெண்ணெயை
விழுங்கி— விழுங்கி
விரையன்— கடுக ஓடிவந்து
உறங்கிடும்— உறங்குவான் போல் கிடக்குமவனும்
அண்ணல்— ஸர்வஸ்வாமியாய்

(க) முக்தம்.

அமரர் பெருமானை— நித்யஸூரி நாதனும்
ஆயர் தம்— இடையர்களுக்கு
கண்ணனை— கண்ணான வனுடைய
குழல் வந்து வாராய் அக்காக்காய்;

கார்முகில்— நீலமேகம் போன்ற
வண்ணன்— வடிவையுடைய வனுடைய
குழல் வாராய் அக்காக்காய்.

வ்யா. மூன்றும்பாட்டு. திண்ணக்கலத்து. சிக்கென்ற கலத்திலே. கோல்களாலே மாறியடித்தாலும் உடைபடாத கலமென்கை. திரையுறிமேல்வைத்த. பெரிய வுறிமேலே வைத்த. திரையுறியாவது - கயிற்றுப் பின்னலாகக் கொண்டு சமைத்த பெரியவுறி. வெண்ணெய் விழுங்கி. இப்படி சேமித்துவைத்த வெண்ணெயை வைத்தகுறியழியாமல் " தைவம் கொண்டதோ " என்னும்படி விழுங்கி. விரையவுறங்கிடும். உடையவர்கள் காணுமதற்கு முன்னே கடுகப் போந்து, அறியாதாரைப் போலே கிடந்துறங்கா நிற்கும். வெண்ணெய் விழுங்குகிற போதைப் பதற்றத்திலுங் காட்டில் பதறி உறங்கப்புக்கால் கண்ணுறங்குமோ. குறுவிழிக்கொண்டு, வந்தார், போனார் நிழலாட்டம் பார்த்துக் கொண்டு கிடக்கையாலே, " இதென்ன பொய்யுறக்கம் " என்று பிடித்துக் கொள்ளுமவர்களிறே. அண்ணல். ஸ்வாமி. இந்த நவநீதசௌர்ய வ்ருத்தாந்தத்தாலே அநுகூலரானவர்களை யெழுதிக் கொள்ளுமவன். அமரர்பெருமானை. * அயர்வறு மமரர்களதிபதியை. மேன்மைக்கு இதுக்கவ்வருகு சொல்லலாவதில்லையிறே. ஆயர்தம்கண்ணனை. அம்மேன்மைக்கெதிர்த்தட்டான நீர்மை சொல்லுகிறது. இடக்கை வலக்கை யறியாத இடையர்க்கு நிர்வாஹகனானவனை. கண்ணன். அவர்களுக்குக் கண்ணானவனென்னவுமாம். கார்முகில்வண்ணன். வர்ஷூகவலாஹகம்போலேயிருக்கிற வடிவையுடையவன். இத்தால்- அநுபவிப்பார்க்கு ச்ரமஹரமான வடிவையுடையவனென்கை. குழல்வாராய். ... ... ... ௩.

மூ.—பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டு
கள்ளவசுரன் வருவானைத் தான்கண்டு
புள்ளிதுவென்று பொதுக்கோவாய் கீண்டிட்ட
பிள்ளையைவந்து குழல்வாராய்க் காக்காய்
பேய்முலையுண்டான் குழல்வாராய்க் காக்காய். ௪.

பதவுரை.

பள்ளத்தில்— நீர்த்தாழ்வுகளிலே
மேயும்— இரை தேடித்திரியா நிற்கிற
பறவை— கொக்காகிற பக்ஷியின்
உரு கொண்டு— ரூபத்தைக் கொண்டு
வருவான்— வாரா நின்ற
கள்ள அசுரனை— க்ருத்ரிமனான அஸுரனை [ பகாஸுரன். ]
தான்— பாக்காய் கன்றுமேய்த்து விளையாடுகிற தான்
கண்டு— பார்த்து
இது புள் என்று— அஸுரனென்று இத்தைப் பெருக்க நினையாதே ஒரு பக்ஷியென்று அநாஸமாக நினைத்து
வாய்— அதின் வாயை
பொதுக்கோ— சடக்கென
கீண்டிட்ட— கிழித்துப் பொகட்ட
பிள்ளையைவந்து குழல்வாராய் அக்காக்காய்;
பேய்— பூதனையின்
முலை உண்டான்— முலையை உண்டவனுடைய
குழல்வாராய் அக்காக்காய்.

வ்யா. நான்காம்பாட்டு. பள்ளத்திலித்யாதி. நீர்த்தாழ்வுகளிலே இரையெடுத்துத்திரியாநிற்கும் (க)பகமாகிறபக்ஷியின் வடிவைக்கொண்டு. கள்ளவசுரன். க்ருத்ரிமமான அஸுரன்.

(க) பக.

தன்னுடைய ரூபத்தை மறைத்து பகரூபங்கொண்டுவந்தது- க்ர்த்ரிமனைகையாலேயிறே. வருவானைத்தான்கண்டு. இப்படி ப்ரச்சந்நனாய்க்கொண்டு தன்னை நலிய வருகிறவனை, அங்யபரனாய்க் கன்றுமேய்த்துநின்று விளையாடுகிற தான்கண்டு. புள்ளிதுவென்று. அஸுரனென்று இத்தைப்பெருக்க நினையாதே, ஒருபக்ஷியென்று ஆபாஸமாகநினைத்து. போதுக்கோ வாய்கீண்டிட்ட. தன்னை நலிவதாக அங்காந்துவருகிறவாயை, அதினுடைய நினைவுக்கிடமறும்படி சடக்கெனக்கிழித்துப்பொகட்ட. பொதுக்கோவென்கிறது- பொதுக்கெனவென்றபடி. அதாவது- சடக்கெனவென்கை. பிள்ளையை. பிள்ளைத்தனத்தில் புரையில்லாதவனை. இத்தனையும் செய்யாநிற்கச்செய்தே இதுதானுமொரு விளையாட்டாயிருந்தபடி. பேய்முலையுண்டான். அவள் முலையுண்கிறவிடத்தில் பிள்ளைத்தனத்தில் புரையில்லாதாற்போலேயாய்த்து- இதுவும்.

மூ.—கற்றினமேய்த்துக் கனிக்கோருகன்றினைப்
பற்றியெறிந்த பரமன்றிருமுடி
உற்றனபேசி நீ யோடித்திரியாதே
அற்றைக்கும்வந்து குழல்வாராயக் காக்காய்
ஆழியான்றன் குழல்வாராயக் காக்காய். ரு.

பதவுரை.

கன்று இனம்— கன்றுகளின் திரளை
மேய்த்து— மேய்த்து
ஒரு கன்றினை — அஸுரமயமாய் வந்த ஒரு கன்றை
பற்றி— காலைப்பிடித்துத் தூக்கியெடுத்து
கனிக்கு— அஸுரமயமாய் நின்ற விளாவின் கனி உதிருகைக்காக
எறிந்த— அதன்மேல் வீசியெறிந்த
பரமன்— உபகாரகனானவனுடைய
திரு முடி—அழகிய திருக்குழலை
உற்றன— உன் ஜாதிக்கேற்றவற்றை
பேசி— சொல்லிக்கொண்டு
நீ ஓடி திரியாதே— நீ ஓடிப் போகாமல்
அற்றைக்கும்— நாள்தோறும்
வந்து குழல் வாராய் அக்காக்காய்;
ஆழியான் தன் — திருவாழியைக் கையிலேந்ினவனுடைய
குழல் வாராய் அக்காக்காய்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. கற்றினம்மேய்த்து. கன்றுகளினுடைய திரளைமேய்த்து. பால்யத்தில் கன்றுகள் மேய்த்து, பின்பிறே பசுக்கள்மேய்ப்பது; ஆகையாலே இவனும் கன்றுகள்மேய்க்கத் தொடங்கினனாய்த்து. கனிக்கோருகன்றினைப் பற்றியெறிந்த. இப்படி கன்றுமேய்த்துத் திரியாநிற்கிறவிடத்திலே தன்னை நலிகைக்காகக் கன்றின வடிவைக்கொண்டும் விளாவானவடிவைக்கொண்டும் வந்துநின்ற சிலவஸுரர்களைக்கண்டு, “ விளங்கனிக் கிளங்கன்று விசிறி ” என்கிறபடியே முள்ளாலே முள்ளைக்களையுமாபோலே அஸுரமயமாய்வந்து நின்றதொருகன்றை, காலைப்பிடித்துத்தூக்கியெடுத்து அந்த விளங்கனி யுதிருகைக்காக எறிந்து இரண்டையும் சேர்முடித்துப் பொகட்ட. பரமன்திருமுடி. தன்னை நலியவந்த இவற்றின் கையில் தான்படாதே, அவற்றை நிரஸித்து ஜகத்துக்கு பரமசெஷியான தன்னை நோக்கித்தந்த உபகாரகனுடைய திருமுடியை. உற்றனபேசி நீயோடித்திரியாதே. உன்னுடைய ஜாத்யுசிதமானவற்றைச் சொல்லிக்கொண்டு, ஓரிடத்திலே நிலையின்றிக்கே நீபறந்து திரியாதே. அற்றைக்கும்வந்து குழல்வாராய். நாள்தோறும் வந்து திருக்குழல்வாராய். ஆழியான். திருவாழியையுடையவன். அவிதேயரை நியமிக்கவல்ல பரிகாமுடையவனென்கை. ரு.

மூ.—கிழக்கிற்குடிமன்னர் கேடிலாதாரை
அழிப்பானினைந்திட் டவ்வாழியதனால்
விழிக்குமளவிலே வேரறுத்தானைக்
குழற்கணியாகக் குழல்வாராயக் காக்காய்
கோவிந்தன்றண் குழல்வாராயக் காக்காய். ௬.

பதவுரை.

கேடு இலாதாரை— க்ர்ஷ்ணசாபத்தால் ஒரு குறையுமில்லாத இந்த்ராதிகளை
அழிப்பான்— அழிப்பதாக
நினைந்திட்ட— நினைத்த
கிழக்கில் குடி— ப்ராக்ஜ்யோதிஷ புரவாஸிகளான
மன்னர்— நரகாஸுரன் முதலான வர்களை
விழிக்கும் அளவிலே— ஒரு நிமேஷப் பொழுதிலே [கண்மூடித்திறப்பதற்குள்ளே]
வேர் அறுத்தானை— வேரற்றுப் போம்படி பண்ணின வனுடைய
குழற்கு— திருக்குழலுக்கு
அணி ஆக— அலங்காரமாக
குழல் வாராய் அக்காக்காய்;
கோவிந்தன்— பசு மேய்ப்ப வனுடைய
தன் குழல்— சிறந்த குழலை
வாராய் அக்காக்காய்.

வ்யா. ஆறும்பாட்டு. கிழக்கில் குடிமன்னர். ப்ராக்ஜ்யோதிஷ புரவாஸிகளாய் நரகாஸுரப்ரப்ருதிகளான ராஜாக்களை. கேடிலாதாரை. வரபல புஜபலங்களுண்டாகையாலே நமக்கொருகேடில்லையென்று நினைத்திருந்தவர்களை. அழிப்பான் நினைந்திட்டு. ஆச்ரிதரான இந்த்ராதிகளை நலிகையாலே அழிக்கத் திருவுள்ளம் பற்றி. அவ்வாழியதனால். * கருதுமிடம் பொருதாய், "அறமுயலாழி" என்கிறபடியே தன்னிலுங்காட்டில் ஆச்ரிதவிரோதி நிரஸநத்தில் மிகவும் முயலாநிற்கும் ஏற்றத்தையுடைய திருவாழியாலே. விழிக்குமளவிலே வேரறுத்தானை. இமைத்து விழிக்கும் முன்னே கிழங்கெடுத்துப் பொகட்டவனை. அதவா, கேடிலாதாரை யழிப்பான் நினைந்திட்டு- கிழக்கில் குடிமன்னர்- விழிக்குமளவிலே- ஆழியதனால்- வேரறுத்தானை என்று அந்வயமாக்கி- "நமக்கு ரக்ஷகனாக ஈச்வரன் உண்டு" என்றிருக்கையாலே- தங்களுக்கொரு கேடின்றிக்கே யிருக்குமிந்த்ராதிகளை அடர்த்தழிப்பதாகக் கோலின ப்ராக்ஜ்யோதிஷபுரவாஸிகளான நரகப்ரப்ருதிஅஸுரராஜாக்களானவர்களை யழிக்கப் பார்க்கிற வளவிலே அச்செய்தி இந்த்ரன் வந்து விண்ணப்பஞ்செய்தவநந்தரம், பெரியதிருவடியை மேற்கொண்டு நரகபுரத்திலே யெழுந்தருளி *கருதுமிடம் பொரவல்ல திருவாழியாலே அந்த நரகாதிகளை மறுகிளையுண்டாகாதபடி அறுத்துப்பொகட்டவனை யென்னவுமாம். குழற்கணியாகக் குழல்வாராய். திருக்குழல்களுக்கு அழகு பிறக்கும்படி குழல்வாராய். கோவிந்தன். பராக்ஷணத்திலே தீர்ந்த வ்யாபாரங்களையுடையவன். தண்குழல். ச்லாக்யமானகுழல். ... ... ... ... ... ... ... ௬.

மூ.—பிண்டத்திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறும்
உண்டற்குவேண்டி நீ யோடித்திரியாதே
அண்டத்தமரர் பெருமானழகமர்
வண்டொத்திருண்ட குழல்வாராயக் காக்காய்
மாயவன்றன் குழல்வாராயக் காக்காய். ௭.

பிண்டம் — பித்ராதிகளைக் குறித்திடுகிற பிண்டங்களாகிற
திரளேயும்— திரளேயும்
பேய்க்கு— பிசாசங்களைக் குறித்திட்ட
நீர் சோறும்— நீரோடு சேர்ந்த சோறுகளையும்
உண்டற்கு வேண்டி— உண்கைக்கு ஆசைப்பட்டு
நீ— பலிபுக்கான நீ [ பைஸி ஹ—சு. ]
ஓடி திரியாதே — அதுக்கிடம் தேடித் தட்டித் திரியாமல்

அண்டம்— நித்ய விபூதியிலிரா நின்ற
அமரர்— நித்ய ஸூரிகளுக்கு
பெருமான்— அதிபதியா யிருப்பவனுடைய
அழகு அமர் — அழகு பொருந்தி யிரா நின்றதாய்
வண்டு ஒத்து— வண்டு போலே
இருண்ட— கறுத்திரா நின்ற
குழல் வாராய் அக்காக்காய்;
மாயவன் தன்— ஆச்சர்ய சக்தியுக்தனனவனுடைய
குழல் வாராய் அக்காக்காய்.

வ்யா. ஏழாம்பாட்டு. பிண்டத்திரளேயும். பித்ர்க்கள் முதலானவரை யுத்தேசித்து இடும் பிண்டங்களாகிற திரளேயும். பேய்க்கிட்டநீர்ச்சோறும். பிசாசங்களை யுத்தேசித்து இட்ட ஜலஸஹிதமான சோறுகளையும். உண்டற்குவேண்டி. உண்கைக் காசைப்பட்டு. நீயோடித்திரியாதே. அது கிட்டுமிடந்தேடி நீ தட்டித்திரியாதே. அண்டத்தமரர்பெருமான். நித்யவிபூதியிலே ஸூரிகளுக்கு தாபகாதிகளெல்லாம் தானேயாயிருக்கும் பெரியவனுடைய அழகமர்வண்டொத் திருண்டகுழல்வாராய். அழகுபொருந்தி யிருந்துள்ள வண்டுபோலே சுருண்டிருண்டிருக்கிற குழல்களை வாராய். மாயவனித்யாதி. ஆச்சர்யசக்தி யுக்தனனவனுடைய குழலை வந்துவாராய். ... ... ... ... ... ...எ

மூ.—உந்தியெழுந்த வுருவமலர் தன்னில்
சந்தச்சதுமுகன் றன்னைப் படைத்தவன்
கொந்தக்குழலைக் குறந்துபுளியட்டித்
தந்தத்தின் சீப்பாற் குழல்வாராயக் காக்காய்
தாமோதரன்றன் குழல்வாராயக் காக்காய். அ.

பதவுரை.

உந்தி எழுந்த— திருநாபியி லுண்டான
உருவம்— அழகிய
மலர் தன்னில்— தாமரை மலரிலே
சந்தம்— சந்தஸ்ஸை நிரூபகமாக வுடைய
சது முகன் தன்னை — நான் முகனை ப்ரஹ்மாவை
படைத்தவன்— ஸ்ர்ஷ்டித்த வனுடைய
கொந்தம்— நெறித்திரா நின்ற
குழலை— திருக்குழலை
புளி குறந்து — பு(ழு)னுகு வார்த்து

அட்டி— உறைக்கத்தடவி
தந்தத்தின் சீப்பால்— தந்தத்தால் செய்யப்பட்ட சீப்பாலே
குழல்வாராய் அக்காக்காய்;
தாமோ தரன் தன் — தாமோதரனுடைய
குழல் வாராயக் காக்காய்.

வ்யா. எட்டாம்பாட்டு. உந்திமித்யாதி. திருநாபியிலே கிளர்ந்த அழகிய தாமரைப்பூவிலே. உருவம் - அழகு. சந்தமித்யாதி. ஜகத்ஸ்ரஷ்டியில் வந்தால் தன்னோடொக்க விகல்பிக்கலாம்படி ஜ்ஞாநசக்திகளால்வந்த வைலக்ஷண்யத்தையுடைய சதுர்முகனை ஸ்ரஷ்டித்தவன். சந்தம் - அழகு. அன்றிக்கே, சந்தமென்று (க) சந்தஸ்ஸாய், வேதத்தைத் தனக்கு நிரூபகமாகவுடைய னென்னவுமாம். கோந்தக்குழலைக் குறந்துபுளியட்டி. திருமஞ்சநஞ் செய்கிறபோது புளிகுறந்து அட்டித் திருமஞ்சநஞ்செய்கையாலே நெறித்திருக்கிறகுழலை. கொந்தம் - நெறிப்பு. புளியட்டிக்கொந்தக் குழலென்றது - புளியட்டின கொந்தக்குழலென்றபடி. திருக்குழல் வாருகிறகாலத்தில் இது கூடாமையாலே திருமஞ்சநகாலத்திற் செய்ததென்னுமிடம் நிச்சிதமிறே. * எண்ணெய் புளிப்பழங்கொண்டிறே திருமஞ்சநம்செய்தது. அதவா, கோந்தக்குழலை - நெறித்திருக்கிற திருக்குழலை, குறந்து புளியட்டி. அகங்களில் வளர்ந்ததனால் ஸ்வைரமாகக் குறந்தது. புளியுண்டு - ‡ புழுகு, அத்தை வார்த்தென்னவுமாம். குறந்தது புளியென்கிறவிடத்தில், துகரம் கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது. $* ஒண் சங்கதை வாள்போலே. "புழுகட்டி" என்று பாடமாகில் - புழுகைக்குறந்தட்டி என்று பொருளாகக்கடவது. தந்தத்தின்சீப்பால்குழல்வாராய். திருக்குழலினுடைய ச்லாக்யதாநுகுணமாகத் தந்தத்தால்பண்ணின சீப்பைக்கொண்டு குழல்வாராய். தாமோதரனித்யாதி. அபலையான வெனக்குப் பிடித்துக் கட்டலாம்படி ஸுலபனா யிருக்கிறவனுடைய குழல்வாராய். ... ... ... ... ... .. அ.

மூ.—மன்னன்றன் தேவிமார்கண்டு மகிழ்வெய்த
முன்னிவ்வுலகினை முற்றுமளந்தவன்
பொன்னின்முடியினைப் பூவணைமேல்வைத்துப்
பின்னேயிருந்து குழல்வாராயக் காக்காய்
பேராயிரத்தான் குழல்வாராயக் காக்காய். கூ.

பதவுரை.

மன்னன் தன்— அஸுர ராஜனான மஹாபலியின்
தேவிமார்— மனையாட்டிகளானவர்கள்
கண்டு— இவன் வேஷத்தையும் பாஷணத்தையும் பார்த்து
மகிழ்வு எய்த— களிக்கும்படி
முன்— முன்னே
இவ்வுலகினை முற்றும்— இந்தலோகம் முழுதையும்
அளந்தவன்— அளந்து கொண்டவனுடைய
¶ பொன் முடியினை— அழகிய திருமுடியை
பூ அணைமேல் வைத்து— பூப்போலே மெத்தென்ற படுக்கையின்மேலே வைத்து
பின்னே இருந்து— பின்புறத்திலே நின்று குழல் வாராய் அக்காக்காய்;
ஆயிரம் பேரான்— ஆயிரம் திருநாமத்தையுடையனானவனுடைய
குழல் வாராய் அக்காக்காய்.

¶ "பொன்னின்" என்கிறவிடத்தில் 'இன்' என்னுமது சாரியை.

(க) ச்சந்தஸ்ஸாய். ‡ "புழுகு" என்பதைத்தான் "புனுகு" என்பர்கள்.
$ "ஒண்சங்கதை வாளாழியான்" என்கிறவிடத்தில், சங்கு கதை-சங்கதை, என்று கடைக் குறைத்தலாய்ப் புணர்ந்தாற்போலேயென்கை.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. மன்னனித்யாதி. "புலன்கொள்மாணுய்" என்கிற படியே - ஸர்வேந்த்ரியாபஹார க்ஷமமான வாமநரூபமும், "பொங்கிலங்கு புரிநூலும்" இத்யாதிப்படியே - அவ்வழகுக்குமேலே கிளர்ந்து விளங்காநின்றுள்ள யஜ்ஞோபவீதமும், க்ர்ஷ்ணாஜிநமும், முஞ்சியுமான விநீதவேஷமுமாய்க்கொண்டு மஹாபலியஜ்ஞ வாடத்திலே வல்லாராடினாற்போலே பதறி நடந்துசென்று நின்ற நிலையையும், "கொள்வன்நான்" இத்யாதிப்படியே சொன்ன (க) முக்தஜல்பத்தையும்கண்டு, அஸுரராஜனான மஹாபலியினுடைய ஸ்த்ரீகளானவர்கள் ப்ரீதைகளாம்படி முந்துறநின்று அர்த்தித்து, கையிலே நீர் விழுந்த ஸமநந்தரம், முன்பே தன்னதாயிருக்கிற ஸிந்தலோகத்தையெல்லாம் இப்போது அபூர்வமாகப்பெற்றாற்போலே வளர்ந்து கொண்டவனுடைய. பொன்னின் முடியினை. அழகிய திருமுடியை. பொன் - அழகு. இன் - சாரியை. பூவணைமேல் வைத்து. திருமுடியை மார்த்தவத்துக்கிடாக, பூப்போலே ம்ர்துவான அணைமேலேவைத்து. பின்னேயிருந்து குழல் வாராய். வாருகைக்கு அநுகுணமாகப் பின்னேயிருந்து திருக்குழல்வாராய். பேராயிரத்தான். தன் வைலக்ஷண்யத்தைக்கண்டு ஸ்துதிக்குமவர்களுக்கு இழிந்த விடமெல்லாம் துறையாம்படி (உ) "ஸஹஸ்ர நாமஸஹஸ்ரவாந்" என்கிறபடியே அநேகம் திரு நாமங்களையுடையனானவனுடைய குழல்வாராய். ... ... ... ... ...கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—கண்டார்பழியாமே யக்காக்காய் கார்வண்ணன்
வண்டார்குழல்வார வாவென்றவாய்ச்சிசொல்
விண்டோய்மதிள் வில்லிபுத்தூர்க்கோன் பட்டன்சொல்
கொண்டாடிப் பாடக்குறுகா வினைதானே. ய.

பதவுரை.

அக்காக்காய்— "அக்காக்காய்!
கண்டார் பழியாமே— 'கண்டவர்கள் பழியாத படி
கார் வண்ணன் — நீல மேகவர்ணனானவனுடைய
வண்டு ஆர்— மதுபானார்த்தமாக வண்டுகள் படிந்திருக்கிற
குழல்— திருக்குழலை
வார— வாருவதற்கு
வா என்ற— வா" என்று சொல்லியழைத்த
ஆய்ச்சி— யசோதைப் பிராட்டியின்
சொல்— சொலவை
விண் தோய்— ஆகாசத்தை அளாவிய
மதிள்— மதிளையுடைய
வில்லி புத்தூர்— ஸ்ரீ வில்லிபுத் தூருக்கு
கோன்— நிர்வாஹகரான
பட்டன்— பெரியாழ்வார்
சொல்— அருளிச்செய்த இத்தை
கொண்டாடி — சப்தார்த்தவைலக்ஷண்யத்தைப் புகழ்ந்து கொண்டு
பாட— பாடுமளவில்
வினைதான் — "வினை" என்று பேர் பெற்றவை யெல்லாம்
குறுகா— அவர்களருகில் கிட்டமாட்டாது.

வ்யா. கண்டாரித்யாதி. திருமஞ்சநஞ்செய்து குழல்வாராதிருந்தால் கண்டவர்கள் பழிக்கக்கூடும், அவர்கள் பழியாதபடியாக. அக்காக்காய். கார்வண்ணனித்யாதி. மேகம்

(க) முக்தஜல்பம். (உ) "தேவோநாம ஸஹஸ்ரவாந்"

போலே ச்யாமளமான வடிவை யுடையவனுடைய, இருட்சியாலும் சுருட்சியாலும் வண்டு போலேயிருக்கிற திருக்குழலை வாரும்படியாக வாவென்று சொன்ன யசோதைப்பிராட்டியி னுடைய சொலவை. விண்டோயித்யாதி. ஆகாசத்திலே மிகவுமுயர்ந்த மதிளையுடைய ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வா ரருளிச்செய்த வித்தை. கொண்டாடியித் யாதி. சப்தார்த்த வைலக்ஷண்யத்தைக் கொண்டாடி, ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு பாட, வினை யென்று பேர்பெற்றவை யடங்கலும் தானே யருகுவந்துகிட்டா. ... ... ௰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

———(*)———

அடிவரவு.—பின்னைப் பேய் திண்ணப் பள்ளம் கற்றுக் கிழக்கில் பிண்ட முந்தி மன்னன் கண்டார் வேலி.

ஆ. திருமொழி- ௧௪ - க்கு, பாட்டு - ௧௩௧.

அ. யசோதைப்பிராட்டி அவனைத் திருக்குழல் வாருவதாக உத்யோகித்து, அவன் “ ஒட்டேன் ” என்று அழுதும் இறங்கிப்போடாமைக்காக அவனுடைய பால்யத்துக் கநு குணமாம்படி, அக்காக்காய் குழல் வாரவாவென்று பலகாலும் அவன்செவிகேட்கச்சொல்லி யிருந்து அவனை யுகப்பித்துத் திருக்குழல் வாரினபடியை, தாமநுபவிக்கையில் ஆசையுடை யராய், பாவநாப்ரகர்ஷத்தாலே அவளான நிலையையடைந்து, தத்காலம்போலே அவனைக் குறித்துப் பாசுரங்களைப்பேசி யநுபவித்தாராய்நின்றார் - கீழ்; திருக்குழல் வாரினவநந்தரம் பூச்சூட்டுவதாகத் தேடுகிறவளவிலே, ஜாத்யுசிதமாகக் கன்றுமேய்க்கப்போகிற பிள்ளைக ளோடே தானும் போவானாக வுத்யோகித்து, கன்றுகள்மேய்த்து மறிக்கிற கோலைத்தா வென்ன, அவள் இசைந்து கோலைக்கொடாமல், “இவனை ஒப்பித்தூக்காணவேணும்” என் னும் கருத்தாலே கோலைவாங்கித் தருகிறேனென்று இவனை யழகைமருட்டி “ அக்காக்காய் கோல்கொண்டுவா ” என்று பலகாலும் சொன்ன ப்ரகாரத்தை, தத்பாவயுக்தராய்க்கொண்டு அவளைப்போலே தாமும் அவனைக்குறித்துப்பேசி அந்த ரஸத்தை யநுபவிக்கிறார் - இத்திரு மொழியில். ... ... ... ... ... ... ... *

மூ.—வேலிக்கோல்வெட்டி விளையாடுவில்லேற்றித்
தாலிக்கொழுந்தைத் தடங்கழுத்திற்பூண்டு
பீலித்தழையைப் பிணைத்துப் பிறகிட்டுக்
காலிப்பின் போவாற்கோர் கோல்கொண்டுவா
கடனிறவண்ணற்கோர் கோல்கொண்டுவா ௧.

பதவுரை.

வேலி—வேலிக்கால்களிலே வளர்ந்திருக்கிற
கோல்— கோலை
வெட்டி— வெட்டி.
விளையாடு வில்— விளையாடுவதற்கான வில்லாகப் பண்ணி
ஏற்றி— அதிலே நாணை ஏறிட்டு

தாலி— பனையினுடைய
கொழுந்தை— வெண் குருத்தை
தட கழுத்தில்— பெரிய கழுத்தில்
பூண்டு— ஆபரணமாகப் பூண்டு
பீலி— மயிலினுடைய
தழையை— தோகைகளை
பிணைத்து— சேர்த்து
பிறகு— திருமுதுகிலே
இட்டு— தொங்க விட்டு
காலி பின்— கன்றுகளின் பின்னே
போவாற்கு— மேய்க்கப் போமவனுக்கு

¶ ஓர் கோல் கொண்டுவா;
கடல் நிறம்— கடலோடொத்த நிறத்தை யுடைய
‡வண்ணற்கு— வடிவையுடைய வனுக்கு
¶ ஓர் கோல் கொண்டுவா.

¶ " ஓர் கோல் கொண்டுவா " என்கிற விதவும், அக்காக்காய் விளித்துச் சொல்லும் பாசுரமென்னுமது ஏழாம்பாட்டாலும், கடைப்பாட்டாலும் விளங்கும். இவ்விடத்தில் கோலாவது - கன்றுகள் மேய்த்து மறிக்கிற கோல்; அதைக்கொண்டுவாஎன்றபடி.
‡ ''அண்ணற்கு'' என்று பிரித்தால், ஸ்வாமிக்கென்று பொருள்

வ்யா. முதற்பாட்டு. வேலிக்கோல்வெட்டி. வேலிக்கால்களிலே வளர்ந்து நிற்கும் கோல்களைவெட்டி. அன்றிக்கே, வேலியென்று- வளைவாய், வளைந்தகோலைவெட்டி யென்னவுமாம். விளையாடு வில்லேற்றி. லீலார்த்தமாக வில்லாகப்பண்ணி நாணியேறிட்டு. தாலிக் கொழுந்தைத் தடங்கழுத்திற்பூண்டு. ஜாத்யுசிதமாகையாலே ச்ரேஷ்டமாயிருந்துள்ள ஆமைத் தாலியைத் தடவிதான கழுத்திலேபூண்டு. அன்றிக்கே, தாலியென்றது- தாளியென்றபடியாய், கொழுந்தென்றது- அதின் வெண்குருத்தாய், அது வெள்ளிபோலே யிருக்கையாலே அத்தை ஆபரணமாகத் தெற்றிப் பூண்பர்களிறே யிடையர்; அத்தைச் சொல்லிற்றாகவுமாம். பீலியித்யாதி. பீலிப்பிச்சங்களைச் சேர்த்துத் திருமுதுகிலே நாற்றி. காலியித்யாதி. கன்று காலியின் பின்னே அவற்றை மேய்க்கைக்காகப் போமவனுக்கு ஓர் கோல்கொண்டுவா. கடலித்யாதி. கடலோடொத்த நிறத்தையுடைத்தான வடிவை யுடையவனுக்கு. ... ... க.

மூ.—கொங்குங்குடந்தையுங் கோட்டியூரும் பேரும்
எங்குந்திரிந்து விளையாடு மென்மகன்
சங்கம் பிடிக்குந் தடக்கைக்குத் தக்கநல்
அங்கமுடையதோர் கோல்கொண்டுவா
அரக்குவழித்ததோர் கோல்கொண்டுவா. ௨.

பதவுரை.

கொங்கு— (புஷ்பாதிகளால்) பரிமளத்தை யுடைய
குடந்தையும்— திருக் குடந்தையிலும்
கோட்டி ஊரும்— திருக்கோட்டியூரிலும்
பேரும்— திருப்பேர் நகரிலும்
எங்கும்— மற்றுமுள்ள திருப்பதிகளிலும்
திரிந்து— வ்யாபரித்து
விளையாடும்— விளையாடா நிற்கிற
என் மகன்— என் பிள்ளையுடைய
சங்கம்— ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
பிடிக்கும்— பிடித்துக்கொண்டிராநின்ற
தட— விசாலமான
கைக்கு— திருக்கைக்கு
தக்க— தகுந்திராநின்றதாய்
நல் அங்கம் உடையது— நல்லவடிவையுடைத்தான
ஓர் கோல் கொண்டுவா;
அரக்கு வழித்தது— அரக்குப்பூசப்பட்டிருப்பதான
ஓர் கோல் கொண்டுவா.

வ்யா. இரண்டாம்பாட்டு. கொங்குங்குடந்தையும். பரிமளத்தையுடைத்தான திருக்குடந்தையிலும். கொங்குக்குடந்தை யென்கிறவல்லொற்று மெல்லொற்றாய்க் கிடக்கிறது. ...களிலு மேடைகளிலு முண்டான பரிமளமும், உள்ளுக்கண்வளர்ந்தருளுகிறவனுடைய திருமேனியின் பரிமளமுமாய்க்கொண்டு ஊரடங்கலும் பரிமளமாய்க் கிடக்குமித்தனை. கோட்டியூரும். திருக்கோட்டியூரிலும். பேரும். திருப்பேரிலும். எங்கும். அநுக்தமான திருப்பதிகளிலும். திரிந்துவிளையாடு மென்மகன், வ்யாபரித்து விளையாடாநிற்கு மென்பிள்ளையுடைய. சங்கம்பிடிக்கும் தடக்கைக்குத் தக்க. ஸ்ரீபாஞ்சஜந்யத்தைப் பிடிக்கும் பெரிய திருக்கைக்குத் தகுதியான. நல்லங்கமுடையதோர் கோல்கொண்டுவா. நல்லவடிவையுடைத்தானதொரு கோல்கொண்டுவா. அரக்கிடத்யாதி. நிறமுடைத்தாம்படி அரக்குவழித்ததொரு கோல்கொண்டுவா. ... ... ... ... ... ... உ.

மூ.—கறுத்திட்டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான்
பொறுத்திட்டெதிர்வந்த புள்ளின்வாய்கீண்டான்
நெறித்த குழல்களை நீங்கமுன்னோடிச்
சிறுக்கன்று மேய்ப்பாற்கோர் கோல்கொண்டுவா
தேவபிரானுக்கோர் கோல்கொண்டுவா. ௩.

பதவுரை.

கறுத்து— கோபத்தை யுடையனுய்க் கொண்டு
எதிரிட்டு நின்ற— எதிர்ந்து நின்ற
கஞ்சனை— கம்ஸனை
கொன்றான்— முடித்தவனும்
பொறுத்திட்டு— வருகிற போதை வேகத்தைப் பொறுத்து நின்று
எதிர் வந்த— தன்னை நலிவதாக எதிரேவந்த
புள்ளின்— பகாஸுரனுடைய
வாய் கீண்டான்— வாயைக் கிழித்தவனும்
நெறித்த— நெறித்து முன்னே தொங்காநின்ற
‡ குழல்கள்— திருக்குழல் களானவை
நீங்க— ஓடுகிற வேகத்தாலே இரண்டருகும் நீங்கும் படியாக
முன் ஓடி— கன்றுகளுக்கு முன்னேயோடி
சிறு கன்று— இளங்கன்றுகளை
மேய்ப்பாற்கு— மேய்க்குமவனான வனுக்கு ஓர் கோல் கொண்டுவா;
தேவர் பிரானுக்கு— தேவர்களுக்கு உபகாரகனான வனுக்கு ஓர் கோல் கொண்டுவா.

‡ "குழல்களை" என்கிற விடத்தில் ஐகாரம் சாரியை.

வ்யா. மூன்றாம்பாட்டு. கறுத்தித்யாதி. கறுப்பு- சீற்றம். தன்மேலே க்ரோதத்தையுடையனுய்க்கொண்டு எதிரிட்டுநின்ற கம்ஸனைக்கொன்றவன். பொறுத்தித்யாதி. வருகிற போதை வேகத்தைப் பொறுத்துநின்று, தன்னை நலிவதாக எதிரேவந்த பகாஸுரனுடைய வாயைக்கிழித்தவன். நெறித்தவித்யாதி. நெறித்து முன்னே நாலாநின்ற குழல்களானவை, ஓடுகிற விசையாலே இரண்டருகும் நீங்கும்படியாகக் கன்றுகளுக்கு முன்னேயோடி. சிறுக்கன்றித்யாதி. இளங்கன்றுகளை மேய்க்கிறவனுக்கு ஓர் கோல்கொண்டுவா. தேவபிரானுக்கு. ஆஸுரப்ரக்ருதிகளான கம்ஸாதிகளை யழியச் செய்கையாலே தேவர்களுக்கு உபகாரகனானவனுக்கு. ... ... ... ... ... ... ... ௩.

மூ.—ஒன்றேயுரைப்பா னொருசொல்லே சொல்லுவான்
துன்று முடியான் துரியோதநன் பக்கல்
சென்றங்குப் பாரதங் கையெறிந்தானுக்குக்
கன்றுகள்மேய்ப்பதோர் கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்கோர் கோல்கொண்டுவா ௪.

பதவுரை.

ஒன்றே— அடுத்தாரைக் கைவிடாமை யாகிற ஓரர்த்தத்தையே
உரைப்பான்— சொல்லுமவனும்
ஒரு சொல்லே — எல்லார்க்கும் அபயப்ரதா நம்பண்ணுகையாகிறசொல்லொன்றையே
சொல்லுவான்— சொல்லா நிற்பானும்
துன்று— நவரத்நங்களழுத்தின
முடியான்— கிரீடத்தையுடைய
துரியோதநன் பக்கல் — துர்யோதநனிடத்திலே
சென்று — பாண்டவர்களதூதநாகச் சென்று
பாரதம்— பாரத யுத்தத்துக்கு
அங்கு— அங்கே
கை எறிந்தானுக்கு— கைதட்டிப் போந்தவனான வனுக்கு
கன்றுகள்— கன்றுகளை
மேய்ப்பது— மேய்க்கைக்குத்தக்க
ஓர் கோல் கொண்டுவா;
கடல் நிறவண்ணற்கு ஓர்கோல் கொண்டுவா.

வ்யா. நான்காம்பாட்டு. ஒன்றித்யாதி. "பாண்டவர்களும் நாங்களும்கூடி ஜீவிப்பதில்லை" என்னுமோரர்த்தமே சொல்லுவானும், "கூடிஜீவிப்பதில்லையேயாகிலும், அவர்களுக்கும் ஏதேனும் சில கொடுக்கவேண்டாவோ" என்று மத்யஸ்த்தர் சொன்னால் "அவர்களுக்கு ஒருகோற்குத்து நிலமும் கொடுப்பதில்லை" என்னுமொரு வசநமே சொல்லுவானுமாயிருக்குமவனென்கை. அன்றிக்கே, ஆச்ரிதவிஷயத்தில் (க)"மி த்ரபாவேந ஸம்ப்ராப்தம்" இத்யாதிப்படியே-ஒருபடியாலும்அவர்களைக்கைவிடாமையாகிற ஓரர்த்தமேசொல்லுமவனும் (உ) "அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி" இத்யாதிப்படியே - அவர்களுடைய ரக்ஷணத்துக்குடலான வசநமொன்றுமே சொல்லாநிற்பானுமாயிருக்குமவனென்று பகவத்விசேஷணமாகவுமாம். துன்றுமுடியான். நவரத்நங்களினாலே நெருங்கின அபிஷேகத்தை யுடையவன். அபிஷிக்தக்ஷத்ரியராலே நெருங்கி ஸேவிக்கப் படுமவனென்னுதல். துரியோதநன் பக்கல். ஏவம்பூதனான துர்யோதநன்பக்கலிலே. சென்றங்குப்பாரதம் கையெறிந்தானுக்கு. இரண்டு தலையும் பொருந்தவிடலாமோவென்று தூதனாய்ச்சென்று பொருத்தப்பார்த்தவிடத்தில் பொருந்தாமையாலும் யுத்தத்திலே, பொருந்துகையாலும்; ஆனால், அது தன்னைச் செய்கவென்று பாரதயுத்தத்துக்கு அங்கே கைதட்டிப் போந்தவனுக்கென்னுதல். அன்றிக்கே, ஆனால் அது தன்னைச் செய்வதென்று இசைந்துபோந்து, பாண்டவர்களுக்காய்நின்று பாரத யுத்தத்திலே கையுமணியும் வகுத்தவனுக் கென்னுதல். எறிதல்- இடுதலாகையாலே, வேண்டினபொருள் கொள்ளலாமிறே. கன்றுகள்மேய்ப்பதோர் கோல்கொண்டுவா. பசுமேய்க்கையிலும் அவன் விரும்பியிருப்பது கன்றுகள் மேய்க்கையாய்த்து. அதுக்குத் தகுதியாயிருப்பதொரு கோல்கொண்டுவா. கடலித்யாதி. கடலோடொத்த நிறத்தையுடைத்தான வடிவையுடையவனுக்கு. ... ... ... ... ... ... ௪.

(க) "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்." (உ) "அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி."

மூ.—சீரொன்றுதூதாய் துரியோதநன்பக்கல்
ஊரொன்று வேண்டிப் பெறாத வுரோடத்தால்
பாரொன்றிப் பாரதங் கைசெய்து பார்த்தற்குத்
தேரொன்றை யூர்ந்தாற்கோர் கோல்கொண்டுவா
தேவபிரானுக்கோர் கோல்கொண்டுவா ரு.

பதவுரை.

சீர்— ஆச்ரித பாரதந்த்ர்ய மாகிற குணம்
ஒன்று— சேருகைக்கு உறுப்பான [ ஒன்று கை-கூடுகை ]
தூதாய் — தூதவ்யாபாரத்தில் அதிகரித்தவனாய்
துரியோதநன் பக்கல் — துர்யோதநனண்டைச் சென்று
ஊர் ஒன்று— " பாண்டவர்களுக்கு ஒரூர் தன்னையாகிலும் கொடு " என்று
வேண்டி— தாழ்ச்சி தோற்றக் கேட்டும்
பெறாத— வேண்டினபடி லபியாத
உரோடத்தால்— ரோஷத்தாலே
பார் ஒன்றி— பூமியிலே கால் பாவி நின்று
பாரதம்— பாரதயுத்தத்திலே
பார்த்தற்கு— அர்ஜுநனுக்கு,
கை செய்து— துணையாயிருந்து
ஒன்று தேரை— ஒப்பற்ற தேரை
ஊர்ந்தாற்கு— நடத்தியருளின வனுக்கு,
ஓர் கோல் கொண்டுவா;
தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா.

வ்யா. ஐந்தாம்பாட்டு. சீரொன்றுதூதாய். " இன்னார் தூதனென நின்றான் " என்றபடியே ஆச்ரிதபாரதந்த்ர்யமாகிற குணம் தனக்குச் சேருகைக்குறுப்பான தூதக்ருத்யத்திலே அதிகரித்து. துரியோதநன்பக்க லூரொன்றுவேண்டி. அதார்மிகனாய் பந்துக்களையடர்த்து, பலத்தாலே ஜீவிக்கவிருக்கிற துர்யோதநன்பக்கலிலே சென்று "உங்களுக்குள்ள அம்சங்களை விபஜித்து இரண்டுதலையும் பொருந்தி ஜீவித்திருங்கோள் " என்று முந்துறச் சொன்னவளவில், அவன் " அதுசெய்யேன் " என்றவாறே, " ஆனால் பத்தூர் தன்னைக் கொடுக்கப்பார்ப்பது " என்ன; " அதுவும்செய்யேன் " என்றவாறே " ஒரூர் தன்னையாகிலும் கொடு " என்றவளவில், அவன் அதுக்குமிசையாமல், "அவர்களுக்கு தர்மமுண்டு, (க)தத்பலமான ஸ்வர்க்காதி லோகங்களுமுண்டு, அத்தையநுபவிக்கக்கடவர்கள், எங்களுக்கு இத்தனையுமன்றோ வுள்ளது, அதில் ஒன்றும் கொடுப்பதில்லை " என்று வெட்டிதாக வார்த்தைசொல்ல; பெறாத வுரோடத்தால். ஒரூர்தானும் பெறாத ரோஷத்தாலே. ஆனால் வீரபோக்யையன்றோ வஸுந்தரை, யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்களொருவர் பூமியை யாளுங்கோளென்ன; அவன் அதுக்குப் பொருந்தினவாறே; பாரொன்றி. திருவுள்ள முகந்து, பூமியிலே பரந்தகால்பாவிநின்று. பாரதம் கைசெய்து. பாரத யுத்தத்திலே பாண்டவர்களுக்காக நின்று கையுமணியும் வகுத்து. பார்த்தற்குத்தேரொன்றை யூர்ந்தாற்கு. ஆயுதமெடுக்க வொண்ணாமையாலே ஸாரத்யத்திலே அதிக்ருதனாய், அர்ஜுநனை (க) ரதியாக்கி, ப்ரதிபக்ஷத்தை உருளைக்காலாலே நெருக்குகைக் குறுப்பாகையாலே அத்விதீயமான தேரை நடத்தினவனுக்கு ஓர் கோல்கொண்டுவா. தேவபிரானுக்கு. இந்தநீர்மைக் கெதிர்த்தட்டாம்படி நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான மேன்மையை யுடையவனுக்கு, இத்தால்-மநுஷ்யத்வே பரத்வத்தைச் சொன்னபடி. ... ... ... ... ... ரு.

(க) தத்வ. (உ) ரயியாக்கி.

மூ.—ஆலத்திலையா னரவினணைமேலான்
நீலக்கடலுள் நெடுங்காலங் கண்வளர்ந்தான்
பாலப்பிராயத்தே பார்த்தற்கருள்செய்த
கோலப்பிரானுக்கோர் கோல்கொண்டுவா
குடந்தைக்கிடந்தாற்கோர் கோல்கொண்டுவா. க.

பதவுரை.

‡ ஆல் இலையான்— ஆலிலையில் கண் வளர்ந்தருளுமவனும்
¶ அரவு அணைமேலான்— திருவனந் தாழ்வானாகிற படுக்கையின்மேல் கண்வளர்ந்தருளுமவனும்
நீலம்— (திருமேனியின் நிழலீட்டாலே) கறுத்திராநின்ற
கடலுள்— ஸமுத்ரத்திலே
நெடு காலம்— ப்ரளயம் வருமளவும்
கண் வளர்ந்தான்— திருக்கண் வளர்ந்தருளுமவனும்
பாலப் பிராயத்து— இளம்பருவத்திலே
பார்த்தற்கு— அர்ஜுநனுக்கு
அருள் செய்த— க்ருபை செய்தருளினவனும்
கோலம்— அழகியனும்
பிரானுக்கு— லோகோபகாரகனானவனுக்கு,
ஓர் கோல் கொண்டுவா;
குடந்தை— திருக்குடந்தையிலே
கிடந்தாற்கு— கண்வளர்ந்தருளுமவனுக்கு,
ஓர் கோல் கொண்டுவா.

‡ "ஆலத்திலையான்" என்கிற விடத்தில் 'அத்து' என்னுமதும்;
¶ "அரவினணைமேலான்" என்கிற விடத்தில் 'இன்' என்னுமதும் சாரியை.

வ்யா. ஆறும்பாட்டு. ஆலத்திலையான். ஜகத் ப்ரளயம்வந்தபோது வடதளத்திலே கண்வளர்ந்தருளினவன். அத்து- சாரியை. அரவினணைமேலான். திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிறவன். (க) "ஸஹஸ்ரவதநோ தேவ: பணாமணி விராஜித: | ஸைவ வடவ்ர்க்ஷோபூ தநந்தோ த்புதோ ரூபவான் ||" என்கிறபடியே - வடவ்ருக்ஷமானதும் திருவநந்தாழ்வானிறே. ஆலத்திலையா னரவினணைமேலா னென்கையாலே - அந்த அர்த்தமுந் தோற்றுகிறது. நீலக்கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான். க்ஷீரமாகையாலே வெளுத்தநிறமா யிருக்கச்செய்தேயும், திருமேனியின் நிழலீட்டாலே நீலமான நிறத்தையுடைத்தாயிருக்கிற கடலிலே, ப்ரளயாவதியாகக் கண்வளர்ந்தருளினவன். "கருந்தண்மாகடல் கண்துயின்றவன்", "உவர்க்குங்கருங்கடல் நீருள்ளான்" என்கையாலே நீலக்கடலென்று - இந்த லவணஸமுத்ரந்தன்னைச் சொல்லிற்றாகவுமாம். அரவினணைமேலானைக்கொண்டு நீலக்கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தானென்று மேலே அந்வயிக்கவுமாம். பாலப்பிராயத்தே பார்த்தற்கருள்செய்த. இந்த்ரன்வந்து "என்னுடைய புத்ரனான இவனை ரக்ஷித்தருளவேணும்" என்று காட்டிக்கொடுக்கையாலே, பால்யவயஸ்ஸிலே அர்ஜுநனுக்கு அருள்செய்தபின்பு, இவன், தன்னளவிலே ஸ்நேஹித்து வசவர்த்தியாய்ப் போருகையாலும், எல்லாரளவிலும்போலன்றியே இவனளவில் தான் பக்ஷபதித்துப் போருகையாலும் அவ்வருள் மேன்மேலன வளர்ந்துசென்ற வித்தனையிறே. கோலப்பிரானுக்கு. அழகிய

(க) "ஸஹஸ்ரவதநோ தேவ: பணாமணி விராஜித: | ஸைவ வடவ்ர்க்ஷோபூ தநந்தோ த்புதோ ரூபவான் ||"

[illegible] உபகாரகனுக்கென்னுதல்; அதீந்த்ரியமான விக்ரஹத்தை இவனுக்கு சக்ஷுர்விஷயமாக்கி, முன்னின்று ரக்ஷித்த வுபகாரத்தைச் சொல்லுகிறதாதல். குடந்தைக் கிடந்தாற்கு. "குடந்தைக் கிடந்த கோவலன்" என்கிறபடியே க்ர்ஷ்ணாவதார ஸௌலப்யமெல்லாம் தோற்றும்படியிறே திருக்குடந்தையில் கண்வளர்ந்தருளுவது. அங்கும் கோலப்பிரானைப்போலே, இங்கும் ஆராக்கோலம்திகழவிறே சாய்ந்தருளுவது. ... ... ... சா.

மூ.—போற்றிகழ் சித்திரகூடப் பொருப்பினில்
உற்றவடிவி லொருகண்ணுங் கொண்டவக்
கற்றைக்குழலன் கடியன் விரைந்துன்னை
மற்றைக்கண் கொள்ளாமே கோல்கொண்டுவா
மணிவண்ணனம்பிக்கோர் கோல்கொண்டுவா. எ.

பதவுரை.

போன்— சோலைகள், சுனைகள் முதலிய வற்றாலுண்டான பொலிவையுடைத்தாய்
திகழ்— விளங்கா நின்ற
சித்திர கூடம்— "சித்ரகூடம்" என்கிற
பொருப்பினில்— மலையின் சாரலிலே
வடிவில்— பிராட்டியின் வடிவில்
உற்ற— விபரீத புத்தியாலே சென்று உற்ற இரண்டு கண்களில்
ஒரு கண்— ஒரு கண்ணை
கொண்ட— பறித்து விட்ட
அ— அப்படிப்பட்ட தன்மையை உடையனாய்
கற்றை— செறித்திருந்துள்ள
குழலன்— மயிர்முடியை யுடையனாய்
கடியன்— குற்றத்துக் கீடாக சிக்ஷிக்கும் கொடுந் தன்மையை யுடையனான இவன்
உன்னை— (கோல் கொண்டுவாராத) உன்னை (ச் சீறி)
மற்றை கண்— மிகுந்திருக்கும் மற்றொரு கண்ணையும்
கொள்ளாமே— பறியாதபடி
விரைந்து— விரைவாய்
கோல்கொண்டுவா;
மணி வண்ணன்— நீலமணிபோன்ற வடிவை யுடையனாய்
நம்பிக்கு— பூர்ணனானவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா.

வ்யா ஏழாம்பாட்டு. போற்றிகழித்யாதி. (க) "ஸாநுமாந் சித்ரகூடோயம் கிரிராஜோபமோ கிரி: । யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த: குபேர இவ நந்தநே" என்கிறபடியே திருவயோத்யையை விருப்பிலுங்காட்டில் உகந்தெழுந்தருளி யிருக்கும்படி சோலைகளும் சுனைகளும் பாறைகளும் அருவிகளும் முதலானவற்றால் வந்த பொலிவையுடைத்தாய் விளங்கா நின்றுள்ள சித்ரகூடபர்வத பார்ச்வத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தேயிறே காகம் வந்து அபராதம் பண்ணிற்று. பிராட்டியும் தாமுங்கூட ஜலக்ரீடை பண்ணின பின்பு, பெருமாள் மடியிலே மூன்றுறப் பிராட்டி கண்வளர்ந்து, அநந்தரம் (உ) "பர்யாயேண ப்ரஸுப்த:" என்கிறபடியே பிராட்டி மடியிலே பெருமாள் கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே, இந்த்ரபுத்ரனான ஜயந்தன், ஆஸுரப்ரக்ருதியாகையாலே தேவரூபத்தை மறைத்து காகரூபத்தைப்பரிக்ரஹித்துக்கொண்டு "ஜநகி" என்றறியாதே, பிராட்டியுடைய வடிவழகைக்கண்டு, விப

(க) "ஸாநுமாந்சித்ரகூடோயம் கிரிராஜோபமோகிரி: । யஸ்மிந்வஸதி காகுத்ஸ்த: குபேர இவநந்தநே ॥" (உ) "பர்யாயேண ப்ரஸுப்த:"

ரீத புத்தியாலே வந்து திருமேனியிலே புண்படுத்த, அத்தாலே பெருமாள் சீறியருளி, காகத்தைக்குறித்து ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்க; அது, புக்கவிடமெங்கும் தொடருகையாலே ஓரிடத்திலும் போக்கற்று, (க) "தமேவ ஶரணம் கத:" என்கிறபடியே தன்னுடைய ப்ராணரக்ஷணார்த்தமாக வந்து சரணம்புக, அத்தாலே, ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு ஒரு கண்ணழிவைக் கற்பித்து, ப்ராணனோடே போகவிட்ட கதையைச் சொல்லுகிறது- உற்றவடிவிலொருகண்ணுங் கொண்ட என்று. அதாவது - விபரீதபுத்தியடியாகப் பிராட்டியுடைய வடிவிலே சென்றுற்ற இரண்டு கண்ணில் ஒரு கண்ணைப் பறித்துவிட்டவ னென்கை. அக்கற்றைக் குழலன் கடியன். அப்படிப்பட்ட ஸ்வபாவனாய், செறிந்த திருக்குழலை யுடையனாயிருக்கிறவன், குற்றத்துக்கீடாக தண்டிக்கும் க்ரூரன். விரைந்தித்யாதி. ஆனபின்பு சொன்னது செய்யாமையாலே உன்னைச் சீறி, மற்றைக் கண்ணையும் பறியாதபடியாக விரைந்து கோல்கொண்டுவா. மணிவண்ணனம்பிக்கு. நீலரத்நம்போன்ற வடிவையுடையனாய், ஸ்வாதந்த்ர்யத்தால் பூர்ணனானவனுக்கு ஓர் கோல்கொண்டுவா. ... ... ... எ.

மூ.—மின்னிடைச்சீதை பொருட்டாவிலங்கையர்
மன்னன்மணி முடிபத்து முடன்வீழத்
தன்னிகரொன்றில்லாச் சிலைகால்வளைத்திட்ட
மின்னுமுடியற்கோர் கோல்கொண்டுவா
வேலையடைத்தாற்கோர் கோல்கொண்டுவா. அ.

பதவுரை.

மின்— மின்னலையொத்த
இடை— இடையை யுடையளான
சீதைபொருட்டா— ஸீதையின் நிமித்தமாக
இலங்கையர்— லங்காவாஸிகளான ராக்ஷஸர்களுக்கு
மன்னன் — தலைவனான ராவணனுடைய
மணி— ரத்ந கிரீடங்களால் விளங்கா நின்ற
முடி பத்தும்— பத்துத்தலைகளும்
உடன்— ஏககாலத்திலே
வீழ— அற்று விழும்படியாக
தன்— தனக்கு [வில்லுக்கு]
நிகர் ஒன்று இல்லா— ஒப்பானதொன்றில்லாத [ஒப்பற்ற]
சிலை— தநுஸ்ஸை
கால் வளைத்து— கால்வளையப்பண்ணி
இட்ட— எய்தவனாய்
மின்னு—விளங்கா நின்றுள்ள
முடியற்கு— திரு அபிஷேகத்தை யுடையவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா;
வேலை— கடலை
அடைத்தாற்கு- மலையாலணைகட்டினவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா.

வ்யா. எட்டாம்பாட்டு. மின்னித்யாதி. மின்னோடொத்த இடையையுடையளாகையாலே - விரஹஸஹையல்லாத ம்ருதுப்ரக்ருதியாய், அயோநிஜை யாகையாலே- கர்ப்பவாஸக்லேசமுமுட்பட வறியாத பிராட்டிக்காக. இலங்கையர் மன்னன். இப்படி யிருக்கிறவளைப் பிரித்துக்கொண்டுபோய்ச் சிறைவைத்தவனாய், லங்கையிலுள்ளார்க் கெல்லாம் நிர்வாஹகனாயிருக்கிற ராவணனுடைய. மணிமுடிபத்து முடன்வீழ. ரத்நாதிகளாலே அலங்க்ருதமான தலைகளை ஒவ்வொன்றாக அறுத்தவிடத்தில், அவன்கொண்ட வரபலத்தாலே மீளவும் மீளவும் கிளருகையாலே, பத்தும் சேரவொருகாலேயற்று விழும்படியாக. தன்னிகரித்யாதி. தன

(க) "தமேவசரணம் கத:"

க்கு உபமானமான தொன்றில்லாதபடியிருக்கும் திருவில்லை, கால்வளையும்படி பண்ணின. வளைத்து இட்ட- வளைத்து எய்த வென்றபடி. மின்னுமுடியற்கு. இப்படி ராவணவதம் பண்ணுகையாலே - விளங்காநின்றுள்ள வீராபிஷேகத்தையுடையனாய் நின்றவனுக்கு. வேலையடைத்தாற்கு. "சுரிகுழல் கனிவாய்" இத்யாதிப்படியே வேலையடைத்ததும் பிராட்டிக்காகவிறே. ... ... ... ... ... ... ... அ.

மூ.—தென்னிலங்கைமன்னன் சிரந்தோடுணிசெய்து
மின்னிலங்குபூண் விபீடணனம்பிக்கு
என்னிலங்கு நாமத்தளவு மரசென்ற
மின்னிலங்காரற்கோர் கோல்கொண்டுவா
வேங்கடவாணற்கோர் கோல்கொண்டுவா. கூ.

பதவுரை.

தென்— தென் திசையிலுள்ள
இலங்கை— லங்காபுரிக்கு
மன்னன்— அரசனான ராவணனுடைய
சிரம்— தலைகளையும்
தோள்— தோள்களையும்
துணி செய்து— அறுத்துப் பொகட்டு
மின் இலங்கு— மிகவும் விளங்கா நின்ற
பூண்— ஆபரணம் பூண்டவனாய்
நம்பி— ராமபக்தியால் பூர்ணனான
விபீடணனுக்கு— விபீஷணாழ்வானுக்கு
இலங்கு— "விளங்கா நின்றுள்ள
என் நாமத்தளவும்— என் பெயர் இவ்வுலகில் செல்லு மளவும்
அரசு— உனக்கு அரசு செல்லக்கடவது"
என்ற— என்றருளிச் செய்தவனாய்
மின் இலங்கு— மின்னல் போல் விளங்கா நின்ற
ஆரற்கு— ஹாரத்தை யுடைய வனுக்கு
ஓர் கோல் கொண்டுவா;
வேங்கடம்— திருவேங்கடமலையில்
வாணற்கு— வர்த்திக்கு மவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. தென்னித்யாதி. (க) தூர்க்கத்ரயயுக்தமாகையாலே ஒருவரால் அழிக்கவொண்ணாதபடி யிருக்கும், கட்டளைப்பட்ட லங்கைக்கு நிர்வாஹகனான ராவணனுடைய. தேன் என்று - அழகாய், கட்டளைப்பட்டிருக்கையைச் சொல்லுகிறது. சிரந்தோள் துணிசெய்து. தேவர்கள் கொடுத்த வரபலத்தாலே அழிவில்லையாக நினைத்திருந்த தலைகளையும் தோள்களையும் துணித்துப்பொகட்டு. மின்னித்யாதி. ஒளிவிடாநின்றுள்ள ஆபரணத்தையுடைய ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு. (உ) 'கஜ்ஜ்ஸ்வ மஹாப்ராஜ்ஞ' என்கிறபடியே லங்கையைவிட்டு அந்தரிக்ஷகதனானபோதே ராவணஸம்பந்தத்தால் வந்த அஸ்ரீ குடிபோய், ராமஸம்பந்தத்தால்வந்த ஸ்ரீயால் பூர்ணனாகையாலே நம்பியென்கிறது. என்னிலங்கித்யாதி. என்னுடைய உஜ்ஜ்வலமான நாமம் இந்த லோகத்தில் எவ்வளவும் செல்லும், அவ்வளவும் உனக்கு ராஜ்யம் நடக்கக்கடவதென்று அருளிச்செய்த. மின்னலங்காரற்கு. ஒளிவிடாநின்ற வொப்பனையை யுடையவனுக்கு. அலங்காரம் - ஒப்பனை. அன்றிக்கே, "மின்னிலங்காரற்கு" என்று பாடமானபோது - மின்போலே விளங்காநின்றுள்ள ஹாரத்தையுடையவனுக்கென்று பொருளாகக்கடவது. வேங்கடவாணற்கு. "மிடைந்தவேழ் மரங்க

(க) த்ரிதுர்க்கயுக்தா. (உ) "அந்தரிக்ஷகதச்ஶ்ரீமாந்."

ஞ மடங்கவெய்து வேங்கடமடைந்தமால்" என்கிறபடியே - அவ்வவதார குணமெல்லாம் இங்கே ப்ரகாசிக்கும்படி திருமலைக்கு நிர்வாஹகனை யிருக்கிறவனுக்கு. ... ... ௯.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அக்காக்காய்நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று
மிக்காளுரைத்தசொல் வில்லிபுத்தூர்ப்பட்டன்
ஒக்கவுரைத்த தமிழ்பத்தும் வல்லவர்
மக்களைப்பெற்று மகிழ்வரிவ் வையத்தே. ௰.

பதவுரை.

நம்பிக்கு—"நம்பில் கைவளர்ந்த விவனுக்கு

கோல் கொண்டுவா என்று— கன்றுமேய்க்கத்தக்க கோல் தேடித்தா" என்று

மிக்காள்— கண்ணனுடைய சைசவ சேஷ்டிதங்களை அநுபவிக்கப் பெறாத தேவகிப்பிராட்டியிற் காட்டில், ததநுபவத்தாலுண்டான மேன்மையை யுடையளான யசோதைப்பிராட்டி

உரைத்த— சொன்ன

சொல்— சொல்லை

வில்லி புத்தூர் — ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான

பட்டன்— பெரியாழ்வார்

ஒக்க— அவள்சொன்னாற் போலே

உரைத்த— அருளிச்செய்த

தமிழ்— த்ராவிடமான

பத்தும்— (இப்) பத்துப் பாட்டையும்

வல்லவர்— கற்கவல்லவர்கள்

மக்களை— பகவதபிமுகர்களானசிஷ்ய புத்ரர்களை

பெற்று— பெற்று

இவ்வையத்து— இந்த மண்ணுலகில்

மகிழ்வர்— களித்திருக்கப் பெறுவர்கள்.

வ்யா. அக்காக்காய் நம்பிக்குக் கோல் கொண்டுவாவென்று. கன்றுகள் மேய்க்கப் போம்படி கோல்தேடித்தாவென்று, அழுகிறவனை அழுகைமருட்டுகைக்காகச் சொன்ன பாசுரமாய்த்திறு. கீழ், "அக்காக்காய் குழல்வார வா" என்றதோபாதியிறே -இங்கு, அக்காக்காய் கோல்கொண்டுவா வென்றதும். மிக்காளுரைத்தசொல். இருவருமொக்க நோன்பு நோற்கச்செய்தே, இவனைப் பெற்றமாத்ரமேயாய், இவனுடைய பாலசேஷ்டிதங்க ளொன்றுமநுபவிக்கப் பெறாமையாலே "திருவிலேனொன்றும் பெற்றிலேன்" என்ற தேவகிப்பிராட்டியைப் போலன்றியே, "எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாள்" என்னும்படி இவ்வவதாரத்திலுள்ள ரஸமெல்லா மநுபவிக்கப்பெற்ற பாக்யாதிகையான யசோதைப் பிராட்டி சொன்னசொல்லை. வில்லிபுத்தூர்ப் பட்ட னொக்கவுரைத்த தமிழ் பத்தும் வல்லவர். ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் அவளுடைய பாவபந்தத்தை யுடையராய், அவள் சொன்னாற்போலே சொன்னதாய், ஸர்வாதிகாரமான த்ராவிடமாயிருந்துள்ள பத்துப் பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். மக்களித்யாதி. பகவ(ஜ்)த் ஜ்ஞானப்ரேம பரிபூர்ணரான சிஷ்யபுத்ரர்களைப் பெற்று, அவர்களும் தாங்களுமாய்க்கொண்டு, இந்த ஸம்ஸாரபூமியிலே ஆநந்திகளா யிருக்கப் பெறுவர். ... ... ... ... ௰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

———(*)———

அடிவரவு.—வேலி கோங்கு கறுத் தொன்றே சீ ராலப் பொற்றிகழ் மின்னிடைத் தென்னிலங்கை அக்காக்கா யாநிரை

ஆ. திருமொழி- கரு - க்கு, பாட்டு - ௲௧௪.

## இரண்டாம் பத்து, ஏழாம் திருமொழி ப்ரவேசம்.

அ. தாயாரான யசோதைப்பிராட்டி, தனக்குக் குழல்வாரின வநந்தரம், பூச்சூட்டுவதாக விருக்கிறவளவிலே, அவன் கன்றுகள் மேய்க்கப்போவதாக நினைத்து, "அவை மறித்து மேய்க்கைக்கீடான கோல் தரவேணும்" என்றபேக்ஷிக்க, அது, தனக்கு அநிஷ்டமான து கொண்டு, அவன் கொடாதொழிகையாலே, அவன் அழப்புக்கவாறே, அவனை அழுகைமருட்டுவைக்காக "அக்காக்காய் கோல்கொண்டுவா" என்று பலகாலும் சொல்லி அவனழுகையை மறந்து உகப்பித்த பின்பு, அவனுக்குப் பூச்சூட்டுவதாகக் கோலி, செண்பகம் மல்லிகை செங்கழுநீர் இருவாட்சி தொடக்கமாய், நிறத்தாலும் மணத்தாலும் ஒன்றுபோலொன்றன்றிக்கே விலக்ஷணமாயிருக்கும் புஷ்பங்களை யுண்டாக்கி, அவற்றைத் தனித்தனியே சொல்லி, உனக்கு இன்ன இன்ன பூச்சூட்டும்படி வாவென்று அநுவர்த்தித்தழைத்துப் பூச்சூட்டின ப்ரகாரத்தைத் தாமுமநுபவிக்க வாசைப்பட்டு, தத்பாவயுக்தராய்க்கொண்டு, அவனைக்குறித்து அவள் பேசினாற்போலே பேசி அந்த ரஸத்தை யநுபவிக்கிறார்- இத்திருமொழியில். ... *

மூ.—ஆநிரைமேய்க்க நீ போதி யருமருந் தாவதறியாய்
கானகமெல்லாந்திரிந்துன் கரியதிருமேனிவாடப்
பானையிற்பாலைப்பருகிப் பற்றாதாரெல்லாஞ் சிரிப்பத்
தேனிலினியபிரானே! செண்பகப்பூச் சூட்டவாராய். க.

### பதவுரை.

தேனில்— தேனிலுங் காட்டில்
இனிய— இனியனான
பிரானே!— நாயனே!
பற்றாதார் எல்லாம் — உன்னை உகவாதாரெல்லாரும்
சிரிப்ப— பரிஹஸிக்கும்படி
பானையில்— கறந்தபானை யோடே யிருக்கிற
பாலை— (பச்சைப்) பாலை
பருகி— குடித்து
உன்— உன்னுடைய
கரிய— கறுத்த
திருமேனி— திருமேனியானது
வாட — (காட்டழல் பொறுமையாலே) வாடும்படியாக
கானகம் எல்லாம்— காடெங்கும்
திரிந்து— ஸஞ்சரித்து
ஆ நிரை— பசுக்களின் திரளை
மேய்க்க— மேய்ப்பதற்கு
நீ— ம்ருதுஸ்வபாவனான நீ
போதி— போகாநின்றாய்;
அரு— பெறுதற்கரிய
மருந்து ஆவது— மருந்தாயிருக்குமத்தை
அறியாய்— அறிகிறிலை;
[இந்த மேனி ஸம்ஸாரிகளுக்கு * நோய்களறுக்கும் மருந்தாய் நித்யஸூரிகளுக்கு *போக மகிழ்ச்சிக்கு மருந்தாயிருக்க; இத்தைக் கொண்டு காட்டில் வாட்டு கிறாயே என்று அறிகிறாயில்லை என்று கருத்து.]
(ஆதலால் பசுமேய்க்கப் போகை தவிர்ந்து)
செண்பகம் பூ— செண்பகப்பூவை
சூட்ட— நான் சூட்டும்படி
வாராய்— வந்தருள வேணும்.

வ்ய. முதற்பாட்டு. ஆநிரைமேய்க்கநீபோதி. உன்வாசியறியாதே, தனக்கு மேய்ச்சலுள்ளவிடத்தே தேடி ஓடாநிற்கும் பசுநிரையை மேய்க்கைக்காக ஸுகுமாரனை நீ போகாநின்றாய். அருமருந்தாவதறியாய். நீ உன்னைப் பெறுதற்கு அரியமருந்தாவதறிகிறிலை, இங்குள்ளார்க்கு * நோய்களறுக்கும்மருந்தாய், அங்குள்ளார்க்கு * போகமகிழ்ச்சிக்கு மருந்தாயிறே

இவன்றனிருப்பது. கானகமெல்லாந்திரிந்து. காட்டிடமெங்கும் திரிந்து. பசுக்கள் பச்சை கண்டவிடமெங்கும் பரந்து மேய்கையாலே, உனக்கும் அவைபோன விடமெங்கும் திரிய வேணுமிறே. உன்கரியதிருமேனிவாட. * கண்டவர்கள் கண்குளிரும்படியிருக்கும், உன்னுடைய ச்யாமளமான திருமேனியானது, காட்டமுல் பொறுமையாலே வெக்கைதட்டின பூப்போலே வாடும்படியாக.

பானையிற்பாலைப்பருகி. கறந்தபானையோடே யிருக்கிற பச்சைப்பாலை, அந்த பாத்ரத்திலே யிருக்கச்செய்தே பருகி. பற்றுதாரெல்லாம் சிரிப்ப. உன்னையுகவாதா ரெல்லாரும் "எங்கள் வீட்டில் கைப்பானையில் பாலைக் குடித்துப் போந்தான்" என்று சிரிக்கும்படியாக. தேனிலினியபிரானே. தேனிலுங் காட்டிலினியனுன உபகாரகனானவனே. இத்தால் - அநுபவிப்பார்க்கு ஒருகாலும் த்ர்ப்தி பிறவாதே, மேன்மேலன அநுபவிக்க வேண்டும்படி யிருப்பானு யிருக்கிற தன்னை யுபகரிப்பானும் தானேயா யிருக்குமவ னென்கை. செண்பகப் பூச் சூட்டவாராய். காலபுஷ்பமான செண்பகமானது செவ்விகுன்றாமல் சாத்தவாராய். தேனிலினிய பிரானே - பற்றுதா ரெல்லாம் சிரிப்ப - பானையிற் பாலைப்பருகி- உன்கரிய திருமேனி வாட- கானகமெல்லாந்திரிந்து- ஆநிரைமேய்க்க நீ போதி - அருமருந்தாவ தறியாய்- செண்பகப்பூச் சூட்டவாராய் என்றந்வயம். ... ... ... ... க.

மூ.—கருவுடைமேகங்கள் கண்டாலுன்னைக் கண்டாலொக்குங் கண்கள்
உருவுடையாயுலகேழு முண்டாகவந்து பிறந்தாய்
திருவுடையாண்மணவாளா! திருவரங்கத்தே கிடந்தாய்
மருவிமணங் கமழ்கின்ற மல்லிகைப்பூச் சூட்டவாராய். உ.

பதவுரை.

கரு உடை— ஜலகர்ப்பமான [நீர்கொண்டெழுந்த
மேகங்கள்— மேகங்களை
கண்டால்— பார்த்தால்
உன்னை— உன்னை
கண்டால்ஒக்கும்— கண்டாற்போலேயிருக்கிற
கண்கள்— கண்களினுடைய
உருவு உடையாய்!— அழகையுடையவனே!
உலகு ஏழும்— ஸப்த லோகங்களும்
உண்டாக— ஸத்தை பெறும்படி
வந்து— திருவாய்ப் பாடியிலே வந்து
பிறந்தாய்!— திருவவதரித்தவனே!
திரு உடையாள்— உன்னை, தனக்கு ஸம்பத்தாக உடையளான பிராட்டிக்கு
மணம் ஆளா!— வல்லபனானவனே!
திரு அரங்கத்து — திருவரங்கம் பெரிய கோயிலில்
கிடந்தாய்! — கண்வளர்ந் தருளுமவனே!
மணம்— பரிமளமானது
மருவி— பொருந்தி நின்று
கமழ்கின்ற— வீசாநிற்கிற
மல்லிகை பூ— மல்லிகைப் பூவை சூட்ட வாராய்.

வ்யா. இரண்டாம்பாட்டு, கருவித்யாதி. கண்கள்- உன்னைக் கண்டால்- கருவுடை மேகங்கள் கண்டாலொக்கும்- உரு உடையாய். கண்களானவை உன்னைப்பார்த்தால், நீர்கொண்டெழுந்த காளமேகங்களைக்கண்டாற்போலே குளிரும்படியான வடிவையுடையவனே. அன்றிக்கே, நீர்கொண்டெழுந்த காளமேகங்களைக்கண்டால் உன்னைக்கண்டாற்போலே யிருக்கும்.

கண்களுருவுடையாய். அழகு ஒருதட்டும் தானொருதட்டுமாம்படியான கண்களினழகை யுடையவனே யென்னவுமாம். உலகேழுமுண்டாகவந்து பிறந்தாய். ஸகலலோகங்களும் உன்னுடைய அவதாரத்தாலே ஸத்தாலத்தாகமாய் உஜ்ஜீவிக்கும்படி வந்து பிறந்தவனே. திருவுடையாள் மணவாளா. "க ஸ்ரீ ஸ்ரீயஃ" "ஸ்ரீயஸ்ஸ்ரீஃ" "திருவுக்கும் திருவாகிய" என்கிறபடியே - உன்னை, தனக்கு ஸம்பத்தாக வுடையளாயிருக்கும் பெரிய பிராட்டியாருக்கு வல்லபனானவனே. திருவரங்கத்தே கிடந்தாய். அவளுகப்புக்காக ஸம்ஸாரி சேதநரை ரக்ஷித்தருளும்படி கோயிலிலே கண்வளர்ந் தருளினவனே. மருவியித்யாதி. பரிமளமானது நீங்காமல் நின்று கமழாநிற்கிற மல்லிகைப்பூச் சூட்டவாராய். ... ... உ.

மூ.—மச்சொடேமாளிகையேறி மாதர்கடம்மிடம்புக்குக்
கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி
நிச்சலுந்தீமைகள்செய்வாய்! நீடிருவேங்கடத்தெந்தாய்!
பச்சைத்தமநகத்தோடு பாதிரிப்பூச் சூட்டவாராய். ௩.

பதவுரை.

மச்சொடு— நடு நிலங்களோடே கூட
மாளிகை— மேல் நிலங்களிலும்
ஏறி— சென்று ஏறி
[நடு நிலங்கள் மேலும், மேல்நிலங்கள்மேலுமேறி என்றபடி.]
மாதர்கள் தம் இடம்— பெண்டுகளிருக்கிற விடங்களிலே
புக்கு— புகுந்து
கச்சொடு— அவர்கள் முலைக்கச்சோடே கூட
பட்டை— அதற்கு மேலீடான பட்டுக்களையும்
கிழித்து — கிழித்து
[கச்சையும் பட்டுக்களையும் கிழித்து என்றபடி.]
காம்பு துகில் அவை — நல்ல கரையையுடைய புடவைகளையும்
கீறி— கிழித்து
நிச்சலும்— நாள் தோறும்
தீமைகள் செய்வாய்! — தீம்புகள் செய்யுமவனே!
நீள்— உயர்த்தியையுடைய
திரு வேங்கடத்து— திருவேங்கட மலையிலெழுந்தருளி யிருக்கிற
எந்தாய்!— என் ஸ்வாமியானவனே!
பச்சை— பசுமை குன்றுத
தமநகத்தோடு— தவநத்தோடு
பாதிரி பூ— பாதிரிப் பூவை
சூட்ட வாராய்.

வ்யா. மூன்றும்பாட்டு. மச்சித்யாதி. மச்சு- நடுநிலம். மாளிகை- மேல்நிலம். மச்சோடேகூட மாளிகையிலே சென்றேறி. மாதர்கள்தம்மிடம்புக்கு. பெண்களிருக்கிற விடங்களிலே புக்கு. கச்சொடுபட்டைக் கிழித்து. அவர்கள் முலைக்கச்சோடே அதற்கு மேலீடானபட்டுக்களையும் கிழித்து. காம்புதுகிலவைகீறி. பணிப்புடவைகளானவற்றையும் கிழித்து. காம்புதுகில்- விளிம்பில் பணியுடன் சேர்ந்தபுடவை. நிச்சலும் தீமைகள் செய்வாய். நாடோறும் தீம்புகளைச் செய்யுமவனே. வளர வளர தீம்பு கையேறிச் செல்லாநின்றதிறே. நீள் திருவேங்கடத்தெந்தாய். ஒக்கத்தையுடைத்தான வடக்குத்திருமலையிலே நிற்கிற என் ஸ்வாமியானவனே. * கானமும் வானரமும் வேடுமானவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறது ஸ்வாமித்வ

ப்ராப்தியாலேயிறே. பச்சையித்யாதி. பசுமைகுன்றாத தமநகத்தோடே, அதுக்கு பரபாகமான நிறத்தையுடைய பாதிரிப்பூவையும் சூட்டும்படி வரவேணும். ... ... ௩.

மூ.—தெருவின்க ணின்றிளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே
மருவுந்தமநகமுஞ் சீர்மாலைமணங் கமழ்கின்ற
புருவங்கருங்குழனெற்றிப் பொலிந்த முகிற்கன்றுபோலே
உருவமழகியநம்பீ யுகந்திவை சூட்டநீவாராய். ௪.

பதவுரை.

புருவம்— புருவங்களும்
கரு— கறுத்திரா நின்ற
குழல்— திருக்குழலும்
நெற்றி— (இரண்டுக்கும் நடுவே விளங்கா நிற்கிற) நெற்றியும்
(ஆகிற இவ்வவயவ சோபையாலே,)
பொலிந்த— விளங்கா நிற்பதொரு
முகில் கன்று போலே— மேகம் பெற்ற கன்று போலே
உருவம் அழகிய— வடிவால் அழகியனாய்
நம்பீ!— ஸர்வவித பரிபூர்ணனானவனே!
தெருவின் கண் நின்று— வீதியிலே நின்று
இளவாய்ச்சிமார்களை — இடைப்பெண்களிடத்திலே
தீமை செய்யாதே— தீம்பு செய்யவேண்டா;
மணம் கமழ்கின்ற— பரிமளம் வீசாநின்ற
மருவும்— மருவையும்
தமநகமும்— தவநத்தையும் சேர்த்துக் கட்டின
சீர் மாலை இவை— அழகிய இம்மாலைகளை
உகந்து சூட்ட— நானுகந்து சூட்டும்படி
நீ வாராய்— நீ வந்தருள வேணும்.

வ்யா. நான்காம்பாட்டு. தெருவின்கண் நின்று. நான் மச்சிலும் மாளிகையிலுமேறி னேனோ, தெருவிலேயன்றோ நின்றேன், என்னை நீ இப்படி சொல்லுவானென்னென்ன; அவ்விடத்திலன்றோ நீ தீமைசெய்யாநிற்கிறது. தெருவீடுகளிலே நின்று. இளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே. அவ்விடத்தில் விளையாடாநிற்கிற பருவத்தாலிளைய இடைப்பெண்களைத் தீமைசெய்யாதே. சிற்றில் சிதைக்கை, விளையாட்டுபகரணங்களைப் பறிக்கை, அவர்களோடே கைப்பிணைக்கிடுகை முதலாக இவன் செய்யும் விஷயங்கள் வாசாமகோசரமாகையாலே, தீமையென்று ஒருசொல்லாலே யடக்கிச்சொல்லுகிறார். மருவும் தமநகமுஞ் சீர்மாலைமணங்கமழ்கின்ற. மருவும் தமநகமும் கலந்துகட்டின அழகிய மாலைகளானவை பரிமளம் கமழாநின்றன. உன் திருக்குழலிலே சேர்க்கைக்க மணம் பரிமளம் பாழ்போகாநின்றதென்கை. புருவமித்யாதி. உபமாநரஹிதமான புருவமும், இருண்டு சுருண்டிருள்ள குழலும், இரண்டுக்கும் நடுவே விளங்காநிற்கிற திருநெற்றியுமாகிற இவ்வவயவசோபையாலே உஜ்ஜ்வலமாயிருப்பதொரு முகிலீன்ற கன்றுபோலே வடிவால் அழகியனுமாய் ஸர்வப்ரகார பரிபூர்ணனுமாயிருக்கிறவனே. உகந்தித்யாதி. "உனக்குச் சூட்டப் பெற்றோம்" என்கிற ஹர்ஷத்துடனே, மணம் கமழாநின்றுள்ள இம்மாலைகளை நான் உனக்குச் சூட்டும்படியாக வரவேணும். ... ... ௪.

மூ.—புள்ளினைவாய் பிளந்திட்டாய் பொருகரியின் கொம்பொசித்தாய்
கள்ளவரக்கியை மூக்கொடு காவலனைத் தலைகொண்டாய்
அள்ளிநீ வெண்ணெய் விழுங்க வஞ்சாதடியே னடித்தேன்
தெள்ளியநீரிலெழுந்த செங்கழுநீர் சூட்டவாராய். ௫.

பதவுரை.

| | |
|---|---|
| புள்ளினை— பகாஸுரனுடைய | தலை கொண்டாய்!— தலைகளையு மறுத்துப் பொகட்டவனே! |
| வாய்— வாயை | நீ— நீ |
| பிளந்திட்டாய்— கிழித்துப் பொகட்டவனே! | வெண்ணெய்— வெண்ணெயை |
| பொரு— யுத்தம்செய்ய உன்மேல் எதிர்ந்து வந்த | அள்ளி விழுங்க— அள்ளி அமுது செய்யும் போது |
| கரியின்— குவலயாபீடமென்னும் யானையின் | அடியேன்— அடியேன் |
| கொம்பு— தந்தத்தை | அஞ்சாது— உன் திருமேனியின் ஸௌகுமார்யத்தைப் பார்த்து அஞ்சாமல் |
| ஒசித்தாய்!— முறித்தவனே! | அடித்தேன்— அடித்தேன்; |
| கள்ளம்— க்ருத்ரிம வேஷம் கொண்டுவந்த | (ஆனபின்பு, நான் செய்ததைப் பொறுத்து) |
| அரக்கியை— சூர்ப்பணகி என்னும் ராக்ஷஸியின் | தெள்ளிய நீரில்— நிர்மலமான நீரிலே |
| மூக்கொடு— மூக்கோடு கூட | எழுந்த— விகஸித்த |
| காவலனை— ராக்ஷஸ ரக்ஷகனை ராவணனுடைய | செங் கழுநீர்— செங்கழுநீரை சூட்ட வாராய். |

வ்யா. இத்தாம்பாட்டு. புள்ளினையித்யாதி. கன்றுகள் மேய்க்கிறவிடத்தில் * பள்ளத்தில் மேயும் பறவையுருக்கொண்டு உன்னை நலிவதாகவந்த பகாஸுரனை வாயைக்கிழித்துப் பொகட்டவனே. பொருவித்யாதி. "கல்யாணத்துக்கு" என்று அழைத்துவிட்டு வழியிலே நலிவதாக கம்ஸன் நிறுத்திவைத்ததாய், உன்மேலே யுத்தோந்முகமாய்வந்த குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேநப் பிடுங்கிப் பொகட்டவனே. கள்ள மித்யாதி. "சீதைக்கு நேராவன்" என்று க்ருத்ரிம வேஷங்கொடுவந்த சூர்ப்பணகியாகிற ராக்ஷஸி மூக்கோடே அவளுக்கு ரக்ஷகனான ராவணன் தலையையும் அறுத்துப்பொகட்டவனே. இவளுக்கு அவன் காவலனாகையாவது - இவளை "ஸ்வைரஸஞ்சாரம் பண்ணித்திரி" என்று விடுகையிறே. அன்றிக்கே, பொதுவிலே, காவலனென்கையாலே ராக்ஷஸஜாதிக்காக ரக்ஷகனென்னவுமாம். இத்தால் - ப்ரபலவிரோதிகளை அநாயாஸேநப்போக்கி, உன்னை யநுபவிப்பார்க்கு உன்னை யுபகரித்தவனன்றோ வென்கை. அள்ளியித்யாதி. "இவன், வெண்ணெய்தானையள்ளி விழுங்கவல்லனாவதெப்போதோ" என்று ப்ரார்த்தித்திருந்த நான், நீ வெண்ணெயை அள்ளி விழுங்கவும் பெற்றுவைத்து உன்மார்த்தவத்தைப் பார்த்தஞ்சாமல் அடியேனடித்தேன். யாவர்சிலரும் அநுதாபம் தலையெடுத்தால் "அடியேன்" என்றிறே சொல்லுவது. இவள்தான் அதுதன்னை முன்னே நினையாதே அடிக்கவேண்டிற்றும், இவன் மற்றொரிடத்திலே இது செய்யுமாகில் வரும்பழிச்சொலவுக்கு அஞ்சியிறே. தேள்ளிய வித்யாதி. ஆனபின்பு நான் முன்செய்தவத்தைப் பொறுத்து, தெளிந்த நீரில் எழுந்ததாகையாலே நிறத்தாலும் பரிமளத்தாலும் விலக்ஷணமாயிருக்கிற செங்கழுநீரை செவ்வையிலே நான் சூட்டும்படி வாராய். ... ... ... ... ... ... ... ரு.

ஃ.—எருதுகளோடுபோருதி யேதுமுலோபாய் காணம்பி!
கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக்கால் கோடுபோய்ந்தாய்

தெருவின்கட் டீமைகள் செய்து சிக்கெனமல்லர்களோடு
பொருது வருகின்ற பொன்னே புன்னைப்பூச் சூட்டவாராய். கூ.

பதவுரை.

நம்பி!— நப்பின்னையிடத்தில் வ்யாமோஹத்தால் பூர்ணனானவனே!
எருதுகளோடு — அஸாரா விஷ்டமான எருதுகளோடே
பொருதி — (நப்பின்னைக்காக) போர் செய்யா நின்றாய்;
ஏதும்— ஒன்றினும்
உலாபாய் காண்— ஆசையற்றிரா நின்றாய் காண்;
[தேஹத்தைப் பேணுதல், ப்ராணனைப் பேணுதல் ஒன்றும் செய்யாதிராநின்றாய் என்று கருத்து.]
கருதிய— கம்ஸன் உன்மேல் செய்ய நினைத்த
தீமைகள்— தீமைகளை
செய்து— அவன்மேல் நீ செய்து
கஞ்சனை— கம்ஸனை
கால் கொடு— உன் திருவடிகளைக் கொண்டு [திருவடிகளாலே]
பாய்ந்தாய்— உதைத்தாய்;
தெருவின் கண்— அவனை நிரஸிப்பதாகப் போகிற வழியிலே
தீமைகள் செய்து— வண்ணானைக் கொன்றதும், வில்லை முறித்ததுமான தீமைகளைச் செய்து
மல்லர்களோடு— சாணூர முஷ்டிகர்களாகிற மல்லரோடு
சிக்கென— நிரந்தரமாக
பொருது— போர் செய்து
வருகின்ற— வருகிற
பொன்னே!— பொன் போன்ற வடிவை யுடைய கண்ணனே!
புன்னை பூ— புன்னைப் பூவை
சூட்ட வாராய்.

வ்யா. ஆரும்பாட்டு. எருதுகளோடு பொருதி. நற்பின்னைப் பிராட்டியை லபிக்கையிலுண்டான ஆசையாலே உன் திருமேனியின் மார்த்தவம்பாராமல் அஸாராவிஷ்டமான எருதுகளோடே பொராநின்றாய். காலாந்தரமாயிருக்கச் செய்தேயும் தத்காலம்போலே ப்ரகாசிக்கையாலே, "பொருதி" என்று- வர்த்தமாநமாகச் சொல்லுகிறது. ஏதுமுலோபாய் காண். ஒன்றினும் லோபமற்றிரா நின்றாய்காண். அதாவது- தேஹத்தைப் பேணுதல், ப்ராணனைப்பேணுதல் செய்யாதிருக்கை. நம்பி. நற்பின்னையளவிலே வ்யாமோஹத்தால் பூர்ணனானவனே. கருதியதீமைகள்செய்து. கஞ்சன் உன் திறத்தில் செய்யக்கருதின தீமைகளெல்லாவற்றையும் அவன் திறத்திலே நீசெய்து. கஞ்சனைக்கால்கொடு பாய்ந்தாய். கம்ஸனைத் திருவடிகளாலே உதைத்தாய். அதாவது (க) "துங்கமஞ்சவ்யவஸ்த்திதஃ" என்கிறபடியே அவனிருந்த உபர்ந்தமஞ்சஸ்த்தலத்திலே சென்று குதித்து, (உ) "கேசேஷ்வாகர்ஷ்ய விகளத் கிரீடமவநீதலே । ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாதச" என்கிறபடியே அபிஷேகத்தைப் பறித்தெறிந்து, மயிரைப்பிடித்திழுத்து மஞ்சஸ்த்தலத்தில்நின்றும் பூமியிலே விழத்தள்ளி, அவன்மேலே குதித்திறே அவனைக்கொன்றது. தெருவின் கண் தீமைகள் செய்து. தெரு- வழி. அவனை நிரஸிப்பதாகப் போகிறபோது வழியிலே அவனுடைய ¶ஈரங்கொல்லியான ரஜகனைக்கொன்று, ஆயுதசாலையிலே புக்கு அவனுக்கு மறம்பிறக்கும்படி 'வில்விழ

(க) "துங்கமஞ்ச வ்யவஸ்த்திதஃ." (உ) "கேசேஷ்வாகர்ஷ்ய விகளத் கிரீடமவநீதலே । ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாதச ।।" ¶இது வண்ணானுடையபேர்.

வுக்கு ' என்று அலங்கரித்திருக்கிற வில்லை முறித்து, அவனுக்கு அபிமதகஜமான குவலயாபீடத்தைக்கொன்று செய்தவிவையிறே தெருவின்கண் செய்த தீமைகளாவன. சிக்கென மல்லர்களோடு பொருது. " ஏவிற்றுச்செய்வானேன்றெதிர்ந்து வந்தமல்லர் " என்கிறபடியே கம்ஸன் ஏவினது செய்யவேணுமென்று மற்பொருகையை ஏன்றுகொண்டுவந்தசாணூர முஷ்டிகராகிற மல்லரோடே ப்ரதிஜ்ஞா பூர்வகமாக உறைக்கப் பொருதழித்து. வருகின்றபொன்னே. இப்படி விரோதிவர்க்கத்தை நிரஸித்து வருகிறபோதைச் செருக்காலே பொன் போலே உஜ்ஜ்வலமான வடிவையுடையவனே. முந்துற கம்ஸநிரஸநத்தைச்சொல்லி, அதுக்கு பூர்வத்திலுள்ளவற்றை, பின்பு சொல்லுவானென்னென்னில்; கம்ஸநிரஸநமே ப்ரதாநமாய், இவை அதுக்குறுப்பாக, போகிறவழியில் செய்த வ்யாபாரங்களாகையாலே அதுக்கு முன்னாகச்சொன்ன விதில் விரோதமில்லை. புன்னையித்யாதி. உனக்குப்பாங்கான புன்னைப்பூச் சூட்டும்படியாக நீவாராய். " பொன்னே புன்னைப்பூச்சூட்டவாராய் " என்கையாலே- பொன்னோடே பொன்னைச்சேர்ப்பாரைப்போலே, பொன்போலேயிருக்கிற திருமேனியிலே பொன்னேய்ந்த தாதையுடைய புன்னைப்பூவைச்சூட்டப் பார்க்கிறாள்காணும். ... ... ௬

மூ.—குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே
மடங்கொண்மதிமுகத்தாரை மால்செய்யவல்ல வென்மைந்தா
இடந்திட்டிரணியனெஞ்சை யிருபிளவாகமுன்கீண்டாய்
குடந்தைக்கிடந்தவெங்கோவே குருக்கத்திப்பூச்சூட்டவாராய். எ.

பதவுரை.

குடங்கள்— பல குடங்களை
எடுத்து— கையிலெடுத்துக் கொண்டும்
ஏறவிட்டு— ஆகாசத்தில் எறிந்தும்
கூத்து ஆட வல்ல— கூத்தாடுவதில் ஸமர்த்தனாய்
எம் கோவே!— எங்களுக்கு ஸ்வாமியானவனே!
மடம் கொள்— மடப்பத்தை யுடையராய்
மதி முகத்தாரை— பூர்ணசந்த்ரனைப் போலே குளிர்ந்தமுகத்தை யுடையரான பெண்களை
மால் செய்ய வல்ல— மயக்கவல்ல
என் மைந்தா!— என் பிள்ளையானவனே!
முன்— முற்காலத்தில்
இரணியன்— ஹிரண்யாஸுரனுடைய
நெஞ்சை— மார்வை
இடந்து— திருவுகிர்களாலே ஊன்றியிடந்து
இரு பிளவாக— இரண்டு பிளவாம்படி
கீண்டாய்!— கிழித்துப் பொகட்டவனே!
குடந்தை— திருக் குடந்தையிலே
கிடந்த— கண்வளர்ந்தருளுகிற
என் கோவே!— என் நாயனே!
குருக்கத்தி பூ— குருக்கத்திப் பூவை சூட்ட வாராய்.

வ்யா. ஏழாம்பாட்டு. குடங்களித்யாதி. ப்ராஹ்மணர் ஐச்வர்யம் விஞ்சினால் யாகாதிகள் பண்ணுமாபோலே, இடையர் ஐச்வர்யம் விஞ்சினால் செருக்குக்குப் போக்குவிட்டாடுவதொரு கூத்தாய்த்து - குடக்கூத்தாவது. உபயவிபூதி யைச்வர்யம்போலன்றிக்கே, பிறந்து படைத்த ஐச்வர்யமிறே யிவனுக்கிது. இடையர்க்கு ஐச்வர்யந்தானாவது- கோஸம்ருத்தியிறே. அந்தஸம்ருத்தி குறைவறவுள்ளது தனக்கேயாகையாலே, அத்தால்வந்த செருக்குக்குப் போக்குவிட்டுக் குடக்கூத்தாடினபடி சொல்லுகிறது. தலையிலே அடுக்குக்குடமிருக்க, இரண்டுதோள்களிலும் குடங்களிருக்க, இரண்டு கைகளிலும் குடங்களை யேந்தி ஆகாசத்திலே எறிந்தாடுவெ

தொரு கூத்தாய்த்து - குடக்கூத்தாவது. அத்தைச்சொல்லுகிறது குடங்களேடுத்தேறவிட்டு க்கூத்தாடவல்ல என்று. "குடம்" என்னுதே, குடங்கள் என்கையாலே - பல குடங்களையும் கொண்டு ஆடினமையைச் சொல்லுகிறது. "எடுத்தேறவிட்டு" என்கையாலே- அவற்றைத் திருக்கையிலே யெடுத்து ஆகாசத்திலே உயர எறிவது ஏற்பதானமையைச் சொல்லுகிறது. கூத்தாடவல்லவென்கையாலே - மற்றும் இக்கூத்தாடுவாருண்டேயாகிலும், இவன் ஆடின கட்டளை ஒருவர்க்கு மாடப்போகாதென்னு மிடம் சொல்லுகிறது. இவனுடின வைசித்ரி பரதசாஸ்த்ரத்திலும் காண வரிதாயிருக்கை. எங்கோவே. எங்களுக்கு நாயகனுனவனே. மடங்கொளித்யாதி. இப்படி யிருக்கிற சேஷ்டிதத்தாலே மடப்பத்தையுடையராய், பூர்ணசந்த்ரனைப்போலே குளிர்ந்து ஒளிவிடாநின்ற முகத்தையுடையரா யிருக்கிற ஸ்த்ரீகளைப் பிச்சேற்றவல்ல வென்னுடைய பிள்ளையானவனே. இடந்திட்டித்யாதி. நெஞ்சென்று - மார்வைச் சொல்லுகிறது. தேவர்கள் கொடுத்த வரபலத்தாலே பூண்கட்டியிருக்கிற ஹிரண்யனுடைய மார்வை, "கோலைக்கையாளன் நெஞ்சிடந்த கூருகிராளன்" என்கிறபடியே கூரிய திருவுகிர்களாலே உறைக்க வூன்றியிடந்து இரண்டு கூறும்படியாக முற்காலத்திலே கிழித்துப் பொகட்டவனே. இத்தால் - சிறுக்கனுடைய ஆபத்திலே வந்து உதவினவனுகையாலே தளர்ந்தாரை நோக்குமவனென்னுமிடம் சொல்லுகிறது. குடந்தையித்யாதி. அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கும் உதவுகைக்காகத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளின என்னுபனுனவனே. குருக்கத்தியித்யாதி. உனக்கென்று தேடிவைத்த குருக்கத்திப்பூவை உன் திருக்குழலிலே சூட்டும்படியாக வாராய். ... ...எ.

மூ.—சீமாலிகனவனேடு தோழமைக் கொள்ளவும்வல்லாய்
சாமாறவனைநீயெண்ணிச் சக்கரத்தாற்றலைகொண்டாய்
ஆமாறறியும்பிரானே யணியரங்கத்தே கிடந்தாய்
ஏமாற்றமென்னைத்தவிர்த்தா யிருவாட்சிப் பூச்சூட்டவாராய். அ.

பதவுரை.

$ மாலிகன் — 'மாலிகன்' என்னும் பெயரையுடையனுடைய
அவனேடு— ஆஸுரப்ரக்ருதிகளுள் தலைவன் என்று ப்ரஸித்திபெற்ற அவனேடே
தோழமை கொள்ளவும்— ஸ்நேஹிக்கவும்
வல்லாய்!— ஸமர்த்தனுனவனே!
‡அவன்— அவ்வஸுரனுனவன்
சாம் ஆறு— சாகத்தக்க வழிகளை
நீ எண்ணி— நீ யோசித்து
சக்கரத்தால்— சக்ராயுதத்தாலே
தலை கொண்டாய்! – அவன் தலையை அறுத்துப் பொகட்டவனே!
ஆம் ஆறு— மேல் வருமதை
அறியும் — அறியவல்ல
பிரானே!— நாயனே!
அணி— அழகு பொருந்திய
அரங்கத்து— திருவரங்கமாநகரில்
கிடந்தாய்!— கண்வளர்ந்தருளுமவனே!
‡ என்—உன்மேல் பரிவையுடையளானஎன்னுடைய
ஏமாற்றம்— துக்கத்தை
தவிர்த்தாய்!— நீக்கினவனே!
இருவாட்சி பூ— இருவாட்சிப் பூவை
சூட்ட வாராய்.

$ "சீ மாலிகன்" என்கிறவிடத்தில், 'சீ' என்னுமது ஔபசாரிகச் சொல்லு. 'ஸ்ரீ' என்னுமது 'சீ' என்றுய், கண்ணனேடு நட்புக்கொண்டதால்வந்த சீர்மையைச் சொல்லுகிறதென்பர்.
‡ ஐகாரம் சாரியை.

வ்யா. எட்டாம்பாட்டு. சீமாலிகனித்யாதி. மாலிகனென்பானொருத்தன் க்ர்ஷ்ணனுக்கு ஸகாவாய், பல ஆயுதங்களும் பயிற்றுவிக்க க்ர்ஷ்ணன்பக்கலிலே கற்று, இந்த ஆஸக்திபலத்தாலே ஒருவர்க்குமஞ்சாமல் லோகத்திலுள்ள ஸாதுக்களை நலிந்து திரியப்புக்கவாறே, "ஸகாவாய்ப்போந்த விவனை நிரஸிக்கவொண்ணாது" என்று திருவுள்ளத்தில் அத்யந்தவ்யாகுலம் நடந்துபோருகிற காலத்திலே, அவனை ஒருபோது கருகநியமித்தவாறே, அவன்றான், "நறுகுமுறுகு" என்றாற்போலே சிலபிதற்றி, எல்லா வாயுதங்களும் பயிற்றுவித்திரேயாகிலும், என்னை, "ஆழிபயிற்றுவித்திலீரே" என்ன; "இதுநமக்கு அஸாதாரணம், உனக்கு கர்த்தவ்யமன்றுகாண்" என்ன; "எனக்கு கர்த்தவ்யமன்றியிலே யிருப்பதோராயுதமுண்டோ" என்று அவன் நிர்ப்பந்தங்களைப் பண்ணினவாறே, இவனுடைய துஸ்ஸ்வபாவங்களடியாக, "இவனை நிரஸிக்கவேணும்" என்று திருவுள்ளம்பற்றி, தன்னுடைய சீர்மைகுன்றாதபடி- ஆயுதம் பயிற்றுவிக்கிறானாக, திருவாழியை ஒருவிரலாலே சுழற்றி ஆகாசத்திலே எழவீசி, சுழன்று வருகிற திருவாழியை மீண்டும் திருக்கையிலே அநாயாஸேந ஏற்க, அவன் இத்தைக்கண்டு, "எனக்கு இது அரிதோ" என்று கைநீட்ட, "உனக்கு இது அரிதுகாண்" என்னச்செய்தேயும் அவன் வாங்கிச்சுழற்றி மேலேவிட்டு, மீண்டு சுழன்று வருகிறபோது பிடிப்பானாக நினைத்து, தன்கழுத்தை யடுக்கத்தன் விரலையெடுத்துக் கொடுநிற்க, அது * வட்டவாய் நுதிநேமியாகையாலே சுழலவர இடம் போராதது கொண்டு அதன்வீச்சு இவன்கையில் பிடிபடாமல் இவன்தலையை யரிந்து போகட்டது என்று இதிஹாஸாதிகளிலே சொல்லப்பட்டதொரு வ்ர்த்தாந்தத்தை இப்பாட்டில் பூர்வார்த்தந்தாலே ஸங்க்ரஹேண சொல்லுகிறது.

சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய். சீ- ஔபசாரிகம். மாலிகனென்று பேரையுடையனாய் ஆஸுரப்ரக்ர்தியாயிருக்கிறவனோடே, உன் குணத்தாலே கலந்து தோழமைக்கொள்ளவும் வல்லவனே.

சாமாறவனை நீயெண்ணி. ஸாதுபீடாதிகளைப் பண்ணப்புக்கவாறே, இனி அவனையழியச்செய்யாவிடில் நாடு குடிகிடவாது" என்று அவன் சாகத்தக்க வழிகளை நீயே சிந்தித்து. அதாவது- "தோழனைக்கொன்றான்" என்று தனக்கு அபவாதம் வாராதபடியாகவும் "தன்னாலேதான் முடிந்தான்" என்னும்படியாகவும் தக்கவழியைச் சிந்திக்கை. "அவனை" என்கிற இடத்தில், ஐகாரம்- அவ்யயம். சக்கரத்தால் தலைகொண்டாய். "நமக்கு அஸாதாரணமான ஆயுதம், உனக்கிதாகாது காண்" என்னச்செய்தேயும் அவன் நிர்ப்பந்தம் பண்ணினதுக்காக, அவனை, ஆழிபயிற்றுவிப்பானைப்போலே உபாயரூபேண திருவாழியாலே சிரச்சேதம் பண்ணிப் பொகட்டவனே. ஆமாறறியும்பிரானே. சத்ருநிரஸநம், ஆச்ரிதரக்ஷணமாகிற விவற்றில் ஏதேனுமொன்றில் புகுந்தால், மேல்விளைவதறியும் உபகாரகனானவனே.

அணியரங்கத்தே கிடந்தாய். "இங்கேகிடந்தால் நமக்கு முமுக்ஷுக்களை லபிக்கலாம்" என்று ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே பள்ளிகொண்டருளுகிறவனே. ஏமாற்றமென்னைத்தவிர்த்தாய். "நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" என்கிறபடியே பரிவருள்ள தேசத்திலே பள்ளிகொள்ளுகையாலே உன் ஸௌகுமார்யாதிகளை நினைத்து, "உனக்கென்வருகிறதோ" என்று வயிறெரியாநிற்குமென் க்லேசத்தைப் போக்கினவனே. ஏமாற்றமாவது- து:க்கம். இருவாட்சிப் பூச்சூட்டவாராய். காலபுஷ்பமானவிது செவ்வியழிவதற்கு முன்னே உன் திருக்குழலிலே நான் சூட்டும்படிவாராய். ... ... ... ... ... அ.

மூ.—அண்டத்தமரர்கள்சூழ வத்தாணியுள்ளங்கிருந்தாய்
தொண்டர்களெஞ்சிலுறைவாய் தூமலராண்மணவாளா
உண்டிட்டலேகினையேழு மோராலிலையிற்றுயில்கொண்டாய்
கண்டோனுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய். கூ

பதவுரை.

¶ அண்டத்துள்— ஸ்ரீ வைகுண்டத்திலே
அத்தாணி— நித்ய ஸந்நிஹிதர்களான
அமரர்கள்— நித்யஸூரிகள்
சூழ— சூழ்ந்து ஸேவித்திருக்க
அங்கு— அவர்கள் நடுவே
இருந்தாய்! — வீற்றிருக்குமவனே!
தொண்டர்கள்— பக்தர்களுடைய
நெஞ்சில்— மநஸ்ஸில்
உறைவாய்!— நித்யவாஸம் செய்யுமவனே!
தூ— பரிசுத்தமான
மலரான்— தாமரைமலரைப் பிறப்பிடமாக வுடைய பெரியபிராட்டியாருக்கு
மணம் ஆளா!— வல்லபனானவனே!
ஏழு உலகினையும்— ஸப்தலோகங்களையும்
உண்டிட்டு— (ப்ரளயத்தி லழியாதபடி) திருவயிற்றிலேவைத்து
ஓர் ஆல் இலையில்— ஒரு ஆலந்தளிரிலே
துயில் கொண்டாய்! — கண்வளர்ந்தருளு பவனே!
உன்னை— உன்னை
நான் கண்டு— நான் பார்த்து
உகக்க— ஆநந்திக்கும்படி
கருமுகை பூ— கருமுகைப் பூவை
சூட்ட வாராய்.

¶ "உள்ளங்கிருந்தாய்" என்கிறவிடத்திலுள்ள 'உள்' என்னுமது இவ்விடத்தில் அந்வயித்துக் கிடக்கிறது.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. அண்டத்தித்யாதி. "இறந்தால் தங்குமூரண்டமே" என்றும், "அண்டம்போ யாட்சியவர்க்கு" என்றும், பரமபதத்தை "அண்டம்" என்று சொல்லக்கடவதிறே. அண்டத்துள் அத்தாணி- அமரர்கள்சூழ - அங்கிருந்தாய். பரமபதத்திலுள்ளே அருகிருப்பையுடையரான நித்யஸூரிகள்சூழ ஸேவிக்க, அவர்கள் நடுவே * ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருந்தருளினவனே. அத்தாணி- அருகிருப்பு. தொண்டர்கள் நெஞ்சிலுறைவாய். இந்த விபூதியில் முமுக்ஷுக்களாய் உன்பக்கல் ப்ரேமயுக்தரா யிருக்குமவர்களுடைய மநஸ்ஸினுள்ளே, பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் உகந்து நித்யவாஸம் பண்ணுமவனே. தூமலராள்மணவாளா. தூய்தான தாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு நாயகனானவனே. (க) "ஸ்ரீ பாலயஃ" என்கிறபடியே பரமபதத்திலும், "அரவிந்தப்பாவையுந்தானும்" என்கிறபடியே தொண்டர்களுடைய ஹ்ருதயத்திலும், பிராட்டியும் தானுங் கூடவிறே யெழுந்தருளி யிருப்பது.

உண்டிட்டித்யாதி. ப்ரளயத்தில் அழியாதபடி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து ஒரு பவனை ஆலிலையிலே கண்வளர்ந்தருளினவனே. இந்த ஆபத்ஸகத்வத்துக்கு ஹேது, கீழ்ச்சொன்ன ஸ்ரியப்பதித்வமிறே. (உ) "யஸ்யா வீக்ஷ்ய ..." என்கிறபடியே ஸகலமும் அவளுடைய இங்கிதபராதீநனாயிறே

(க) "ஸ்ரியா ஸார்த்தம்." (உ) "யஸ்யா வீக்ஷ்யமுகம் ததிங்கித பராதீநோ விதத்தே கிலம்."

செய்வது. கண்டித்யாதி. மாலையும் மயிர்முடியுமாயிருக்கி றஉன்னைக்கண்டு நானுகக்கும்படியாக நீ உகக்கும் கருமுகைப்பூச் சூட்டவாராய், ... ... ... ... ௯

மூ.—சௌண்பகமல்லிகையோடு சேங்கழுநீரிருவாட்சி
எண்பகர்பூவுங்கோணர்ந்தே னின்றிவைசூட்டவாவேன்று
மண்பகர்கோண்டானை யாய்ச்சி மகிழ்ந்துரைசேய்தவிம்மாலை
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சோன்னபத்தே. ௰.

பதவுரை.

சௌண்பகம்— "செண்பகமும்
மல்லிகையோடு— மல்லிகையுமாகிற இப்பூக்களோடு
செங்கழுநீர்— செங்கழுநீரும்
இருவாட்சி— இருவாட்சியும் முதலாக
எண் பகர்— 'இன்னது இன்னது' என்று எண்ணிச் சொல்லப்பட்ட
பூவும்— பூக்களெல்லாவற்றையும்
கொணர்ந்தேன்— தேடிக் கொண்டுவந்தேன்;
இவை— இப்புஷ்பங்களை
இன்று— இப்போது
சூட்ட— சூட்டும்படி
வா என்று— வரவேணும்" என்று
பகர்— தன்னது என்று சாஸ்த்ரஸித்தமான
மண்— பூமியை
கொண்டானை— மஹாபலிபிடத்தில் நீரேற்று அளந்துகொண்டவனைக் குறித்து
ஆய்ச்சி— யசோதைப்பிராட்டி
மகிழ்ந்து— மனமுகந்து
உரைசெய்த— சொன்னவற்றை,
பண்— பண்ணிலே சேரும்படி [பண் — ராகம்.]
பகர்— சொல்லா நிற்கிற
வில்லிபுத்தூர் கோன்— ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் தலைவரான
பட்டர்பிரான்— பெரியாழ்வார்
சொன்ன— அருளிச்செய்த
இ மாலை— சொல்மாலையான இவையும்
பத்தே!— ஒருபத்தே!
[என்று இப்பத்தின் மேன்மையைப் புகழ்ந்து, இதனுடைய ரஸாநுபவந்தானே இதுக்கு பலமென்று தோற்றவருளிச் செய்கிறார்.]

சேண்பகமல்லிகையோடித்யாதி. ப்ராதக்கால புஷ்பிதமான செண்பகமும் ஸாயங்காலபுஷ்பமான மல்லிகையுமாகிற விவற்றோடே, ப்ராதக்கோலபுஷ்பங்களான செங்கழுநீரிருவாட்சியும் முதலாக எண்ணிச் சொல்லப்பட்ட பூக்களெல்லாங் கொண்டு வந்தேன். அன்றிக்கே, எண்பகர்பூ வென்றது- இன்னதின்னதென்று பரிகணிக்கப்படுமதாய் சாஸ்த்ரஸித்தமுமாகிற பூக்களென்னவுமாம். கோணர்ந்தே னென்றது-கொண்டுவந்தேனென்றபடி. இன்றிவைசூட்டவாவென்று. இப்போது இவற்றை உன் திருக்குழலிலே சூட்டவரவேணுமென்று. மண்பகர்கோண்டானை. பகர்ந்தமண்ணைக் கொண்டவனை. பகர்தல்- "மூவடி தா" என்ற இவனுடைய உக்தியாதல்; "தந்தேன்" என்ற மஹாபலி உக்தியாதல். சாஸ்த்ரஸித்தமான பூமியையெல்லாம் கொண்டவனை யென்னுதல். ஆய்ச்சிமகிழ்ந்துரைசேய்த. இப்படியிருக்கிறவனைக்குறித்து இன்றிவைசூட்டவாவென்று யசோதைப்பிராட்டி உகந்துசொன்ன ப்ரகாரங்களை. செய்த வென்றது - செய்தவற்றையென்றபடி. பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான் சோன்ன - இம்மாலை - பத்தே. ஆரேனுமொருவர் ஏதேனுமொன்றைச் சொல்லிலும் பண்ணிலேசேரும்படி சொல்லாநிற்கும் ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வா

சருளிச்செய்த இம்மாலையும் ஒருபத்தே! என்று இதினுடைய ச்லாக்யதையைச் சொல்லுகிறது. இதுக்கொரு பலம் சொல்லாதே இத்தைச் லாகித்துவிட்டது, இதினுடைய ரஸாநுபவந்தானே இதுக்கு பலமென்று தோற்றுகைக்காக. ... ... ... ய.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்

(*)

அடிவரவு.—ஆநிரை கரு மச்சு தெருப் புள் எருது குடம்
சீமா லண்டம் சேண்பக மிந்திரன்.

ஆ - திருமொழி, கஈ - க்கு, பாட்டு- கஎசு.

அ. கீழே, அவனைத் திருமஞ்சனமாட்டித் திருக்குழல்வாரின யசோதைப்பிராட்டி "அவன் திருக்குழலுக் கலங்காரமாகப் பூச்சூட்டவேணும்" என்றுகோலி, ஒன்றுபோலொன்றன்றிக்கே விலக்ஷணமான புஷ்பங்கள் பலவற்றையும் ஸம்பாதித்து "இவைசெவ்வி யழிவதுக்கு முன்னே உனக்கு நான் சூட்டும்படி வரவேணும்" என்று அவனைப் பலகாலுமழைத்துப் பூச்சூட்டினவநந்தரம், "அவனழகுக்கு த்ர்ஷ்டிதோஷம் வாராதபடி காப்பிடவேணும்" என்று நினைத்து, "ஸாயங்காலத்திலே உன்னைஸேவிப்பதாக தேவஜாதியெல்லாம் வந்து நில்லாநின்றது, காலமும் ஸந்த்யை ஆயிற்று. இக்காலத்தில் உக்ரதேவதைகள் ஸஞ்சரிக்கும் மன்றுமுதலான ஸ்த்தலங்களில் நில்லாதே உனக்கு அந்திக்காப்பிடும்படி வரவேணும்" என்று பலகாலுமநுவர்த்தித்தழைத்துக் காப்பிட்ட ப்ரகாரத்தை, தாமுமநுபவிக்க வாசைப்பட்டு, உகந்தருளின நிலமான திருவெள்ளறையில் அவன்நிற்கிற நிலையிலே அவனைக்குறித்து, யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹத்தையும் பரிவையு முடையராய்க்கொண்டு, அவள்பேசினாற்போலேபேசி அவனுக்குத் திருவந்திக்காப்பிடுகையாகிற ரஸத்தையநுபவிக்கிறார் - இத்திருமொழியில். ... ... ... ... ... ... *

மூ.—இந்திரனோடு பிரமனீசனிமையவரெல்லாம்
மந்திரமாமலர்கொண்டு மறைந்துவராய் வந்துநின்றார்
சந்திரன்மாளிகைசேருஞ் சதுரர்கள்வெள்ளறைநின்றாய்
அந்தியம்போதிதுவாகு மழகனே காப்பிடவாராய். க.

பதவுரை.

சந்திரன்— சந்த்ரனானவன்
மாளிகை— ப்ராஸாதங்களிலே
சேரும்— வந்து சேரும்படியிருப்பதாய்
சதுரர்கள்—மங்களாசாஸந ஸமர்த்தர்கள்வர்த்திக்கிற
வெள்ளறை—திருவெள்ளறையிலே
நின்றாய்— நின்றருளுமவனே!
இந்திரனோடு— தேவேந்த்ரனோடே
பிரமன்— சதுர்முகப்ரஹ்மாவும்
ஈசன்— ருத்ரனும்

இமையவர் எல்லாம்— மற்றுமுள்ள தேவதைகளெல்லாரும்
மந்திரம்—— புருஷஸூக்தாதி மந்த்ரங்களால் அபிமந்த்ரிக்கப்பட்ட
மா மலர்—— சிறந்த கல்பகாதிபுஷ்பங்களை
கொண்டு—— கையில் கொண்டு
மறைந்து —— அயலார் கண்ணுக்குப் புலப்படாதபடி
உவராய்—— அதூர விப்ரக்ருஷ்டர்களாய்
வந்து நின்றார்— வந்திராநின்றார்கள்;

அழகனே!— (கண்ணெச்சில் வாராமைக்காக, எப்போதும் காப்பிடவேண்டும்படியான) அழகையுடையவனே!
இது— இந்தஸமயமானது
அந்தியம் போது ஆகும்— ஸாயம் ஸந்த்யா காலமாயிருக்கும்;
(ஆகையால்,)
காப்பு இட— உன்னழகுக்குத் திருவந்திக் காப்பிடும்படி
வாராய்— நீ வந்தருளாய்.

வ்யா. முதற்பாட்டு. இந்திரனோடு. த்ரைலோக்ய பாலகனான இந்த்ரனோடே, சதுர்த்தசபுவந ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவும், ஜகத் ஸம்ஹாரகர்த்தாவான ருத்ரனும், இவர்களுக்கு பரதந்த்ரராய் வர்த்திக்கும் மற்றுமுண்டான தேவர்களுமெல்லாம். இத்தால் - அதிகாரி புருஷர்களோடு அவர்களுக்குக் குடிமக்களாய் வர்த்திக்குமவர்களோடு வாசியற எல்லாருமென்றபடி. ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள் மூவரையும் சொல்லுகிறவிடத்தில், இந்த்ரனை முந்துறச் சொல்லிற்று - அவனொழிந்த ப்ரஹ்ம ருத்ரர்களுக்கும் அதிகரித்த கார்யத்தால் வந்த ஐச்வர்ய மதமேயொழிய, ஈச்வரத்வ கந்தமில்லை யென்று தோற்றுகைக்காக. இவர்கள்தான் தொட்டில் பருவமே பிடித்து இவ்விஷயத்திலே கிஞ்சித்கரித்திறே போருவது. ஆகையாலே * எழிலுடைய அம்மனைமீர் தந்துவனுப்பின்ற விந்த்ரனோடே, * வண்ணச்சிறுத்தொட்டில் வரவிட்ட ப்ரஹ்மாவும், * உடையார் கருமணிவரவிட்ட ருத்ரனும், * வலம்புரி, சேவடிக்கிண்கிணி முதலானவை வரவிட்ட மற்றுமுண்டான தேவர்களுமெல்லாமென்கை.

மந்திரமாமலர்கொண்டு. திருமந்த்ரபுஷ்பங்கொண்டு. மந்திரமென்கிறது - * மறைகொண்ட மந்திரமான ஸ்ரீபுருஷஸூக்தாதிகளை. மாமலரென்கிறது - ச்லாக்யமான கல்பக புஷ்பாதிகளை. மறைந்துவராய் வந்துநின்றார். "கட்கரிய பிரமன் சிவனிந்திரன்" என்கிறபடியே இங்குள்ளாருடைய கண்ணுக்கு விஷயமாகாதவர்களாகையாலே பிறர்க்குத் தெரியாதபடியாக நீ பருள்பாடிட்டவாறே வரும்படி உனக்கு அதூரவிப்ரக்ருஷ்டராய் வந்து நின்றார்கள். "மறைந்துவரா" என்று பாடமானாலும், உவரா - அதூர விப்ரக்ருஷ்டராகவென்று பொருள்.

சந்திரனிந்யாதி. சந்த்ரபதத்தளவும் செல்ல ஓங்கியிருக்கையாலே, சந்த்ரன், மாளிகைகளிலே வந்து சேரும்படியிருப்பதாய், உன் ஸௌகுமார்யாதிகளையறிந்து மங்களாசாஸநம் பண்ணி நோக்கவல்ல ஸமர்த்தரானவர்கள் வர்த்திக்கிற திருவெள்ளறையிலே நின்றருளினவனே. அந்தியம்போதிதுவாகும். இது ஸந்த்யாகாலமாயிருக்கும். விளையாட்டுப்பராக்காலே அஸ்தமித்ததும் அறிகிறாயில்லையே!. அழகனே. த்ருஷ்டிதோஷபயத்தாலே அநவரதம் காப்பிடவேண்டும்படியான அழகையுடையவனே. அஸ்தமித்ததறியாதாற்போலே உன்னழகின்வாசியும் அறிகிறாயில்லையே!. காப்பிடவாராய். உன்னுடைய ஸ்வாபாவிகமான ஸமுதாயசோபைக்கும் ஒப்பனையழகுக்கும் ஒரு குறைவாராதபடியாகத் திருவந்திக்காப்பிட வாராய். ... ... ... ... ... ... ... க.

மூ.—கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம்
நின்றொழிந்தேனுன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய்
மன்றிலில்லேலந்திப்போது மதிட்டிருவெள்ளறைநின்றாய்
நன்றுகண்டாயென்றன்சொல்லு நானுன்னைக்காப்பிடவாராய். உ.

பதவுரை.

பசு எல்லாம்— பசுக்களெல்லாம்
கன்றுகள் இல்லம்— கன்றுகள் நிற்கிற இடத்திலே
புகுந்து— வந்துபுகுந்து
கதறுகின்ற— கன்றுகளைக் குடிக்கவிடுதல், கறக்குதல் ஒன்றும் செய்யாமைகொண்டு, முலைக்கடுப்பாலே கதறுகின்றன;
உன்னை கூவி— உன்னை நானழைத்து
நின்று ஒழிந்தேன்— நின்றுவிட்டேன்;
[ நானுன்னை அழைப்பதில் உற்றிருந்தமையால் கன்றுகளைக்குடிக்கவிடுவாரொருவருமில்லாமற்போகவே பசுக்கள் கதறுகின்றன என்று கருத்து. இப்போதிது சொல்லுகிறது - சடக்கெனக் காப்பிட வரவேணுமென்னு மதுக்குறுப்பாக. ]
நேசம் ¶ ஒன்றும்— என்பக்கல் அல்பஸ்நேஹமும்
இலாதாய்!— இல்லாதவனே!
அந்தி போது— மாலைப் பொழுதில்
மன்றில்— நாற்சந்தியிலே
நில்லேல்— நில்லாதேகொள்;
மதிள்— மதிளையுடைய
திரு வெள்ளறை— திருவெள்ளறையிலே
நின்றாய்— நின்றருளுமவனே!
என் தன்— தாயான என்னுடைய
சொல்லு— சொல்லானது
நன்றுகண்டாய்— உனக்குப்ரியமாயிருக்குங்கிடாய்;
( ஆகில் என்செய்யவேணுமென்று அவன் கேட்க; )
நான் உன்னை காப்பு இட வாராய் என்கிறாள்.

( ¶ ஏல் - அசை. )

வ்யா. இரண்டாம்பாட்டு. கன்றித்யாதி. பசுக்களானவை யெல்லாம் கன்றுகள் நிற்கிறவிடத்திலே வந்து புகுந்து, கன்றுகளைக் குடிக்கவிடுதல், கறக்குதல் செய்வாரில்லாதது கண்டு முலைக்கடுப்பாலே கதறுகின்றன. அதவா, "கதறுகின்ற" என்றத்தை, கீழும் மேலும் அந்வயித்து- கன்றுகளெல்லாம் தொழுவத்தில் தந்தாம் நிலைகளிலே புகுந்துநின்று முலையுண்ணப் பெறுமையாலே நாக்கொட்டிக் கதறுகின்றன; பசுக்களெல்லாம் புறம்பே நின்று, கன்றுகள் குடித்தல் கறத்தல் செய்யப்பெறாமல் முலைக்கடுப்பாலே கதறுகின்றனவென்னவுமாம். அவை அப்படிக் கதறவேண்டுகிறது - முன்போலே நீ கன்றுகளைவிட்டுக் கறவாமையன்றோ, அது செய்யாதொழிவானென்னென்ன; நின்றொழிந்தேனுன்னைக்கூவி. நான் உன்னை யழைத்துநின்றுவிட்டேன்; பின்னை அங்கு ஆரது செய்வார்?. அவை கன்றை நினைத்துக் கதறுகிறாப்போலே யன்றோ, நானும் உன்னையழைத்து நின்றுவிட்டபடி. நேசமேலொன்றுமிலாதாய். என்பக்கல் ஸ்நேஹமாகில் ஒன்றுமில்லாதவனே. கதறுகிற தாய்களளவில் கன்றுகளுக்குண்டான ஸ்நேஹம், என்பக்கலுனக்குண்டாகவேண்டாவோ; அது ஏகதேசமுமில்லாதவனாயிருந்தாயே நீ. நான் உன் பக்கல் ஸ்நேஹமற்றிருக்கிறேனோ, விளையாடி வருகைக்காக நின்றேனத்தனையன்றோவென்ன; மன்றில்நில்லேலந்திப்போது. ஸந்த்யா காலத்திலே க்ஷுத்ரதேவதைகள் நிற்குமிடமான நாற்சந்தியிலே நில்லாதே கொள்ளாய். விளையாடுகைக்கு ஸ்த்தலமும் காலமுமல்லகாணிது. மதிள் திருவெள்ளறைநின்றாய். மங்களா

சாஸநபார்க்கு அஞ்சவேண்டாதபடி உனக்கு அரணாகப்போரும்படியான மதிளையுடைய திருவெள்ளறையிலே நின்றருளினவனே. புறம்பே புறப்பட்டு வ்யாபரியாதே அவ்வரணுக்குள்ளே நின்றாயாகில் எனக்கிப்படி வயிறுபிடிக்கவேண்டாவே. நன்றுகண்டாயென்றன் சொல்லு. இப்படி சொன்னவிடத்திலும் தன்சொல் அவன் கைக்கொள்ளாமையாலே, என் சொலவு நன்றுகிடாய், அத்தைக் கைக்கொள்ளென்கிறாள்; "தாயர்வாய்ச்சொல் கருமங்கண்டாய்" என்றாற்போலே. நானுன்னைக்காப்பிடவாராய். உன் பக்கல் ஸ்நேஹயுக்தையாய் மங்களாசாஸநபரையாயிருக்கிறநான், அநவாதம்காப்பிடவேண்டும்படியான ஸௌகுமார்யாதிகளையுடைய உன்னைக் காப்பிடும்படியாக நீவாராய். ... ... ... உ.

மூ.—செப்போதுமென்முலையார்கள் சிறுசோறுமில்லுஞ்சிதைத்திட்டு
அப்போதுநானுரப்பப்போ யடிசிலுமுண்டிலையாள்வாய்
முப்போதும்வானவரேத்து முனிவர்கள்வெள்ளறைநின்றாய்
இப்போதுநானொன்றுஞ்செய்யே னெம்பிரான்காப்பிடவாராய். ௩.

பதவுரை.

முப்போதும்— காலை, உச்சி, மாலையாகிற மூன்றுகாலங்களிலும்
வானவர்— தேவர்களாலே
ஏத்தும்— துதிக்கப்படுமவனும்
முனிவர்கள் — உன் சீர்மையையே எப்போதும் மநநம்பண்ணுமவர்கள் வர்த்திக்கிற
வெள்ளறை— திருவெள்ளறையிலே
நின்றாய்!— நின்றருளுமவனானவனே!
எம்பிரான்!— எமக்கு நாயகனானவனே!
ஆள்வாய்!— என்னை ஆளப்பிறந்தவனே!
செப்பு ஓதும்— பொற்கிண்ணமென்று சொல்லத்தக்க நிலைமையை உடைத்தாய்
மெல்— ம்ருதுவாயிருந்துள்ள
முலையார்கள்— முலையையுடையவர்களுடைய
சிறு சோறும்— விளையாட்டுக்காக மணல் கொழித்துச்சமைத்த சிறுசோற்றையும்
சிறு இல்லும்— மணல் கொட்டகத்தையும்
சிதைத்திட்டு— அழித்துப்பொகட்டு
(அதுவுமன்றியில்,)
அப்போது — அவற்றை அழித்த அக்காலத்திலே
நான் உரப்ப— நானுன்னைச்சீறி வார்த்தை சொல்ல
போய்— அஞ்சி ஓடிப்போய்
அடிசிலும்— அடிசிலையும் [அடிசில் - இனிதானசோறு.]
உண்டிலை— அமுதுசெய்திலை; (ஆகிலும்,)
இப்போது— இப்போது
நான் ஒன்றும் செய்யேன்— நானுன்னைப் பிடித்தல் அடித்தலொன்றும்செய்வதில்லை;
காப்பிடவாராய்.

வ்யா. மூன்றாம்பாட்டு. செப்பித்யாதி. செப்பென்று சொல்லும்படியான ஸந்நிவேசத்தை யுடைத்தாய், அதுபோலே கடிநமாயிருக்கையன்றிக்கே ம்ருதுவாயிருக்கும் முலையை யுடையவர்களுடைய. சிறுசோறுமில்லுஞ்சிதைத்திட்டு. லீலார்த்தமாக மணற்கொழித்துச் சமைத்த சிறு சோற்றையும் கொட்டகத்தையு மழித்திட்டு. அப்போது நானுரப்பப்போய். "பெண்களோடே கைப்பிணைக்கிட்டு விளையாடித்திரிய வேண்டாகாண்" என்று அப்போது நான்கோபித்தவாறே, நான் பிடிக்குதல் அடிக்குதல் செய்யப்போகிறேன் என்று என்முன் நிற்கவஞ்சிப்போய். அடிசிலுமுண்டிலை. உனக்கினிதாகச் சமைத்துவைத்த அடிசிலுமமுது

செய்திலே. ஆள்வாய். என்னை யாளப் பிறந்தவனே. இப்படியோ நீ யென்னையாளத்தேடுகிறது. இவளையாளுகையாவது- இவள் சொல்வழி வந்து, இவள் கொடுத்தவற்றையும் விநிபோகம் கொண்டு, கோற்கீழ்க்கன்றாய் நடக்கையிறே. முப்போதுமித்யாதி. "ஆதிநடுவந்திவாய்" என்கிறபடியே, த்ரிஸந்த்யமும் - ப்ரஹ்மபாவனை தலைபெடுத்தபோதெல்லாம், தேவர்களாலே, ஸ்துதிக்கப்படுமவனும், மங்களாசாஸநபரராய்க்கொண்டு உன்னுடைய ஸம்ர்த்தியையே எப்போதும் மநநம்பண்ணுநிற்குமவர்களுடைய திருவெள்ளறையிலே நிற்குமவனே. இப்போது நானொன்றும்செய்யேன். அப்போது ஹிதரூபமாக உன்னைக்கோபித்து வார்த்தை சொன்னேனாகிலும் இப்போது நானுன்னை ஒன்றும் செய்யேன். எம்பிரான் காப்பிடவாராய். என்னுடைய நாதனே! உனக்கு நான் காப்பிடும்படிவாராய். ... ... ௩.

மூ.—கண்ணின்மணற்கொடு தூவிக்காலினாற் பாய்ந்தனையென்றென்று
எண்ணரும்பிள்ளைகள் வந்திட்டிவரால் முறைப்படுகின்றார்
கண்ணனே வெள்ளறைநின்றாய் கண்டாரோடே தீமைசெய்வாய்
வண்ணமேவேலைய தொப்பாய் வள்ளலே காப்பிடவாராய். ச.

பதவுரை.

கண்ணனே! வெள்ளறை நின்றாய்!!—;
கண்டாரோடே— கண்டவரோடெல்லாம்
தீமை செய்வாய்— தீம்புகள் செய்யுமவனே!
‡ வண்ணம்— நிறத்தால்
வேலையது ஒப்பாய்— கடலையொத்தவனே!
[ கடல்போன்ற நிறத்தை யுடையவனே! என்றபடி. ]
வள்ளலே!— உதாரஸ்வபாவனே!
எண் அரும்— கணக்கிடமுடியாத
பிள்ளைகள்— (உன்னாலீடுபட்ட) பெண் பிள்ளைகளான
† இவர்— இவர்கள்
வந்திட்டு— என்முன்னேவந்து
கண்ணில்— "எங்கள் கண்களில்
மணல்— மணலை
கொடு தூவி— கொண்டு தூவி
காலினால்— காலாலே
பாய்ந்தனை— உதைத்தாய்"
என்று என்று — என்று தனித்தனியே உன்னைக்குறித்துச் சொல்லி
முறைப்படுகின்றார் — முறையிடுகின்றார்;
(ஆதலால் இனி அவர்களிடம் போகாமல், ) காப்பு இட வாராய்.

‡ "வண்ணமே" என்கிறவிடத்தில் 'ஏ' என்னுமதும்; † "இவரால்" என்கிற விடத்தில் 'ஆல்' என்னுமதும் அசைச்சொற்கள்.

வ்யா. நான்காம்பாட்டு. கண்ணினித்யாதி. கண்விழித்து விளையாடவொண்ணாதபடி கண்ணிலே மணலைக்கொடுவந்து தூவி. "எங்கள்கண்ணிலே மணலைத்தூவுவானென்" என்றவாறே, கோபித்துக் காலாலே யுதைத்தாயென்று தனித்தனியேசொல்லி. ஒருவரிருவரன்றிக்கே, அஸங்க்யாதரான பிள்ளைகள் உன்னால் ஈடுபட்டமை தோற்றவந்து இவர்கள் முறைப்படாநின்றபடி பாராய்!. கண்ணனே வெள்ளறைநின்றாய். எல்லார்க்கும் ஸுலபனாய்க்கொண்டு திருவெள்ளறையிலே நின்றருளினவனே. கண்டாரோடே தீமை செய்வாய். உன்னோடு ஸம்பந்தமும் ஸ்நேஹமுமுண்டாய் நீ செய்தது பொறுக்கத்தக்கவர்க ளன்றிக்கே, கண்டவர்களோடெல்லாம் தீம்புகளைச்செய்யுமவனே. இப்படி தீமைசெய்ய லாகாதுகாண். வண்ணமேயித்யாதி. நிறத்தால் ஸமுத்ரத்தோடொக்குமவனே. வண்ணம் - நிறம். ஏகா

சம் - அபயம். வேலை - ஸமுத்ரம். அதுவென்றது - வேலையாகிற வதுவென்றபடி. இத்தாம் - தீம்புசெய்தாலும் விடவொண்ணாத வடிவழகையுடையவ னென்கை. வள்ளலே. இவ்வடிவழகை யெனக்கு உபகரித்தவனே! காப்பிடவாராய். ... ... ... ௪.

மூ.—பல்லாயிரவரிவ்வூரிற் பிள்ளைகடீமைகள்செய்வார்
எல்லாமுன்மேலன்றிப்போகா தெம்பிரானீயிங்கேவாராய்
நல்லார்கள்வெள்ளறைநின்றாய் ஞானச்சுடரேயுன்மேனி
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். ௫.

பதவுரை.

நல்லார்கள்— ஸாதுக்கள் வாழ்கிற
வெள்ளறை— திருவெள்ளறையிலே
நின்றாய்— நின்றருளுமவனே!
ஞானம்— ஜ்ஞாநமாகிற
சுடரே— ப்ரபையையுடையவனே!
எம் பிரான்!— என் நாயனே!
இ ஊரில்— இவ்விடைச்சேரியில்
தீமைகள் செய்வார் — தீம்புகளைச் செய்யுமவரான
பிள்ளைகள்— பிள்ளைகள்
பல் ஆயிரவர்— அநேகமாயிரம் பேர்களிருக்கிறார்கள்;
எல்லாம்— அவர்கள் செய்யும்தீமைகளெல்லாம்
உன்மேல் அன்றி— உன்மேலேறுமதொழிய
போகாது— புறப்பு போகாது;
(ஆதலால்,)
நீ இங்கே வாராய்— நீ அவர்களோடு சேராமல் இங்கேவா;
உன் மேனி— உன் திருமேனியை
சொல் ஆர— சொற்கள் நிறையும்படி
நின்று ஏத்தி— ¶ நின்று ஸ்துதித்து
வாழ்த்தி— மங்களாசாஸநம்பண்ணி
சொப்பட— நன்றாக
காப்பு இட வாராய்.

¶ 'நின்று' என்னுமது-வார்த்தைப்பாடு.

வ்யா. ஐந்தாம்பாட்டு. பல்லாயிரவரித்யாதி. பஞ்சலக்ஷம் குடியான இவ்வூரில் தீமை செய்யுமவர்களான பிள்ளைகள் அநேகமாயிரம்பேரிறே. எல்லாமுன்மேலன்றிப்போகாது. தந்தாம் செய்த தீமைகளை நீ செய்தாயென்று உன்மேலே வையாநின்றார்கள். ஆகையால், அவர்கள்செய்த தீமைகளெல்லாம் உன்மேலே ஏறுமதொழிய புறப்புபோகாது. எம்பிரான் நீயிங்கேவாராய். என் நாயனே! உன்மேலே தோஷமேறிடுகிறவ ரிடத்தில்நின்றும், அவர்கள் நினைவும் சொலவும் பொறாதார் வர்த்திக்கிற விங்கேவாராய். நல்லார்கள் வெள்ளறைநின்றாய். உன்பக்கல்தோஷகந்தம்சொல்லுமவர்களை ஸஹியாதே உனக்குஸ்நேஹிகளாய் மங்களாசாஸநபராயிருக்கிறவர்கள் வர்த்திக்கிற திருவெள்ளறையிலே நின்றருளினவனே. ஞானச்சுடரே. ஜ்ஞாநப்ரபையை யுடையவனே. உன்மேனி. அந்தஜ்ஞாநத்துக்கும் ஜ்ஞாநாச்ரயமான ஸ்வரூபத்துக்கும் ப்ரகாசகமான உன்னுடைய திருமேனியை. சொல்லார - நின்றேத்தி. சொல் நிறையும்படி நின்று ஸ்துதித்து. ஸர்வசப்தவாச்யமான விஷயத்திலிறே சொல் ஆருவது. "கவிக்கு நிறைபொருளாய் நின்றான்" என்னக்கடவதிறே. வாழ்த்தி. மங்களாசாஸநம் பண்ணி. சொப்படக் காப்பிடவாராய். நன்றாக நான் காப்பிடவாராய். சொப்பட - நன்றாகவென்றபடி. ... ... ... ... ... ... ...௫.

மூ.—கஞ்சன்கறுக்கொண்டு நின்மேற் கருநிறச்செம்மயிர்ப்பேயை
வஞ்சிப்பதற்குவிடுத்தா னென்பதோர்வார்த்தையுமுண்டு

மஞ்சுதவழ்மணிமாட மதிட்டிருவெள்ளறைநின்றாய்
அஞ்சுவனீயங்குநிற்க வழகனேகாப்பிடவாராய். கூ.

பதவுரை.

மஞ்சு — மேகங்களானவை
தவழ் — தவழும்படியான உயர்த்தியையுடைத்தாய்
மணி — ரத்நங்கள் அழுத்திச்சமைக்கப்பட்டதான
மாடம் — மாடங்களையும்
மதில் — மதிளையுமுடைய
திருவெள்ளறை — திருவெள்ளறையிலே
நின்றாய்! — நின்றருளுமவனே!
கஞ்சன் — "கம்ஸனானவன்
நின்மேல் — உன்மேல்
கறு(ப்பு)கொண்டு — கோபங்கொண்டு
கருநிறம் — கறுத்த நிறத்தையும்
செம்மயிர் — சிவந்தமயிரையுமுடையளான
பேயை — பூதனையை
வஞ்சிப்பதற்கு — வஞ்சநையாலே உன்னை முடிப்பதற்காக
விடுத்தான் — அனுப்பினான்"
என்பது — என்கிற
ஓர் வார்த்தையும் — ஒருவார்த்தையும்
உண்டு — நீ பிறந்தபோதே கேட்டதுண்டு;
(ஆதலால்,)
நீ அங்கு நிற்க — நீ அங்கே நிற்க
அஞ்சுவன் — நான் அஞ்சாநின்றேன்,
அழகனே! — காப்பிடவேண்டும்படியான அழகையுடையவனே!
காப்பு இட வாராய்.

வ்யா. ஆறும்பாட்டு. கஞ்சனித்யாதி. அசரீரிவாக்யம் கேட்டவன்று தொடங்கி, அத்யந்தம் வைரநிர்யாதனாய் அதிசங்கையாலே * மக்களறுவரைக் கல்லிடைமோதி, ஸப்தமகர்ப்பம் நழுவப்போய்த்தென்றுவிட்டு, "அஷ்டமகர்ப்பமானவிதுதப்போதோ பிறப்பது" என்று ஹிம்ஸிப்பதாகப் பார்த்துக்கொண்டிராநிற்கச்செய்தேயும் தாயும் தமப்பனுமொழிய அசலறியாதபடி இருளிலேவந்துபிறந்து, அவ்விருளிலே அங்குநின்றும் திருவாய்ப்பாடியிலே போந்தளித்தை, ஆர்த்தாவசநாதிகளாலே அறிந்த கம்ஸன் உன்விஷயத்திலே மிகவும் சீற்றத்தையுடையனாய்க்கொண்டு. கறுப்பென்கிறவிது "கறு" என்று குறைந்துகிடக்கிறது. கறுப்பு - சீற்றம். கருநிறமித்யாதி. இருள்தா னொருவடிவு கொண்டாற்போலே கறுத்த நிறத்தையும் அக்நிஜ்வாலைபோலே சிவந்த தலைமயிரையுமுடையளாயிருக்கிற பேய்ச்சியை, "நேர்கொடுநேர் சென்றால் அவனை யன்றால் ஸாதிக்கப்போகாது, வஞ்சநத்தால் சென்று ஸாதி" என்று விட்டான் என்பதொரு வார்த்தையுண்டென்கிறபோது. இவ்வார்த்தைதான், ஸ்ரீநந்தகோபர் வஸுதேவர்பக்கலிலே கேட்டுவந்து சொன்னாராதல்; ஸ்ரீமதுரையில் $ பாஷைவழக்க மிக்கேவந்து பிறந்ததாதல்.

மஞ்சித்யாதி. மேகங்களானவை தவழும்படியான உயர்த்தியையுடைத்தாய், மணிமயமான மாடங்களையும் அரணாகப் போரும்படியான மதிளையுமுடைத்தான திருவெள்ளறையிலே *ஸ்திரமாக நின்றவனே. அஞ்சுவன்நீயங்குநிற்க. "பூதனைவந்து வஞ்சநத்தால் உன்னை நலியத்தேடினதும் தன்வசமாயன்றிக்கே கம்ஸன்ப்ரேரிதையாய்" என்று வார்த்தை பிறக்கையால் "அவன் இன்னம் ஆஸுரவர்க்கம், ஏது செய்யுமென்று தெரியாது" என்று பயஸ்தாநமான அவ்விடத்தில் நீ நிற்கிற விதுக்கு நான் அஞ்சாநின்றேன். அழகனே காப்பி

$ உலகவழக்கமென்பதை, பாஷை வழக்கமென்று தமிழர் வழங்கிப்போருவர்கள்.

டவாராய். ஆனபின்பு அங்குநில்லாதே அதிலோகமான அழகையுடையவனே! உன்னுடைய உருக்கு த்ர்ஷ்டிதோஷம் வாராதபடியாகக் காப்பிடவாராய். ... ... ... ... சு.

மூ.—கள்ளச்சகடமேருதுங் கலக்கழியவுதைசெய்த
பிள்ளையரசே! நீ பேயைப்பிடித்து முலையுண்டபின்னை
உள்ளவாறென்றுமறியே ஞௌளியுடைவெள்ளறைநின்றாய்
பள்ளிகோள்போதிதுவாகும் பரமனே காப்பிடவாராய். எ.

பதவுரை.

ஒளி உடை— அழகையுடைத்தான
வெள்ளறை— திருவெள்ளறையிலே
நின்றாய்!— நின்றருளுமவனே!
பரமனே!— பரமபுருஷனானவனே!
கள்ளம்— வஞ்சகமான
சகடும்— சகடத்தையும்
மருதும்— யமளார்ஜுநங்களையும் [யமளம்-இரட்டையானது.]
கலக்கு அழிய— ஸந்திபந்தங்கள் அற்றுப்போம்படி
உதை செய்த— உதைத்த
பிள்ளை அரசே!— பிள்ளைத்தனத்தில் புரையற்று நின்ற பெருமையையுடையவனே!
நீ— நீ
பேய் முலையை பிடித்து— பேய்ச்சியின் முலையைக் கையால்பிடித்து
உண்டபின்னை— சுவைத்த பின்பு
உள்ள ஆறு— உள்ளபடி
ஒன்றும் அறியேன்— ஒன்றுமறிகிறிலேன்;
இது— இக்காலம்
பள்ளி கொள் போது ஆகும்— கண்வளர்ந்தருளுகிற ஸமயமாயிரா நின்றது;
காப்பு இட வாராய்.

வ்யா. ஏழாம்பாட்டு. கள்ளமித்யாதி. கண்வளர்ந்தருளச்செய்தே உன்னை நலிவதாக அஸுராவிஷ்டமாய்வந்த க்ர்த்ரிமசகடத்தையும், தவழ்ந்துபோகாநிற்கச்செய்தே உன்னை நலிவதாக அஸுராவிஷ்டமாய்நின்ற யமளார்ஜுநங்களையும் தன்னுடைய ரூபம் கட்டுக்குலைந்து சிதிலமாய் விழும்படியாக, "காலாற்சகடம் பாய்ந்தான்" என்றும், "ஊருகரத்தினொடுமுந்திய" என்றும் சொல்லுகிறபடியே, திருவடிகளாலும், திருத்துடை, திருத்தோள்களாலும் தள்ளிப்பொகட்ட. பிள்ளையரசே. இந்த அதிப்ரவர்த்திகளைச் செய்யாநிற்கச்செய்தேயும் பிள்ளைத்தனத்தில் புரையற்றிருந்த பெருமையை யுடையவனே. நீபேயைப்பிடித்து முலையுண்ட பின்னை. நீ பேயைத்தாயாக, பிடித்து முலையுண்டபின்பு. உள்ளவாறென்றுமறியேன். உள்ளபடி யொன்றும் அறிகிறேனில்லை. அதாவது- இன்னம் அப்படிக்கொத்தவற்றைச் செய்வுதியாகில், "ஒருநாளல்ல ஒருநாள் அபாயம் விளையும்" என்று பயப்படாநின்றேனென்கை. ஒளியுடையித்யாதி. மாடங்களும் மதிள்களுமான அழகையுடைய திருவெள்ளறையிலே நின்றருளினவனே. பள்ளிகோள்போதிதுவாகும். நீ கண்வளர்ந்தருளும் போதாய்த்து இப்போது. ஸந்த்யாகாலந்தளவன்றிக்கே, மாலை வைகிற்றுக் காணென்றபடி. பரமனே காப்பிடவாராய். ஸௌந்தர்யாதிகளால் உனக்கு மேற்பட்டாரில்லாதவனே! உனக்கொரு குறைவாராதபடியாக நான்காப்பிடவாராய். ... ... ... எ.

மூ.—இன்பமதனையுயர்த்தா யிமையவர்க்கென்றுமரியாய்
கும்பக்களிறட்டகோவே கொடுங்கஞ்சனெஞ்சினிற்கூற்றே
செம்பொன்மதிள்வெள்ளறையாய் செல்வத்திருல்வளர்பிள்ளாய்
கம்பக்கபாலிகாணங்குக் கடிதோடிக்காப்பிடவாராய். அ.

பதவுரை.

இன்பம் அதனை— ஆநந்தத்தை
உயர்த்தாய்— எனக்கு அதிசயிப்பித்தவனே!
இமையவர்க்கு— தேவர்களுக்கு
என்றும்— எந்நாளும்
அரியாய் — அறிதற்கரியனானவனே!
கும்பம்— கும்பத்தையுடைய
களிறு— குவலயாபீடகஜத்தை
அட்ட— கொன்ற
கோவே— ராஜாவானவனே!
கொடு— க்ரூரஸ்வபாவனான
கஞ்சன்— கம்ஸனுடைய
நெஞ்சினில்— மனஸ்ஸிலே
கூற்றே— யமனைப்போல் அச்சத்தை விளை க்குமவனே!
செம் பொன் மதிள்— செம்பொன் போலே விளங்குகின்ற மதிளையுடைய
வெள்ளறையாய் — திரு வெள்ளறையை இருப்பிடமாக வுடையவனே!
செல்வத்தினால்— செல்வச்செருக்கோடே
வளர்— வளர்கின்ற
பிள்ளாய்— பிள்ளையானவனே!
அங்கு— அவ்விடத்தில்
கம்பம் — கண்டவர்களுக்கு நடுக்கத்தைத் தரக்கடவ
கபாலி காண்— கபாலத்தையுடைய ருத்ரனை ஸஞ்சரியாநின்றான்காண்;
(ஆகையால் அந்த க்ஷுத்ர தேவதைகள் உலாவுகிற அந்திப்பொழுதில் அங்கு நில்லாதே,)
காட்டு இட— நான் காட்டும்படி
கடிது— விரைவாக
ஓடி வாராய்— ஓடிவா.

வ்யா. எட்டாம்பாட்டு. இன்பமதனையுயர்த்தாய். உன்னுடைய அநுகூலசேஷ்டிதாநுபவத்தால் வந்த ஆநந்தத்தை எனக்கு மேன்மேலு மதிசயிப்பித்தவனே. "தொழுகையும் இவை கண்ட அசோதை தொல்லையின்பத் திறுதிகண்டாள்" என்னக்கடவதிறே. இமையவர்க்கென்றுமரியாய். தந்தாமுடைய ஜ்ஞாநசக்திகள்கொண்டு உன்னையறிக்கப்பார்க்கும் தேவர்களுக்கு என்றுமொக்க துர்ஜ்ஞேயனானவனே. இத்தால் - கீழ்ச்சொன்ன நீர்மைக்கு எதிர்த்தட்டான மேன்மையைச் சொல்லுகிறது. கும்பக்களிறட்டகோவே. "கும்பமிகுமதயானை" என்கிறபடியே மஸ்தகத்தினுடைய உயர்த்தியையுடைத்தாயிருக்கும் குவலயாபீடத்தை நிரஸித்த சௌர்யத்தையுடைய ராஜாவானவனே. கொடுங்கஞ்சன் நெஞ்சினிற்கூற்றே. உன்பக்கல் என்றுமொக்க க்ரூரனாயிருக்கும் கம்ஸனுடைய மனஸ்ஸில் ம்ருத்யுவைப்போல் பயாவஹனாய்க்கொண்டு தோற்றுமவனே.

செம்பொன்மதிள் வெள்ளறையாய். செம்பொன்போலே மிகவும் ஸ்ப்ருஹணீயமான மதிளையுடைய திருவெள்ளறையை வாஸஸ்தாநமாக வுடையவனே. செல்வத்தினால் வளர் பிள்ளாய். சக்ரவர்த்தி திருமகனைப்போலே பலர்க்கும் நியாம்யனாய் வளருகையன்றிக்கே, ஒருவர் நியமநத்தில் அடங்காமல் வேண்டினபடி செய்து வேண்டினபடி புஜித்து, செல்வச்செருக்கோடே வளருகிற பிள்ளையானவனே. கம்பக்கபாலிகாணங்கு. கண்டவர்களுக்கு நடுக்கத்தை விளைக்கும் உக்ரமான வடிவையும் கபாலத்தையு முடையனான ருத்ரனை ஸஞ்சரிக்கிற ஸ்தலங்காணவ்விடம். அன்றிக்கே, கபாலியென்று - ருத்ரனைச்சொல்லிற்றாகவுமாம். கடிதோடிக் காட்டிடவாராய். அந்த க்ஷுத்ர தேவதைகள் ஸஞ்சரிக்கிற ஸந்த்யாகாலத்தில் அங்கு நில்லாதே, இக்காலத்திலே நான் உனக்குக் காட்டும்படி சடக்கென வோடிவாராய். அ.

மூ.—இருக்கொடுநீர்சங்கிற் கொண்டிட்டெழின்மறையோர் வந்துநின்றார்
தருக்கேனம்பிசந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள்
திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறைநின்றாய்
உருக்காட்டுமேந்திவிளக்கின் றொளிகொள்ளவேற்றுகேன்வாராய். ௯.

பதவுரை,

தேசு உடைய— தேஜஸ்ஸை உடைய
வெள்ளறை— திருவெள்ளறையிலே
நின்றாய்— நின்றருளுமவனே!
நம்பி— நிம்பில் கைவளர்ந்தவனே!
சில நாள்— இன்னும் சில நாளைக்கு
தாய் சொல்லு— தாய்மார் வார்த்தையை
கொள்ளாய்— மேற்கொண்டு நடக்கவேணும்,
இருக்கொடு — புருஷஸூக்தம்முதலிய ரிக்குக்களோடேகூட
நீர்— சுத்தஜலத்தை
சங்கில் கொண்டிட்டு— சங்கிலேகொண்டு
எழில்— விலக்ஷணரான
மறையோர்— வைதிகப்ராஹ்மணர்கள்
வந்து நின்றார்— உனக்கு ரக்ஷையிடுவதாக வந்திரா நின்றார்கள்;

( ஆதலால், )
சந்தி நின்று— நாற்சந்தியிலே நின்று
தருக்கேல்— கர்வியாதேகொள்;
நான்— தாயானநான்
உன்னை— உனக்கு
திருக் காப்பு சாத்த— அழகிய ரக்ஷையிடும் பொருட்டு
உரு— உன் திருமேனியை
காட்டும்— காட்டத்தக்கதான
அந்தி விளக்கு— திருவந்திக்காப்பை
இன்று— இப்போது
ஒளி கொள்ள— ஒளியை உடைத்தாம்படி
ஏற்றுகேன் — ஏற்றாநின்றேன்;
வாராய்— அதைக்கண்டருளும்படி வாராய்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. இருக்கித்யாதி. "வேதப்புனிதவிருக்கை" என்கிறபடியே புருஷஸூக்தாதிகளான ரிக்குக்களோடேகூட சுத்தஜலத்தையும் சங்கிலேகொண்டு, உனக்கு ரக்ஷையிடுகைக்காக விலக்ஷணரான ப்ராஹ்மணர்வந்து நின்றார்கள்; அவர்களைக் கொண்டு ரக்ஷையிடுவித்துக் கொள்ளவேணுங்காண். உங்கள் ஐயரும் அப்படியன்றோ செய்வது, வாராயென்ன; அதுகேளாமல் கர்வித்து சந்தியிலேநின்று விளையாடப்புக்கவாறே தருக்கேல்நம்பி சந்திநின்று என்கிறாள். நிம்பால் பூர்ணனானவனே, க்ஷுத்ரதேவதைகள் ஸந்நிதிபண்ணும் நாற்சந்தியிலேநின்று கர்வியாதேகொள். அவர்கள் ரக்ஷையிடுகைக்காக வந்திலையாகிலும், அந்த ஸ்தலந்தன்னில் நில்லாதேவாராய். தாய்சொல்லுக் கொள்ளாய் சிலநாள். இன்னம் சிலநாள் மாத்ர்வசநபரிபாலநம் செய்யவேணுங்காண். திருக்காப்புநானுன்னைச்சாத்த. நான் உன்னை அழகிதான ரக்ஷையிட. தேசுடைவெள்ளறைநின்றாய். விலக்ஷணரானவர்கள் வர்த்திக்கையால்வந்த தேஜஸ்ஸையுடைத்தான திருவெள்ளறையிலே நின்றருளினவனே. உருக்காட்டு மந்திவிளக்கு. உன் திருமேனியைக்காட்டும் திருவந்திக்காப்பு. ஏற்றுவார் ஏற்றியெடுப்பது நிரதிசயபோக்யமான திருமேனிகாண்கை புருஷார்த்தமாகவிறே; ஆகையாலே உருக்காட்டுமென்கிறது. இன்றொளிகொள்ள வேற்றுகேன்வாராய். இப்போது ஒளியையுடைத்தாம்படி ஏற்றாநின்றேன், இத்தைக்கண்டருளும்படி கடுகவாராய். திருக்காப்பு நானுன்னைச்சாத்த - உருக்காட்டு மந்திவிளக்கின் றொளிகொள்ள வேற்றுகேன் வாராய் என்றந்வயம். ... ... ... ... ... ... ௯.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்றன்னைக்காப்பிட்டமாற்றம்
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. ௫.

பதவுரை.

மாதர்க்கு— ஸ்த்ரீகளெல்லாரிலும்
உயர்ந்த— மேற்பட்டவளான
அசோதை— யசோதைப்பிராட்டி
போது— செந்தாமரைப்பூவில் [ போது - புஷ்பம். ]
அமர்— பொருந்தியிருப்பவளாய்
செல்வம்— " ஸ்ரீ " என்று பேரையுடையவளாய் [ ஸகலஸம்பத்தர்த்திகையாய் ]
கொழுந்து— ப்ரதாநமஹிஷியான பெரிய பிராட்டியாரோடு
புணர்— நித்யஸம்ச்லிஷ்டனாய்
திருவெள்ளறையானை — திருவெள்ளறையில் நிற்குமவனாய்
மகன்தன்னை — தனக்கு புத்ரனாய் நின்ற கண்ணனைக்குறித்து
காப்பு இட்டமாற்றம்-ரக்ஷையிட்டபாசுரங்களை
வேதம்— வேதத்தின்
பயன்— தாத்பர்யத்தை
கொள்ள வல்ல— கைக்கொள்வதில் ஸமர்த்தரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
சொன்ன— அருளிச்செய்த
மாலை— சொல்மாலையான இத்திருமொழியில்
பாதம்— பாட்டுக்கள்தோறும் பின்னடியில் சொன்ன
பயன்— ¶ ப்ரயோஜநத்தை
கொள்ளவல்ல— கைக்கொள்ளவல்ல
பத்தர் உள்ளார்— பக்தியுக்தர்களாய் உள்ளவர்களுடைய
வினை— மங்களாசாஸந விரோதியானபாபம்
போம்— தன்னடையே விட்டோடிப்போம்.

¶ அதாவது- நாலாமடியிற்சொன்ன காப்பிடுகை.

வ்யா. போதமர்செல்வக்கொழுந்து. தனக்குப் பிறந்தகமான தாமரைப்பூவை யிருப்பிடமாக வுடையளாய், ஸ்ரீயாகையாலே ஸகலஸம்பத்ஸமஷ்டிபூதையாய், ப்ரதாநமஹிஷியாயிருக்குமவள் பெரியபிராட்டியார். "பங்கயச்செல்வி" என்கிறே திருநாமம். புணர்திருவெள்ளறையானை. அவள் தாமரைப்பூவை மறந்து, "அகலகில்லேன்" என்கிறபடியே க்ஷணகாலமும் பிரியமாட்டாதே நித்யஸம்ச்லேஷம் பண்ணும்படியாய்க்கொண்டு திருவெள்ளறையிலே நிற்கிறவனை. "கோல் தேடியோடுங் கொழுந்தது" என்கிறபடியே கொழுந்தானதொன்று, ¶உபக்நத்தைவொழிய தரிக்கமாட்டாதாற்போலே யாய்த்து போதமர் செல்வக்கொழுந்தான விவளும் திருவெள்ளறையானாகிற உபக்நத்தோடே புணர்ந்தல்லது தரிக்கமாட்டாதபடி. உபக்நம், ஆதாரமாய் நிற்கும்மாத்ரமாய், அதின்மேலே படர்ந்தகொடியே ப்ரதாநமாயிருக்குமாபோலே யாய்த்து, * செந்தாமரைக்கண்ணர் அப்ரதாநராய் இவளே அவ்வூருக்கு ப்ரதானையாயிருக்கும்படி. மாதர்க்குயர்ந்தவசோதை. "என்னநோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" என்றும், "எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாள்" என்றும் சொல்லும்படி இவனைப் பிள்ளையாகப்பெற்று, இவனுடைய பாலசேஷ்டிதங்களான ஸகலரஸங்களும் அநுபவிக்கப்பெற்றவளாகையாலே லோகத்தில் ஸ்த்ரீகளெல்லாரிலும் உத்கர்ஷையுடையான யசோதைப்பிராட்டி.

¶ உபக்நம் - கொள் கொம்பு.

மகன்றன்னைக் காப்பிட்ட மாற்றம். ரூபகுணசேஷ்டிதங்க ளெல்லாவற்றாலும் அநவரதம் காப்பிடவேண்டும்படியாயிருக்கும் தன்னுடைய புத்ரனானவனை, புத்ரஸ்நேஹமெல்லாந் தோற்ற ரக்ஷித்திட்ட பாசுரங்களை. வேதப்பயனித்யாதி. பகவத்விஷயத்தில் மங்களாசாஸநம் பண்ணுகையே வேததாத்பர்யமென்றறிந்து கைக்கொள்ளவல்ல பெரியாழ்வாரருளிச்செய்த மாலையான வித்திருமொழியில். பாதப்பயனித்யாதி. பாட்டுக்கள்தோறும் பின்னடியிற்சொன்ன ப்ரயோஜநத்தைக் கைக்கொள்ளவல்ல பக்திமான்களாயுள்ளவர்களுடைய மங்களாசாஸந விரோதியாயுள்ள பாபம் தன்னடையே விட்டுப்போம். ... ... ... ... ௰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

———(*)———

அடிவரவு.—இந்திரன் கன்று சேப்பு கண்ணில் பல்லா கஞ்சன் கள்ள மின்ப மிருக்குப் போதமர் வெண்ணெய்.

---

௮ - திருமொழி, ௰ - க்கு, பாட்டு- ௧௨௪௬.

---

அ. ஸி்ழ- பூச்சூட்டிக் காப்பிட்டு, தனக்கு வசவர்த்தியாக்கி, தன்னருகே இவனையுறக்கி, நிர்ப்பரையாய், மாதாவான யசோதைப்பிராட்டி தானுமுறங்கி உணர்ந்து, தன்னுடைய க்ர்ஹகார்யபரவசையாய் வ்யாபரியாநிற்க, இவனுமுணர்ந்துபோய் ஊரிலகங்களிலே புக்கு, அங்குண்டான வெண்ணெய்களை விழுங்கி அவையிருந்த பாத்ரங்களையுருட்டியுடைத்து, காய்ச்சிவைத்த பாலைச் சாய்த்துப்பருகி, அவர்கள் சமைத்துவைத்த பணியாரங்கள் முதலானவற்றை நிச்சேஷமாக வெடுத்து ஜீவித்து, சிறுபெண்ணையழைத்து அவள்கையில் வளையைக் கழற்றிக்கொண்டுபோய் அத்தைக்கொடுத்து நாவற்பழங்கொண்டு, இப்படி தீம்புகளைச் செய்கையாலே அவ்வவ க்ர்ஹங்களிலுள்ளார் தனித்தனியே வந்து முறைப்பட்டு "உன் பிள்ளையை இங்கே யழைத்துக்கொள்ளாய்" என்ற ப்ரகாரத்தையும், இவளும் இவர்கள் சொன்ன வநந்தரத்திலே இவனை இங்கே யழைத்துக்கொள்ளுகைக்காக, பலகாலு மிவனை ஸ்தோத்ரம் பண்ணுவது, 'உன்னைப் பிறர்சொல்லும் பரிபவம் எனக்குப் பொறுக்கப்போகிறதில்லை, வாராய்' என்பதாய் இப்புடைகளிலே பலவற்றையும் சொல்லி இவனை யழைத்த ப்ரகாரத்தையும் ததவஸ்தாபந்நராய்க்கொண்டு பேசி, முன்பு அவன் செய்த க்ரீடைகளெல்லாவற்றையு மநுபவித்து ஹர்ஷடாகிறார்- இத்திருமொழியில். ... ... ... *

முதற்பாட்டு. ஊரில் ஸ்த்ரீகளிலே சிலர் தங்கள் க்ர்ஹங்களிலே இவன் செய்த தீம்புகளை, தாயாரான யசோதைப்பிராட்டிக்கு வந்து சொல்லி, அவனை நீ யிங்கேயழைக்க வேணுமென்றபடியைச் சொல்லுகிறது. ... ... ... ... ... ... *

மூ.—வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டதனோசைகேட்கும்
கண்ணபிரான்கற்ற கல்விதன்னைக் காக்ககிலோமுன் மகனைக்காவாய்
பண்ணிற்புளிப் பெய்தாலொக்கும் தீமைபுரைபுரையாலிவை செய்யவல்ல
அ ்ணற்கண்ணனோர் மகனைப்பெற்ற யசோதைநங்காயுன் மகனைக்கூவாய்.க.

தீமைகளைச் செய்யாநின்றால் எங்ஙனேபொறுப்பது. நீங்கள் ஊரகத்திலுள்ளாரன்றோ இப்படி சொல்லுகிறீர்கள், உங்களோரகத்திலும் இப்படிநின்று இவன்தீம்புகளைச் செய்கிறானாகாதேயென்ன; எங்களகமொன்றிலுமன்று, புரைபுரையாலிவைசெய்யவல்ல. அகந்தோறும் இப்படியிருந்துள்ள தீம்புகளைச் செய்யவல்லவன்காணிவனென்கிறார்கள். புரையாவது - க்ரஹம். வீப்ஸையால் - அகந்தோறுமென்றபடி. ஆல் - அசை. அண்ணல் கண்ணான். அண்ணலென்றது - ஸ்வாமிவாசகம். அண்ணல் கண்ணானென்றது - ஸ்வாமித்வ ஸூசகமான கண்ணையுடையவனென்றபடி. இத்தால் - இவ்விடத்தில், ஸ்வாமியென்றது - க்ஷத்ரியர்க்குத் தலைவனென்றபடியாய், இதுக்கு ப்ரகாசகமான கண்ணையுடையவனென்றதாய்த்து. அன்றிக்கே, அண்ணற்கென்றது - அண்ணனுக்கென்றபடியாய், அண்ணானென்றது - அண்ணியனாகாதவனென்றபடியாய், இப்படி தீம்புகளைச் செய்கையாலே " தன்னம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது அவனிவைசெய்தறியான் " என்கிறபடியே ஸாதுவாய்த்திரியும் நம்பிமூத்தபிரானுக்கும் தனக்கும் ஒருசேர்த்தியில்லாதவனென்னவுமாம். ஓர்மகனைப்பெற்ற அசோதைநங்காய். இப்படி அத்விதீயனான பிள்ளையைப்பெற்றபூர்த்தியை யுடையவளே. உன் மகனைக்கூவாய். இப்படி தீம்புகளைச்செய்து திரியாமே, உன்மகனை உன்பக்கலிலே அழைத்துக்கொள்ளாய். ... ... ... ... ... ... ...க.

அ. இரண்டாம்பாட்டு. இப்படி இவர்கள் சொன்னவநந்தரம் யசோதைப்பிராட்டி. தன்புத்ரனானவனை யழைத்தப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—வருக வருக வருக விங்கேவாமந னம்பீ வருகவிங்கே
கரியகுழல்செய்யவாய் முகத்துக் காகுத்த நம்பீ வருகவிங்கே
அரியனிவனெனக்கின்று நங்கா யஞ்சநவண்ணா வசலகத்தார்
பரிபவம்பேசத்தரிக்ககில்லேன் பாவியேனுக்கிங்கே போதராயே. உ.

பதவுரை.

வாமநன்— * குறள்பிரமசாரியாய்க்கொண்டு
நம்பீ!— அபிமதம்பெற்று பூர்ணனானவனே!
இங்கே— ( அவ்விடத்தைவிட்டு ) இங்கே
வருக வருக வருக— கடுக ஓடிவா;
கரிய குழல்— கறுத்த திருக்குழலையும்
செய்ய வாய்— சிவந்த திருப்பவளத்தையும்
முகம்— திருமுகமண்டலத்தையு முடையனாய்
நம்பீ!— குணபூர்ணனானவனே!
காகுத்த!— ககுத்ஸ்த்தசக்ரவர்த்தியின் வம்சத்தை விளங்கச்செய்யுமவனே!
இங்கே வருக— இங்கே வந்தருளாய்;
நங்காய்!— (" உன்மகனைப் புகழ்ந்தழைக்கிறாயல்லது, அச்சமுறும்படி கடிந்து பேசுகிறிலையே " என்றென்னைப் பொடிகிற ) நங்காய்!
இவன்— இப்பிள்ளையானவன்
எனக்கு— தாயான எனக்கு
இன்று— இப்போது
அரியன்— கைக்கெட்ட முடியாதவன்,
( என்றுசொல்லி : பிள்ளையைக்குறித்து, )
அஞ்சநம்— மைபோன்ற
வண்ணா— திருநிறத்தையுடையவனே!
அசல் அகத்தார்— அயல்வீட்டுப்பெண்கள்
பரிபவம் பேச — 'கள்ளன், தீம்பன்' என்றாற்போலேஉன்னைப்பரிபவித்துப்பேச
தரிக்க கில்லேன் — நான் தரித்திருக்க மாட்டேன்;
பாவியேனுக்கு— உன்மேல் ஊரார்தூறேறக் கேட்கும்படியான பாபத்தைப்பண்ணின என்மனக்கவலை தீரும்படி
இங்கே போதராய்— இங்கே வாராய்

வ்யா. வருகவருகவருகவிங்கே. அங்கேயிருந்து தீம்புகளைச் செய்து கண்டார்வாயாலே பரிபவங்கேளாதே இங்கே வாவென்கிறாள். வருகவென்றது- வாவென்றபடி. அவன் கடுக வருகைக்காகப் பலகாலும் சொல்லுகிறாள். இப்படி யழைத்தவிடத்திலும் வாராமையாலே, வாமநனம்பீ வருகவிங்கே. நீவாமநநம்பியன்றோ, ஆச்ரிதரக்ஷணம் செய்யும் குணபூர்த்தியுடைய நீ யிங்கேவாராயென்கிறாள். அவ்வளவிலும் வாராமையாலே; கரியகுழலித்யாதி. கறுத்த திருக்குழலையும், சிவந்த திருப்பவளத்தையும், உபமாநரஹிதமாய்க்கொண்டு இரண்டுக்கும் நடுவே விளங்காநின்ற திருமுகத்தையுமுடையனாய், மாதாபிதாக்கள் சொல்லிற்றுச் செய்யும் குணபூர்த்தியையுடைய காகுத்தனன்றோ நீ, இங்கே வாராயென்ன; முறைப்பட்டுவந்து நின்றவர்களிலே ஒருத்தி "அஞ்சவுரப்பாள் அசோதை" என்கிறபடியே நீ நியமியாமல் கொள்கொம்பு கொடுத்தன்றோ இப்படி இவன் தீம்பிலே தகணேறவேண்டிற்று, இப்போது மிவனைப் புகழ்ந்துகொண்டு அழைக்கிறவித்தனைபோக்கி, நியமித்து ஒருவார்த்தை சொல்லுகிறிலையேயென்ன; அரியனிவனெனக்கின்று நங்காய் என்கிறாள். பிள்ளைபெற்று ஸ்நேஹித்துவளர்ந்துப்போரும் பூர்த்தியையுடையவளே! இவனெனக்கு இன்றுபெறுதற்கு அரியவனன்றோ, இப்படியிருக்கிறவனை நான் கருக நியமிக்கமாட்டேன்காணென்கை. இப்படி இவள்சொன்னதுக்கு உத்தரம் சொல்லி, மீளவும் தன்பிள்ளையானவனைக்குறித்து பரபரிபவம் பொறுக்கமாட்டாமையாலேவந்த தன் க்லேசத்தைச் சொல்லி யழைக்கிறாள் அஞ்சநவண்ணா. கண்டவர்கள் கண்குளிரும்படி அஞ்சநம்போன்ற திருநிறத்தையுடையவனே. அசலகத்தார் பரிபவம் பேசத் தரிக்ககில்லேன். அசலகத்தாரானவர்கள் "கள்ளன், தீம்பன்" என்றாற்போலே உன்னைப் பரிபவங்கள் சொல்லக்கேட்டுப் பொறுக்கமாட்டுகிறிலேன். பாவியேனுக்கிங்கேபோதராயே. இச்சொல்வுகள் கேட்கும்படியான பாபத்தைப் பண்ணினவெனக்கு இந்தக்லேசம் தீரும்படி இங்கேவாராய். ... ... ... ... ... ... உ.

அ. மூன்றாம்பாட்டு. முன்புத்தையவர்களைவொழிய வேறே சிலர் வந்து, தங்கள் க்ருஹத்திலே அவன் செய்த தீம்புகளைச்சொல்லி, இப்படி அருகிருந்தாரை அநியாயஞ்செய்யலாமோ, உன்பிள்ளையை உன்பக்கலிலே யழைத்துக்கொள்ளாய் என்றப்ரகாரத்தைச் சொல்லுகிறது. ... ... ... ... ... ... *

மூ.—திருவுடைப்பிள்ளைதான் தீயவாறு தேக்கமொன்றுமிலன் தேசுடையன்
உருகவைத்தகுடத்தோடு வெண்ணெயுறிச்சி யுடைத்திட்டுப் போந்துநின்றான்
அருகிருந்தார்தம்மை யநியாயஞ்செய்வதுதான் வழக்கோவசோதாய்!
வருகவென்றுன்மகன்றன்னைக்கூவாய் வாழவொட்டான்மதுசூதநனே. ௩.

பதவுரை.

அசோதாய்— யசோதைப்பிராட்டியே!
திரு உடை— ஐச்வர்யத்தால் குறைவில்லாத
பிள்ளை— உன்பிள்ளையான கண்ணன்
தான்— தான்
தீய ஆறு— தீம்பு செய்யும்வகைகளில்
ஒன்றும்— சிறிதேனும்
தேக்கம் இலன்— தேங்குதலில்லாதவனாய்
தேசு உடையன்— அதுதன்னையே தனக்கு தேஜஸ்ஸாகவுடையனாயிராநின்றான்;
உருக வைத்த— உருக்குவதற்காக அடுப்பில்வைத்த
வெண்ணெய்— வெண்ணெயை
குடத்தொடு— தாழியோடே
உறிச்சி— உறிஞ்சி

உடைத்திட்டு- பாத்ரத்தையுமுடைத்து
போந்து— இவ்வருகே வந்து
நின்றான்— நில்லாநின்றான்;
மதுசூதன் — முன்பு விரோதியானமதுவை நிரஸித்தவன்
வாழ வொட்டான்- இப்போது தானேவிரோதியாய் நின்று, எங்களைக்குடிவாழ்ந்திருக்கவொட்டுகிறிலன்;
அருகு— அண்டையிலே
இருந்தார் தம்மை — குடியிருப்பவரான எங்களை
அநியாயம் செய்வது — உன் பிள்ளையைக் கொண்டு வேண்டிற்றுச் செய்கிறவிது
வழக்கோதான்— ந்யாயந்தானோ?
உன்மகன் தன்னை— உன்பிள்ளையான கண்ணனை
வருக என்று— "என்னண்டைக்குவா" என்று
கூவாய்- அழைத்துக்கொள்.

வ்யா. திருவுடைப்பிள்ளை. ஸ்ரீமானானபிள்ளை. ஐச்வர்யத்தால்குறை வற்றவனென்கை. இத்தால் - ஸ்வக்ருஹத்தில் ஜீவநமற்று வயிறுவாழாமல் செய்கிறானன்றே, செல்வக்கிளாப்பாலே செய்கிற தீம்புகளிறே யிவையென்கை. தான்தியவாறு தேக்கமொன்றுமிலன். தான் தீம்புசெய்யும் ப்ரகாரங்களில் தன் பிறப்பையும் ஐச்வர்யத்தையும் பார்த்து, "நாம் இத்தைச் செய்யும்படியென்" என்று தேங்குதல் அல்பமுமுடையவனல்லன்; தடையறச் செய்யா நிற்குமென்கை. தேசுடையன். தேக்கமில்லாதவளவேயோ, இதுதன்னையே தனக்கு தேஜஸ்ஸாகவுடையனாயிராநிற்கும். இத்தால் - பிறர்சொல்லும் பழிச்சொலவுக்கு அஞ்சானென்கை. இப்படி நீங்கள் சொல்லுகைக்கு இவன்றான் செய்தவையென்னென்ன ; செய்தவற்றில் ஒன்றைச்சொல்லுகிறாள் உருக்கிவைத்தாதி. உருக்குவதாகவைத்த பாத்ரத்தோடே வெண்ணெயையுறிஞ்சி பாத்ரத்தையுமுடைத்து, தான் அல்லாதாரைப்போலே இவ்வருகே போந்துநில்லாநின்றான். அருகித்யாதி. உன்னயலிலே குடியிருந்த வெங்களை உன் பிள்ளையைக்கொண்டு வேண்டிற்றுச் செய்கிறவிதுதான் ந்யாயமோ அசோதாய். வருக வென்றுன் மகன்றன்னைக்கூவாய். உன்னுடையபிள்ளையானவனை, இங்கே நின்று இன்னமும் தீம்புகளைச் செய்யாமல் உன்னருகே வாவென் றழைத்துக்கொள்ளாய். வாழவொட்டான் மதுசூதனனே. நீ இது செய்யாயாகில் எங்களை அவன்குடிசெய்து குடிவாழ்ந் திருக்கவொட்டான்காணென்கை. மதுசூதன் என்றது - முன்பு விரோதிநிரஸநஞ் செய்து போந்தவன், இப்போது, தான் விரோதியாய் நின்று நலியாநின்றானென்கிற வெறுப்பாலே. ... ... ... ௩.

அ. நான்காம்பாட்டு. "வருகவென்றுன் மகன்றன்னைக் கூவாய்" என்றவாறே, இவள் அவனை ஸ்துதிபூர்வகமாக அழைக்க, அவனும் ப்ரீதனாயோடிவந்து அகத்திலே புகுர, இவள் எதிரேசென்று எடுத்துக்கொண்டபடியைச் சொல்லுகிறது.

மூ.—கோண்டல்வண்ணா விங்கேபோதராயே கோயிற்பிள்ளாயிங்கே போதராயே
தெண்டிரைசூழ் திருப்பேர்க்கிடந்த திருநாரணாவிங்கே போதராயே
உண்வேந்தேனம்மமேன்று சோல்லியோடி யகம்புகவாய்ச்சிதானும்
கண்டேதிரே சேன்றேடுத்துக்கோள்ளக் கண்ணபிரான் கற்றகல்விதானே. ௪.

பதவுரை.

கொண்டல்— காளமேகம்போன்ற
வண்ணா- வடிவையுடையவனே!
இங்கே போதாய்- இங்கேவாராய்;
கோயில் — திருவரங்கம் பெரியகோயிலில் வர்த்திக்கிற
பிள்ளாய்— பிள்ளையானவனே!

இங்கேபோதராய்— இங்கேவாராய்;
தெள்— நிர்மலமான
திரை— அலைகளையுடைய புனலாலே
சூழ்— சூழப்பட்ட
திருப்பேர்— திருப்பேர்நகரிலே
கிடந்த— கண்வளர்ந்தருளின
திரு நாரணு—ஸ்ரீமந்நாராயணனே!
இங்கே போதராய்—இங்கே அம்மமுண்ணவா
(என்று கண்ணனைத் தாயானவள் பஹுமாநித்தழைக்க;)
‡ அம்மம் உண்டுவந்தேன்— "நான் அம்ம முண்டுவந்தேன்காண்"
என்று சொல்லி—என்று சொல்லி
ஓடி— விரைவாய்வந்து
அகம் புக— வீட்டுக்குள் நுழைய
ஆய்ச்சிதானும்— தாயானயசோதையும்
கண்டு—இவன் வரவைக்கண்டு
எதிரே சென்று—எதிரேபோய்
எடுத்துக் கொள்ள— மருங்கி லெடுத்துக் கொள்ளும்படி
கண்ணபிரான்—கண்ணபிரான்
கற்ற—அப்பஸித்த
கல்விதான்!—கல்வியிருந்தபடியென்!
என்று மனமகிழுகிறர்.

‡ "அம்மம்" என்பது - முலைப்பாலுக்கும் அந்நத்துக்கும் பர்யாய நாமமென்று அடையவளைந்தான்.

வ்யா. கோண்டலித்யாதி. நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே யிருக்கிற வடிவை யுடையவனே! அங்குநின்று மிங்கே போதராயே. போதராயென்றது- வாராயென்றபடி. கோயில்பிள்ளாயிங்கேபோதராயே. "கொண்டல்வண்ணன்- வெண்ணெயுண்டவாயன்" என்னும்படி கோயிலிலேவஸிக்கிற பிள்ளையானவனே! இங்கே போதராயே. தேண்டிரையித்யாதி. தெளிந்த திரைகளை யுடைத்தான புனலாலே சூழப்பட்ட திருப்பேரிலே கண்வளர்ந்த ஸ்ரீமானுன நாராயணனே! இங்கே அம்மமுண்ணப்போதராயே. உண்டித்யாதி. இப்படி ஸ்துதிபூர்வகமாக அவளழைத்தவாறே, கிட்டவந்து அம்ம முண்டுவந்தேன் காணென்று சொல்லி ஓடிவந்து அகத்திலேபுகுந்து, தாயாரான இவளும் இவன்வந்த †வாத்தையும் முகத்தில் ப்ரஸந்நதையையும்கண்டு ப்ரீதையாய் எதிரேசென்று எடுத்துக்கொள்ள, கண்ணபிரானுனவன் கற்றகல்வி யிருந்தபடியே! என்று ப்ரீதராகிறர்.

அன்றிக்கே, ஆய்ச்சிதானும் கண்டெதிரேசென்றெடுத்துக்கொள்ளவென்றது- பிறர் சொல்லுமாபோலே தன்செயலைத் தானேசொன்னபடியாய், அம்மமுண்ணவரவேணுமென்றழைத்தால் அருகேவந்து நின்று, 'வேணும்,- வேண்டா' என்னவமைந்திருக்க, உண்டுவந்தேனம்மம் என்றபடியும், ஓடிவந்து உள்ளேபுகுந்தபடியும், அந்த உக்திவ்ருத்திகளைக் கண்டு வித்தையாய், தாயாரானதானும், முன் தான்செய்த தீம்புகளைமறந்து எதிரேவந்து எடுத்துக்கொள்ளும்படியாகப் பண்ணினபடியும், இவை யெல்லாவற்றையும் அநுஸந்தித்து, கண்ணபிரான் கற்றகல்விதானேயென்று- ஒருவன் கற்றகல்வி யிருந்தபடியே! இப்பருவத்திலே இத்தனை விரகெல்லாம் இவனறிவதே!என்று தன்னிலே ச்லாகித்து ப்ரீதையாகிறுளென்று யோஜிக்கவுமாம். இப்படியானபோது, பூர்வோத்தரார்த்தங்கள் சேர்ந்துகிடக்கும்....ச.

அ. ஐந்தாம்பாட்டு. இப்படி க்ருஹத்திலே வந்து புகுந்து இவளை யுகப்பித்து நின்று அவன் முன்போலே அசலகங்களிலேபோய் தீம்புகளைச்செய்ய, அதிலே ஒருத்தி வந்து தன்னகத்தில் அவன் செய்த தீம்புகளைச் சொல்லி முறைப்பட்டு, உன்மகனை யிங்கே யழைத்துக்கொள்ளா யென்றபடியைச் சொல்லுகிறது. ... ... ... ... *

† வாத்து - வரவு.

ரு.—பாலைக்கறந்தடுப் பேறவைத்துப் பல்வளையாளென் மகளிருப்ப
மேலையகத்தே நெருப்புவேண்டிச் சென்றிறைப்பொழுதங்கே பேசிநின்றேன்
சாளக்கிராமமுடையநம்பி சாய்த்துப்பருகிட்டுப் போந்துநின்றான்
ஆலைக்கரும்பின் மொழியன்ன யசோதைநங்காயுன் மகனைக்கூவாய். ரு.

பதவுரை.

ஆலை— ஆலையிலிட்டு ஆட்டத்தக்க
கரும்பு அன்ன— கரும்பையொத்ததாய்
இன்— மதுரமான
மொழி— வாக்கையுடையளாய்
அசோதை நங்காய்— ஸ்த்ரீத்வ பூர்த்தியை யுடையளான அசோதாய்!
பல் வளையாள்— பலவளைகளையுடைய
என் மகள்— என்மகளானவள்
பாலை கறந்து— பசுவின்பாலைக்கறந்து
அடுப்பு— அடுப்பின்மேலே
ஏறவைத்து— மிடாக்களோடு ஏற்றிவைத்து
இருப்ப— அதற்குக் காவலாயிருக்க
மேலை அகத்து— உன் அகத்துக்கு மேலண்டைவீட்டிலே
நெருப்பு வேண்டி சென்று— இது காய்ச்சுவதற்கு நெருப்பெடுத்து வருவதாகப் போய்
இறைப்பொழுது— க்ஷணகாலம்
அங்கே— அவ்வீட்டில்
பேசி நின்றேன்— பேசிக்கொண்டு பாராக்காய் நின்றேன்;
(அப்போது,)
சாளக்கிராமம்— ஸ்ரீஸாளக்ராமத்தை
உடைய— இருப்பிடமாகவுடையனாய்
நம்பி — ஒன்றாலும் குறைவில்லாதவனாயிருக்குமவன்
சாய்த்து— அப்பாத்ரத்தைச்சாய்த்து
பருகிட்டு— அதிலிருந்த பாலைக்குடித்து
போந்து நின்றான்— கடக்கவந்து நில்லாநின்றான்;
(ஆகையால் இனி அவன் எங்களகத்தில் தீம்புசெய்யாதபடி,)
உன்மகனை— உன்பிள்ளையான கண்ணனை
கூவாய் — உன் அருகிலழைத்துக்கொள்.

வ்யா. பாலைக்கறந்து. *வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்களினுலுண்டான பாலையெல்லாம்கறந்து. அடுப்பேறவைத்து. அந்தப்பாலையெல்லாம் காய்ச்சுகைக்காக மிடாக்களோடும் தடாக்களோடும் அடுப்பிலே ஏற்றிவைத்து. பல்வளையாளென்மகளிருப்ப. பலவளைகளையுமுடையளான வென்மகள் இதுக்குக் காவலாக இராநிற்க. மேலையகத்தே நெருப்புவேண்டிச் சென்று. உன்னகத்துக்கு மேலையானவகத்திலே இது காய்ச்சுகைக்கு நெருப்பெடுத்துக் கொள்வதாகப்போய். இறைப்பொழுதங்கே பேசிநின்றேன். க்ஷணகாலமங்கே அவர்களோடே வார்த்தைசொல்லி நின்றேன். இதுவே அவகாசமாக; சாளக்கிராமமித்யாதி. ஸ்ரீஸாளக்ராமத்திலே நித்யவாஸம்செய்கிற பூர்ணன், அபூர்ணரைப்போலே அத்தனை பாத்ரங்களையும் மறித்துப்பருகி, தான், அல்லாதாரைப்போலே இடையப்போந்து நில்லாநின்றான். ஆலைக்கரும்பித்யாதி. ஆடுகைக்கு பக்வமான கரும்புபோலே இனிதாயிருக்கிற மொழியையும் பூர்த்தியையு முடையவளே. உன்மகனைக்கூவாய். உன் பிள்ளையானவனை, அங்குநின்று தீமைசெய்யாதே உன்பக்கலிலே வரும்படி விரைந்தழையாய். ... ... ... ரு.

அ. ஆறும்பாட்டு. "அசோதைநங்காய் உன்மகனைக்கூவாய்" என்றவாறே, தன் மகனை இவளழைத்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—போதர்கண்டாயிங்கே போதர்கண்டாய் போதரேனென்னாதே போதர்கண்டாய்
ஏதேனுஞ்சொல்லியசலகத்தா ரேதேனும் பேசநான் கேட்கமாட்டேன்
கோதுகுலமுடைக்குட்டனேயோ குன்றெடுத்தாய் குடமாடேகூத்தா
வேதப்பொருளே யென்வேங்கடவா வித்தகனே யிங்கேபோதராயே. ௬.

பதவுரை.

கோது குலம் உடை—எல்லாராலும் கொண்டாடத்தக்க சீரையுடைய
ஓ குட்டனே— வாராய் பிள்ளாய்!
குன்று— கோவர்த்தநபர்வதத்தை
எடுத்தாய்— குடையாக எடுத்தவனே!
குடம் ஆடி— குடமெடுத்தாடின
கூத்தா— கூத்தையுடையவனே!
வேதம்— ஸகலவேதங்களுக்கும்
பொருளே— ப்ரதிபாத்யனானவனே!
என்— என்னுடையவனென்னும்படி
வேங்கடவா— திருவேங்கடமலையில் நிற்கிறவனே!
வித்தகனே— ஆச்சர்யசக்தியுக்தனானவனே!
இங்கே— (அவ்விடத்தைவிட்டு) இங்கே
போதர் ‡ கண்டாய்
போதர்கண்டாய்— } விரைந்து ஓடிவா;
போதரேன் என்னாதே — வரமாட்டேனென்று சொல்லாமல்
போதர் ‡ கண்டாய்— வாராய்;
அசல் அகத்தார்— அசல் வீட்டுக்காரர்கள்
ஏதேனும் — உன்விஷயமாக வாக்கால் சொல்ல வொண்ணாத தோஷங்களை
சொல்லி— தங்களிலே சொல்லி
ஏதேனும்— என் காதால் கேட்கவும் வாயாற் சொல்லவுமொண்ணாதவற்றை
பேச— சொல்ல
நான்— உனக்குத்தாயானநான்
கேட்க மாட்டேன்— கேட்டுப் பொறுக்க மாட்டேன்;
(ஆதலால்,)
இங்கே போதராய்— இங்கேவாராய்.
என்று யசோதை கண்ணனை அழைக்கிறாள்.

‡ "போதரு" என்கிறவிது - "போதர்" என்று கிடக்கிறது.

வ்யா. போதர்கண்டாயிங்கே. அங்கேநின்று தீம்புசெய்யாதே இங்கே போருகிடாய். போதர்என்றதுபோதருவென்றபடி. போதர்கண்டாய். இவன் கடுகவருகைக்காக மீளவும் ஒருக்கால் சொல்லுகிறாள். இப்படி இவளழைக்கச்செய்தே அவன் வரமாட்டேனென்ன; போதரேனென்னாதே போதர்கண்டாய். வாரேனென்னாதே வாகிடா யென்கிறாள். என்செய்யத்தான் நீ இப்படி நிர்ப்பந்தித் தழைக்கிறதென்ன; ஏதேனும் சொல்லி அசலகத்தார் ஏதேனும் பேச நான் கேட்கமாட்டேன். அசலகத்தாரானவர்கள் உன்விஷயமாக வாசாமகோசரமான தோஷங்களைத் தங்களிலேசொல்லி, அவ்வளவுமன்றிக்கே, என் பக்கலிலே வந்து என் செவியாற் கேட்கவும் வாக்காற் சொல்லவுமொண்ணாதவற்றைச் சொல்ல நான் கேட்டிருக்கமாட்டேன். கோதுகுலமுடைக்குட்டனே! ஓ!!. எல்லாரும் கொண்டாடும் சீரையுடைய பிள்ளாய். இப்படியிருந்துள்ள நீ எல்லாரும் பழிக்கும்படியாவதே! என்று விஷண்ணையாய், ஓ! என்கிறாள்.

குன்றெடுத்தாய். கோக்களையும் கோபகுலத்தையும் ரக்ஷித்தவனே. குடமாடேகூத்தா. கோஸம்ருத்தியால் வந்த ... டாகக் குடக்கூத்தாடினவனே. குடமாடேகூத்தனென்றது- வனென்றபடி. இவ்விரண்டாலும்- இக்குலத்துக்கு

ஐச்வர்யமே உனக்கு ஐச்வர்யமென்று நினைத்திருக்குமவனன்றே, நீ இதுக்கீடாக வர்த்திக்க வேணுங்காணென்கை. வேதப்பொருளே. (க) "[illegible]" என்கிறபடியே ஸகல வேதப்ரதிபாத்யனானவனே. என்வேங்கடவா. அப்படியே சாஸ்த்ரத்திலே கேட்டுப்போகையன்றிக்கே, கண்ணாலே காணலாம்படி * வானோர்க்கும் வைப்பான திருமலையிலே இரண்டு விபூதியிலுள்ளாரையும் ஒருதுறையிலே அநுபவிப்பித்துக்கொண்டு என்னுடையவனென்னும்படி நிற்கிறவனே. வித்தகனே. இப்படி நிற்கையாலே விஸ்மயநீயனானவனே. இங்கேபோதராயே. உன்னுடைய குணஹாநி சொல்லுவார் வர்த்திக்கிறவிடத்தில் நின்றும் உன்குணமே பேசாநிற்கும் நானிருக்கிறவிடத்தில் வாராய். ... ... ௬.

அ. ஏழாம்பாட்டு. "வித்தகனே யிங்கேபோதராயே" என்று இவளழைத்தவிடத்தில் வாராமல் வேறோரகத்திலே போய்ப்புக்கு, அவர்கள் வ்ரதார்த்தமாகச் சமைத்துவைத்த பதார்த்தங்களையடைய ஜீவிக்கையாலே, ஒருத்திவந்து அத்தைச் சொல்லி முறைப்பட்டு உன்மகனை அழைத்துக்கொள்ளா யென்றபடியைச் சொல்லுகிறது.

மூ.—சேந்நெலரிசி சிறுபருப்புச் செய்தவக்கார நறுநெய்பாலால்
பன்னிரண்டு திருவோண மட்டேன் பண்டுமிப்பிள்ளைபரிசறிவன்
இன்னமுகப்பனனென்றுசொல்லி யெல்லாம்விழுங்கிட்டுப் போந்துநின்றான்
உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளா யிவையுஞ்சிலவே. ௭.

பதவுரை.

அசோதை நங்காய்;
செம் நெல் அரிசி— செந்நெலரிசியும்
சிறு பருப்பு— சிறு பயற்றம்பருப்பும்
செய்த— பாகதோஷமற காய்ச்சித்திரட்டின
அக்காரம்— கருப்புக்கட்டியும்
நறு நெய்— மணமிக்க நெய்யும்
பாலால்— பாலுமாகிற இவற்றாலே
பத்து இரண்டு திருவோணம் — பன்னிரண்டு திருவோணம்
அட்டேன்— நோன்புக்கு உறுப்பாக பாயஸாபூபங்கள் சமைத்தேன்;
பண்டும்— முன்பும்
இ பிள்ளை— இப்பிள்ளையின்
பரிசு— தன்மையை
அறிவன்— அறிவேன்;
எல்லாம் — திருவோணவ்ரதத்துக்காகச் சமைத்தவற்றையெல்லாம்
விழுங்கிட்டு— நிச்சேஷமாக விழுங்கி
( அவ்வளவிலும் அத்ருப்தனாய், )
இன்னம்— "இன்னமும்
நான் உகப்பன்— நான் விரும்பாநின்றேன்"
என்று சொல்லி— என்று சொல்லி
போந்து நின்றான் — அவ்விடம்விட்டுப் போந்து ஒன்றுமறியாதவன்போல் நில்லாநின்றான்;
( ஆதலால், )
உன் மகன் தன்னை— உன் பிள்ளையை
கூவிக்கொள்ளாய்— அழைத்துக்கொள்;
இவையும்— பிள்ளைகளைத் தீம்புசெய்ய விட்டிருக்கிறவிதுவும்
சிலவே— ஒரு பிள்ளைவளர்க்கையோ?
என்றுசேரியிற் பெண்கள் முறையிடுகிறபடி.

வ்யா. சேந்நெலித்யாதி. ¶ உரநிலத்திலே பழுதற விளைந்து சிவந்து சுத்தமான செந்நெலரிசியும், அப்படிப்பட்ட நிலத்தில் விளைந்த சிறுபயறு நெரித்துண்டாக்கின பருப்பும்,

(க) "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:." ¶ உரநிலம்-ஸாரக்ஷேத்ரம்.

பாகதோஷம் வாராதபடி காய்ச்சித்திரட்டி நன்றாகச்செய்த கருப்புக்கட்டியும், நற்பசுவின் பாலாய் நால் ஒன்றாம்படி காய்ச்சித்தோய்த்துச் செவ்விகுன்றாமல் கடைந்து உருக்கின நெய்யும், நற்பசுக்களில் கறந்தபாலுமாகிற இவற்றினாலே. பன்னிரண்டு திருவோணமட்டேன். பன்னிரண்டு திருவோணம் வ்ரதாங்கமாக பாயஸாபூபங்கள் சமைத்தேன். பண்டு மிப்பிள்ளை பரிசறிவன். முன்பும் இப்பிள்ளைப்ராகாரமறிவன். அதாவது - திருவோணவ்ரதத்துக்கென்று ஆரம்பித்து இவை சமைத்தபோதே, இவனும் திம்பிலே ஆரம்பித்து, தேவார்ச்சநம் செய்வதுக்குமுன்னே இவற்றைவாரி ஜீவித்துவிடுமென்கை. இப்போது மப்படியே-எல்லாம் விழுங்கிட்டு. இத்திருவோணத்துக்கென்று சமைத்தவையெல்லாம் ஒன்றும் சேஷியாதபடி விழுங்கி. இன்னமுகப்பன்நானேன்றுசொல்லி. அதிலும் த்ர்ப்திபிறவாமல் இன்னமும் வேண்டியிருப்பன் நானென்றுசொல்லி. போந்துநின்றான். அர்யபாரைப்போலே அங்குநின்றும்விடப் போந்துநில்லாநின்றான். உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கோள்ளாய். யசோதைப் பிராட்டீ! அங்குத்தீமை செய்யாமல் உன்னுடைய பிள்ளையை உன்பக்கலிலே அழைத்துக் கொள்ளாய். இவையும்சிலவே. பிள்ளைபெற்றார்க்கு, பிள்ளை தீம்புசெய்யாமல் பேணிவளர்க்க வேண்டாவோ, இவையும் சிலபிள்ளைவளர்க்கையோ. ... ... ... எ.

அ. எட்டாம்பாட்டு. "உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளாய்" என்றவாறே, தன்மகனை அவளழைத்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—கேசவனே யிங்கேபோதராயே கில்லேனென்ன திங்கேபோதராயே
நேசமிலாதா ரகத்திருந்து நீ விளையாடாதே போதராயே
தூசனஞ்சொல்லுந் தொழுத்தைமாருந் தொண்டருநின்ற விடத்தினின்றும்
தாய்சொல்லுக்கொள்வது தன்மங்கண்டாய் தாமோதரா விங்கேபோதராயே.

பதவுரை.

கேசவனே— அழகிய மயிர்முடியையுடையவனே!
இங்கே போதராய்— இங்கேவாராய்;
கில்லேன் என்னது — 'வரமாட்டேன்' என்னமல்
இங்கே போதராய் - ;
நீ — இங்கு சற்றுவிளையாடி வருகிறேனென்கிற நீ
நேசம் இலாதார்— உன்திறத்தில் ஸ்நேஹமற்றவர்களுடைய
அகத்து இருந்து — அகத்திலே நின்று
விளையாடாதே — விளையாட்டொழிவதுமன்றி,
தூசனம் சொல்லும்— உன்னை தூஷிக்கிற
தொழுத்தைமாரும் — இடைச்சிகளுக்கு அடிச்சிகளானவர்களும்
தொண்டரும்— இடையர்க்கு அடியானவர்களும்
நின்ற— நிற்கிற
இடத்தில் நின்றும்— இடங்களில் நின்றும்
போதராய்— இங்கேவாராய்;
தாய் சொல்லு— தாய்வார்த்தையை
கொள்வது— மேற்கொண்டு நடப்பது
தன்மம் கண்டாய்— தர்மங்காண்;
தாமோதரா— தாமோதரனே!
இங்கே போதராய்.

வ்யா. கேசவனே யிங்கேபோதராயே. ப்ரசஸ்தகேசனானவனே! அசைந்து வருகிற குழல்களும் நீயுமாய் நடந்துவரும்போதையழகை நானநுபவிக்கும்படி அங்குநின்று மிங்கே வாராய். இப்படி இவளழைத்தவிடத்தில் "நானிப்போது வரமாட்டேன்" என்ன;

கில்லேனென்று திங்கேபோதராயே. மாட்டேனென்னாதே இங்கே வாராயென்கிறாள். நானி க்கே சற்றுப்போதிருந்து விளையாடி வருகிறேனென்ன; நேசமித்யாதி. விளையாடும்போ தைக்கு உனக்கு வேறிடமில்லையோ; உன்பக்கல் ஸ்நேஹமில்லாதாரகத்திலே யிருந்து நீ விளையாடாதே இங்கேவாராய். தூசனம்சொல்லும் தொழுத்தைமாரும் தொண்டரும் நின்றவிட த்தில் நின்றும். இவ்வளவேயோ? இடைச்சிகளுக்கு அடிச்சிகளாய்ப் போருகிறவர்களும் இடையர்க்கு அடியராய்ப்போருகிறவர்களும் உனக்குச்சொல்லுகிற தூஷணங்களுக்கு ஓரவதி யில்லைகாண், அவர்கள் நின்றவிடத்தில் நில்லாதேபோராய். இப்படி சொன்னவிடத்திலும் அவன் வாராமையாலே, தாய்சொல்லுக்கொள்வது தன்மங்கண்டாய் என்றிரக்கிறாள். பெற்ற தாய்வசநங் கொள்ளுகை பிள்ளைகளுக்கு தர்மங்காண்; நீ தான், †பிறந்தபோதே மாத்ர்வசந பரிபாலநம் பண்ணினவனன்றோ. தாமோதரா. கயிற்றையிட்டு வயிற்றிலே கட்டலாம்படி எனக்குத்தான் முன்பு பவ்யனாயிருந்தவனுமன்றோ. இங்கேபோதராயே. ஆனபின்பு, என் சொல்லை¶மறாதே இங்கேவாராய். ... ... ... ... ... ... அ.

அ. ஒன்பதாம்பாட்டு. " தாமோதரா விங்கேவாராய் " என்றழைத்தவிடத்திலும் வாராதே வேறேயொரு க்ர்ஹத்திலே போய்ப்புக்கு, அவர்கள் சமைத்துவைத்த அபூபாதி களையுடைய வாரிஜீவிக்கை முதலான தீம்புகளைச்செய்ய, அவ்வகத்துக்குக் கடவளானவள் வந்து முறைப்பட்டு " உன்பிள்ளையை யிங்கேயழைத்துக்கொள்ளாய் " என்றபடியைச் சொல்லுகிறது.

மூ.—கன்னலிலட்டுகத்தோடுசீடை காரெள்ளிலுண்டை கலத்திலிட்டு
என்னகமேன்றுநான் வைத்துப்போந்தேனிவன் புக்கவற்றைப்பெறுத்திப்போந்தான்
பின்னுமகம்புக்குறியைநோக்கிப் பிறங்கொளிவெண்ணெயுஞ் சோதிக்கின்றான்
உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளா யிவையுஞ்சிலவே. கூ.

பதவுரை.

அசோதைநங்காய்! - ;
கன்னல்- கருப்புக்கட்டிப் பாகுடன்சேர்ந்த
இலட்டுகத்தோடு— லட்டுகத்தோடு
சீடை— சீடையும்
கார் எள்ளில் உண்டை— காரெள் இட்டு வாரின எள்ளுண்டையும்
கலத்தில்— கலத்திலே
வைத்திட்டு— வைத்து
என் அகம் என்று— 'என்னகமாகையால் இங்குப் புகுவாரில்லை' என்றுநினைத்து
நான் போந்தேன் — நான் வெளியேவந் தேன்;

( அவ்வளவில், )
இவன்— இப்பிள்ளையானவன்
புக்கு— அங்கேபுகுந்து
அவற்றை— அப்பணியாரங்களை
பெறுத்தி— ‡ நான்பெறும்படி பண்ணி
போந்தான்— வந்தான்;
பின்னும்— மறுபடியும்
அகம்புக்கு— வீட்டிலேபுகுந்து
உறியை நோக்கி— உறியைப்பார்த்து

‡ இது வ்யதிரேகோக்தி: அதாவது - அவற்றில் எனக்கு ஒன்றும் சேஷியாதபடி தானே களவுகண்டானென்கை.

† சதுர்ப்புஜரூபோபஸம்ஹாரணத்தைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்.
¶ மறாதே - இகழ்கரியாமல்.

பிறங்கு ஒளி— மிகவும் செவ்வியையுடைய வெண்ணெயும்— பசு வெண்ணெயும் உண்டோ வென்று
சோதிக்கின்றான்— ஆராயாநின்றான்;
(இத்தீம்புகளெனக்குப் பொறுக்கப் போகாமையால்,)

உன் மகன்தன்னை— உன்பிள்ளையை
கூவிக்கொள்ளாய் — அழைத்துக்கொள்;
இவையும் — இப்படி இவனைத்தீம்பிலே கைவளர விட்டிருக்கிறவிதுவும்
சிலவே— ஒரு பிள்ளைவளர்க்கையோ?
என்றுசேரியிற்பெண்கள் முறையிடுகிறபடி.

வ்யா. கன்னல். கருப்புக்கட்டி. இது, மேற்சொல்லுகிறவை யெல்லாவற்றோடும் அந்வயித்துக் கிடக்கிறது. கருப்புவட்டோடே சமைத்தவை, வட்டிலுங்காட்டில் ரஸிக்குமிறே. இலட்டுகத்தோடு சீடை காரெள்ளிலுண்டை. இலட்டுகமாவது - ஓரபூபவிசேஷம். அத்தோடேசீடையையும், காரெள்ளிட்டுவாரின எள்ளுண்டையையும். கலத்திலிட்டு. அவற்றுக்கநுரூபமான பாத்ரங்களிலே யிட்டு. என்னகமென்றுநான் வைத்துப்போந்தேன். என்னகமன்றோ, இங்குப் புகுவாரில்லையே யென்றுவைத்து நான் புறம்போந்தேன். இவன்புக்கவற்றைப் பெறாத்திப்போந்தான். நான் போந்ததே அவகாசமாக இவன் சென்று புக்கு அவற்றை நான் பெறும்படி பண்ணிப்போந்தானென்று வ்யதிரேகமாகச் சொல்லுகிறாள். அதாவது - அவற்றில் எனக்கொன்றும் லபியாதபடி தானே ஜீவித்துப்போந்தானென்கை. பின்னுமகம்புக்குறியை நோக்கி. அதுபோராமல் மீண்டும் அகத்திலேபுக்கு உறியைப்பார்த்து. பிறங்கொளி வெண்ணெயும் சோதிக்கின்றான். மிகவும் செவ்வியையுடைத்தான வெண்ணெயுமுண்டோவென்று ஆராயாநின்றான். உன்மகனித்யாதி. யசோதைப்பிராட்டீ! உன்னுடைய பிள்ளையானவனை அங்குநின்றும் தீம்புசெய்யாதே உன்னருகேயழைத்துக்கொள்ளாய். இவையும்சிலவே. இப்படி யிவனைத்தீம்பிலே கைவளரவிட்டிருக்கிற விவையும் ஒருபிள்ளை வளர்க்கையோ.

அன்றிக்கே, உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளாயென்று - குணபூர்த்தியையுடைய யசோதாய்! அவனும் உன்னைப்போலே குணபூர்த்தியையுடையனும்படி உன்னருகே யழைத்துக்கொள்ளா யென்றவாறே, என்னுடைய குணபூர்த்தியும் அவனுடைய தோஷங்களும் சொல்லிக்கதறுகையோ உங்களுக்குள்ளது, சிறுபிள்ளைகள் படலைத்திறந்(து)த குரம்பைகளிலேபுக்கு கண்டவற்றைப் பொறுக்கி வாயிலேயிடக்கடவதன்றோ, உங்கள் பிள்ளைகள்தானோ உங்களுக்கு வசவர்த்திகளாய்த் திரிகிறது என்று இவள் இவர்களை வெறுத்துவிடுகையாக, அவன் செய்தவற்றுக்குமேலே, இவையும் சிலவேயென்று - இவள் இன்னாப்பாலே சொல்லுகிறாளாகவுமாம். ... ... ... ... ... கூ.

அ. பத்தாம்பாட்டு. "உன்மகன்றன்னை யசோதை நங்காய் கூவிக்கொள்ளாய்" என்று ஒருத்திசொல்லி வாய்மாறுவதுக்குமுன்னே வேறே யொருத்திவந்து, தன்னுடைய க்ருஹத்தில் இவன் செய்த தீம்புகளை முறைப்பட்டபடியைச் சொல்லுகிறது.

மூ.—சொல்லிலரசிப்படுதிநங்காய் சூழலுடையனுன்பிள்ளைதானே
இல்லம்புகுந்தேன் மகளைக்கூவிக் கையில்வளையைக் கழற்றிக்கொண்டு
கொல்லையினின்றுங் கொணர்ந்துவிற்ற வங்கொருத்திக் கவ்வளைகொடுத்து
நல்லனநாவற்பழங்கள்கொண்டு நானல்லேனென்று சிரிக்கின்றானே. ௰.

பதவுரை.

நங்காய் — குணபூர்த்தியையுடைய யசோதாய்!
சொல்லில் — உன்மகன் செய்த தீம்புகளைச் சொன்னால்
அரசிப்படுதி — கோபியாநின்றாய்;
உன் பிள்ளைதான் — உன் பிள்ளையானவன்
சூழல் உடையன் — பற்பல வஞ்சகச் செய்கைகளை உடையனாயிராநின்றான்;
இல்லம் புகுந்து — என் வீட்டில்நுழைந்து
என்மகளை — என் பெண்பிள்ளையை
கூவி — பேர் சொல்லியழைத்து
கையில் — அவள்கையிலிருந்த
வளையை — அடையாளவளையை
கழற்றிக்கொண்டு — கழற்றிக்கொண்டுபோய்
கொல்லையில் நின்றும் — கொல்லையிலிருந்து
கொணர்ந்து — தெருவில் கொண்டுவந்து
அங்கு — அவ்விடத்திலே
விற்று — நாவற்பழம்விற்ற
ஒருத்திக்கு — ஒருபெண்ணுக்கு
அவளை — அந்தவளையை
கொடுத்து — கொடுத்து
நல்லன — தன்மேனியோடொத்து அழகிதான
நாவல் பழங்கள் — நாவற்பழங்களை
கொண்டு — வாங்கிக்கொண்டு
(போரும் போராதென்று சொல்லுகிறவளவிலே நான் கண்டு 'இவ்வளை இவளுக்கு நீயோ தந்தாய்?' என்று கேட்க;)
நான் அல்லேன் என்று — 'இவ்வளை கொடுத்தவன் நானல்லேன்காண்' என்று சொல்லிக்கொண்டு
சிரிக்கின்றான் — சிரியாநின்றான்.

வியா. சொல்லிலரசிப்படுதி நங்காய். முன்பே ஒருத்திசொன்னதுக்குமேலே புண்ணின்மேல் புண்ணாக இவளுமொருத்திவந்து தன்மகன் குறைகளைச் சொல்லப்புக்கவாறே, இதுவுமொரு சிறுமையோ! என்று தாயான யசோதைப்பிராட்டி குபிதையாக; நங்காய்! உன் பிள்ளை செய்தவற்றைச்சொல்லில் நீ கோபியாநின்றாய். சூழலுடையன் உன்பிள்ளைதானே- உன்பிள்ளையானவன்றானே துஸ்ஸஹமாய் உனக்குவந்து சொல்லியல்லது நிற்கவொண்ணாதபடியான சூழல்களை யுடையனாயிராநின்றான். சூழலாவது-சூழ்ச்சி. அதாவது- நாநாவான க்ரித்ரிமவகைகள். அவற்றில் இவனுக்கில்லாதது இல்லைகாணென்ன; இப்படி சொல்லுகைக்கு அவன் இப்போது துஸ்ஸஹமாகச் செய்ததுதான் ஏது, அத்தைச் சொல்லென்னச் சொல்லுகிறாள்மேல்; இல்லம் புகுந்தேன் மகளைக்கூவி. என்னகத்திலே புகுந்து என்மகளைப் பேரைச்சொல்லியழைத்து. கையில்வளையைக் கழற்றிக்கொண்டு. அவள்கையில் ‡அடையாளவளையைக் கழற்றிக்கொண்டுபோய், கொல்லையித்யாதி. கொல்லையில் நின்றும் கொடுவந்து, அங்கே நாவற்பழம் விற்கிறாளொருத்திக்கு அவ்வளையைக்கொடுத்து. நல்லன நாவற்பழங்கள்கொண்டு. தனக்கேறவழகிதான நாவற்பழங்கொண்டு, போரும் போராது என்று சொல்லுகிறவளவிலே நான்கண்டு, "இவ்வளை உனக்குவந்தபடியென்" என்று அவளைக்கேட்க, அவள் "இவன் தந்தான்" என்ன; "நீயோ இவளுக்கு வளைகழற்றிக் கொண்டுகொடுத்தாய்"என்ன; நானல்லேனென்று சிரிக்கின்றானே. "நானல்லேன்காண், என்கையில் வளைகண்டாயோ, நான் உன் இல்லம் புகுகிறது கண்டாயோ, உன் பெண்ணைப் பேரைச்சொல்லியழைக்கிறதைக் கேட்டாயோ, வந்து கையில் வளைகழற்றினது கண்டாயோ, கண்டாயாகில் உன்வளையை யங்கேபறித்துக்கொள்ளாவிட்டதென்" என்றாற்போலே எனக்கு மறுநாக்கெடுக்க விடமில்லாதபடி சில வார்த்தைகளைச் சொல்லிநின்று சிரியாநின்றான், இதிற் காட்டிலுண்டோ துஸ்ஸஹமான தீம்பென்கை. ... ... ... ... ... ... ... ... ... ௮.

‡ நாவற்பழம் விற்கிறவளிடத்தில் கண்டு கேட்கவேண்டும்படியிருக்கையாலே 'அடையாளவளை' என்று விசேஷித்தருளிச் செய்கிறார்.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார், தமக்கு ப்ராப்யாவ ரென்கிறார்.

மூ.—வண்டுகளித்திரைக்கும் பொழில்சூழ் வருபுனற்காவிரித் தென்னரங்கன்
பண்டவன்செய்த கிரீடையெல்லாம் பட்டர்பிரான் விட்டுசித்தன்பாடல்
கொண்டிவைபாடிக் குனிக்கவல்லார் கோவிந்தன்றன்னடியார்களாகி
எண்டிசைக்கும் விளக்காகிநிற்பா ரிணையடியென் றலைமேலனவே. கக.

பதவுரை.

வண்டு— வண்டுகளானவை
களித்து— மதுபாநத்தாலே களித்து
இரைக்கும்— பேரொலியாய்ப் பாடாநிற்கிற
பொழில்— சோலைகளாலும்
வரு— அச்சோலைகளுக்காகப் பெருகிவாரா நின்ற
புனல்— நீரையுடைத்தான
காவிரி— திருக்காவேரியாலும்
சூழ்— சூழப்பட்டதாய்
தென்— அழகிதான
அரங்கன்— திருவரங்கத்தில் வர்த்திக்கிற
அவன்— அப்படிப்பட்டவைபவத்தை யுடையனானவன்
பண்டு— விபவாவதாரத்திலே
செய்த— செய்தருளின
கிரீடை எல்லாம்— விளையாட்டுச் செய்கைகளெல்லாவற்றையும்
விட்டு சித்தன்— விஷ்ணுவை மநஸ்ஸிலே உடையராய்
பட்டர் பிரான்— ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார்பாடின
பாடல்— பாடலாகிய
இவை கொண்டு— இப்பாசுரங்களைக்கொண்டு
பாடி— வாயாரப்பாடி
குனிக்க வல்லார்— உடம்பு இருந்தவிடத் திலிராதே ஆடவல்லவர்களாய்
கோவிந்தன் தன் — கோவிந்தனை கண்ணனுக்கு
அடியார்கள் ஆகி— தாஸபூதர்களாய்
எட்டு திசைக்கும் — எட்டுதிக்கிலுமுள்ள இருள்நீங்கும்படி
விளக்கு ஆகி நிற்பார்— விளக்காக விளங்கிநிற்குமவர்களுடைய
இணை— சேர்த்தியழகையுடைத்தான
அடி— திருவடிகள்
என் தலைமேலன — என்தலைமேலே வர்த்திக்குமவைகளாயிருக்கும்.
[ அவர்கள் திருவடிகளை என்சென்னியிற் சூடுவேன் என்றபடி. ]

வ்யா. வண்டித்யாதி. வண்டுகளானவை மதுபாநத்தாலே களித்துப்பாடுகிற கோஷத்தை யுடைத்தான பொழில்களாலும், பொழில்களுக்கு தாரகமாகப்பெருகி வாராநின்றுள்ள புனலையுடைத்தான காவிரியாலும் சூழப்பட்டு, திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருவீதிகளும் * மாடமாளிகைகளுமான இவற்றோட்டைச் சேர்த்தியால்வந்த அழகையுடைத்தாயிருந்துள்ள * திருவரங்கப்பெருநகரிலே நித்யவாஸம்பண்ணுகிற வைபவத்தை யுடையனானவன் முன்புசெய்த லீலாசேஷ்டிதங்களெல்லாவற்றையும். பட்டர்பிரானித்யாதி. ஸர்வவ்யாபகனான விஷ்ணுவை மநஸ்ஸிலேயுடையராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் பாடின பாடலான இவற்றைக்கொண்டு. பாடிக்குனிக்கவல்லார். ப்ரீதிப்ரேரிதராய்ப்பாடி, உடம்பு இருந்தவிடத்திலிராதே விக்ருதராய் ஆடவல்லவர்களாய். கோவிந்தனித்யாதி. இந்த சேஷ்டிதங்களெல்லாம்செய்த கோவிந்தனுக்கே அடியார்களாய், தங்களுடைய ஸந்நிதி விசேஷத்தாலே எட்டுதிக்கிலுமுண்டான அந்தகாரம்போம்படி ப்ரகாசகராய்க்கொண்டு நிற்குமவர்களுடைய. இணையடியென்றலைமேலனவே. சேர்த்தியழகையுடைத்தான திருவடிகளானவை என்தலைமேலே ஸர்வகாலமும் வர்த்திக்குமவைகளென்கிறார்.

கிக்கால் - " உதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள்பண்டே " என்னுமாப் போலே. இக்தை யப்யஸித்தவர்களுடைய வைபவத்தையும் அவர்கள்பக்கல் தமக்குண்டான கௌரவப்ரதிபத்தியையுமருளிச் செய்தாராய்த்து. ... ... ... கக.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

———(*)———

அடைவு—வெண்ணெய் வருக திருக் கோண்டல் பாலே போதர்
சேந்நேல் கேசவன் கன்னல் சோல்லில் வண் டாற்றில்.

---

ஆ - திருமொழி, கஅ - க்கு, பாட்டு - உ00.

---

அ. கீழில் திருமொழியிலே - ஊரில் ஸ்த்ரீகளானவர்கள் தந்தாமகங்களில் இவன் செய்த தீம்புகளைச்சொல்லி, தாயாரான யசோதைப்பிராட்டிக்கு வந்து முறைப்பட்டு " உன் மகனை யிங்கேயழைத்துக்கொள்ளவேணும் " என்றபடியையும், அதுக்கீடாக அவள் அவனை யழைத்த ப்ரகாரங்களையும் சொல்லுகையாலே அவன் ஊரிலகங்கள்தோறும்செய்த நவநீத சௌர்யாதி க்ரீடா விசேஷங்களை யநுபவித்தாராய் நின்றார்; ப்ராப்தயௌவநைகளான பெண்களோடே அவன் $ இட்டீடுகொண்டு விளையாடுகையாலே அவனாலீடுபட்டபெண்கள், மாதாவான யசோதைப்பிராட்டிபக்கலிலே வந்து, தங்கள்திறத்தில் அவன்செய்த தீம்புகளிலே சிலவற்றைச்சொல்லி, ஆச்ரிதவிரோதி நிரஸநசீலனாய், ஆச்ரிதரக்ஷகனாய், ஆச்ரிதர் கட்டவுமடிக்கவுமாம்படியெளியனாய், ஆச்ரிதர்க்கு நற்சீவனானதன்னை, பூதனைகையில் அகப் படாமல் நோக்கிக்கொடுத்தவனாய், ஆச்ரிதர்க்குத் தன்னையழியமாறியும் கார்யம்செய்யுமவ னாய், ஆச்ரிதர் ஆர்த்தியறிந்துசென்று உதவுமவனாய், நித்யாச்ரிதையான பூமிப்பிராட்டிக்காக நிமக்நையான பூமியை உத்தரித்தவனாய் இப்படி ஸர்வவிஷயமாக உபகாரங்களைப் பண்ணின வன் எங்கள்திறத்தில் அபகாரங்களைச் செய்யாநின்றான், ஆனபின்பு இவன்கீழ் ஜீவிக்கப் போகாது, இவனாலேநாங்கள் இன்றுமுடிவோம் என்று பலகாலும்சொல்லி முறைப்பட்ட ப்ரகாரத்தை, தாமுமப்படியேபேசி, அவனுடைய அந்த லீலாவ்யாபார ரஸத்தை அநுபவிக் கிறார் - இத்திருமொழியில். ... ... ... ... ... *

மூ.—ஆற்றிலிருந்து விளையாடுவோங்களைச்
சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு
காற்றிற்கடியனாயோடி யகம்புக்கு
மாற்றமுந்தாரானா லின்றுமுற்றும்
வளைத்திறம் பேசானாலின்று முற்றும். க.

---

$ இட்டீடுகொள்ளுகையாவது - ஒன்றுகொடுத்து, ஒன்றுவாங்குகை; இதுதானும் வார்த்தாவிஷயத்திலெனக்கொள்க.

பதவுரை.

ஆற்றில் இருந்து—யமுனையாற்றங்கரை மணலிலிருந்து
விளையாடுவோங்களை — தோழிகளுடன் விளையாடுகிற எங்கள்மேல்
சேற்றால் எறிந்து— சேற்றையிட்டெறிந்து
வளை— எங்கள் வளைகளையும்
துகில்— புடவைகளையும்
கைக்கொண்டு— வாரிக்கொண்டு
காற்றில்— காற்றிற் காட்டிலும்
கடியனாய்— வேகசாலியாய் [ மிகவும் த்வரிதனாய் ]
ஓடி— ஓடி
அகம் புக்கு— வீட்டினுள்ளே நுழைந்து
மாற்றமும் தாரானால்— நாங்கள் கூப்பிட்டு இரந்தாலும், அதற்கு ஒரு மறுமொழியும் கொடாத கண்ணனால்
இன்று முற்று (து) ம்— இன்று ‡ முடிவோம்;
வளைத்திறம்— வளையின் விஷயமாக
பேசானால்— தருவன், தாரேன் என்பவற்றிலொன்றும் பேசாதவனாலே
† இன்றுமுற்றும்.

‡ இது - வயிறெரிந்து சொல்லும்வார்த்தை. உயிரை இழக்கக்கடவோ மென்றபடி.
† இருகாற்சொல்லுகிறது - ஆற்றாமையின் மிகுதி.

வ்யா. முதற்பாட்டு. ஆற்றிலிருந்து. சிலர் “ எங்களது ” என்றபிமானிக்கும் நிலத்திலே யிருந்தோமோ, ஸர்வஸாதாரணமான ஸ்த்தலத்திலேயன்றோ நாங்களிருந்தது. இத்தால் ஏகாந்தமாய், இவனுக்குவந்து தீம்புசெய்ய வொண்ணுதபடி பலரும் போவார் வருவாரான ஸ்தலத்திலேயன்றோ நாங்களிருந்ததென்கை. விளையாடுவோங்களை. விளையாடுகிறவெங்களை. தன்னையொழிய நாங்கள் அந்யபரைகளன்றோ; தன் இடையாட்டம்பட்டோமோ: நாங்கள் முன் தீமை செய்தோமாகிலுமாமிறே; தன்னைக்கடைக்கண்ணால் கணிசித்தோமோ: தன்னை யிங்கிட்டெண்ணினாரில்லைகிடீர். சேற்றாலெறிந்து. சேற்றையிட்டெறிந்து. பிறரறியாதபடி கைகளாலே ஸ்பர்சித்தாலாகாதோ; “ இதேது ” என்று பிறர்கண்டு கேட்கும்படி சேற்றையிட்டெறியவேணுமோ. வளைதுகில்கைக்கொண்டு. நாங்கள் குளிக்கைக்காகக் களைந்திட்டு வைத்தவளைகளையும் துகில்களையும் வாரிக்கொண்டு. இடைப்பெண்களாகையாலே ஆபரணங்களும் பரியட்டங்களும் களைந்திட்டுவைத்திறே குளிப்பது. காற்றிற்கடியனாயோடி. முட்ட அகப்படாதே காற்றிலுங்காட்டில் கடியனாயோடி. தன்ஜீவநத்தில் ஒன்றும் குறையாதபடி கொண்டால், எங்கள் ஜீவநத்தையும் கொண்டுபோகவேணுமோ. அவனுக்கு ஜீவநம் இவர்களுடைய வளைகளும் துகில்களும்; இவர்களுக்கு ஜீவநம் அவன்றனுடைய வடிவிறே. அகம்புக்கு. பின்தொடர்ந்துசென்றாலும் காணப்போகாதபடி தன்னகத்திலேசென்றுபுக்கு. வழி பறித்து அஸாதாரண ஸ்தலத்திலே யாய்த்திருப்பது. மாற்றமும்தாராநலின்றுமுற்றும். நாங்கள் தன்பேரைச் சொல்லியழைத்தாலும் அதுக்கு ஒருமறுமாற்றந்தாலும் சொல்லுகிறானில்லை; வார்த்தையும், ஏதேனும்வளையும் துகிலுமோ; ஒரு வார்த்தைதன்னையாகிலும் தந்தாலாகாதோ. இப்படி ஒருவார்த்தையுமுட்படச் சொல்லாதவனாலே இன்றுமுடிவோம். ஒரு வார்த்தைபெறில் ஜீவிப்பார்போலேகாணும். வளைத்திறம்பேசாந லின்றுமுற்றும். தருவனென்னுதல், தாரேனென்னுதல், வளையிடையாட்டமாக ஒன்றும் சொல்லாதவனாலே இன்று முடிவோம். “முற்றுதும்” என்கிறவிது, “ முற்றும் ” என்று குறைந்துகிடக்கிறது. முற்றுதல் முற்றலாய்; அதாவது - முடிவாய், முற்றுமென்றது - முடிவோமென்றபடி. ... க.

மூ.—குண்டலந்தாழக் குழல்தாழநாண்தாழ
எண்டிசையோரு மிறைஞ்சித்தொழுதேத்த
வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு
விண்டோய்மரத்தானு லின்றுமுற்றும்
வேண்டவுந்தாரானு லின்றுமுற்றும். உ.

பதவுரை.

குண்டலம்— காதுப்பணிகள்
தாழ— தோளளவும் தாழ்ந்தசைய
குழல்— திருக்குழற்கற்றை
தாழ— அத்தோடொக்கத் தாழ்ந்தசையவும்
நாண்— திருக்கழுத்திற் சாத்தின விடுநாணது
தாழ— திருவுந்தியளவும் தாழ்ந்தசையவும்
எட்டு திசையோரும்— எட்டு திக்கிலுமுள்ள தேவர், முனிவர் முதலியவர்களெல்லாரும்
இறைஞ்சி ) ஸாஷ்டாங்கமாக
தொழுது— வணங்கி
ஏத்த— ஸ்துதிக்கவும்
வண்டு அமர்— வண்டுகள் படிந்துகிடக்கிற
பூ— பூக்களா லலங்கரிக்கப்பட்ட
குழலார்— மயிர்முடியையுடைய ஸ்த்ரீகளுடைய
துகில்— புடவைகளை
கைக்கொண்டு— வாரிக்கொண்டு
விண் தோய்— ஆகாசத்தை அளாவிய
மரத்தானல்— குருந்தமரத்தின் மேலேறியிரா நின்றவனல்
இன்று முற்றும் ;
வேண்டவும்— "துகிலைப்பணித்தருளாய்" என்று வேண்டினும்
தாரானல் — அவற்றைக் கொடாதவனல்
இன்று முற்றும்.

வ்யா. இரண்டாம்பாட்டு. குண்டலந்தாழக்குழல்தாழநாண்தாழ. குண்டலம் - காதுப்பணி. அது திருத்தோள்களளவும் தாழ்ந்தசைய, திருக்குழல்களும் அதுக்கு பரபாகமாம்படி அத்தோடொக்கத்தாழ்ந்தசைய, திருக்கழுத்திற்சாத்தின விடுநாணது திருவுந்தியளவும்தாழ. எண்டிசையோருமிறைஞ்சித் தொழுதேத்த. எட்டுதிக்கிலுமுண்டான தேவமநுஷ்யாதிகளெல்லாம் இவ்வடிவழகையும் சேஷ்டிதவைலக்ஷண்யத்தையும் கண்டு பக்ஷபாதிகளாய் வணங்கி ஸ்தோத்ரம்பண்ண. வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு. வண்டுகள்மாறுதபூக்களாலே அலங்க்ருதமான குழலையுடையவர்களுடைய, கரையிலே யிட்டுவைத்த பரியட்டங்களைக் கைக்கொண்டு. விண்டோய்மரத்தானலின்றுமுற்றும். இவர்களுக்கெட்டாதபடி விண்ணிலேதோய வளர்ந்த குருந்தமரத்திலேயிருந்தவனல் இன்றுமுடிவோம். வேண்டவும் தாரானலின்றுமுற்றும். "துகிலைப்பணித்தருளாய்" என்றபேக்ஷிக்கவும் கொடாதவனாலே இன்றுமுடிவோம். ... ... ... ... உ.

மூ.—தடம்படுதாமரைப் பொய்கைகலக்கி
விடம்படுநாகத்தை வால்பற்றிமீர்த்துப்
படம்படுபைந்தலை மேலெழப்பாய்ந்திட்
டுடம்பையசைத்தானு லின்றுமுற்று
முச்சியினின்றுனு லின்றுமுற்றும். ௩.

பதவுரை.

தடம் படு— விசாலமான
தாமரை பொய்கை—தாமரைப் பொய்கையை
கலக்கி — (உள்ளேகுதித்து) கலங்கப் பண்ணி
விடம் படு— அதனால் சீறி விஷத்தை உமிழ்ந்து கொண்டு கிளர்ந்த
நாகத்தை— காளியஸர்ப்பத்தை
வால் பற்றி ஈர்த்து— வாலைப்பிடித்திழுத்து
படம் படு— படத்தையுடைத்தாய்
பை— கோபத்தாலே விஸ்தர்தமான
தலை மேல்— அதன் தலைமேலே
எழ பாய்ந்திட்டு— அதிர்த்தியாலே விஷத்தைக் கக்கும்படி கிளரக்குதித்து
உடம்பை— திருமேனியை
அசைத்தானல்— அசைத்து ஆடினவனாலே இன்று முற்றும்- ;
உச்சியில்— அக்காளியன் படத்தின்மேல்
நின்றானல்—அவனிளைத்து விழுந்து சரணம் புகுமளவும் நெருங்க மிதித்து நின்றவனாலே
இன்று முற்றும்.

வ்யா. மூன்றாம்பாட்டு. தடமித்யாதி. இடமுடைத்தான தாமரைப்பொய்கையென்றிறே ப்ரஸித்தி- காளியன் புகுவதற்குமுன்பு; பின்பிறே *நச்சுமல் பொய்கையாயிற்று. இப்படிப்பட்ட பொய்கையை, (க) "நிபபாத ஹ்ரதே தத்ர ஸர்ப்பராஜஸ்ய வேகத꞉ । தேநாதிபததா தத்ர க்ஷோபிதஸ்ஸ மஹாஹ்ரத꞉ ॥" என்கிறபடியே பெரிய விசையோடே உள்ளே குதித்துக் கலங்கப்பண்ணி. விடம்படுநாகத்தை வால்பற்றியீர்த்து. இப்படி கலக்கினவாறே (உ) க்ருத்தனாய், விஷத்தையுமிழ்ந்துகொண்டுகிளர்ந்த காளியனாகிற ஸர்ப்பத்தை ஒரு சரக்காக நினையாதே வாலைப்பிடித்திழுத்து. படம்படுபைந்தலை மேலெழப்பாய்ந்திட்டு. படத்தை யுடைத்தாய், கோபத்தாலே விஸ்தர்தமான அதின்தலைமேலே, அதிர்த்தியாலே விஷத்தைக் கக்கும்படி கிளரக்குதித்து. உடம்பையசைத்தானலின்றுமுற்றும். காளியனுடைய க்ரோதத்தையும், கிளர்த்தியையும், அவன்பணங்களிலே இவன் சென்று குதித்தபடியையும் கரையிலே நின்றுகண்டு, "இப்பாம்பின்வாயிலே அகப்படப்புகுகிறானித்தனை, எல்லாரும் முடிந்தோம்" என்று படுகாடுபட்டு விழுந்துகிடக்கிற அநுகூலரான (௩) கோபகோபீஜநங்கள் தரித்தெழுந்திருக்கும்படியாக, அங்கேநின்று திருமேனியை அசைத்தாடினவனாலே இன்று முடிவுதோம். உச்சியில்நின்றானலின்றுமுற்றும். அவன் இளைத்து விழுந்து சரணம்புகுமளவும் அந்த பணத்தின்மேலே நெருங்கமிதித்து நின்றவனாலே இன்று முடிவுதோம். இத்தால்- ப்ரதிகூலனை (௪) தமித்து, அநுகூலரானவர்களுடைய வயிற்றெரிச்சலைப் போக்கினவன், ஸ்வசேஷ்டிதங்களாலே எங்களை இப்படி வயிறெரியும்படிபண்ணா நின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்கள் இன்றுமுடிவுதோமென்கை. இருகாற்சொல்லுகிறது - ஆற்றாமையினுடைய அதிசயம். ... ... ... ... ... ௩.

மூ.—தேனுகனாவி செகுத்துப் பனங்கனி
தானெறிந்திட்ட தடம்பெருந்தோளினால்
வானவர்கோன்விட வந்தமழைதடுத்
தானிரைகாத்தானா லின்றுமுற்று
மவையுய்யக்கொண்டானா லின்றுமுற்றும். ௪.

(க) "நிபபாத ஹ்ரதே தத்ர ஸர்ப்பராஜஸ்ய வேகத꞉ । தேநாதிபதநாதத்ர க்ஷோபிதஸ் ஸ மஹாஹ்ரத꞉ ॥" (உ) க்ருத்தனாய்-கோபத்தையுடையனாய். (௩) கோபகோபீஜந. (௪) தமித்து - நிரஸித்து.

பதவுரை.

தேனுகன்— தேநுகாஸுரனுடைய
ஆவி— உயிரை
செகுத்து— முடித்து
* பனங்கனி— ஆஸுரமான பனைமரத்தின் பழங்களுதிரும்படி
தான்— தான்
எறிந்திட்ட— ( அத்தேநுகனை ) வீசியெறிந்த
தடம் பெரு— மிகவும் பெரிய
தோளினால்— தோளாலே
வானவர் கோன்— தேவேந்த்ரன்
விட— ஏவ
வந்த— வர்ஷிக்கவந்த
மழை— மழையை
தடுத்து— மலையையெடுத்துத்தடுத்து
ஆ நிரை— பசுக்கூட்டத்தை
காத்தானால்— ரக்ஷித்தவனாலே
இன்று முற்றும் - ;
அவை— அவற்றை
உய்யக் கொண்டானால்— உஜ்ஜீவிப்பித்தவனால்
இன்று முற்றும்.

* "பனைமுன்......வலிவரின் ஐம்போயம்மும்......" என்ற நன்னூற் சூத்திரத்தைந் நினைக்க.

வ்யா· நாலாம்பாட்டு. தேனுகனித்யாதி. (க) "ஸூஹ்ருத்பிர் ஹ்ருஷ்டமநோபிர் வநோத்தோஹ மத்ஜீவிதஃ । தஸ்மிந்நேவ வநோத்தேசே பஞ்சகம் சாரயந் ஜகௌ ॥ தத்ர தாலவநம் காநநம் ஸுந்தரம் ஸுமஹத் । வ்யாப்தம் தால சைவ கோவத்ஸா தாலா வநாந்தரே பரிஸ்ருதம் । ஹரிரிவ" என்கிறபடியே கழுதையான வடிவைக்கொண்டு, தன்னைநலிவதாக வந்துநின்ற தேநுகனென்கிறவஸுரனுடைய ப்ராணனை, ஆகாசத்திலேயெடுத்துச் சுழற்றுகிற வேகத்தாலே முடித்து, ஆஸுரமான பனையினுடைய பழங்களுதிரும்படியாக, தானெறிந்திட்ட மிகவும் பெரியதோளாலே. வானவரித்யாதி. தனக்கிடுகிறசோற்றை விலக்கி மலைக்கிடுவித்ததடியாக மிகவுங்குபிதனாய், தேவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரன், ஆய்ப்பாடியிலுள்ள கோக்களும் கோபகோபீஜநங்களும் கடலிலே போய்ப்புகும்படி வர்ஷிக்கச்சொல்லி, புஷ்கலாவர்த்தகாதி மேகங்களை ஏவிவிடுகையாலே அவற்றால் வந்தவர்ஷத்தை, முன்பே 'ரக்ஷகம்' என்று சொன்ன மலைதன்னையே குடையாகவெடுத்துத்தடுத்து, உள்ளத்தில் தான்செய்யு முபகாரமறியும் பசுக்களை ரக்ஷித்தவனாலே இன்றுமுடிவுதோம். அவையித்யாதி. அம்மழையில் சிதிலப்படாதபடி நோக்கி, அவற்றை உஜ்ஜீவிப்பித்தவனாலே இன்றுமுடிவுதோம்.

இத்தால் - ரக்ஷ்யவர்க்கத்துக்கு வந்த வர்ஷாபத்தைப் போக்கினவன், எங்களுக்கு விரஹாபத்தை விளைத்து நலியாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்களின்று முடிவுதோமென்கை. ... ... ... ... ... ... ... ச.

மூ.—ஆய்ச்சியர்சேரி யளைதயிர்பாலுண்டு
பேர்த்தவர்கண்டு பிடிக்கப் பிடியுண்டு
வேய்த்தடந்தோளினார் வெண்ணெய்கோண்மாட்டாதங்
காப்புண்டிருந்தானா லின்றுமுற்று
மடியுண்டழுதானா லின்றுமுற்றும். ரு.

(க) "க்ருஹீத்வா ப்ரமணேநைவ ஸோம்பரே கதஜீவிதம் । தஸ்மிந்நேவ ஸ்ஸிக்ஷேப வேகேந த்ருணராஜநி ॥ தத: பலாந்யதேகாநி தாளாக்ராந்நிபதந்கா: । ப்ருதிவ்யாம் பாதயா மாஸ மஹாவாதோ கநாநிவ ॥"

பதவுரை.

சேரி— சேரியிலே
ஆய்ச்சியர்— இடையர்கள்
அளை— மத்தைநாட்டியுடைத்த
தயிர்— ( கடைவதாகவைத்த ) தயிரையும்
பால்— ( காய்ச்சுவதாகவைத்த ) பாலையும்
உண்டு— அமுது செய்து
பேர்த்து— பின்னையுமொருக்கால் வெண்ணெய் களவு காணப்புக்கவளவிலே
அவர்— அவ்விடைச்சிகள்
கண்டு— ஒளித்திருந்து கண்டு
பிடிக்க— கையிலகப்படுத்திக் கொள்ள
பிடி உண்டு — அவர்கள் கையிலே பிடிபட்டு
வேய்— மூங்கிலையொத்ததாய்
தட— சுற்றுடைமையை உடைத்தான
தோளினார்— தோள்களையுடையவர் களுடைய
வெண்ணெய்— வெண்ணெயை
கொள்மாட்டாது— அபஹரிக்கமாட்டாமல்
அங்கு— அவர்கள்வீட்டில்
ஆப்புண்டு இருந்தானால்— கட்டுண்டிருந்தவனால்
இன்று முற்றும் - ;
அடி உண்டு — அவர்கள் கையாலடியுண்டிருந்து
அழுதானால்— அழுதவனாலே
இன்று முற்றும்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. ஆய்ச்சியர்சேரி. இடைச்சிகள்சேரியிலே. அளைதயிர்பாலுண்டு. அவர்கள் கடைவதாக மத்துநாட்டியுடைத்தவளவிலே வைத்ததயிரையும், காய்ச்சுவதாகவைத்த பாலையு மமுதுசெய்து. அன்றிக்கே, அளைதயிரென்றது - அபிநிவேசாதிசயத்தாலே தன்கையுள்ளளவும் போகவிட்டு அளையப்பட்ட தயிரென்னவுமாம். பேர்த்தவர் கண்டு பிடிக்கப்பிடியுண்டு. "மீண்டு ஒருகால் வெண்ணெய் களவுகாண" என்று புகுந்தவளவிலே, அவர்கள் ஒளித்திருந்து கண்டுபிடிக்க அவர்கள் கையிலேபிடிபட்டு. வேயித்யாதி. பசுமையாலும் சுற்றுடைமையாலும் வேய்போலே யிருப்பதாய், பெரிதாயிருந்துள்ள தோளையுடையவர்களுடைய வெண்ணெயை அபஹரிக்கமாட்டாதே. அங்கித்யாதி. அங்கேயவர்கள் கட்டக் கட்டுண்டிருந்தவனாலே இன்றுமுடிவுதோம். அடியுண்டித்யாதி. கட்டினவளவு மன்றிக்கே, அவர்களடிக்க அவர்கள் கையாலே அடியுண்டிருந்தழுதவனாலே இன்றுமுடிவுதோம்.

இத்தால் - அநுகூலைகளான அபலைகளுக்கு, கட்டிவைக்கலாம்படி பவ்யனாயிருந்தவன், எங்களுக்கு அபவ்யனாய் மிறுக்குக்களைப் பண்ணாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்கள் இன்றுமுடிவுதோமென்கை. ... ... ... ... ... ௫.

மூ.—தள்ளித்தளர்நடை யிட்டிளம்பிள்ளையாய்
உள்ளத்தினுள்ளே யவளையுறநோக்கிக்
கள்ளத்தினால்வந்த பேய்ச்சிமுலையுயிர்
துள்ளச்சுவைத்தானா லின்றுமுற்றுந்
துவக்கறவுண்டானா லின்றுமுற்றும். ௬.

பதவுரை.

தள்ளி— தடுமாறி
தளர் நடை இட்டு— கால்ஊன்றி நடக்கத் தரிப்பில்லாமையாலே தளர் நடை யிட்டு
இள பிள்ளை ஆய் — இளம்பிள்ளையாயிருக்கச்செய்தே
உள்ளத்தின் உள்ளே— தன்னெஞ்சினுள்ளே

அவளை— அவளை [ பூதனையை ]
உற நோக்கி— 'நம்மை நலியவருகிறாள்' என்று உறைக்கப்பார்த்து
கள்ளத்தினால் வந்த— க்ருத்ரிமமாக வந்த
பேய்ச்சி— பூதனையின்
முலை— முலைப்பாலோடே
உயிர்— அவளுடைய ப்ராணனையும்

துள்ள— அவள் துடிக்கும்படி
சுவைத்தானால்— பசையற உண்டவனாலே இன்று முற்றும் - ;
துவக்கு அற— அந்தவிஷத்தில் தனக்கொரு ஸ்பர்சமில்லாதபடி
உண்டானால்— உண்டவனாலே இன்று முற்றும்.

வ்யா. ஆரும்பாட்டு. தள்ளித்தளர்நடையிட்டு. காலூன்றி நடக்கத் தரிப்பில்லாமையாலே தடுமாறித்தளர்நடையிட்டு. இளம்பிள்ளையாய். (க) முக்தசிசுவாய். இத்தால் - நடக்கைக்குங்கூட பலமில்லாத அதிபாலனாயிருக்கச்செய்தே யென்கை. உள்ளத்தினுள்ளே அவளையுறநோக்கி. பிறர்க்குத்தெரியாதபடி தன்மநஸ்ஸினுள்ளே "நம்மை நலிவதாக வருகிறவள் இவள்" என்று அவளை உறைக்கப்பார்த்து. கள்ளமித்யாதி. தன்வடிவை மறைத்துத் தாய்வடிவைக்கொண்டு க்ருத்ரிமத்தாலேவந்த பூதனையுடைய முலைப்பாலோடே அவளுயிரையும் அவள் துடிக்கும்படி பசையற வுண்டவனாலே இன்று முடிவுதோம். துவக்கறவித்யாதி. அவள்நச்சுமுலையை யுண்ணாநிற்கச்செய்தே, அந்நஞ்சில் தனக்கொரு ஸ்பர்சமற வுண்டவனாலே யின்று முடிவுதோம்.

இத்தால் - ஆச்ரிதர்க்கு நற்சீவனான தன்னை பூதனைகையில் அகப்படாமல் நோக்கி உபகரித்தவன், எங்களுக்குத் தன்னைத் தாராமல் அருமைப்படுத்தாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்கள் இன்று முடிவுதோமென்கை. ... ... ... ...சு.

மூ.—மாவலிவேள்வியின் மாணுருவாய்ச்சென்று
மூவடிதாவென் றிரந்தவிம்மண்ணினை
ஓரடியிட் டிரண்டா மடிதன்னிலே
தாவடியிட்டானா லின்றுமுற்றுந்
தரணியளந்தானா லின்றுமுற்றும். எ.

மாவலி— மஹாபலியின்
வேள்வியில்— யஜ்ஞவாடத்திலே
மாண் உரு ஆய்— ப்ரஹ்மசாரி வேஷத்தை யுடையனாய்
சென்று— போய்
மூ (ன்று) அடி தா என்று— 'என் காலாலே மூன்று அடி தா' என்று
இரந்த— யாசித்து நீரேற்றுப் பெற்ற
இ மண்ணினை— இந்த பூமியை
ஓர் அடி இட்டு— அதன் பரப்படங்கலும் தனக்குள்ளேயாம்படி ஒரு அடியையிட்டு

இரண்டாம் அடி தன்னிலே— இரண்டாவதான அடியிலே
தாவு அடி இட்டானால்— மேலுலகங்களெல்லாம் தனக்குள்ளேயாம்படி தாவியடியிட்டவனாலே
இன்று முற்றும்;
* தரணி— பூம்யாதிலோகத்தை
அளந்தானால்— அளந்தவனாலே
இன்று முற்றும்.

* "யரணி" என்னும் வடசொல்லின் திரிபு.

(க) உ-ஹ்ரமிய -.

வ்யா. ஏழாம்பாட்டு. மாவலிவேள்வியில். இந்த்ரனுடைய ஐச்வர்யத்தை பலத்தாலே அபஹரித்துக்கொண்டு, "கோவாகிய மாவலி" என்கிறபடியே தன்னரசாய், அழிக்கவொண்ணாதபடி. ஔதார்யமென்பதொரு குணத்தையுடையனாயிருந்த மஹாபலியினுடைய யாகத்திலே. மாணுருவாய்ச்சென்று. "கள்ளக்குறளாய்" என்கிறபடியே - அவனை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணுகைக்காக வாமநவேஷத்தைக் கொண்டு வடிவழகாலும் நடையழகாலும் அவன் அபஹ்ருதசித்தனாய் தான் சொன்னதுமாறுமற் செய்யும்படி சென்று. மூவடிதாவென்றிரந்த இம்மண்ணினை. அவன் சடக்கென இசைந்து தருகைக்காகவும், பின்பு ஓரடிக்கு அவனைச் சிறைவைக்கைக்காகவும் "என்காலாலே மூன்றடி தா" என்று இரந்துபெற்ற இப்பூமியை. மண்ணென்கிறவிது - மற்ற லோகங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். ஓரடியித்யாதி. அளக்கிறவளவிலே பூமிப்பரப்படங்கலும் தனக்குள்ளேயாம்படி ஓரடியிட்டு இரண்டாமடி தன்னிலே. தாவடியித்யாதி. ஊர்த்வலோகங்களடங்கலும் தனக்குள்ளேயாம்படி தாவியடியிட்டவனாலே இன்றுமுடிவதோம். தரணியித்யாதி. திருவடிகளின் மார்த்தவம்பாராதே, ‡ ஆச்ரிதனுக்காக இப்படி லோகத்தை யளந்தவனாலே யின்று முடிவதோம்.

இத்தால் - தன்னை யழியமாறியும் ஆச்ரிதரபேக்ஷிதம் செய்யுமவன் எங்களபேக்ஷிதம் செய்யாதே யிடுபடுத்தாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்கள் முடிவதோமென்கை.

மூ.—தாழைதண்ணாம்பற் றடம்பெரும்பொய்கைவாய்
வாழுமுதலை வலைப்பட்டுவாதிப்புண்
வேழந்துயர்கெட விண்ணோர்பெருமானாய்
ஆழிபணிகொண்டானா லின்றுமுற்று
மதற்கருள்செய்தானா லின்றுமுற்றும். அ.

பதவுரை.

தாழை— (கரையிலே) தாழைகளையும்
தண் ஆம்பல்— (உள்ளே) குளிர்ந்த ஆம்பலையுமுடைத்தாய்
தட பெரு— மிகவும் பெரிதான
பொய்கைவாய்— தடாகத்திலே
வாழும்— இராநின்ற
முதலை— முதலையாகிற
வலை— வலையிலே
பட்டு— அகப்பட்டு
வாதிப்பு உண்— வருந்தின [வாதிப்பு - பாதை.
வேழம்— ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய
துயர்— மனத்துன்பமானது
கெட— தீரும்படியாக
விண்ணோர்— நித்யஸூரிகளுக்கு
பெருமான்— நிர்வாஹகனானவன்
ஆய்— பெரிய திருவடியை மேற்கொண்டவனாய்
ஆழி— சக்ராயுதத்தாலே
(முதலையைத் துணித்து அந்தச்சிறையை விடுவித்து,)
பணி கொண்டானால்— அந்த கஜேந்த்ரன் கையிலிருந்த பூவைத்தம் திருவடிகளில் இடுவித்துக்கொண்டவனாலே இன்று முற்றும்;
அதற்கு— அந்த கஜேந்த்ரனுக்கு
அருள் செய்தானால்— அப்படி க்ருபைபண்ணினவனால் இன்று முற்றும்.

‡ ஆச்ரிதன்- தேவேந்த்ரன்.

வ்யா. எட்டாம்பாட்டு. தாழையித்யாதி. கரையிலே தாழைகளேயும் உள்ளே குளிர்ந்த ஆம்பல்களேயு முடைத்தாய், மிகவும் பெரிதாயிருந்துள்ள பொய்கையிடத்திலே. தாழை- கரையிலுண்டான சோலேக்கு உபலக்ஷணம். "மொய்ம்மாம்பூம்பொழிற் பொய்கை" என்ருரிறே ஆழ்வார். ஆம்பல்-உள்ளுண்டான புஷ்பங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். "வைகு தாமரைவாங்கிய வேழம்" என்கிறபடியே தாமரை நெருங்கப் பூத்துக்கிடக்கிறதுகண்டு அது பறிக்கைக்காகவிறே "உள்ளே துஷ்டஸத்த்வம் கிடக்கிறது" என்று அறியாதே ஸ்ரீகஜேந்த்ரான்முன் இப்பொய்கையிலே அத்யாதரத்தோடே சென்று இழிந்தது. வாழுமுதலே வலேப்பட்டு. நெடுங்காலமெல்லாம் "நம் சாபமோக்ஷத்துக்கு ஓரானே வருவதெப்போதோ" என்கிறவிலேயோடே, அதினுள்ளே வர்த்தித்தமுதலேயாகிற வலேயிலேயகப்பட்டு. வாதிப்புண் வேழம் துயர்கெட.(க) "[illegible]" என்கிறபடியே அது இழுக்க, தான்கரைக்கிழுக்க, (உ) "[illegible]" என்கிறபடியே நெடுங்காலம் இப்படி பாதைப்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய "கையிற்பூ செவ்வி யழியாமல் திருவடிகளிலே சாத்தப்பெற்றிலோமே" என்கிற க்லேசம் தீரும்படியாக. விண்ணேர்பெருமானே யாழிபணி கோண்டானலின்று முற்றும். * அயர்வறுமமரர்கள திபதியானமை தோற்றப் பெரியதிருவடியை மேற்கொண்டுசென்று, (ங) "[illegible]" என்கிறபடியே திருவாழியாலே முதலேயைத் துணித்து அந்தச்சிறையை விடுவித்து அவன் கையில் பூவைத் திருவடிகளிலே பிடிவித்துக்கொண்டு இப்படி ரக்ஷித்தவனலே இன்று முடிவுதோம். அதற்கித்யாதி. "கைம்மாவுக்கருள்செய்த" என்கிறபடியே அந்த வானேக்கு அப்படி அருள்செய்தவனலே இன்று முடிவுதோம்.

இத்தால்- ஆச்ரிதனுடைய ஆர்த்திதீரச்சென்று ரக்ஷித்தவன் எங்களே ஆர்த்தைகளாயே பேடும்படி பண்ணுகின்ருன்; ஆனபின்பு, அவனலே நாங்கள் இன்று முடிவுதோமென்கை.

மூ.—வானத்தெழுந்த மழைமுகில்போலெங்கும்
கானத்துமேய்ந்து களித்துவிளேயாடி
ஏனத்துருவாயிடந்த விம்மண்ணினேத்
தானத்தேவைத்தானு லின்றுமுற்றுந்
தரணியிடந்தானு லின்றுமுற்றும். ௯.

பதவுரை.

வானத்து— ஆகாசத்திலே
எழுந்த— நீர்கொண்டெழுந்த
மழை முகில் போல்— வர்ஷாகவலாஹகம் போன்ற
ஏனம் உரு ஆய்— வராஹரூபியாய்
கானத்து— காட்டிலே
எங்கும்— எல்லாவிடங்களிலும் ஸஞ்சரித்து
மேய்ந்து— கோரைக்கிழங்கு முதலியவற்றை அமுதுசெய்து
களித்து— செருக்கையுடைத்தாய்
விளேயாடி— விளேயாடி
இடந்த— அண்டபித்தியில்நின்று மொட்டு விடுவித்தெடுத்த
இ மண்ணினே— இந்த பூமியை
தானத்தே— ஸ்வஸ்தாநத்திலே
வைத்தானல்— வைத்தவனல் இன்று முற்றும்;
தரணி— பூமியை
இடந்தானல்— உத்தரித்தவனலே இன்று முற்றும்.

(க) "கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே." (உ) "திவ்யம் வர்ஷஸஹஸ்ரகம்." (ங) "க்ராஹஞ்சக்ரேண மாதவ꞉."

வ்யா. ஒன்பதாம்பாட்டு. வானத்தெழுந்த மழைமுகில்போல். ஆகாசத்திலே நீர் கொண்டெழுந்த காளமேகம்போலே. இத்தால்- திருமேனியின் நிறத்தைச் சொல்லுகிறது. எங்கும் கானத்துமேய்ந்து. காட்டிலே ஒருப்ரதிபக்ஷபயமற எங்கும் ஸஞ்சரித்து, கோரைக் கிழங்கு முதலானவற்றை ஜீவித்து. களித்துவிளையாடி. ஜாத்யுசிதமான கர்வத்தோடே கூடிக் கொண்டு விளையாடி. ஏனத்துருவாய். நீருக்கும் சேற்றுக்குமிருயாத வாராஹவேஷத்தை யுடையனாய்.இடந்தவித்யாதி. அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்த இந்த பூமியை "நான்றிலவேழ்மண்ணும் தானத்தவே" என்னும்படி ஸ்வஸ்தாநத்திலே வைத்தவனாலே இன்று முடிவுதோம். தரணியித்யாதி. இப்படி நிமக்நையான பூமியை உத்தரித்தவனாலே இன்று முடிவுதோம்.

இத்தால்-ப்ரளயாபந்நையான பூமியை யெடுத்தவன், எங்களை விரஹப்ரளயத்தே தள்ளா நின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்களின்று முடிவுதோமென்கை. ... ...கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அங்கமலக்கண்ணன்றன்னை யசோதைக்கு
மங்கைநல்லார்கடாம் வந்துமுறைப்பட்ட
அங்கவர்சொல்லைப் புதுவைக்கோன்பட்டன்சொல்
இங்கிவைவல்லவர்க் கேதமொன்றில்லையே. ய.

பதவுரை.

மங்கை— பருவத்தால் இளையராய்
நல்லார்கள்தாம்— க்ர்ஷ்ணன் விஷயத்தில் ஸ்நேஹமுடையரான பெண்களானவர்கள்
அம் கமலம்— அழகிய செந்தாமரைப்பூப் போன்ற
கண்ணன் தன்னை— திருக்கண்களையுடைய கண்ணனைப்பற்ற
அங்கு வந்து— அவளகத்திலேவந்து
அசோதைக்கு— யசோதையிடத்திலே
முறைப்பட்ட— முறையிட்ட
சொல்லை— சொற்களை
புதுவை— ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு
கோன்— நிர்வாஹகரான
பட்டன்— பெரியாழ்வார் அருளிச்செய்த
சொல் இவை— சொல்லான இவற்றை
இங்கு— இந்தஸம்ஸாரத்தி லிருந்துவைத்தே
வல்லவர்க்கு— ஓதவல்லவர்களுக்கு
ஏதம்— பொல்லாங்கு
ஒன்று— அல்பமும்
இல்லை— இல்லாதபடிபோம்.

வ்யா. அங்கமலக் கண்ணன்றன்னை. சிவப்பாலும் விகாஸத்தாலும் செவ்வையாலும் அழகிய தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்களை யுடையவனைப்பற்ற. அசோதைக்கு. தாயாரான யசோதைப்பிராட்டிக்கு. மங்கை நல்லார்கள்தாம். பருவத்தாலிளையராய் க்ர்ஷ்ண னளவிலே ஸ்நேஹிகளுமாயிருக்கிற பெண்களானவர்கள்தாங்கள். அங்கு-வந்துமுறைப்பட்ட. அவளகத்திலே வந்து தங்களீடுபாடுதோற்ற முறைப்பட்ட. அவர்சொல்லை. அவர்கள் சொல்லை. மங்கைநல்லாரானவர்கள்தாம் - அங்கமலக்கண்ணன்றன்னைப்பற்ற-அங்கு - வந்து-அசோதைக்கு- முறைப்பட்ட சோல்லை என்றந்வயம். புதுவைக்கோன்பட்டன்சொல்-இவை. ஸ்ரீவில் லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த சொல்லானவிவற்றை. இங்கு-வல்

லவர்க்கு. இந்த லோகத்திலே ஸாபிப்ராயமாக வல்லவர்களுக்கு. ஏதமொன்றில்லையே. பொல்லாங்கென்னப்பட்டவை யொன்றுமில்லாதபடி போம். ... ... ... ൰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—ஆற்றில் குண்டலம் தடம் தேனுகனுப்ச்சி தள்ளி மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னேர்.

---

ஆ திருமொழி- ககூ - க்கு, பாட்டு -உக0.

---

மூன்றும்பத்து, முதல் திருமொழி, தன்னேராயிரம் ப்ரவேசம்.

அ. திருவாய்ப்பாடியில் ப்ராப்தயௌவனைகளாய் லீலாபரைகளாய்த்திரிகிற பெண்கள் திறத்தில் அவன் துஸ்ஸஹமான தீம்புகளைச்செய்து தங்களை நலிகிற ப்ரகாரத்தை, தாயாரான யசோதைப்பிராட்டிக்குவந்து முறைப்பட்ட ப்ரகாரத்தை, தத்பாவயுக்தராய்க்கொண்டு, தாமும் அவர்களைப்போலேபேசி அவனுடைய அந்த லீலாவ்யாபாரரஸத்தை அநுபவித்தாராய்நின்றார்-கீழ்; மாத்ருஸ்நேஹத்தாலே பலகாலும் அவனை அம்மமுண்ணவழைத்தும் அம்ம மூட்டியும்போரும் யசோதைப்பிராட்டி, அவனுடைய பருவத்தின் இளமையையும் அதுக்கநுரூபமல்லாதபடியான அதிமாநுஷ சேஷ்டிதங்களையும் கண்டு, அவனை "தன்னுடைய பிள்ளை" என்று நினைத்திருக்கை தவிர்ந்து, "அநியாம்பனாய் அப்ரதிஹத லீலாபரனான ஸர்வேச்வரன்" என்றநுஸந்தித்து அவனைக்குறித்து அவைதன்னைச்சொல்லி, "உனக்கம்மந்தரவஞ்சுவன்" என்று பலகாலும் பேசின பாசுரத்தை, தத்வஸ்தாபந்நராய்க்கொண்டு தாமு மப்படியேபேசி அந்தரஸத்தை அநுபவிக்கிறார்- இத்திருமொழியில். ... *

மூ,—தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான்
பொன்னேய் நெய்யோடு பாலமுதுண்டொரு புள்ளுவன் பொய்யேதவழும்
மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கைதுஞ்ச வாய்வைத்தபிரானே
அன்னேயுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவ னம்மந்தரவே. க.

பதவுரை.

| | |
|---|---|
| தன்— தனக்கு | பால் அமுது— போக்யமான பாலையும் |
| நேர்— ஒப்பான | உண்டு— அமுது செய்து |
| ஆயிரம் பிள்ளைகளோடு— ஆயிரம் பிள்ளைகளோடு கூட | ஒரு— அத்விதீயனான |
| தளர்நடை இட்டு— தளர்நடை நடந்து | புள்ளுவன்— க்ரித்ரிமனாய்க்கொண்டு |
| வருவான்— வருமவனாய் | பொய்யே— பொய்யாக |
| பொன் ஏய் — பொன்னையொத்த நிறத்தையுடைய | தவழும்— தவழுமவனாய் |
| நெய்யொடு— நெய்யோடு கூட | மின் நேர்— மின்னலை ஒத்ததாய் |
| | நுண்— ஸூக்ஷ்மமான |
| | இடை— இடையையுடைய |

வஞ்சம் மகள்— வஞ்சகியான பூதனையானவள்

அஞ்ச— மாளும்படி

கொங்கை— அவள் முலையிலே

வாய் வைத்த— திருப்பவளத்தை வைத்து உண்ட

பிரானே— நாயனே!

அன்னே— $ அம்மே!

உன்னை— இதுவரை என்பிள்ளையாக பாவிக்கப்பட்ட உன்னை

அறிந்து கொண்டேன் — அருந்தெய்வமென்று இன்று அறிந்து கொண்டேன்;

(ஆகையால்,)

உனக்கு— உனக்கு

அம்மம் தர— முலை கொடுக்க

அஞ்சுவன்— பயப்படா நின்றேன்.

---

$ "அம்மே!" என்று அச்சத்தால் சொல்லுகிற வார்த்தை.

வ்யா. முதற்பாட்டு. தன்னேரித்யாதி. "க்ர்ஷ்ணன் திருவாய்ப்பாடியிலே வந்தவதரிக்கிறபோது அவனோடொக்க ஆயிரம் பிள்ளைகள் சேரப்பிறந்தார்கள்" என்று சொல்லுவதொரு ப்ரஸித்தி உண்டிறே; பிறப்பாலும் வளர்ப்பாலும் வயஸ்ஸாலும் வளர்த்தியாலும் அந்யோந்யமுண்டான ஸ்நேஹத்தாலும் தன்னோடொக்கச் சொல்லலாம்படி யிருப்பார் ஆயிரம் பிள்ளைகளோடேயாய்த்துத் தளர்நடையிட்டு வருவது. (க) "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்றுபால்யம்தொடங்கிப் பெருமாளையொழிய தரிக்கமாட்டாதஇளையபெருமாளைப்போலே, இவர்களும் பால்யமேதொடங்கி இவனையொழிய தரிக்கமாட்டாத ஸ்நேஹத்தையுடையராய், எப்போதுமொக்கக் கூடித்திரிகையாலே இவர்களோடேகூடியே தளர்நடையிட்டு வருமென்னலாமிறே. "தளர்நடையிட்டு வருமவனே!" என்று ஸம்புத்தி. பொன்னேய் நெய்யோடு பாலமுதுண்டு. செவ்விகுன்றுமதுருக்கித் துஞ்சினதாகையாலே பொன்னோடொத்த நிறத்தையுடைத்தான நெய்யோடே, ரஸ்யமான பாலமுதையுமுண்டு. ஒருபுள்ளுவன் பொய்யே தவழும். புள்ளுவமாவது- மெய்போலே யிருக்கும்பொய். உண்டிருக்கச்செய்தே 'உண்டிலேன்' என்கையாலே 'அஸத்யவாதி' என்று தோற்றுமிறே. ஒருபுள்ளுவனென்றது-களவுக்கு அத்விதீயனென்றபடி. பொய்யேதவழும். தளர்நடையிட்டுத் திரிகிறவன் அதுக்கு க்ஷமரல்லாதாரைப்போலே தவழுகிறதும் க்ர்த்ரிமமென்று தோற்றுமிறே; ஆகையாலிறே பொய்யேதவழுமென்றது. இதுவும், பொய்யேதவழு மொருபுள்ளுவனே! என்று ஸம்புத்தி.

மின்னேரித்யாதி. பெற்றதாய்போலே வருகையாலே, மின்னோடொத்த நுண்ணிய இடையையும் வஞ்சநத்தையுமுடையளான பேய்ச்சியானவள் முடியும்படி அவள் முலையிலே திருப்பவளத்தை வைத்துண்ட உபகாரகனானவனே. இவ்விடத்தில் உபகாரமாவது, * உலகங்கட்கெல்லா மோருயிரான தன்னை முடிக்கவந்தவளை நிரஸித்து, தன்னைநோக்கித் தந்தவிதுவிறே. அன்னே. அதாவது- அம்மே! என்று அச்சத்தாலே சொல்லுகிற வார்த்தை. உன்னையறிந்துகொண்டேன். முன்பெல்லாம் என் பிள்ளையாகவும், நான்தருகிற அம்மம் முதலானவை உனக்கு தாரகாதிகளாகவும் நினைத்திருந்தேன்; உன்படிகள் அதிமாநுஷங்களாகையாலே "ஆயர்புத்திரனல்ல னருந்தெய்வம்" என்கிறபடியே- இவன் நம்மோடு ஸஜாதீயனுமல்லன், நாம்கொடுக்கிறவை இவனுக்கு தாரகாதிகளுமல்லவென்று நன்றாக வறிந்துகொண்டேன். உனக்கஞ்சுவனம்மந்தரவே. இப்படி யிருக்கிறவுனக்கு அம்மந்தரவஞ்சுவன். "தவழுகை

---

(க) "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:"

போய் " என்றவோபாதி "அம்மம்" என்கிற இவன்சொலவும் பொய்யென்று தோற்றுநிற்கச்செய்தேயும் அவன் சொலவை அநுஸரித்துச்சொல்லுகிறாள். ... ... க.

மூ.—போன்போன் மஞ்சனமாட்டி யமுதூட்டிப் போனேன் வருமள விப்பால்
வன்பாரச்சகட மிறச்சாடி வடக்கிலகம் புக்கிருந்து
மின்போனுண்ணிடையா ளோருகன்னியை வேற்றுருவஞ் செய்துவைத்த
அன்பாவுன்னை யறிந்துகோண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. உ.

பதவுரை.

பொன் போல்— பொன் போல் (வடிவழகு விளங்கும்படி)
மஞ்சனம் ஆட்டி— திருமஞ்சனம் செய்து
அமுது ஊட்டி— அமுது செய்யப் பண்ணி
போனேன்— யமுனை நீராடப்போன நான்
வரும் அளவு இப்பால் — வருவதற்கு முன்னே
வல்— வலியதாய்
பாரம்— பாரமாயிருக்கிற
சகடம்— சகடமானது
இற— கட்டுக்குலைந் தழியும்படி
சாடி— திருவடிகளாலுதைத்து
வடக்கில்— இவ்வகத்துக்கு வடக்கிலுள்ள
அகம்— அகத்திலே
புக்கு இருந்து— புகுந்து ‡ இருந்து
மின் போல்— மின்னலை யொத்ததாய்
நுண்— ஸூக்ஷ்மமான
இடையாள்— இடையையுடையளான
ஒரு கன்னியை — ஒரு நவயௌவனையான பெண்ணை
வேறு உருவம் செய்து வைத்த— ஸம்போக சிஹ்நங்களாலே மாறுபட்ட வடிவை யுடையளாம்படி பண்ணிவைத்த
அன்பா— கண்டதொன்றிலே மேல் விழும்படியான அன்பையுடையவனே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

‡ " இருந்து " என்கிறவிது – வார்த்தைப்பாடு.

வ்யா. இரண்டாம்பாட்டு. போன்னித்யாதி. திருமேனியழகு விளங்கும்படியாகத் திருமஞ்சநஞ்செய்து, " என்னிளங் கொங்கையமுத மூட்டி " என்கிறபடியே அமுது செய்யப்பண்ணி, " யமுனை நீராடப்போனேன் " என்கிறபடியே யமுனையாகிறவாற்றிலே குளிப்பதாகப்போன நான் வருவதற்குமுன்னே. வன்பாரச்சகடமிறச்சாடி. வலியதாய்க் கனவிதாயிருக்கிற சகடமானது கட்டுக்குலைந்து முறிந்துபோம்படியாக, முலைவரவுதாழ்த்துச் சீறி நிமிர்த்த திருவடிகளாலே உதைத்து. வடக்கிலகம்புக்கிருந்து. இவ்வகத்துக்கு வடவருகி லகத்திலே புக்கிருந்து. மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை. மின்போலே நுண்ணிதான இடையையுடையளாய், நவயௌவனையா யிருப்பா ளொருத்தியை. வேற்றுருவம் செய்துவைத்த. ஸம்போகசிஹ்நங்களாலே விக்ருதவேஷையாம்படி பண்ணிவைத்த. அன்பா. கண்டதொன்றிலே மேல்விழும்படியான ஸ்நேஹத்தையுடையவனே. இத்தால் - நிம்பனென்றபடி. உன்னை யறிந்துகோண்டேன். இவன் நம்மோடு ஸஜாதீயனல்லன், வ்யாவ்ருத்தனென்று உன்னை உள்ளபடி யறிந்துகொண்டேன். உனக்கஞ்சுவ னம்மந்தரவே. ஆனபின்பு, உனக்கம்மந்தர வஞ்சுவன். ... ... ... ... ...உ.

மூ.—தும்மாயத்தோடு வெண்ணெய் விழுங்கிக் குடத்தயிர் சாய்த்துப்பருகிப்
போய்ம்மாய மருதான வசுரரைப் பொன்றுவித்தின்று நீவந்தாய்
இம்மாயம்வல்ல பிள்ளைநம்பீயுன்னை யென்மகனே யென்பர் நின்றார்
அம்மாவுன்னை யறிந்துகோண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. ௩.

பதவுரை.

கும்மாயத்தொடு — குழையச் சமைத்த பருப்போடு
வெண்ணெய்— வெண்ணெயை
விழுங்கி— விழுங்கியும்
குடம்— குடத்தில் நிறைத்த
தயிர்— தயிரை
சாய்த்து— அத்தோடே சாய்த்து
பருகி— அமுது செய்தும்
பொய் மாயம்— பொய்யே ஆச்சர்யமான
மருது ஆன— மருதமங்களாய் நின்ற
அசுரரை— அஸுரர்களை
பொன்றுவித்து— விழுந்து முறியும்படி பண்ணியும்
இன்று— இப்போது
நீ வந்தாய்— நீ ஒன்றும் செய்யாதாரைப் போலே வந்தாய்;
இ மாயம்— இப்படிப்பட்ட ஆச்சர்யங்களை
வல்ல— செய்ய வல்லவனுப்
பிள்ளை நம்பி— பிள்ளைத்தனத்தால் பூர்ணனைவனே!
உன்னை— இப்படிப்பட்ட உன்னை
நின்றார்— நடு நின்றவர்கள்
என் மகன் என்பர்— ¶ என்னுடைய பிள்ளையாகச்சொல்லா நிற்பர்கள்;
அம்மா— ஸர்வஸ்வாமியானவனே!
உன்னை இத்யாதி பூர்வவத். . . . . .

வ்யா. மூன்றாம்பாட்டு. கும்மாயமித்யாதி. குழையச் சமைத்துவைத்த பருப்போடே வெண்ணெயையும் சேரவிழுங்கி. குடத்தயிரித்யாதி. குடத்திலே நிறைத்திருந்ததயிரை அத்தோடே(பா)சாய்த்(த)முதுசெய்தது.பொய்யித்யாதி.தங்கள்வேஷம் அதுவன்றிக்கேயிருக்கச்செய்தே, பொய்யே ஆச்சர்யமான மருதுகளாய்நின்ற அஸுரர்களை மறியவிழுந்து முறியும்படிபண்ணி. இன்று நீ வந்தாய். இப்போது ஒன்றும் செய்யாதாரைப்போலே நீ வந்தாய். இம்மாயம்வல்ல பிள்ளை நம்பீ. இந்த ஆச்சர்யங்களைச் செய்யவல்லனைப், பிள்ளைத்தனத்தால் பூர்ணனைவனே!. உன்னை யென்மகனே யென்பர் நின்றார். இப்படி யிருக்கிறவுன்னை உன்வாசியறியாத நடுநின்றவர்கள் "¶என்னுடைய மகன்" என்று சொல்லுவர்கள். அம்மா வுன்னை யறிந்துகோண்டேன். நான் அங்ஙனன்றிக்கே, "என்மகனன்று" என்றும், "எல்லார்க்கும் ஸ்வாமி" என்றும் உன்னை உள்ளபடி யறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு, உனக்கம்மந்தர வஞ்சுவன். ... ... ... ...ங.

மூ.—மையார்கண் மடவாய்ச்சியர்மக்களை மையன்மைசெய்தவர் பின்போய்க்
கோய்யார் பூந்துகில் பற்றித்தனி நின்று குற்றம் பலபல செய்தாய்
பொய்யாவுன்னைப் புறம்பலபேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்
ஐயாவுன்னை யறிந்துகோண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரமே. ச.

பதவுரை.

மை ஆர் — அஞ்சநத்தால் அலங்கரிக்கப்பட்ட
கண்— கண்களையுடையராய்
மடம்— மடப்பத்தை யுடையரான
ஆய்ச்சியர் மக்களை— இடைப் பெண்களை
மையன்மை செய்து— மோஹிப்பித்து
அவர் பின் போய்— அவர்கள் பின்னே போய்

¶ "என்னுடைய" வென்றது - யசோதையினுடைய வென்றபடி.

† { கொய் ஆர்— கொய்தல் நிறைந்த
பூ— அழகிய
துகில்— புடவைகளை }
பற்றி— பிடித்து
தனி நின்று— தனியனாய் நின்று
பல பல— எண்ணிறந்த
குற்றம்— தீம்புகளை
செய்தாய்— பண்ணினாய்;
பொய்யா— க்ர்த்ரிமனே!
உன்னை— உன் விஷயமாக
பேசுவ— பிறர் பேசுகிற
புறம்பல— பொல்லாங்குகள்

புத்தகத்துக்கு— ஒருபுஸ்தகமெழுதுகைக்கு
உள— தகுந்துள்ளவற்றை
கேட்டேன்— என்காதால் கேட்டேன்;
ஐயா— க்ர்த்ரிமர்க்கெல்லாம் ஸ்வாமியான
வனே!

உன்னை இத்யாதி பூர்வவத்.

---

† கொய்யார் பூந்துகிலாவது - புடவைகளின் கொய்ச்சகம். [கொய்ச்சகமென்பது 'கொசாம்' என்று உலகத்தில் சிதைந்து வழங்கும்.]

வ்யா. நான்காம்பாட்டு. மையாரித்யாதி. அஞ்சநத்தாலே அலங்க்ர்தமான கண்களையும், ஆத்மகுணங்களில் ப்ரதாநமான மடப்பத்தையும், குடிப்பிறப்பையு முடையரான பெண்களை. மையன்மைசெய்து. உன்பக்கலிலே ஸ்நேஹிநிகளாய் தாய்மார் முதலானர்க்கு வசவர்த்திநிகளாகாதபடி உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே பிச்சேற்றி. அவர்பின்போய். அவர்களுடைய பின்னேபோய். கோய்யார்பூந்துகில்பற்றி. கொய்தலார்ந் திருந்துள்ள அழகிய பரியட்டங்களைப் பிடித்து. இத்தால் - அவர்கள் பரியட்டங்களின் கொய்ச்சகங்களைப் பிடித்துக்கொண்டு, அவர்கள் பின்னேபோயென்கை. தனிநின்று குற்றம் பலபலசெய்தாய். ஏகாந்த ஸ்தலத்திலேநின்று அவாச்யமான வ்யாபாரங்களை அபரிகண்யமாம்படி செய்தாய். ஆவதென், நானொரு குற்றமும் செய்திலேன், நீ மற்றுக்கண்டாயோவென்ன பொய்யாவித்யாதி. க்ர்த்ரிமனே! உன்னைப்பொல்லாங்கு பலவற்றையும் பிறர்சொல்லுமவைகள் ஒருபுஸ்தகம் நிறைய வெழுதத்தக்கவை கேட்டேன். அவர்கள் சொல்லுமதும் நீ கேட்டதுமேயோ ஸத்யம், நான்சொன்னதன்றோ ஸத்யமென்ன; ஐயா. இதென்ன தெளிவுதான்! என்று கொண்டாடுகிறாள். அன்றிக்கே, ஐயா வென்று - க்ர்த்ரிமர்க்கெல்லாம் ஸ்வாமியானவனே யென்கிறாளாதல். : உன்னையறிந்துகோண்டேன். உன்னை அதிலோகமான வ்ருத்திசேஷ்டிதங்களை யுடையவனென் றறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு, உனக் கம்மந்தரவஞ்சுவன். ... ... ... ... ... ... ... *ச.

மூ.—முப்போதுங் கடைந்தீண்டிய வெண்ணெயினோடு தயிரும்விழுங்கிக்
கப்பாலாயர்கள் காவிற்கோணர்ந்த கலத்தோடு சாய்த்துப்பருகி
மெய்ப்பாலுண்டழு பிள்ளைகள்போல நீவிம்மிவிம்மியழுகின்ற
அப்பாவுன்னை யறிந்துகோண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே ரு.

பதவுரை.

மூன்று போதும்— காலை, உச்சி, அந்தி ஆகிற மூன்று போதிலும்
கடைந்து— கடையப்பட்டு
ஈண்டிய— திரண்ட

வெண்ணெயினோடு— வெண்ணெயோடே
தயிரும்— தயிரையும்
விழுங்கி— அமுது செய்து
ஆயர்கள்— இடையர்கள்

கப்பால்— தோளாலே
காவில்— காவடியில்
கொணர்ந்த— கொண்டுவந்த பாலை
கலத்தொடு— அந்த பாத்திரத்தோடே
சாய்த்து— சாய்த்து
பருகி— அமுதுசெய்து
மெய் பால்—உடம்பிலுண்டாகிற முலைப்பாலை
உண்டு— தாரகமாக உண்டு

அழு— அது பெறாதபோது அழுகிற
பிள்ளைகள் போல— பிள்ளைகளைப் போலே
நீ— நீ
விம்மி விம்மி— விக்கி விக்கி
அழுகின்ற— என் முலைப்பாலுண்கைக்கு அழுகிற
அப்பா— என் நாயனே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

வ்யா. இந்த்ரம்பாட்டு. முப்போதுமித்யாதி. எப்போதும் கறப்பன் கடைவன் வாய்ச் செல்லும் போலே காணும் திருவாய்ப்பாடி. சிறுகாலையும் உச்சியும் அந்தியுமாகிற மூன்று பொழுதும் கடைந்து திரண்ட வெண்ணெயோடே, அக்காலங்களெல்லாவற்றிலும் மூண்டான செறியத் தோய்த்த தயிரையும் விழுங்கி. கப்பாலித்யாதி. தோளாலே இடையர் காவிலே கொண்டுவந்த பால்களை, கொண்டுவந்த பாத்ரத்தோடே சாய்த்துப்பருகி. மெய்ப் பாலித்யாதி. உடம்பில்முலைப்பால் தாரகமாகவுண்டு, அதுபெறாதபோது அழும் பிள்ளைகளைப்போலே * என்னிளங் கொங்கையமுத மூண்கைக்கு நீபொருமிப் பொருமியழுகின்ற அப்பாவுன்னை யறிந்துகொண்டேன். இந்த அதிமாநுஷ சேஷ்டிதத்தையுடையபெரியோனே! உன்னை “மநுஷ்யஸஜாதீயனல்லன்” என்று அறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆன பின்பு, உனக்கம்மந்தரமஞ்சுவன். ... ... ... ... ... ௫.

மூ.—கரும்பார்நீள்வயற் காய்கதிர்ச்செந்நெலைக் கற்றாநிரை மண்டித்தின்ன
விரும்பாக்கன்றொன்று கொண்டு விளங்கனிவீழ வெறிந்தபிரானே
சுரும்பார்மென்குழற் கன்னியொருத்திக்குச் சூழ்வலைவைத்துத்திரியும்
அரம்பாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரமே. ௬.

பதவுரை.

நீள் வயல்— விசாலமான வயலிலே
கரும்பு ஆர்— கரும்புபோலெழுந்ததாய்
காய்— பசுங்காயான
கதிர்— கதிரையுடைய
செந்நெலை— செந்நெல் தாந்யத்தை
கன்று ஆ நிரை— கன்றுகளையுடைய பசுக் கூட்டமானது
மண்டி— மேல் விழுந்து
தின்ன— தின்னாநிற்கச் செய்தே
விரும்பா— தின்கையில் விருப்பமில்லாத
ஒன்று— ஒரு
கன்று கொண்டு— கன்றைக் கொண்டு
விள கனி— விளாவின் பழங்கள்
வீழ— சிதறி விழும்படி

எறிந்த— விட்டெறிந்த
பிரானே— உபகாரகனானவனே!
சுரும்பு ஆர்— (புஷ்பத்தில் நசையால்) வண்டுகள் படிந்திருக்கிற
மென் குழல்— ம்ருதுவான கூந்தலையுடையளான
கன்னி ஒருத்திக்கு— நவ்யளவண்ணயான ஒரு பெண் விஷயத்திலே
சூழ்—தப்பாமல் அகப்படுத்திக் கொள்ளுகிற
வலை— திருக்கண்களாகிற வலையை
வைத்து— வைத்து
திரியும்— திரியாநின்ற
அரம்பா— தீம்பனானவனே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஆறும்பாட்டு. கரும்பித்யாதி. பரந்தவயலிலே கரும்புபோலே எழுந்து பசுங்காயான கதிரையுடைய செந்நெல்லை. கற்றாநிரை. கன்றுகளோடேகூடின பசுநிரையானது. மண்டித்தின்ன. விரும்பி மேல்விழுந்து தின்னுநிற்கச்செய்தே. விரும்பாக்கன்றொன்று கொண்டு. தானும் தின்பாரைப்போலே பாவியாநிற்கச்செய்தே, தின்கையில் விருப்பமில்லாத தொரு கன்றைக்கொண்டு. விளங்கனி வீழவெறிந்தபிரானே. ஆகர்ஷகமாம்படி பழுத்துநின்ற விளாவினுடைய பழங்கள் சிதறிவிழும்படியெறிந்த உபகாரகனே. ஓரஸுரன் கன்றாய்வந்து நிற்க, ஓரஸுரன் விளாவாய்வந்துநிற்க, இத்தையறிந்து, ஒன்றையிட்டு ஒன்றையெறிந்து இரண்டையும் நிரஸித்துப்போகட்ட உபகாரத்தைச் சொல்லுகிறது. கரும்பாரித்யாதி. எப்போதுமொக்கப் பூமாறாமையாலே வண்டுகளானவை நெருங்கப்படிந்து கிடக்கும்படியிருப்பதாய், ம்ருதுவாயிருந்துள்ள குழலையுடையளாய் நவயௌவனையாயிருப்பாளொருத்திக்கு. குழல்வலைவைத்துத் திரியுமரம்பா. "வாஸுதேவன்வலை" என்றும், "தாமரைத்தடங்கண் விழிகளினகவலை" என்றும், "கார்த்தண்கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறு" என்றும் சொல்லுகிறபடியே - தப்பாமலகப்படுத்திக்கொள்ளும் திருக்கண்களாகிற வலையை எப்போதுமொக்க அவள் விஷயத்திலே வைத்து, அகப்படுமளவும் அங்யபரரைப்போலே ஸஞ்சரிக்கிற தீம்பனானவனே. உன்னையறிந்துகொண்டேன். ஏவம்பூதனானவுன்னை நன்றாகவறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். ... ... சு.

ஓ.—மருட்டார்மென்குழல் கொண்டுபொழில்புக்கு வாய்வைத் தவ்வாயர்தம்பாடிச்
சுருட்டார்மென்குழற் கன்னியர்வந்துன்னைச் சுற்றுந்தொழ நின்றசோதி
பொருட்டாய மிலே னெம்பெருமானுன்னைப் பெற்றகுற்ற மல்லான்மற்றிங்
கரட்டாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. எ.

பதவுரை.

மருட்டு ஆர்— மிக்வும் மதிமயங்கப் பண்ணுமதாய்
மெல்— ம்ருதுவான த்வநியையுடைய
குழல் கொண்டு— வேய்ங்குழலைக்கொண்டு
பொழில் புக்கு—போகத்துக்கு ஏகாந்தமான பொழிலிலே போய்ப்புகுந்து
வாய் வைத்து— அந்த வேய்ங்குழலை வாயில் வைத்து ஊதி
அ ஆயர்தம் பாடி— அவ்விடையருடைய சேரியிலுள்ள
சுருண்டு— சுருண்டு
ஆர்— பூவாலே அலங்க்ருதமாய்
மெல்— ம்ருதுவான
குழல்— கூந்தலையுடையரான
கன்னியர்— பெண்களானவர்கள்
வந்து— குழலோசைதூண்ட வந்து
உன்னை— குழலூதுகிற உன்னை
சுற்றும் தொழ— நாற்புறத்திலும் ஸேவிக்க
சோதி நின்ற— ஜ்யோதிஸ்ஸை யுடையனாய் நின்ற
எம் பெருமான்— என் நாயனே!
உன்னை— பெருந்தீம்பனான வுன்னை
பெற்ற— பிள்ளையாகப் பெற்ற
குற்றம் அல்லால்— தோஷமொழிய
மற்று— மற்றைப்படி
இங்கு— இச்சேரியிலுள்ளாரோடு
பொருள் தாயம் இலேன்— அர்த்ததாயமுடையேனல்லேன்;
அரட்டா— தீம்பனே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஏழாம்பாட்டு. மருட்டாரித்யாதி. கேட்டவர்களை மற்றொன்றறியாதபடி மருளப்பண்ணுதலால் மிக்கிருப்பதாய், *அவர்கள் செவியைப்பற்றி வாங்கும்படியாய் ம்ருதுவான

த்வங்களை யுடைத்தான வேய்ங்குழலைக்கொண்டு போகத்துக்கேகாந்தமான பொழிலிலே போய்ப்புக்குத் திருப்பவளத்திலே வைத்தூதி. அவ்வாயரித்யாதி. " க்ர்ஷ்ணன் கிடாய், பெண்கள் கிடாய் " என்று பெண்களைக் காத்துக்கொண்டுதிரியும் அவ்விடையருடையவூரில். சுருட்டாரித்யாதி. சுருண்டு, பூவாலே அலங்க்ர்தமாய், ம்ர்துவாயிருந்துள்ள குழலையுடைய பெண்களானவர்கள் குழலோசையாலே ப்ரேரிதராய்வந்து உன்னைச்சூழநின்றுதொழ, அத்தால் வந்த தேஜஸ்ஸை யுடையனுய் நின்றவனே. பொருள்தாயமித்யாதி. என்னுடைய நாதனானவனே! இப்படி தீம்பனானவுன்னைப் பிள்ளையாகப் பெற்ற குற்றமொழிய இவ்வூரிலுள்ளார் என்னோடு காறுகாறென்ன எறிவார்களோடு ஓரர்த்ததாய முடையேனல்லேன். அரட்டாவுன்னை யறிந்துகொண்டேன். இப்படி தீம்பனானவனே! உன்னை நன்றாக வறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு உனக்கம்மந்தரவஞ்சுவன். ... ... எ.

மூ.—வாளாவாகிலுங் காணகில்லார் பிறர்மக்களை மையன்மைசெய்து
தோளாலிட்டவ ரோடுதிளைத்து நீசொல்லப்படாதன செய்தாய்
கேளாராயர் குலத்தவரிப்பழி கெட்டேன் வாழ்வில்லை நந்தன்
காளாயுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவ னம்மந்தரவே. அ.

பதவுரை.

வாளா ஆகிலும்— வெறுமனே யாகிலும் [ நீ தீம்பு செய்யாதிருந்தாலு மென்று கருத்து. ]
காணகில்லார்— ( உன் மினுக்குப் பொறுதவர்கள் ) உன்னைக் காண வேண்டார்கள்; ( இப்படியிருக்கச் செய்தேயும், )
பிறர் மக்களை— அயற் பெண்களை
மையன்மை செய்து — உன்னழகாலே மயக்கி
தோளால் இட்டு — தோளாலே அணைத்து
அவரோடு — அப்பெண்களோ டொக்க நின்று
திளைத்து— விளையாடி
சொல்லப் படாதன — வாயாற் சொல்லவொண்ணுத தீம்புகளை
நீ செய்தாய்— நீ செய்தாய்;
ஆயர் குலத்தவர்— இடைக்குலத் திலுள்ளவர்கள்
இ பழி— இப்படிப்பட்ட பழியை
கேளார்— கேட்கப் பொறுர்கள்:
கெட்டேன்! — [ இது - வெறுத்துக் கைநெரித்துச்சொல்லும் வார்த்தை.]
வாழ்வு இல்லை — இச்சேரியி லெனக்கு வாழப்போகாது;
நந்தன்— ஸாதுவான நந்தகோபருடைய
காளாய்— குமாரனானவனே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

வ்யா. எட்டாம்பாட்டு. வாளாவித்யாதி. நீ தீம்பு செய்யா திருக்கிலும் உன்மினுக்கம் பொறுதவர்கள் வெறுமனேயாகிலும் உன்னைக் காணவேண்டார்கள். அதுக்குமேலே பிறர்மக்களை மையன்மை செய்து. பிறருடைய பெண்களை உன்னுடைய இங்கிதாதிகளாலே அறிவுகேட்டை விளைவித்து. தோளாலிட்ட வரோடுதிளைத்து. தோளாலே யணைத்திட்டு அவர்களோடே நின்று விளையாடி. நீ சொல்லப்படாதன செய்தாய். வாக்காற் சொல்லவொண்ணுதவற்றை நீ செய்தாய். கேளாராயர்குலத்தவரிப்பழி. இடைக்குலத்திலுள்ளவர்கள் இப்பழிகேட்கப் பொறுர்கள். கெட்டேன் வாழ்வில்லை. கெட்டேன்! , இவ்வூரில் எனக்கொருவாழ்வில்லை. அதாவது இவ்வூரில் வர்த்திக்கப் போகாதென்கை. கெட்டேனென்றது

விஷாதாதிசயத்தாலே கைநெரித்துச் சொல்லுகிற வார்த்தை. ஙந்தன்காளாய். பசும்புல் அச்சாவ மிதியாத ஸ்ரீ நந்தகோபர்பிள்ளையான நீ இப்படி செய்யக்கடவையோ. அன்றிக்கே, அவர் உன்னைநியமித்து வளர்க்காமையிறே நீ யிப்படி தீம்பனாய்த் தென்னுதல். உன்னையறிந்து கோண்டேன். பருவமிதுவாயிருக்க, செய்கிற செயல்களிதுவாகையாலே உன்னை "நாட்டார்படியல்லை" என்று அறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு உனக்கம்மந்தா வஞ்சுவன். ... ... ... ... அ.

மூ.—தாய்மார்மோர் விற்கப்போவர் தமப்பன்மார் கற்றாநிரைப் பின்புபோவர்
நீயாய்ப்பாடி யிளங்கன்னிமார்களை நேர்படவே கொண்டுபோதி
காய்வார்க்கென்று முகப்பனவேசெய்து கண்டார்கழறத்திரியும்
ஆயாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவ னம்மந்தரவே. கூ.

பதவுரை.

தாய்மார்— தாய்மாரானவர்கள்
மோர் விற்க— மோர் விற்பதற்காக
போவர்— (பெண்களை அகம்பார்க்க வைத்துவிட்டு) அயலூருக்குப் போவார்கள்;
தமப்பன்மார்— தமப்பன்மாரானவர்கள்
கன்று ஆ நிரை பின்பு— இளம்பசுக் கூட்டத்தின் பின்னே
போவர்— போகாநிற்பர்கள்;
நீ— அந்தஸமயம் பார்த்திருக்கிற நீ
ஆய் பாடி— இடைச் சேரியிலுள்ள
இள கன்னிமார்களை — நவயளவனைகளான பெண்களை
நேர்பட—உன்நினைவுக்குவாய்க்குமிடங்களில்
கொண்டு போதி— கொண்டுபோகாநின்றாய்;
காய்வார்க்கு— உன்மேல் சீறுகின்ற சிசுபாலாதிகளுக்கு
என்றும்— எப்போதும்
உகப்பனவே— உகக்கும்படியான வற்றையே
செய்து— செய்து
கண்டார்— உன் செயல்களைக் கண்டவர்கள்
கழற— (மனம் நொந்து) உறுத்திச் சொல்லும்படி
திரியும்— திரியாநிற்கிற
ஆயா— இடைக்குமாரனே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. தாய்மாரித்யாதி. பெண்களை அகம்பார்க்க வைத்து, தாய்மாரானவர்கள் மோர்விற்கப் போகா நிற்பர்கள். இடையர்க்கு ஐச்வர்யம் மிகவுமுண்டானாலும் இடைச்சிகள் மோர்விற்று ஜீவிக்குமதிறே தங்களுக்குத் தகுதியான ஜீவநமாக நினைத்திருப்பது. மோர்தான்விற்கை அரிதாயிருக்குமிறே. திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியிலும் கறப்பனகடைவன குறைவற்றிருக்கையால் அசலூர்களிலேபோய் விற்கவேண்டுகையாலே இக்காலவிளம்பம் இவனுக்கு அவகாசஹேதுவாயிறே யிருப்பது. தமப்பன்மாரித்யாதி. தாய்மார்போனால் தமப்பன்மார்தா னிருந்தாலும் இவனுக்கு நினைத்தபடி செய்யப்போகாதிறே; அதுவுமில்லாதபடி, தமப்பன்மாரானவர்கள் கற்றாவாநிரையின்பின்னே போகாநிற்பர்கள். அவை மேச்சலுள்ளவிடங்களிலே தூரப்போகையும், இவர்கள்வரத்தை நியமியாமல் அவற்றின்பின்னே போகையும், அவைமேய்ந்து வயிறுநிறைந்தாலல்லது மீளாதொழிகையும், அவை மீண்டால் அவற்றின்பின்னே இவர்கள் வருகையுமாயிறே யிருப்பது; ஆகையால் இந்தக்கால விளம்பமும் இவனுக்கு அவகாசமிறே. நீயாய்ப்பாடி யிளங்கன்னிமார்களை நேர்படவே கொண்டுபோதி. நீ திருவாய்ப்பாடியில் யுவதிகளானபெண்களை

உன்னினைவுக்கு வாய்க்கும்படி கொண்டுபோதி. அதாவது - உனக்கு அபிமதமான ஸ்தலங்களிலே கொண்டுபோகாநின்று என்றபடி. தாய்மார் தமப்பன்மார் போகையாலும், கால விளம்ப முண்டாகையாலும், அவ்வகர்தானே அபிமதஸ்தலமா யிருக்கச்செய்தேயும் "ப்ராமாதிகமாக ஆரேனும் வரக்கூடும்" என்றிறே ஸ்தலாந்தரம் தேடிப் போகவேண்டுகிறது. காய்வார்க்கென்றும் உகப்பனவேசெய்து, உன் குணத்திலும் தோஷத்தை ஆவிஷ்கரிக்குமவர்களாய், உன்பக்கல் த்வேஷபரராயேபோரும் சிசுபாலாதிகளுக்கு, 'சொல்லி பரிபவிக்கைக்கு இடம்பெற்றோம்' என்று ஸர்வகாலமும் உகக்கும்படியானவற்றைச்செய்து, கண்டார்கழறத் திரியுமாயா, காய்வாரன்றிக்கே, உனக்கு நல்லவர்களாய் நீ செய்கிற வ்யாபாரங்களைக் கண்டவர்கள் நீ செய்கிற தீம்புபொறுமல் நியமிக்கும்படி திரியாநிற்கிற ஆயனே. குல மர்யாதை தன்னையும் பார்க்கிறிலையே யென்கை. உன்னை யறிந்துகொண்டேன். நீ யிப்படி திரிந்தாயாகிலும் உன்னுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களைக் கண்ட பின்பு, உன்னை "மநுஷ்யஸஜாதீயனல்லன்" என்று அறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு, உனக்கு அம்மந்தரவஞ்சுவன். ... ... ... ... ... ... கூ

மூ.—தோத்தார் பூங்குழற்கன்னி யொருத்தியைச் சோலைத்தடங்கொண்டுபுக்கு
முத்தார் கொங்கைபுணர்ந்திரா நாழிகை மூவேழுசென்றபின் வந்தாய்
ஒத்தார்க்கொத்தன பேசுவருன்னை யுரப்பவே நானொன்று மாட்டேன்
அத்தாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவ னம்மந்தரவே. ய.

பதவுரை.

தொத்து— கொத்தாய்
ஆர்— சேர்ந்திருந்துள்ள
பூ— பூக்களணிந்த
குழல்— கூந்தலையுடையளாய்
கன்னி— நவயௌவனையான
ஒருத்தியை— ஒருத்தியை
‡ { தடம்— இடமுடைத்தான
சோலை—சோலையிலே }
கொண்டு புக்கு— அழைத்துக் கொண்டு போய்
முத்து— முத்துமாலையாலே
ஆர்— அலங்கரிக்கப்பட்ட
கொங்கை— ஸ்தநங்களிலே
புணர்ந்து— ஸம்ச்லேஷித்து
இரா— நேற்றிரவு
மூன்று ஏழு நாழிகை சென்றபின்— மூன்று யாமம் கடந்தபிறகு
வந்தாய்— வீடுவந்து சேர்ந்தாய்;
உன்னை— உன்திறத்தில்
ஒத்தார்க்கு ஒத்தன — வேண்டுவோர்க்கு வேண்டினபடி யெல்லாம்
பேசுவர்— குற்றம் சொல்லுவர்கள்;
உரப்ப — (இப்படியிருக்கிற வுன்னைக்) கோபிக்க
நான்— தாயான நான்
ஒன்றும் மாட்டேன்— எவ்வளவும் சக்தையாகிறிலேன்;
அத்தா— என் நாயனே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

‡ "தடம்" என்றது "தடீ" என்ற வடசொல்லின் விகாரமாய், 'சோலைத்தட' மென்றதற்கு - சோலைப் பிரதேசங்களிலே யென்று பொருளாகவுமாம்.

வ்யா. பத்தாம்பாட்டு. தொத்தாரித்யாதி. கொத்தாய்ச் சேர்ந்திருந்துள்ள பூக்களாலே அலங்க்ருதமான குழலை யுடையளாய், திருவாய்ப்பாடியிலுள்ள பெண்களிற்காட்டில்

" இன்னான் " என்று குறிக்கப்படுவா ளொருத்தியை. சோலைத்தடம்கொண்டுபுக்கு. இடமுடைத்தான சோலையிலே கொண்டுபுக்கு. முத்தார்கொங்கைபுணர்ந்து. முத்துவடத்தாலே அலங்க்ருதமான முலைகளிலே ஸம்ச்லேஷித்து. இராநாழிகை மூவேழு சென்றபின் வந்தாய். ராத்ரி மூன்றுயாம மற்றபின் வந்தாய். ஒத்தார்க்கொத்தன பேசுவருன்னை. உன் செயலின்றுவாகையாலே வேண்டுவார்க்கு வேண்டுவது சொல்லுவருன்னை. உனக்கு தோஷம் சொல்வார்க்கெல்லா மிடமாம்படி செய்யாநின்ற பெண்கை. உரப்பவே நானொன்றும்மாட்டேன். இப்படி யிருக்கிற வுன்னைக் கோபிக்கவென்றால் நான் ஏகதேசமும் க்ஷமையாகிறிலேன். பிள்ளைகள் தீம்புகண்டால் தாய்மார் சிக்ஷியார்களோ? " உன்னுடைய முகம் கன்றும் " என்னுமத்தாலே அது என்றைற் செய்யப்போகிறதில்லை. அத்தா. என்னுடைய நாதனே. உன்னை யறிந்துகொண்டேன். உன்னுடைய அதிமாநுஷம் கண்டபின்னை " ஆதியாம்பன் " என்றறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். ... ... ய.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—காரார்மேனிநிறத் தெம்பிரானைக் கடிகமழ் பூங்குழலாய்ச்சி
ஆராவின்னமுதுண்ணத் தருவனைம்மந்தாரே னென்றமாற்றம்
பாரார்தொல்புகழான் புதுவைமன்னன் பட்டர்பிரான் சொன்னபாடல்
ஏராரின்னிசை மாலைவல்லா ரிருடீகேச னடியாரே. கக.

புதவுரை.

கார் ஆர்— மேகத்தோடொத்த
மேனி நிறம்— திருமேனிநிறத்தையுடையனாய்
எம் பிரானை— எனக்கு உபகாரகனானவனை
கடி கமழ்— வாஸனை வீசாநின்ற
பூ— பூக்களையணிந்த
குழல்— கூந்தலையுடைய
ஆய்ச்சி— யசோதைப் பிராட்டி
ஆரா— ஒருக்காலும் தெகுட்டாததாய்
இன்— போக்யமாயிருந்துள்ள
அமுது— கொங்கை யமுதத்தை
உண்ண— அவன் உண்ணும்படி
தருவன்— தருவாளாயிருந்த
நான்— நான்
அம்மம் தாரேன் என்ற மாற்றம்— " உனக்கு அம்மந்தர அஞ்சுவன் " என்ற பாசுரத்தை
பார்— பூமிப்பரப்படங்கலும்
ஆர்— நிறைந் திருப்பதாய்
தொல்— ஸ்வாபாவிகமான
புகழான்— கீர்த்தியை யுடையராய்
புதுவை— திருப்புதுவைக்கு
மன்னன்— நிர்வாஹகரான
பட்டர் பிரான்— பெரியாழ்வார்
சொன்ன— அருளிச்செய்த
பாடல்— பாடலாகிற
ஏர் ஆர்— இயலழகாலே நிறைந்ததாய்
இன்— இனிய
இசை— இசையோடே கூடியிருந்துள்ள
மாலை— சொல்மாலையை
வல்லார்— ஓத வல்லவர்கள்
இருடீகேசன்— ஹ்ருஷீகேசனுக்கு
அடியார்— கிங்கரராகப் பெறுவர்கள்.

வ்யா. காராரித்யாதி. மேகத்தோடு சேர்ந்த திருமேனியின் நிறத்தையுடையனாய் எனக்கு உபகாரகனானவனை. கடிகமழ்பூங்குழலாய்ச்சி. நறுநாற்றம் கமழாநின்றுள்ள அழகிய குழலை யுடையளான யசோதைப்பிராட்டி. ஆராவித்யாதி. ஒருகாலும் தெகுட்டாததாய் இனிதாயிருந்துள்ள என்னிளங்கொங்கையமுதமுண்ண முன்புந்தந்துமேலும்தருவாளாயிரு

ந்த நான் உன்னை யறிந்துகொண்டபின்பு, “ உனக்கம்மந்தாரேன், அஞ்சுவன் ” என்று சொன்ன சொலவை. பாராரித்யாதி. விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியற இருந்தாரிருந்தவிடமெங்குங்கொண்டாடுகையாலே பூமியெங்குநிறைந்திருப்பதாய், ஸ்வாபாவிகமான புகழையுடையராய், திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த பாடலான. ஏராரித்யாதி. இயலழகால்மிக்கு, அதுக்குமேலே இனியவிசையோடே கூடியிருந்துள்ள ஸந்தர்ப்பத்தை ஸாபிப்ராயமாகவல்லவர்கள், இருடீகேசனடியாரே. இந்த்ரியங்களைப் பட்டிபுகிராமல் ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி நியமிக்குமவனுக்கு நித்யகிங்கரராகப் பெறுவர். ... ... ... ... ... ... ... ௧௧.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு,—தன்னேர் போன் கும்மாயம் மையார் முப்போது
கரும்பு மருட்டார் வாளா தாய்மார் தோத்தார் காரா ரஞ்சாம்.

ஆ - திருமொழி, ௨௰ - க்கு, பாட்டு - ௨௨௦.

## மூன்றும் பத்து - இரண்டாந் திருமொழி - அஞ்சனவண்ணனை, ப்ரவேசம்.

அ. “அம்மமுண்ணத்துயிலெழாய்” என்றும் “சுணைநன்றணிமுலையுண்ணத்தருவன்” என்றும் “ இவன்பருவத்துக்கு அநுகுணமான தாரகமிது ” என்றுநினைத்து காலாநுகுணமாக முலைகொடுத்துப்போரும் மாதாவான யசோதைப்பிராட்டி, இவனுடைய சேஷ்டிதங்களைக் கண்டு இவன்பக்கல் புத்ரத்வாதி ப்ரதிபத்தி குலைந்து தேவதாப்ரதிபத்தி விளைந்து, இவன் “ அம்மமுண்ணவேணும் ” என்று அழச்செய்தேயும், “ உன்னையறிந்துகொண்டேன் உனக்கம்மந்தரவஞ்சுவன் ” என்று பலகாலும் சொன்ன ப்ரகாரத்தை, தாமும் அப்படியேபேசி அநுபவித்தாராய் நின்றார்-கீழ்; அவள் அத்தை அப்போதேமறந்து, முன்போலே தன்னுடைய புத்ரனாகவே இவனை ப்ரதிபத்திபண்ணி அபிமாநித்து, ப்ராஹ்மணர்க்கு பால்யத்திலே ப்ரஹ்மசர்ய மநுஷ்டித்து, பின்பு கார்ஹஸ்த்ய மநுஷ்டிக்கை தர்மமாயிருக்குமாபோலே, இடையர்க்கும் இளம்பருவத்தில் கன்றுகள்மேய்த்து, பக்வரானபின்பு பசுநிரைமேய்க்கை ஜாத்யுசிதமாகையாலே, (க) “ [illegible] ” என்கிறபடியே கன்றுகள்மேய்க்கத் தகுதியான பருவத்தை ப்ராப்தனான இவனை*சிறுகாலே யூட்டி யொருப்படுத்தி, கன்றுகள் மேய்க்கும்படி போகவிட்டு, அவன்போனவநந்தரம் க்ஷணகாலவிச்லேஷம் பொறுக்கமாட்டாதவளாகையாலே அவன் ஊரிலே நின்று செய்யும் ஸ்வைரவிஹாரங்களையெல்லாம் பரக்கச்சொல்லி, இப்படி செய்து திரியாமல் “ கன்றுகளின் பின்னே இவனை என்செய்யப்போகவிட்டேன்” என்று இவனுடைய மார்த்தவத்தையும், போகிறவிடத்தின் காடிந்யதைக்ஷண்யங்களையு மநுஸந்தித்து, “ஸுகுமாரனை விவனை இப்படியிருக்கிற காட்டிலே போகவிட்டேனே ” என்றும், அவ்வளவுமன்றிக்கே, “ குடையும் செருப்பும் கொடாமல் வெய்யிலும் கல்லும் முள்ளுமான தேசத்திலே போகவிட்டேனே ” என்றும் பகுமுகமாக க்லேசித்துச்சொன்ன ப்ரகாரத்தை, ததவஸ்தாபந்நராய்க்கொண்டு தாமுமப்படியேபேசி அநுபவிக்கிறார்- இத்திருமொழியில். ... ... ... ... ... *

(க) “ ஸர்வஸ்ப ஜாதஶ்பாலள வத்ஸபாலள பபூவது: ”

மூ.—அஞ்சனவண்ணனை யாயர்கோலக்கொழுந்தினை
மஞ்சனமாட்டி மனைகடோறுந்திரியாமே
கஞ்சனைக்காய்ந்த கழலடிநோவக்கன்றின்பின்
என்செயப் பிள்ளையைப் போக்கினேனெல்லேபாவமே. க.

பதவுரை.

அஞ்சனம்— மைபோன்ற
வண்ணனை— திருமேனியை யுடையனாய்
ஆயர் கோலம்—இடைக்கோலம்பூண்டவனாய்
கொழுந்தினை— அவ்விடையர்களுக்குத்தலைவனான கண்ணனை
மஞ்சனம் ஆட்டி— நீராட்டி
மனைகள்தோறும்— பிறர்மனைகள்தோறும்
திரியாமே— (தன்மனையிற்போல்) திரியக் கண்டிருக்கப்பெறாமல்
கஞ்சனை— கம்ஸனை
காய்ந்த— உதைத்த
கழல்— வீரக்கழலை யுடைய
அடி— திருவடிகளானவை
நோவ— நோம்படியாக
கன்றின்பின்— புல்லைக்கண்டு பரந்தோடித் திரியும் கன்றுகளின்பின்னே
பிள்ளையை— என்பிள்ளையை
என் செய— ஏதுக்காக
போக்கினேன்— போகவிட்டேன் ;
எல்லே பாவமே—என்னே! நான்பண்ணின பாவமிருந்தபடியென்! என்று வெறுத்துச்சொல்லுகிறாள்.

வ்யா. முதற்பாட்டு. அஞ்சனவண்ணனை. * கண்டவர்கள் கண்குளிரும்படி அஞ்சநம்போலே யிருண்டிருக்கிற திருமேனியை யுடையவனை. அஞ்சநம் - மை. மைப்படி மேனியிறே. ஆயரித்யாதி. கன்றுகளின்பின்னேபோகிறபோதை நடையின் த்வரையும் திருமேனியின் குறுவெயர்ப்பும் அலைந்த திருக்குழல்களும் திருக்கையில் பிடித்த பொற்கோலுமான ஆயர்கோலத்தையுடையனாய், அவர்களுக்கு முன்னோடிக் கார்யம்பார்க்கும் தலைவனானவனை. அன்றிக்கே, வேரிலே வெக்கைதட்டினால் கொழுந்து முற்பட வாடுமாபோலே அவர்களுக்கு ஒருநோவுவந்தால் முதல் தன்முகம் வாடும்படியிருக்கையாலே "கொழுந்து" என்கிறதாகவுமாம். "ஆயர்கொழுந்தாய்" என்றாரிறே ஆழ்வார். மஞ்சனமித்யாதி. "பொன்போல் மஞ்சனமாட்டி" என்கிறபடியே திருமேனியழகு விளங்கும்படி திருமஞ்சனம் செய்து, தன் மனைபோலே பிறர்மனைகடோறும் வ்யாபரித்துத் திரியக்கண்டிருக்கப்பெறாதே. கஞ்சனைக்காய்ந்தகழலடிநோவ. கடிநப்ரக்ருதியான கம்ஸனை உதைக்கையாலே நொந்ததிருவடிகளானவை கல்லும் கரடுமான காட்டுவழியிலே நடக்கையாலே மிகவும் நோம்படியாக. கழலடி. வீரக்கழலையுடைத்தான திருவடிகளென்கை. கன்றின்பின் என்செயப்பிள்ளையைப் போக்கினேன். ஓரிடத்தில் நில்லாதே பரந்தோடித்திரியும் கன்றுகளின் பின்னே ம்ருதுப்ரக்ருதியான பிள்ளையை ஏதுக்காகப் போகவிட்டேன். இவன் பக்வனாய் சத்ருஜயம்பண்ண வல்லனானாலும் "பிள்ளை" என்றிறே இவள் சொல்லுவது. எல்லே பாவமே. என்னே! நான் பண்ணின பாபமிருந்தபடி என்! என்று வெறுத்துச்சொல்லுகிறாள். ... ... ... ... ... க.

மூ.—பற்றுமஞ்சள்பூசிப் பாவைமாரொடு பாடியில்
சிற்றில்சிதைத்தெங்குந் தீமைசெய்துதிரியாமே
கற்றுத்தூளியுடைவேடர் கானிடைக்கன்றின்பின்
எற்றுக்கென்பிள்ளையைப் போக்கினேனெல்லேபாவமே. உ.

பதவுரை.

பற்று— பற்றும்படியான
மஞ்சள்— மஞ்சளை
பூசி— திருமேனியில் பூசிக்கொண்டு
பாடியில்— ஆய்ப்பாடியிலுள்ள
பாவைமாரொடு— பெண்களோடே
சிறு இல்— தன்னை உபேக்ஷித்து விளையாடுகிறவர்களுடைய மணற்கொட்டகங்களை
சிதைத்து— திருவடியாலழித்து
எங்கும்— எவ்விடங்களிலும்
தீமை செய்து— இப்படிப்பட்ட தீம்புகளைச் செய்து

திரியாமே — திரியாதபடி
கன்று — கன்றுகளுடைய
தூளி உடை — தூளிகளாலே வ்யாப்தமாய்
வேடர் — வேடர் திரிகிற
கானிடை — காட்டிலே
கன்றின்பின் — கன்றுகளின் பின்னே
என் பிள்ளையை— என்னுடைய கண்ணனை
எற்றுக்கு — எதுக்காக
போக்கினேன் — போகவிட்டேன்?
எல்லே! பாவமே.

வ்யா. இரண்டாம்பாட்டு. பற்றுமஞ்சள்பூசி. ஊரிற் பெண்கள் தங்களுக்குப் பூசுகைக்கு மஞ்சள் அரைத்தால்$பற்றுப்பார்ப்பது இவனுடம்பிலேயாய்த்து. ஒருத்தர் ‡இழுகினவிடத்திலே ஒருத்தரிழுகாதே தனித்தனியேயிழுகி, பற்றுப்பார்க்கையாலே திருமேனியெங்கும் மஞ்சள்பூசினாற்போலேயிருக்குமாய்த்து. அத்தைப்பற்ற "பற்றுமஞ்சள்பூசி" என்கிறாள். பாடியில்-பாவைமாரோடு. திருவாய்ப்பாடியிலுள்ள பெண்களோடே. சிற்றில் சிதைத்து. தன்னை உபேக்ஷித்திருந்து விளையாடுகிறவர்களுடைய கொட்டகங்களையழித்து. எங்கும் தீமைசெய்து திரியாமே. இப்புடைகளிலே எங்கும் தீம்புகளைச்செய்து திரியாதபடியாக. இப்படி திரியக்கண்டிருக்கைபோலே காணும் இவள்தானுகப்பது. கற்றுத்தூளியுடை வேடர் கானிடை. முன்வருகிறவர்களைத் தெரியாதபடி கன்றுகளினுடைய தூளியாலே வ்யாப்தமாய் ¶ அடிச்சுப்பறிக்கும் வேடர் ஸஞ்சரிக்கிற காட்டிலே. கன்றின்பின் எற்றுக்கென்பிள்ளையைப் போக்கினேன். புறம்பொன்றையும் பார்க்கவொட்டாதே தன்பின்னே ஓடித்திரியப்பண்ணும் கன்றுகளின்பின்னே என்ன ப்ரயோஜநத்துக்காக என்பிள்ளையைப் போகவிட்டேன். எல்லே பாவமே. பூர்வவத். ... ... ... ... ... ... ... ... உ.

மூ.—நன்மணிமேகலை நங்கைமாரொடு நாடோறும்
பொன்மணிமேனி புழுதியாடித் திரியாமே
கன்மணிநின்றதிர் கான்தரிடைக்கன்றின்பின்
என்மணிவண்ணனைப் போக்கினேனெல்லேபாவமே. ௩.

பதவுரை.

என்— எனக்கு அநுபவிக்கலாம்படியான
மணி வண்ணனை—நீலமணிபோன்ற வடிவையுடையவனை

நல்— லோகோத்தரமான
மணி— நவமணிகள் பதித்த
மேகலை— மேகலையையுடையராய்

$ பற்றுப்பார்க்கை- பற்றும், பற்றுதென்று பரீக்ஷை பார்க்கை. ‡ இழுகுதல்-பூசுதல்.
¶ "அடிச்சு" என்றது— "அடித்து" என்றதற்குப்போலி.

நங்கைமாரோடு — ஸௌந்தர்ய பூர்த்தியை யுடையரான பெண்களோடே
பொன் — அழகிய
மணி — நீலரத்நம்போன்ற
மேனி — திருமேனியானது
நாள்தோறும் — ப்ரதிதிநமும்
புழுதி ஆடி — புழுதியிலளைந்து
திரியாமே — திரியாதபடி
கல் — மலையானது
மணி நின்று அதிர் — (இவன் கன்றுகளை யழைக்கிற த்வநியாலும், அவை கூப்பிடுகிற த்வநியாலும்) ப்ரதித்வநி யெழும்பும்படியான
கான் அதரிடை — காட்டுவழியிலே
கன்றின் பின் — கன்றுகளின் பின்னே
போக்கினேன் —; எல்லே பாவமே.

வ்யா. மூன்றாம்பாட்டு. நன்மணியித்யாதி. நல்லரத்நங்களாலே சேர்க்கப்பட்டமேகலையையுடையராய், ஜாத்யுசிதமான குணபூர்த்தியையுடையரான பெண்களோடே ஒருநாளிரண்டுநாளன்றிக்கே நாடோறும். பொன்னித்யாதி. அழகிய நீலரத்நம்போலேயிருக்கிற திருமேனி அவர்களோடு இட்டீடுகொள்ளுகையாலே புழுதியாடித் திரியாதபடியாக. * மஞ்சனமாட்டி மனைகடோறும் திரியக்காண்பதிலும் இப்படி புழுதியாடித் திரியக்காண்கைபோலே காணும் இவள்தானுகந்திருப்பது. கன்மணியித்யாதி. “கன்று மேய்த்து விளையாடவல்லானை வரைமீ கானில்” என்கிறபடியே மலைமேல் காடுகளிலே கன்றுகளை மேய்க்கையாலே ஜாத்யுசிதமாக இவன் கன்றுகளை யழைக்கிற த்வநியாலும், அவைதான் கூப்பிடுகிற த்வநியாலும், அக்குன்றான மலையானது மணித்வநிபோலே நின்று ப்ரதித்வநி எழும்படியான காட்டு வழியிலே கன்றின்பின்னே. என் மணிவண்ணனைப் போக்கினேன். ஏதேனுமொன்றைக் கண்டவாறே வெருண்டோடுகிற கன்றுகளின்பின்னே, எனக்கநுபாவ்யமான நீலரத்நம்போன்ற வடிவையுடையவனைப் போகவிட்டேன். எல்லேபாவமே. ... ... ... ௩.

மூ:—வண்ணக்கருங்குழன் மாதர்வந்தலர்தூற்றிடப்
பண்ணிப்பலசெய்திப்பாடி யெங்குந்திரியாமே
கண்ணுக்கினியானைக் கானதரிடைக்கன்றின்பின்
எண்ணற்கரியானைப் போக்கினே னெல்லேபாவமே. ௪.

பதவுரை.

வண்ணம் — அழகியதாய்
கரு — கறுத்திருந்துள்ள
குழல் — கூந்தலையுடையரான
மாதர் — ஸ்த்ரீகளானவர்கள்
வந்து — அரைகுலையத்தலைகுலையவோடிவந்து
அலர்தூற்றிடப்பண்ணி — பழிதூற்றும்படியாகப்பண்ணி
பல செய்து — அளவற்ற தீம்புகளைச் செய்து
இப்பாடி எங்கும் — இச்சேரியெங்கும்
திரியாமே — திரியாதபடி
கண்ணுக்கு — கண்களுக்கு
இனியானை — போக்யனாய்
எண்ணற்கு — ‘இப்படிப்பட்டவன்’ என்று நினைக்கைக்கு
அரியானை — அரியனானவனை
கானதரித்யாதி பூர்வவத்.

வ்யா. நான்காம்பாட்டு. வண்ணமித்யாதி. வண்ணம் - அழகு. அழகியதாய்க் கறுத்திருந்துள்ள குழலையுடையரான ஸ்த்ரீகளானவர்கள் தலைகுலையவோடிவந்து பழிதூற்றும்படியாகப்பண்ணி. பலசெய்திப்பாடியெங்கும் திரியாமே. ‘பல’ என்னுமதொழிய இத்தனை

யென்று பரிகணிக்க வொண்ணுதபடியான தீம்புகளைச் செய்து இவ்வூரெங்கும் திரியாதபடியாக. அலர்தூற்றுகையும் இவனிப்படி செய்கையுந்தானே ரஸமாயிருக்கும்போலே காணும் இவளுக்கு. கண்ணுக்கினியானை. தீம்பாலே நெஞ்சுகள் புண்பட்டாலும் அவற்றைக் கண்வாங்கவொண்ணுதபடி தர்ஷ்டிப்ரியனு யிருக்குமவனை. எண்ணற்கரியானை. ஸ்வயத்நத்தாலே பெறப்பார்ப்பார்க்கு நினைக்கைக்கும் அரியனுனவனை. கானதரிடைக்கன்றின்பின் - போக்கினேன். இப்படி துர்லபனுனவனைக் காட்டுவழியிலே கன்றுகளின்பின்னே போகவிட்டேன். எல்லேபாவமே. ... ... ... ... ... ச.

மூ.—அவ்வவ்விடம்புக்கவ்வாயர் பெண்டிர்க்கணுக்கனுய்க்
கோவ்வைக்கனிவாய் கொடுத்துக் கூழமைசெய்யாமே
எவ்வுஞ்சிலையுடைவேடர் கானிடைக்கன்றின்பின்
தெய்வத்தலைவனைப் போக்கினே னெல்லேபாவமே. ரு.

பதவுரை.

தெய்வம்— தேவர்களுக்கு
தலைவனை— நிர்வாஹகனுனவனை
அ அ இடம்— மச்சு, மாளிகை முதலான அவ்வவ இடங்களிலே
புக்கு— ஏகாந்தமாகச் சென்றுபுக்கு
அ ஆயர் பெண்டிர்க்கு — அவ்விடைப் பெண்களுக்கு
அணுக்கனுய்— அந்தரங்கனுய்
கொவ்வை கனி— கோவைக்கனியோடொத்த
வாய்— திருவதரத்தை
கொடுத்து — அவர்களுக்கு ஜீவநமாகக் கொடுத்து
கூழமை செய்யாமே— கூழ்மைத்தனமடித்துத் திரியாதபடி
எவ்வும்— பயங்கரமாக
சிலை } உடை } வில்லைக் கையிலேயுடைய
வேடர்— வேடர் திரிகிற
கானிடை— காட்டிலே
கன்றின் பின் போக்கினேன்; எல்லே பாவமே.

வ்யா. ஐந்தாம்பாட்டு. அவ்வவ்விடம்புக்கு. * மச்சொடு மாளிகை நிலவறை முதலான அவ்வவ ஸ்தலங்களிலே பிறர்க்குத் தெரியாதபடி சென்றுபுக்கு. அவ்வாயர்பெண்டிர்க்கணுக்கனுய். அவ்வவ ஸ்தலங்களிலிருந்த இடைப்பெண்களுக்கு அந்தரங்கனுய். அதாவது அவர்கள் (க)புத்பநீநமாகத்தன்னைச் சமைத்துவைக்கை. கோவ்வைக்கனிவாய் கொடுத்து. கோவைப் பழம்போலே யிருக்கிற திருவதரத்தை அவர்களுக்கு ஜீவநமாகக்கொடுத்து. கூழமை செய்யாமே. கூழ்மைத்தனமடித்துத் திரியாமே. கூழமையாவது- " உன்னையல்லதறியேன், உன்னுலல்லது தரியேன் " என்று † அவரவர்க்கே யற்றுனுய்ப் பரிமாறுகை. எவ்வும் சிலையுடை வேடர்கானிடை. எவ்வும்சிலை யென்றது – " எவ்வும் வெவ்வேல் " என்னுமாபோலே, கண்டவர்களுக்கு பயங்கரமாய்க்கொண்டு துக்கத்தைப் பண்ணுநின்றுள்ள சிலையென்னுதல். அன்றிக்கே, "ஏவும்" என்கிறவித்தை, "எவ்வும்" என்று குறைத்துக்கிடக்கிறதாய், " ஏ " என்று - அம்புக்குப்பேராய், அம்போடே சேர்ந்த சிலையென்னவுமாம். முற்பட்ட யோஜநைக்கு, எவ்வுமென்றது-‡எவ்வத்தைப் பண்ணுநிற்கு மென்றபடி; பிற்பட்ட

(க) வ-ஶ்யீந. † தத்தெகநிரதனுயென்றபடி. ‡ எவ்வம்- துன்பம்.

யோஜனைக்கு எவ்வும் என்கிறவிடத்தில் வகரவொற்று, கீழிலடிகளுக்குச் சேரவேண்டுகை யாலே வந்துகிடக்கிற வித்தனை. இப்படி யிருந்துள்ள சிலையையுடையரான வேடர் வர்த்திக்கிற காட்டிடத்திலே. கன்றின்பின் தெய்வத் தலைவனைப் போக்கினேன். ஸ்வைர கதிகளான கன்றுகளின்பின்னே தேவர்களுக்குத் தலையானவனைப் போகவிட்டேன். எல்லேபாவமே. ௫.

மூ.—மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய்ப்
படிறுபலசெய்திப்பாடி யெங்குந்திரியாமே
கடிறுபலதிரி கானதரிடைக் கன்றின்பின்
இடறவென்பிள்ளையைப் போக்கினே னெல்லேபாவமே. ௬.

பதவுரை.

வெண்ணெய்— வெண்ணெயை
மிடறு— கழுத்திலே
மெழுமெழுத்து ஓட— (உறுத்தாமல்) மெழுமெழுத்து உள்ளே போடும்படி
விழுங்கி— அமுது செய்து
போய்— புறம்பு போய்
பல— அளவற்ற
படிறு—தீம்புகளை
செய்து— செய்து
இ பாடி எங்கும்— இச்சேரியெங்கும்
திரியாமே— திரியாதபடி
பல கடிறு— பல காட்டானைகள்
திரி— திரியா நின்றுள்ள
கான் அதரிடை— காட்டுவழியிலே
கன்றின் பின்— கன்றுகளின் பின்னே
இடற— தட்டித் திரியும்படி
என் பிள்ளையை — ஸுகுமாரனை என் கண்ணனை
போக்கினேன் எல்லே பாவமே.

வ்யா. ஆறும்பாட்டு. மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய். இத்தால் - வெண்ணெய் விழுங்கும்போதை அநாயாஸம் சொல்லுகிறது. அதாவது - ஓதநபூபாதிகள் அமுதுசெய்யும்போது குறிக்கொண்டு திருப்பவளத்திலே இட்டிருந்து மென்று மெள்ள மிடற்றுக்குக்கீழே யிழிச்சவேணுமிறே; அங்ஙனன்றிக்கே, "தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய" என்றும், "தடாநிறைந்த வெள்ளிமலையிருந்தாலொத்த வெண்ணெயை வாரிவிழுங்கிட்டு" என்றும் சொல்லுகிறபடியே வெண்ணெயினுடைய ஸம்ர்த்தியைக்கண்டு ப்ரியப்பட்டு அபிநிவேசாதிசயத்தாலே திருக்கையைவிரித்து நிறையவள்ளி "கைகலந்துண்டான்" என்கிறபடியே இடக்கையாலும் வலக்கையாலும் வாரியமுது செய்யும்போது ஒருபருக்கை யில்லாமையாலே மிடற்றிலுறுத்தாமல் மெழுமெழுத்து உள்ளே போடும்படியாயிறே யிருப்பது. ஆகையால் இது இவன் ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்திருக்குமிறே. இப்படி வெண்ணெயை யமுதுசெய்து, கவ்யாந்தரங்களிற் காட்டிலும் இவன் விரும்பியிருப்பது வெண்ணெயேயிறே. * ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்கைக்காகவிறே வந்தவதரித்ததும். விழுங்கிப்போயென்றது - விழுங்கியிட்டென்னுதல்; ஸ்வக்ர்ஹத்திலே இப்படி வெண்ணெயை விழுங்கிப் புறம்போயென்னுதல்.

படிறுபலசெய்து. படிறு - தீம்பு. பலவென்கையாலே - அதுக்கு எண்ணில்லாமை சொல்லுகிறது. "பந்துபறித்துத் துகில்பற்றிக்கீறிப் படிறன் படிறுசெய்ய" என்கிற படியே விளையாடுகிற பெண்கள்கையில் லீலோபகரணங்களைப் பறிப்பது, அவர்கள் புடை

ணைகளைப் பற்றிக் கிழிப்பது, சிற்றில்களை யழிப்பது, "தொட்டுதைத்து நலியேல்" "எம்மைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்கிறபடியே அவர்களோடே இட்டுக்கொண்டு மெய்ப்பிணக் கிடுவதாய்ச் செல்லும் வ்யாபாரங்களுக்கு ஓரவதியில்லையிறே. இவன் செய்யுமவை அவாச்யமுமாய் அஸங்க்யேயமுமா யிருக்கையாலேயிறே "படிறு" என்றும் "பல" என்றும் இவள் அடக்கிச் சொல்லிவிட்டது. இப்படி செய்து இப்பாடியெங்கும் திரியாமே. ஓரகமிரண்டகத்தள வன்றிக்கே, ஒருதெரு இரண்டுதெருவளவு மன்றிக்கே, பஞ்சலக்ஷம் குடியாய் ஒருகோல் ஒருமனையான இத்திருவாய்ப்பாடியெங்கும் இப்படி திரியாதபடியாக. "அஞ்சவுரப்பாள்யசோதையாணாட விட்டிட்டிருக்கும்" என்கிறபடியே இவன் இப்படி செய்யாநின்றால் பயப்பட நியமியாதே "நம்முடைய பிள்ளையும் ஸமர்த்தனாய் இப்படி செய்யப்பெற்றோம்" என்று இது தன்னைக்கண்டு உகந்திருக்குமவளிறே. ஆகையாலிறே இப்படி திரியாதபடி போகவிட்டேனென்று க்லேசிக்கிறது.

கடிறுபலதிரி. களிறுகள் பலவும்திரிகிற. "கெளிறு" என்கிற மத்ஸ்யத்தை, "கெடிறு" என்னுமாபோலே, களிறு என்கிற வித்தை, "கடிறு" என்கிறது. கருடனை "கருளன்" என்று டகாரத்துக்கு ளகாரமாகச் சொல்லுகிறாப்போலே, களிற்றை "கடிறு" என்று ளகாரத்துக்கு டகாரமாகச் சொல்லுகிறது. ஆனைகள் பலவும் திரிகிற வென்கையாலே, "காட்டானைகள் ஆளைக்கண்டால் ஓடித்தொடர்ந்து விழவிட்டுக் கொல்லும்" என்று அஞ்சிச் சொல்லுகிறாள். கானதரிடை. காட்டுவழியிடத்திலே. அதாவது- சிற்றடிப்பாடாகையாலே இடவாய் வலவாய்ப்போக இடமற்றிருக்குமிறே. கன்றின்பின். அதிலும் தன்னிஷ்டத்திலே போய் வருகையன்றிக்கே, புல்லுக்கண்டவிடத்திலே நுழைந்து போகாநிற்கும் கன்றுகளின் பின்னே திரியவேணுமே. இடறவென்பிள்ளையைப் போக்கினேன். இப்படி தட்டித்திரியும் படியாக ஸுகுமாரனான வென்பிள்ளையைப் போகவிட்டேன். எல்லேபாவமே. ... ... ௬.

மூ.—வள்ளிநுடங்கிடைமாதர் வந்தலர்தூற்றிடத்
துள்ளிவிளையாடித் தோழரோடு திரியாமே
கள்ளியுணங்குவெங் கானதரிடைக்கன்றின்பின்
புள்ளின்றலைவனைப் போக்கினேனெல்லே பாவமே. ௭.

பதவுரை.

வள்ளி— இளங்கொடி போன்று
நுடங்கு— துவளா நின்றுள்ள
இடை— இடையையுடைய
மாதர்— பெண்களானவர்கள்
வந்து— ஓடிவந்து
அலர் தூற்றிட— பழிதூற்றும் படியாக
துள்ளி— (நிலத்தில் மிதித்து நடவாதே) துள்ளிக்கொண்டு
விளையாடி— விளையாடி
தோழரோடு— தோழன்மார்களோடு
திரியாமே— திரியாதபடியாக
கள்ளி— (மழையில்லாக் காலத்திலும் பசுமைமாறுத) கள்ளியானது
உணங்கும்— பால்வற்றி உலரும் படியாய்
வெம்— வெப்பத்தையுடைய
கான் அதரிடை— காட்டுவழியிலே
புள்ளின் தலைவனை— பெரிய திருவடிக்கு நாதனானவனை

போக்கினேன்;—எல்லே பாவமே.

வ்யா. ஏழாம்பாட்டு. வள்ளியித்யாதி. வள்ளி- கொடி. கொடிபோலே நுடங்குகிற இடையையுடையரான பெண்கள் வந்து தங்கள் திறத்தில் இவன்செய்த படிறுகளைச்சொல்லிப் பழிதூற்ற. உளைய விளையாடினால் பழிதூற்றுமவர்களிறே. துள்ளிவிளையாடித் தோழரோடு திரியாமே. இப்படி இவர்கள்வந்து பழிதூற்றாநின்றால் ஒருசற்றும் பயமின்றிக்கே இது தன்னையே தனக்கேற்றமாகக்கொண்டு கர்வித்து, குழக்கன்றுகள் செருக்காலே துள்ளுமாபோலே நிலத்தில் மிதித்து நடவாதே துள்ளிக்கொண்டு விநோதித்து * தன்னேராயிரம் பிள்ளைகளான தோழன்மாரோடே திரியாதபடியாக. கள்ளியுணங்குவெங்கானதரிடைக் கன்றின்பின். அநாவர்ஷ்டியாலும் பசுமைமாறாத கள்ளியானது நிலவெம்மையாலே பால்வற்றிப் பசுமையழிந்து உலரும்படி அத்யுஷ்ணமான காட்டுவழியிலே கன்றுகளின்பின்னே. புள்ளின் தலைவனைப்போக்கினேன். பெரியதிருவடிக்கு நாயகனாய் அவன்மேற்கொண்டு ஸஞ்சரிக்குமதொழிய ஒருகாலமும் கால்நடைதந்து திரியாதவனைப் போக்கினேன், எல்லேபாவமே. எ.

மூ.—பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்ட வப்பாங்கினால்
என்னிளங்கொங்கை யமுதமூட்டி $ யெடுத்தியான்
பொன்னடிநோவப்புலரியே கானிற்கன்றின்பின்
என்னிளஞ்சிங்கத்தைப் போக்கினேனெல்லே பாவமே. அ.

பதவுரை.

பத்து இரண்டு திங்கள் — பன்னிரண்டு மாஸம்
வயிற்றில் கொண்ட— (பிள்ளைக்கு நலுக்கம் வாராமல்) வயிற்றிலே வைத்து நோக்கின
அப்பாங்கினால்— மிகப்பாங்காக நடத்திப்போந்த ஸ்நேஹத்தாலே
யான்— தாயான நான்
என்— என்னுடைய
இள— குழைந்திருக்கிற
கொங்கை அமுதம்— முலையின் பாலை
ஊட்டி எடுத்து— ஊட்டி வளர்த்து
என்— எனக்கு
இள சிங்கத்தை— இளஞ்சிங்கம் போன்றவனை
பொன்— ஸுகுமார ஸுந்தரமான
அடி— திருவடிகள்
நோவ— நோம்படியாக
புலரி— விடியற் காலத்திலே
கானில்— காட்டிலே
கன்றின் பின்— கன்றுகளின் பின்னே
போக்கினேன் - ; எல்லே பாவமே.

வ்யா. எட்டாம்பாட்டு. பன்னிருதிங்கள். (க) "த_த்ஸூா உமெஸா நவ" என்கிறபடியே சக்ரவர்த்திதிருமகனைப்போலே இவனும் பன்னிரண்டுமாஸம் கர்ப்பவாஸம்பண்ணியிறே பிறந்தது. கர்ப்பிணிகளான ஸ்த்ரீகள் தங்களுடைய ஆதரத்தால், ஸ்திதி கமந சயநாதிகளால் கர்ப்பத்திலிருக்கிற பிள்ளைகளுக்கு நலுக்கம்வாராதபடி பேணிக்கொண்டிறே திரிவது; அப்படியே இவளும் பன்னிரண்டுமாஸமும் ஒருநலுக்கம் வாராதபடி பேணி தன் வயிற்றிலேவைத்துக்கொண்டிருந்த ஸ்நேஹவிசேஷத்தைச் சொல்லுகிறாள்—பன்னிரு திங்கள் வயிற்றிற்கொண்ட வப்பாங்கினால் என்று. என்னிளங்கொங்கை யமுதமூட்டி யெடுத்தியான். வயிற்றிலிருந்தகாலம் நலுங்காமல் நோக்கினவள், பிறந்துவளருகிறகாலத்தில் நலுங்கவிடாளிறே; ஆகையாலே இவனுடைய பருவத்துக்கீடான தாரகமிட்டு தானெடுத்து வளர்த்துக்

$ "...உக்குறள்...யவ்வரினிய்யாம்" என்ற நன்னூற் சூத்திர முணர்க.
(க) "ததச்சத்வாதசேமாஸே"

கொண்டு போந்தபடி சொல்லுகிறாள். இப்படி ஸ்நேஹியான வென்னுடைய இளமுலையில் பாலையூட்டி யானெடுத்து. பிள்ளை முழுசி முலை நெருடுங்காலத்தில் "வாக்கு" என்று இருக்கையன்றிக்கே, குழைந்திருக்கும்படியைப்பற்ற " இளமுலை" என்கிறது. கொங்கையமுதமென்கையாலே- முலைப்பாலென்கிறது. ஊட்டியெடுத்தியாவென்றது- நிலத்தில் விடாமல் ஒக்கலையிலெடுத்துக்கொண்டுதிரிந்து வளர்த்துவைத்தேனென்கை. பொன்னடிநோவப் புலரியேகானிற் கன்றின்பின். *தண்போதுகொண்ட தவிசு " நெரிஞ்சி" என்னும்படி அத்யந்தம் ம்ருதுவாய் ஸ்பர்ஹணீயமான திருவடிகள் கடிநஸ்தலத்திலே நடக்கையாலே உளைந்து நோம்படியாக, சிறுகாலே காட்டிலே மேய்ச்சல் கண்டவிடத்திலேயோடும் கன்றுகளின் பின்னே. என்னிளஞ்சிங்கத்தைப் போக்கினேன். என்னுடைய பிள்ளையாய் நான் சீராட்டி வளர்க்கையாலே ஸிஹ்மக்கன்றுபோலே செருக்கித்திரிகிறவனைப் போகவிட்டேன். எல்லேபாவமே. ... ... ... ... ... ... ... ... அ.

மூ:—குடையுஞ்செருப்புங் கோடாதே தாமோதரனைநான்
உடையுங்கடியனவூன்று வெம்பரற்களுடைக்
கடியவெங்கானிடைக் காலடிநோவக் கன்றின்பின்
கோடியேனென்பிள்ளையைப் போக்கினேனெல்லே பாவமே. கூ.

பதவுரை.

குடையும்— (வெய்யிலுக்கு ரக்ஷகமான) குடையையும்
செருப்பும்— (நிலவெம்மை முதலியவற்றுக்கு ரக்ஷகமான) செருப்பையும்
கோடாதே— கொடாமல்
தாமோதரனை— வயிற்றில் கயிற்றுத்தழும்பையுடையவனான கண்ணனை
நான்— தாயான நான்
உடையும்— (ஸூர்யன் வெப்பத்தாலே) பிளந்து கிடப்பனவாய்
கடியன— கூரியனவாய்க் கொண்டு
ஊன்று— காலிலே உறுத்துவனவாய்
வெம்— கால் வைக்க முடியாதவையான
பரற்கள் உடை— பருக்காங்கற்களை யுடைத்தாய்
கடிய வெம்— அத்யுஷ்ணமான
கானிடை— காட்டிலே
கால் அடி நோவ— உள்ளடி நோம்படியாக
கன்றின் பின்— கன்றுகளின் பின்னே
கொடியேன்— கடிநசித்தையான நான்
என் இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. குடையும் செருப்பும் கோடாதே. வெயிலுக்கு ரக்ஷகமான குடையையும், அடிச்சூட்டுக்கும் முள்ளு முதலானவற்றுக்கும் ரக்ஷகமான செருப்பையும் கொடுத்து விடாதே. தாமோதரனை நான். எனக்கு பவ்யனாய் நான் கட்டினகட்டு அவிழ்க்க மாட்டாமலிருந்த பிள்ளையானவனை நான். உடையுங் கடியனவூன்று வெம்பரற்களுடை. உஷ்ணத்தாலே தான் உடைந்துகிடப்பதாய், கூரியதாய்க்கொண்டு காலிலேவூன்றுவனவாய், கால் வைக்கப் பெறாதபடி அத்யுஷ்ணமான பருக்கைகளையுடைய. கடியவெங்கானிடை. மேல் ஒதுங்க நிழலில்லாதபடி கொடியதாய் வெவ்விதான காட்டிலே. காலடிநோவ. கால்களின் உள்ளடி நோம்படியாக. கன்றின்பின் கோடியே னென்பிள்ளையைப் போக்கினேன். பச்சை கண்ட விடமெல்லாம் பரந்துதிரியும் கன்றுகளின் பின்னே இவற்றை யெல்லாம் ஒக்கவொக்க நிரூபியாத கொடுமையை யுடையேனான நான் ஸுகுமாரனை வென்னுடைய பிள்ளையைப் போகவிட்டேன். எல்லேபாவமே. ... ... ... ... ... ... ...கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—என்றுமெனக்கினியானை யென்மணிவண்ணனைக்
கன்றின்பின்போக்கினே னென்றசோதைகழறிய
பொன்றிகழ்மாடப் புதுவையர்கோன் பட்டன்சொல்
இன்றமிழ்மாலைகள் வல்லவர்க்கிடரில்லையே. ௰.

பதவுரை.

என்றும்— "எப்போதும்
எனக்கு— தாயான எனக்கு
இனியானை— ப்ரியனைப்
என்— எனக்கு அநுபவிக்கலாம்படியான
மணி வண்ணனை— நீலரத்நம்போன்ற வடிவையுடையனானவனை
கன்றின் பின்— கன்றுகளின் பின்னே
போக்கினேன்— காட்டில் போகவிட்டேன்"
என்று— என்று
அசோதை— யசோதைப் பிராட்டி
கழறிய— மனம் வருந்திச் சொன்ன சொல்லை
பொன்— பொன்னாலே செய்யப்பட்டதாய்
திகழ்— ஒளிவிட்டு நின்றுள்ள
மாடம்— மாடங்களையுடைய
புதுவையர்— திருப்புதுவையில் வர்த்திக்குமவர்களுக்கு
கோன்— நிர்வாஹகரான
பட்டன்— பெரியாழ்வார்
சொல்— அருளிச் செய்ததாய்
இன்— போக்யமாயிருந்துள்ள
தமிழ் மாலை — தமிழ்த் தொடைகளான இவற்றை
வல்லவர்க்கு— ஓதவல்லவர்களுக்கு
இடர்— துக்கமென்பது
இல்லை— இல்லாமற் போம்.

வ்யா. என்றுமெனக்கினியானை. இப்போது செய்கையன்றிக்கே, எல்லாக்காலத்திலும் எனக்கு ஸ்வாவஹனானவனை. என்மணிவண்ணனை. எனக்கு அநுபாவ்யமான நீலரத்நம்போன்ற வடிவையுடையவனை. கன்றின்பின்போக்கினேனென்றசோதைகழறிய. "விளைவதறியாதே கன்றுகளின்பின் போகவிட்டேன்" என்று யசோதைப்பிராட்டி க்லேசப்பட்டுச்சொன்னதை. பொன்றிகழ்மாடப் புதுவையர்கோன் பட்டன்சொல். பொன்னாலே செய்யப்பட்டு விளங்காநின்றுள்ள மாடங்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் அருளிச்செய்த. இன்றமிழ்த்பாதி. சப்தார்த்தங்களினுடைய ரஸத்தை யுடைத்தான தமிழ்த்தொடைகளான விப்பத்தை ஸாபிப்ராயமாக வல்லவர்களுக்கு பகவத்விச்லேஷ துக்கமில்லை. ... ... ... ... ... ... ... ௯௰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு:—அஞ்சநப் பற்று நன்மணி வண்ணம் அவ்வ மீட்டு
வள்ளி பன்னிரு குடை யென்றும் சீலை.

---

ஆ. திருமொழி உக க்கு; பாட்டு உ௬௧.

## மூன்றாம்பத்து, மூன்றாந் திருமொழி, சீலைக்குதம்பை-ப்ரவேசம்.

அ. ஜாத்யுசித தர்மமாகையாலே யவனைக் கன்றுகள் மேய்க்கப் போகவிட்ட யசோதைப்பிராட்டி, அவன் போனவநந்தரம் தத்விச்லேஷா ஸஹையாய்க்கொண்டு, அவன் ஊரில் நின்றபோது செய்யும் லீலாசேஷ்டிதங்களை யெல்லாம் சொல்லி, இப்படிசெய்து திரியாமல் இவனை ஏதுக்காகப் போகவிட்டேன் என்றும், அவனுடைய மார்த்தவத்தையும் போகிறவிடத்தின் கொடுமைகளையு மநுஸந்தித்து, இப்படி ஸுகுமாரனானவனை இந்தக்கொடியகாட்டிலே கன்றுகளின்பின்னே போகவிட்டேன் என்றும் க்லேசித்துச் சொன்ன ப்ரகாரங்களை, தாமும் அப்படியே அவனைக்குறித்துப்பேசி யநுபவித்தாராய் நின்றார்—கீழ்; கன்றுகளைமேய்த்து மீண்டு வருகிறபோது அவள் எதிரே சென்று அவனுடைய திருமேனியையும் அலங்காரத்தையும் கண்டு ப்ரீதையாய், தாநநுபவித்துப் பலர்க்கு மழைத்துக்காட்டி, லோகத்திலே என்னைப்போல் பிள்ளைபெற்றா ரில்லையென்பது; நான் வாழ்வையுகந்து, உன்னைக் கன்றுமேய்க்கப் போகவிட்டேன், என்னைப்போலே கடிநசித்தையா யிருப்பாளொருஸ்த்ரீ யில்லையென்பது; உன்னுடைய திருமேனியெல்லாம் கற்றுத்தூளியா யிருக்கிறதுகாண், நீராடத்தக்கவை சேமித்துவைத்தேன், நீராடி யமுதுசெய்யென்பது; குடையும் செருப்பும் கொடாமையாலே திருவடிகளும் வெதும்பித்திருக்கண்களும் சிவந்து திருமேனியுமலசுதலை யடைந்தாய்காண் என்பதாய்; பின்னையும் பலவற்றையும் அவனைக்குறித்துச் சொல்லிக்கொண்டு சென்று, "கண்ணா நீ நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல் கோலஞ்செய் திங்கேயிரு". என்னுமளவாக வவன் செய்யுமவையும் தவிருமவையும் கற்பித்த பாசுரங்களை யெல்லாம் ததவஸ்தாபந்நராய்க்கொண்டு, தம்முடைய ப்ரேமாதிசயத்தாலே தாமுமவனைக்குறித்து அப்படியேபேசி, அந்த ரஸத்தை யநுபவிக்கிறார் - இத்திருமொழியில். .... .... .... .... *

மூ.—சீலைக்குதம்பையொருகா தொருகாது செந்நிறமேற்றோன்றிப்பூக்
கோலப்பணைக்கச்சுங் கூறையுடையுங் குளிர்முத்தின் கோடாலமும்
காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தைவந்து காணீர்
ஞாலத்துப்புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானே மற்றாருமில்லை. க.

### பதவுரை.

ஒருகாது— ஒரு காதிலே
சீலை குதம்பை— சீலைத் தக்கையையும்
ஒருகாது— மற்றொரு காதிலே
செந்நிறம் மேல்தோன்றிப்பூ— செங்காந்தள் பூவையும்
கூறை உடையும்— திருமேனிக்குத் தகுதியாகச் சாத்தின பரியட்டத்தையும்
கோலம்— அழகியதாய்
பணை— பெரிதாயிருந்துள்ள
கச்சும் — (பரியட்டம் நழுவாமைக்குச் சாத்தின) கச்சையும்
குளிர்— குளிர்ந்திரா நின்ற
முத்தின்— முத்தாலே தொடுக்கப்பட்டதாய்
கோடு— பிறைபோலே வளைந்திருக்கிற
ஆலமும் — ஹாரத்தையு முடையனாய்க் கொண்டு
காலி பின்னே— கன்றுகளின் பின்னே
வருகின்ற— வாராநின்றவனாய்
கடல்— கடல் போன்ற
வண்ணன் — திருநிறத்தை யுடையனானவனுடைய

வேடத்தை— வேஷத்தை
வந்து காணீர்— வந்து பாருங்கள்;
நங்கைமீர்— ஒன்றும் குறைவில்லாத பெண்டிர்காள்!
ஞாலத்து— பூமண்டலத்திலே
புத்திரனை— பிள்ளையை
பெற்றார்— பெற்றவர்களுள்
நானே — ("நல்லபிள்ளை பெற்றவள்" என்று சொல்லத்தக்கவள்) நானே;
மற்று ஆரும் இல்லை— வேறொருவருமில்லை.

வ்யா. முதற்பாட்டு. சீலையித்யாதி. ஒருகாதிலே சிலைக்குதம்பை, ஒருகாதிலே சிவந்தநிறத்தையுடைய மேல்தோன்றிப்பூ. இரண்டுகாதிலும் சிலைக்குதம்பையிட்டு விட, அதிலே ஒருகாதிலத்தைக் கழற்றிப்பொகட்டுச் செங்காந்தள்பூவை யிட்டுக்கொண்டுவந்தானுப்த்து. கோலப்பணைக் கச்சுங்கூறையுடையும். திருமேனிக்குத் தகுதியாகச்சாத்தின பரிவட்டமும், அதுகழுவாதபடி அதின்மேலேசாத்தின தர்சநீயமாய்ப் பெரிதான கச்சும். குளிர்முத்தின் கோடாலமும். குளிர்ந்தமுத்தாலே சமைக்கப்பட்டுப் பிறைபோலே வளைந்திருக்கிற ஹாரமும். "ஆரம்" என்கிறவிது "ரலயோரபேதஃ" என்கிற ந்யாயத்தாலே "ஆலம்" என்று கிடக்கிறது. அன்றிக்கே, "ஆரம்" என்று பாடந்தானுகவுமாம். காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்துகாணீர். "காலி" என்கிறவிது ஜாதிப்பேராகையாலே, இவ்விடத்தில் கன்றுகளைச் சொல்லுகிறது. கன்றுகளை வயிறுநிறையமேய்த்து அவற்றை முன்நடக்கவிட்டு தான்பின்னேவாரா நிற்க, கடல்போன்ற நிறத்தையுடையவனுடைய அலங்காரத்தை வந்துகாணுங்கோள். "சிலைக்குதம்பை" இத்யாதியாற் சொன்ன வொப்பனையையிறே "இங்கு வேஷம்" என்கிறது. காணீரென்கிறது — கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படிவந்து காணுங்கோளென்கை. ஞாலத்தித்யாதி. பிள்ளைவாசியறியும் குணபூர்த்தி யு[illegible]வர்களே! லோகத்தில் புத்ரனைப்பெற்றவர்களில் "நல்லபிள்ளைபெற்றவள்" என்று [illegible]சொல்லத்தக்கேன் நானே, மற்றொருவருமில்லை. "என்னநோன்பு நோற்றாள் கொலோ இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்று கொண்டாடப்பட்டார் என்னையொழிய மற்றொருவருண்டோவென்கை. ... ... ... ... ... க.

அ. இரண்டாம்பாட்டு. "காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்" என்று கன்றுமேய்த்து வருகிறபோதை அவனுடைய வடிவையும் அலங்காரத்தையும் தானநுபவித்துப் பிறர்க்குக் காட்டினளாயிறே நின்றது; இது, அவனை எதிரே சென்று அணைத்துக்கொண்டு, தன்னுடைய ஸ்நேஹத்தாலே அவன் முதத்தைப்பார்த்துச் சொல்லுகிற பாசுரமாயிருக்கிறது. ... ... ... ... ... ... *

மூ.—கன்னிநன்மாமதிள்சூழ்தரு பூம்பொழிற்காவிரித் தென்னரங்கம்
மன்னியசீர் மதுசூதனா கேசவா பாவியேன்வாழ்வுகந்து
உன்னை யிளங்கன்றுமேய்க்கச் சிறுகாலேயூட்டி யொருப்படுத்தேன்
என்னின்மனம்வலியா ளொருபெண்ணில்லை என்குட்டமேமுத்தந்தா உ.

பதவுரை.

கன்னி— அழிக்க வொண்ணாததாய்
நல்— மநோஹரமாய்
மா— பெரிதாயிருந்துள்ள
மதிள்— மதிள்களாலே
சூழ் தரு— சூழப்பட்டு
பூ— நித்யவஸந்தமான

| | |
|---|---|
| பொழில்— சோலைகளையு முடைத்தாய், | சிறு காலே— விடிவோறே |
| காவிரி— காவேரி நதியோடு கூடி | ஊட்டி— உண்பித்து |
| தென்— தென் திசைக்கு ப்ரதானமான | இள கன்று— இளங் கன்றுகளை |
| அரங்கம்— திருவரங்கத்திலே | மேய்க்க— மேய்க்கைக்காக |
| மன்னிய— பொருந்தி வர்த்திக்கிற | ஒருப்படுத்தேன் — அவற்றின் பின்னே போகவிட்டேன்; |
| சீர்— கல்யாண குணயுக்தனை | என்னில்— (இங்ஙனே செய்து பொறுத்திருந்த) என்னிலுங்காட்டில் |
| மது சூதனை— மதுவை நிரஸித்தவனை | மனம் வலியாள்— நெஞ்சுர முடையளான |
| கேசவா— அழகிய மயிர்முடியை யுடையவனானவனே! | ஒரு பெண்— ஒரு பெண் |
| பாவியேன்— பாவியான நான் | இல்லை— இவ்வுலகத்திலில்லை; |
| வாழ்வு— நம்குடிக்கேற்ற கன்றுமேய்க்கை முதலியவாழ்வை | என் குட்டனே— என் பிள்ளாய் |
| உகந்து— விரும்பி | முத்தம் தா— முத்தம் கொடு |
| உன்னை— இவ்வலைச்சலுக்காளல்லாதஉன்னை | என்று அணைத்து உகந்து சொல்லுகிறாள். |

வ்யா. கன்னியித்யாதி. அழிவில்லாததாய் அகிலஜநமநோஹரமாய் அரணுகப்போருமபடியான பெருமையை யுடைத்தாயிருந்துள்ள திருமதிள்களாலே சூழப்பட்டு, நித்ய வஸந்தமான திருச்சோலைகளை யுடைத்தாய், அவற்றை வளர்ப்பதான காவிரியாகிற மஹாநதியோடுங்கூடித் தெற்குத்திக்குக்கு ப்ரதாநமாயிருந்துள்ள*திருவரங்கன் திருப்பதியிலே யாவரும் வந்தடிவணங்கும்படி நித்யவாஸம்பண்ணுகிற ஸௌசீல்யகுணயுக்தனை, ஆச்ரித விரோதிகளை மதுவை நிரஸித்தாற்போலே நிரஸித்துப் பொகடுமவனை, அவர்களுக்கு மநு பாவ்யமாம்படி. ப்ரசஸ்தமான திருக்குழலையுடையனா யிருக்கிறவனே. பாவியேன் வாழ்வுகந்து. உன்னுடைய வருமை பெருமையும் ஸௌகுமார்யமுமறியாத பாபியானநான் ஜாத்யுசித தர்மாநுஷ்டாநமாகிற வாழ்வையுகந்து. உன்னை. இவ்வலைச்சலுக்கெல்லாம் ஆளல்லாதவுன்னை. இளங்கன்று மேய்க்க. அள்ளியுண்ணவறியாத உன்னைப்போலே, பறித்துக்கசக்கித் தீத்தவேண்டும்படியான இளங்கன்றுகளை மேய்க்கும்படியாக. சிறுகாலேயூட்டி யொருப்படுத்தேன். அவைமேய்க்கப் போங்காலமான விடிவோறே "மீள வருமளவும் உனக்கு தாரகமாக வேணும்" என்று ஊட்டி அவற்றின்பின்னே போகவிட்டேன். என்னில் மநம்வலியா ளொரு பெண்ணில்லை. இப்படி உன்னைப்போகவிட்டுப் பொறுத்திருந்த வென்னிற்காட்டில் நெஞ்சுரமுடையாளொரு பெண் லோகத்திலில்லை. வேறுசிலராகில் நெஞ்சழிந்து விழுந்துவிடார்களோ வென்கை. என்குட்டனே முத்தம்தா. என்னுடைய சிறுப்பிள்ளையானவனே முத்தம் தா வென்று அணைத்து உகந்து சொல்லுகிறாள். முத்தம் - அதரம். ... ... ... ௨.

மூ.—காடுகளூடுபோய்க் கன்றுகள்மேய்த்து மறியோடிக்கார்க் கோடற்பூச்
சூடிவருகின்ற தாமோதரா கற்றுத்தூளி காணுன்னுடம்பு
பேடைமயிற்சாயற் பின்னைமணாளா நீராட்டமைத்து வைத்தேன்
ஆடியமுதுசெய் யப்பனுமுண்டில னுன்னோடுடனே யுண்பான். ௩.

பதவுரை.

| | |
|---|---|
| காடுகளூடு போய்— காடுகளினுள்ளே போய் | மறி ஓடி— அவைகைகழியப் போகாதபடி மறிக்கைக்காக முன்னே ஓடி |
| கன்றுகள் மேய்த்து— கன்றுகளை மேய்த்து | |

* கார் கோடல் பூ- பெரிய கார்தள் பூக்களை
சூடி— திருமுடியில் சூட்டிக் கொண்டு
வருகின்ற— வருகிற
தாமோதரா— தாமோதரனே!
உன்— உன்னுடைய
உடம்பு— திருமேனியடங்கலும்
கன்று— கன்றுகளால் கிளப்பப்பட்ட
தூளிகாண்— தூளிப்படிந்து கிடக்கிறது காண்;
மயில் பேடை— பெண்மயில் போன்ற
சாயல்— சாயலையுடைய
பின்னை- நப்பின்னைப் பிராட்டிக்கு
மணாளா— வல்லபனானவனே!
நீராட்டு— நீராடுவதற்கு வேண்டுவன
அமைத்து வைத்தேன்— ஸந்நத்தமாக்கி வைத்தேன்;
ஆடி— நீராடி
அமுதுசெய்- அமுது செய்யவேணும்;
உன்னோடுடனே- உன்னோடு கூட
உண்பான்— உண்ணவேணுமென்று
அப்பனும்- உன் தமப்பனாரும்
உண்டிலன்— இதுவரை உண்ணவில்லை,
தாமதம் செய்யாமல் சடக்கென வா என்றபடி.

* கார்— கறுப்பும், பெருமையும்.

வ்யா. மூன்றும்பாட்டு. கானேஞுபோய். கன்றுகளுக்குப் புல்லும்தண்ணீரு முள்ள விடம் பார்க்கைக்காகவும், அவை மேய்க்கைக்காகவும், ஒன்று போலொன்றன்றிக்கே பலவகைப்பட்டிருந்துள்ள காடுகளுக் குள்ளேபோய். கன்றுகள்மேய்த்து மறியோடி. கன்றுகளை மேய்த்து, அவை கைகழியப்போகாமல் மறிக்கைக்காக முன்னேயோடி. கார்க்கோடல்பூச்சூடி வருகின்ற. அவை வயிறுநிறைய மேய்ந்து ஊரைநோக்கி மடங்கினவாறே ப்ரீதனாய், பெரிய கோடல் பூக்களைத் திருமுடியிலே சாத்திக்கொண்டு வாராநிற்கிற. தாமோதரா. முன்பு தனக்கு நியாம்யனாயிருந்த பந்தத்தை யுணர்த்துகிறாள் - மேலும் தான் நியமித்தபடி செய்கைக்காக. கற்றுத்தூளிகாணுன்னுடம்பு. கன்றுகளினுடைய திரளுக்கு நடுவே போகையாலே அந்த தூளி யேறிக்கிடக்கிறதுகாண் உன்னுடைய திருமேனியெங்கும். பேடை மயிற்சாயல் பின்னைமணாளா. மயில் பேடைபோலும் சாயலையுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனே. இத்தால்- ஜாத்யுசித தர்மாநுஷ்டானத்தால்வந்த தூளியாகையாலும், அதுதான் ரத்நத்திலேயேறின வார்ப்புப்போலே யிருக்கையாலும் எனக்கினிதா யிருந்ததாகிலும், உனக்கபிமதையான நப்பின்னை யோட்டைக்கலவிக்குறுப்பாகக் குளிக்கவேணுமென்னுமிடத்தை ஸூசிப்பிக்கிறாள். நீராட்டமைத்துவைத்தேன். நீராடுகைக்கு வேண்டுவன சமைத்துவைத்தேன். அதாவது - * எண்ணெய் புளிப்பழம் கொண்டுவருகையும், * காய்ச்சின நீரொடு நெல்லிக் கடாரத்தில் பூரித்துவைக்கையுமிறே. ஆடியமுதுசெய். இளைப்பாலே சடக்கென அமுதுசெய்யப்புகுராதே, நீராடிவிட்டு அமுது செய்யவேணும். அப்பனுமுண்டிலன் உன்னோடுடனே யுண்பான். "உன்னோடுடனே யுண்ணவேணும்" என்று உங்கள் தமப்பனாரும் உண்டிலர். ஆனபின்பு, காலவிளம்பம்பண்ணாதே கடுக அமுது செய்யென்கை.......௩.

மூ.—கடியார்பொழி லணிவேங்கடவா கரும்போரேறே நீயுகக்கும்
குடையுஞ்செருப்புங் குழலுந்தருவிக்கக் கொள்ளாதே போனாய்மாலே
கடியவெங்கானிடைக் கன்றின்பின்போன சிறுக்குட்டச் செங்கமல
வடியும்வெதும்பி யுன்கண்கள்சிவந்தா யசைந்திட்டாய்நீ யெம்பிரான். ௪.

பதவுரை.

கடி ஆர்- பரிமள ப்ரசுரமான
பொழில் - பொழில்களையுடைத்தாய்
அணி— அழகிய
வேங்கடவா— திருவேங்கடமலையில் உறையுமவனே;
கரு- கறுத்த நிறத்தை யுடைத்தாய்

போர்— யுத்தோத்முகமான
ஏறு— ரிஷபம்போல் செருக்கியிருக்குமவனே!
மால்— கன்றுகளிடத்தில் வ்யாமோஹத்தை யுடையவனே!
நீ உகக்கும்— நீ உகக்குமவையான
குடையும்— குடையையும்
செருப்பும்— செருப்பையும்
குழலும்— வேய்ங்குழலையும்
தருவிக்க— தருவிக்கச் செய்தேயும்
கொள்ளாதே— (அவற்றைக்) கொள்ளாமல்
போனாய்— கன்று மேய்க்கப் போனவனே!
கடிய வெம்— மிகவும் வெவ்விதான
கானிடை— காட்டிலே
கன்றின் பின்— கன்றுகளின் பின்னே
போன— தொடர்ந்து போன
சிறுக்குட்டன்— சிறுப்பிள்ளையான வுன்னுடைய
செங்கமலம்— செந்தாமரைப்பூப் போன்ற
அடியும்— திருவடிகளும்
வெதும்பி— கொதித்து
உன்— உன்னுடைய
கண்கள்— கண்களும்
சிவந்து ஆய்— சிவந்ததாகி
அசைந்திட்டாய்— இளைத்தாய்;
நீ எம்பிரான்— நீ என் நாயனன்றோ
என்று மனம் தளர்ந்து சொல்லுகிறாள்.

வ்யா. நான்காம்பாட்டு. கடியித்யாதி. பரிமளப்ரசுரமான பொழில்களை யுடைத்தாய் அழகியதாயிருந்துள்ள திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிறவனே. கரும்போரேறே. கறுத்த நிறத்தை யுடைத்தாய், செருக்காலே எதிரேபொருது ஸ்வைரத்திலே திரியும் ரிஷபம்போலே, திருவாய்ப்பாடியை மூலையடியே நடத்தி, மேனாணிப்புத் தோற்றத் திரிகிறவனே. "பட்டிமேய்ந்தோர் காரேறு" என்னக்கடவதிறே. நீயுகக்குமித்யாதி. நீ யுகக்குமவையான வர்ஷாதபவாரணமான குடையும், கண்டகாதி பரிஹாரகமான திருவடிநிலைகளும், கன்றுகளையழைத்து மேய்க்கைக்கும் அழைக்கைக்கு முறுப்பாக ஊதுகைக்குடலான வேய்ங்குழலும் தருவிக்கச்செய்தே இவற்றைவாங்கிக்கொள்ளாதே, கன்றுகள் மேய்க்கையில் வ்யாமோஹத்தாலே போனவனே. கடியவெங்கானிடைக் கன்றின்பின்போன. மிகவும்வெம்மையையுடைத்தான காட்டிலே கன்றுகள்போனவிடமெங்கும் தொடர்ந்துபோன. சிறுக்குட்டச் செங்கமலவடியும் வெதும்பி. சிறுப்பிள்ளையான உன்னுடைய சிவந்தகமலம்போன்ற திருவடிகளும் கொதித்து. செங்கமலவடியென்கையாலே- திருவடிகளினுடைய மென்மை குளிர்த்தி முதலானவற்றைச் சொல்லுகிறது. இப்படியிருக்கிற திருவடிகள் குடையும் செருப்புமின்றிக்கே * கடியவெங்கானிலே திரிந்தால் வெதும்பச்சொல்லவேண்டாவிறே. உன் கண்கள் சிவந்தாய். கால்கொதித்தால் கண்கள்சிவக்கை நிச்சிதமிறே. அதுக்குமேலே, கன்றுகளுக்கு மேய்ச்சற்றரைபார்க்கை, அவற்றின் வயிற்றிலே நிறைவுகுறைவு பார்க்கை, "துஷ்டம்ருகங்கள் வருகிறதுண்டோ" என்று சுற்றும்பலகாலும் பார்க்கை, கைகழியப்போனவையுண்டோ வென்று மறிக்கைக்குப்பார்க்கைமுதலாக ஒரொன்றிலே ஊன்றப்பார்க்கையாலும் திருக்கண்கள் சிவக்குமிறே. அசைந்திட்டாய்நீ எம்பிரான். இளைத்திட்டாய்நீ என்னுடையவனே. திருவடிகள்வெதும்பித் திருக்கண்கள் சிவந்தவளவேயோ, ஊருக்குள்ளே திரியும்போது "கரும்போரேறு" என்னும்படி புஷ்கலமான வடிவையுடையனாய்ச் செருக்கித்திரியக்கடவநீ போர இளைத்துவிட்டாயென்று வெறுத்துச் சொல்லுகிறாள். ... ... ... ச

மூ.— பற்றார்நடுங்க முன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்தபோரேறேயென்
சிற்றாயர்சிங்கமே சீதைமணாளா சிறுக்குட்டச் செங்கண்மாலே
சிற்றாடையுஞ் சிறுப்பத்திரமுமிவை கட்டிலின்மேல் வைத்துப்போய்க்
கற்றாயரோடுநீ கன்றுகண்மேய்த்துக் கலந்துடன்வந்தாய் போலும். ரு

பதவுரை.

பற்றார் - சத்ருக்களான துர்யோதநாதிகள்
நடுங்க— நடுங்கும்படியாக
முன்— பாரதயுத்தத்திலே
பாஞ்ச சன்னியத்தை - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
வாய் வைத்த—வாயில் வைத்தூதின
போர் ஏறே- யுத்தோந்முகமான ரிஷபம் போன்ற கண்ணனே!
என்- எனக்கு விதேயனாய்
சிறு ஆயர் சிங்கமே- இடையர்களுக்கு சிங்கக்குட்டி போன்றவனே!
சீதை மணாளா- ஸீதாவல்லபனே!
சிறு குட்டன்— சிறுப்பிள்ளையாய் (இருக்கச்செய்தேயும், )
செம் கண் - செந்தாமரைப்பூப் போன்ற கண்ணையுடையனாய்

மாலே— ஸர்வேச்வரனானவனே!
சிறு ஆடையும் — உன் பருவத்துக்குத் தகுதியான திருப்பரியட்டமும்
சிறு— உன் கைக்கடங்கின
பத்திரமும் இவை— விளையாடு பத்திரமுமாகிற இவற்றை
கட்டிலின் மேல்— கட்டில் மேலே
வைத்து போய்— வைத்து, மறந்துபோய்
கன்று— கன்றுகள் மேய்க்கிற
ஆயரோடு— இடைப் பிள்ளைகளோடு
நீ— நீ
கன்றுகள் மேய்த்து— கன்றுகளை மேய்த்து
உடன் கலந்து- அவர்களோடே சேர்ந்து
வந்தாய் போலும்— வந்தாயோ தான்,
என்று உகக்கிறாள்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. பற்றாரித்யாதி. (க) “ மம ப்ராணாஹி பாண்டவா: ” என்கிறபடியே உனக்கு ப்ராணபூதரான பாண்டவர்களை நலிகையாலே (உ) “ த்விஷதந்நம் நபோக்தவ்யம் ” என்னும்படி உனக்கு சத்ருக்களான துர்யோதநாதிகள் (ந) “ ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் ” என்கிறபடியே இதினுடைய த்வநியைக் கேட்டு நடுங்கும்படியாக பாரத ஸமரத்திலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலேவைத்தூதி, யுத்தோந்முகமான ரிஷபம்போலே செருக்குத்தோற்ற நின்றவனே. என்சிற்றாயர் சிங்கமே. எனக்குவஶ்யனாய் “ தன்னேராயிரம் பிள்ளைகள் ” என்கிற சிறுப்பிள்ளைகளோடே ஸிம்ஹக்கன்றுபோலே மேனாணிப்புத்தோற்ற விளையாடித் திரிகிறவனே. சீதைமணாளா. ப்ரதிகூலநிரஸநமும் அநுகூல ரக்ஷணமும் கண்டால் (ச) “ பர்த்தாரம் பரிஷஸ்வஜே ” என்கிறபடியே, உகந்தணைக்கும் ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு வல்லபனானவனே. சிறுக்குட்டச் செங்கண்மாலே. சிறுப்பிள்ளையா யிருக்கச்செய்தே புண்டரீகாக்ஷத்வத்தாலே “ஸர்வஸ்மாத்பரன் ” என்று தோற்றும்படி யிருக்கிறவனே. சிற்றாடையுமித்யாதி. உன் பருவத்துக்குத் தகுதியான திருப்பரிவட்டமும் உன் திருக்கைக்கடங்கின விளையாடுபத்திரமுமாகிற விவற்றைக் கன்றுமேய்க்கப்போகிற த்வரையாலே கிடக்கைப்பாட்டிலே பொகட்டுப் போவாரைப்போலே, கண்வளர்ந்தருளின கட்டிலின்மேலேவைத்து மறந்துபோய். கற்றாயரோடு நீ கன்றுகள்மேய்த்து. கன்றுகள் மேய்க்கிற இடைப்பிள்ளைகளோடே நீ கன்றுகளை மேய்த்து. கலந்துடன் வந்தாய்போலும். “ அவர்களிலே ஒருவன் ” என்னலாம்படி அவர்களுடனே சேர்ந்து வந்தாயோதானென்று உகக்கிறாள். ... ... ... ... ரு.

(க) “ மமப்ராணாஹி பாண்டவா: ” (உ) “ த்விஷதந்நம் நபோக்தவ்யம் ” (ந) “ ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் ” (ச) “ பர்த்தாரம் பரிஷஸ்வஜே ”

மூ.—அஞ்சுடராழி யுன்கையகத்தேந்து மழகாநீபோய்கைபுக்கு
நஞ்சுமிழ்நாகத்திறேடு பிணங்கவுநானுயிர் வாழ்ந்திருந்தேன்
என்செய்யவென்னை வயிறுமறுக்கிறு யேதுமோரச்சமில்லை
கஞ்சன்மனத்துக் குகப்பனவேசெய்தாய் காயாம்பூவண்ணங் கோண்டாய். ௬

பதவுரை.

அம் சுடர்— அழகிய தேஜஸ்ஸையுடைய
ஆழி— திருவாழியை
உன்— உன்னுடைய
கையகத்து— திருக்கையிலே
ஏந்தும்— ஏந்திக் கொண்டிருக்கிற
அழகா— அழகையுடையவனே!
நீ— நீ
பொய்கை— நச்சுப் பொய்கையிலே
புக்கு— அவகாஹித்து
நஞ்சு உமிழ்— விஷத்தை உமிழா நின்ற
நாகத்திறேடு— காளிய நாகத்தோடு
பிணங்கவும்— போர் செய்தபோதும்
நான்— தாயான நான்
உயிர் வாழ்ந்து இருந்தேன்— ப்ராணனை தரித்திருந்தேன்;
என்னை— என்னை
என் செய்ய— ஏதுக்காக
வயிறு மறுக்கிறாய்— வயிறு குழம்பப்பண்ணிறாய்?
ஏதும்— சற்றும்
ஓர் அச்சம்— ஒருபயமும்
இல்லை— உனக்கில்லை;
காயாம் பூ — காயாமலர் போன்ற
வண்ணம்— நிறத்தை
கொண்டாய்— உடையவனே!
கஞ்சன்— கம்ஸனுடைய
மனத்துக்கு— மநஸ்ஸுக்கு
உகப்பனவே— ப்ரியமான வற்றையே
செய்தாய்— செய்து போரா நின்றாய்.

வ்யா. ஆறும்பாட்டு. அஞ்சுடரித்யாதி. உன் திருமேனி நிறத்துக்கு பரபாகமான அழகிய தேஜஸ்ஸையுடைய திருவாழியை, வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும் படியான உன் திருக்கையிலே தரித்துக்கொண்டிருக்கிற அழகையுடையவனே. நீ பொய்கை புக்கு. * கருதுமிடம் பொருது, கைநிற்கும் பரிகாரமுண்டாயிருக்க, இபற்றி யில்லாதாரைப் போலே நீ உன்னுடைய மார்த்தவத்தைப் பாராமல் நச்சுப்பொய்கையிலே போய்ப்புக்கு. நஞ்சுமிழ் நாகத்திறேடு பிணங்கவும் நானுயிர்வாழ்ந்திருந்தேன். க்ரோதத்தாலே மேன்மேலென நஞ்சை யுமிழாநின்றுள்ள காளியனுகிற ஸர்ப்பத்தோடே, அது தன்னுடலாலே உன்னைக் கட்ட, அத்தையுதறிப்பொகட்டு, அதனுச்சியிலேறி அதின்வாலைப் பிடித்துக்கொண்டு நின்றுதிளைத்து வாயாலே ரத்தம் கக்கும்படியாட, இப்படியாய்க்கொண்டு அந்யோந்யம் பிணங்கினபோது நான் ப்ராணனோடே யிருந்தேனிறே. என்செய்ய வென்னை வயிறு மறுக்கிறாய். ஏதுக்காக என்னை யிப்படி வயிறுமறுக்கப் பண்ணிறாய். ஏதுமோரச்சமில்லை. இப்படி ஸாஹஸ ப்ரவ்ருத்திசெய்தால் "உனக்குத்தான் ஒரு தீங்குவரும்" என்றுதல், "எனக்குவயிறெரியும்" என்றுதல், "லோகமிதுகண்டால் பொறாது" என்றுதல், உனக்கு ஏகதேசமும் ஒரு பயமில்லை. கஞ்சன்மனத்துக் குகப்பனவேசெய்தாய். "உனக்கெதேனுமொரு அபாய மெப்போதோவருவது" என்று இடம்பார்த்திருக்கும் கம்ஸனுடைய மநஸ்ஸுக்கு ப்ரியமானவற்றையே செய்தாய். காயாம்பூவண்ணங்கோண்டாய். காயாம்பூப்போலே யிருக்கிற திருநிறத்தை யுடையவனே, வேண்டினபடியாகிறது, இவ்வடிவுக்கு ஒரு வைகல்யம் வாராமல் பிழைக்கப்பெற்றேனே யென்கை. ... ... ... ... ... ௬.

மூ.—பன்றியுமாமையு மீனமுமாகிய பாற்கடல்வண்ணா வுன்மேல்
கன்றினுருவாகி மேய்புலத்தேவந்த கள்ளவசுரர் தம்மைச்
சென்றுபிடித்துச் சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தாய் போலும்
என்றுமென் பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்களங்ஙன மாவர்களே. எ

பதவுரை.

பன்றியும்— வராஹாவதாரமும்
ஆமையும்— கூர்மாவதாரமும்
மீனமும் ஆகிய— மத்ஸ்யாவதாரமும் செய்தருளினவனும்
பாற் கடல்—க்ஷீரஸமுத்ரம் போன்ற
வண்ணா— திருநிறத்தை யுடையவனே!
உன் மேல்— உன்னை நலிவதாக
கன்றின் உரு ஆகி— கன்றின் வடிவையுடையராய்க் கொண்டு
மேய்— கன்றுகள் மேய்கிற
புலத்து— நிலத்திலே
வந்த— வந்து கலந்து நின்ற
கள்ளம்— க்ர்த்ரிமச் செயல்களையுடைய
அசுரர் தம்மை— அஸுரர்களை
சென்று— அவர்கள் சேஷ்டைகளாலே 'அஸுரர்' என்றறிந்து சென்று
சிறு கைகளாலே— சிறிய கைகளாலே
பிடித்து— கன்றாய் நின்ற அஸுரனைப் பிடித்து
விள— அஸுரமான விளாவினுடைய
காய்— காயுதிரும்படி
எறிந்தாய் போலும்— எறிந்தாயோதான்!
என் பிள்ளைக்கு— என் பிள்ளை திறத்தில்
தீமைகள்— தீம்புகளை
செய்வார்கள்— செய்யக் கோலினவர்கள்
என்றும்— எப்போதும்
அங்ஙனம் ஆவர்கள்— அப்படியே மாண்டு போகக்கடவர்கள்
என்று கைநெரித்துச் சீறிச் சொல்லுகிறாள்.

வ்யா. ஏழாம்பாட்டு. பன்றியுமாமையுமீனமுமாகிய. பூம்யுத்தரணம்பண்ணின வராஹமும், மந்தராதாரமான கூர்மமும், ப்ரளயாப்தஸகமான மத்ஸ்யமுமான. இத்தால்-அப்ராக்ர்த திவ்யஸம்ஸ்தாநத்தையழியமாறி திர்யக்ஜாதீயமாக்கிக்கொண்டு ஜகத்ரக்ஷணம் பண்ணியருளின நீர்மையைச் சொல்லுகிறது. வராஹாவதாரத்தை முற்படச்சொல்லிற்று- ப்ரளயார்ணவமக்நையான பூமியையெடுத்த வளவன்றிக்கே, ஸம்ஸாரார்ணவமக்நரான சேதநரைஉத்தரிப்பிக்கைக்காக தத்ததநுரூபோபாயங்களை உபதேசித்த வேற்றத்தைப்பற்ற. "ஏனத்துருவாயிடந்தபிரான்-ஞானப்பிரான்" என்றாரிறே யாழ்வார். திருமங்கையாழ்வாரும் "ஏனத்தினுருவாகி நிலமங்கை யெழில்கொண்டான்" என்றவனந்தரம், "ஞானத்தினொளியுருவை" என்றாரிறே. இவர்தாமும் "எயிற்றிடை மண்கொண்டவெந்தை யிராப்பகலோதுவித்து" என்றுமேலே அருளிச்செய்கிறாரிறே. பாற்கடல்வண்ணா. பாற்கடல்போலே வெளுத்திருந்துள்ள திருமேனி நிறத்தையுடையவனே. இத்தால்- "பாலினீர்மை" என்கிறபடியே ஸத்த்வப்ரசுரரான க்ர்தயுகபுருஷர்களுடைய ருச்யநுகுணமான திருமேனி நிறத்தையுடையனாய்க்கொண்டு, அவர்களுக்கு ஆச்ரயணீயனாய் ரக்ஷித்தபடி சொல்லுகிறது. "பார்க்கடல்வண்ணா" என்று பாடமாகில்- பார்சூழ்ந்த கடல்போலேயிருக்கிற திருமேனிநிறத்தையுடையவனே யென்கை. அப்போது, இப்படியிருக்கிற திருவடிவையிறே நீ அழியமாறி, திர்யக்ரூபமாக்கிக்கொண்டு ஜகத்ரக்ஷணம் பண்ணிற்றென்றபடி.

உன்மேலித்யாதி. இப்படி ஜகத்துக்கு ஸர்வப்ரகாரரக்ஷகனான உன்மேலேநலிவதாக நீமேய்க்கிற கன்றுகளுக்குள்ளே தத்துல்யமான வடிவைக்கொண்டு அவைமேய்கிற நிலத்திலேவந்து கலந்துநின்ற க்ருத்ரிமரான அஸுரர்தங்களை. சென்றுபிடித்துச் சிறுக்கைகளாலே. அவர்கள்சேஷ்டித விசேஷங்களாலே அறிந்துசென்று சிறுக்கைகளாலே பிடித்து. விளங்காயெறிந்தாய்போலும். ஆஸுரமாய் உன்னைநலிவதாக நின்றவிளாவினுடைய காயுதிர்க்க, எறிவாரைப்போலே, தூக்கியெடுத்தெறிந்து இரண்டுதலையையும் முடித்துப்பொகட்டாயோதான் என்றவாறே "எறிந்தேன்காண்" என்று சொல்லிநிற்க; என்றுமித்யாதி. என்னுடைய பிள்ளைக்குத் தீமைசெய்வதாகக் கோலினவர்கள் என்றும் அப்படியாய்ப் போவர்களென்று நெஞ்செரிச்சலாலே சொல்லுகிறாள். அங்ஙனமாவர்களென்றது- அப்படியேயாவர்களென்றபடியாய், அவ்விளவும் கன்றும்போலே நசித்துப்போவர்களென்றபடி. ... ... ௭.

மூ.—கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா கோவலரிந்திரற்குக்
காட்டிய சோறுங்கறியுந்தயிருங் கலந்துடனுண்டாய் போலும்
ஊட்டமுதலிலே னுன்றன்னைக்கோண் டொருபோது மெனக்கரிது
வாட்டமிலாப்புகழ் வாசுதேவாவுன்னை யஞ்சுவனின்றுதொட்டும். ௮.

பதவுரை.

கேசவா— கேசவனே!
கேட்டு அறியாதன— இதற்குமுன் உன் திறத்தில் கேட்டறியாதவற்றையெல்லாம்
கேட்கின்றேன்— இப்போது கேளாநின்றேன்;
கோவலர்— இடையர்கள்
இந்திரற்கு— இந்த்ரனுக்காக
காட்டிய— அனுப்பின
சோறும்— சோற்றையும்
கறியும்— அதற்குத்தக்க கறியையும்
தயிரும்— தயிரையும்
கலந்து— சேரக்கலந்து
உடன்— ஒன்றும் சேஷியாதபடி
உண்டாய் போலும்— உண்டாயோதான்;
( இப்படி யுண்ணவல்ல உனக்கு, )
ஊட்ட— நாள்தோறும் ஊட்ட
முதல் இலேன் - கைம்முதலுடையேனல்லேன்;
உன்றன்னை கொண்டு— உன்னை வைத்துக்கொண்டு
ஒருபோதும்— ஒருவேளையும்
எனக்கு— எனக்கு
அரிது— ஆற்றவரிது;
வாட்டம் இலா— எப்போதும் வாடாத
புகழ்— புகழையுடைய
வாசுதேவா— வஸுதேவர் திருமகனே!
உன்னை— உன்னைக் குறித்து
இன்று தொட்டும் — * கேட்டறியாதன கேட்ட இன்று முதலாக
அஞ்சுவன்— பயப்படாநின்றேன்.

வ்யா. எட்டாம்பாட்டு. கேட்டறியாதனவித்யாதி. ப்ரஹ்மருத்ரர்களுக்குக் காரணபூதனாகையாலே "கேசவன்" என்னும் திருநாமத்தையுடையவனே, இதுக்குமுன்பு உன் விஷயத்தில் கேட்டறியாதனவெல்லாம் இப்போது கேளாநின்றேன் என்றவாறே, "அதேதுதான்" என்று அவன்கேட்க; கோவலரித்யாதி. கோதநராகையாலே வர்ஷார்த்தமாக வத்ஸரந்தோறும் இந்த்ரனுக்குச் சோறிட்டுப் போருமிடையரானவர்கள், அந்த இந்த்ரனுக்கிடுவதாக வரக்காட்டின * துன்னுசகடத்தாற்புக்க பெருஞ்சோற்றையும் அதுக்குத்தக்க கறியையும் தயிரையும் அவனுக்கிடாதபடி சில வுக்திவிசேஷங்களைச் சொல்லி நீ விலக்கி, "நமக்

கெல்லாப்படியாலும் ரக்ஷகமாயிருக்கிற விம்மலைக்கிடுங்கோள்” என்று அதின் முன்னே யிடுவித்து, (க) “மோவயேழுபெரிநாவுஸி” என்று * ஒருபூதவடிவைக்கொண்டு வந்திருந்து எல்லாவற்றையும் சேரக்கலந்து ஒன்றொழியாமல் நீயே புஜித்துவிட்டாயென்று. “பாசந நல்லன பண்டிகளால் புகப்பெய்த வதனையெல்லாம் - போயிருந்தங்கொரு பூதவடிவுகொண் டுன் மகனின்று நங்காய் - மாயனதனையெல்லாம்முற்றவாரி வளைத்துண்டிருந்தான்” என்று பலரும் வந்து சொல்லாநின்றார்கள், “அப்படி செய்தாயோதான்” என்ன; நிருத்தரனாய் நின்றவாறே ஊட்டமுதலிலே னுன்றன்னைக்கண்டோருபோது மேனக்கரிது. என்கிறாள். அதாவது - இப்படியுண்ண வல்லவுனக்கு நாள்தோறு மிப்படியூட்டத்தக்க முதலுடையே னல்லேன்; இப்படி யிருக்கிற வுன்னைக்கொண்டு ஒருபோது மெனக்காற்ற வரிதென்கை. வாட்டமிலாப்புகழ் வாசுதேவா. ஒருகாலும் வாட்டமின்றிக்கே நித்யமாய்ச் செல்லும்படி யான புகழையுடைய வஸுதேவர் புத்ரனே, இப்படிக்கொத்த வ்யாபாரங்களால் உன்புகழு க்கு ஒருவாட்டம் வாராதொழியவேணுமென்று கருத்து. உன்னையஞ்சுவனின்று தோட்டே. இப்படிப்பட்ட அதிமாநுஷத்வத்தைச்செய்த வுன்னைக்குறித்து, இன்னமேது செய்யத்தே டுகிறாய், உன்புகழுக்கு வாட்டம் வரப்புகுகிறதோவென்று, கேட்டறியாதன கேட்ட வின்று தொடக்கமாக நானஞ்சாநின்றே னென்கிறாள். ... ... ... ... ... ...அ.

மூ.—திண்ணார்வெண் சங்குடையாய் திருநாட்டிருவோண மின்றேழுநாண்முன்
பண்ணேர்மொழியாரைக் கூவிமுளையட்டிப் பல்லாண்டு கூறுவித்தேன்
கண்ணாலஞ்செய்யக் கறியுங்கலத்ததரிசியு மாக்கிவைத்தேன்
கண்ணா நீ நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல் கோலஞ்செய்திங்கேயிரு. ௯.

பதவுரை.

திண் ஆர்— ப்ரதிகூல நிரஸநத்தில் நிலை பேராமல் நின்று முழங்கும் திண்மையை யுடைத்தாய்
வெண்— வெண்மையை யுடைத்தான
சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
உடையாய்— திருக்கையி லுடையவனே!
திருநாள்— நீ பிறந்த திருநக்ஷத்ரமான
திருவோணம்— திருவோண நக்ஷத்ரம்
இன்றேழுநாள்— இன்றைக்கேழுநாள்
ஆகையாலே,
முன்— அதுக்குமுன்னே
பண்— பண்ணோடேகூடின
ஏர்— அழகிற
மொழியாரை— மொழியையுடையவர்களை
கூவி— அழைத்து
முளையட்டி— திருமுளை சாத்தி
பல்லாண்டு கூறுவித்தேன்—மங்களாசாஸனம் பண்ணுவித்தேன்
கண்ணாலம்— திருக்கல்யாணம்
செய்ய— திருவோணத்திருநக்ஷத்திரத்துக்குச் செய்வதாக
கறியும்— கறியமுதுகளும்
அரிசியும்— அமுதுபடிகளும்
கலத்ததாக்கி வைத்தேன் – பாத்ரஸ்தமாக்கி வைத்தேன்
கண்ணா— எனக்கு கண்ணாயிருந்தவனே
நீ— கன்றுகள்மேய்க்கப்போம், நீ
நாளைத்தொட்டு— நாளைமுதலாக
கன்றின்பின்— கன்றுகளின் பின்னே
போகேல்— போகாதேகொள்
கோலம் செய்து— ஆபரணதிகளால் வந்த வொப்பனையை யுடையனாய்க்கொண்டு
இங்கே இரு – அகத்தைவிட்டுப் போகாமல் இங்கேயிரு.

(க) “கோவர்த்தநோஸ்மி”

தோற்று நின்றதிறே. எங்ஙனேயென்னில்; கடுவாயென்று - க்ரூரமாயிருந்துள்ள பிளிறு கிற சப்தத்தையும் க்ரோதத்தையும், "வெங்கண்" என்று - நெருப்புப்பறந்த கண்களையும் சொல்லுகையாலே. இத்தனையும் மேகத்துக்கு முண்டிறே; கேட்டவர்களுக்கு பயங்கரமாம் படியான முழக்கமும், அடர்த்துக்கொண்டு வர்ஷிக்கிற்கிற ஆக்ரஹமும், "தீவளைத்து மின்னிலகும்" என்கிறபடியே கொள்ளிவட்டம் போலேயிருக்கிற மின்னினுடைய சுழிப் பையுமுடைத்தாய், இருட்சியாலும் திரட்சியாலும் உயர்த்தியாலும் கண்டவர்களுக்கு "மத் தகஜம்" என்றே சொல்லலாம்படி யிருக்கையாலே.

அடிவாயுறக்கையிட் டெழப்பறித்திட்டு. மலையினுடைய வேர்ப்பற்றிலே உறும்படி யாகத் திருக்கையைக் கீழேசெலுத்தி, மற்றத் திருக்கையாலே மேலேபிடித்துக் கிளரப்பிடு ங்கி. அமரர்பெருமான் கொண்டுநின்றமலே. * அயர்வறுமமரர்களதிபதி, இயற்றியில்லாதா ரைப்போலே தானேதரித்துக் கொண்டுநின்றமலை. கடல்வாய்ச்சென்று மேகம்கவிழ்ந்திறங்கி. கடலிடத்தேசென்று மேகங்கள் இறங்கிக் கவிழ்ந்துகிடந்து. கதுவாய்ப்பட நீர்முகந்தேறி. கதுவாய்ப்பட வென்றது - வடுப்படவென்றபடி. வடுப்படுகையாவது - குறைபடுகை. இத் தால் - கடல்குறைபடும்படியாக அங்குள்ள நீர்களெல்லாவற்றையும் முகந்துகொண்டு ஆகாச த்திலே யேறியென்கை. அன்றிக்கே, கதுவுதல்-கவ்வுதலாய், அபிநிவேசயுக்தமானவாயை யுடைத்தாய்க்கொண்டு "பெரும்பௌவம் மண்டியுண்ட" என்கிறபடியே கடல்வெறுந் தறையாம்படி அங்குள்ளநீரை முகந்துகொண்டு ஏறியென்னவுமாம். எங்கும் குடவாய்பட நின்று மழைபொழியும். ஸார்வத்ரிகமாய்க்கொண்டு குடத்திட்டுச் சொரிந்தாற்போலே எழு நாள் ஒருபடிப்படநின்று வர்ஷத்தைச்சொரிகிற. கோவர்த்தநமேன்னும் கொற்றக்குடையே. ௬.

மூ.—வானத்திலுள்ளீர்வலியீருள்ளீரே லறையோவந்து வாங்குமினேன்பவன்போல்
ஏனத்துருவாகிய வீசனேந்தையிடவனேழ வாங்கியெடுத்தமலே
கானக்களியானே தன்கொம்பிழந்து கதுவாய்மதஞ்சோரத் தன்கையெடுத்துக்
கூனற்பிறைவேண்டி யண்ணாந்துநிற்குங் கோவர்த்தநமேன்னுங் கொற்றக்குடையே.

பதவுரை.

வானத்தில் உள்ளீர்— "மேலுலகங்களில் வஸிக்குமவர்களே!
வலியீர் உள்ளீரேல்— வல்லமையுள்ளவர்களாயிருந்தீர்களாகில்
அறை— ஜயஸூசகமான நாவலிட்டு
வந்து— இவ்விடம் வந்து
வாங்குமின்— இம்மலையை யெடுத்துக்காணுங்கள்"
என்பவன் போல்— என்று சொல்லுமவன் போலே
ஏனம் உரு ஆகிய— வராஹவேஷங்கொண்டு, பூமியை அண்டபித்தியினின்று மொட்டு விடுவித்தவனாய்
ஈசன்— ஸர்வநிர்வாஹகனாய்
எந்தை— எமக்கு ஸ்வாமியாயுள்ளவன்
இடவன்— மண்கட்டிபோலே
எழ— வேர்ப்பற்றோடே கிளரும்படி
வாங்கி— வாங்கி
எடுத்த— எடுத்துக்கொண்டு நின்ற
மலே— மலையாவது;
கானம்— காட்டிலே
களி— செருக்கித்திரிகிற
யானே— யானையானது
தன் கொம்பு— தன் தந்தத்தை
இழந்து—(கைபொருதுதிரிகையாலே ஓரிடத்தில்குத்துண்டு முறிகையாலே) இழந்து

கதுவாய் — கொம்பு முறிந்து புண்பட்ட வாயிலே
மதம்— மதநீரானது
சோர— ஒழுகாநிற்க
தன் கை எடுத்து— தன் துதிக்கையையெடுத்து
கூனல்— வளைந்திருந்துள்ள
பிறை—மூன்றாம் பிறையை [பிறை-சந்த்ரகலை]
வேண்டி— விரும்பி
அண்ணாந்து நிற்கும்—மேலே பார்த்துக்கொண்டு நில்லாநிற்கிற
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையாம்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. வானத்திற்பாதி. உபரிதநலோகங்களிலே வர்த்திக்கையாலே மநுஷ்யரிற்காட்டில் அதிசயிதஜ்ஞாநசக்திகராகத்தந்தாமை அபிமாநித்துக்கொண்டிருக்கிறவர்களே! நினைத்தது செய்துமுடிக்கவல்ல சக்தியான்களாயிருப்பாருள்ளீர்களாகில், அறையோவந்துவாங்குமினேனபவன்போல். "அறையோவறை! இம்மலையைவந்து, வாங்கிக்காணுங்கோள்" என்பாரைப்போலே. ஏனத்துருவாகியவீசனெந்தை. * ஸப்தத்வீபாட்டியமஹீதரையான பூமியிடியவிழுந்து கீழிலண்டபித்தியோடே சேர்ந்துகிடக்க, நீருக்கும் சேற்றுக்குமிருயாத வராஹவேஷங்கொண்டு "ஊன்றியிடந்து எயிற்றிற்கொண்ட" என்கிறபடியே மறுபாடுருவக்குத்தி அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்து ஆகாசத்திலேயெடுத்து திருவெயிற்றிலேதரித்த சக்திமானாய், தன்னையொழிந்த ஸமஸ்தபதார்த்தங்களும் தனிட்டவழக்காம்படி நடத்தவல்ல ஸர்வசியந்தாவாய், அவற்றினுடையஸத்தைக் கூவாதீநமாம்படியிருக்கும் ஸர்வகாரணபூதனானவன்.

இடவனெழவாங்கி யெடுத்தமலை. வேர்ப்பற்றோடே ஒருகட்டிபோலே கிளரும்படி வாங்கி யெடுத்துக்கொண்டுநின்ற மலை. இடவனெழப்பறித்தென்னாதல், பேர்த்தென்னுதல்செய்யாதே, வாங்கியென்கையாலே அநாயாஸேந எடுத்தமைசொல்லுகிறது. பர்வதங்களோடேகூட பாதாளகதையான பூமியைத் திருவெயிற்றிலேகுத்தி ஒட்டுவிடுவித்தெடுத்த சக்திமானானவனுக்கு, ஒருகட்டியையிடந்தெடுத்தாற்போலே அம்மலையை யிடந்தெடுக்கையில் ஒருருமையில்லையிறே. கானக்களியானை தன்கொம்பிழந்து. காட்டிலேமதித்துத்திரிகிறயானையானது எதிரொருதிரிகையாலே ஓரிடத்திலே குத்தினவளவிலே தன்கொம்புமுறிய, அதனாலே தன்கொம்பையிழந்து. கதுவாய்மதஞ்சோர. கதுவுதல்- விடப்படுதலாய், கொம்புமுறிந்து புண்பட்டவாயிலே மதஜலமொழுக. தன்கையெடுத்து. தன்னுடைய துதிக்கையையெடுத்து வளைந்தபிறையை, தானிழந்தகொம்பாக ப்ரமித்து அத்தைநயபேக்ஷித்து மேலேபார்த்துக்கொண்டு நில்லாநிற்கும். கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே. ...௫

மூ.—சேப்பாடுடைய திருமாலவன்றன் செந்தாமரைக்கைவிர லைந்தினையும்
கப்பாகமடுத்து மணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக் கவித்தமலை
எப்பாடும்பரந்திழி தெள்ளருவியிலங்குமணி முத்துவடம்பிறழக்
குப்பாயமெனநின்று காட்சிதருங் கோவர்த்தநமென்னுங் கோற்றக்குடையே. ௬.

பதவுரை.

செப்பாடு உடைய— ஆர்ஜவகுணத்தையுடையனாய்
திரு மால்— ஸ்ரியப்பதியாய்
அவன்— அப்படிப்பட்டகுணத்தையுடையனானவன்
தன்— தன்னுடைய

செம் தாமரை— செந்தாமரைப் பூப்போன்ற
கை— திருக்கையிலுள்ள
விரல் ஐந்தினையும்— ஐந்து விரல்களையும்
கப்பாக— மலையாகிற குடைக்குக் காம்படி
யிலுண்டான கப்பாகக்கொண்டு
மடுத்து— செறித்து
மணி—நீலமணிபோன்றநிறத்தையுடைத்தாய்
நெடு— நெடியதாயிருந்துள்ள
தோள்— திருத்தோளை
காம்பாக— அக்குடைக்குக் காம்பாக
கொடுத்து— கொடுத்து
கவித்த— தலைகீழாகக் கவித்த
மலை— மலையாவது;

எப்பாடும்— எல்லாப்பக்கங்களிலும்
பரந்து இழி— பரவித் தங்குகிற
தெள் அருவி— தெளிந்த அருவிகளானவை
இலங்கு—விளங்காநின்றுள்ள
மணி—அழகிய
முத்து வடம்—முத்துவடம்போலே
பிறழ—தனித்தனியே ப்ரகாசிக்க
குப்பாயம் என நின்று— அதுதான் அவ
னுக்கோர் முத்துச்சட்டையென்று
தோற்றும்படியாக நின்று
காட்சி தரும்—காட்சி கொடாநிற்கிற
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையாம்.

வ்யா. ஆரும்பாட்டு. செப்பாடுடையதிருமால். செப்பாடாவது - செவ்வை. அதாவது - ஆர்ஜவகுணம். "திருமால்" என்கையாலே, இவ்விடத்தில் அந்த ஆர்ஜவமாவது * சிதகுரைத்தாலும் நன்றுசெய்தாரென்கை. அன்றிக்கே, இந்த்ரனுக்கிட்ட சோற்றைவிலக்கி மலைக்கிடுவித்து வர்ஷாபத்தைவிளைத்து "இவை பட்டது படுக" என்றிருக்கை யன்றிக்கே, முன்பு "ரக்ஷகம்" என்று சொன்ன மலைதன்னையே யெடுத்து ரக்ஷித்த செவ்வைப் பாட்டைச் சொல்லுகிறது. இப்படி ரக்ஷிக்கைக்கடி அவளோட்டை ஸம்பந்தமாகையாலே "திருமால்" என்கிறது என்று இங்ஙனே யோஜிக்கவுமாம். அவன். அப்படிப்பட்ட குணத்தையுடையவன். தன்செந்தாமரைக்கைவிரலைந்தினையும் கப்பாகமடுத்து. தன்னுடைய சிவந்த தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கையில் விரல்களைந்தையும் மலையாகிற குடைக்குக் காம்படியிலுண்டான கப்பாகக்கொண்டு செறித்து.

மணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக் கவித்தமலை. நீலரத்நம்போன்றநிறத்தையுடைத்தாய் நெடியதாயிருக்கிற திருத்தோளை அதுக்குக் காம்பாகக்கொடுத்து, பஞ்சலக்ஷம் குடியிலுள்ளார்க்கும் பசுக்களுக்கும் மழையால் நலிவு வாராதபடியாகவும், பசுக்களுக்குச் சுவடுபடாத புல்லும்தண்ணீரு முண்டாம்படியாகவும் தலைகீழாகக்கவித்தமலை. எப்பாடும் பரந்திழி தெள்ளருவி. "சுனைவாய் நிறைநீர் பிளிறிச்சொரிய" என்கிறபடியே அவனைச்சூழ எல்லாபார்ச்வத்திலும் இடைவிடாமல் தங்குகிற தெளிந்த சுனைநீரருவிகளானவை. இலங்குமணி முத்துவடம் பிறழ. விளங்காநின்ற அழகிய முத்துவடம்போலே தனித்தனியே ப்ரகாசிக்க. குப்பாயமெனநின்று காட்சிதரும். "அதுதான் அவனுக்கொரு முத்துச்சட்டை" என்று தோற்றும்படியாக நின்று காட்சிகொடாநிற்கும். கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே

மூ.—படங்கள்பலவுமுடைப் பாம்பரையன் படர்பூமியைத்தாங்கிக் கிடப்பவன்போல்
தடங்கைவிரலைந்து மலரவைத்துத் தாமோதரனுங்குதடவரைதான்
அடங்கச்சென்றிலங்கையை யீடழித்தவனுமன்புகழ்பாடித் தங்குட்டன்களைக்
குடங்கைக்கொண்டு மந்திகள்கண்வளர்த்துங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே

பதவுரை.

படங்கள் பல‡ உடை— பலபடங்களையுடைய
பாம்பு அரையன்— ஸர்ப்பராஜனானவன்
படர்— பரம்பின
பூமியை— பூமியை
தாங்கி கிடப்பவன் போல்— தன்தலைகளாலே தாங்கிக்கொண்டு கிடக்குமாப்போலே
தட— இடமுடைத்தான
கைவிரல் ஐந்தும்— கையிலுள்ள ஐந்து விரல்களையும்
மலரவைத்து— பரப்பிவைத்து
தாமோதரன்— தாமோதரனானவன்
தாங்கு— தாங்கிக்கொண்டுநின்ற
தட— பெரிய
வரை தான்— மலையாவது;
சென்று— ஆகாசவழியாலே போய்க்கிட்டி
இலங்கையை— லங்கையை
அடங்க— முழுதும்
ஈடழித்த— கட்டழித்துப்பொகட்ட
அனுமன்— ஹநுமானுடைய
புகழ் — கீர்த்தியை
மந்திகள்— பெண்குரங்குகளானவை
பாடி— பாடி
தம்— தங்கள் தங்களுடைய
குட்டன்களை— குட்டிகளை
குடங்கை— உள்ளங்கையிலே
கொண்டு— ஏந்திக்கொண்டு
கண்வளர்த்தும்— சீராட்டியுறங்கப்பண்ணாநிற்கிற
கோவர்த்தன மென்னுங்கொற்றக்குடையே.

‡ "பலவும்" என்ற விடத்தில் 'உம்'சாரியை.

வ்யா. ஏழாம்பாட்டு. படங்களித்யாதி பலபணங்களையுமுடைய நாகராஜன், பரப்பையுடைத்தான பூமியைத் தன்தலைகளாலே தரித்துக்கொண்டு கிடக்குமவன்போலே. தடங்கைவிரலைந்தும் மலரவைத்து. இடமுடைத்தான திருக்கையிலைந்துவிரலையும் மலரவைத்து. தாமோதரன்தாங்குதடவரைதான். ஓர் அபலைக்குக்கட்டவு மடிக்கவுமாம்படி யெளியனாய், அவள்கட்டினகட்டை யவிழ்த்துக்கொள்ள சக்தனுமன்றிக்கே யிருந்தவன் தரித்துக்கொண்டுநின்ற பெரியமலைதான். பஞ்சலக்ஷம்குடியும் ஊரிலுள்ள பசுநிரைகளு மெல்லாம் சேரவொதுங்கலாம்படியிறே மலையின்பரப்பு. தானென்று - அதின் காத்தையும் அதின் மேலுண்டான வ்ருக்ஷங்களையும் மர்கவிசேஷங்களையும் அந்நிலத்துக்கடைத்த மநுஷ்யரையு மெல்லாம் நினைக்கிறது.

அடங்கச்சென்றிலங்கையை யீடழித்த. த்ரிகத்ரயயுக்தமாய், தேவர்கள்கொடுத்த வரபலத்தாலும் ராவணனுடைய புஜபலத்தாலும் ஒருவரால்சென்று அழிக்கவொண்ணாதபடி யிருக்கிற லங்கையையெல்லாம் "ஓதமாகடலைக்கடந்தேறி" என்கிறபடியே சென்று "உயர்கொள்மாக்கடிகாவையிறுத்து" இத்யாதிப்படியே கட்டழித்துப்பொகட்ட. அநுமன்புகழ்பாடி. ஹநுமானுடைய கீர்த்தியைப்பாடி. தம் குட்டன்களை. தந்தாமுடைய குட்டிகளை. குட்டனென்கிறது- ப்ரீதியாலே. குடங்கைக்கொண்டு. குடங்கைகளிலே யேந்திக்கொண்டு. மந்திகள் கண்வளர்த்தும். மந்திகளானவை சீராட்டியுறங்கப்பண்ணாநிற்கும். மந்தி- பெண்குரங்கு. கோவர்த்தநமேன்னுங் கொற்றக்குடையே. ... ... எ.

மூ.—சலமாமுகிற் பல்கணப்போர்க்களத்துச் சரமாரிபொழிந்தெங்கும் பூசலிட்டு
நலிவானுறக்கேடகங் கோப்பவன்போல் நாராயணன் முன்முகங்காத்தமலை
இலைவேய்குரம்பைத் தவமாமுனிவரிருந்தார் நடுவேசென்றணார் சோறியக்
கோலைவாய்ச்சின வேங்கைகணின் றுறங்குங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.

பதவுரை.

சலம்— நீர் கொண்டெழுந்த
மா முகில்— கார் மேகங்களுடைய
பல் கணம்— பல திரளானது
போர் களத்து— யுத்த பூமியிலே
சரம் மாரி பொழிந்து— சரங்களை வர்ஷித்தாற்போலே வர்ஷித்துக்கொண்டு
எங்கும்— இடைச்சேரியடங்கலும்
பூசலிட்டு- இடித்து முழங்கி யுத்தம்பண்ணி
நலிவான்— வருத்துவதாக
உற— ஒருப்பட்ட வளவிலே
கேடகம் கோப்பவன்போல்— கடகு கோத்துப் பிடிக்குமவன் போலே
நாராயணன்— நாராயணனானவன்
(திருக்கையி லெடுத்துக் கொண்டு,)
முன்— முந்திவருகிற
முகம்— வர்ஷமுகத்தினின்றும்
காத்த— ரக்ஷித்த
மலை— மலையாவது;
இலை வேய் குரம்பை— பர்ணசாலைகளில் வஸிக்கிற
தவம் மா முனிவர் இருந்தார் நடுவே சென்று— தபஸ்விகளாயிருந்த மஹர்ஷிகள் நடுவே சென்று
அணர் சொறிய- தன்கழுத்தை அவர்கள் சொறிய
கொலை— கொல்லுகிற
வாய்— வாயையுடையதாய்
சினம்— கோபத்தையுடைத்தான
வேங்கைகள் புலிகளானவை
நின்று உறங்கும்— நின்றபடியே உறங்காநிற்கிற
கோவர்த்தந மென்னுங்கொற்றக்குடையாம்.

வ்யா. எட்டாம்பாட்டு. சலமாமுகிலித்யாதி. பலதிரளாய்க்கடலை வாளாகப்பருகி நீர்கொண்டெழுந்த மஹாமேகங்களானவை, யுத்தபூமியில் சரவர்ஷம்போலே வர்ஷித்துக்கொண்டு திருவாய்ப்பாடியில் ஊரோடு பசுக்கள் மேயுமிடத்தோடுவாசியற எங்கும் "எங்களைத் தப்பவல்லாருண்டோ" என்று இடித்து முழங்கிப் பூசலிட்டு நலிவதாகவொருப்பட்டவளவிலே, அந்த சரவர்ஷத்தைத் தகைகைக்குக் கடகுகோத்துப் பிடிக்குமவன்போலே ஸர்வரக்ஷகனான நாராயணன் தன்கையிலே யெடுத்துக்கொண்டு முந்திவருகிற வர்ஷமுகத்தைத் தகைந்தமலை. இலைவேய்குரம்பை. இலையாலே வேய்ந்தகுடில்; பர்ணசாலையென்றபடி. இத்தை வாஸஸ்தாநமாக வுடையராயிருந்துள்ள. தவமாமுனிவர். தபோநிஷ்டரான மஹர்ஷிகள். இருந்தார்நடுவேசென்று. தபஸ்ஸுக்காக ஓரிடத்திலே திரளவிருந்தவர்கள் நடுவே சென்று. அணர்சொறிய. "ஸர்வமும் பகவதாத்மகம்" என்று கண்டிருக்கையாலே ஒன்றினு மொருபயமற்றிருக்குமவர்கள் தன் கழுத்தைச்சொறிய. கொலைவாய்ச்சின வேங்கைகள் நின்றுறங்கும். கொல்லுகிறவாயையும் சினத்தையுமுடைத்தான புலிகளானவை அந்த ஸுகத்தாலேநின்று உறங்காநிற்கும். கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே. ... அ.

மூ.—வன்பேய் முலையுண்டதோர் வாயுடையன் வன்றாணேனநின்றதோர் வன்பரத்தைத்
தன்பேரிட்டுக்கொண்டு தரணிதன்னிற் றாமோதரன் றாங்குதடவரைதான்
முன்பேவழிகாட்ட முசுக்கணங்கள் முதுகிற்பெய்து தம்முடைக்குட்டன்களைக்
கோம்பேற்றியிருந்து குதிபயிற்றுங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே. ௯.

பதவுரை.

வன் பேய்— வலியளான பூதனையின்
முலை— (விஷந்தடவின) முலையை
உண்டது ஓர் வாய் உடையன்— உண்டதொரு வாயையுடையனாய்

வன் பாரத்தை— வலிய பாரத்தைத் (தாங்கிக் கொண்டு)
நின்றது ஓர்— நின்றதொரு
வன் தூணை— வலிய தூணைப்போலே
தன் பேர்— 'கோவர்த்தநன்' என்ற தன் பேரை
இட்டுக்கொண்டு— அந்தமலைக்கு இட்டுக் கொண்டு
தரணிதன்னில் — இந்நிலத்திலே
தாமோதரன்— ஆய்ச்சி யொருத்திக்குக் கட்டவு மடிக்கவுமாம்படி பவ்யனாயிருந்தவன்
தாங்கு— தாங்கிக்கொண்டு நின்ற
தடம் வரை தான்— பெரிய மலையாவது;
முசுக்கணங்கள்— (ஓர் வகைப்பட்ட) குரங்குகளின் திரளானவை
முன்பே— ஏற்கவே
வழி காட்ட— ஒரு கிளையில் நின்றும் மற்றொரு கிளையில் பாயும் வழி காட்டுகைக்காக
தம்முடை குட்டன்களை— தந்தம் குட்டிகளை
முதுகில்— முதுகிலே
பெய்து— கட்டிக்கொண்டு போய்
கொம்பு— கொம்பிலே
ஏற்றி இருந்து— ஏற்றிவைத்து
குதி— ஒரு கொம்பில் நின்று மொரு கொம்பிலே குதிக்கும்படியை
பயிற்றும்— பழக்குவியாநிற்கிற கோவர்த்தந மென்னுங் கொற்றக் குடையாம்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. வன்பேய்முலையுண்டதோர் வாயுடையன். வலிய பேயுடைய முலையுண்டதொரு வாயையுடையவன். பேய்க்கு வன்மையாவது-இவனுடைய மௌக்த்யத்தையும் வடிவழகையும் கண்டவிடத்திலும் இளகாத நெஞ்சின்வலிமை. அன்றிக்கே, வன்மை முலைக்கு விசேஷணமாய்- அதின் விஷத்தினுடைய க்ரௌர்யத்தைச் சொல்லவுமாம். நஞ்சேற்றின முலையிறே. ஓர்வாயென்றது- அந்த நஞ்சைப்பொறுத்து உண்கையாலும் அவளை முடிக்கையாலும் அத்விதீயமானவாயென்றபடி. வன்தூணைநின்றதோர் வன்பாரத்தை. வலியபாரத்தை தரித்துநின்றதொரு வலியதூணைப்போலே. "தரித்து" என்கிற விது வும் அத்யாஹார்யம்.

தன்பேரிட்டுக்கொண்டு. "கோவர்த்தநன்" என்கிற தன்பேரை அதுக்கிட்டுக்கொண்டு. தரணிதன்னில். தேசாந்தரங்களில் வ்யாவ்ருத்தி. அதாவது - பேரளவுடையாரான ப்ரஹ்மேசாதிகள்போல்வார்க்கன்றிக்கே, க்ஷுத்ரமநுஷ்யரும் காணலாம்படியான இந்நிலத்திலே யென்றபடி. தாமோதரன். பெற்றதாய்க்குக் கட்டிவைக்கலாம்படி பவ்யனாயிருந்தவன். "வன்பேய்முலை யுண்டதோர் வாயுடையன்" என்றும், "தாமோதரன்" என்றும் சொல்லுகையாலே - பேய்த்தாயைமுடித்து ஆய்த்தாய்க்கு பவ்யனாயிருந்தபடி சொல்லுகிறது. தாங்குதடவரைதான். இப்படியிருக்கிறவன் தரித்துக்கொண்டுநின்ற பெரிய மலைதான். முன்பேயித்யாதி. முசுக்கணங்களானவை ஏற்கவே பணையோடுபணைபாயும்வழி காட்டுகைக்காகத் தந்தாமுடைய குட்டிகளை முதுகிலே கட்டிக்கொண்டுபோய், கொம்பிலே யேற்றியிருந்து ஒரு கொம்பில் நின்றும் ஒரு கொம்பிலே குதிக்கும்படியை, தான்முந்துறக் குதித்துக் காட்டி அப்பயிப்பியாநிற்கும். கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே. ...௯.

அ. பத்தாம்பாட்டு. கோடியித்யாதி. "மழைவந் தெழுநாள் பெய்து மாத்தடைப்ப" என்கிறபடியே - எழுநாள் ஒருபடிப்பட வர்ஷிக்கிறவளவில் ரக்ஷ்யவர்க்கத்துக்கு ஒரு நலிவுவாராதபடி மலையையெடுத்து தரித்துக்கொண்டுநின்று ரக்ஷித்த ப்ரகாரத்தை யருளிச் செய்தார் - கீழ்; இப்படி யேழுநாள் மலையைச் சுமந்துகொண்டு நின்றவளவில் திருக்கையில் ஒருவாட்டமின்றிக்கே யிருந்தபடியை யநுபவித்து, மங்களாசாஸநபராகையாலே ப்ரீதரா யருளிச் செய்கிறார் - இதில்.

மூ.—கோடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில
வடிவேறுதிருவுகிர் நொந்துமில மணிவண்ணன் மலையுமோர் சம்பிரதம்
முடியேறிய மாமுகிற்பல்கணங்கண் முன்னெற்றி நரைத்தன போலவெங்கும்
குடியேறியிருந்து மழைபொழியுங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே. ௰.

பதவுரை.

கொடி ஏறு— த்வஜத்தை ரேகாரூபமாக தரித்துக்கொண்டிருப்பதாய்
செம் தாமரை— செந்தாமரைப்பூப் போன்ற
கை விரல்கள்— திருக்கைகளும் திருவிரல்களும்
(ஏழுநாள் ஒரு படிப்பட மலையைச் சுமந்து கொடு நின்ற வளவிலும்,)
கோலமும்— இயற்கையான அழகும்
அழிந்தில— அழிந்தனவில்லை;
வாடிற்றில— வாட்டத்தையு மடைந்தனவில்லை;
வடிவு ஏறு — அழகுமிக்கிருந்துள்ள
திரு உகிர்— திரு நகங்களானவை
நொந்தும் இல— நொந்தனவுமில்லை;
மணி வண்ணன் — நீலரத்நவர்ணனை கண்ணனெடுத்த
மலையும்— கோவர்த்தந கிரியும்
(அத்தை இவனெடுத்துக் கொண்டு நின்ற நிலையும்,)
ஓர் சம்பிரதம்— ஒரு கண்கட்டு வித்தையாயிருந்தது!;
(அந்த மலை எது வென்ன;)
முடி— மலையின் சிகரத்திலே
ஏறிய— ஏறின
மா முகில்— பெரிய மேகங்களின்
பல் கணங்கள்— பல திரள்களானவை
முன் நெற்றி— தங்கள் நெற்றியின் முற்பாகமானது
நரைத்தன போல்— நரைத்தாப்போலே
எங்கும்— எல்லா விடங்களிலும்
குடி ஏறி இருந்து— குடியேறியிருந்து
மழை பொழியும்— மழை சொரியா நிற்கிற
கோவர்த்தந மென்னும் கொற்றக் குடையாம்.

வ்யா. பத்தாம்பாட்டு. கோடியேறு செந்தாமரைக் கைவிரல்கள். (க) "த்வஜவஜ்ராப்ஜ க்ருதசிஹ்நேந பாணிநா" என்கிறபடியே ஐச்வர்யஸூசகமான த்வஜவஜ்ராதி சிஹ்நங்களை ரேகாரூபேண உடைத்தாயிறே திருக்கைதானிருப்பது; அதுக்கெல்லா முபலக்ஷணமாக த்வஜமொன்றையு மருளிச்செய்கிறார். த்வஜத்தை ரேகாரூபேண தரித்துக்கொண்டிருப்பதாய், நிறத்தாலும் செவ்வியாலும் மார்த்தவத்தாலும் செந்தாமரைபோலேயிருக்கிற திருக்கையும் திருவிரல்களும். கோலமுமழிந்தில வாடிற்றில. ஏழுநாள் ஒருபடிப்பட்ட மலையைச் சுமந்துகொண்டு நின்றவளவில், ஸ்வாபாவிகமான வழகும் அழிந்தனவில்லை; பாரம் பொறுமையாலே தளர்ந்து வாட்டத்தை யடைந்தனவுமில்லை. வடிவேறுதிருவுகிர் நொந்துமில. அழகுமிக்கிருந்துள்ள திருவுகிர்களானவை நொந்தனவுமில்லை.

(க) "த்வஜ வஜ்ராப்ஜ க்ருத சிஹ்நேந பாணிநா"

மணிவண்ணன்மலையு மோர்சம்பிரதம். நீலரத்னம் போலே யிருக்கிற வடிவையுடைய வன் எடுத்தமலையும், அத்தையிவனெடுத்து நின்ற நிலையும் ஒரு இந்த்ரஜாலம். அதாவது - மலையையெடுத்துச் சுமந்து கொடுநின்றது மெய்யாகில் அதின்கார்யமான விக்ருதிகளிலொன்று திருக்கையிலே காணவேண்டாவோ? அதில்லாமையால் இதொரு கண்கட்டி வித்தை போலே யிருப்பதொன்றென்கை. எடுத்த திருக்கையில் ஒரு விக்ருதிகாணுமையாலே இந்த்ரஜாலமென்ற வித்தையொழிய, அது பரமார்த்த மென்னுமிடத்தை யருளிச்செய்கிறார்மேல் முடியித்யாதி. மலையின்கொடு முடியிலேயேறின மஹா மேகங்களினுடைய பலவகைப்பட்ட ஸமூஹங்களானவை. முன்னேற்றி நரைத்தனபோல வெங்குங் குடியேறியிருந்து மழைபொழியும். அதினுடைய முன்னெற்றி நரைத்தாற்போலே சூழக் குடியேறியிருந்து லோகத்துக்கெல்லாம் ஜல ஸம்ருத்தியுண்டாம்படி வர்ஷத்தைச் சொரியாநிற்கும். வர்ஷியாமல் வெளுத்திருக்கும் காலத்திலும் வஸ்தவ்ய தேசம் மலைத்தலையோ மாகையாலே "முன்னெற்றி நரைத்தனபோல வெங்கும் குடியேறியிருந்து" என்கிறது. இப்படி மேகங்களிருந்து வர்ஷியாநிற்கும். கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே. ஆகையால் இந்த்ரஜாலமன்று, பரமார்த்தமென்கை. ... ... ... ... ... ... ௰.

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அரவிற்பள்ளிகொண்டரவந்துரந்திட் டரவப்பகையூர்தியவனுடைய
குரவிற்கொடி முல்லைகணின்றுறங்குங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடைமேல்
திருவிற்பொலி மறைவாணர்புத்தூர்த் திகழ்பட்டர்பிரான் சொன்னமாலைபத்தும்
பரவுமனநன்குடைப் பத்தருள்ளார் பரமானவைகுந்த நண்ணுவரே. ௧௧.

பதவுரை.

அரவில்— திருவனந்தாழ்வான் மேலே
பள்ளிகொண்டு— (க்ஷீராப்தியிலே) பள்ளி கொண்டு
(அத்தைவிட்டு, ஆய்ப்பாடியில் வந்தவதரித்து,)
அரவம்— காளியநாகத்தை
துரந்திட்டு— ஓட்டிவிட்டு
அரவம்— ஸர்ப்பஜாதிக்கெல்லாம்
பகை— பகையான பெரிய திருவடியை
ஊர்தியவனுடைய — வாஹநமாக வுடையவனுடைய
குரவில்— குரவமரத்திலே
கொடி— கொடியாய்ப் படர்ந்து கிடக்கிற
முல்லைகள்— முல்லைகளானவை
நின்று— நிலைபெற்று
உறங்கும்— உறங்கும்படி யிருப்பதாய்
கோவர்த்தநம் என்னும்— கோவர்த்தநமென்னும் திருநாமத்தை யுடைத்தாய்
கொற்றம்— மழைதடுத்த வெற்றியை யுடைத்தான
குடைமேல்—குடையான பர்வதவிஷயமாக
திருவின்— வைஷ்ணவ ஸ்ரீயால்
பொலி— விளங்கா நின்றவர்களாய்
மறை— வேதத்துக்கு
வாணர்— வ்யாஸபதம் செலுத்த வல்லரானவர்கள் வர்த்திக்கிற
புத்தூர்— ஸ்ரீவில்லிபுத்தூரில்
திகழ்— விளங்கா நின்றுள்ள
பட்டர் பிரான் — பெரியாழ்வார்
சொன்ன— அருளிச்செய்த
மாலை— சொல் மாலையான
பத்தும்— இப்பத்துப் பாசுரங்களையும்
பரவும்— பரவும்படியான
மனம்— மநஸ்ஸை
நன்கு— நன்றாக
உடை— உடையவர்களாய்
பத்தர் உள்ளார்— பக்திமான்களா யுள்ளவர்கள்
பரமான— எல்லாவற்றுக்கும் மேலான
வைகுந்தம்— ஸ்ரீ வைகுண்டத்தை
நண்ணுவர்— அணுகப் பெறுவர்கள்.

வ்யா. அரவிற்பள்ளிகொண்டு. மென்மை குளிர்த்தி நாற்றங்களை ப்ரக்ருதியாக வுடைய திருவனந்தாழ்வான்மேலே திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டு. அரவம் துரந்திட்டு. (க) "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகத:" என்கிறபடியே அப்படுக்கையை விட்டுப்போந்து அவதரித்த விடத்திலே கோபஜாதியும் கோக்களும் தண்ணீர் குடிக்கிற மடுவை விஷதூஷிதமாக்கிக் கொண்டுகிடந்த காளியனென்கிற ஸர்ப்பத்தை அங்குநின்று மோட்டி விட்டு. அரவப்பகையூர்தியவனுடைய. "அரவம்" என்கிறஜாதிக்கெல்லாம் பகையான பெரிய திருவடியை வாஹநமாக நடத்துகிறவனுடைய.

குரவிலித்யாதி. "குரவு" என்கிற வ்ருக்ஷத்திலே கொடியாய்ப் படர்ந்துகிடக்கிற முல்லைகளானவை நின்றுறங்கும்படி யிருப்பதாய், கோவர்த்தநமென்கிற திருநாமத்தையுடைத்தாய், வர்ஷத்தைத் தகைகைக்குக் கொற்றக்குடையான பர்வதவிஷயமாக. "குரவக் கொடிமுல்லைகள்" என்றுபாடமானபோது - குரவாகிய வ்ருக்ஷமும் அதின்மேலே படர்ந்த கொடியான முல்லையும் நின்றுறங்குமென்று பொருளாகக்கடவது. திருவிற்பொலியித்யாதி. ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயால் மிக்கு வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்த வல்லரானவர்கள் வர்த்திக்கிற ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸர்வோத்தரராய்க்கொண்டு விளங்காநின்றுள்ள பெரியாழ்வாருளிச்செய்த சப்தஸந்தர்ப்பமான விப்பத்தையும். பரவுமனநன்குடைப் பத்தருள்ளார். ப்ரீதிபரவசராய்க் கொண்டுபேசும் நல்லமநஸ்ஸையுடைய பக்திமான்களா யுள்ளவர்கள். பரமான வைகுந்தம் நண்ணுவரே. தங்களுடைய ஜ்ஞாந ப்ரேமாநுகுணமாக பகவதநுபவகைங்கர்யங்களிலே அந்வயித்து * அடியார்கள் குழாங்களையுடன்கூடி வாழலாம்படியிருக்கும் ஸர்வோத்தரமான ஸ்ரீவைகுண்டத்தை ப்ராபிக்கப்பெறுவர். ... ... ௧௧.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

அடிவரவு.—அட்டு வழு வம்மை கடு வான் சேப்பாடு படம் சலம் வன்பேய் கோடி யரவில் நாவல்.

———(*)———

ஆ - திருமொழி, ௨௪ - க்கு, பாட்டு - ௨௩௨.

---

மூன்றாம்பத்து- ஆறாந்திருமொழி- நாவலம்பெரிய, ப்ரவேசம்.

அ.—நாம்பிறந்து வளருகிறவூரிலே "ஒருத்ரவ்யத்தை ஒரு தேவதாந்தரத்துக் கிடுகையாவதென்" என்று இந்த்ரனுக்கிடுகிற சோற்றைவிலக்கி மலைக்கிடுவித்து அத்தையடையத் தானமுதுசெய்து விடுகையாலே அவன் (௨)க்ருத்தனாய், திருவாய்ப்பாடியை யழிப்பதாக புஷ்கலாவர்த்தகாதி மேகங்களையேவிக் கல்வர்ஷத்தை வர்ஷிப்பிக்க, "கல்லெடுத்துக் கன்மாரி காத்தாய்" என்கிறபடியே கோவர்த்தநோத்தரணம்பண்ணி, அந்தவர்ஷத்தை ரக்ஷ்யவர்க்கத்தின்மேலே விழாதபடி நோக்கின திவ்யசேஷ்டிதரஸத்தையநுபவித்தார் - கீழ்; "குழல்

(க) "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகத:." (௨) க்ருத்தனாய்.

கோவலர்” என்கிறபடியே - கோபர்க்குக் குழலூதுகை ஜாத்யுசித வ்ருத்தியாகையாலே, ஸ்ரீநந்தகோபர் திருமகனாகையாலே தானும் அந்த வ்ருத்தியிலே யதிகரித்துப் பலகாலும் குழலூதிக் கொண்டு போருமவனாகையாலே, ஒருநாள் ஸ்ரீப்ருந்தாவனத்திலே நின்று திருக்குழலூத, அந்தக்குழலோசைவழியே யுவதிகளான ஸ்ரீகோபிமாரிலேசிலர் தங்கள்பந்துக்கள் பண்ணிவைத்த காவல்களையுங் கடந்து இவன் நின்றவிடத்தேவந்து சூழ்ந்துகொண்டு நின்றபடியையும், வேறேசிலர் அரைகுலையத் தலைகுலைய வோடிவந்து ஸ்த்ரீத்வம் பின்னாட்டின படியாலே ஒடுங்கி நெகிழ்ந்தவுடையை ஒரு கையாலே தாங்கி இவனளவிலே கண்ணோடே நின்றபடியையும், உபரிதநலோகவர்த்திகளான ஸ்த்ரீகள் இக்குழலோசையைக் கேட்டுவந்து திரண்டு நெஞ்சுருகி, கண்கள்பனிக்கை முதலான விக்ருதிகளோடே இதிலே செவிமடுத்துக்கொண்டு நின்றபடியையும், மேநகை திலோத்தமை முதலான ந்ருத்தகீத பரைகளாய்த் திரியும் அப்ஸரஸ்ஸுக்கள், உலாவியுலாவிக் குழலூதுகிறவிவனுடைய வடிவையுங் குழலோசையையுங்கண்டு, “நாமும் சிலராயாடிப்பாடித் திரிகிறோமே” என்று லஜ்ஜித்து அறிவழிந்து தந்தாமுடைய ஆடல்பாடல்களைத் தாங்களே மறந்தபடியையும், ஸததகீதபராராய்த் திரியும் தும்புருநாரதரும் கிந்நரமிதுநங்களும் இந்தக்குழலோசையினுடைய ரஸத்திலே யீடுபட்டுத் தந்தாமுடைய வீணையைமறப்பார் கிந்நரம்தொடோமென்பாரான படியையும், ஆகாசசாரிகளான ¶காந்தப்பரெல்லாரும் அம்ருதம்போலேயிருக்கிற இக்கீதவலையிலே யகப்பட்டு சிதிலராய்க் கைமறித்து நின்றபடியையும், தேவர்களெல்லாரும் தங்கள் ஹவிர்ப்போஜநத்தைமறந்து திருவாய்ப்பாடி நிறையவந்து திரண்டு இக்குழலோசையினுடைய ரஸத்தைபுஜித்து இவனைவிடாதே பின்பற்றித் திரிந்தபடியையும், பக்ஷிஜாலங்கள் தந்தாம் கூட்டைவிட்டுவந்து சூழ்ந்து படுகாடுபோலே கிடந்தபடியையும், பசுத்திரள்கள் இக்குழலோசையைக்கேட்டு பரவசமாய்க் கால்களைப்பரப்பித் தலைகளை நாற்றிக் கொண்டு செவியை யசைக்கவும் மாட்டாமல் நின்றபடியையும், மான்திரள்களானவை மேய்கைமுதலான வற்றைமறந்து நிச்சலமாய்க்கொண்டு சித்ரார்ப்பிதங்கள்போலே நின்றபடியையும், அசேதநமான மரங்களானவை சேதநங்களிலுங் காட்டில் அத்யாச்சர்யமாம்படி ஈடுபட்டபடியையுந் தனித்தனியே பேசி அவனுடைய திருக்குழலோசையினுடைய வைசித்ரியை யநுபவிக்கிறார் - இத்திருமொழியில். ... ... ... ... ... ...*

மூ.—நாவலம்பெரிய தீவினில்வாழு நங்கைமீர்களிதோ ரற்புதங்கேளீர்
தூவலம்புரியுடைய திருமாலூயவாயிற் குழலோசைவழியே
கோவலர்சிறுமிய ரிளங்கொங்கை குதுகலிப்ப வுடலுளவிழ்ந்தெங்கும்
காவலுங்கடந்து கயிறுமாலையாகிவந்து கவிழ்ந்துநின்றனரே.

பதவுரை.

பெரிய— பெரிதாயிருந்துள்ள
நாவல் ‡ தீவினில்— ஜம்பூத்வீபத்திலே
வாழும் — வாழாநின்றிருந்துள்ளவர்களாய்
நங்கைமீர்கள்— ஒன்றாலுங் குறைவில்லாதவர்களே!
இது ஓர்— இதொரு

அற்புதம்— ஆச்சர்யத்தை
கேளீர்— கேளுங்கோள்;
தூ— சுத்தமான
வலம்புரி உடைய— ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருக்கையிலே உடைய

‡ “நாவலம்” என்றவிடத்தில் ‘அம்’ சாரியை.

¶ காந்தப்பர்- கந்தர்வர்.

திருமால்— ஸ்ரீய:பதியானவன்
தூய— போக்யமான
வாயில்— திருப்பவளத்தில் வைத்து ஊதுகிற
குழல்— முரளியினுடைய
ஓசை வழியே— இசையின் மார்க்கமாக
கோவலர்— இடையருடைய
சிறுமியர்— சிறுப் பெண்களானவர்கள்
இள— பக்வமாயிருந்துள்ள
கொங்கை— தங்கள் ஸ்தநங்களானவை
குதுகுலிப்ப— நாங்கள் முன்னே போகிறோமென்று நெறித்து குதூஹலம் பண்ண
உடல்— சரீரமும்
உள்— நெஞ்சும்
அவிழ்ந்து— கட்டுக்குலைந்து
எங்கும்— எங்குமுள்ள
காவலும்— காவலையும்
கடந்து— அதிக்ரமித்து
கயிறு மாலை ஆகி வந்து — கயிற்றில் ஒழுங்குபடச் சேர்ந்த மாலைகள் போலே திரள் திரளாகவந்து
கவிழ்ந்து நின்றனர்— (அவனைக் கண்டவாறே லஜ்ஜித்துக்) கவிழ்தலையிட்டு நின்றார்கள்.

வ்யா: முதற்பாட்டு. நாவலம்பெரியதீவினில். நாவலையுடைத்தான பெரியதீவிலே. த்வீபாந்தரங்களைப்பற்றப் பெருமையையுடைய ஜம்பூத்வீபத்திலே யென்றபடி. இந்தத்வீபத்திலுடைய வைபவம் வேறொரு த்வீபத்துக்கில்லையிறே. அதாவது - த்வீபாந்தரங்களெல்லாம் (க) போகபூமியாயிருக்குமித்தனையிறேயுள்ளது; ஆர்ஜநபூமியுள்ளது இதிலேயிறே; இது தன்னிலும் நவமகண்டமான பாரதவர்ஷமிறே ஆர்ஜநபூமியாயிருப்பது; வர்ஷாந்தரங்களும் (க) போகபூமிகளித்தனையிறே; அப்படியிருந்ததாகிலும் பாரதவர்ஷ ப்ராதாந்யத்தைப் பற்ற த்வீபாந்தரங்களிற் காட்டில் இந்தத்வீபத்துக்கு ஏற்றம்சொல்லக் குறையில்லை; த்வீபாந்தரங்களில் போகங்களுக்கும் உபரிதநபாதாள லோகங்களில் போகங்களுக்கும் மோக்ஷத்துக்கும் ஸாதநாநுஷ்டாநம் பண்ணலாவது இங்கேயாகையாலும், திவ்ய தேசங்களும் முமுக்ஷுக்களும் ப்ராசுர்யேண வுள்ளது இங்கேயாகையாலும் இந்த பாரதவர்ஷத்தோடே கூடியிருக்கையாலே ஜம்பூத்வீபத்தை “பெரியதீவு” என்றருளிச்செய்கிறார். வாழும்நங்கைமீர்கள். அவனவதரித்த தேசத்திலேபிறந்து அவனுடைய அவதாரகுண சேஷ்டிதங்களையெல்லாம் அநுபவிக்கையாகிற வாழ்வையுடையராய், அதுக்கீடான ஜ்ஞாநப்ரேமங்களால் பூர்ணைகளாயுள்ளவர்களேயென்று தாமும் கோபஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணினவராகையாலே திருவாய்ப்பாடியிலுள்ளாரோடு ஸஜாதீயராய்நின்று அங்குத்தை விசேஷஜ்ஞைகளான ஸ்த்ரீகளிலே சிலரை ஸம்போதித்து அருளிச்செய்கிறாரென்னுதல்; அன்றிக்கே, (க) “[illegible]” என்கிறபடியே பகவத்வ்யதிரிக்தரெல்லாரையும் ஸ்வாதந்த்ர்யகந்தரஹிததயா ஸ்த்ரீப்ராயரென்றுநினைத்து ஜம்பூத்வீபத்தில் பகவதநுபவ பரரான விசேஷஜ்ஞரையுடைய “நங்கைமீர்” என்று ஸம்போதிக்கிறாராகவுமாம். இதோரற்புதம் கேளீர். இதோராச்சர்யம் கேளீகோள். தூவலம்புரியுடைய திருமால். தூய்தானவலம்புரியையுடைய ஸ்ரிய:பதியானவன். இத்தால்— ப்ரதிகூலரை நிரஸிக்கவும் அநுகூலரைச் சேர்ப்பிக்கவும்வல்ல பரிகரத்தையுடையவனென்கை. ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்குத் தூய்மையாவது- சேஷிநினைவறிந்து கார்யம் செய்யவல்ல சுத்தி. இப்படியிருக்கையாலே தன்னுடைய த்வநிகொண்டே அவனுகந்தார் வாழவும் முனிந்தார் முடியவும் பண்ணுநிற்குமாய்த்து. தூயவாயில் குழலோசைவழியே. திருப்பவளத்துக்குத்

(க) ஹொரஹஸ குமி.
(க) “ ஸஹவவாஸுதேவோஸௌ ஸாக்ஷாத்புருஷ உச்யதெ- ஸ்த்ரீப்ராயமிதரத்ஸர்வம் ”

தூய்மையாவது-தன்னுடைய உக்திவிசேஷங்களாலே அநுகூல்ரைவாழப்பண்ணவல்லசுத்தி. இப்படியிருக்கிற திருப்பவளத்திலே வைத்து ஊதுகிற திருக்குழலோசைவழியே. அதாவது-'க்ருஷ்ணன்கிடாய் பெண்கள்கிடாய்' என்கிறவூர்கையாலே, உறவுமுறையாரானவர்கள் பலவகைப்பட்ட அரண்களிலே பெண்களைக் கொடுபுக்குக் கட்டிக்கொடு கிடவாநிற்கச்செய்தே அவர்களெல்லாரையுமுறக்கி, தங்கள் செவியிலே புகுந்து உணர்த்தி வாருங்கோள் என்பாரைப்போலே ஆகர்ஷிக்கிற குழலோசை வழிகாட்டவாய்த்து இவர்கள் தாங்கள் வந்தது. கோவலர்சிறுமியர். கோரக்ஷணத்திலே ஸமர்த்தரானவர்களுடைய சிறுப்பெண்கள். இளங்கொங்கை குதுகுலிப்ப. தங்கள் வசத்தில் நில்லாதபடி பரிணதமான முலைகளானவை, தங்களைப்பிற்பாடராக்கி "நாங்கள் முன்னேபோகிறோம்" என்று கௌதூஹலம்பண்ண. இளங்கொங்கை. சொல்லேகொள ப்ராஜ்ஞக்ளாய்த்து. குதுகுலிக்கையாவது-த்வராதிசயத்தால்வந்த விளப்பம். உடலுளவிழ்ந்து. கொங்கையில் குதுகுலிப்பு மாத்ரமன்றிக்கே கொங்கைக்கு ஆச்ரயமானசரீரமும், ஸர்வேந்த்ரியங்களுக்கும் ப்ரதாநமான மநஸ்ஸும் கட்டுக்குலைந்து. எங்கும் காவலும் கடந்து. எங்குமுள்ள காவலையுங்கடந்து. அதாவது- அறைகளுக்குள்ளே யிட்டுத் தாய்மாரணைத்துக்கொண்டு கதவுகளையுமடைத்துப் புறக்காவலாக வேண்டும்பந்துக்களும் கிடக்க, அந்தக்காவல்களையெல்லாம் சூத்ரபாஷாணங்களைப்போலே ஒருசரக்காக நினையாமல் கடந்து. கயிறுமாலையாகிவந்து. கயிற்றிலே யொழுங்குபடச் சேர்த்தமாலைகள் போலே நிரைநிரையாகவந்து. கவிழ்ந்துநின்றனரே. இவனைச் சூழ்ந்துகொண்டுநின்றார்கள். அன்றிக்கே, குழலோசைவழியேவந்து இவனைக்கண்டவாறே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டு நின்றார்களென்னுதல்; எதிர்செறிக்கமாட்டாமல் கவிழ்தலையிட்டு நின்றார்களென்னுதல். க.

மூ.—இடவணரை யிடத்தோளொடுசாய்த் திருக்கைகூடப் புருவநெரிந்தேறக்
குடவயிறுபட வாய்கடைகூடக் கோவிந்தன்குழல்கொ டூதினபோது
மடமயில்களொடு மான்பிணைபோலே மங்கைமார்கண் மலர்க்கூந்தலவிழ
உடைநெகிழ வோர்கையாற்றுகில்பற்றி யொல்கியோடரிக்க ணோடநின்றனரே. உ.

பதவுரை.

| | |
|---|---|
| கோவிந்தன்— பசுமேய்க்கப் பெற்ற கண்ணன் | குழல் கொடு— வேய்ங்குழலைக் கொண்டு |
| இட அணரை— இடப்பக்கத்து சமசருஸ்த் தானத்தை | ஊதினபோது— ஊதினகாலத்திலே, |
| இட தோளொடு சாய்த்து— இடத் திருத் தோளோடே சாய்த்து | மடம்— மடப்பத்தையுடைய |
| இரு கை— இரண்டு திருக்கைகளும் | மயில்களொடு மான் பிணை போலே — மயில்கள் போலவும் மான் பேடைகள் போலவும் |
| கூட— வேய்ங்குழலோடே சேரவும் | மங்கைமார்கள்— யுவதிகளான ஸ்த்ரீகள் |
| புருவம்— திருப்புருவங்களானவை | மலர்— பூக்களால் அலங்கரிக்கப்பட்ட |
| நெரிந்து ஏற— நெளிந்து மேலே கிளரவும் | கூந்தல்— கேசபாசமானது |
| வயிறு— திருவயிறானது | அவிழ— நெகிழ்ந்து அலையவும் |
| குடம் பட— குடம்போலே தோற்றவும் | உடை— பரியட்டமானது |
| வாய்— திருப்பவளமானது | நெகிழ— நெகிழ்வும் |
| கடை கூட— இரண்டருகும் குவிந்து வேய்ங் குழல் துளைகளள்வாகவும் | ஓர் கையால்— ஒரு கையாலே |
| | துகில்— நெகிழ்ந்த அத்துகிலை |
| | பற்றி— பிடித்துக் கொண்டு |

ஒல்கி— (லஜ்ஜித்து) ஒடுங்கி
அரி ஓடு— செவ்வரி, கருவரிகள் ஓடின
கண்— கண்களானவை
ஓட— அவன் பக்கலிலே ஓட
நின்றனர்— திகைத்து நின்றார்கள்.

வ்யா. இரண்டாம்பாட்டு. இடவணரையிடத்தோளோடு சாய்த்து. இடப்பார்ச்வத்தில் ச்மச்ருஸ்த்தாநத்தை இடத்திருத்தோளோடேசாய்த்து. இருகைகூட. இரண்டு திருக்கையும் திருக்குழலோடே சேர. புருவம்நெரிந்தேற. திருப்புருவங்களானவை நெளித்து மேலேகிளர. குடவயிறுபட. திருவயிற்றிலே வாயுவைப்பூரித்து நிறுத்தித் திருப்பவளத்தாலே க்ரமசஃ விட்டு ஊதவேண்டுகையாலே திருவயிறு குடம்போலே தோற்ற. வாய்கடைகூட. திருப்பவளம் இரண்டருகும் குவிந்து திருக்குழல் துளைகளளவாக. கோவிந்தன்குழல்கோடூதினபோது. கோரக்ஷணத்திலே தீக்ஷிதனாய், அவை விலங்காமைக்கும் மேய்கைக்கும் மீளுகைக்கும் தகுதியாக ஊதவல்லானாகையாலே "கோவிந்தன்" என்கிறது; அறியாதவனாகிலும் த்வநிவாய்ப்பாலே ஆகர்ஷகமாம்படி யிருக்கையாலே "குழல்கொடு" என்கிறது. இத்தால்-ஊதுகிறவனுடைய ஸாமர்த்யமும், அதுக்கு உபகரணமான குழலினுடைய வைலக்ஷண்யமும் சொல்லிற்றாய்த்து. மடமயில்களொடு மான்பிணைபோலே. மடப்பத்தையுடைத்தான மயில்கள்போலவும், நோக்கையுடைத்தான மான்பேடை போலவும். "மயில்கள்" என்கிற பன்மைக்கீடாக, "மான்பிணை" என்கிற ஏகவசநமும்- ஜாத்யபிப்ராயமாய், பன்மையிலேயாகக்கடவது. மங்கைமார்கள். யுவதிகளான ஸ்த்ரீகள். மலர்க்கூந்தலவிழ- புஷ்பாதிகளாலே அலங்க்ருதமான குழல்கள் நெகிழ்ந்தலைய. உடைநெகிழ. ஒப்பித்துடுத்த பரியட்டம் நெகிழ. இப்படி அரைகுலையத் தலைகுலையக் குழலோசைவழியே ஓடிவந்து- ஓர்கையால் துகில்பற்றி. நெகிழ்ந்த துகிலை ஒருகையாலே தாங்கி. ஒல்கி. ஸ்த்ரீத்வம் பின்னாட்டினபடியாலே ஒடுங்கி. ஓடரிக்கணோட நின்றனரே. ஸ்த்ரீத்வம் பின்னாட்டினாலும் ஓடுகிறகண்ணை நிஷேதிக்கப்போமோ. செவ்வரி கருவரியோடினகண்கள் அவன்பக்கலிலேயோட நின்றார்கள். "மடமயில்" "மான்பிணை" என்ற த்ருஷ்டாந்தத்வயத்துக்கும் "மலர்க்கூந்தலவிழ" "ஓடரிக்கணோட" என்ற இரண்டும் தார்ஷ்டாந்திகம். ... ... ௨.

மூ.—வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசுதேவன் மதுரைமன்னனந்தர்
கோனிளவரசு கோவலர்குட்டன் கோவிந்தன் குழல்கொடூதினபோது
வானிளம்படியர் வந்துவந்தீண்டி மனமுருகி மலர்க்கண்கள்பனிப்பத்
தேனளவுசெறிகூந்தலவிழச் சென்னிவேர்ப்பச் செவிசேர்த்துநின்றனரே. ௩.

பதவுரை.

வான்— பரமபதத்துக்கு
இள அரசு— யுவராஜனாய்
‡ வைகுந்தம் குட்டன்— அத்திருநாட்டிலுள்ளார் அநவரதம் நோக்க வேண்டும்படியான சிறுபிள்ளையாய்
வாசுதேவன்— வஸுதேவர் திருமகனாய்
மதுரை— வடமதுரைக்கு
மன்னன்— நிர்வாஹகனாய்
நந்தர் கோன்— நந்தகோபருக்குப் (பிள்ளையாய்)
இள அரசு— இளவரசானவனாய்
கோவலர் குட்டன்— இடையர்களுக்குப் பரியவேண்டும்படியான பிள்ளையாய்

‡ "வைகுந்தக்குட்டன்" என்றதற்கு, 'வைகுண்டன்' என்னும் பேரையுடைய குட்டனென்றும் பொருளாகு மென்பர்.

கோவிந்தன்— பசுமேய்க்கப்பெற்ற கண்ணனவன்
குழல் கொடு ஊதினபோது—;
வான்— தேவலோகத்திலே வர்த்திப்பாராய்
இள— அநுபவயோக்யமான
படியர்— சரீரங்களை யுடையரான ஸ்த்ரீகள்
வந்து வந்து ஈண்டி—(குழலோசைதூண்ட) வந்து வந்து திரண்டு
மனம்— மநஸ்ஸானது
உருகி— நீர்ப்பண்டம் போலே உருகி
மலர்— மலர் போன்ற
கண்கள் — கண்களானவை
பனிப்ப— ஆநந்தபாஷ்பத்தாலே குளிரவும்
தேன் அளவு— தேனோடு கூடின
செறி— செறிந்த
கூந்தல்— கூந்தலானது
அவிழ— அவிழ்ந்து அலையவும்
சென்னி— நெற்றியானது
வேர்ப்ப— ஸ்வேதஸ்விந்நமாகவும்
செவி— காதுகளை
சேர்த்து— இக்குழலோசையிலே மடுத்துக் கொண்டு
நின்றனர்— நின்றார்கள்.

வ்யா. மூன்றும்பாட்டு. வானிளவரசு. பரமபதத்துக்கு இளவரசாயுள்ளவன். (க)வர்த்தமந்த்ரிகள்கீழே பாலராஜனவன் வர்த்திக்குமாபோலே யாய்த்து— "மூதுவராம் விண்ணாட்டவர்" என்கிற நித்யஸூரிகளை ப்ரதாநராக்கி அவர்கள்கீழே தன்னையமைத்துக் கொண்டு இவர்களுக்கு சேஷியாயிருக்கும்படி. "திருவனந்தாழ்வான்மடியிலும் ஸ்ரீஸேநாபதியாழ்வான் பிரம்பின் கீழிலும் பெரியதிருவடி சிறகின்கீழிலுமாய்த்து இத்தத்வம் வளருவது" என்றிறே பட்டரருளிச்செய்வது. வைகுந்தக்குட்டன். அங்குள்ளார்க்குக் குழைச்சரக்காகநினைத்து*அஸ்த்தாநேபயசங்கைபண்ணி அநவரதம் நோக்கவேண்டும்படியானபருவத்தையுடையவன். வாசுதேவன். ஸ்ரீவஸுதேவர் திருமகன். இத்தால்-*பிறப்பிலியானபரத்வத்தில் வ்யாவ்ருத்தி. மதுரைமன்னன். ஸ்ரீமதுரைக்கு ராஜாவானவன். பரமபதத்தில் ஸ்வதந்த்ரராயிருப்பாரொருவரில்லாமையாலே தன்னுடைய ஆச்ரித பாரதந்த்ர்யம் தோற்ற இருக்கும்படியைப்பற்ற "இளவரசு" என்கிறது; இங்கு இருந்ததேகுடியாக ஸ்வதந்த்ரராகையாலே ஈரரசு அறுத்துக்கொண்டிருக்கும்படியைப்பற்ற "மன்னன்" என்றது. நந்தர் கோனிளவரசு. "வாசுதேவன்" என்றதுக்கும் அவ்வருகேயொரு நீர்மையிறேயிது. அது ராஜகுலம்; இது கோபகுலமிறே. ஸ்ரீநந்தகோபர் திருமகனை இளவரசு. பஞ்சலக்ஷம்குடிக்கும் அரசு ஸ்ரீநந்தகோபராகையாலே, இவனை "இளவரசு" என்கிறது. கோவலர்குட்டன். *வைகுந்தக்குட்டனில் வ்யாவ்ருத்தி. கோபஜாதியாகப்பரிந்து நோக்கவேண்டும்படியான பருவத்தையுடையவன். கோவிந்தன். ஜாத்யுசிதமான கோரக்ஷணமே யாத்ரையாயுள்ளவன். குழல்கோதினபோது. ஸர்வவசீகாரபரிகரமான குழலைக்கொண்டு ஊதினபோது. வானிளம்படியர். வானிலே வர்த்திப்பாராய் அந்தலோகமுள்ளவளவும் ஜராமரணங்களின்றிக்கே, (உ) போகயோக்யமான சரீரங்களையுமுடைய ஸ்த்ரீகள். படி-சரீரம். வந்துவந்தீண்டி. குழலோசை வழியே வந்துவந்து திரண்டு. மனமுருகி. மநஸ்ஸு நீர்ப்பண்டமாயுருகி. மலர்க்கண்கள் பனிப்ப. மலர்போலேயிருக்கிறகண்களில் ஆநந்தாச்ருக்கள் துளித்துவிழ. தேனளவுசெறி கூந்தலவிழ. ஓடிவந்தவிசையாலே புஷ்பாதிகளுதிர்ந்தாலும் அவை முடிக்கையாலுண்டான தேன்சுவடு கிடக்குமிறே; ஆகையாலே தேனோடேகூடின செறிந்த குழல்களானவையவிழ. சென்னிவேர்ப்ப. நெற்றிவேர்க்க. தேவஸ்த்ரீகளுக்கு வேர்ப்புண்டாமோ வென்னில்; வஸ்து

(க) வ்ருத்தமந்த்ரிகள். (உ) ஜராமரணமற்று.

க்களுக்கு ஸ்வபாவபேதங்களைப் பிறப்பிக்கும் திருக்குழலோசையால்வந்த விக்ருதியென்று கொள்வது. செவிசேர்த்துநின்றனரே. இக்குழலோசையிலே செவியை மடுத்துக்கொண்டு நின்றார்கள். ... ... ... ... ... ... ரு.

மூ.—தேனுகன்பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடுக ளடங்கவுழக்கிக்
கானகம்படி யுலாவியுலாவிக் கருஞ்சிறுக்கன் குழலூதினபோது
மேனகையொடு திலோத்தமையரம்பை யுருப்பசியரவர் வெள்கிமயங்கி
வானகம்படியில் வாய்திறப்பின்றி யாடல் பாடலிவை மாறினர்தாமே. ௬.

பதவுரை.

தேனுகன்— தேநுகாஸுரன்,
பிலம்பன்— ப்ரலம்பாஸுரன்,
காளியன்— காளிய நாகன்,
என்னும்— என்று சொல்லப்படுகிற
தீப்ப— கொடியவையான
பூடுகள் அடங்க— பூண்டுகளையெல்லாம்
உழக்கி— தலையழித்துப் பொகட்டு
கானகம்— காட்டிலே
படி— இயற்கையாக
உலாவி உலாவி— (தன் இச்சையாலே நின்று) நெடுங்காலம் ஸஞ்சரித்து
கரு— கரியதிருமேனியை யுடையனாய்
சிறுக்கன்— இளம்பிள்ளையான கண்ணன் குழல் ஊதினபோது—;
மேனகையொடு— மேநகையோடு
திலோத்தமை அரம்பை உருப்பசி } இவர்களாகிற
அரவர்— அப்ஸரஸ்ஸுக்கள்
வெள்கி— வெட்கப்பட்டு
மயங்கி— (இவனூதும் குழலோசையி லீடுபாட்டாலே), மயங்கி
வானகம்— தேவலோகத்திலும்
படியில்— பூலோகத்திலும்
வாய்திறப்பு இன்றி— வாய் திறவாமல்
தாமே— (பரப்ரேரணையின்றிக்கே) தாங்களே
ஆடல் பாடல் இவை— ஆடலும் பாடலுமாகிற இவற்றை
மாறினர்— தவிர்ந்து விட்டார்கள்.

வ்யா. நான்காம்பாட்டு. தேனுகனித்யாதி. கழுதையானவடிவைக்கொண்டு காட்டுக்குள்ளே நலிவதாகவந்துநின்ற தேநுகன், இடைப்பிள்ளைகளும் தானுமாக விளையாடா நிற்கச்செய்தே அவர்களோடு ஸமாநரூபனாய்க்கொண்டு வந்துகலந்து நம்பிமூத்தபிரானோடொக்க விளையாடி நலியத்தேடின ப்ரலம்பன், பசுக்களும் இடையரும் தண்ணீர்குடிக்கிற மடுவை விஷத்தாலே தூஷித்துக்கொண்டுகிடந்தகாளியன் என்றுசொல்லப்பட்டதுஷ்பூண்டுகளையடங்கத் தலையழித்துப்பொகட்டு. தீப்பப்பூடென்றது - பரஹிம்ஸாரூபமான தீம்பையுடைத்தான பூண்டென்றபடி. ஒரொன்றே அதிப்ரபலமாயிருக்க, இவற்றை " பூடுகள் " என்று க்ஷுத்ரமாகச் சொல்லிற்று - நிரஸிக்கிறவனுடைய பலத்துக்கு இவை அத்யபாபாஸங்கள் என்று தோற்றுகைக்காக. ஆகையாலிறே " அழித்து " என்னாதே, " உழக்கி " என்றது. கானகம்படியுலாவியுலாவி. வாசியறிவாரில்லாத காட்டுக்குள்ளே " தன்னுடையநடையழகு காட்டவேணும் " என்னும் கருத்தாலன்றிக்கே ஸ்வாபாவிகமாகத்தன்னிச்சையாலன்றிக்கே ஸஞ்சரித்து ஸஞ்சரித்து. எப்படியேயானாலும் அடிமாறியிடப்புக்கால் வல்லாராடினாற்போலேயிறே யிருப்பது. கருஞ்சிறுக்கன் குழலூதினபோது. கண்டவர்கள்கண்குளிரும்படி ச்யாமளமான திருமேனியையும் பருவத்தால்வந்த இளமையையுமுடையவன் குழலூ

தினபோது. இப்படி யுலாவிக்கொண்டுநின்று திருக்குழலையூதினவளவில். மேனகையிந்யாதி. "உபரிதநலோகங்களில் ஆடுகைக்கும் பாடுகைக்கும் தங்களுக்கு மேற்பட்டாரில்லை" என்று ப்ரஸித்தைகளாயிருக்கும் மேநகை, திலோத்தமை, ரம்பை, ஊர்வசி என்று அப்ஸரஸ்ஸுக்களானவர்கள் இவன் நடையழகையும் குழலோசையையும் கண்ணாலும் செவியாலும் அநுபவிக்கையாலே "நாமும் சிலராய் ஆடிப்பாடித் திரிகிறோமே" என்று லஜ்ஜித்து, லஜ்ஜையினுடைய முதிர்த்தியாலே மயங்கி. வானகமித்யாதி. வானிடத்திலும் பூமியிடத்திலும் ஆடப்பாட என்கிறவிது நம்வாயால் சொல்லக்கடவோமல்லோம் என்று தங்களுடைய ஆடலும் பாடலுமாகிற விவற்றைத் தவிர்ந்தார்கள். இவர்கள் இப்படித்தவிர்ந்தது, இரண்டினுடையவும் வாசியறிந்த மத்யஸ்தரானவர்கள் "இனி நீங்களாடவும் பாடவும் வேண்டா" என்று தவிர்க்கையாலேயோவென்னில்; அன்று; தாமே. தாங்களே தவிர்ந்துவிட்டார்கள். ௪

மு,—முன்னரசிங்கமதாகி யவுணன்முக்கியத்தை முடிப்பான் மூவுலகின்
மன்னரஞ்சு மதுசூதனன்வாயிற் குழலினோசை செவியைப்பற்றிவாங்க
நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனுந் தந்தம்வீணைமறந்து
கிந்நரமிதுனங்களுந் தந்தங்கிந்நர ந்தொடுகிலோ மென்றனரே. ரு.

பதவுரை.

முன்— முற்காலத்திலே
நரசிங்கம் அது ஆகி— நரஸிம்ஹ வடிவம் கொண்டு
அவுணன்— ஹிரண்யாஸுரனுடைய
முக்கியத்தை— மேன்மையை
முடிப்பான்— அழித்தவனும்
மூ உலகில் மன்னர்— மூன்று லோகங்களிலுமுள்ள அரசர்களும்
அஞ்சும்— தன் மதிப்பைக் கண்டால் உள்ளம் நடுங்கும்படியாயிருக்கிற
மது சூதனன்— மது நிரஸநம் செய்தருளின கண்ணன்
வாயில்— திருப்பவளத்தில் வைத்தூதின
குழலின்— திருக்குழலினுடைய
ஓசை— த்வநியானது
செவியை— காதை
பற்றி வாங்க— பிடித்திழுக்க
நல் நரம்பு உடைய— நல்ல வீணை நரம்பையுடைய
தும்புருவோடு — 'தும்புரு' என்னும் ரிஷியோடு
நாரதனும்— நாரதமஹர்ஷியும்
தம் தம்— தங்கள் தங்களுடைய
வீணை— வீணையை
மறந்து— மறந்து
( அநுவை மன்றிக்கே, ı)
கிந்நர மிதுனங்களும்— 'கிந்நர மிதுனங்கள்' என்று சொல்லப்படுமவர்களும்
தம் தம்— தந் தாமுடைய
கிந்நரம்— கிந்நரங்களை
தொடுகிலோம் என்றனர்— இனித் தொடக்கடவோமல்லோமென்று விட்டார்கள்.

வ்யா. இந்தாம்பாட்டு. முன்நரசிங்கமதாகி. முற்காலத்திலே "தேவாதி சதுர்விதஜாதியில் ஒன்றிலும் படக்கடவேனல்லேன்" என்று அவன்கொண்ட வரத்துக்கு அவிருத்தமாக நிரஸிக்கைக்காக "நரஸ்யார்த்த தநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்த தநும் ததா" என்கிறபடியே - நரத்வ ஸிம்ஹத்வங்களிரண்டையும் சேர்த்து ஒருவடிவாகக்கொண்டு. "அதாகி" என்றது, இப்படி நரத்வ ஸிம்ஹத்வங்களைச் சேர்த்து ஒருவடிவாக்கினை

(க) "நரஸ்யார்த்த தநும்க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்த தநும்ததா"

விடத்தில் சேராச்சேர்த்தியா யிருக்கையன்றிக்கே "அழகியான்தானே யரியுருவன்தானே" என்னும்படி இருந்த வழகினுடைய வதிசயத்தைச் சொல்லுகிறது. அவுணன் முக்கியத்தை முடிப்பான். எல்லையில்லாத பெருந்தவத்தாலே பல மிறுக்குக்களைப் பண்ணிநின்றுகொண்டு அபசாரங்களெல்லாஞ்செய்து, தானே ஜகத்துக்கெல்லாம் ப்ரதாநனாய், பகவந்நாமம் கேட்கப் பொறாமல் அதுசொன்னானாவே ஹேதுவாக "வயிற்றிற் பிறந்தபிள்ளை" என்று பாராதே வாசாமகோசரமான பீடைகளை யெல்லாம் பண்ணின ஹிரண்யாஸுரனுடைய வேண்டப் பாட்டை யழித்துப் போகட்டவன். மூவுலகில் மன்னரஞ்சும். மூன்றுலோகத்திலுண்டான ராஜாக்களும், அதிமாநுஷ சேஷ்டிதங்களால்வந்த தன்மதிப்பைக்கண்டால் உள்ளம் நடுங்கும்படியிருக்கிற. மதுசூதனன்வாயிற் குழலினோசை செவியைப்பற்றிவாங்க. ஆச்ரிதவிரோதியான மதுவை நிரஸித்தவனுடைய திருப்பவளத்தில் வைத்தூதின திருக்குழலினுடையத்வநியானது செவியைப்பிடித்திழுக்க. நன்னரம்பித்யாதி. செவிபடைத்தாரெல்லாரையும் தன்னுடைய த்வநியாலே வசீகரிக்கவற்றான நன்மையையுடைய வீணைநரம்பைத் தந்தாமுக்குப் பெரியவுடைமையாக நினைத்திருக்கும் தும்புருவும் நாரதனும். "கானவித்யைக்கு தும்புரு நாரதர்" என்று ஸர்வலோகப்ரஸித்தராயிருக்குமவர்களிறே; இப்படி யிருக்கிறவர்களும். தம்தம்வீணைமறந்து. தந்தாமுக்கு ஸர்வகாலமும் அபிமதமான வீணைகளையெடுத்துப் பாடாதவளவன்றிக்கே, அவைதன்னை சோகமறந்து. கிந்நரமித்யாதி. கிந்நரங்கொண்டு பாடித்திரிகையாலே "கிந்நரமிதுநங்கள்" என்று ஜகத்ப்ரஸித்தங்களா யிருக்கிறவர்களும் தந்தாமுடைய கிந்நரம் இனித் தொடக்கடவோமல்லோமென்று விட்டார்கள். ... ... ௫.

மூ.—செம்பெருந்தடங்கண்ணன் திரடோளன் தேவகிசிறுவன் தேவர்கள்சிங்கம்
நம்பரமனிந்நாள் குழலூதக்கேட்டவர்க ளிடருற்றனகேளீர்
அம்பரந்திரியுங் காந்தப்பரெல்லா மமுதகீதவலையாற் சுருக்குண்டு
நம்பரமன்றென்று நாணிமயங்கி நைந்துசோர்ந்து கைம்மறித்துநின்றனரே. ௯

பதவுரை.

செம்— சிவந்ததாய்
பெரு தட— மிகவும் பெருத்திருந்துள்ள
கண்ணன்— திருக்கண்களை யுடையனாய்
திரள்— (மூங்கில்போலே) திரண்டிருக்கிற
தோளன்— திருத்தோள்களை யுடையனாய்
தேவகி— தேவகிப் பிராட்டிக்கு
சிறுவன்— மகனாய்
தேவர்கள் சிங்கம்— தேவஸிம்ஹமாய்
நம்— நமக்கு
பரமன்— தன் பெருமை யெல்லாமறியலாம்படி யிருக்குமவன்
இ நாள்— இந்ததிநம்
குழல் ஊத— திருக்குழலூதும் போது
கேட்டவர்கள்— (அக்குழலோசையைக்) கேட்டவர்கள்
இடர் உற்றன— இடருற்ற ப்ரகாரங்களை
கேளீர்— கேளுங்கோள்;
அம்பரம்— ஆகாசத்திலே
திரியும்— திரியாநின்ற
காந்தப்பர் எல்லாம்— கந்தர்வ ஜாதியர் எல்லாரும்
அமுத கீதம்— அம்ருதம்போல் இனிய இசையாகிற
வலையால்— வலையாலே
சுருக்குண்டு— கட்டுண்டு
நம் பரம் அன்று என்று— நம்மால் இனிப் பாடப் போகாதென்று
நாணி— முன்பெல்லாம் பாடினதற்கும் லஜ்ஜித்து
மயங்கி— மயங்கி

நைந்து— மநச்சைதில்யத்தையுமடைந்து
சோர்ந்து— சரீரமும் கட்டுக் குலைந்து
கை மறித்து நின்றனர்— இனி நாம் ஒன்றுக்கும் கடவோமல்லோமென்று கையை மடக்கிக் கொண்டு நின்றார்கள்.

வ்யா. ஆறும்பாட்டு. செம்பெருந்தடங்கண்ணன். சிவந்து மிகவும் பெருத்திருக்கிற திருக்கண்களை யுடையவன். திரள்தோளன். கணையங்கள்போலே திரண்டிருக்கிற திருத்தோள்களை யுடையவன். தேவகிசிறுவன். தேவகிப்பிராட்டிக்கு விதேயனான புத்ரனானவன். தேவர்கள் சிங்கம். துர்மாநிகளான தேவர்களுக்கு ஸிம்ஹம்போலே அநபிபவநீயனா யிருக்குமவன். நம் பரமன். தன்னபிமாநாந்தர்ப்பூதரான நமக்குத் தன்பெருமையெல்லா மறியலாம்படி யிருக்குமவன். இந்நாள் குழலூத. இற்றைநாள் குழலூத. கேட்டவர்க ளிடருற்றனகேளீர். இக்குழலோசையைக் கேட்டவர்கள் இதினுடையரஸத்தாலே விஸ்தாரானபடியைக் கேளிகோள். கேட்டவர்கள்தான் ஆர், அவர்களிடருற்ற ப்ரகாரமென்னென்ன; சொல்லுகிறதுமேல் அம்பரமித்யாதி. அந்தரிக்ஷசாரிகளாய் ந்ருத்தகீத பராயப்போரும் கந்தர்வ ஜாதியரெல்லாம் அம்ருதம்போலே யினிதான கானவலையிலே கட்டுண்டு. நம்பரமன்றென்று. இனிப்பாடவென்பதொன்று நமக்கு பரமன்றென்று. நாணி. கீழ் பாடிப்போனதுக்கும் லஜ்ஜித்து. மயங்கி. கீழ்மேல் ஒன்றுதானும் நினைக்கமாட்டாதபடி யறிவழிந்து. நைந்து. அறிவுக்கு த்வாரமான அந்தக்கரணம் சிதிலமாய். சோர்ந்து. சரீரம் கட்டுக்குலைந்து தளர்ந்து. கை மறித்து நின்றனரே. தங்கள் தளர்த்தி வாக்கால் சொல்லவும் பலமற்று “ ஒன்றுக்கும் க்ஷமரல்லோம் ” என்று கையை மறித்துக்கொண்டு நின்றார்கள். ... ... கூ

மூ.—புவியுள்நான்கண்டதோ ரற்புதங்கேளீர் பூணிமேய்க்குமிளங் கோவலர்கூட்டத்
தவையுள்நாகத்தணையான்குழலூத வமரலோகத்தளவுஞ் சென்றிசைப்ப
அவியுணமறந்து வானவரெல்லா மாயர்பாடிநிறையப் புகுந்தீண்டிச்
செவியுணவின்சுவை கொண்மகிழ்ந்து கோவிந்தனைத்தொடர்ந்தென்றும்விடாரே.

பதவுரை.

புவியுள்— பூமியிலே
நான் கண்டது ஓர்— நான்கண்டதொரு
அற்புதம்— ஆச்சர்யத்தை
கேளீர்— கேளுங்கோள் ;
பூணி மேய்க்கும்— கன்றுகள்மேய்க்கிற
இள கோவலர் கூட்டத்தவையுள் — கோபாலபாலர்மிக்கிருந்துள்ள கூட்டத்திலே
நாகம் அணையான்— திருவனந்தாழ்வான் மேலேபள்ளிகொண்டருளுமவனான ஸர்வேச்வரன்
குழல் ஊத— திருக்குழலை ஊத
( அதின் த்வநியானது, )
அமரலோகத்தளவும்— தேவலோகத்தளவும்
சென்று— வியாபித்து
இசைப்ப— த்வநிக்க
வானவர் எல்லாம் — தேவஜாதியரெல்லாரும்
அவி— அந்தணர் தங்களுக்களிக்கும் ஹவிஸ்ஸை
உண மறந்து— புஜிக்க மறந்து
ஆயர்பாடி— திருவாய்ப்பாடியானது
நிறைய— நிறையும்படி
புகுந்து— வந்து
ஈண்டி— நெருங்கி
செவி உள் நா— செவியின் உள்நாவாலே
இன்சுவை—குழலோசையின் இனியரஸத்தை
கொண்டு— உட்கொண்டு
மகிழ்ந்து— உள்ளம் களித்து
கோவிந்தனை— பசுமேய்க்கும் கண்ணனை
தொடர்ந்து — பின்தொடர்ந்து
என்றும்— ஒருக்ஷணகாலமும்
விடார்— விடமாட்டாமலிருந்தார்கள்.

வ்யா. ஏழாம்பாட்டு. புவியுள் நான்கண்டதோ ரற்புதம் கேளீர். கார் காலத்திலே அருமைக புத்தாற்போலே இப்படி யிருப்பதொன்று உண்டாகைக்கு யோக்யதையில்லாத பூமியிலே. " இது அகடிதம் " என்று அறிந்தான் பிறர்வாயால் கேட்கையன்றிக்கே ப்ரத்யக்ஷமாகக்கண்டதோ ராச்சர்யம் கேளீர்கோள். பூணிமேய்க்குமிளம் கோவலர் கூட்டத்திலை யுள். குழல்களூதிக்கொண்டு கன்றுகளும் பசுக்களும் மேய்த்துத்திரியும் இளங்காலிகளான இடையர் திரண்டதிரளில். நாகத்தணையான்குழலூத. அநந்தசாயியாகையாலே ஸர்வாதிகனானவன் தத்ஸஜாதீயனாய்நின்று குழலூத. அமரலோகத்தளவும் சென்றிசைப்ப. அந்தக்குழலோசை தேவலோகத்தளவும் சென்று த்வநிக்க. அவியுணமறந்து வானவரெல்லாம். தேவர்களெல்லாரும், தங்களுடைய கௌரவாநுகுணமாக யாகங்களிலே ப்ராஹ்மணர் ஸமர்ப்பிக்கும் ஹவிஸ்ஸுக்களை புஜிக்கமறந்து. அவர்களுக்கு தாரகாதிகளெல்லாம் அம்ருதமாயிருக்க அதுமறந்தார்கள் என்னாதே, இத்தைச்சொல்லிற்று தங்கள் வைபவத்துக்குறுப்பாகையாலே அதிலுங்காட்டில் அவர்கள்விரும்பி ஜீவிப்பது இதுவாகையாலே. ஆயர்பாடிநிறையப்புகுந்தீண்டி. அவ்வவன்றிக்கே மநுஷ்யகந்தம்பொறுமல் பூமியில்காலிட அருவருத்துத் திரியுமவர்கள் " இவன் பிறந்துவளருகிற ஊர் " என்னுமத்தாலே திருவாய்ப்பாடி நிறையப்புகுந்து திரண்டு. செவியுணவின் சுவைகொண்டுமகிழ்ந்து. செவிக்குள்ளில் நாவாலே குழலில்பிறந்த இசையின் இனியரஸத்தை புஜித்து ஆநந்தித்து. செவிக்கு நாவுண்டோ வென்னில்; " செவியுணூட்ட " என்னக்கடவதிறே; சேதந ஸமாதியாலே சொல்லுகிறது. அன்றிக்கே, செவிக்கு உணவாயிருந்துள்ள இனிதான காநரஸத்தை புஜித்து என்னவுமாம்" " செவிக்குணவில்லாதபோது " என்றானிறே. கோவிந்தனைத்தொடர்ந்தென்றும்விடாரே. கோரக்ஷணபரனானவனை அவன்போனவிடமெங்கும் தொடர்ந்து ஒருக்ஷணகாலமும் விடுகிறிலர்கள். ஸர்வஸ்மாத்பரனானவன் கோபஸங்க மத்யத்திலே தத்ஸஜாதீயனாய் நின்று குழலூதுகையும், அந்தக்குழலோசை தேவலோகத்தளவும் செல்லுகையும், அதைக்கேட்டுத் தேவர்களெல்லாரும் தாங்கள் விரும்பியிருக்கும் ஹவிர்ப்போஜநத்தை மறக்கையும், அவ்வவன்றிக்கே மநுஷ்யகந்தம்பொறுதவர்கள் கோபச்ரேணியிலேவந்து திரளுகையும், இந்தக் குழலோசையினுடைய ரஸத்தை புஜித்து ஆநந்திகளாய்க்கொண்டு இவனைவிடாதே பின்பற்றித்திரிகையுமாகிற இவையெல்லாம் அகடிதங்களாகையாலும், அதுக்குமுன்பு இந்த லோகத்தில் கண்டறியாமையாலுமிறே " புவியுள் நான்கண்டதோ ரற்புதங்கேளீர் " என்று அருளிச்செய்தது. ... .... ... ... ... ... எ.

மூ.—சிறுவிரல்கடடவிப்பரிமாறச் செங்கண்கோட ச்செய்யவாய்க் கொப்பளிப்பக்
குறுவெயர்ப்புருவங் கூடலிப்பக் கோவிந்தன்குழல்கொ டூதினபோது
பறவையின்கணங்கள் கூடுதுறந்து வந்துசூழ்ந்து படுகாடுகிடப்பக்
கறவையின்கணங்கள் கால்பரப்பிட்டுக் கவிழ்ந்திறங்கிச் செவியாட்டகில்லாவே.

பதவுரை.

சிறு— சிறுத்திருந்துள்ள
விரல்கள்— திருவிரற்களானவை
தடவி— தடவிக்கொண்டு
பரிமாற— வ்யாபரிக்கும்படியாகவும்,
செம் கண்— சிவந்த கண்களானவை

கோட— வளையும்படியாகவும்
செய்ய— சிவந்த
வாய்— திருப்பவளமானது
கொப்பளிப்ப— குமிழ்க்கும்படியாகவும்,
குறு வெயர்— குறுவெயர்ப்பு அரும்பின

புருவம்— திருப்புருவமானது
கூடலிப்ப— மேலே கிளர்ந்து வளையும் படியாகவும்
கோவிந்தன்— கோவிந்தனானவன்
குழல் கொடு— திருக்குழலைக் கொண்டு
ஊதினபோது— ஊதினபோது
பறவையின் கணங்கள்— பக்ஷிகளின் திரள் களானவை
கூடு துறந்து— தந்தாமுடைய கூட்டை விட்டு
வந்து— க்ர்ஷ்ணன் பக்கலிலே வந்து
சூழ்ந்து— சூழ்ந்து கொண்டு
படு காடு— வெட்டி விழுந்த காடுபோலே
கிடப்ப— மெய் மறந்து கிடக்க
கறவையின் கணங்கள்— பசுக்களின் திரள் களானவை
கால் பரப்பிட்டு— கால்களைப் பரப்பி
கவிழ்ந்து இறங்கி— தலைகளைத் தொங்க விட்டுக் கொண்டு
செவி— காதுகளை
ஆட்ட கில்லா— அசைக்கவும் மாட்டாதே நின்றன.

வ்யா. எட்டாம்பாட்டு. சிறுவிரல்கள் தடவிப்பரிமாற. "கருஞ்சிறுக்கன்" என்ற பருவத்துக்குத் தகுதியாம்படி சிறுத்திருந்துள்ள திருவிரற்களானவை திருக்குழலின் துளைகளில் புதைக்கவேண்டுவது புதைத்துத் திறக்கவேண்டுவது திறக்கைக்காகக் குழலின்துளைகளைத் தடவிக்கொண்டு வ்யாபரிக்க. செங்கண்கோட. * இடவணரை யிடத்தோளொடுசாய்த்துத் துளைதோறும் கண்ணோடேநின்று ஊதுகையாலே, சிவந்திருக்கிற திருக்கண்களானவை வக்ரிக்க. செய்யவாய் கொப்பளிப்ப. "வாய்கடைகூட" என்கிறபடியே இரண்டுகடைவாயையும் குவித்து ஊதுகிறபோது சிவந்ததிருப்பவளமானது அகவாயிலுண்டான வாயுவினுடைய பூரிப்பாலே கும்மிழ்க்க. குறுவெயர்ப் புருவங்கூடலிப்ப. * உலாவியுலாவிக் குழலூதுகிற ஆயாஸம்பொறுமல் ஸௌகுமார்யத்தாலே குறுவெயர்ப்பரும்பின திருப்புருவமானது மேலேகிளர்ந்துவளைய. கோவிந்தன் குழல்கொடூதினபோது. கோரக்ஷணத்திலே தீக்ஷிதனாய். அவற்றை மேய்த்துக்கொண்டு திரியுமவன் அவை மேய்ந்து வயிறுநிறைந்த ஹர்ஷத்தாலே ஸர்வஜ்ஞந்துஜாதமநோஹரமான திருக்குழலைக்கொண்டு ஊதினபோது. பறவையின்கணங்கள். பக்ஷிகளினுடைய திரள்கள். கூடு துறந்து. தந்தாமுடைய வஸ்தவ்யஸ்தலங்களைவிட்டு. வந்து சூழ்ந்து படுகாடுகிடப்ப. குழலோசைவழியே ஊதுகிறவனளவும் வந்துசூழ்ந்துகொண்டு வெட்டிவிழுந்தகாடுபோலே பரவசமாய்க்கிடக்க. கறவையின்கணங்கள். பசுக்களினுடைய திரள்களானவை. கால்பரப்பிட்டு. பாரவச்யத்தாலே கால்களைப்பரப்பி. கவிழ்ந்திறங்கி. தலைகளை மிகவும் நாற்றிக்கொண்டு. செவியாட்டகில்லாவே. "செவியையசைக்கில் இசைக்கு ப்ரதிபந்தகமாம்" என்று செவியையாட்டவும் மாட்டாதேநின்றன. ... ... அ-

மூ.—திரண்டெழுதழைமழை முகில்வண்ணன் செங்கமலமலர்சூழ் வண்டினம்போலே
சுருண்டிருண்ட குழல்தாழ்ந்த முகத்தானூதுகின்ற குழலோசைவழியே
மருண்டுமான்கணங்கள் மேய்கைமறந்து மேய்ந்தபுல்லும் கடைவாய்வழிசோர
இரண்டுபாடுந் துலுங்காப் புடைபெயரா வெழுதுசித்திரங்கள்போல நின்றனவே. ௯.

பதவுரை.

(கார்காலத்திலே,)

திரண்டு— திரண்டு
எழு— மேலெழுந்து
தழை— தழைத்திருக்கிற
மழை முகில்— காளமேகம் போன்ற
வண்ணன்— திருநிறத்தை யுடையனானவன்

செம் கமலம் மலர்— செந்தாமரைப் பூவை
சூழ்— சூழப்படிந்த
வண்டு இனம் போலே— வண்டுகளின் திரள்போலே
சுருண்டு இருண்ட— சுருட்சியையும் இருட்சியையு முடைத்தான
குழல்— கேசபாசங்களானவை
தாழ்ந்த— தாழ்ந்திருந்துள்ள
முகத்தான்— முகத்தையுடையவன்
ஊதுகின்ற— ஊதுகிற
குழல் ஓசைவழியே— குழலோசை செவிப்பட்ட வழியே
மான் கணங்கள்— மான் திரளானவை
மருண்டு— அறிவழிந்து
மேய்கை மறந்து— மேய்ச்சலையும் மறந்து
மேய்ந்த— மேயக் கவ்வின
புல்லும்— புல்லும்
கடைவாய் வழி— கடைவாய் வழியே
சோர— நழுவி விழ
இரண்டு பாடும்— முன்னும் பின்னுமான இரண்டருகும்
துலுங்கா— அசையாமலும்
புடை— பக்கங்களில்
பெயரா— அடிபெயர மாட்டாமலும்
எழுது— (சுவரில்) எழுதப்பட்ட
சித்திரங்கள் போல — சித்திரங்களைப் போலே
நின்றன— ஒரு செயலற்று நின்றன.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. திரண்டெழு தழைமழைமுகில்வண்ணன். கார்காலத்திலே தன்னிலே திரண்டு கிளர்ந்து அகவாயில் நீர்க்கனத்தாலே தழைப்புண்டாயிருக்கிற வர்ஷுகவலாஹகம்போலே யிருக்கிற திருநிறத்தையுடையவன். செங்கமலமித்யாதி. சிவந்தசெந்தாமரைப்பூவைச் சூழப்படிந்தவண்டினுடைய திரள்போலே சுருட்சியையு மிருட்சியையுமுடைத்தான திருக்குழல்கள் தாழ்ந்த திருமுகத்தையுடையவன். ஊதுகின்ற குழலோசை வழியே. ஊதாநின்றுள்ள திருக்குழலோசை செவிப்பட்டவழியே. மருண்டித்யாதி. மான் திரள்களானவை ஸஜாதீயவிஜாதீய விபாகாதிகள் தோன்றுதபடி அறிவழிந்து, தனக்கு தாரகமாக எப்போதும் செய்துபோரும் மேய்கையைத் தவிருகையன்றிக்கே, விஸ்மரித்து மேயக்கவ்வின புல்லும் இறக்குதல் உமிழ்தல் செய்யமாட்டாத பாரவச்யத்தாலே கடைவாய் வழியே நழுவிவிழ. இரண்டுபாடுமித்யாதி. முன்னும்பின்னுமான இரண்டருகும் அசையாதே பக்கங்களில் போகவும் மாட்டாதே சித்ரத்தில் எழுதினவைபோலே ஒரு வ்யாபாரமற்று நின்றன. ... ... ... ... ... ... ... ... ௯.

மூ.—கருங்கண்டோகை மயிற்பீலியணிந்து கட்டிநன்குடுத்த பீதகவாடை
அருங்கலவுருவி னாயர்பெருமா னவனொருவன் குழலூதினபோது
மரங்கணின்று மதுதாரைகள்பாயு மலர்கள்வீழும் வளர்கொம்புகடாழும்
இரங்குங்கூம்புந் திருமாலின்ற நின்றபக்கநோக்கி யவைசெய்யுங்குணமே. ௰.

பதவுரை.

கரு— கறுத்த
கண்— கண்ணையுடைத்தான
தோகை— இறகுகளையுடைய
மயில் பீலி— மயில் பிச்சங்களை
அணிந்து— திருமுடியில் சாத்திக்கொண்டு,
நன்கு— நன்றாக
கட்டி உடுத்த— அழுந்தச் சாத்தின
பீதகம் ஆடை— திருப்பீதாம்பரத்தையும்
அரு— பெறுதற்கரிய
கலம்— திரு ஆபரணங்களையு முடைய
உருவின்— திருமேனியை யுடையனாய்
ஆயர்— இடையர்க்கெல்லாம்

பெருமானவன்— தலைவனானவனாய்
ஒருவன்— அத்விதீயனா யிருக்கிறவன்
குழல் ஊதினபோது—;
மரங்கள்— மரங்களானவை
நின்று— ஒருபடிப்பட நின்று
மது தாரைகள்— மது தாரைகளை
பாயும்— பாயாநிற்கும்;
மலர்கள்— கொம்பில் நிற்கும் பூக்களெல்லாம்
வீழும்— நிலைகொலைந்து வீழாநிற்கும்;
வளர்— மேலே வளருகிற
கொம்புகள்— கொம்புகளானவை
தாழும்— கீழே படியாநிற்கும்;
இரங்கும்— தன் நிலை கொலைந்து ஈடுபடாநிற்கும்;
கூம்பும்— ( அஞ்ஜலி செய்வாரைப் போலே, தாழ்ந்த கொம்புகளைக் ) குவியாநிற்கும்;
அவை— அந்த மரங்களானவை
செய்யும்— செய்யா நிற்கிற
குணமே— குணமிருந்தபடியென்!
என்று ஆச்சர்யப் படுகிறார்.

வ்யா. பத்தாம்பாட்டு. கருங்கண்தோகையித்யாதி. கருகின கண்ணையுடைத்தான தோகைமயிற்பீலியைத் திருமுடிக்கு அலங்காரமாகச்சாத்தி. கட்டி நன்குடுத்த பீதகவாடையருங்கலவுருவின். திருவரைபூத்தாற்போலே அழுந்தக்கொண்டு நன்றாகச்சாத்தின திருப்பீதாம்பரத்தையும், பெறுதற்கரிய திருவாபரணங்களையுமுடைய திருமேனியையுடையனாய். ஆயர்பெருமானவனொருவன் குழலூதினபோது. ஆயர்க்கதிபதியான நீர்மையையுடையனாய், அழகாலும் நீர்மையாலும் ப்ரஸித்தனாய் அத்விதீயனாயிருக்கிறவன் திருக்குழலூதினபோது. மரங்கள்நின்று மதுதாரைகள்பாயும். தேவமநுஷ்ய திர்யக்ஜாதிகள்உருகினவளவன்றிக்கே,அசேதநங்களான வ்ருக்ஷங்களானவை ஒருபடிப்படநின்று உள்ளுருகினமை தோற்ற மதுதாரைகள் பாயாநிற்கும். மலர்கள்வீழும். கொம்பில்நிற்கிற பூக்களெல்லாம் நிலைகொலைந்து வீழாநிற்கும். வளர்கொம்புகள் தாழும். மேலேவளருகிற சாகைகளானவை கீழேபடியாநிற்கும். இரங்கும். தன்னிலேநின்றலைந்து ஈடுபடாநிற்கும். கூம்புந்திருமால்நின்ற நின்றபக்கம்நோக்கி. ஶ்ரிய:பதியானவன் உலாவியுலாவிநின்று குழலூதினவழியே அவன் நின்ற நின்ற பார்ச்வங்களைநோக்கி, அஞ்சலிசெய்வாரைப்போலே தாழ்ந்த கொம்புகளைக் குவியாநிற்கும். அவை செய்யும் குணமே. அவைசெய்த குணமிருந்தபடி யென்றான்! என்று ஆச்சர்யப்படுகிறார். ῦ.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மு.—குழலிருண்டுசுருண் டேறியகுஞ்சிக் கோவிந்தனுடைய கோமளவாயில்
குழன்முழஞ்சுகளினூடு குமிழ்த்துக் கொழித்திழிந்த வமுதப்புனறன்னைக்
குழன்முழவம்விளம்பும் புதுவைக்கோன் விட்டுசித்தன்விரித்ததமிழ்வல்லார்
குழலைவென்றகுளிர்வாயினராகிச் சாதுகோட்டியுட் கொள்ளப்படுவாரே. ௧௧.

பதவுரை.

குழல்— திருநெற்றியில் தாழ்ந்த குழலையுடையனாய்
இருண்டு— கறுத்து
சுருண்டு— சுருண்டு
ஏறிய— மேலே நெடுகவளர்ந்த
குஞ்சி— மயிர்முடியை யுடையனாய்
கோவிந்தனுடைய— பசு மேய்க்குமவனான கண்ணனுடைய
கோமளம்— அழகிய
வாயில்— திருப்பவளத்தில்
குழல்— திருக்குழலின்
முழஞ்சுகளினூடு— துளைகளின் வழியே

குமிழ்த்து— கிளர்ந்து
கொழித்து எழுந்த—அலையெறிந்துகுதித்த
அமுதம் புனல்தன்னை— அம்ருதஜலத்தை
குழல் முழவம்— குழலின் ஓசையாக
விளம்பும்— சொன்ன
புதுவை கோன்— ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
விரித்த— விரிவாகச் சொன்ன
தமிழ்— தமிழ்ப்பாட்டுக்களான இவற்றை
வல்லார்— ஓதவல்லவர்கள்
குழலை— குழலோசையின் குளிர்த்தியை
வென்ற— கீழாம்படிபண்ணி
குளிர்— குளிர்ந்த
வாயினர் ஆகி— சொல்லை யுடையராய்க் கொண்டு
சாது கோட்டி— ஸாதுக்களின் கோஷ்டியில்
உள் கொள்ளப்படுவார் — அங்கீகரிக்கப் பெறுவர்கள்.

வ்யா. குழலித்யாதி. "சுருண்டிருண்ட குழல்தாழ்ந்தமுகத்தான்" என்கிறபடியே திருநெற்றிப்ரதேசத்திலே தாழ்ந்த திருக்குழலாய் இருண்டுசுருண்டு மேலேநெடுக வளர்ந்த கேசபாசத்தையுடையனாய் கோரக்ஷணபரனாயிருக்குமவனுடைய அழகிய திருப்பவளத்தில். குழல்முழஞ்சித்யாதி. திருக்குழலில் துளைகளின்வழியே கிளர்ந்து அலையெறிந்துகுதித்த அம்ர்தஜலத்தைக் குழலோசையாகச்சொன்ன. இத்தால்- குழலோசையினுடைய ப்ரவாஹமும் ரஸ்யதையுஞ் சொன்னபடி. புதுவைக்கோன் விட்டுசித்தன் விரித்த தமிழ் வல்லார். ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் இதினுடைய வைபவத்தை விஸ்தரேணப்ரதிபாதித்த த்ராவிடகாதைகளான இவற்றை ஸாபிப்ராயமாக வல்லவர்கள். குழலைவென்ற குளிர்வாயினராகி. திருக்குழலோசையினுடைய குளிர்த்தியையும் கீழ்ப்படுத்தித் தான்மேலாம்படி குளிர்ந்த வ்யவஹாரத்தை யுடையராய். சாதுகோட்டியுள் கொள்ளப்படுவாரே. ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலேபுகுந்தால் அவர்கள் ஸஹர்ஷமாகப் பரிக்ரஹிக்கும்படியாவர்கள். ... ... ... ... ... ... ... ... ௧௧.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—நாவல் இட வான் தேனுகன் முன் செம்பெரும் புவி சிறு திரண்டு கருங் குழலை.

---(*)---

ஆ - திருமொழி, உரு - க்கு, பாட்டு - உ௭௩.

---

அ. "போகத்தில் வழுவாத புதுவையர்கோன்" என்கிறபடியே திருவவதார ஸமயமே தொடங்கி க்ர்ஷ்ணவதார குணசேஷ்டிதங்களை யொன்றொழியாமல் அநுபவித்துக் கொண்டு போந்தார்-கீழ்; மற்றுள்ளவாழ்வார்களைக் குமிழ்நீருண்ணப்பண்ணும் அவனுடைய ஸௌந்தர்யமாகிற ஆழங்கால்தானே மேடாய் தரித்துநின்று மங்களாசாஸநம்பண்

ணிப்போரும் ஸ்வபாவரானவிவர், இப்போது அவர்களைப்போலே அவனையநுபவிக்கவே ணுமென்னுமாசை கிளர்ந்து, அவ்வாசாநுரூபமாகக்கிட்டி யநுபவிக்கப்பெறாமையாலே தாமான தன்மையழிந்து ஒருகோபகந்யகாவஸ்த்தையை ப்ராப்தராய், ஸ்வதசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். அதாவது- பருவம் நிரம்புவதுக்குமுன்னே க்ர்ஷ்ணவிஷயத்திலே ப்ரவணையாகாநின்ற தன்மகளுடைய தசையைக்கண்ட திருத்தாயார், இவள்பருவத்தின் இளமையையும், இப்படியிருக்கச்செய்தே அவன்விஷயத்திலே ப்ரவணையாய் அவனோடே இவள் கலந்துவருகிறபடியையும், இதுக்கடி ஸஜாதீயைகளாய் தத்விஷயத்தில் ப்ரவணைகளாயிருக்கும் பாலைகளோடுண்டான ஸம்ஸர்க்கம் என்னுமத்தையும், இவள் லீலாவ்யாபாரத்திலே அந்வயிக்கிலும் அவனுடைய சின்னங்களொழிய வேறொன்றறியாளானபடியையும், இவை எல்லாவற்றுக்கும் மூலமாகத் தோழிமார் இவளை வசீகரித்துக்கொண்டுபோய் அவன் பக்கலிலே அகப்படுத்தினபடியையும், இவள் தன்னுடைய ப்ராவண்ய ப்ரகாரங்களையும், இத்தைக்கண்ட பந்துவர்க்கமும் அந்யரும் சொல்லுகிற வார்த்தைகளையுமெல்லாம், ஸந்நிஹிதரைக்குறித்தும் தன்னிலேயும் பேசின பாசுரங்களாலே யருளிச்செய்கிறார். ... ... *

மூ.—ஐயபுழுதி யுடம்பளைந் திவள்பேச்சு மலந்தலையாய்ச்
செய்யநூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லள்
கையினிற் சிறுதூதையோ டிவள் முற்றில்பிரிந்துமிலள்
பையரவணைப் பள்ளியானோடு கைவைத்திவள் வருமே. க.

பதவுரை.

இவள்— இளம்பருவத்தாளான என் பெண்பிள்ளையானவள்
உடம்பு— தன் உடம்பெல்லாம்
ஐய புழுதி— அழகிய புழுதிபாம்படி
அளைந்து— புழுதியளைந்து
(உடம்பெல்லாம் புழுதியாவானேன்? என்றால், விளையாடிப் புழுதி யளைந்தே னென்னமாட்டாமல்,)
இவள் பேச்சும்— இவள் தன் சொல்லும்
அலந்தலையாய்— கலங்கினதாய்
(அதுவுமன்றி,)
செய்ய— சிவந்த
நூலின்— நூலாலே சமைக்கப்பட்ட
சிறு ஆடை— சிற்றாடையை
செப்பன்— ஒழுங்குபட
உடுக்கவும் வல்லள் அல்லள்— உடுக்கவும் மாட்டாதவளாய்
கையினில்— கையிலிருக்குமதான
சிறு தூதையோடு— (மணற்சோறாக்கும்) சிறிய தூதையோடு
முற்றில்— சிறு சுளகையும்
பிரிந்தும் இலள்— விடுவதும் செய்திலள்;
(பின்னையென் செய்யுமென்னில்;)
இவள்— இப்படிப்பட்ட பருவத்தளான இவள்
பை— பணத்தையுடைய
அரவு— திருவனந்தாழ்வானாகிற
அணை— அணையை
பள்ளியானொடு— திருப்படுக்கையாக உடையவனோடு
கை வைத்து வரும்— கை கலந்து வாரா நின்றாள்.
என்று ஒரு பிராட்டிதசையை ப்ராபித்த ஆழ்வார், தாயார் பாசுரத்தாலே பேசுகிறார்.

வ்யா. முதற்பாட்டு. ஐயபுழுதியுடம்பளைந்து. அழகியபுழுதியை யுடம்பெங்குமளைந்து. அதாவது- புழுதியிலேயிருந்து விளையாடுகையாலே சரீரமெல்லாம் புழுதியாலே

..ப்தமாயிருக்கை. இவள்பேச்சுமலந்தலையாய். 'உடம்பெல்லாம் புழுதிபாவானென்' என்..ம் 'விளையாடிப் புழுதியளைந்தேன்' என்று சொல்லலாமிறே; அது சொல்லாமல், ..து சுழல் அம்மானை யென்றுப் போலே சில அசங்கித பாஷணங்களைப் பண்ணுகை ..லே இவள்பேச்சும் கலங்கி. செய்யவித்யாதி. சிவந்தநூலாலே சமைக்கப்பட்ட சிறிய ஆடையை உடுக்கு மடைவறிந்து நன்றாகவுடுக்கவும் மாட்டாள். கையினிலித்யாதி. விளையாடுகலமாய்க்கொண்டு கையிலிருக்கும் மணற்சோறுக்கும் சிறு தூதையும் மணற்கொழிக்கும் சிறுசுளகும் இவள் விடுவதும் செய்திலள். இவள்பருவமிது. பையரவித்யாதி. "அரவணையாயாயரேறே" என்னும்படி திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனோடே இவள்கைகலந்து வாராநின்றாள். ... ... ... ... ... ... க.

மூ.—வாயிற்பல்லுமெழுந்தில மயிரும்முடி கூடிற்றில
சாய்விலாதகுறுந்தலைச் சிலபிள்ளைகளோடிணங்கித்
தீயிணக்கிணங் காடிவந்திவ டன்னன்ன செம்மைசொல்லி
மாயன் மாமணிவண்ணன் மேலிவண் மாலுறுகின்றாளே. உ.

பதவுரை.

வாயில்— வாயிலே
பல்லும்— பற்களும்
எழுந்தில— எழுந்தனவில்லை;
மயிரும்— மயிரும்
முடி கூடிற்றில— சேர்த்து முடிக்கலாம்படி கூடினவில்லை;
‡ இவள்— இத்தன்மையளான என் பெண்பிள்ளையானவள்
சாய்வு இலாத— ஒடுக்கமில்லாதவர்களாய்
குறுந்தலை— தன்மையில் தலைநின்ற
சில பிள்ளைகளோடு— சில பெண்களோடு
இணங்கி — சேர்ந்து
தீ இணக்கு— பொல்லாத இணக்கத்தோடே
இணங்காடி— கலந்து
வந்து— வந்து
‡ இவள்— இவள்
தன் அன்ன— இப்படி செய்துவந்த தன்னோடொத்த
செம்மை— செவ்வையை
சொல்லி— சொல்லிக்கொண்டு
மாயன்— ஆச்சர்ய சேஷ்டிதங்களை யுடையனாய்
மாமணி— நீலமணிபோன்ற
வண்ணன் மேல்— திருநிறத்தை யுடையவன் மேலே
மால் உறுகின்றாள்— பிச்சேறுநின்றாள்.

‡ "இவள்" என்று அடிக்கடி சொல்வது- பருவத்துக்கும் செயலுக்கும் சால வைஷம்ய மிருந்ததீ! என்னுமத்தைப்பற்ற.

வ்யா. இரண்டாம்பாட்டு. வாயிற்பல்லுமெழுந்தில. வாயில் பல்லும் முளைத்தனவில்லை. இத்தால் - பெற்றதாயாகையாலே இவளை அத்யந்த சிசுவாகநினைத்துச் சொல்லுகிறாள். மயிரும் முடி கூடிற்றில. மயிரும் சேர்த்து முடிக்கலாம்படி கூடினவில்லை. சாய்வித்யாதி. சாய்வு - ஒடுக்கம். தாய்க்கடங்காதே தன்மையில் தலைநின்ற சில பெண்பிள்ளைகளோடே கூடி. தீயிணக்கிணங்காடிவந்து. பொல்லாத இணக்கத்தோடே இணங்கிவந்து. அதாவது - தன்னோடு கலந்தாரைத் தாய்க்கீழடங்காதபடி கலக்கறுக்கும் விஷயத்தோடே கலந்துவந்தென்கை. இவள் தன்னன்ன செம்மைசொல்லி. இப்படி செய்துவந்த இவள், தன்னோடொத்த செவ்வையைச் சொல்லி. அதாவது - 'இத்தனைபோது' எங்கேபோனாய்?

ஆரோடிணங்கிவந்தாய்'? என்றால், உண்மை சொல்லுகையன்றிக்கே தன்னுடைய க்ருத்ரிமாநுகுணமாகச்சில குடிலோக்திகளைச் செவ்வைபோலே சொல்லி யென்கை. மாயன் மாமணிவண்ணன்மேல். ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையும் நீலரத்நம்போன்ற வடிவையுமுடையவன் விஷயத்திலே. இவள் மாலுறுகின்றாளே. இப்படி செம்மைசொன்னவிவள், அதுக்குச்சேராதபடி அவன் குணசேஷ்டிதங்களைச் சொல்லுவது வடிவழகைச் சொல்லுவதாய்க்கொண்டு பிச்சேறாநின்றாள். ... ... ... ... ... ... ... ௨.

மூ.—பொங்குவெண் மணற்கொண்டு சிற்றிலுமுற்றத் திழைக்கலுறில்
சங்குசக்கரந்தண்டு வாள்வில்லுமல்ல திழைக்கலுறாள்
கொங்கையின்னங் குவிந்தெழுந்தில கோவிந்தனோடிவளைச்
சங்கையாகி யென்னுள்ளநாடோறுந் தட்டுளுப்பாகின்றதே. ௩.

பதவுரை.

முற்றத்து— முற்றத்திலே
பொங்கு— நுண்ணியதாய்
வெண்— வெளுத்திரா நின்ற
மணல் கொண்டு— மணலைக் கொண்டு
சிறு இல்— சிற்றிலை [ கொட்டகத்தை ]
இழைக்கல் உறில்— சமைக்க முயன்றாளாகில்
சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யமும்
சக்கரம்— திருவாழியாழ்வானும்
தண்டு— கதையும்
வாள்— நந்தகவாளும்
வில்லும் அல்லது— ஸ்ரீசார்ங்கதநுஸ்ஸுமல்லாத மற்றொன்றை
இழைக்கல் உறாள்— இழைக்க நினையாள்;
கொங்கை— முலைகளானவை
இன்னம்— இன்னம்
குவிந்து— முகம் திரண்டு
எழுந்தில— எழுந்தனவில்லை;
கோவிந்தனோடு— பசு மேய்க்கும் கண்ணனோடே
இவளை சங்கை ஆகி— 'இவளுக்குக்கலவி உண்டாயிருந்ததாக வேணும்' என்று சங்கித்து
நாள் தொறும்— நாடோறும்
என் உள்ளம்— என் மனமானது
தட்டுளுப்பாகின்றது— தடுமாறிச் செல்லாநின்றது.

வ்யா. மூன்றாம்பாட்டு. பொங்கித்யாதி. " புறம்பே போய் * தீயிணக்கிணங்காடாதே முற்றத்திலே யிருந்து விளையாடு " என்று நான் நியமித்து வைத்தால், வண்டவிட்டதாகையாலே நுண்ணியதாய் வெளுத்திருக்கிற மணலைக்கொண்டு முற்றத்திலே கொட்டகமிடவொருப்பட்டாளாகில். உறில் என்கையாலே - இதில் இவளுக்கு மநஸ்ஸில்லாமையும் தன்னுடையநிர்ப்பந்தத்துக்காகச் செய்கிறதித்தனையென்னுமதும் தோற்றச்சொல்லுகிறாள். சங்கித்யாதி. அவனுக்கு அஸாதாரணசிஹ்நமாய் அழகுக்கும் விரோதிநிரஸநத்துக்குமுடலாயிருக்கும் ஸ்ரீபஞ்சாயுதமுமொழிய வேறொன்று இடநினையாள். கொங்கையின்னம் குவிந்தெழுந்தில. " முலையோ முழுமுற்றும் போந்தில " என்கிறபடியே முலைகளானவை ஆண்முலைக்கும் பெண்முலைக்கும் வாசிதோற்ற முகம் திரண்டு கிளர்ந்தனவில்லை. இவள்தான் யுவதியானாலும் தாயார்க்கு அவளுடைய சைசவமிறே தோற்றுவது. கோவிந்தனோடிவளைச் சங்கையாகி. பசுக்களோடும் பொருந்திவர்த்திக்கும் நீர்மையையுடையனானவனோடே யிவளுக்குக் கலவியுண்டாகவேணுமென்று சங்கித்து. என்னுள்ளம் நாடோறும் தட்டுளுப்பாகின்றதே. என்னுடைய மநஸ்ஸானது நாள்தோறும் தடுமாறிச்செல்லாநின்றது. இவ

ளுடைய சைசவத்தைப் பார்த்தவாறே "உண்டு" என்னப்போகிறதில்லை; ஆகையால், இன்னதென்று நிர்ணயிக்கமாட்டாமல் என்னுடைய ஹ்ர்தயமானது தடுமாறுகின்றதென் கை. தட்டுறுப்பு- தடுமாற்றம். ... ... ... ... ... ... ...௩.

மூ.—ஏழைபேதையோர் பாலகன்வந் தென்பெண்மகளை யெள்கித்
தோழிமார்பலர் கொண்டுபோய்ச் செய்தசூழ்ச்சியை யார்க்குரைக்கேன்
ஆழியானென்னு மாழமோழையிற் பாய்ச்சியகப்படுத்தி
மூழையுப்பறியாததென்னு மூதுரையுமிலளே. ௪.

பதவுரை.

ஏழை— சபலையாய்
பேதை— அறியாதவளாய்
ஓர்— ஒப்பற்ற
பாலகன்— இளம்பருவத்தளான
என் பெண்மகளை— என் பெண்பிள்ளையை
தோழிமார் பலர்— பல தோழிமார்கள்
வந்து— நேராகவந்து
எள்கி— ஈடுபடுத்தி
கொண்டுபோய்— தங்களோடுகூடக் கொண்டுபோய்
ஆழியான் என்னும் — திருவாழியை யுடையவனென்று ப்ரஸித்தமாய்
ஆழம்- ஒருவரால் நிலைகொள்ள வொண்ணாத ஆழத்தையுடைத்தான
¶ மோழையில்— கிழாறு போலே யிருக்கிற விஷயத்திலே
பாய்ச்சி— உள்ளுறத் தள்ளி
அகப்படுத்தி— அகப்படப்பண்ணி
செய்த— செய்த
சூழ்ச்சியை— க்ர்த்ரிம வ்யாபாரத்தை
ஆர்க்கு உரைக்கேன்— ஆருக்குச் சொல்லுவேன்;
மூழை— "அகப்பையானது [ துடுப்பு ]
உப்பு— தான் முகக்கிற பதார்த்தத்தின் ரஸத்தை
அறியாதது— அறியமாட்டாதது"
என்னும்— என்கிற
மூதுரையும்— பழமொழியும்
இலள்— தன் பக்கலில்லாதவளானாள்.

¶ மோழை— கிழாறு.

வ்யா. நான்காம்பாட்டு. ஏழை. நல்லதுகண்டால் விடமாட்டாத சபலை. பேதை. மேல்விளைவது நிரூபிக்கத்தக்க வறிவில்லாதவள். ஓர்பாலகன். இரண்டுக்குமடியான பருவத்தின் இளமையையுடையவள். என்பெண்மகளை. இப்படியிருக்கிற வென்பெண்பிள்ளையை. தோழிமார்பலர்-வந்து-எள்கி-கொண்டுபோய். தோழிமாரநேகராகவந்து "விளையாடப்போரு" என்று எத்தி, கூடக்கொண்டுபோய். ஆழியானென்னு மாழமோழையிற்பாய்ச்சியகப்படுத்தி - செய்தசூழ்ச்சியை யார்க்குரைக்கேன். "அணியாராழி" என்கிறபடியே ஸர்வாபரணங்களும் தானேயாகப்போரும்படியான திருவாழியையுடையவனென்று ப்ரஸித்தமாய், ஒருவரால் நிலைகொள்ளவொண்ணாதபடியிருப்பதாய், அகப்பட்டாரை உள்வாங்கிக்கொள்ளும் கிழாறுபோலே யிருக்கிறவிஷயத்திலே உள்ளுறத்தள்ளியகப்படும்படி பண்ணிச் செய்த க்ர்த்ரிமவ்யாபாரத்தை யார்க்குச்சொல்லுவேன். மூழையித்யாதி. இவள்படிபார்த்தால், "முகந்துபரிமாறுகிற மூழையானது தான்முகக்கிற பதார்த்தத்தின் ரஸமறியாது" என்னும் அந்த மூதுரையும் தன்பக்கல் இல்லாதவள்கிடீர். அதாவது- தாங்கள் கலந்து பரிமாறுகிறவிஷயத்தின் ரஸமறியாதாரை "உப்பறியா மூழையாய்" என்று லோகம்சொல்லும்

பழமொழிக்கும் போக்யதையில்லாதவள் காணுமிவள். இப்படியிருக்கிற இவளை இவர்கள் இவ்விஷயத்திலே கொண்டுபோய் அகப்படுத்தி மற்றொன்றறியாதபடியாக்குவதே! என்று தன்னிலேநொந்து சொல்லுகிறாள். ... ... ... ... ... ... ச.

நாடூரு மறியவேபோய் நல்லதுழா யலங்கல்
சூடிநாரணன் போமிடமெல்லாஞ் சோதித்துழிதருகின்றாள்
கேடுவேண்டுகின்றார் பலருளர் கேசவனோடிவளைப்
பாடுகாவலிடுமி னென்றென்று பார்தடுமாறினதே ரு.

பதவுரை.

நாடும்— திருவாய்ப்பாடி சூழ்ந்த நாட்டிலுள்ளாரும்
ஊரும்— திருவாய்ப்பாடியாகிற ஊரிலுள்ளவர்களும்
அறிய— அறியும்படியாக
போய்— அகத்தைவிட்டுப் புறம்பேபோய்
நல்ல— பசுமை நிறத்தையுடைய
துழாய் அலங்கல்— திருத்துழாய் மாலையை
சூடி— சூட்டிக்கொண்டு
நாரணன்— கண்ணனுனவன்
போம் இடம் எல்லாம்— வ்யாபரிக்குமிடமெங்கும்
சோதித்து— தேடி
உழிதருகின்றாள்— திரியாநின்றாள்;
கேடு— (இக்குடிக்குக்) கேட்டை
வேண்டுகின்றார்— விரும்புகிறவர்கள்
பலர் உளர் — பலருமுண்டு;
(ஆகையால், )
கேசவனோடு— ப்ரசஸ்தகேசனன கண்ணனோடு
இவளை— அவன் பின்னே திரிகிற இவளை
பாடுகாவல் இடுமின்— அருகு காவலிடுங்கோள்;
என்று என்று— என்று இத்தையே பலகாலும் சொல்லி
பார்— பூமியிலுள்ள அநுகூல ஜநமானது
தடுமாறினது— தளும்பிச் செல்லா நின்றது

வ்யா. ஐந்தாம்பாட்டு. நாடூருமறியவேபோய். தானும் தன்னையணைந்த பந்துவர்க்கமும் அறிந்தவளாக அவன் பக்கலிலே ப்ரவணையாய் அகம்விட்டுப் புறப்படாமலிருக்கையன்றிக்கே, திருவாய்ப்பாடி சூழ்ந்தநாடும் திருவாய்ப்பாடியான ஊர்தானும் இருந்ததேகுடியாக அறியும்படியாக க்ருஹத்தைவிட்டுப் புறம்பேபோய். நல்லதுழாயலங்கல் சூடி. ஸம்ச்லேஷத்தாலே பிசகின திருத்துழாய் மாலையைச் சூடிக்கொண்டு. நாரணனித்யாதி. நாராயணனென்னும் திருநாமத்தையுடைய க்ருஷ்ணன் வ்யாபரிக்குமிடம் பலவுண்டாகையாலே அவன் போமிடமெல்லாம் அவனைக் காண்கைக்காக ஆராய்ந்து திரியாநின்றாள். அதாவது-பசுமேய்க்கை,பெண்களோடே கலக்கை,விளையாடுகை தொடக்கமானவற்றுக்காக அவன் வ்யாபரிக்குமிடங்களெங்கும் தேடித்திரியா நின்றாளென்கை. கேடுவேண்டுகின்றார் பலருளர். இக்குடியின் மினுக்கம் பொறாமையாலே "இதுக்கோரவத்யம்வரக் காணவல்லோமே!" என்று இக்குடிக்குக்கேடு வேண்டியிருக்கிறார் பலருண்டு. கேசவனித்யாதி. ஆனபின்பு, ப்ரசஸ்த கேசனனவனோடே அவ்வைலக்ஷண்யத்திலே பெடைப்புண்டு பின்பற்றித் திரிகிறவிவளை, தானேபோய்ச் சேர்ந்தாளாகாமல் நீங்களே கொண்டுபோய்ச் சேர்த்து அருகு காவலிடுங்கோள். அதாவது-அவனுக்கு ஆஸந்நமான அந்தஃபுரக்காவலிலே யாக்குங்கோ

சொன்னை. என்றென்று பார்த்தமோறினதே. இப்படி இந்நைப் பலகாலும் சொல்லி, இக்குடிக்குத் திக்குவரப்பொருத லோகத்தில் அநுகூல ஜனமானது நின்று தளும்பிற்றென் கிறாள். ... ... ... ... ... ... ... கி.

மூ.—பட்டங்கட்டிப் பொற்றோடுபெய்திவள் பாடகமுஞ் சிலம்பும்
இட்டமாகவளர்த் தெடுத்தேனுக் கென்னோடிருக்கலுறாள்
பொட்டப்போய்ப் புறப்பட்டுநின்றிவள் பூவைப்பூவண்ணாவென்னும்
வட்டவார்குழன் மங்கைமீ ரிவண்மாலுறுகின்றாளே. ௬.

பதவுரை.

வட்டம்— சுருட்சியை யுடைத்தாய்
வார்— நீண்டிருந்துள்ள
குழல்— கூந்தலை யுடையவர்களாய்
மங்கைமீர்— பருவத்தால் வந்த இளமையையுடையவர்களான பெண்காள்!
பட்டம்— நெற்றிக்கணியான பட்டத்தை
கட்டி— கட்டியும்
பொன் தோடு— (காதுக்கணியான) பொன்னாற்செய்த தோட்டையும்
பாடகமும் சிலம்பும்— (கழலணியான) பாடகத்தையும் சிலம்பையும்
பெய்து— இட்டும்
இவள் இட்டமாக— இவளிஷ்டப்படி
வளர்த்து— வளர்த்து
எடுத்தேனுக்கு — இடுப்பிலெடுத்துக் கொண்டு திரிந்த எனக்கு
இவள்— இப்படி அருமையாக வளர்க்கப்பட்ட இவள்
என்னோடு— இப்படி சீராட்டிவளர்த்த என்னோடே
இருக்கலுறாள்— என்னருகி லிருக்கவும் இசைகிறிலள்;
இவள்—;
பொட்ட— திடீரென்று
போய்— என்னைக் கைவிட்டுப் போய்
புறப்பட்டு நின்று— எல்லாரும் காணத் தெருவிலே புறப்பட்டு நின்று
பூவைப்பூ வண்ணா என்னும்— ‘காயாம்பூப் போன்ற நிறத்தையுடையவனே!’ என்று வாய்விட்டுக் கூப்பிடா நிற்கும்;
(இதனாலறிந்த தென்னென்ன;)
மாலுறுகின்றாள்— பிச்சேறினாள் என்றித்தை காணறிந்த தென்கிறாள்.

வ்யா. ஆறும்பாட்டு. பட்டமித்யாதி. லலாடபூஷணமான பட்டத்தைக்கட்டி, கர்ணபூஷணமான பொன்னின் தோட்டையிட்டு, பாதபூஷணமான பாடகத்தையும் சிலம்பையுமிட்டு. “பெய்து” என்கிறக்ரியை இங்கும் அந்வயிக்கக்கடவது. இவைதான் ஸர்வாபரணங்களுக்கு முபலக்ஷணம். இட்டமாகவித்யாதி. நியமித்து வளர்க்கையன்றிக்கே இவளுடைய இஷ்டத்திலே வளர்த்து, நிலத்திலே நடக்கவிடாமல் ஒக்கலையிலே யெடுத்துக் கொண்டு திரிந்தவெனக்கு. இவள்-என்னோடிருக்கலுறாள். இப்படி நான் சீராட்டி வளர்க்கப்பெற்ற விவள், இப்படி வளர்த்தவளன்றோவென்று ஸ்நேஹித்து எனக்கு பவ்யையாய் நடக்கவேணுமிறே; அது செய்யாவிட்டால், நான் தன்னைக்கண்டநுபவித்துக் கொண்டிருக்கும்படி நெஞ்சொழியவும் என்னருகு விடாமலிருக்கலாமிறே; அதுவும் செய்கிறிலள். பொட்டப்போயித்யாதி. அவ்வளவுமன்றிக்கே, சடக்கென என்னைவிட்டுப்போய், எல்லாரும் காணும்படி தெருவிலே புறப்பட்டு நின்று, ஸ்த்ரீத்வத்தாலே வாய்திறவாமலிருக்கக்

கடவவிவள் காயாம் பூவண்ணனென்று அவனுடைய வடிவழகை யநுபவிக்கை பிறவண்டான விடாய்தோற்றக் கூப்பிடாநிற்கும். வட்டவார்குழல் மங்கைமீர். சுருண்டுநீண்ட குழலையும் பருவத்தால்வந்த இளமையையு முடையவர்களே!. நீங்களுமெல்லாம் உங்கள் தாய்மார்க்கு பிரியாம்மைகளாய்ப் போருகிறீர்களே, இவளுமப்படி போரவேண்டாவோ, அது செய்யாடல்; இவள்மாலுறுகின்றளே. இவள் அவன்விஷயத்திலே பிச்சேறுகின்றாள். ... ௬.

மூ.—பேசவுந்¶தெரியாத பெண்மையிற் பேதையேன் பேதையிவள்
கூசமின்றிநின்றார்க டம்மெதிர் கோல்கழிந்தான் மூழையாய்க்
கேசவாவென்றுங் கேடிலீயென்றுங் கிஞ்சுகவாய் மொழியாள்
வாசவார்குழன் மங்கைமீரிவண் மாலுறுகின்றளே. ௭.

பதவுரை.

வாசம்— பரிமளப்ரசுரமாய்
வார்— நீண்டிருந்துள்ள
குழல்— கூந்தலை யுடையர்களாய்
மங்கைமீர்— மடப்பத்தால் பூர்ணைகளான பெண்காள்!
பேதையேன்— இவளைச் செவ்வே நிறுத்தும் வகையறியாத என்னுடைய
பேதை— பெண்பிள்ளையாய்
பேசவும் ¶தெரியாத— ஒருவார்த்தை சொல்லவும் பெறாத
பெண்மையின்— பெண்தன்மையை யுடையளாய்
கிஞ்சுகம்— கிளியினுடைய
வாய் மொழியாள்— வாய் மொழிபோன்ற வாய் மொழியை யுடையளான
இவள்— இவள்
நின்றார்கள் தம்— நாண் மட மச்சம் பயிர்ப்பு முதலானவற்றில் தவறாமல் நின்றவர்களுக்கு
எதிர்— முன்னே
கூசம் இன்றி— கூசாமல்
கோல் கழிந்தான்— கோலில் நின்றும் நீங்கின
மூழையாய்— அகப்பைபோலே (என்னோடு உறவற்றவளாய்க் கொண்டு)
கேசவா என்றும்— 'அழகிய மயிர்முடியை யுடையவனே!' என்றும்
கேடிலீ என்றும்— 'ஒரு கேடுமற்றவனே!' [அச்யுதனே!] என்றும் சொல்லி
மாலுறுகின்றாள்— பிச்சேறுகின்றாள்.

வ்யா. ஏழாம்பாட்டு. பேசவும்¶தெரியாத பெண்மையின். ஒருவார்த்தை சொல்லப் பெறாத ஸ்த்ரீத்வத்தையுடைய. அதாவது தன்னுடைய ஆசாரத்தால் ஸ்த்ரீத்வத்துக்கு ஒரு நழுவுதல்வாராதபடி வர்த்திக்குமளவன்றிக்கே, நழுவுதலுண்டாக ஒருவர் ஒரு வார்த்தைசொல்லிலும் அதுபொறாமல் ‡ மாந்தும்படியான ஸ்த்ரீத்வத்தை யுடையவளென்கை. ஸ்த்ரீத்வமாவது—"நாண் மடம் அச்சம் பயிர்ப்பு" என்கிற ஆத்மகுணயோகம். பேதையேன் பேதை. ஒரு விரகறியாத வென்னுடைய பெண்பிள்ளை. அதாவது - தன் குலத்துக்கும் ஸ்த்ரீத்வத்துக்கும் அநுகுணமாக நடத்துமதொழியப் பேர்ந்துபுரிந்து நிற்கைக்கு ஒரு விரகறியாத வென்வயிற்றிற் பிறந்தவளென்கை. இவள். இப்படியிருக்கிறவிவள். கூசமின்றி நின்றார்கள்தம்மெதிர். "தந்தாமுடைய ஸ்த்ரீத்வத்திலும் மாத்ர்பவ்யதையிலும் தவறாமல் நின்றவர்கள் தங்கள் ஸந்நிதியிலே நாமித்தைச் செய்யும்படியென்" என்கிற கூச்சமின்றிக்கே. கோல்கழிந்தான்மூழையாய். $ கோல்கழிந்தமூழைபோலே தனக்கு ஆச்ரயமானவெ

‡ மாந்தும்படியான - மனம்வருந்தும்படியான. ¶ 'தரியாத' என்று பாடமானல் வியாக்கியானத்துக்குச் சேரும். $ கோல்கழிந்த மூழை - காம்பில்லாத அகப்பை.

ன்னோடு ஒட்டற்றவளாய். இத்தால்- எனக்கு நியாமகையல்லாதவளென்கை. கேசவாவென்றும். ப்ரசஸ்தகேசனானவனேயென்றும். கேடிலீயென்றும். உன்னையல்லது செல்லாதவர்களையொருநாளும் கைவிடாதவனேயென்றும். கிஞ்சுகவாய்மொழியாள்- கிளியோடொத்த வாயிற் பழுப்பையும் பேச்சில் இளமையையுமுடையவள். தளக்கடங்காமல் கைகழிந்து அவன்பேரைச் சொல்லிநின்று கூப்பிடுகிற தசையிலும், இவளுடைய அதரசோபையும் மதுரபாஷணமும் திருத்தாயாருக்கு ஆகர்ஷகமாயிருக்கிறது காணும். வாசவார்குழல்மங்கைமீர்- பரிமளிதமாய் ஒழுகுநீண்டமயிர்முடியையும் பருவத்தால்வந்த இளமையையுமுடையவர்களே!. இவள்மாலுறுகின்றாளே. இப்படி யிவள் அவன் விஷயத்திலே பிச்சேறுகின்றாள். ௭.

மூ.—காறைபூணுங் கண்ணாடிகாணுந் தன்கையில் வளைகுலுக்கும்
கூறையுடுக்கு மயர்க்குந் தன்கோவைச் செவ்வாய்திருத்தும்
தேறித்தேறிநின் றாயிரம்பேர்த் தேவன்றிறம் பிதற்றும்
மாறின்மாமணி வண்ணன்மேலிவண் மாலுறுகின்றாளே. ௮.

பதவுரை.

காறை— பொன்னாற் செய்த காறையை
பூணும்— கழுத்திலே பூணாநின்றாள்;
கண்ணாடி— கண்ணாடிப் புறத்திலே
காணும்— (காறையும் கழுத்துமான அழகைக்) காணாநின்றாள்;
தன் கையில்— தன் கையிலிருக்கிற
வளை— வளையை
குலுக்கும்— அசைத்துப் பாராநின்றாள்;
கூறை— புடைவையை
உடுக்கும்— ஒழுங்குபட உடாநின்றாள்;
(அவன் வரவுக்கீடாக இவ்வளவு அலங்கரித்தவளவிலும், அவன் வரக்காணாமையாலே,)
அயர்க்கும்— தளராநின்றாள்;
(மீளவும் இதற்குமேலாக அலங்கரிக்கத் தொடங்கி,)
கோவை— கோவைக்கனிபோலே
செம்— சிவந்திருந்துள்ள
தன் வாய்— தன்னுடைய அதரத்தை
திருத்தும்— மிகச் சிவக்கும்படி பண்ணாநின்றாள்;
தேறித் தேறி— மிகத் தெளிவுடையளாய்
நின்று— தரித்து நின்று
ஆயிரம் பேர்— * நாமஸஹஸ்ரவாநாகிய
தேவன்— தேவனுடைய
திறம்— ப்ரகாரங்களை
பிதற்றும்— அடைவுகெடப் பேசி (ஆகையால்,)
மாறு இல்— ஒப்பில்லாத
மா மணி— நீலமணி போன்ற
வண்ணன் மேல்— நிறத்தையுடைய கண்ணன் விஷயத்திலே
இவள் மாலுறுகின்றாள்— இவள் பிச்சேறாநின்றாள்.

வ்யா. எட்டாம்பாட்டு. காறைபூணும். தன்னாற்றாமையாலே "ஏதேனுமொன்றைச்செய்து நாமவனைப்பெறவேணும்" என்று நினைத்து, "அவனுக்கு ஆகர்ஷகமாம்படி நம்மை யலங்கரிக்கவே அவன்தானேவந்து மேல்விழும்" என்று தான் தன்னையலங்கரிக்கையிலே ப்ரவர்த்தையாய், ப்ரதமம், அவன் கண்டு ப்ரியப்பட்டுக் கட்டிக்கொள்ளும் கழுத்துக்கு அலங்காரமாகக் காறையைப்பூணும். இதுதான் உத்தமாங்கத்துக்கும் உடம்புக்கும் நடுவாய் நின்று ஒளிவிடுவதோராபரணமிறே. கண்ணாடிகாணும். காறைபூண்டதிருத்தம் தன்கண்ணுக்கு விஷயமல்லாமையாலே, அவனுகக்கும்படி வாய்த்ததோ வில்லையோ என்னு

யிடமறிகைக்காக காறையும் கழுத்துமான சேர்த்தியழகைக் கண்ணாடிப்புறத்திலே பாராநிற்கும். இதுதான் அவயவாந்தரங்களிலாபரணங்களும் இவள் பூணுமதுக்கு முபலக்ஷணம். தன் கையில் வளைகுலுக்கும். இம்மநோரதமடியாக உடம்பிலே ஒரு பூரிப்புத் தோற்றுகையாலே அதறிகைக்காகக் கையில் வளையையசைத்துப் பாராநிற்கும். விரஹகார்ச்யத்தாலே கையில் வளைகள் கழன்றாலும் பின்னையும் எடுப்பது இடுவதாயிறே இவள்தானிருப்பது. இவள் எடுத்துஇட்டாலும் அவை கையில் தொங்காதே; இப்போது உடம்பில் தோன்றுகிற பூரிப்பாலே அவை கையில் தொங்கினமையறிகைக்காக அசைத்துப்பாரா நிற்குமென்கை.

கூறையுடுக்கும். பரியட்டமும் அரையில் தொங்கும்படியாய்த்து - இம்மநோரத நிபந்தநமான தேஹபௌஷ்கல்யத்தாலேயிறே; அல்லாதபோது, கையிலேயொரு † தலையும், காலிலும் தறையிலும் ஒரு † தலையுமாமிறே. வளையும் கலையும், க்ருதஸங்கேதரைப் போலே கழலும்போதும் ஒக்கக்கழன்று, தொங்கும்போதும் ஒக்கத்தொங்காநிற்குமாய்த்து; காறை பூண்டதுக்குமேலே ஓரதிசயம் தேடுகைக்காகவிறே கூறையுடுக்கப்புகுந்தது. அதாவது - அவனுக்காகர்ஷகமாம்படி பரியட்டத்தை நன்றாக வுடாநிற்குமென்கை. இவளுடைய அழகிலேயாய்த்து அவனீடுபடுவது. ஆகையால், அவன் உகக்கத்தக்கவுடை வாய்ப்பு வருமளவும் குலைப்பது உடுப்பதாய்ச் செல்லாநிற்குமாய்த்து. அயர்க்கும். இப்படி அவன் வரவுக்குடலாகத் தன்னை யலங்கரித்தவளவிலும் வரக்காணாமையாலே அறிவழியாநிற்கும்.

தன்கோவைச்சேவ்வாய் திருத்தும். மீளவு மறிவு குடிபுகுந்து "இன்னமும் அவனுக்காகர்ஷகமாம்படி யிருப்பதோ ரதிசயம் நம்பக்கலிலே உண்டாக்கக்கடவோம்" என்று ஸ்வபாவமே கோவைப்பழம்போலே சிவந்திருக்கிற தன்னுடைய அதரத்தை ராகஜநகமான பதார்த்த ஸேவைகளாலும் மிகவும் சிவக்கும்படி பண்ணாநிற்கும். அல்லாதவைபோலன்றிக்கே, இது அவனுக்கு வாய்புகுசோறா யிருப்பதொன்றிறே; "தொண்டையஞ் செங்கனிவாய் நுகர்ந்தான்" என்கிறபடியே. தேறித்தேறிநின்று. தன்னுடைய அவயவாலங்காரத்தின் வாய்ப்பாலும் (க) "தஸ்மிம்ச்சபஹவோகுணா:" என்கிறபடியே இத்தசையில் வந்து உதவுகைக்கீடான அவன்குணங்களில் விச்வாஸத்தாலும் அயர்க்கைதவிர்ந்து மேன்மேலும் தெளிவை யுடையளாய், அத்தெளிவு கைகொடுக்கத் தரித்துநின்று. ஆயிரம்பேர்த்தேவன் திறம்பிதற்றும். (உ) "தேவோநாம ஸஹஸ்ரவாந்" என்கிறபடியே தன் குண சேஷ்டிதங்களுக்கு வாசகமான ஆயிரம் திருநாமங்களை யுடையனாய், அவை யெல்லாவற்றிலும் மநோஹரமான வடிவழகை யுடையனானவனுடைய ப்ரகாரங்களை, அவற்றினுடைய ரஸ்யதையாலே கலங்கி அடைவுகெடப் பேசாநிற்கும். மாறிலித்யாதி. ஆகையால், ஒப்பில்லாத நீலரத்நம்போன்ற வடிவழகையுடையவன் விஷயமாக இவளிப்படி பிச்சேறாநின்றாள். அ

மூ.—கைத்தலத்துள்ள மாடழியக் கண்ணாலங்கள் செய்திவளை
வைத்துவைத்துக்கொண் டென்னவாணிய நம்மைவடுப்படுத்தும்
செய்த்தலையெழு நாற்றுப்போலவன் செய்வனசெய்துகொள்ள
மைத்தடமுகில்வண்ணன்பக்கல் வளரவிடுமின்களே ௬.

---

† தலை - தலைப்பு, முந்தானை. (க) "தஸ்மிம்ச்சபஹவோகுணா:"
(உ) "தேவோநாம ஸஹஸ்ரவாந்."

பதவுரை.

( இவள் விஷயமாக, )

கைத்தலத்து உள்ள— கையிலுள்ள

¶ மாடு அழிய—செல்வமெல்லா மழியும்படி

கண்ணாலங்கள்— கல்யாணங்களை

செய்து— பண்ணி

இவளை— நமக்குக் கீழ்ப்படியாத இவளை

வைத்து வைத்துக் கொண்டு— நியமித்தும் காவலிட்டும் வைத்துக் கொண்டிருந்து

என்ன வாணிபம் — என்னப்ரயோஜனமுண்டாம்;

நம்மை— நம் குடிக்கு

வடுப்படுத்தும்— பழியுண்டாக்கா நிற்கும்;

( என்று தாயார் சொல்ல;- இத்தைக் கேட்ட பந்துக்கள்- )

செய்த்தலை— கழனியிலே

எழு— வளருகிற

நாற்றுப்போல்— நாற்றையுடையவன் வேண்டினபடி அவற்றை விநியோகம்கொள்ளு மாப்போலே

இவளையும்;

அவன் — இவளாலே விரும்பப்படுகிற அவன்

செய்வன செய்துகொள்ள— வேண்டின படி செய்து கொள்ளும்படியாக

மை— கறுத்ததாய்

தட— பெருத்திருந்துள்ள

முகில்— மேகம் போன்ற

வண்ணன் பக்கல்— வடிவையுடையவன் பக்கலிலே

வளர— இவள் வளரும்படியாக

விடுமின்கள்— விடுங்கோள்

என்றார்கள்.

---

¶ "மாடு - பொன், பக்கம், செல்வம்" என்று நிகண்டு.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. கைத்தலத்துள்ளவித்யாதி. பந்துவர்க்கத்துக்கிடாகவும் ஐச்வர்யத்துக்கிடாகவும், இதொரு பெண்ணுமன்றோ நமக்குள்ளது என்னும் ஸ்நேஹத்தாலே லோகமெல்லாம் கொண்டாடும்படி கையிலுள்ள தநமெல்லாமழிய இவள் விஷயமாக வுண்டான கல்யாணங்களை யெல்லாம்செய்து. இவளையித்யாதி. "நம்முடையகீழ்ப்படாத பருவமான விவளைக் கடக்கலாமோ" என்று பார்த்து, நியமித்தும் காவலிட்டும் வைத்துக் கொண்டிருந்து என்ன ப்ரயோஜநமுண்டு. நமக்கு மிவளுக்கும் ஜாத்யுசிதமாகக் கொள்ள லாவதொரு ப்ரயோஜநமில்லையிறே. நம்மைவடுப்படுத்தும். இதுக்குமுண்பு ஒரு பழிப்பற்றுப்போந்த நம்மை வடுப்படும்படி பண்ணும். அதாவது - "பந்துக்கள் உடன்படாதிருக்கத்தானே புறப்பட்டுப்போனாள்" என்னும்படிபோய் நம்முடையகுடிக்கு அவத்யத்தை விளைக்குமென்கை. செய்த்தலையித்யாதி. செய்த்தலையிலே வளர்ந்த நாற்று உடையவன் வேண்டினபடி விநியோகம் கொள்ளுமாபோலே இவளையும் அவன்வேண்டினபடி செய்து கொள்ள. மையித்யாதி. கழுத்தேகட்டளையாக நீரைப்பருகுகையாலே கறுத்துப் பெருத்திருந்துள்ள மேகம்போலே யிருக்கிற வடிவை யுடையவன்பக்கலிலே இவள்வளரும்படியாக நீங்களே சேர்த்துவிடுங்கோள், என்று இப்படி பந்துக்கள் சொன்னார்கள் என்கிறவித்தனையும் இவ்விடத்தில் அபிப்ரேதம். அதுக்கடி "தாயுரைசெய்ததனை" என்று-திருமொழி முழுதும், தாயார்வார்த்தையென்று நிகமிக்கையாலே. இது மேலிற்பாட்டுக்குமொக்கும். ௯.

மூ.—பெருப்பெருத்த கண்ணாலங்கள்செய்து பேணிநம்மில்லத்துள்ளே
இருத்துவா னெண்ணிநாமிருக்க விவளுமோன் றெண்ணுகின்றாள்
மருத்துவப்பதநீங்கினாளென்னும் வார்த்தைபடுவதன்முன்
ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடைக்கே. ௰.

பதவுரை.

பெருப் பெருத்த— மிகப் பெரிதான
கண்ணாலங்கள்— கல்யாணங்களை
செய்து— பண்ணி
பேணி— குலமர்யாதையைப் பேணி
நம் இல்லத்துள்ளே— நம் அகத்துக்குள்ளே
இருத்துவான்— இவளை இருத்துவதாக
நாம் எண்ணி இருக்க— நாம் நினைத்திருக்க
இவள்— இப்பெண்பிள்ளையானவள்
ஒன்று— நம் எண்ணத்துக்கு எதிர்த்தட்டான தொன்றை
எண்ணுகின்றாள்— எண்ணு கின்றாள்
( என்று தாயார் சொல்ல; - இதைக் கேட்ட பந்துக்கள் - )

மருத்துவப்பதம் நீங்கினாள் என்னும் } 'வைத்யன் செய்யும் மருந்தில் பாகம் பார்த்துச் செய்யாதபோது அது கைதவறுமாப் போலே, இவள் பதம் பார்த்து நாம் செய்யாமையாலே கைகழிந்தாள்' என்கிற
வார்த்தை— வார்த்தையானது
படுவதன் முன்— உலகத்தி லுண்டாவதற்கு முன்னே
உலகு அளந்தானிடைக்கே— உலகத்தை நீரேற்றளந்த வனிடத்திலே
இவளை— இவளை
ஒருப்படுத்திடுமின்— நீங்களே சேர்த்து விடுங்கோள்
என்றார்கள்.

வ்யா. பத்தாம்பாட்டு. பெருப்பெருத்த கண்ணாலங்கள் செய்து. லோகத்திலுள்ளார் ஐச்வர்யச்செருக்காலே பெருக்கச்செய்யும் கல்யாணங்களிலும் பெரியதான கல்யாணங்களைச்செய்து. பேணி. குலமர்யாதையைப்பேணி. நம்மில்லத்துள்ளேயித்யாதி. நம்முடைய க்ருஹத்துக்குள்ளே இருத்துவதாக நாம் மநோரதித்துக் கொண்டிருக்க. இவளுமொன்றேண்ணுகின்றாள். நம்முடைய எண்ணுதலுக்கு விபரீதமாக இவளுமொன்றையெண்ணுகின்றாள். அதாவது - இங்குத்தையிருப்பு காராக்ருஹவாஸமாய், அவன் பக்கலிலே போகவே மநோரதியா நின்றாளென்கை. மருத்துவப்பதமித்யாதி. மருத்துவனானவன் சமைக்கிற ஔஷதத்தில் பாகம்பார்த்துச் செய்யாதபோது அது கைதவறுமாப் போலே, இவள்பதம் பார்த்து நாம் செய்யாமையாலே இவள் கைகழிந்தாளென்னும் வார்த்தை லோகத்திலுண்டாவதுக்கு முன்னே. ஒருப்படுத்திடுமினித்யாதி. தன்னுடைமையை மஹாபலி "என்னது" என்றிருக்க, வீரத்தாலே அவன் பக்கலில்நின்றும் வாங்கித் தன் திருவடிகளின் கீழே யிட்டுக்கொண்டவன் பக்கலிலே இவளை நீங்களே சேர்த்துவிடுங்கோள்; நீங்கள் சேராத போது இவள் ஸ்வபாவத்தாலும் இரண்டுதலையும் சேர்ந்தேவிடும்; ஆனபின்பு, ஏற்கவே நீங்களே சேர்த்துவிடுங்கோளென்று த்வரிப்பிக்கிறார்கள். ... ... ௰.

மூ.—ஞாலமுற்று முண்டாலிலைத்துயி ஞராயணனுக்கிவள்
மாலதாகி மகிழ்ந்தனளென்று தாயுரைசெய்ததனைக்
கோலமார்பொழில்சூழ் புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்ன
மாலைபத்தும் வல்லவர்கட்கில்லைவருதுயரே. ௧௧.

பதவுரை.

ஞாலம் முற்றும்— பூமி தொடக்கமான ஸகலலோகங்களையும்
உண்டு— ப்ரளயத்திலழியாதபடி திருவயிற்றிலே வைத்து
ஆல் இலை— ஓர் ஆலந்தளிரிலே
துயில்— கண்வளர்ந்தருளின
நாராயணனுக்கு— நாராயணன் விஷயத்திலே

இவள்—;
மாலதாகி— மிக்க ஆசையை யுடையளாய்க் கொண்டு
மகிழ்ந்தனள் என்று — மகிழ்ந்தாளென்று
தாய்— திருத்தாயார்
உரை செய்ததனை— சொன்னதை
கோலம் ஆர்— அழகுமிக்கிருந்துள்ள
பொழில்— பொழிலாலே
சூழ்— சூழப்பட்ட
புதுவையர்— ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு
கோன்— நிர்வாஹகரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
சொன்ன— அருளிச்செய்த
மாலை— சொல்மாலையான
பத்தும்— பத்துப்பாட்டையும்
வல்லவர்கட்கு— ஓதவல்லவர்களுக்கு
வரு— பகவதநுபவத்துக்கு விரோதியாய் வருவதொரு
துயர்— துக்கம்
இல்லை— உண்டாகாது.

வ்யா. ஞாலமித்யாதி. பூமிதொடக்கமான ஸகலலோகங்களை ப்ரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலேவைத்து ஒருபவனான ஆலிலையிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநாஸாமர்த்யத்தை யுடையனாய் ஸர்வஸ்வாமியான நாராயணனுக்கு. இவள்மாலதாகி மகிழ்ந்தனளென்றித்யாதி. அதிபாலையானவிவள் அதிமாத்ரமான வ்யாமோஹத்தை யுடையளாய் தத்ஸம்ச்லேஷ மநோரதத்தாலே ப்ரீதையானாளென்று தாயாரானவள் சொன்னசொலவை. கோலமித்யாதி. அழகுமிக்கிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த ஸந்தர்ப்பமாய் ச்லாக்யமாயிருந்துள்ள பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந்திக்க வல்லவர்களுக்கு. இல்லைவருதுயரே. பகவதநுபவாதிகளுக்கு விரோதியாய் வருவதொரு து:க்கமில்லை. ... ... கக.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—ஐய வாயில் போங் கேழை நாடே ட்டம் பேச காறை கைத்தலப் பெரு ஞாலம் நல்ல.

---

ஆ. திருமொழி-உகூ-க்கு, பாட்டு-உஅச.

---

மூன்றாம்பத்து - எட்டாந்திருமொழி - நல்லதோர் தாமரை, ப்ரவேசம்.

அ.—கீழிற்றிருமொழியிலே — தன்பெண்பிள்ளைக்கு அவன்பக்கல் செல்லுகிற ப்ராவண்யத்தைக்கண்ட திருத்தாயார் " கோவிந்தனோடி வளைச்சங்கையாகி " என்று அவனோடு இவளுக்குக் கலவியுண்டாய்த்ததோவென்று முந்துறச்சங்கித்து, பின்பு பலஹேதுக்களாலும் ஸம்ச்லேஷம் ப்ரவ்ர்த்தமானமையைத் தானுமறிந்து, இவளுடைய ப்ராவண்யத்திலே ‡ முறுகுதலைக்கண்ட பந்துக்களும், " மருத்துவப்பதம் நீங்கினாளென்னும் வார்த்தைபடுவதன்முன் ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடைக்கே " என்றுசொல்லி யிருக்கச்செய்தேயும், சடக்கெனவிரைந்து கொடாதொழிகையாலே, அவன் முற்பாடனாய்வந்து¶ * கள்வன் கொல்

‡ முறுகுதல் - முதிர்த்தி.
¶ " கள்வன்கொல் யானறியேன் " என்ற திருமொழியிற் சொன்ன பிராட்டி.

ஷிற் பிராட்டியைக் கொண்டுபோனாற்போலே இவளை ‡ அத்தவாளத்தலையாலே மறைத்துக் கொண்டு தன்னுடைய திவ்யநகரியான திருவாய்ப்பாடியிலே கொண்டுபோக, அந்தரங்கமாகக் காத்துக்கொண்டுகிடந்த திருத்தாயார், படுக்கையில் பெண்பிள்ளையைக் காணாமையாலே "இவளையொழியக் கொண்டுபோவாரில்லை" என்றும் "இவன் கொண்டுபோவது தான் திருவாய்ப்பாடியிலே" என்றும் அறுதியிட்டு; இவள்போகையாலே தன் திருமாளிகையெல்லாமழகழிந்து வெறியோடிற்றென்றும்; இவன் இப்படி யடைவுகேடாகக் கொண்டுபோனவிது இக்குடிக்கு ஏச்சாமோ குணமாமோவென்றும்; இவளுக்கு பாணிக்ரஹணார்த்தமான உத்ஸவம் இப்படி நடக்குமோவென்றும்; மாமியாரான யசோதைப்பிராட்டி இவளைக் கண்டுகந்து மணவாட்டுப் பெண்பிள்ளையென்று ஸத்கரிக்குமோவென்றும்; மாமனாரான ஸ்ரீநந்தகோபர் உகந்தணைத்துக் கொண்டு இவள் வைலக்ஷண்யத்தைக்கண்டு இவளைப்பெற்ற தாயார் இனி தரிக்கமாட்டாரென்பரோ வென்றும்; அவன்றான் நிஹீநகுலத்தி லுள்ளாரைப் போலே என்மகளைப் புணர்ந்து உடன்போகைக்கு ஹேதுவாகக்கொண்டு குடிவாழுமோ, நாடெல்லாமறியும்படி நன்றாகக் கன்னலஞ்செய்து கைப்பிடிக்குமோவென்றும்; தன்பெருமையாலே அவன் இவளுக்கு ரூபகுணதோஷங்களைச்சொல்லி வரிசையறுத்து ஆண்டிடுமோ, தனக்கு ஜாத்யுசிதமான மஹிஷியாகப் பட்டங்கட்டி பூர்வ மஹிஷிகள் முன்னே வைபவம் தோற்ற வைக்குமோவென்றும்; இவள்தான் தயிர்கடைகை முதலான வன்தொழில்கள் செய்து குடிவாழ்க்கை வாழவல்லளோ வென்றும் இப்படி க்லேசித்தும் மநோரதித்தும் சென்ற ப்ரகாரத்தைச் சொல்லுகிறது - இத்திருமொழியில். ... ... ... *

மூ.—நல்லதோர் தாமரைப்பொய்கை நாண்மலர்மேற் பனிசோர
அல்லியுந்தாது முதிர்ந்திட் டழகழிந்தா லொத்ததாலோ
இல்லம்வெறியோடிற்றாலோ வென்மகளை யெங்குங்காணேன்
மல்லரை யட்டவன்பின்போய் மதுரைப்புறம் புக்காள்கொலோ. க.

பதவுரை.

நல்லது— அழகியதாய்
ஓர்— ஒப்பற்றிருக்கிற
தாமரைப் பொய்கை— தாமரைப் பொய்கையானது
நாள்— அப்போதலர்ந்த
மலர் மேல்— பூவின்மேல்
பனி— அதுக்கு விரோதியான பனியானது
சோர— விழ (அத்தாலே,)
அல்லியும்— உள் இதழும்
தாதும்— தகளும்
உதிர்ந்திட்டு— உதிர்ந்து
அழகு அழிந்தால் ஒத்தது— அழகழிந்தாற் போலே,
இல்லம்— அகமானது
‡ வெறியோடிற்று— வெளியாய் விட்டது;
என் மகளை— என் பெண்பிள்ளையை
எங்கும்— எவ்விடத்திலும்
காணேன்— காண்கிறிலேன்;
மல்லரை— சாணூர, முஷ்டிகர்களை
அட்டவன் பின் போய்— நிரஸித்தவன் பின்னேபோய்
மதுரைப் புறம்— மதுரைக்கு அணித்தான ஆய்ப்பாடியிலே
புக்காள் கொல் ஓ— புகுந்தாளோ! என்று ஸந்தேஹிக்கிறாள்.
(ஆல் - ஓ - அசை.)

‡ 'வீடு வெறிச்சென்றிருக்கிறது' என்று உலகவழக்கத்துக்கேற்ப.

‡ அத்தவாளத்தலை - முந்தானை.

வ்யா. முதற்பாட்டு. நல்லதோர்தாமரைப்பொய்கை. பரப்புமாறத் தாமரைபூத்துக் கிடக்கையாலே, அழகியதாய் அத்விதீயமான பொய்கையானது. நாண்மலர்மேற்பனிசோர. சிவப்பு, விகாஸம், குளிர்த்தி, பரிமளம், மார்த்தவம் இவற்றையுடைத்தான நாட்பூவின்மேலே, அதுக்கு விருத்தமான பனியானது சொரிய. அல்லியித்யாதி. அத்தாலே அல்லியும் தாதும் செவ்விகெட்டுத் தீர்ந்து அலங்காரமான பூ அழிகையாலே தானழகழிந்தாற்போலே யிராநின்றது. ஸ்தாவரஜாதிக்கெல்லா முபகாரகமா யிருந்ததேயாகிலும் தாமரைக்கு பாதகமாகை நியதஸ்வபாவமிறே பனிக்கு. அப்படி பனியேறுண்ட தாமரையோடை போலேயாய்த்து இத்திருமாளிகை கிடக்கிறது. ஆனும், ஒவும்- விஷாதாதிசயஸூசகம். இல்லம் வெறியோடிற்றாலோ. க்ருஹமானது வெறிபாய்ந்துவிட்டது. ஒருஜநஸஞ்சாரமற்று வெளியாய்க்கிடவா நின்றதென்கை. இக் க்ருஹம்முழுக்க இப்பெண்பிள்ளை யொருத்தியும் போலே காணுமிருந்தாள்; எல்லாருமிருந்தாலும் இவளொருத்தியும் போகவே திருத்தாயார்க்கு அப்படி தோற்றுமிறே. மீளவும் "ஆலோ" என்கிறாள் - விஷாதாதிசயத்தாலே. என்மகளையெங்கும்காணேன். என்பெண்பிள்ளையை யோரிடத்திலும் காண்கிறிலேன். க்ருஹம்மாத்ரமன்றிக்கே, பண்டு இவளிருக்குமிடம் ஸஞ்சரிக்குமிடமெங்கும் தேடிக்காணாமையாலே சொல்லுகிறாள். மல்லரையித்யாதி. இங்குக்காணாமையாலே "அவன் கொண்டுபோனான்" என்று அறுதியிட்டு, மல்லநிரஸநம்பண்ணின வீரப்பாட்டையுடையவன் பின்னேபோய், மதுரைப்புறத்திலே புகுந்தாளோ வென்கிறாள். மதுரைப்புறமாவது - மதுரைக்கு அடுத்து அணித்தான் திருவாய்ப்பாடி. "மதுரைப்புறம் புக்காள்கொலோ" என்றது - "அணியாலி புகுவர்கொலோ" என்றாற்போலே. அதாவது - ஒருவர்க்கொருவர் ஊமத்தங்காயாகையாலே கம்ஸநகரியான மதுரைதன்னிலே சென்று புகவும் கூடுமிறே; அது செய்யாதே, தனக்கு உத்தேச்யபூமியான திருவாய்ப்பாடியிலே போய்ப்புகுந்தாளோ வென்று ஸம்சயிக்கிறாள். ... ... ... ... ... க.

மூ.—ஒன்றுமறி வொன்றில்லாத வுருவறைக் கோபாலர்தங்கள்
கன்றுகான் மாறுமாபோலே கன்னியிருந்தாளைக்கொண்டு
நன்றுங்கிறிசெய்துபோனா நாரயணன் செய்ததீமை
என்றுமெமர்கள்குடிக் கோரேச்சுக்கோ லாயிடுங்கொலோ. உ.

பதவுரை.

ஒன்றும்— பொருந்தின
அறிவு— ஞானம்
ஒன்றும்— அல்பமும்
இல்லாத— இல்லாதவர்களாய்
உரு அறை— ரூபஹீநர்களான
கோபாலர் தாங்கள்— இடையரானவர்கள்
கன்றுகால் மாறுமாபோலே— நல்வழியாய்க் கண்ணுக்கு நன்றாயிருந்துள்ள கன்றுகளை உடையவர்களறியாமல் களவிலே கொண்டுபோமாப்போலே
கன்னி— கன்னிகையாய்
இருந்தாளை— எனக்குக் கீழ்ப்படிந்திருந்த என்மகளை
நன்றும்— மிகவும்
கிறி செய்து— உபாயப்பண்ணி
கொண்டு போனான்— கொண்டு போனவனாகிய
நாராயணன்— நாராயணனானவன்
செய்த— செய்த
தீமை— தீம்பானது
எமர்கள் குடிக்கு— எங்கள் குலத்துக்கு
என்றும்— எப்போதும்
ஓர் ஏச்சு ஆயிடுங் கொல் ஓ— ஒரு பழிப்பாமோ புகழாமோ? என்கிறாள்.

வ்யா. இரண்டாம்பாட்டு. ஒன்றுமறிவொன்றில்லாத. பொருந்தின வறிவு ஒன்று மில்லாத. லௌகிகவைதிகங்களோடு சேர்ந்த வறிவு அற்பமுமில்லாத; * அறிவொன்று மில்லாத வாய்க்குலமிறே; காட்டிலே பசுமேய்க்கப்போன விடங்களிலே வழிதிகைத்தால் வழிகாட்டுவது பசுக்களாம்படியிறே இவர்களறிவிருப்பது. உருவறைக்கோபாலர். ரூப ஹீநரான கோபாலர். ஆத்மகுணமில்லாதாற்போலே ரூபகுணமுமில்லாதவர்களென்கை. தாங்கள். "தாங்கள்" என்கிறவித்தைக் குறைத்துக்கிடக்கிறது. கோபாலர் தாங்களென்றபடி. இவர்களுடைய வறிவுங்கெடும் வடிவுங்கெடும் சொன்னது-இவைபார்த்தால் பொல்லாதாயிருக்கு மாப்போலே, இவர்களுடையவ்ர்த்தியும் பார்த்தால் பொல்லாதாயிருக்குமென்கைக்காக. அந்த வ்ர்த்திதன்னைச் சொல்லுகிறதுமேல் கன்றுகால்மாறுமாபோலேயென்று. கன்றுகால் மாறுங்கயா வது- தீதாயிருந்துள்ள தங்களுடைய கன்றுகளை "உங்களது" என்று பிறர்க்குக் காட்டி, நல்லதாயிருந்துள்ள அவர்களுடைய கன்றுகளைத் தங்களதாக்கிக்கொள்ளுகையும், நல்வழி யாய்க்கண்ணுக்கு நன்றாயிருக்கும் கன்றுகளை உடையவர்களறியாமல் களவிலே நிலைபேர்த் துக்கொண்டுபோகையுமிறே; இதில் பிற்பட்டதே இவ்விடத்துக்குச் சேருவது. இப்படி இவர்கள் செய்யுமாபோலே.

கன்னியிருந்தாளை- நன்றும்கிறிசெய்து - கொண்டு- போனான். கந்நிகையாய், விஷய ஸ்பர்சமென்பதொன்றறியாதே படிகடந்து புறப்படாமல் என்னிலேயிருந்தவளை, முன்தீம்பு செ ய்து தன் சுவட்டையறிவித்துத் தன்வசமாக்கி, நானறியாதபடி மிகவும் விரகு செய்து கொ ண்டுபோனான். நாராயணன் செய்ததீமை. ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாகையாலே நன்மை யே செய்யக்கடவவன் இப்படி தீமையைச்செய்வதே!. இவ்விடத்தில் தீமையாவது-தன்னு டைமையைத்தான் கொண்டுபோம்போது வரைந்து வெளிப்படக்கொண்டுபோகலாயிருக்க, இப்படி களவிலே கொண்டுபோனது. என்றுமித்யாதி. இப்படி யிவன்செய்த தீமை நிரவ த்யமானவெங்கள் குடிக்கு எல்லாக்காலத்திலும் நிற்பதொரு பழிப்பாமோ; அன்றிக்கே, இக்குடியிற்பிறந்ததொரு விஷயத்தை வரைந்துகொடுக்கப் பெறாமல் அவன் முற்பாடனாய் வந்து கைக்கொண்டுபோனவிது தன்னாலே இக்குடிக்கேற்றமாமோ. "கொல்லையென்பர் கொலோ குணம் மிக்கனளென்பர்கொலோ" என்னுமாபோலே, இக்குடிக்கு இது பழியாமோ, புகழாமோ வென்கிறாள். ... ... ... ... ... ... உ.

மூ.—குமரிமணஞ் செய்துகொண்டு கோலஞ்செய் தில்லத்திருத்தித்
தமரும்பிறருமறியத் தாமோதரற் கென்றுசாற்றி
அமரர்பதியுடைத்தேவி யரசாணியை வழிப்பட்டுத்
துமிலமெழப் பறைகொட்டித் தோரணநாட்டிடுங்கொலோ. ௩.

பதவுரை.

குமரி— கன்னிப்பெண்ணுக்கு
மணம்செய்துகொண்டு— விவாஹத்துக்கு முன்னதாகச் செய்யும் கல்யாணம் செய்து
கோலம்செய்து— ஆடை, ஆபரணங்களாலே அலங்கரித்து
இல்லத்து — விவாஹபவநத்திலே
இருத்தி— உட்காரவைத்து
தமரும்— பந்துக்களும்
பிறரும்— மற்றுமுள்ளாரும்
அறிய— அறியும்படி
தாமோதரற்கு— தாமோதரனை கண்ணனுக்

என்று — கொடுக்கப் புகுகின்றோமென்று
சாற்றி— பறையறைந்து (அதனால்,)
அமரர்பதியுடை— தேவாதிராஜனுடைய
தேவி— தேவியான இவள்
அரசாணியை— அரசங்கிளையை
வழிப்பட்டு- (ஜாத்யாசாரப்படி) வலம்வர
துமிலம் எழ— பேராரவாரம் தோன்ற
பறை கொட்டி— பறையை முழக்கி
தோரணம்- மகரதோரணம் முதலியவற்றை
நாட்டிடும் கொல் ஓ— ஊரெங்கும் நாட்டி
அலங்கரித்துக் கொண்டாடுவர்களோ?
கொண்டாட்ட மேதுக் கென்பர்
களோ வென்று ஸந்தேஹிக்கிறாள்.

வ்யா. மூன்றும்பாட்டு. குமரிமணம்செய்துகொண்டு. குமரி- கந்நிகை. கந்நிகாவஸ்த்தையில் செய்யும் கல்யாணத்தைச் செய்துகொண்டு. அதாவது- விவாஹத்துக்கு பூர்வாங்கமாகச்செய்யும் உத்ஸவவிசேஷத்தைச் சொன்னபடி. கோலஞ்செய்து. ஆபரணவஸ்த்ராங்கராகாதிகளாலே யலங்கரித்து. இல்லத்திருத்தி. கல்யாணக்ருஹத்திலே யிருத்தி. தமருமித்யாதி. பந்துக்களும் மற்றுமுள்ளாருமறியும்படி, "தாமோதரனுக்கு இவளைக்கொடுக்கப்புகாநின்றோம்" என்று ப்ரஸித்தமாக்கி. தாமோதரனென்றது—மாதாவானவள் கட்டினகட்டு அவிழ்த்துக்கொள்ள சக்தனன்றிக்கே அவள் நியமநம் தப்பாமலிருந்த நீர்மையையுடையவனென்றபடி. அமரர்பதியுடைத்தேவி. அங்குத்தைக்கென்று ஸங்கல்பித்து *தமரும் பிறரு மறியச்சாற்றினபோதே * அயர்வறுமமரர்களதிபதியானவனுடைய தேவியானவள். அரசாணியைவழிப்பட்டு. ஜாத்யுசிதமாம்படி அலங்காரபீடத்துக்குத்தூணான அரசாணியை வலம்வந்து. அரசாணியாவது-அலங்காரபீடத்தின்மேலே நாட்டும் அச்வத்ததண்டம். துமிலமெழப்பறைகொட்டி. பெரிய ஆரவாரந்தோன்ற வாத்யத்தைமுழக்கி. "மத்தளங்கொட்ட" என்னக்கடவதிறே. தோரணம்நாட்டிடுங்கொலோ. ஊரெங்கும் தோரணம் நாட்டுகைமுதலான அலங்காரங்களைக் கற்பித்துக் கொண்டாடுவர்களோ; குடியிற்பிறந்தார், 'கல்யாணத்துக்குக் கொண்டாட்டமென்செய்ய?' என்பர்களோ?. ... ... ... ... ... ௩.

மூ.—ஒருமகடன்னையுடையே னுலகநிறைந்த புகழால்
திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மாறான் கொண்டுபோனான்
பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்ற வசோதை
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறஞ் செய்யுங்கொலோ. ௪.

பதவுரை.

ஒரு மகள்தன்னை— ஒரே பெண்பிள்ளையை
உடையேன்— உடையளான நான்
உலகம் நிறைந்த— லோகமெங்கும் பரவின
புகழால்— கீர்த்தியோடே
திருமகள்போல— பெரிய பிராட்டியாரைப் போலே
வளர்த்தேன்— சீராட்டி வளர்த்தேன்; இப்படிப்பட்டவளை,
செம் கண்— சிவந்த கண்களையுடையனும்
மால்— வ்யாமோஹத்தை யுடையனுமான கண்ணான்
தான்— தானே
கொண்டு போனான்— கொண்டுபோய் விட்டான்;
பெரு மகளாய்— பெரிய பெண்பிள்ளையாய்
குடிவாழ்ந்து— குடிவாழ்க்கை வாழ்ந்து
பெரு பிள்ளை — பெருமை பொருந்திய பிள்ளையை
பெற்ற— பெற்ற
அசோதை— யசோதைப் பிராட்டியானவள்
மருமகளை கண்டு— நாட்டுப் பெண்ணைக் கண்டு
உகந்து— ப்ரியப்பட்டு
மணாட்டுப்புறம் செய்யும் கொல் ஓ — மணவாட்டிக்குச் செய்யக் கடவ சீர்மைகளைச் செய்வளோ, லௌகிகத்துக்குத் தக்கவளவு அநர்த்தமாகச் செய்து விடுவளோ என்று ஸந்தேஹிக்கிறாள்.

வ்யா. நான்காம்பாட்டு. ஒருமகள்தன்னை யுடையேன். அத்விதீயையா யிருப்பாளொரு பெண்பிள்ளையையுடையேன். ஒருமகளென்கையாலே - ஏகபுத்ரியென்னுமிடமும், தன்னை யென்கையாலே - ஸௌந்தர்யாதிகளாலுண்டான இவளுடைய மதிப்பும், உடையேனென்கையாலே - இவளை புத்ரியாக வுடையளாகையாலுண்டான தன்னுடைய ஏற்றமுஞ் சொல்லுகிறது. உலகம் நிறைந்த புகழால். விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியறத் தந்தாமுடைய அளவுகளுக்கீடாக இருந்த விருந்த விடங்களிலே இவளுடைய குணங்களைச்சொல்லி ச்லாகிக்கும்படி லோகமெல்லாம் வ்யாப்தமான புகழோடே. திருமகள்போல வளர்த்தேன். "கடியாமலர்ப்பாவையொப்பாள்" என்கிறபடியே ஸர்வர்க்கும் வைலக்ஷண்யத்துக்கு உபமாந பூமியாய் புருஷகாரத்வயுக்தையான *நாரீணாமுத்தமையோடு ஸத்ர்சஸ்வபாவையாம்படி வளர்த்தேன். செங்கண்மால் தான் கொண்டுபோனான். (க) "யதா கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ" என்கிறபடியே ஸ்வாபாவிகமான சிவப்புக்குமேலே *பக்கநோக்கறியாமல் இவளைப்பார்த்துக்கொண்டிருக்கும் வ்யாமோஹத்தாலும் சிவந்த திருக்கண்களையுடையனாய், இந்தவ்யாமோஹமே தனக்கு நிரூபகமாம்படி யிருக்குமவன், ஆதிவாஹிகரை வரக்காட்டியாதல், பெரியதிருவடியை வரக்காட்டியாதல் கொடுபோகையன்றிக்கே, *கள்வன்கொல்லில் பிராட்டியைக்கொண்டுபோனாற்போலே தானே கொண்டுபோனான். "ஆழ்வான் திருநாட்டுக் கெழுந்தருளினபோது, உடையவர், விச்லேஷம் பொறுக்கமாட்டாமல், 'ஒருமகள்தன்னை யுடையேன்' என்றும், 'உலகம்நிறைந்த புகழால் திருமகள்போல வளர்த்தேன்' என்றும், 'செங்கண்மால் தான் கொண்டுபோனான்' என்று மருளிச்செய்தார்" என்று ப்ரஸித்தமிறே. (உ) "உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ்ஸதாபவத்" என்கிறபடியே - ஸாதுக்களுக்கெல்லாமுபமாந பூமியாகச் சொல்லலாம்படி யிருக்கையாலே உலகம் நிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே. பெருமகளாய்க் குடிவாழ்ந்து. பெரிய பெண்பிள்ளையாய்க் குடிவாழ்க்கைவாழ்ந்து. திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடிக்கும் நிர்வாஹகரான பெருமையையுடைய ஸ்ரீநந்தகோபர் மஹிஷியாகையாலே இவளை "பெருமகள்" என்கிறது. அவர் ஊர்க்காரியத்துக்கெல்லாம் அபிமாநியாய் நிர்வஹிக்கையாலே "குடிவாழ்ந்து" என்கிறது. பெரும்பிள்ளை பெற்றவசோதை. பெரியபிள்ளையைப் பெற்றயசோதை. ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பரிபூர்ணனாய் "என்னநோன்பு நோற்றாள்கொலோ இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்னும்படி யிருக்கையாலே "பெரும்பிள்ளை" என்கிறது. தானும்பெருமகள், பெற்றதும் பெரும்பிள்ளைகாணுமிவள். மருமகளைக்கண்டுகந்து. மருமகளைக்கண்டு ப்ரியப்பட்டு. "அவன்கொண்டுபோனான்" என்று வெறுத்தகாலத்திலும், போனால் பிறக்கும் முறையுறவு சொல்லவேண்டுகையாலே "மருமகள்" என்கிறாள். கண்டுகந்து. பெண்பிள்ளையுடைய ஸௌந்தர்யாதிகளையும் வ்யாமோஹத்தையுங்கண்டு மடியிலேவைத்தணைத்து, "பெருப்பேறுபெற்றோம்" என்று ப்ரியப்பட்டு. மணாட்டுப்புறம் செய்யுங்கொலோ. மணவாட்டுப்பிள்ளையாக நினைத்துத் தான் செய்யக்கடவ சீர்மைகள் செய்யுமோ; "கூடிய கூட்டமன்றோ" என்று - லௌகிகத்துக்குத் தக்கவளவு அஹ்ருதயமாகச் செய்துவிடுமோ. ... ... ... ... ... ௪.

மூ—தன்மாமன் நந்தகோபாலன் தழீஇக்கொண்டென் மகடன்னைச்
செம்மாந்திரே யென்றுசொல்லிச் செழுங்கயற் கண்ணுஞ் செவ்வாயும்

(க) "யதாகப்யாஸம்புண்டரீகம்."
(உ) "உபமாநம சேஷாணாம் ஸாதூநாம் யஸ்ஸதாபவத்."

கொம்மைமுலையு மிடையுங் கொழும்பணைத் தோள்களுங் கண்டிட்
டிம்மகளைப் பெற்றதாய ரினித்தரியா ரென்னுங்கொலோ. ௫.

பதவுரை.

தன்— பெண்பிள்ளை தனக்கு
மாமன்— மாமனுரான
நந்த கோபாலன்— நந்த கோபரானவர்
என் மகள் தன்னை— என் மகளை
தழீஇக்கொண்டு— அணைத்து மடியிலே வைத்துக்கொண்டு
செம்மாந்து இரு என்று சொல்லி — ' செவ்வே இரு ' என்று சொல்லி
செழு— செழுமைதங்கிய
கயல்— கயல் ( மத்ஸ்யம் ) போன்ற
கண்ணும்— கண்களையும்
செம்— சிவந்திருக்கு முள்ள
வாயும்— அதரத்தையும்
கொம்மை— பருத்த
முலையும்— ஸ்தநங்களையும்
இடையும்— இடையையும்
கொழு— செழித்த
பணை— மூங்கிலையொத்த
தோள்களும்— தோள்களையும்
கண்டிட்டு— தனித்தனியாக உற்றுப்பார்த்து
இ மகளை— ' இப்பெண்பிள்ளையை
பெற்ற தாயர்— பெற்ற தாயாரானவள்
இனி— இவளைப் பிரிந்த பின்பு
தரியார்— தரித்திருக்க மாட்டாள் '
என்னும் கொல் ஒ— என்று சொல்லுவரோ, அவிக்ர்தாயிருப்பாரோ என்று ஸந்தேஹிக்கிறாள்.

வ்யா. இந்தாம்பாட்டு. தன்மாமன் நந்தகோபாலன். பெண்பிள்ளை தனக்கு மாமனுரான ஸ்ரீநந்தகோபர். தழீஇக்கொண்டென்மகள்தன்னை. " நமக்கு மருமகள் " என்னும் ஸ்நேஹந்தோற்ற என்மகள்தன்னை யணைத்துக்கொண்டு மடியிலேவைத்து. செம்மாந்திரே யென்றுசொல்லி. இவள் வ்ரீளையாலே நிலம்பார்க்க, செவ்வேயிருவென்றுசொல்லி. செம்மாப்பு- செவ்வை. முகம்முதலான அவயவங்களையும் ஸமுதாயசோபையையும் பார்க்கைக்காகவிறே- செவ்வேயிருவென்பது. செழுங்கயற்கண்ணும். அழகிய கயல்போன்றகண்ணையும். செவ்வாயும். ஸ்வபாவமே சிவந்திருக்கிற அதரத்தையும். கொம்மைமுலையும். பருவத்தினளவல்லாத பரிணமத்தை யுடைத்தான முலைகளையும். கொம்மை- பெருமை. இடையும். முலையினுடைய வளர்த்தியாலே நெருங்கி நேர்ந்திருக்கிற இடையையும். கொழும்பணைத்தோள்களும். சுற்றுடைமையாலும் பசுமையாலும் செவ்வையாலும் வளர்ந்தமூங்கில்போலேயிருக்கிற தோள்களையும். கொழுமை- அழகும், பெருமையும். கண்டிட்டு. தனித்தனியும் ஸமுதாயேநவும் தர்சித்து. என்னுடைய இழவுநெஞ்சிலே தோன்றி. இம்மகளையித்யாதி. இப்பெண்பிள்ளையைப் பெற்ற தாயாரானவள் இவளைப்பிரிந்தபின்பு ப்ராணனோடே தரிக்கமாட்டாளென்று சொல்லுவரோ; அன்றிக்கே; அவிக்ர்தாயிருப்பாரோ. ... ... ௫

மூ.—வேடர்மறக்குலம்போலே வேண்டிற்றுச் செய்தென்மகளைத்
கூடியகூட்டமே யாகக்கொண்டு குடிவாழுங்கொலோ
நாடுநகருமறிய நல்லதோர் கண்ணாலஞ்செய்து
சாடிறப்பாய்ந்தபெருமான் தக்கவாகைப்பற்றுங்கொலோ. ௬.

பதவுரை.

வேடர்— நீச ஜாதீயரான வேடரையும்
மறக்குலம் போலே— மறக்குலத்தினுள்ளாரையும் போலே
என் மகளை— என் பெண்பிள்ளையை
வேண்டிற்று செய்து — வேண்டினபடி செய்து,

கூடிய கூட்டமே ஆக கொண்டு — ஆணும் பெண்ணும் நெஞ்சு பொருந்திக் கூடின கூட்டம்மாத்திரமே மணமாகக் கொண்டு

குடி வாழும் கொல் ஓ — குடிவாழ்க்கை வாழுமோ?;

சாடு— சகடத்தை

இற— முறியும்படி

பாய்ந்த— உதைத்த

பெருமான்— ஸ்வாமியானவன்

நாடும்— அவிசேஷஜ்ஞரும்

நகரும் — விசேஷஜ்ஞரும்

அறிய— அறியும்படியாக

நல்லது— விலக்ஷணமாய்

ஓர்— ஒப்பற்றிருப்பதொரு

கண்ணாலம் செய்து— கல்யாணம் செய்து

தக்க ஆ—ஸ்வஜாத்யாசாரத்துக்குத்தக்கபடி

கைப்பற்றும் கொல் ஓ— கையைப்பிடித்து மணங் கொள்ளுமோ என்று தாயார் ஸந்தேஹிக்கிறாள்.

வ்யா, ஆறும்பாட்டு. வேடர்மறக்குலம்போலே. தண்ணியஜாதியான வேடரையும் மறக்குலத்திலுள்ளாரையும் போலே. "கள்ளர், பள்ளிகள்" என்னுமாபோலே, வேடர் மறவர் என்கிறதும் தண்ணியஜாதியில் அவாந்தரபேதம். வேண்டிற்றுச்செய்து. இரண்டு தலையிலுமுண்டான குடிப்பிறப்பைப்பாராதே, ஒருசாஸ்த்ரமர்யாதையின்றிக்கே, தனக்கு வேண்டினபடி செய்து. என்மகளை. பழுதற்ற குலத்திலேயுள்ள என்வயிற்றிலேபிறந்த பெண்பிள்ளையை. கூடியகூட்டமேயாகக்கொண்டு. புணர்ந்துடன்போக்கில் இரண்டு தலையும் நெஞ்சுபொருந்திக்கூடின கூட்டரவுமாத்ரமே மணமாகக்கொண்டு. குடிவாழுங்கொலோ. குடிவாழ்க்கைவாழுமோ. சாடிறப்பாய்ந்தபெருமான் - நாடுநகருமறிய நல்லதோர் கண்ணாலம் செய்து - தக்கவா கைப்பற்றுங்கொலோ. அஸுராவிஷ்டமான சகடத்தை, முலைவரவு தாழ்த்துச்சீறி நிமிர்த்த திருவடிகளாலே முறியவுதைத்துத் தன்னை நோக்கி, "தனியிடத்திலே பிள்ளையைவிட்டுவைத்துப் போகையாலே தாழ்வுவந்தது" என்று தாயார்க்குத் தாழ்வுவாராதபடி நோக்கினவுபகாரகனானவன், இரண்டு குடிக்கும் பழிவாராதபடி, திருவாய்ப்பாடி சூழ்ந்தநாடும் திருவாய்ப்பாடியாகிற நகருமறியும்படியாக "இதுக்குமுன்பு இப்படியில்லை" என்னும்படி விலக்ஷணமாய் அத்விதீயமான கல்யாணத்தைச்செய்து, ஜாத்யுசிதமான தர்மத்துக்குத் தகுதியாக பாணிக்ரஹணஞ்செய்யுமோ. ... சு.

மூ.—அண்டத்தமரர்பெருமா னாழியானின் றென்மகளைப்
பண்டப்பழிப்புக்கள் சொல்லிப்பரிசற வாண்டிடுங்கொலோ
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து கோவலர்பட்டங் கவித்துப்
பண்டைமணாட்டிமார்முன்னே பாதுகாவல்வைக்குங்கொலோ. எ.

பதவுரை.

அண்டத்து— பரமபதவாஸிகளான

அமரர்— நித்யஸூரிகளுக்கு

பெருமான்— தலைவனாய்

ஆழியான்— சக்ரபாணியா யிருக்குமவன்

என்— என்னுடைய

மகளை— பெண்பிள்ளையை

இன்று— இப்போது

‡ பண்டம் பழிப்புக்கள் சொல்லி — பதார்த்த தூஷணம் சொல்லி

பரிசு அற— வரிசை கெட

ஆண்டிடும் கொல் ஓ— ஆளுவனோ;

‡ ரூபத்திலேயாதல் குணத்திலேயாதல் சில குறைகளைச் சொல்லியென்கை.

( அல்லது, )

பண்டை மணாட்டிமார் முன்னே— } முன்பே பட்டங்கட்டித் தனக்கு முதல் மணவாட்டியாயிருப்பவர்கள் முன்னே

கொண்டு— இவளைக் கொண்டு

குடிவாழ்க்கை வாழ்ந்து— தன் க்ர்ஹக்ர்த்யங்களை யெல்லாம் நடத்தி

கோவலர் பட்டம் கவித்து— 'இடைக்குலத்துக்குத் தலைவி' என்று தன் மஹிஷியானமை தோற்றப் பட்டங்கட்டி

பாதுகாவல் வைக்கும் கொல் ஓ } அந்தஃபுரக்காவலிலே வைப்பனோ.

வ்யா. ஏழாம்பாட்டு. அண்டத்தமரர்பெருமானாழியான். அப்ராக்ர்தமான பரமபதத்திலே அஸ்ப்ர்ஷ்டஸம்ஸார கந்தரான நித்யஸூரிகளுக்குநிர்வாஹகனாய்,ஸர்வேச்வரத்வ சிஹ்நமான திருவாழியை தரித்துக்கொண்டிருக்கும் பெருமையையுடையவன். அந்தப்பெருமையால்வந்த செருக்காலே. இன்றென்மகளைப் பண்டப்பழிப்புக்கள் சொல்லி. ஸர்வலக்ஷண ஸம்பந்நையான வென்னுடைய பெண்பிள்ளையை, இப்போது பதார்த்த தூஷணங்கள் சொல்லி. அதாவது- ரூபத்திலேயாதல், குணத்திலேயாதல் சிலகுறைகளைச்சொல்லி யென்கை. பரிசறவாண்டிடுங்கொலோ. அபகர்ஷபுத்தியாலே வரிசைகெட ஆண்டிடுமோ. அதாவது- அந்தரங்க வ்ர்த்திகொள்ளாமல் புறத்தொழில்களைக்கொண்டுவிடுமோ என்கை.கொண்டு குடிவாழ்க்கை வாழ்ந்து. இவளைக்கொண்டு தன்னுடைய குடிவாழ்க்கை யெல்லாம் வாழ்ந்து. அதாவது- இவள் முகப்பாகத் தன்னுடைய க்ர்ஹக்ர்த்யமெல்லாம் நடத்தியென்கை. கோவலர்பட்டங்கவித்து. "கோபகுலத்துக்கு ஸ்வாமிநி" என்று தன்மஹிஷியானமைதோற்றப் பட்டங்கட்டி. பண்டைமணாட்டிமார் முன்னே. பண்டேபட்டங்கட்டி, தனக்கு மஹிஷிகளாயிருக்கிறவர்கள்முன்னே. பாதுகாவல்வைக்குங்கொலோ. அந்தஃபுரக்காவலிலே வைக்குமோ. ... ... ... ... ... ... ... ... ... ...எ.

மூ.—குடியிற்பிறந்தவர் செய்யுங் குணமொன்றுஞ் செய்திலனந்தோ
நடையொன்றுஞ் செய்திலனங்காய் நந்தகோபன்மகன் கண்ணன்
இடையிருபாலும் வணங்க விளைத்திளைத் தென்மகளேங்கிக்
கடைகயிறே பற்றிவாங்கிக் கைதழும்பேறிடுங்கொலோ. ௮.

பதவுரை.

நங்காய்— குணபூர்ணையானவளே!
நந்தகோபன்— ஸ்ரீநந்தகோபருடைய
மகன்— திருமகனான
கண்ணன்— கண்ணனானவன்
குடியில்— உயர்ந்த குடியிலே
பிறந்தவர்— பிறந்தவர்கள்
செய்யும்— தங்கள் குடிக்குத்தகுதியாகச் செய்கிற
குணம்— குணத்தில்
ஒன்றும்— ஒன்றேனும்
செய்திலன்— செய்தானென்றில்லை;

( அதுவுமன்றி, )

நடை— லோகநடத்தையிலும்
ஒன்றும்— ஏகதேசமும்
செய்திலன்— செய்யவில்லையே;
அந்தோ— ஐயோ! [ என்றுமனம் வருந்தி ]
இடை— இடையானது
இருபாலும்— இருபக்கமும்
வணங்க— வளையும்படி
என் மகள்— என் மகளானவள்
ஏங்கி— ( மூச்சுத்தாங்கிக் கடையமாட்டாமல் நடுநடுவே ) ஏங்கி

இளைத்து இளைத்து— மிகவு மிளைத்து
கடை கயிறே— கடைகிற கயிற்றையே
பற்றி— பிடித்து

வாங்கி— வலித்து ( அதனுல், )
கை— ம்ர்துவான கையானது
தழும்பு ஏறிடும் கொல் ஓ — தழும்பேறிவிடுமோ.

வ்யா: எட்டாம்பாட்டு. குடியிற்பிறந்தவர் செய்யும் குணமொன்றும் செய்திலன். உயர்ந்தகுடியிலே பிறந்தவர்கள் அக்குடிக்குத்தகுதியாகச் செய்யும் குணத்தில் ஒன்றும் செய்திலன். அதாவது- முறைபிலே யிவளைவரைந்துகொண்டு வெளியில் கொண்டு போகாமையிறே. அந்தோ. ஐயோ! என்று விஷண்ணையாகிறுள். நடையொன்றும் செய்திலன். குடியிற்பிறந்தவர்கள் செய்யுமது செய்யாவிட்டால் லோகத்தில் நடக்கும் மர்யாதைதான் செய்யவேணுமிறே; அதில் ஏகதேசமும் செய்திலன். அதாவது- லோகத்திலே யிப்படிசெய்வாரில்லையிறே யென்கை. நங்காய். குலமர்யாதையும் லோகமர்யாதையு மறியும் குணபூர்த்தியுடையவளேயென்று, தனக்கு பந்துவாய் ஸக்கிஹிதையானவள் முகத்தைப்பார்த்துச் சொல்லுகிறுள். நந்தகோபன்மகன் கண்ணன். குடிப்பிறப்பில் வந்தால் ஸ்ரீநந்தகோபர் திருமகனுயிருக்கிற க்ர்ஷ்ணன். நங்காய் நந்தகோபன்மகன் கண்ணன் - குடியிற்பிறந்தவர்செய்யும் குணமொன்றும் செய்திலன் - நடையொன்றும் செய்திலன் - அந்தோ என்று - அவன்முறைகெடக் கொண்டுபோன ப்ரகாரத்தைச் சொல்லி விஷண்ணையாய். மேல் தன்னுடைய பெண்பிள்ளையின் மார்த்தவத்தை நினைத்து நொந்து சொல்லுகிறுள். இடையிருபாலும் வணங்க. இடம்வலங்கொண்டு கடைகையாலே, இடையானது இரண்டு பார்ச்வத்திலும் வணங்க. இளைத்திளைத்தென்மகளேங்கி. ஸுகுமாரியான வென்பெண்பிள்ளை பலஹாநியாலே மூச்சுத்தாங்கிக் கடையமாட்டாமல்ஏங்கி நடுநடுவே யிளைத்திளைத்து. கடைகயிறித்யாதி. தொடங்கினகாரியம் தலைக்கட்டுமளவும் இடைவிடாமல் கடைகயிற்றையே பிடித்துவலித்து, அத்தாலே தளிர்போலே ம்ர்துவானகையானது தழும்பேறிவிடுமோ வென்கிறுள். கோவலர் பட்டங்கட்டினுலும் கடைகயிறு வலிக்கவேணுமிறே இடைச்சிகளுக்கு. தான் தன் பெண்ணின் மார்த்தவம் சொல்லுகிறு ளித்தனையிறே. ... ... ... அ.

மூ.—வெண்ணிறத்தோய் தயிர்தன்னை வெள்வரைப்பின் முன்னெழுந்து
கண்ணுறங்காதேயிருந்து கடையவுந்தான் வல்லள்கொலோ
ஒண்ணிறத்தாமரைச் செங்கணுலகளந்தா னென்மகளைப்
பண்ணறையாப் பணிகொண்டு பரிசறவாண்டிடுங்கொலோ. கூ.

பதவுரை.

தான்— மென்மைத் தன்மையளான என் பெண்ணனவள்
வெள் நிறம்— வெண்மை நிறத்தையுடைத்தாய்
தோய்— செறியத் தோய்ந்த
தயிர் தன்னை— தயிரை
வெள் வரைப்பின் முன்— கிழக்கு வெளுப்பதற்கு முன்னே

எழுந்து— எழுந்திருந்து
கண் உறங்காதே இருந்து— கண்விழித்துக் கொண்டிருந்து
கடையவும்— வருந்திக் கடையவும்
வல்லள் கொல் ஓ— வல்லளோ!
( இப்படியிருக்க; )
ஒண் நிறம்— அழகிய நிறத்தையுடைய
தாமரை— தாமரைமலர் போன்று

செம்— சிவந்த
கண்— கண்களையுடையனாய்
உலகு— எல்லா உலகங்களையும்
அளந்தான்— நீரேற்றளந்து கொண்டவன்
என் மகளை— என் மகளை
பண்ணறையாப் பணிகொண்டு — இழி தொழில்களிலே ஏவிக்கொண்டு
பரிசு அற— பெருமைகெட
ஆண்டிடும்கொல் ஓ— ஆளுவனோ;
அறிகிறிலேன் என்கிறாள்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. வெண்ணிறத்தோய் தயிர்தன்னை. செவ்விகுன்றுதபடி காய்ச்சித்தோய்க்கையாலே வெளுத்தநிறத்தையுடைத்தாய்ச் செறியத்தோய்ந்த தயிர்தன்னை. வெள்வரைப்பின் முன்னெழுந்து. ஆதித்யோதயத்துக்கு ஸூசகமான வெள்வரைப்புத் தோற்றுவதற்குமுன்னே யெழுந்திருந்து. வெள்வரைப்பு. கிழக்குவெளுக்கை- ப்ராஹ்மணர் ஸந்த்யாவந்தநார்த்தமாக அருணோதயத்துக்கு முன்னே யெழுந்திருக்குமாபோலே யிறே- இடைச்சிகளும் தயிர்கடைகைக்கு எழுந்திருக்கும்படி. கண்ணுறங்காதேயிருந்து. எழுந்திருந்தாலும் நித்ரைபகையாமிறே; அதின் வசமாகாதே விழித்திருந்து. கடையவும் தான்வல்லள் கொலோ. ம்ருதுப்ரக்ருதியான தான் ஆயாஸித்துக்கடையவும் வல்லளோ. ஒண்ணிறமித்யாதி. அலர்ந்தபோதை அழகிய நிறத்தையுடைத்தான தாமரைபோலே சிவந்ததிருக்கண்களையுடையனாய், ஸமஸ்தலோகங்களையும் தன் திருவடிகளின் கீழே யாக்கிக்கொண்டவன். இத்தால்- தன் கண்ணழகாலே இவளை அநந்யார்ஹையாக்கித் தன்காற்கீழே யிட்டுக்கொண்டவனென்கை. என்மகளைப் பண்ணறையாப் பணிகொண்டு. நான் * திருமகள்போல வளர்த்த வென் பெண்பிள்ளையை, பண்புகெடத்தாழ்ந்த பணிகளிலே யேவிக்கொண்டு. பரிசறஆண்டிடுங்கொலோ. இவளுடைய பெருமைகெட ஆளுமோ, பெருமைகெடாதபடி யாளுமோ, அறிகிறிலேனென்கிறாள். ... ... ... ... ... கூ.

அ. நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—மாயவன்பின் வழிசென்று வழியிடை மாற்றங்கள்கேட்டு
ஆயர்கள் சேரியிலும்புக் கங்குத்தைமாற்றமு மெல்லாம்
தாயவள் சொல்லியசொல்லைத் தண்புதுவைப்பட்டன் சொன்ன
தூயதமிழ்பத்தும்வல்லார் தூமணிவண்ணனுக்காளரே. ய.

பதவுரை.

மாயவன்— ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடையவர் ஸர்வேச்வரனுக்கு
பின்வழி சென்று— பின்னேபோய்
வழியிடை மாற்றங்கள் கேட்டு — போம் வழியிடையிலே கண்ட அபூர்வ வஸ்துக்கள் விஷயமான வர்த்தாந்தங்களைக்கேட்டு
ஆயர்கள் சேரியிலும்— திருவாய்ப்பாடியிலும்
புக்கு— புகுந்து
அங்குத்தை— அங்குள்ளார்க்குத் தக்கபடி செய்த
மாற்றமும் எல்லாம்— தன் பெண்பிள்ளையின் சொலவுகளெல்லா வற்றையும்
தாயவள்— தாயானவள்
சொல்லிய— அருகுநின்றவர்களைக் குறித்துச் சொன்ன
சொல்லை— சொல்லை
தண்— குளிர்ந்த
புதுவை— ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் தலை [ வரான

| | |
|---|---|
| பட்டன்— பெரியாழ்வார் | பத்தும்— பத்துப் பாட்டையும் |
| சொன்ன— அருளிச்செய்த | வல்லார்— ஓதவல்லவர்கள் |
| தூய— (பகவத்விஷயமாகையாலே) பரிசுத்தமான | தூ மணி— பழிப்பற்றநீலமணிபோன்ற |
| | வண்ணனுக்கு— வடிவழகையுடையவனுக்கு |
| தமிழ்— தமிழ் பாஷையான | ஆளர்— அடிமைசெய்யப் பெறுவர். |

வ்யா. மாயவன்பின் வழிசென்று. தன்னுடைய பெண்பிள்ளையானவள், ரூப குண சேஷ்டிதங்களால் ஆச்சர்யபூதனாய், அவற்றைக்காட்டித் தன்னை வசீகரித்துக்கொண்டவனுடையபின்னே, * கள்வன் கொல்லில் பிராட்டியைப்போலே வழிபோய். வழியிடைமாற்றங்கள்கேட்டு. "கிளிபோல் மிழற்றிநடந்து" என்கிறபடியே போகிறவழி யிடையிலே அபூர்வ பதார்த்தங்களைக் கண்டால் இவை யென்னென்று அவ்விஷயமாக அவனை வார்த்தைகள் கேட்டு. ஆயர்கள் சேரியிலும்புக்கு. ப்ராப்யதேசமான திருவாய்ப்பாடியிலும் சென்று புகுந்து. இப்படியுண்டான செயல்களையும். அங்குத்தை மாற்றமுமெல்லாம். அவ்வூரிற் புகுந்த பின்பு, அங்குண்டான யசோதைப்பிராட்டி, ஸ்ரீநந்தகோபர், நாயகனான க்ர்ஷ்ணன், தன் பெண்பிள்ளையான இவள், தந்தாமுக்கு அநுரூபமாகச்செய்யும் வ்ர்த்தாந்தமான சொலவுகளையும் எல்லாவற்றையும். "மாற்றமும்" என்கிற ஸமுச்சயவாசி சப்தத்தாலே - இவ்வுண்டான செயல்களையும் கூட்டிக்கொள்வது. தாயவள் சொல்லிய சொல்லை. திருத்தாயாரானவள் தன் க்ர்ஹத்திலேயிருந்து தன்னிலே க்லேசித்தும் மநோரதித்தும் ஸந்நிஹிதரைக்குறித்துச் சொன்ன சொலவுகளை. ... ... ... ... ... ... ... *

அதவா, மாயவனித்யாதி. தன்னுடைமையைத் தான்கொண்டுபோகையாலும், அது தன்னை முறையிலே காட்டிக்கொடுக்கக் கொண்டுபோகாமையாலுமுண்டான குணதோஷங்களிரண்டும் உபாதேயமாய்த் தோற்றும்படியிருக்கிற ஆச்சர்யபூதனானவன் போனவழியிலே தானும் வழிப்பட்டுச்சென்று, வழியெதிர்வந்தாரை முன்போனவர்களுடைய ஸ்திதி கமந சயந ப்ரகாரங்களையும் வினவிக்கேட்டு. ஆயர்கள் சேரியிலும் புக்கு. திருவாய்ப்பாடியில் ஸ்ரீநந்தகோபர் தெருவளவாகச்சென்று, அங்குநின்றவர்களை அங்குத்தை விசேஷங்களையும் வினவிக்கேட்டு. தாயவள்சொல்லியசொல்லை. வழியெதிர்வந்தாரை "மதுரைப்புறம் புக்காள்கொலோ" என்றுகேட்டும், * எமர்கள்குடிக்கு ஓரேச்சாமோ குணமாமோ என்றாற்போலே கேட்டும், திருவாய்ப்பாடியில் தோரணம்முதலான அலங்காரங்களும் வாத்யகோஷங்களும் கண்டு கேட்டிகோளோவென்று கேட்டும், ஆயர்கள்சேரியிலேசென்று யசோதை ஸ்ரீநந்தகோபருடைய ஆதராநாதரங்களெல்லாம் வினவிக்கேட்டு அவர்கள்சொன்ன விசேஷங்களுமெல்லாம் திருத்தாயாரானவள் சொன்னப்ரகாரங்களையென்று இங்ஙனேயோஜிக்கவுமாம். இதிலுங்காட்டில், பூர்வயோஜனைக்கு ஔசித்யமுண்டு.

தண்புதுவைப்பட்டன்சொன்ன. ஸம்ஸாரசர்மஹரமான குளிர்த்தியையுடைய திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாருளிச்செய்த. தூயதமிழ்பத்தும்வல்லார். ஸம்ஸ்க்ர்த சப்தம்போலேயிருண்டு பொருள்தெரியாதபடி யிருக்கையன்றிக்கே, பெண்ணுக்கும் பேதைக்கும் அறியலாம்படி ஸ்வார்த்த ப்ரகாசகமாயிருக்கும் தூய்மையையுடைத்தான த்ராவிடபாஷையாய், ஒரொன்றே ஓராத்மாவினுடைய உஜ்ஜீவநத்துக்குப் போருமென்னும்படி

யிருக்கிற பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந்திக்கவல்லவர்கள், நீலமணிவண்ணனு க்காளரே. பழிப்பற்ற நீலரத்நம்போன்ற வடிவழகையுடையவனுக்கு சேஷபூதராய் அடிமை செய்யப் பெறுவர். ... ... ... ... ... ... ൰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—நல்ல தோன்று குமரி யொரு தன்மாமன் வேட
ரண்டக் குடி வெண்ணிற மாயவ னென்னுதன்.

ஆட திருமொழி-உள-க்கு, பாட்டு-உகச.

மூன்றாம்பத்து - ஒன்பதாந்திருமொழி - என்னுதன், ப்ரவேசம்.

அ. க்ர்ஷ்ணாவதாரைகப்ரவணராய், தத்குணசேஷ்டிதங்களையே யநுபவித்துக்கொண்டு போந்தார்-கீழ்; இப்போது, அந்தக்ர்ஷ்ணாவதாரகுணசேஷ்டிதங்களோடே ஏதத்பூர்வகாலிகமான ராமாவதாரகுணசேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே யநுபவிக்கவேணுமென்னும் அபிநிவேசம்பிறந்து, அதுக்குடலாக இரண்டு ஸ்ரீகோபிமாரவஸ்த்தையைப்ராப்தராய், அதிலே ஒருத்தி க்ர்ஷ்ணாவதாரகுணசேஷ்டிதமும், ஒருத்தி ராமாவதாரகுணசேஷ்டிதமுமாகக்கொண்டு, ஒருவர்க்கொருவர் எதிரியாய்க்கொண்டு சொல்லி, உந்திபறந்த பாசுரத்தாலே உபயாவதாரகுணசேஷ்டிதங்களையும்பேசி யநுபவிக்கிறார்- இத்திருமொழியில். இரண்டு கோபிமாரவஸ்த்தையை ஏககாலத்திலே யடையக்கூடுமோவென்னில்; பகவத்ப்ரஸாதவிசேஷத்தாலே ஜ்ஞாநத்தில் தடையற்றால் எல்லாம் சொல்லலாமிறே. "'மாணமருமென்னெஞ்சி' என்கிற திருமொழியிலே, இரண்டு பிராட்டிமார்தசை ஏககாலத்திலே கூடும்படியென்?' என்று ஜீயர் பட்டரைக்கேட்க; 'தேசவிசேஷத்தில் அநேக சரீரபரிக்ரஹம் ஏககாலத்திலே கூடுகிறபடி எங்ஙனே; அப்படியே இவரையும்பார்த்து அருளினால்கூடும்" என்றருளிச்செய்தார் என்று ப்ரஸித்தமிறே. ... ... ... ... *

மூ.—என்னாதன்றேவிக் கன்றின்பப்பூ வீயாதாள்
தன்னாதன்காணவே தண்பூமரத்தினை
வன்னாதப்புள்ளால் வலியப்பறித்திட்ட
என்னாதன்வன்மையைப் பாடிப்பற வெம்பிரான் வன்மையைப்பாடிப்பற. க.

பதவுரை.

என்— எனக்கு
நாதன்— சேஷியான ஸர்வேச்வரனுடைய
தேவிக்கு — தேவியான ஸத்யபாமைப் பிராட்டிக்கு
அன்று— அவள் விரும்பினபோது
இன்பம்— மநோஹரமான
பூ— கற்பகப்பூவை
ஈயாதாள் தன்— கொடாத இந்த்ராணி [யுடைய

நாதன்— நாயகனான இந்த்ரன்
காணவே— கண்டு நிற்கும்போதே
தண்— தழைத்துக் குளிர்ந்த
பூ— பூத்துக்கிடக்கிற
மரத்தினை— கல்பவ்ருக்ஷத்தை
நாதம்— ஸாமவேதரூபனாய்
வல்— வலிமையுடைய
புள்ளால்— பெரியதிருவடியாலே
வலிய— பலவந்தமாக
பறித்து— பிடுங்கிக் கொண்டுவந்து
இட்ட- ஸத்யபாமை க்ருஹத்தில் நட்டவனாய்
என் நாதன்— என்னை அடிமைகொண்டவனுடைய
வன்மையை— நினைத்தது முடிக்கும் வல்லமையை
பாடி— ப்ரீதியாலே பாடிக்கொண்டு
பற— உந்திபற;
எம்— எமக்கு
பிரான் — உபகாரகனானவனுடைய வன்மையைப்பாடிப்பற
என்று க்ருஷ்ணாவதாரத்தில் ஈடுபட்டாளொருத்தி சொல்லுகிறாள்.

வ்யா. முதற்பாட்டு. என்னாதன் தேவிக்கு. என்னுடைய நாதனானவனுடைய தேவிக்கு. நாதனென்றது - சேஷியென்றபடி. ஸ்வரூபத்தையுணர்ந்தால் எல்லார்க்கும் தனித்தனியே "என்னாதன், என்னாதன்" என்னலாம்படியிறே வஸ்துவோட்டை ப்ராப்தியிருக்கும்படி. இவ்வாத்மாவினுடைய சேஷத்வந்தான் கேவலம் அவனளவன்றிக்கே ததீயவிஷயமாயிறே யிருப்பது; ஆகையாலிறே "என்னாதன் தேவிக்கு" என்றது. (க) "விஷ்ணுபத்நீ" என்கிறபடியே இவனுக்கு நிரூபகம்-அவனுடையதேவியென்னுமதிறே. "தேவி" என்கையாலே - ஸத்யபாமைப் பிராட்டியுடைய வால்லப்யம் சொல்லுகிறது. அன்று. நரகாஸுரவதம்பண்ணி தங்களுக்குக் குடியிருப்புப் பண்ணிக்கொடுத்த க்ருஷ்ணனோடேகூடி, தன்னுடைய க்ருஹத்திலே ஸத்யபாமைப்பிராட்டி யெழுந்தருளினவன்று. அபேக்ஷா நிரபேக்ஷமாக மஹாநிதி கைப்பட்டவன்று. இன்பப்பூவீயாதாள். போக்யமான கல்பகப்பூ வர, அத்தைக்கண்டு நாய்ச்சியார் அபேக்ஷிக்கவும் பெறுவைத்து நிர்ப்பாக்யையாகையாலே நிரர்த்தகமாகச் சிலஹேதுக்களைச்சொல்லிக் கொடாத இந்த்ராணி. தன்னாதன். "அவனைத்தனக்கு நாதனாகவுடையோம்" என்னுமித்தையிறே இவள் தனக்குக்கனக்க பலமாக நினைத்திருப்பது. காணவே. "நான் முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் நிர்வாஹகனான இந்த்ரனல்லனோ" என்று தன்னைப் போரப்பொலிய அபிமானித்திருக்குமவன் கண்டுகொடு நிற்கவே. தண்பூமரத்தினை. தழைத்துக்குளிர்ந்து பூத்துநிற்கிற கல்பகவ்ருக்ஷத்தை. வன்னாதப்புள்ளால். நாதப்ரதாந வேதமயனாயிருக்கிற பெரியதிருவடியாலே. (உ) "த்ரிவ்ருச்சிரோ காயத்ரஞ்சக்ஷு:" இத்யாதியாலே - இவனுடைய வேதமயத்வம் ஸுவ்யக்தமாகச் சொல்லப்படா நின்றதிறே. நாதத்துக்கு வன்மையாவது- பாஹ்யகுத்ருஷ்டிகளால் சலிப்பிக்கவொண்ணாமை. வன்மை, பெரிய திருவடிக்கு விசேஷணமாகவுமாம். இவனுக்கு வலிமையாவது - நினைத்தகாரியம் செய்து முடிக்கவல்லசக்தி. வலியப் பறித்திட்ட. வலியாலே பிடுங்கிக்கொண்டுபோந்த. அவன்றன்னை யபேக்ஷித்துக் கொள்ளுகையன்றிக்கே, அவனுடைய அஸந்நிதியிலே பிடுங்குகையுமன்றிக்கே, அவன் பார்த்துநின்று விலக்கச்செய்தே, பலத்தாலேயிறே பிடுங்கிக்கொண்டு போந்தது. என்னாதன்வன்மையைப் பாடிப்பற. அபிமதையான ஸத்யபாமைப் பிராட்டிக்கு பரதந்த்ரனாய் காரியம்செய்த ப்ராண

(க) "விஷ்ணுபத்நீம்." (உ) "த்ரிவ்ருத் தேசிரோ காயத்ரஞ்சக்ஷு:."

யித்வகுணத்தாலே யென்னை யெழுதிக்கொண்டவனுடைய, நினைத்தது முடிக்கவல்ல பலத்தை ப்ரீதியாலே பாடிக்கொண்டுபற. எம்பிரான்வன்மையைப் பாடிப்பற. பிராட்டிக்குச் செய்த உபகாரம் தனக்குச் செய்ததாக நினைத்து "எம்பிரான்" என்கிறார். "வன்மையைப்பாடிப்பற" என்று பலவும்சொல்லித்து ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே. பறவென்றது - உந்தி பறவென்றபடி. ... ... ... ... ... ... ௧.

௨.—என்வில்வலிகண்டு போவென்றெதிர்வந்தான்
தன்வில்லினோடுந் தவத்தையெதிர்வாங்கி
முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான்
தன்வில்லின் வன்மையைப்பாடிப்பற தாசரதிதன்மையைப்பாடிப்பற. ௨.

பதவுரை.

என்— என்னுடைய
வில்— வில்லின்
வலி— வலியை
கண்டு போ என்று— 'கண்டு போ' என்று
எதிர்வந்தான் தன் — எதிர்ந்துவந்த பரசுராமனுடைய
வில்லினோடும் தவத்தை— வில்லையும் தபஸ்ஸையும்
எதிர்— அவன் கண்முன்னே
வாங்கி— அழித்தவனும்
முன்— இதுக்குமுன்னே
வில்— திருக்கையில் வில்லை
வலித்து— வளைத்து
முது பெண்— தாடகை என்னும் ராக்ஷஸியுடைய
உயிர்— உயிரை
உண்டான் தன்— முடித்த சக்ரவர்த்தி திருமகனுடைய
வில்லின் வன்மையைப் பாடிப்பற—;
தாசரதி— தசரதபுத்ரனுடைய
தன்மையை— குணத்தை
பாடிப்பற. [இது ராமாவதாரத்திலீடுபட்டவள்வார்த்தை.]

வ்யா. இரண்டாம்பாட்டு. என்னித்யாதி. "என்னுடைய வில்லின்வலியைக் கண்டுபோ" என்று எதிரேவந்த பரசுராமனுடைய. அதாவது - மாஹேச்வர தநுர்ப்பங்கம்பண்ணி ஸ்ரீஜநகராஜன் திருமகளைத் திருமணம்புணர்ந்து, பெரியசெருக்கோடே திருவயோத்யையைநோக்கி யெழுந்தருளா நிற்கச்செய்தே, இந்த விசேஷத்தைக்கேட்டு, குபிதஹ்ருதயனாய்த் தன்னுடைய வில்லையுமெடுத்துக்கொண்டு நடுவழியிலேவந்து தோன்ற, சக்ரவர்த்திபெரிதேசென்று பொற்பூக்களையும் காலிலேபொகட்டு அநுவர்த்தித்து (௧) "பாலாநாம்மமபுத்ராணாமபயம்தாதுமர்ஹஸி" என்று அர்த்தித்தவளவிலும் அத்தை அதிக்ரமித்துத் தள்ளிக் கொடுபோந்து, தன்சீற்றமெல்லாந் தோற்றும்படி முகத்தைப் பார்த்து, "முன்பேமுறிப்போய் பலவிடங்களிலும் பூண்கட்டிக்கிடக்கிறதொரு சொத்தை வில்லைமுறித்தேன் என்று கர்வோத்தராய் வருகிற நீ என்கையில் வில்லைவாங்கி வளைத்தாயாகில் சமர்த்தன்" என்னும் நினைவாலே, "என்வில்வலிகண்டுபோ" என்று தன்னுடைய பூர்வபராக்ரமங்களையும் அதுக்கடியான தபஸ்ஸையும் கணக்கநினைத்து, "சக்ரவர்த்திதிருமகன்" என்றுமதியாதே எதிரே அடர்ந்துவந்தபடியைச் சொல்லுகிறது.

(௧) "பாலாநாம்மமபுத்ராணாமபயம்தாதுமர்ஹஸி."

தன் வில்லினோடும் தவத்தையெதிர்வாங்கி. "ஆனால் தன்னுடைய வில்லைத் தந்து காணாய்" என்று வில்லை வாங்குகிறவளவில், அந்த வில்லோடேகூட அவனுடைய கர்வஹேதுவான தபஸ்ஸையும், அவன் பார்த்துநிற்கச் செய்தே வாங்கி. எதிர்வந்தான்றன் வில்லென்று- எதிரேவந்தவன்றன்னுடைய வில்லென்னுதல்; எதிரேவந்த பரசுராமன்கையிலிருப்பதாய் வைஷ்ணவமான தநுஸ்ஸாகையாலே முன்பே தன்னுடையதாயிருக்கிற வில்லென்னுதல். இப்படியிருக்கிற வில்லோடே, அவனுடைய தபஸ்ஸை யெதிர்வாங்குகையாவது - அந்த வில்லைவாங்கி அதிலே சரத்தைத்தொடுத்து, "இத்தைக்கொண்டு உன் ப்ராணனைப் போக்கிவிட என்றால் நீ ப்ராஹ்மணனாயிராநின்றாய்; ஆனபின்பு, உன்னுடைய கதிபங்கத்தைப் பண்ணிவிடவோ, உன்னுடைய தபஃபலங்களையழித்துப் பொகட்டுவிடவோ" என்று கேட்டவளவில்; "கதிபங்கம்பண்ணினால் எனக்கு வாஸஸ்தலமான மஹேந்த்ர பர்வதத்தேறப்போகாது, என்னுடைய தபஃபலத்தை யழித்துவிடும்" என்ன; அப்படி செய்துவிட்டது. ஸ்வரூபாவேசாவதாரமாய், தசாவதாரமத்யே ஸஹபடிதனாய்ப்போருகிற அப்பரசுராமன்றான் நிரஸ்தனானபடி யெங்ஙனே யென்னில்; ஸ்வரூபாவேசத்திலும் ஸாக்ஷாதவதாரம் ப்ரபலமாகையாலே அத்யுத்கடத்வமுண்டானபோது இதனாலே அது நிரஸ்தமாகக்குறையில்லை; சக்த்யாவேசத்தில் ஸ்வரூபாவேசம் ப்ரபலமானவோபாதி, ஸ்வரூபாவேசத்தில் ஸாக்ஷாதவதாரம் ப்ரபலமாகத்தட்டில்லையிறே; சக்த்யாவேசத்தில் ஸ்வரூபாவேசம் ப்ரபலமாகையாலேயிறே ஸஹஸ்ரபாஹ்வர்ஜுநன் பரசுராமனாலே நிரஸ்தனாய்த்து.

முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான். இதுக்கு பூர்வத்திலே விச்வாமித்ரமஹர்ஷியினுடைய அத்வரத்ராணார்த்தமாக மஹர்ஷியோடேகூட எழுந்தருளினவளவிலே, பாஹிம்ஸையிலே பழகி, யாகங்களையும் ப்ராஹ்மணரையும் தபஸ்ஸுக்களையுமழித்துக்கொண்டு திரியும் ராக்ஷஸியான தாடகை, அதிரக்கூப்பிட்டுக் கைகளையுமெடுத்துக்கொண்டு மிருந்து மிருந்தகோபத்தோடே நலிவதாக அடர்ந்துவர, விச்வாமித்ர நியோகத்தாலே திருக்கையில் வில்லைவளைத்து அவளுடைய ப்ராணனைமுடித்தவன். தன்வில்லின்வன்மையைப் பாடிப்பற. அவன் தன்னுடைய வில்லின்வன்மையைப் பாடிக்கொண்டு பறவென்று எதிரியைப்பார்த்துச் சொல்லுகிறாள். வில்லுக்கு வலிமையாவது-"காயுங்கடிஞ்சிலை" என்கிறபடியே ப்ரதிபக்ஷநிரஸநத்தில் பெருமாள் கண்பார்க்கிலும் கண்பாராமல் காரியம் செய்யும் திண்மை. தாசரதிதன்மையைப்பாடிப்பற. இத்தால்- இவ்வதிமாநுஷசேஷ்டிதங்களைச் செய்யாநிற்கச்செய்தேயும், மீளவும் ஈச்வரகந்தமற "ஐயர் மகன்" என்றே தன்னை நினைத்துநின்று கார்யஞ்செய்தகுணத்தைச் சொல்லுகிறது. ... ... ... ... ... ... ... ... ௨.

மூ.—உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு
விருப்புற்றங்கேக விரைந்தெதிர்வந்து
செருக்குற்றான்வீரஞ் சிதையத்தலையைச்
சிரைத்திட்டான் வன்மையைப்பாடிப்பற தேவகிசிங்கத்தைப்பாடிப்பற.

பதவுரை.

| | |
|---|---|
| உருப்பிணி நங்கையை— ருக்மிணிப் பிராட்டியை | ஏற்றிக்கொண்டு— ஏற்றிக்கொண்டு |
| | அங்கு— அவ்வளவிலே |
| தேர்— திருத்தேரிலே | விருப்புற்று— விருப்பத்தை யுடையனாய் |

போகாநிற்கச் செய்தே
எதிர்— எதிர்நின்று பொருவதாக
விரைந்து வந்து— விரைந்தோடி வந்தவனும்
செருக்குற்றான்— கர்வத்தையடைந்த ருக்மனுடைய
வீரம் சிதைய— வீர்யமழியும்படி
தலையை— தலையை
சிரைத்திட்டான்— அம்பாலே சிரைத்துவிட்டவனுடைய
வன்மையைப் பாடிப்பற—;
தேவகி சிங்கத்தை — தேவகியுதரத்திற் பிறக்கையாலே சிங்கம்போன்ற வீரப்பாட்டை யுடையவனை
பாடிப்பற—

வ்யா. மூன்றாம்பாட்டு. உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு. "கண்ணாலங்கோடித்து" என்கிறபாட்டிற் சொல்லுகிறபடியே - தான் முன்புதேடின தநமெல்லாம் இதிலே செல்லும்படி கல்யாணத்தைப் பெருக்கக்கோடித்து, புதுப்பூ மொக்கவேணும் என்று ஆசைப்பட்டிருப்பாரைப்போலே கந்யகையானவிவளைக் கைப்பிடிப்பதாக விரும்பி, அதுக்கு பூர்வக்ரியைகளெல்லாம் செய்து "இனி இவ்விஷயம் நமக்குக்கைப்புகுந்தது" என்று நிச்சயித்திருந்த சிசுபாலன் தேஜோஹாநிப்பட்டு, ஒருவர்முகம்பார்க்க லஜ்ஜித்து அண்ணாந்து கொண்டிருக்கும்படியாக அங்கேசென்று கையைப்பிடித்தெடுத்து, ருக்மிணிப் பிராட்டியைத் திருத்தேரிலே யேற்றிக்கொண்டு. விருப்புற்றங்கேக. அவ்வளவிலே விருப்பத்தைப் பண்ணிக்கொண்டு போராநிற்கச்செய்தே. அவ்வளவிலே விரைந்தெதிரி. ருக்மிணிப் பிராட்டியினுடைய தமையனான ருக்மன், "இப்படி செய்கையாவதென்" என்று எதிர்பொருது மீட்பானாக விரைந்துவந்து தன்னுடைய வீர்யத்தால்வந்த செருக்கையுடையனாய்க்கொண்டு தகைய. "இவனைக்கொல்லில் ருக்மிணிப்பிராட்டி மநஸ்ஸு பிசகும்" என்று அவனைப்பிடித்துத் தேர்க்காலோடேகட்டி அவனுடைய வீரத்துக்கு பங்கமாக அவன்றலையை அம்பாலே சிரைத்து விட்டவனுடைய வலிமை, ப்ரதிப்ரேரிதையாய்க் கொண்டு பாடிப்பற. அன்றிக்கே, "வந்தசெருக்குற்றான்" என்று பாடமானபோது - "மீட்கவேணும்" என்னும் கறுவுதலாலே விரைந்து எதிர்ந்து வந்த கர்வயுக்தனானவனுடையதலையைச் சிரைத்திட்டான் வன்மையைப் பாடிப்பறவென்கை. தேவகிசிங்கத்தைப் பாடிப்பற. ருக்மிணிப்பிராட்டியைத் திருமணம்புணருகைக்குடலான தேவகிவயிற்றில் பிறப்பையும், ப்ரதிபக்ஷநிரஸநத்தில் ஸிம்ஹம்போலே யிருக்கும் வீரப்பாட்டையு முடையவனைப் பாடிப்பற. ... ... ... ... ... ... ... ௩.

மூ.—மாற்றுத்தாய்சென்று வனம்போகேயென்றிட
ஈற்றுத்தாய்பின்றொடர்ந் தெம்பிரானென்றழக்
கூற்றுத்தாய்சொல்லக் கொடியவனம்போன
சீற்றமிலாதானைப்பாடிப்பற சீதைமணாளனைப்பாடிப்பற. ௪.

பதவுரை.

மாற்றுத்தாய்— தம் தாயாரோடொத்த ஸுமித்ரையார்
சென்று— சென்று
வனமே— 'காட்டுக்கே
போகு— போ'
என்றிட— என்று நியமிக்கவும்
ஈன்ற தாய்— பெற்றதாயாரான ஸ்ரீ கௌஸலையார்
பின் தொடர்ந்து— பின்னே சென்று
எம்பிரான்— 'என் நாயனே!

| | |
|---|---|
| (உன்னைப்பிரிந்து எப்படி தரித்திருப்பேன்;') | போன— எழுந்தருளினவனை |
| என்று அழ— என்று கதறி அழவும் | சீற்றம் இலாதானை— 'காட்டிலே போக விட்டாள்' என்கிற கோபமில்லாதவனை |
| கூற்றுத்தாய் சொல்ல— கூற்றம் போன்ற கைகேயியுடைய சொல்லைக் கொண்டு | பாடிப்பற—; [வனை |
| கொடிய வனம்— கொடிய காட்டிலே | சீதை மணாளனை— ஸீதைக்கு வல்லபனை பாடிப்பற. |

வ்யா. நான்காம்பாட்டு. மாற்றுத்தாய்சென்று வனம்போகேயென்றிட. மாற்றுத்தாயென்றது- மற்றைத்தாயென்றபடி. அன்றிக்கே, 'மாறு' என்று - ஒப்பாய், மாறான தாய்- பெற்றதாய்க்குப்போலியான தாயென்னவுமாம். ஸ்ரீகௌஸல்யாரோபாதி, பெருமாள் பக்கல் அதிஸ்நேஹிநியாயிறே ஸுமித்ரையாரிருப்பது. இப்படியிருக்கிற தாயாரானவள் சென்று "நீர்வநத்திலேபோம்" என்றுசொல்ல. அதாவது- திருவபிஷேகமங்களமஹோத்ஸவார்த்தமாகத் திருப்படைவீடெல்லா மலங்கரித்து உத்ஸவமும்தொடங்கி புரோஹிதரான வஸிஷ்டாதிகளுந் தானுமாகக்கொண்டு, ராஜாவான சக்ரவர்த்தி, திருவபிஷேகார்த்தமாகப் பெருமாளுக்குக் காப்புக்கட்டி, புரச்சரணங்களும் செய்வித்து, "இனி அபிஷேகம்செய்யுமித்தனை" என்று முஹூர்த்தம்பார்த்திருக்கிறவளவிலே, கைகேயியானவள் குப்ஜைவார்த்தையாலே நெஞ்சுகலங்கி, பர்த்தாவான சக்ரவர்த்தியைப்பார்த்து, எனக்கு "இரண்டுவரமுமன்றே முன்னே தந்திருப்பது, அதிரண்டும் இப்போது செய்யவேணும்; அதாவது- ராமனை அபிஷேகம்செய்யாமல் காட்டிலேபோகவிடவேணும், பரதனை அபிஷேகம் செய்யவேணும்" என்ன; ஸத்யதர்மபராயணனாகையால் "என்செய்வோம்" என்று இடிவிழுந்தாற்போலே இவ்வார்த்தையைக்கேட்டு க்லேசப்பட்டு, பெருமாளையழைத்துக்கொண்டுவரும்படியாக ஸுமந்த்ரனைப்போகவிட்டு, தான்கலங்கிக்கிடக்க; ஸுமந்த்ரன்சென்று "ஐயர் எழுந்தருளச்சொல்லுகிறார்" என்கையாலே, பெருமாளும், திருவபிஷேகத்துக்கென்று அலங்க்ருத திவ்யகாத்ரராய்க்கொண்டு, பிராட்டி மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு அந்தப்புரத்வாரத்தளவும் பின்றொடரவா, திவ்யாந்தப்புரத்தில்நின்றும் புறப்பட்டுப் பெரிய கோலாஹலத்தோடே எழுந்தருளிவந்து தமப்பனாரைக்காணப் புகுந்தவளவிலே, கலங்கிக்கிடக்கிறபடியைக்கண்டு "இதுக்கடியென்" என்று பயப்பட்டு, "ஐயர்க்கு இப்போது க்லேசமேது" என்று கைகேயியைக்கேட்க; "முன்பே எனக்கு இரண்டுவரம் தந்திருப்பர்; அந்த இரண்டுவரமும் இப்போது பெறுகைக்காக உம்மைக் காட்டிலே போகவிடவேணுமென்றும், பரதனை அபிஷேகம் செய்யவேணுமென்றும் நானபேக்ஷித்தேன்;ஸத்யம் தப்பாதவராகையாலே அதுக்கு அநுமதிபண்ணி உம்மைக் காட்டிலேபோகவிடுவதாக அழைத்துவிட்டார்; இப்போது உம்மைக்கண்டவாறே வாய்திறந்து சொல்லமாட்டாமல் கிடக்கிறார்" என்ன; "இப்படியோ நான் ஐயர்க்கு பாதந்த்ரனாய் வர்த்தித்தபடி, என்னை நியமிக்கும்போதைக்கும் இப்படி க்லேசிக்கவேணுமோ, நெருப்பிலே விழச்சொன்னால் அதுவும் நான் செய்யேனோ" என்ன; "ஆனால், அவர்க்காக நான் சொல்லுகிறேன், நீர் வநவாஸார்த்தமாகப்போம்" என்ன; "அப்படி செய்யக்கடவேன்" என்று ஸங்கல்பித்துப் புறப்பட்டுத் தாயாரான கௌஸல்யாரையும் வந்துகண்டு வநகமநார்த்தமாக உத்யோகிக்கிறவளவிலே, இளையபெருமாள், தம்முடைய திருத்தாயாரான ஸுமித்ரையார் பக்கலிலே வந்து, "ஐயர் சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே பெருமாள் காட்டிலே யெழுந்தருளாநின்றார், நானுங் கூடஸேவித்துக்கொண்டு

போகிறேன்" என்ன; (க) "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ் ஸுஹ்ருஜ்ஜநே | ராமே ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி" என்றும் (உ) "ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம் | அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாத யதாஸுகம்" என்றுஞ்சொல்லி இவரை ஒருப்படுத்தி, பெருமாள்பக்கலிலே சென்று, அவர் வநகமநார்த்தமாக உத்யோகித்து நிற்கிறபடியைக்கண்டு, சக்ரவர்த்தியுங் கைகேயியுஞ்செய்த கொடுமையைநினைத்து நெஞ்செரிந்து "ஒருபெண்பெண்டாட்டி 'என்பிள்ளைக்குவேணும்' என்று பறித்துக்கொண்டாள் ராஜ்யம் உமக்குவேண்டா, ஒருவரும் அபிமாநியாதவநமே உமக்கு அமையும், ஆனபின்பு வநத்திலே யெழுந்தருளும்" என்று சொன்னது. வனம்போகேயென்றது- வநமேபோகு என்றபடி. இந்த அவதாரணமிறே கீழ்ச்சொன்ன பொருளைக்காட்டுகிறது.

ஈற்றுத்தாய் பின்றொடர்ந்து எம்பிரானென்றழ. பெற்ற தாயாரான ஸ்ரீகௌஸல்யையார் பின்னேதொடர்ந்து சென்று தன்னுடைய பிரிவாற்றாமை யெல்லாம்சொல்லி, "ஏகபுத்ரையான நான் உம்மைப்பிரிந் திருக்கமாட்டேன், என்னுடைய நாயனே!" என்று கட்டிக்கொண்டு அழ. கூற்றுத்தாய்சொல்ல. கூற்றம்போன்ற கைகேயியாகிற தாய்சொல்ல. பெருமாளுடைய ஸௌகுமார்யத்தையும், போகிறவிடத்திலுண்டான கொடுமையையும் பாராமல், பதினாலுஸம்வத்ஸரம் வநவாஸம் பண்ணச்சொன்ன க்ரௌர்யத்தைப்பற்ற - இவளைக் கூற்றுத்தாயென்கிறது. "பித்ர்வசநபரதந்த்ரராய்ப் போனார்" என்று நிற்கச்செய்தே, இவள்சொன்னதுக்காகப் போனார் என்கிறது - அவர் வாய்விட்டுச் சொல்லமாட்டாதே அநுமதி பண்ணிக்கிடக்க, அதுதானும் சொன்னாள் இவளாகையாலேயிறே. மாற்றுத்தாய் சென்று வநம்போகே யென்றிடவும், ஈற்றுத்தாய் பின்றொடர்ந்து எம்பிரானென்றழவும், கூற்றுத்தாய் சொல்லடியாகக் கொடியவநத்திலே போனவென்றபடி.

அதவா, மாற்றுத்தாயென்கிறது - கைகேயியாகவும், கூற்றுத்தா யென்கிறது - ஸுமித்ரையாராகவும் யோஜிக்கவுமாம். அப்போதைக்கு, மாற்றுத்தாயென்றது - மாற்றாந்தாயாகையாலே; ஸ்ரீகௌஸல்யையாருக்குத் தன் நினைவாலே மாற்றாந்தாயென்றபடி. ஸ்ரீபரதாழ்வான் நினைவுக்கு மேல் பொருந்தாமையாலே மாற்றாந்தாயென்கிற தாகவுமாம். "மாறு" என்றுசொல்லி, "தாய்" என்னவேண்டுகிறது பெருமாள் நினைவாலேயிறே; "நடுவிலாச்சி" என்றிறே அவர் எப்போது மருளிச்செய்வது. சென்றுவனம்போகேயென்றிட. வநமே சென்றுபோகு என்றுநியமிக்க. அதாவது - ராஜபோகத்தில் நெஞ்சுவையாதே வநத்தளவுஞ்சென்று அதிலேபோய்விடு என்று நியமிக்கவென்கை; "வா" என்கிறாளன்றே; "போ" என்னுமதுவேயிறே இவள்சொல்லுவது. ஈற்றுத்தாயித்யாதி. பெற்றதாயாரான கௌஸல்யையார், "என்நாயனே! ஏகபுத்ரையான நான் உம்முடைய விச்லேஷ வ்யஸநம் பொறுக்கமாட்டேன், நான் எப்படி உம்மைப்போகவிட்டு தரித்திருப்பது" என்று பின்றொடர்ந்து சென்றழ.

கூற்றுத்தாய்சொல்ல. ஸுமித்ரையாகிற தாய்சொல்ல. கூறுபட்ட ஹவிஸ்ஸை புஜிக்கையாலே கூற்றுத்தாயென்னுதல்; சக்ரவர்த்திக்கு மூவரும் ஸஹதர்மசாரிணிகளாகையாலே பதாம்சத்தாலே கூற்றுத்தாயென்னுதல்; ஸ்ரீகௌஸல்யையாரைப்போலே நிஷேதிக்கு அநு

(க) "ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய ஸ்வநுரக்த ஸ்ஸுஹ்ருஜ்ஜநே-ராமே ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ரப்ராதரிகச்சதி" (உ) "ராமம் தசரதம் வித்தி மாம்வித்தி ஜநகாத்மஜாம்- அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாதயதாஸுகம்."

படுத்தவண்ணமல் " அஹம் மமனைதகளாலே ஒருத்தி 'எனக்கு' என்றது உமக்கென்செய்ய" என்று இவள் சொன்னத்தை மிகவும் திருவுள்ளம்பற்றுகையாலே விச்லேஷபிருக்காப்ப்ராவத்தாலே கூற்றம்போன்ற தாயென்னுதல். இப்படியிருக்கிறவள் வசநத்தைக்கொண்டு கொடியவனம்போன. முற்பட்டயோஜனை- நாலூர்பிள்ளை யிட்டருளின வ்யாக்யாநப்ரக்ரியை; பிற்பட்டயோஜனை- ‡ பிள்ளை யிட்டருளின வ்யாக்யாநப்ரக்ரியை. முற்பட்டயோஜனையில், " சென்றுவனம்போகே " என்கிற இதுக்கு ஸ்வரஸார்த்தம் ஸித்திக்கையும், * கூற்றுத்தாய் சொல்லக்கொடிய வநம்போனவிது " தண்டகநூற்றவள் சொற்கொண்டுபோகி " என்றும், " குலக்குமரா காடுறையப் போவென்று விடைகொடுப்ப விலக்குமணன்றன்னோடு மங்கே கியது " என்றும், " கொடியவள்வாய் கடியசொற்கேட்டு - கான்தொடுத்த நெறிபோகி " என்றும் கீழ்மேல் அருளிச்செய்தவற்றுக்குச் சேர்ந்திருக்கையுமுண்டு.

ஸம்ப்ரதாயத்திலும் வந்தால், நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே கேட்ட சிறியாழ்வானப்பிள்ளைகுமாரர் பக்கலிலேகேட்ட நாலூர்பிள்ளை யருளிச்செய்ததாகையாலேவந்த ப்ராபல்யமுண்டு. அவர்தாம் ஆச்சான்பிள்ளை திருத்தமப்பனாராகையாலே, பிள்ளைக்கு பரமாசார்யருமிறே; ஆகையாலே, அந்தயோஜனை முற்படவெழுதி, பிள்ளையருளிச் செய்தயோஜனை பிற்பட எழுதப்பட்டது. இரண்டுயோஜனையிலும், ஸுமித்ரையார், பெருமாள் முகம் பார்த்துச் சொன்னதாகச் சொல்லப்பட்டவசநம் ஸ்ரீராமாயணத்தில் இல்லையேயாகிலும் இதிஹாஸாந்தர புராணாந்தராதிகளிலேயாதல், கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ள[illegible]லும் * மயர்வற மதிநலமருளப் பெற்றவிவர் இப்படி யருளிச்செய்கையாலே.

கோடியவனம்போன. " கன்னிரைந்து தீய்ந்து கழையுடைந்து கால்சுழன்று, பின்னும் திரைவயிற்றுப்பேயே திரிந்துலவாக், கொன்னவிலும் வெங்கானம் " என்னும்படியிறே காட்டின்கொடுமை தானிருப்பது; இப்படியிருக்கிற காட்டிலே, * நைவாயவேல் நெடுங்கண் நேரிழையு மிளங்கோவும் பின்புபோக வெழுந்தருளின. சீற்றமிலாதானை. "கட்டினகாப்போடே காட்டிலே தள்ளிவிட்டாள்" என்னும் சீற்றம் ஏகதேசமும் திருவுள்ளத்திலில்லாதவனை. (க) " [illegible] " என்று - ஸந்தோஷத்தோடேயிறே யெழுந்தருளிற்று. சீதைமணாளனைப்பாடிப்பற. வநவாஸந்தான் ஸரஸமாய்த்தது அவள்கூடப் போகையாலேயிறே. பிராட்டியும் தானும் " ஏகாந்தஸமநுபவிக்கலாம்தேசம் " என்றிறே காடுதன்னை விரும்பிற்று. (உ) " [illegible] " என்றிறேயருளிச்செய்தது. இப்படியிருக்கிறவனைப் பாடிப்பறவென்று ப்ரதிகோடியான வளைப்பார்த்து நியமிக்கிறாள். ... ... ... ௪.

மூ.—பஞ்சவர்தூதனாய்ப் பாரதங்கைசெய்து
நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு

---

‡ பிள்ளையாகிறார்- திருவாய்மொழிப்பிள்ளை. இவர் இப்ரபந்தத்துக்கு ஸ்வாபதேசவ்யாக்யாநமிட்டருளியிருப்பதாகப் பெரியோர் பணிப்பர். (க) "மாச லக்ஷ்மண ஸந்தாபம் கார்ஷீர் லக்ஷ்ம்யாவிபர்யயே-ராஜ்யம்வா வநவாஸோவா வநவாஸோ மஹோதய:" (உ) "நர்சநம் சித்ரகூடஸ்யமந்தாகிந்யாச்ச சோபநே-அதிகம் புரவாஸாச்ச மந்யே தவசதர்சநாத்."

அஞ்சப்பணத்தின்மேற் பாய்ந்திட்டருள்செய்த
அஞ்சனவண்ணனைப்பாடிப்பற யசோதைதன்சிங்கத்தைப்பாடிப்பற. ௫

பதவுரை.

பஞ்சவர்— பஞ்சபாண்டவர்களுக்கு
தூதனாய்— தூதனாய்க்கொண்டு
பாரதம்— பாரதயுத்தத்திலே
கை செய்து— ஸஹகரித்து
நஞ்சு— விஷத்தை
உமிழ்— உமிழாநின்ற
நாகம்— காளியநாகம்
கிடந்த— கிடந்த
நல் பொய்கை— கொடிய பொய்கைக் கரையிலே
புக்கு— போய்ப்புக்கு
அஞ்ச— அவன் அஞ்சும்படி
பணத்தின்மேல்— பணங்களின்மேலே
பாய்ந்திட்டு— குதித்து இளைப்பித்து
(அவ்வளவிலே, அவனும் அவன் மனைவியும் சரணம்புக:)
அருள் செய்த — அவனைக் கொல்லாமல் விட்டவனாய்
அஞ்சனம்— மைபோன்ற
வண்ணனை— வர்ணத்தை யுடையனானவனை பாடிப்பற—;
அசோதை தன் சிங்கத்தைப் பாடிப்பற.

வ்யா. ஐந்தாம்பாட்டு. பஞ்சவர்தூதனாய். தர்மபுத்ராதிகளைவர்க்குத் தூதனாய். இவர்கள் ஐவரினும், இவனை ஏவவுரியரல்லாதார் இல்லைபோலேகாணும். தூதனாய். ஸர்வாதிகனானதான் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோகிறவிடத்தில் புரையற்றிருந்தபடி - [illegible] தன்னைப் பெறும்பேறாகவிறே யிவன்றான் நினைத்திருப்பது. "இன்றார் தூதனென நின்றான்" என்கிறபடியே - "பாண்டவதூதன்" என்கிற ப்ரஸித்தி பெற்றபின்பிறே பாரில் கால்பாவி தரித்துநின்றது. பாரதம்கைசெய்து. "பத்தூர், ஓரூர்" என்றாற்போலே சொன்னவிடத்தில் அவர்கள் ஒன்றுக்கும் இசையாமையாலே, "ஆனால், யுத்தத்தைப் பண்ணி ஜயித்தவர்கள் பூமியாளுங்கோள்" என்று அவர்களை யுத்தத்திலே பொருந்தப் போந்து, பாண்டவர்களுக்காய்நின்று, பாரத ஸமரத்தில் கையுமணியும் வகுத்து யுத்தத்தை நடத்தி. நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு. அருகணைந்த வ்ருக்ஷங்கள் பஸ்மீகரிக்கும்படியும் பக்ஷிகள் பொல்லாப்பட்டுவிழும்படி விஷத்தை யுமிழாநின்ற காளியனாகிற ஸர்ப்பங்கிடந்த * நச்சுமுமிழ் பொய்கையிலேபுக்கு. "நற்பொய்கை" என்றது - "நல்லபாம்பு, நல்லநெருப்பு" என்பனபோலே விபரீதலக்ஷணை. அதவா, காளியன் ப்ரவேசிப்பதுக்கு முன்புத்தை படியையிட்டுச் சொல்லிற்றாகவுமாம். அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள்செய்த. அப்பொய்கையைக் கலக்கி, காளியன் க்ருத்தனாய்த் தலையெடுக்கும்படி பண்ணி, பின்பு அவனஞ்சும்படியாக அவன் பணங்களின்மேலே சென்று குதித்து நின்றாடி அவனையிளைப்பித்து, (க) "[illegible]" என்றும், (உ) "[illegible]" என்றும் - அவனும் அவனுடைய ஸ்த்ரீகளும் சரணம்புகுந்தபின்பு அவன் ப்ராணன்பெற்றுப் போம்படி க்ருபை பண்ணின. அஞ்சனவண்ணனைப்பாடிப்பற. இப்படி சரணாகதரக்ஷணம் பண்ணுகையாலே அஞ்சனம்போன்ற தன் திருமேனிநிறம் ப்ரகாசிக்கும்படி நின்றவனைப் பாடிக்கொண்டுபற. அசோதைதன் சிங்கத்தைப்பாடிப்பற. யசோதைப்பிராட்டி சீராட்டிவளர்க்கையாலே ஸிம்ஹக்கன்றுபோலே செருக்கியிருக்கிறவனைப் பாடிப்பறவென்று எதிரியைப் பார்த்து நியமிக்கிறாள். ... ... ... ... ... ... ... ௫.

(க) " க்ருபாமாத்ரமனோவர்த்தி : ப்ரஸீதமே. "
(உ) " பர்த்ருபிக்ஷாப்ரதியதாம். "

மூ.—முடியோன்றி மூவுலகங்களு மாண்டுன்
னடியேற்கருளென் றவன்பின்றொடர்ந்த
படியில்குணத்துப் பரதநம்பிக்கன்
றடிநிலையீந்தானைப்பாடிப்பற வயோத்தியர்கோமானைப்பாடிப்பற. ௬.

பதவுரை.

முடி சூன்றி— "திருமுடி சூடி
மூ உலகங்களும்—பூமி, சுவர்க்கம், பாதாள மென்கிற மூன்று லோகங்களையும்
ஆண்டு— பரிபாலித்துக்கொண்டு
உன்— தேவரீருடைய
அடியேற்கு— தாஸனானவெனக்கு
அருள்— க்ருபைபண்ணியருளவேணும்"
என்று— என்று ப்ரார்த்தித்து
அவன்பின் தொடர்ந்த — அந்தசக்ரவர்த்தி திருமகன் பின்னே சென்று தொடர்ந்த
படியில்— ஒப்பில்லாத
குணம்— குணங்களை யுடையனான
பரதன் நம்பிக்கு— ஸ்ரீபரதாழ்வானுக்கு
அன்று—அவன் மனம்வருந்தி நின்ற அக்காலத்திலே
அடிநிலை— ஸ்ரீபாதுகைகளை
ஈந்தானை— அளித்தருளினவனை
பாடிப்பற—;
அயோத்தியர்- திருவயோத்தியிலுள்ளார்க்கு
கோமானை— ராஜாவானவனை
பாடிப்பற.

வ்யா. ஆறும்பாட்டு. முடியித்யாதி. சக்ரவர்த்திக்கு சாஸ்த்ரார்த்தங்கள் பண்ணின அன்று தாயிலுபாடு, ராஜகுலத்திலுள்ளாரும் பௌராஜாநபதரும் புரோஹிதரான வஸிஷ்டாதிகளும் எல்லாரும் திரளவிருந்து "பெருமாள் காடேறப்போனார், சக்ரவர்த்தி துஞ்சினான் நாடு அராஜகமாய்க்கிடக்க வொண்ணாது" என்று தன்னை முடிசூட்டுவதாக மங்களாவஹமான அார்யகோஷத்தையும் பண்ணிக்கொண்டிருக்க, அந்தத்வநி கேட்டபோதே கலக்க நோவுபட்டு, (க) "[illegible]" என்கிறபடியே தன்னுற்றுமையெல்லாம் தோற்றும்படி திரளிலேயிருந்து, "ஒருநிசனாக விருந்து என்னுடைய சேஷத்வத்தை அபஹரிப்பதே!" என்று பெருமிடறுசெய்து கூப்பிட்டு, (உ) "[illegible]" என்கிற க்ரமமும் பாராதே, புரோஹிதருன வஸிஷ்டபகவானையும் "அழகிதாக இக்குடிக்கு முன்னோடிஹிதம்பார்த்தாய்" என்று அத்திரளிலே கர்ஹித்து, (௩) "[illegible]" என்று ஒருவனுக்கு இரண்டு வஸ்து சேஷமானுல் ஒன்றை ஒன்று நிர்வஹிக்குமோ; ராஜ்யந்தான் என்னையாண்டாலோ, நாடு அராஜகமாய்க் கிடக்க வொண்ணாது என்கிறவித்தையே பார்க்குமித்தனையோ, இதுக்கு விஷயபூதனான என்னையும் பார்த்து வார்த்தை சொல்லவேண்டாவோ, அவர் போகட்டுப்போன ராஜ்யத்தை அபஹரித்தால், அவரைப்பிரிந்த வநந்தரம் முடிந்தவன் வயிற்றிலே பிறந்தவனும்படி யென்னனை நான்" என்று சொன்னவாறே; "ஆனால் செய்யவடுப்பதென்" என்று அவர்களெல்லாரும் இவன்றன்னைக்கேட்க, "நாமெல்லாரும் கூடப்போய் பெருமாள் திருவடிகளிலே விழு

(க) "விலலாபஸபாமத்யே ஜகர்ஹேச புரோஹிதம்,"
(உ) "நியமாதிக்ரமம் ரஹஸியோதயேத்" (௩) "ராஜ்யஞ்சாஹஞ்சராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி | கதம்தசரதாஜ்ஜாதோ பவேத்ராஜ்யாபஹாரக:,"

ந்து அவரை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம் பண்ணுவிப்போம் வாருங்கோள் " என்று எல்லாரையும் கூடக்கொண்டு திருச்சித்ர கூடத்திலே போய், பெருமாள் திருவடிகளிலே தன்னார்த்தியை முன்னிட்டுச் சரணம்புகுந்து விண்ணப்பஞ்செய்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

முடியொன்றி. முடியைத்தவிர்ந்து சடையைப்புனைந்து நாட்டைவிட்டுக் காட்டிலே யெழுந்தருளின தேவரீர், இக்காட்டையும் தாபஸவேஷத்தையும் விட்டு நாட்டிலே திருவயோத்யையிலே யெழுந்தருளித் திருமுடிசூடி மூவுலகங்களுமாண்டு. (க) " [illegible] " என்கிறபடியே மூன்று லோகத்தையும் ஸநாதமாக்கியாண்டு. உன்னடியேற்கருளென்றவன்பின்தொடர்ந்த. (உ) " [illegible] " என்று ப்ராதாவாய்க் கூறுகொள்ள இருக்கிறவனன்றிக்கே, அகிலரஹஸ்யமும் தேவரீரோடே அதிகரிக்கையாலே சிஷ்யனாய், அவ்வளவுமன்றிக்கே, க்ரயவிக்ரயார்ஹனாம்படி உமக்கு தாஸனாயிருக்கிறவெனக்கு ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணும் என்று அர்த்தித்து, பின்னேசென்று அநுவர்த்தித்த. படியில்குணத்துப் பரதனம்பிக்கு. " இக்குடியில் மூத்தாரிருக்க இளையார் மூடிசூடியறிவாரில்லை " என்ற குலமர்யாதையை நோக்குகையாலும், ஸ்வாதந்த்ர்யபீதியாலே முடிசூட வெருவி, தன்ஸ்வரூபத்தை நோக்குகையாலும், ஆர்த்தியோடே திருவடிகளிலேவந்து விழுந்து " மீண்டு எழுந்தருளி திருவபிஷேகம் பண்ணியருளவேணும் " என்று அர்த்திக்கையாலும், ஒப்பில்லாத குணத்தையுடையனான ஸ்ரீபரதாழ்வானுக்கு. அன்றுமுடிநிலையீந்தானை. அவன் ஆர்த்தனாய் நிற்கிற அக்காலத்திலே, " நீசொல்ல நாம் இப்போது மீண்டோமாகில், நம் ஐயர் சொன்னது செய்யாமல் ராஜ்யச்ரத்தையாலே மீண்டோமாவோம்; நீ நம்மைமீட்டுக்கொண்டு போனாயாகில், ' ஸ்ரீபரதாழ்வான் இரண்டுஞ்செய்ய வல்லனாயிருந்தான், — முன்பு, கீழ்மையை வைத்து தாயைக்கொண்டு ராஜ்யத்தைவாங்கித் தமையனைக் காடேறப்போகவிட்டான்; இப்போது, லோகாபவாதம்முதிர்ந்தவாறே பின்தொடர்ந்துசென்று கண்ணீரைப்பிசைந்து காலிலேவிழுந்து மீட்டுக்கொண்டுவந்தான் ' என்னும் அவத்யமும் உனக்குவரும்; ஆனபின்பு, உன்னை ஸ்வதந்த்ரனாக்கி வார்த்தை சொன்னார் முன்னே, உன்ஸ்வரூபாநுரூபமான பாரதந்த்ர்யத்தைப் பெற்று நீபோ " என்று, அவன் நிர்ப்பந்தியாதபடி வார்த்தைசொல்லி யிசைவித்து, " மாவடியைத்தம்பிக்கு வான்பணையம்வைத்து " என்கிறபடியே அவன் ஸ்வாதந்த்ர்யபயமெல்லாம் போம்படியாகவும், " மீண்டு எழுந்தருளுவர் " என்னுமதுக்கு விச்வாஸமாகவும் திருவடிநிலைகளைக்கொடுத்து * அடிசூடுமரசாக்கி விட்டவனைப் பாடிப்பற. அயோத்தியர் கோமானைப் பாடிப்பற. ஸ்ரீபரதாழ்வான் முடிசூடாமல் அடிசூடிப்போகையாலே திருவயோத்யையிலுள்ளார்க்கு தானேநிர்வாஹகனானவனைப் பாடிப்பற என்று எதிரியைப்பார்த்துச் சொல்லுகிறாள். ... ... ... ... ... ... ௫.

மூ.—காளியன்பொய்கை கலங்கப்பாய்ந்திட்டவன்
நீண்முடியைந்திலு நின்றுநடஞ்செய்து
மீளவவனு க்கருள் செய்தவித்தகன்
தோள்வலிவீரமேபாடிப்பற தூமணிவண்ணனைப்பாடிப்பற. எ.

(க) " த்ரைலோக்யமபிநாதேந யேநஸ்யாந்நாதவத்தரம். " (உ) " ப்ராதுச்சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்துமர்ஹஸி. "

பதவுரை.

காளியன்— காளியனாகும் கிடந்த
பொய்கை— பொய்கையானது
கலங்க— கலங்கும்படி
பாய்ந்திட்டு— சென்று குதித்து
அவன்— அவனுடையதாய்
நீள்— ஆகாசத்தளவும் வளர்ந்திருக்கிற
முடி ஐந்திலும்— ஐந்து பணங்களிலும்
நின்று— மாறிமாறி அடியிட்டுநின்று
நடம் செய்து— கூத்தாடி [படியும்
மீள— (அவன் சரணம்புக்கவளவிலே) மறு
அவனுக்கு— அந்த காளியனுக்கு
அருள் செய்த— திருவுள்ளமிரங்கின
வித்தகன்— விஸ்மயநீயனானவனுடைய
தோள் வலி— புஜபலத்தையும்
வீரம்— வீரப்பாட்டையும்
பாடிப்பற—;
தூ— பழிப்பற்ற
மணி— நீலரத்நம்போன்ற
வண்ணனை— வடிவழகை யுடையவனை
பாடிப்பற.

வ்யா. ஏழாம்பாட்டு. காளியன்பொய்கை. வெறும்புறத்திலே "காளியன்பொய்கை" என்னவமையுங்காணும் அதின் க்ரௌர்யத்துக்கு; "பாம்புப்பாழி" என்னுமா போலே. அணுகின ஸ்தாவர ஜங்கமாதிகளெல்லாம் அழலாலேபட்டு விழும்படியிறே பொய்கையில் விஷத்தினுடைய க்ரௌர்யமிருப்பது. "ஆயிரவாய்நச்சழல் பொய்கை" என்னக் கடவதிறே. கலங்கப்பாய்ந்திட்டு. "காளியன் தடத்தைக்கலக்கி" என்கிறபடியே பொய்கைகலங்கும்படி ஓடிச்சென்று குதித்து. அவனித்யாதி. பொய்கையைக் கலக்கினவாறே அதுக்குள்ளேக் கிடக்கிறவவன் அதிக்ருத்தனாய், தலையையெடுத்து ஆகாசத்திலே வளர்ந்து பணங்களை விரித்துக்கொண்டு நிற்க, அப்பணங்களின் மேலே ஏறி ஐந்துபணங்களிலும் மாறிமாறிநின்று ந்ருத்தஞ்செய்து. மீளவவனுக்கருள் செய்தவித்தகன். (க) "தம்ப்ரபிந்நசிரோக்ரீவமாஸ்யேப்யஸ் ஸ்ருதசோணிதம்" என்கிறபடியே தலைகளும் கழுத்தும்நெரிந்து வாய்களாலே ரக்தம்சொரியும்படி அவன் இளைக்க, தன்னுடைய ப்ராணன் பெறுகைக்காகச் சரணம்புகுந்தவாறே, முன்பு அவனைக் கொல்லநினைத்த கோபத்தைவிட்டு, அவன் ப்ராணன் பெறும்படி, மீண்டு அவனுக்கு ப்ரஸாதத்தைப்பண்ணின விஸ்மயநீயனானவனுடைய. விஸ்மயநீயத்வமாவது-முன்பு,கோபத்துக்கு விஷயமாக்கி முடிக்கநினைத்தவவன்றன்னையே ப்ரஸாதத்துக்கு விஷயமாக்கி ரக்ஷித்த ஆச்சர்யம். தோள்வலிவீரமே பாடிப்பற. இப்படியிருக்கிறவனுடைய, "பாம்பாலாப்புண்டு" என்கிறபடியே காளியன் தன்னுடலாலே நெருங்கச் சுற்றிக் கட்டினவிடத்திலும் அதிலேபடாதே உதறிப்பொகட்டு வாலைப்பிடித்துத்தூக்கி மேலேநின்றாடின தோள்வலியையும் வீரப்பாட்டையும் பாடிப்பற. தூமணியித்யாதி. காளியனுக்கு ப்ராணனைக்கொடுத்துத் தூரத்தி யோட்டிவிட்டு, விஷஜலமான பொய்கையை அம்ருதஜலமாம்படி கடாக்ஷித்து, பசுக்களும் இடையரும் முன்புபோலே தண்ணீர்குடிக்கும்படி பண்ணுகையாலே, பழிப்பற்ற நீலரத்நம்போலே திருமேனியின் அழகுவிளங்கும்படி நின்றவனைப் பாடிப்பற. என்று ப்ரதிகோடியானவளைப்பார்த்து நியமிக்கிறாள். ... ௭.

மூ.—தார்க்கிளந்தம்பிக் கரசீந்துதண்டக
நூற்றவள்சொற்கொண்டு போகிநுடங்கிடைச்
சூர்ப்பணகாவைச் செவியொடுமூக்கவள்
ஆர்க்கவரிந்தானைப் பாடிப்பற அயோத்திக்கரசனைப்பாடிப்பற. ௮.

(க) "தம்ப்ரபிந்நசிரோக்ரீவமாஸ்யேப்யஸ் ஸ்ருதசோணிதம்."

பதவுரை.

தார்க்கு— மாலை இட்டு ராஜ்யம்பண்ணுகைக்கு
இள— தகாத
தம்பிக்கு— தம்பியான ஸ்ரீபரதாழ்வானுக்கு
அரசு ஈந்து— * அடிசூடுமரசைக்கொடுத்து
நாற்றவள் சொல் கொண்டு— விசாரித்த கைகேயியின் சொற்படி
தண்டகம்— தண்டகாரண்யத்தைக்குறித்து
போகி— எழுந்தருளி
நுடங்கு— துவளாநின்ற
இடை— இடையையுடையளான
சூர்ப்பணகாவை— சூர்ப்பணகையை
செவியொடு மூக்கு— காதையும்மூக்கையும்
அவள் ஆர்க்க— அவள் கதறக்கதற
அரிந்தானை— ¶ அறுத்தவனை
பாடிப்பற;
அயோத்திக்கு— திருவயோத்யைக்கு
அரசனை— ராஜாவானவனை
பாடிப்பற.

¶ அறுத்தது இளையபெருமாளாயிருக்க, பெருமாள் அறுத்ததாகச் சொன்னவிது *ராமதக்ஷிணபாஹுத்வ ப்ரயுக்தமான ஐக்யத்தைப்பற்ற.

வ்யா. எட்டாம்பாட்டு. தார்க்கிளந்தம்பிக்கரசீந்து. "அடியிலே சக்ரவர்த்தி அநுமதி உண்டாகையாலும், பெருமாள் உடன்பட்டுப் போகையாலும், நாடு அராஜகமாய்க் கிடக்கவொண்ணாது, நீமுடிசூட வேணும்" என்று வஸிஷ்டாதிகளும் ராஜலோகாதிகளும் அர்த்திக்கையாலும் அபிஷேகம் செய்யலாவதொரு புடையுண்டாயிருக்க, "மூத்தாரிருக்க இளையார்முடி சூடியறிவாரில்லை" என்கிற குலமர்யாதையை நினைத்து, "மாலையிட்டு ராஜ்யம்பண்ணுகைக்கு நான் இளையவன், தமையனாரிருக்க எனக்கு முடிசூட ப்ராப்தியில்லை" என்று மறுத்துத் திருச்சித்ரகூடத் தளவும்வந்து "மீண்டெழுந்தருளவேணும்" என்று அர்த்தித்த தம்பியான ஸ்ரீபரதாழ்வானுக்கு அநுகுணமாக அடிசூடுமரசைக் கொடுத்து.

தண்டகநூற்றவள் சொல்கொண்டு போகி. "ராஜ்யத்தை விடுவித்து தண்டகாரண்யத்திலே போகவிடக் கடவோம்" என்று விசாரித்தவள் சொல்லைக் கைக்கொண்டுபோய். "கூற்றுத்தாய் சொல்லக் கொடியவனம்போன" என்றிறே மேலும் சொல்லிற்று. ஸ்ரீபரதாழ்வானோடே திருச்சித்ரகூடத்தளவும் சென்றவஸிஷ்டாதிகள் தொடக்கமானார், மீளுகைக்குடலாகச் சொன்ன வார்த்தைகளும் கேளாமல், இவள்சொன்னவார்த்தையைத் திருவுள்ளத்திலே கொண்டிறே ஸ்ரீபரதாழ்வானுக்கு அரசீந்து அநந்தரம் தண்டகாரண்யத்தேற வெழுந்தருளிற்று.

நுடங்கிடையித்யாதி. காமரூபிணியாகையாலே ஸ்வவேஷத்தை மறைத்து அத்யந்தாபிமதமானதொரு ஸ்த்ரீவேஷத்தைக்கொண்டு வருகையாலே, நுடங்கின இடையையுடையளான சூர்ப்பணகையை. தன்னழகைக்காட்டி "என்னை விஷயீகரிக்கவேணும்" என்று வந்தவளவில், பிராட்டியைக்காட்டி "நமக்கு இவளொருஸ்த்ரீயுண்டு, அங்கேபோ" என்று இளையபெருமாளைக்காட்ட; அங்கே சென்றவளவிலே, "நான் அவர்க்கு சேஷபூதனாயிருப்பானொருத்தன்; இன்னம் அவர்தம்பக்கலிலேபோ" என்ன; இப்படி உபாலம்பிக்கையாலே அவள் அதிக்ருத்தையாய், பண்டைய வேஷத்தைக்கொண்டு, எடுத்துக்கொண்டு போகப்புக்கவளவிலே, செவியோடேகூட அவள்மூக்கையும், அவள் கதறக்கதற அறுத்தவனை.

(க) "ராமஸ்யதக்ஷிணோ பாஹு:" என்கிறபடியே இளையபெருமாள் கரணபூதராகையாலே அருத்தத்தில் கர்த்ருத்வம் பெருமாளதாகச் சொல்லுகிறது. பாடிப்பற. அயோத்தியிற்பதி. ஸ்ரீபரதாழ்வான் முடிசூடாமையாலும், திருவடிநிலை கொடுத்துப் போருகையாலும், திருவயோத்யைக்குத்தானே ராஜாவானவனைப் பாடிப்பற வென்னுமத்தை அவளை நியமிக்கிறாள்.

மூ.—மாயச்சகட முதைத்து மருதிறுத்
தாயர்களோடுபோ யாநிரைகாத்தணி
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற
ஆயர்களேற்றினைப்பாடிப்பற வாநிரைமேய்த்தானைப்பாடிப்பற. ௯.

பதவுரை.

மாயம்— வஞ்சகத்தையுடைய
சகடம்— சகடாஸுரனை
உதைத்து— கட்டுக்குலையும்படி திருவடிகளாலுதைத்தும்
மருது— யமளார்ஜுநங்களை
இறுத்து— முறித்தும்
ஆயர்களோடு— இடையர்களோடு
போய்— காட்டேறப்போய்
ஆ நிரை— பசுக்களின் திரளை
காத்து— ரக்ஷித்தும்
அணி— அழகிய
வேயின் குழல்— வேய்ங்குழலை
ஊதி— ஊதி
வித்தகனாய் நின்ற— விஸ்மயநீயனாய் நின்ற
ஆயர்கள் ஏற்றினை— இடையர்க்குத் தலைவனானவனை
பாடிப்பற—;
ஆநிரை மேய்த்தானைப் பாடிப்பற—.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. மாயச்சகடமுதைத்து. "கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி" என்கிறபடியே காவலாகவைத்தவிடத்திலே அஸுரர்கள் ஆவேசித்து நலியவருகையாலே பாதகம் என்று தோற்றாதபடி க்ருத்ரிமமான சகடத்தை, ஸ்தந்யார்த்தியாய் நிமிர்த்த திருவடிகளாலே யுதைத்து. அன்றிக்கே, சகடமானது ‡ உருமாயும்படி உதைத்து என்னவுமாம். மருதிறுத்து. தாயார்கட்டிவைத்த உரலையுமிழுத்துக்கொண்டு தவழ்ந்துபோகாநிற்க, நலிவதாக வழியிலேநின்ற இரட்டை மருதுகளின்நடுவே நுழைந்து அப்புறத்தேபோய், உரல் தடைபடுகையாலே அத்தைவலித்துக்கொண்டு அம்மருதுகள் இரண்டுருகும் சாய்ந்து விழும்படி முறித்து. ஆயர்களோடுபோய் ஆநிரைகாத்து. பசுமேய்க்கப்போகிற இடையரோடே அவர்களில் ப்ரதானனாய்க்கொண்டுபோய், புல்லும் தண்ணீருமுள்ளவிடம் பார்த்து வயிறுநிறைய மேய்க்கையாலே பசுநிரையை ரக்ஷித்து. அணிவேயின்குழலூதி வித்தகனாய் நின்ற. நாட்டிற் பசுக்களைப்போலே கேவலம் புல்லும் தண்ணீரும் தாரகமாக வளருமவையன்றிக்கே, குழலோசையே தாரகமாக வளருமவையாகையாலே, அவற்றை மேய்க்கைக்கும் சிதறிப்போகாமல் குவிக்கைக்கும் மீட்கைக்குமாக, அழகிய வேய்ங்குழலையூதி, தன்னுடைய ஸாமர்த்த்யம் தோற்றநின்ற. ஆயர்களேற்றினை. கோபர்க்குத்தலைவனை செருக்கையுடையவனை. பாடிப்பற. ஆநிரைமேய்த்தானை. "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்கிறபடியே- பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் உகந்து பசுநிரைமேய்த்தவனை. பாடிப்பற. என்று எதிரியைப்பார்த்துச் சொல்லுகிறாள். ... ... ... ... ... ... ௯.

(க) "ராமஸ்யதக்ஷிணோ பாஹு:" ‡ இவ்வர்த்தம் சொல்லும்போது "மாய" என்று வினையெச்சமாக்குக.

மூ.—காரார்கடலை யடைத்திட் டிலங்கைபுக்
ஓராதான்பொன்முடி யொன்பதோடொன்றையும்
நேராவவன்றம்பிக்கே நீளரசீந்த
ஆராவமுதனைப்பாடிப்பற வயோத்தியர்வேந்தனைப்பாடிப்பற. ௰.

பதவுரை.

கார் ஆர்- ஆழத்தின் மிகுதியாலே கருமை மிக்கிருந்துள்ள
கடலை— கடலை
அடைத்திட்டு- மலைகளைக் கொண்டடைத்து
இலங்கை புக்கு— லங்கையில் புகுந்து
ஓராதான்- பெருமாள் வீரப்பாட்டை மதியாத ராவணனுடைய
பொன்முடி ஒன்பதோடு ஒன்றையும்— கிரீடம்தரித்த அழகிய பத்துத்தலைகளையும்
நேரா— அறுத்துப் பொகட்டு
அவன் தம்பிக்கே— அவன் தம்பியான விபீஷணனுக்கே
நீள்— நெடுங்காலம் நடக்கும்படி
அரசு— ஆதிராஜ்யத்தை
ஈந்த— கொடுத்தவனாய்
ஆரா— எவ்வளவுகாலம் புஜித்தாலும் த்ருப்திபிறவாத
அமுதனை— அம்ருதம் போல் போக்யனானவனை
பாடிப்பற—;
அயோத்தியர்- அயோத்தியிலுள்ளார்க்கு
வேந்தனை— ராஜாவானவனை
பாடிப்பற—.

வ்யா. பத்தாம்பாட்டு. காரார்கடலையடைத்திட்டு. ஆழத்தின்மிகுதியாலே கருமை மிக்கிருந்துள்ள கடலை, அகடிதகடநாஸாமர்த்யம் தோற்றும்படி, நீரைக்கண்டவாறே ஆழக் கடவமலைகளையிட்டுக் குரங்குகளைக்கொண்டடைத்து. இலங்கைபுக்கு. (க) "லங்காம்ராவணபாலிதாம்" என்கிறபடியே மண்பாடுதானே ஒருவர்க்கும் ப்ரவேசிக்கவரிதாய், அதுக்கு மேலே உள்ளேநின்று நோக்குகிறவனுடைய பலத்தையுமுடைத்தாகையாலே துஷ்ப்ரபமா யிருக்கிற லங்கையிலே, எழுபதுவெள்ளம் வாநரசேனையையுங்கொண்டு சென்றுபுக்கு- ஓராதான்பொன்முடி யொன்பதோடொன்றையும் நேரா. இந்த அதிமாநுஷசேஷ்டிதங்களைக்கண்டு வைத்தும் இவற்றில் ஒன்றையும் நிரூபியாதே, தன்னுடைய வரபலபுஜபலங்களைப் பெருக்க நினைத்து, "தான்போலுமென்றெழுந்தான் தரணியாளன்" என்கிறபடியே - சக்ரவர்த்தி திருமகன் என்னும் வீரப்பாட்டையறியாமல் ஆபாஸனாகநினைத்து, தான் வெல்லுவானாக விருந்த ராவணனுடைய அபிஷேகயுக்தமான அழகையுடைய தலைகளை, திருச்சரங்களாலே, முன்பு, ஒரொருதலையாக அறுத்தாற்போலன்றிக்கே, "காலமிதுவென்றயன்வாளியினால் கதிர்நீண்முடிபத்துமறுத்தமரும்" என்கிறபடியே- "இன்று இவனைமுடிக்கைக்குக்காலம்" என்று, ப்ரஹ்மாஸ்த்ரரூபமான சரத்தாலே, பத்தும் சேர ஒருகாலேவிழும்படி அறுத்துப் பொகட்டு.

அவன்றம்பிக்கே நீளரசீந்த. (உ) "அநுஜோராவணஸ்யாஹம்" என்கிறபடியே ஸ்வநிகர்ஷத்துக்குடலாக, "ராவணன்பின்பிறந்தவன்" என்று சொல்லிக்கொண்டுவந்து திருவடிகளைச்சேர்ந்த ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கே, "*என்னிலங்குநாமத்தளவுமரசு" என்று

(க) "லங்காம்ராவணபாலிதாம்." (உ) "அநுஜோராவணஸ்யாஹம்."

தீர்க்ககாலம் நடக்கும்படி, லங்கைக்கு அரசாகிற ஐச்வர்யத்தைக்கொடுத்த. ஆராவமுதனை. இந்தக்குணத்தாலே ஒருகாலும் த்ர்ப்திபிறவாமல் மேன்மேலென த்ர்ஷ்ணையைவிளைக்கும் அம்ர்தம்போலே, அநுபவிப்பார்க்கு நிரதிசயபோக்யனானவனைப் பாடிப்பற. அயோத்தியர் வேந்தனை. ராவணவதாநந்தரம் மீண்டு எழுந்தருளி, திருவபிஷேகம்பண்ணியிருந்து ஆளுகையாலே, திருவயோத்யையிலுள்ளார்க்கு ராஜாவானவனை. பாடிப்பற. என்று ப்ரதிகோடியானவளை நியமிக்கிறாள். ... ... ... ... க0.

அ. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—நந்தன்மதலையைக் காகுத்தனைநவின்
றுந்திபறந்த வொளியிழையார்கள்சொல்
செந்தமிழ்த் தென்புதுவை விட்டுசித்தன்சொல்
ஐந்தினோடைந்தும் வல்லார்க் கல்லலில்லையே. கக.

பதவுரை.

நந்தன் மதலையை— நந்தகோபன் குமாரனான கண்ணனையும்
காகுத்தனை— ககுத்ஸ்த சக்ரவர்த்தியின் வம்சஸ்தனான சக்ரவர்த்தி திருமகனையும்
நவின்று— ஒருவர்க்கொருவர் எதிரியாய்க் கொண்டு சொல்லி
உந்தி பறந்த — ‡ உந்திபறக்கையாகிற லீலாரஸம் கொண்டாடின
ஒளி— அழகிய
இழையார்கள்— ஆபரணமணிந்த பெண்களுடைய
சொல்— சொல்லை
செம்— செவ்வையையுடைய
தமிழ்— தமிழ் பாஷையாலே
தென்— அழகிய
புதுவை— ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
சொல்— அருளிச்செய்த
ஐந்தினோடு ஐந்தும்— க்ர்ஷ்ணவதார விஷயமான ஐந்தும், ராமாவதார விஷயமான ஐந்துமான இப்பத்தை
வல்லார்க்கு— ஓதவல்லவர்களுக்கு
அல்லல் இல்லை — யாதொரு துன்பமுமில்லை.

‡ "உந்தி- மகளிர் விளையாட்டிலொன்று" என்று தமிழர்.

வ்யா. நந்தன்மதலையைக் காகுத்தனை நவின்று. ஸ்ரீநந்தகோபர் திருமகனையும், ககுத்ஸ்தகுலோத்பவனான சக்ரவர்த்தி திருமகனையும், ஒருவர்க்கொருவர் எதிரியாய்க்கொண்டு சொல்லி. உந்திபறந்த ஒளியிழையார்கள்சொல். உந்திபறக்கையாகிற லீலாரஸம் கொண்டாடின அழகிய ஆபரணாலங்க்ர்தைகளான பெண்களுடைய சொல்லை. செந்தமிழ்த்தென்புதுவை விட்டுசித்தன்சொல். ஆர்ஜவரூபமான த்ராவிடபாஷையாலே, அழகிய ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த. ஐந்தினோடைந்தும்வல்லார்க்கு. க்ர்ஷ்ணவதாரவிஷயமானவைந்தும், ராமாவதாரவிஷயமான வைந்துமான இப்பத்தையும் ஸாபிப்ராயமாக வல்லவர்க்கு. அல்லலில்லையே. ஸாம்ஸாரிகதுக்கமொன்றுமில்லை. ... ... ... கக.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—என்னாதன் என்வில் உருப்பிணி மாற்றுப் பஞ்சவர் முடி காளியன் தார் மாயக் காரார் நந்தன் நெறிந்த.
ஆ - திருமொழி, உஅ - க்கு, பாட்டு - ருO0.

மூன்றும்பத்து - பத்தாந்திருமொழி - நெறிந்த கருங்குழல், ப்ரவேசம்.

அ. கீழிற்றிருமொழியிலே ராமாவதாரகுண சேஷ்டிதங்களை அநுபவித்தவிவர், (க) " [illegible] " என்கிறபடியே அவ்வவதாராநுகுணமாக ஒக்கவந்தவதரித்த பிராட்டி, தன்னுடைய புருஷகாரத்வோபயோகியான க்ருபாபாரதந்த்ர்யா நந்யார்ஹத்வங்களை சேதநரெல்லாருமறிந்து விச்வஸித்துத் தன்னைப்பற்றுகைக்குடலாக, " நம்முடைய அநுஷ்டாநத்தாலே வெளியிடக்கடவோம் " என்று திருவுள்ளம்பற்றி; அதில் ப்ரதமத்திலே தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக, " தண்டகாரண்யத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே ராவணன்பிரித்தான் " என்றொரு வ்யாஜத்தாலே லங்கையிலே யெழுந்தருள, (உ) " [illegible] " என்கிற அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே பெருமாள் இவள்போன விடமறியாமல், இளையபெருமாளும் தாமுமாய்க்கொண்டு தேடித்திரியா நிற்கச்செய்தே, பம்பாதீரத்திலே எழுந்தருளின வளவிலே, மஹாராஜருடைய நியோகத்தாலே ஸ்வவேஷத்தைமறைத்து பரிவ்ராஜகவேஷ பரிக்ரஹம் பண்ணிவந்து முகங்காட்டின திருவடியோடே மூன்றாற உறவுசெய்து, பின்பு அவர்கொடுபோய்ச் சேர்க்க, ராஜ்ய தாரங்களையிழந்து சுரமடைந்து கிடக்கிற மஹாராஜரைக்கண்டு, அவரோடே ஸக்யம் பண்ணி, அநந்தரம் அவர்க்கு விரோதியான வாலியை நிரஸித்து, அவரை ராஜ்ய தாரங்களோடே சேர்த்து வாநராதிபதியாக்கி கிஷ்கிந்தையேறப் போகவிட்டு, இளையதம்பியாரும் தாமுமாகப் பெருமாள் வர்ஷாகால மித்தனையும் மால்யவானிலே யெழுந்தருளியிருக்க, படைவீட்டிலே போனவிவர், பெருமாள் செய்த உபகாரத்தையும் அவருடைய தனிமையையும் மறந்து, விஷயப்ரவணராய் தாரபோகா ஸக்தராயிருந்துவிட, வர்ஷாகாலந்தாக்குப் பின்பு, அவர் வரக்காணாமையாலே (ந) " [illegible] " என்கிறபடியே கனக்க க்லேசித்தருளி இளையபெருமாளைப் பார்த்து, " நீர்போய் வெறுப்பியாகிலும் மஹாராஜரை யழைத்துக் கொண்டுவாரும் " என்றுவிட, அவர் கிஷ்கிந்தாத்வாரத்திலே யெழுந்தருளி ஜ்யாகோஷத்தைப்பண்ண, அத்தைக்கேட்டு மஹாராஜர் நடுங்கி, கழுத்தில் மாலையையும் அறுத்துப் பொகட்டு, காபேயமாகச்சில வ்யாபாரங்களைப்பண்ணி, அருகேநின்ற திருவடியைப்பார்த்து, " இவ்வளவில் நமக்குச் செய்ய வடுப்பதென் ? " என்ன; (ச) " [illegible] " என்று அபராதகாலத்திலே அநுதாபம்பிறந்து மீண்டோமாய், எளியன சில செய்கிறோமல்லோம், தீரக்கழிய அபராதம் பண்ணினபின்பு இனி ஓரஞ்சலி நேராமல் போகாது என்ன; அவ்வளவிலும் தாம் மூன்றுறப் புறப்பட பயப்பட்டு, " இளையபெருமாள் திருவுள்ளத்தில் சிவிட்கை ¶ தாரையைவிட்டு ஆற்றவேணும் " என்றுவ தாரையைப் புறப்படவிட, அவள் (ரு) " [illegible] " இத்யாதிப்படியே இளையபெருமாள் ஸந்நிதியிலே வந்து, இளையபெருமாள் திருவுள்ளத்தில் சிவிட்கு ஆறும்படி வார்த்தைகள் விண்ணப்பஞ்செய்தபின்பு, மஹாராஜர்

(க) " ராகவத்வேபவத்ஸீதா. " (உ) " ஆத்மாநம்மாநுஷம்மந்யே. "

(ந) " காமவ்ருத்தஞ்ச ஸுக்ரீவம் நஷ்டாஞ்ச ஜநகாத்மஜாம் - புத்வாகாலமதீதஞ்ச முமோஹபரமாதுர:. " (ச) க்ருதாபராதஸ்ய ஹிதேநாந்யத்பச்யாம்ய ஹம்க்ஷமம் । அந்தரேணாஞ்ஜலிம்பத்வா லக்ஷ்மணஸ்யப்ரஸாதநாத். " ¶ தாரை- வாலியையும், ஸுக்ரீவபத்நியான தாரையும். (ரு) "ஸாப்ரஸ்கலந்தீ."

இதேதிராமென்று (௧) "கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம்" இத்யாதிப்படியே விசாரிக்கிறவளவிலே, இவன்முன்னேவந்து கையும் அஞ்சலியுமாய் நின்று அநுவர்த்தந பூர்வகமாகச் சிலவார்த்தைகளைச் சொல்ல, அவள்பீதையாய், இவனை "ராவணன்" என்று அதிசங்கை பண்ணி, "இப்படி நலியலாகாதுகாண்" என்று தைந்யமாகப் பலவார்த்தைகளையும் சொல்ல, இவனுடைய அதிசங்கையைத் தீர்க்கைக்காக, பெருமாளருளிச்செய்துவிட்ட அடையாளங்களையெல்லாம் ஸ்பஷ்டமாக இவள் திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பம் செய்து, தான் ராமதூதன் என்னுமிடத்தை யறிவித்து, பின்பு, திருவாழிமோதிரத்தையும் கொடுத்து அவள் திருவுள்ளத்தை மிகவும் உகப்பித்த ப்ரகாரத்தை யநுஸந்தித்து, அதில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலே அவன் அப்போது விண்ணப்பஞ்செய்த அடையாளங்களையும் திருவாழிமோதிரம் கொடுத்தபடியையும், அதுகண்டு அவள் ப்ரீதையான படியையுமெல்லாம் அவனேபேசி யநுபவிக்கிறார்- இத்திருமொழியில். ... ... ... ※

மூ.—நெறிந்தகருங் குழன்மடவாய் நின்னடியேன் விண்ணப்பம்
செறிந்தமணி முடிச்சனகன் சிலையிறுத்துநினைக் கொணர்ந்து
அறிந்தரசு களைகட்ட வருந்தவத்தோ னிடைவிலங்கச்
செறிந்தசிலைகொடு தவத்தைச் சிதைத்ததுமோ ரடையாளம். ௧.

பதவுரை.

நெறிந்த— நெறித்ததாய்
கரு— கறுத்திரா நின்றுள்ள
குழல்— கூந்தலை யுடையளாய்
மடவாய் — மடப்பத்தை யுடையளான பிராட்டியே!
நின்— தேவரீருக்கு
அடியேன்— தாஸனான என்னுடைய
விண்ணப்பம்— விஜ்ஞாபநமாவது;-
செறிந்த— நெருங்கின
மணி— நவரத்நங்களழுத்திச் சமைத்த
முடி— கிரீடத்தை தரித்த
சனகன்— ஜநகராஜரானவர்
சிலை— கந்யாசுல்கமாகவைத்த தநுஸ்ஸை
இறுத்து— முறித்து
நினை— தேவரீரை [ நின்னை ]
கொணர்ந்தது- பரிணயம் செய்துகொண்டு போன சேதியை

அறிந்து— அறிந்து
அரசு— இருபத்தொரு தலைமுறை துஷ்ட ராஜாக்களாகிற
களை கட்ட— களையைப் பிடுங்கினவனும்
அரு— ஒருவர்க்கும் செய்யவொண்ணாத
தவத்தோன்— தபஸ்ஸையுடையனுன பரசுராமனானவன்
இடை— நடுவழியிலே
விலங்க— தகைய [ குத் தகுந்த
செறிந்த— அவன் கர்வபங்கம் செய்தற்
சிலை கொடு— வில்லைக் கொண்டு
தவத்தை— அவன் தபஸ்ஸை
சிதைத்ததும்— அறுத்ததும்
ஓர் அடையாளம்— ( அடியேன் பெருமாளுடைய அடியானென்று தேவரீர் அறிதற்கு ) ஓரடையாளம்.

வ்யா. முதற்பாட்டு. நெறிந்தகருங்குழல்மடவாய். நெறித்துக்கருகின குழலையும் மடப்பத்தையு முடையவளே. கோமளமிராயிராதே, சுருண்டு கடையளவும் செல்ல

(௧) "கிந்நுஸ்யாச் சித்தமோஹோயம்."

இருண்டிருக்கையிறே குழலுக்கு ஏற்றம். இதுதான் பூர்வத்திற் படியையிட்டுச் சொல்லுகிறபடி. (க) "நீலநாகாபயா வேண்யா ஜகநம் கதயைகயா" என்னும்படியிறே இப்போது கிடக்கிறது. நாயகரான பெருமாளோடேகூடிச் செவ்வைதோற்றச் செருக்கியிருக்கப்ராப்தையாயிருக்க, அவரைப்பிரிந்து, க்லேசத்தாலே துவண்டு ஒடுங்கியிருக்கிற படியைப்பற்ற "மடவாய்" என்கிறான். அதவா, மடப்பமாவது - பற்றிற்று விடாமையாய், இங்கேயிருக்கச் செய்தேயும் (உ) "அஸ்யா தேவ்யா மநஸ் தஸ்மிந்" என்கிறபடியே பெருமாளையே நினைத்துக்கொண்டு மற்றொன்றறியாம லிருக்கிறபடியைச் சொல்லுகிறானாகவுமாம். நின்னடியேன் விண்ணப்பம். (ங) "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய" என்று - பெருமாளுக்கு அடியனானபோதே இவளுக்கு மடியனாகையாலே, உனக்கடியனான வென்னுடைய விண்ணப்பமென்கிறான். இத்தால் - உனக்கு அடியனான நான் விண்ணப்பஞ்செய்கிற வார்த்தையைக் கேட்டருளவேணுமென்கை.

செறிந்தமணி முடிச்சனகன் சிலையிறுத்து. நெருங்கின ரத்நங்களோடேகூடின அபிஷேகத்தையுடைய ஜநகராஜன், தேவரீருக்கு சுல்கமாகவிட்ட வில்லை முறித்து. "இந்த வில்லை வளைத்தார்க்கு இவளைக்கொடுக்கக்கடவோம்" என்று வீர்யசுல்கமாக அவன் கல்பித்துவைத்த வில்லிறேயது. அப்படியிருக்கிறவில்லை வளைக்கத்தானும் லோகத்தில் ஆளின்றிக்கேயிருக்க, இருக்கையில் பலத்துக்கு இலக்குப்போராமையாலே அத்தைமுறித்து. நினைக்கொணர்ந்ததறிந்து. இந்தவீரப்பாட்டைக்கண்டு, (ச) "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ: ப்ரதீச்சசைநாம் பத்ரந்தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா" என்கிறபடியே- "இவளைக் கைக்கொண்டருளவேணும்" என்றுஸமர்ப்பிக்க, தேவரீரை பாணிக்ரஹணம்பண்ணிக்கொண்டு போந்தசேதியை யறிந்து. அரசுகளைக்கட்ட அருந்தவத்தோனிடைவிலங்க. இருபத்தொருபடிகால் துஷ்டக்ஷத்ரியரான ராஜாக்களாகிற களையை நிரஸித்தவனாய், ஒருவரால் செய்யவொண்ணாத தபஸ்ஸையுடையனாயிருந்துள்ள பரசுராமன், திருவயோத்யைக்கு எழுந்தருளாநிற்கச்செய்தே இடைவழியிலே "என்வில்வலி கண்டுபோ" என்று வந்துதகைய. "விலங்க" என்றது- விலக்கவென்றபடி. செறிந்தவித்யாதி. அவன் கையிலின்றும் வாங்கினதாயிருக்கச்செய்தேயும், வைஷ்ணவமான தநுஸ்ஸாகையாலே இத்தலைக்கநுரூபமாயிருக்கிற வில்லைக்கொண்டு அவனுடைய தபோபங்கத்தைப் பண்ணிவிட்டது மோரடையாளம். "தவத்தைச் சிதைத்த தடையாளம்" என்னாதே "சிதைத்ததுமோரடையாளம்" என்கையாலே- இன்னமும் பலவடையாளங்களும் சொல்லுவதாக நினைத்துச்சொல்லுகிறானென்னுமிடந்தோற்றுகிறது. சங்காநிவ்ருத்தி பிறக்குமளவும் சொல்லவேணுமிறே. ... ... க.

மூ—அல்லியம்பூமலர்க்கோதா யடிபணிந்தேன் விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே
எல்லியம்போ தினிதிருத்த லிருந்ததோ ரிடவகையில்
மல்லிகைமா மாலைகொண்டங் கார்த்ததுமோ ரடையாளம். உ.

(க) "நீலநாகாபயாவேண்யா ஜகநம்கதயைகயா." (உ) "அஸ்யாதேவ்யாமநஸ்தஸ்மிந்." (ங) "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய." (ச) "இயம்ஸீதாமமஸுதா ஸஹதர்மசரீதவ - ப்ரதீச்சசைநாம் பத்ரந்தேபாணிம் க்ருஹ்ணீஷ்வபாணிநா."

அல்லி— உள்ளிதழ் விளங்கும்படி
மலர்— அலர்ந்த
அம்— அழகிய
கோதாய்— ( பூமாலால் தொடுக்கப்பட்ட ) மாலைபோலே யிருப்பவளாய்
துணை மலர் — இரண்டு தாமரை மலர் போன்ற
கண்— கண்களையும்
மடம்— மடப்பத்தையு முடைய
மானே— மான் போன்றவளே!
அடி— தேவரீர் திருவடிகளிலே
பணிந்தேன்— பணிந்த என்னுடைய
விண்ணப்பம்— விஜ்ஞாபநத்தை
சொல்லுகேன்— சொல்லுகின்றேன்,
கேட்டருளாய் — தேவரீர் கேட்டருள வேணும்;
எல்லியம்போது— இராக்காலத்திலே
இனிது இருத்தல்— பெருமாளும் தேவரீருமினிய இருப்பாக
இருந்தது ஓர்— இருந்ததொரு
இடவகையில்— ஸ்தலத்திலே
மா— சிறந்த [ லையக் கொண்டு
மல்லிகைமாலை கொண்டு— மல்லிகைமாலை
அங்கு— அவ்விடத்திலேயே
ஆர்த்ததும்— கட்டிவைத்ததும்
ஓர் அடையாளம்.

வ்யா. இரண்டாம்பாட்டு. அல்லியம்பூமலர்க்கோதாய். அல்லிதோன்றும்படி விகஸிதமான அழகியபூவாலே கட்டப்பட்ட மாலைபோலே யிருக்கிறவளே. இத்தால் திருமேனியுடைய தநுத்வத்தையும், மார்த்தவத்தையும், ஸுவட்கியையும் சொல்லுகிறது. அடிபணிந்தேன் விண்ணப்பம். என்னுடைய ஸ்வரூபாநுரூபமாக தேவரீர் திருவடிகளிலே வணங்கி, அடையடைந்த ப்ரயோஜநம் பெற்றேன், இனி வ்யாபணடைந்த ப்ரயோஜநம் பெறும்படி விண்ணப்பம் செய்யத்தக்கதொன்றுண்டு என்ன; அதுகேட்கையிலுண்டான ஆதராதிரேகத்தாலே கடாக்ஷித்துக்கொண்டிருக்கிறபடியைக்கண்டு 'துணைமலர்க்கண்மடமானே - சொல்லுகேன் கேட்டருளாய்' என்கிறான். என்பக்கல் வாத்ஸல்யந்தோன்ற என்னைக்கடாக்ஷித்துக்கொண்டிருக்கையாலும் பவ்யதையாலும் இணைமலர்போலே யிருக்கிற கண்களையுடையளாய், மடப்பத்தையு முடைத்தான மான்போலே யிருக்கிறவளே! அந்த விண்ணப்பந்தன்னைச்சொல்லுகிறேன் கேட்டருளவேணுமென்கை. மேல் - அது தன்னைச்சொல்லுகிறான் எல்லியித்யாதி. ராத்ரிகாலத்திலே பெருமாளும் தேவரீருமாய் ஏகாந்தமானவிருப்பாக இருந்ததொரு ஸ்தலத்திலே.மல்லிகையித்யாதி. ச்லாக்யமான மல்லிகைமாலையைக்கொண்டு பெருமாளை பந்தித்துவைத்ததும் ஓரடையாளம். பெருமாளுடையப்ரணயித்வ பாரதந்த்ர்யப்ரயுக்தமாய் போககசையில் நடப்பதொரு ஸமாய்த்து இது; ஆகையாலே, அல்லாத வடையாளங்கள் போலன்றிக்கே, அத்யந்தரஹஸ்யமாயிருப்ப தொன்றிறே இதுதான். (க) "ஸமாத்வா தசரதத்ராஹம் ராகவஸ்யநிவேசநே । புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ" என்று இவள் தானும் பெருமாளுடனிருந்ததனையிறே. ... ... ... ... உ..

௩.—கலக்கியமாமனத்தனளாய்க் கைகேயிவரம்வேண்ட
மலக்கியமாமனத்தனனாய் மன்னவனுமறாதொழியக்
குலக்குமராகாடுறையப் போவென்றுவிடைகொடுப்ப
இலக்குமணன்றன்னோடு மங்கேகியதோரடையாளம். ௩.

(க) " ஸமாத்வா தசரதத்ராஹம் ராகவஸ்யநிவேசநே - புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ . "

பதவுரை.

கைகேயி— கைகேயியானவள்
கலக்கிய— கூனியாலே கலக்கப்பட்ட
மா— பெரிய
மனத்தனளாய்— மநஸ்ஸையுடையளாய்க் [கொண்டு
வரம் வேண்ட— ராமவநவாஸமும், பரத ராஜ்யாபிஷேகமுமாகிற இரண்டுவரங் களையு மிப்போதே நிறைவேற்ற வே ணுமென்று கேட்க,
மன்னவனும்— தசரத சக்ரவர்த்தியும்
மலக்கிய— மலக்கப்பட்ட
மா— கம்பீரமான
மனத்தனனாய்— மநஸ்ஸையுடையனாய்க் [கொண்டு
மறுதொழிய— மறுக்கமாட்டாமல் சோகித் துக் கிடக்கச் செய்தே
( ஸுமந்த்ரனைக்கொண்டு பெருமானை அழைப்பித்து, )
குலம் குமரா — இக்குலம் விளங்கவந்து பிறந்த குமாரனே!
காடு உறைய போ என்று — வநவாஸார்த்தமாகப் போ வென்று
விடை கொடுப்ப— நியமிக்க
இலக்குமணன் தன்னோடு— இளையபெருமா [ளோடே
அங்கு— தண்டகாரண்யத்திலே
ஏகியது— எழுந்தருளினதும்
ஓர் அடையாளம்.

வ்யா. மூன்றும்பாட்டு. கலக்கியமாமனத்தனளாய். கூப்ஜையாலே கலக்கப்பட்ட பெரியமநஸ்ஸை யுடையளாய். முன்பு, புத்ரனை ஸ்ரீபரதாழ்வானிலுங் காட்டில் பெருமாள் பக்கல் ஸ்நேஹிநியாய், பர்த்தாவான சக்ரவர்த்தியினுடைய ப்ரியமேசெய்து போந்தவளாகையாலே "பெரியமநஸ்ஸை யுடையவள்" என்கிறது. இப்படியிருக்கிற மநஸ்ஸை, மந்தரம் கடலைக் கலக்கினாற்போலே காணும் - மந்தரை கலக்கினபடி. அதாவது - முற்பட இவள் சொன்னவை எல்லாம் அநிஷ்டமாய், "இப்படி சொல்லலாகாதுகாண்" என்று பெருமாள்பக்கல் தனக்குண்டான ஸ்நேஹத்தைச் சொல்லியும் பெருமாளுடைய குணங்களைச் சொல்லியு மிருந்தவளை, உத்தரோத்தரம் தான் சொல்லுகிற வசநங்களாலே பெருமாள் பக்கல் ஸ்நேஹத்தைக் குலைத்து, "அவனை அபிஷேகம் பண்ணவொண்ணாது, என் மகனை யபிஷேகம் பண்ணவேணும்" என்று சொல்லும்படி யாக்கினாள் இவளையிறே. கைகேயிவரம்வேண்ட. இப்படி கலக்கப்பட்ட மநஸ்ஸையுடையளாய்க் கொண்டு, கைகேயியானவள், தனக்குமுன்பே தருவதாகச் சொல்லிக்கிடக்கிற வரமிரண்டையும் இப்போது தரவேணுமென்னும் - அதுதான் பதினாலுஸம்வத்ஸரம் பெருமாளைக் காட்டிலே போகவிடுகையும், ஸ்வபுத்ரனை பரதனை அபிஷேகம் பண்ணுகையும் என்றுசொல்லி அபேக்ஷிக்க.

மலக்கியவித்யாதி. அதுக்கு அவன் இசையாமையாலே, அறுபதினாயிரமாண்டு ஸத்யப்ரதிஜ்ஞனாய்ப் போந்தநீ, இப்போது அஸத்யப்ரதிஜ்ஞனானாயோ வென்றும், நீ இது செய்யாயாகில் நான் என் ப்ராணனை விடுவேன் என்றும் அதிகுபிதையாய்க் கொண்டு இவள் சொன்ன சொலவுகளாலே மலக்கப்பட்ட மஹா மநஸ்ஸை யுடையனாய்க் கொண்டு, ராஜாவானவனும் மறுக்கமாட்டாதொழிய. "மாமனத்தனனாய்" என்றது - அறுபதினாயிரமாண்டு வஸிஷ்டாதிகளை ஸேவித்து தர்மாதர்மங்களெல்லாமறிந்து, ராஜ்யத்தில் ஒருவர் ஒருபழுதும் செய்யாதபடி நோக்கிக்கொண்டு போந்தவனாகையாலே, ஒருவரால் கலக்கவொண்ணாதபடியான மநஸ்ஸில் இடமுடையவனென்றபடி. இப்படியிருக்கிற மநஸ்ஸையும் தன்னுடைய உக்திசேஷ்டிதங்களாலே "என்செய்வோம்" என்று தெகுடாடும்படி பண்ணினாளாய்த்து கைகேயி. மந்தரை தன்மநஸ்ஸைக் கலக்கினாற்போலேயாய்த்து - இவள் அவன் மநஸ்ஸைத்

கலக்கினபடி. இப்படியான மநஸ்ஸையுடையனாய், இவள் சொன்னதுக்கு மறுத்து ஒன்றும் சொல்லமாட்டாதிருக்க.

குலக்குமரா காடுறையப்போவென்று விடைகொடுப்ப. மறுக்கமாட்டாமையாலே ராஜாவானவன் சோகித்துக் கிடக்கச்செய்தே, பெருமாளையழைத்துக்கொண்டுவாவென்று ஸுமந்த்ரனைப் பார்த்துச் சொல்லுவதாக நினைத்து, சோகவேகத்தாலே அதுதானும் மாட்டாதொழிய, இவள் அருகேயிருந்து, "ராஜா ராத்ரியெல்லாம் உத்ஸவ பராக்காலே நித்ரையற்றிருக்கையாலே ச்ராந்தராய், சற்று உறங்குகிறார்; நீ கடுகப்போய் பெருமாளையழைத்துக்கொண்டுவா" என்றுபோகவிடுகையாலே, அவன் போய், பெருமாளை யெழுந்தருளுவித்துக்கொண்டு வந்தவளவில், பிதாவானவன் சோகித்துக் கிடக்கிறபடியைக் கண்டு, "இது க்கடியென்" என்று க்லேசப்பட்டுக் கேட்டவாறே "முன்பே எனக்கு இரண்டுவரம் தந்திருப்பர்; அதிரண்டும் எனக்கு இப்போது தரவேணும்; அதாவது - பதினாலுஸம்வத்ஸரம் உம்மைக் காட்டிலே போகவிடவேணும்; பரதனை அபிஷேகம் செய்யவேணும் என்று நான் சொன்னேன்; * ஸத்யதர்மபராயணனாகையாலே மறுக்கமாட்டாமல் அநுமதிசெய்து, உம்மைக் காட்டிலே போகவிடுவதாக அழைத்துவிட்டார்; உம்மைக்கண்டவாறே வாய்திறந்து சொல்லமாட்டாமல் கிடக்கிறார் காணும்" என்ன; "என்னை நியமிக்கும் போதைக்கும் இப்படி க்லேசிக்கவேணுமோ? யாதொன்று திருவுள்ளமானபடி செய்யேனோ நான்" என்ன; "ஆனால், அவர்க்காக நான் சொல்லுகிறேன், இக்குலம் விளங்கவந்து பிறந்த குமாரரான நீர், உங்கள் ஐயரை ஸத்யப்ரதிஜ்ஞராக்கவேண்டியிருந்தீராகில், அவருடைய வசநபரிபாலகராய்க் கொண்டு வநவாஸம் பண்ணும்படியாகப்போம்" என்று போக்கிலே ஒருப்படுத்த. இலக்குமணன் றன்னொடுமங்கேகிய தோரடையாளம். (க) "ப்ராகேவது மஹாபாகஸ் ஸௌமித்ரிர் மித்ரநந்தந: - பூர்வஜஸ்யா[illegible] [illegible] நுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத:" என்கிறபடியே - தாம் புறப்படுவதுக்கு முன்னே, கூடப்போவதாக மரவுரிசாத்தி ஒருப்பட்டு நிற்கிற இளையபெருமாளோடே காடேற வெழுந்தருளினது ஓரடையாளம். ஏகுதல் - போகை. ... ... ... ... ... ... ௩.

மு.—வாரணிந்தமுலைமடவாய் வைதேவீ விண்ணப்பம்
தேரணிந்தவயோத்தியர்கோன் பெருந்தேவீ கேட்டருளாய்
கூரணிந்தவேல்வலவன் குகனோடுங் கங்கைதன்னில்
சீரணிந்ததோழமைக் கொண்டதுமோ ரடையாளம். ௪.

பதவுரை.

வார் அணிந்த— கச்சை அணிந்த
முலை— முலையையுடையளாய்
மடவாய் — மடப்பத்தை யுடையளாய்
வைதேவீ—விதேஹராஜன் திருமகளாய்

தேர்— தேர்களாலே
அணிந்த— அலங்கரிக்கப்பட்ட [ர்க்கு
அயோத்தியர் — அயோத்யையிலுள்ளா
கோன்— ஸ்வாமியான பெருமாளுடைய

(க) "ப்ராகேவது மஹாபாகஸ் ஸௌமித்ரிர் மித்ரநந்தந: - பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத:."

பெரு— பெருமைக்குத் தக்கவளான
தேவீ— தேவி!
விண்ணப்பம் கேட்டருளாய்—;
கூர் அணிந்த— மிகக்கூர்மையையுடைய
வேல்— வேல் தொழிலில்
வலவன்— வல்லவனை

குகனோடும்— ஸ்ரீ குஹப் பெருமாளோடே
கங்கை தன்னில்— கங்கைக்கரையிலுள்ள
சர்ங்கிபேர புரத்திலே
சீர் அணிந்த— சீர்மை மிகுந்த
தோழமை— ஸ்நேஹத்தை
கொண்டதும்— கொண்டதும்
ஓர் அடையாளம்.

வ்யா. நான்காம்பாட்டு. வாரணிந்தமுலைமடவாய். கச்சணிந்தமுலைகளையும் மடப்பத்தையுமுடையவளே. ராஜாக்களுக்கு போக்யமானவஸ்துக்கள்கொண்டுதிரிவார், பிறர் கண்படாதபடி கட்டி முத்ரையிட்டுக்கொண்டு திரியுமாபோலே, "பெருமாளுக்கு போக்யமானவிவை பிறர்கண்படவொண்ணாது" என்னுமத்தாலேயாய்த்து- இவள் கச்சிட்டுக்கட்டி மறைத்துக்கொண்டிருப்பது. இப்படி இருந்த முலைகள் இப்போது வெறும்புறத்திலே இருப்பதே! என்று க்லேசித்துச் சொல்லுகிறுளுதல்; அன்றிக்கே, கச்சாலே அடக்கி ஆளவேண்டும்படி பரிணதமாய்த் தளைத்திருக்குமவை, இப்போது (க) "உபவாஸக்ருஶாம்" என்கிறபடியே திருமேனியிளைக்கையாலே சோஷித்திருக்கிறபடியைப்பற்றச் சொல்லுகிறுளுதல். "மடவாய்" என்றது ஸ்த்ரீத்வத்தால்வந்த ஒடுக்கமன்றிக்கே, பிரிவாற்றுமையால் வந்த துவட்சியைப்பற்றச் சொல்லுகிறுளுதல்; அன்றிக்கே, மடப்பமாவது- பற்றிற்றுவிடாமையாய், அநவரதம் பெருமாளளவிலே திருவுள்ளமாய், மற்றென்றறியா திருக்கிறபடியைப் பற்றச் சொல்லுகிறுளுதல். வைதேவீ. விதேஹபுத்ரியானவளே. இப்படிதேஹத்தையுபேக்ஷித்திருக்கலாய்த்து இக்குடியில் பிறப்பிறேயென்கை. தேரணிந்தவயோத்தியர்கோன் பெருந்தேவீ. தேர்களாலே அலங்க்ருதமான திருவயோத்யையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெருமாளுடைய பெருமைக்குத்தகுதியானதேவீ. (உ) "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோர்ஹதி வைதேஹீம் தம்சேயமஸிதேக்ஷணா" என்னக்கடவதிறே. அல்லது ஒரு சிறுத்தேவியுண்டாய், பெருந்தேவியென்கிறதன்றே; பெருமாள் ஏகதாரவ்ரதராகையாலே. விண்ணப்பம் கேட்டருளாய். நான் விண்ணப்பஞ்செய்கிற வித்தைக் கேட்டருளவேணும். கூரணிந்தவேல்வலவன். மிகக்கூர்மையையுடைய வேல்தொழிலில் வல்லவன். ஸ்ரீகுஹப்பெருமாள் வேல்வாங்கினுனென்றல் சத்ருபக்ஷம் மண்ணுண்ணும்படியாய்த்து இவருடைய சௌர்யமிருப்பது. குகனோடேித்யாதி. இப்படிவேலுங்கையுமாய்த் திரியுமதொழிய, "ஏழைஏதலன்" இத்யாதிப்படியே - அபிஜநவித்யா வ்ருத்தங்களொன்றுமில்லாத ஸ்ரீகுஹப் பெருமாளோடே கங்காதீரமான ச்ருங்கிபேரபுரத்திலே "மாழைமான்மடநோக்கி உன்தோழி உம்பியெம்பி தோழன் நீயெனக்கு" என்றருளிச்செய்தபடியே குணத்தோடே கூடின தோழமை கொண்டதும் ஓரடையாளம். ... ௪.

மூ.—மானமருமென்னேக்கி வைதேவீவிண்ணப்பம்
கானமருங்கல்லதர்போய்க் காடுறைந்தகாலத்துத்
தேனமரும்பொழிற்சாரற் சித்திரகூடத்திருப்பப்
பான்மொழியாய் பரதனம்பிபணிந்ததுமோ ரடையாளம். ௫.

---

(க) "உபவாஸக்ர்சாம்." (உ) "துல்யசீலவயோவ்ர்த்தாம் துல்யாபிஜநலக்ஷணாம்- ராகவோர்ஹதிவைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணு."

பதவுரை.

மான் அமரும்— மான்பேடை போன்ற
மென்— மெல்லிய
நோக்கி— நோக்கையுடையளாய்
வைதேவீ— விதேஹ ராஜபுத்ரியாய்
பால்— பால்போலே போக்யமான
மொழியாய்— மொழியை யுடையவளே!
விண்ணப்பம்—;
கான் அமரும்— காடு செறிந்திருப்பதாய்
கல் அதர்— * கல் நிரைந்து கிடப்பதான வழியிலே
போய்— எழுந்தருளி
காடு உறைந்த காலத்து— வநவாஸம் பண்ணின காலத்திலே
தேன் அமரும்— தேன் நிறைந்த
பொழில்— சோலைகளோடு சேர்ந்த
சாரல்— தாழ்வரையை யுடைய
சித்திர கூடத்து— சித்ரகூட பர்வதத்திலே
இருப்ப— எழுந்தருளியிருக்கச் செய்தே
நம்பி— பாரதந்த்ர்யத்தால் பூர்ணனான
பரதன்— பரதாழ்வான்
பணிந்ததும்— "மீண்டெழுந்தருளவேணும்" மென்று ப்ரபத்தி பண்ணினதும்
ஓர் அடையாளம்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. மானமருமித்யாதி. மானோடொத்திருந்துள்ள ம்ருதுவான நோக்கை யுடையளாய், விதேஹ ராஜாவினுடைய புத்ரியானவளே. இத்தால் (க)"[illegible]" என்கிறபடியே - தன்னினத்தைப் பிரிந்து அநேகம் நாய்களினுடைய திரள்களாலே வளைக்கப்பட்டு நடுவேநின்று மலங்கமலங்க விழிப்பதொரு மான்பேடை போலே, அநுகூலஜநத்தின் முகத்திலே விழிக்கப்பெறாமல் ப்ரதிகூலமான ராக்ஷஸிகளைத் தைப் பார்த்துக்கொண்டிருக்கிற விருப்பையும், அவர்களுடைய தர்ஜநபர்த்ஸநங்களாலே உளைந்து வேண்டியுக்ரதநோத்யுக்தையாம்படி தேஹத்தையுபேக்ஷித்தபடியையும் சொல்லுகிறது. விண்ணப்பம். அடியேன் விண்ணப்பம் செய்கிறவார்த்தையைத் திருவுள்ளம்பற்றியருளவேணும்.

கானமருமித்யாதி. காடுசெறிந்திருப்பதாய் * கல்நிரைந்து கிடப்பதானவழியிலே திருவடிகளின் மார்த்தவம்பாராதேபோய் வநவாஸம்பண்ணினகாலத்திலே. தேனமருமித்யாதி. வண்டுகள்மாறாமல் பொருந்திக்கிடக்கிற பொழில்களோடுசேர்ந்த பர்யந்தத்தையுடைய சித்ரகூட பர்வதத்திலே.(உ) "[illegible]" என்கிறபடியே இளையபெருமாள் சமைத்த பர்ணசாலையிலே யெழுந்தருளியிராநிற்க. பான்மொழியாய், பால்போலே ரஸாவஹமான பேச்சையுடையவளே. இதுக்குமுன்பு இவள்சொன்ன வார்த்தைகளில் ரஸ்யதையாலும் இது கேட்கையிலுண்டான ஆதரத்தாலும் சொல்லுகிறான். பரதனம்பி பணிந்தது மோரடையாளம். பாரதந்த்ர்யத்தால் பூர்ணனான ஸ்ரீபரதாழ்வான்வந்து "மீண்டு எழுந்தருளவேணும்" என்று ப்ரபத்திபண்ணினது மோரடையாளம். ... ... ... ரு.

(க) "ப்ரியஞ்ஜநமபச்யந்தீம் பச்யந்தீம்ராக்ஷஸீகணம் - ஸ்வகணேநஹீநாம் த்வகணேநாவர்தாமிவ." (உ) "உடஜேராமமாஸீநம் ஜடாமண்டலதாரிணம் - க்ருஷ்ணாஜிநதரம் தந்துசீரவல்கலவாஸஸம்."

படியே ஒருதர்ப்பத்தைப் பிடுங்கி, அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தை யோஜித்து, அத்தை அந்த காகத்தின்மேலே செலுத்திவிட. அனைத்துலகும் திரிந்தோடி. அந்த அஸ்த்ரம் மந்தகதியாகவிடு கையாலே பின்தொடர்ந்து செல்ல, அத்தைத்தப்பவழிதேட, (க) "ஸபித்ராசபரித்யக்த ஸ்ஸுரைச்சஸமஹர்ஷிபி꞉ । த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய" என்கிறபடியே மூன்று பித்ர்க்ருஹத்திலே சென்றவளவில், பிதாவாலும் மாதாவாலும் கைவிடப்பட்டு, பந்துக்களானவர்கள்தான் கைக்கொள்ளுவார்களோவென்று அவர்கள்பக்கலிலே சென்றவளவில் அவர்களாலும் பரித்யக்தனாய், ஆர்சம்ஸ்ய ப்ரதாநரான ரிஷிகள்தான் கைக்கொள்ளுவர்களோவென்று அவர்கள் பக்கலிலே சென்றவளவில் அவர்களும் கைவிடுகையாலே, திறந்துகிடந்த வாசல்கள்தோறும் ஒருகால் நுழைந்தாற்போலே ஒன்பதின்கால் நுழைந்து மூன்று லோகங்களையும் வளைய ஓடித்திரிந்தவிடத்திலும், ஒருவரும் கைக்கொள்ளாமையாலே (உ) "தமேவசரணங்கத꞉" என்கிறபடியே சிறிதும் காலைக்கட்டிக்கொள்ளலாம்படியிருக்கும் க்ர்பாவானாகையாலே விஸ்மயநீயனாய், எல்லாரையும் குணத்தாலே ரமிப்பிக்கவல்லவனே! என்று சரண்யனான பெருமாள்குணத்தைச்சொல்லி, "ஓ!" என்று தன்னுடைய அநந்யகதித்வத்தை முன்னிட்டுக்கொண்டு "உனக்கு அபயம்" என்று சரணாகதனானமை தோற்றக்கூப்பிட. அத்திரமேயித்யாதி. இப்படி சரணம் புகுகையாலே (௩) "ஸதம்நிபதிதம்பூமௌ சரண்யச்சரணாகதம் । வதார்ஹமபிகாகுத்ஸ்த꞉ க்ருபயாபர்யபாலயத்" என்கிறபடியே க்ருபையாலே பெருமாள் ரக்ஷித்தருளுகிறவளவில், காகத்துக்கு ப்ராணப்ரதாநம்பண்ணி அஸ்த்ரத்துக்கு ஒருகண்ணழிவு கற்பிக்கையாலே, முன்பு தலையறுப்பதாகத் தொடர்ந்த அஸ்த்ரந்தானே அதினுடைய ஒருகண்ணை யறுத்துவிட்டதும் ஓரடையாளம். ... ... ... ... ... ௬.

மூ.—மின்னொத்தநுண்ணிடையாய் மெய்யடியேன் விண்ணப்பம்

பொன்னொத்தமானொன்று புகுந்தினிதுவிளையாட

நின்னன்பின்வழிநின்று சிலைபிடித் தெம்பிரானேகப்

பின்னேயங்கிலக்குமணன் பிரிந்ததுமோ ரடையாளம். ௭.

பதவுரை.

மின் ஒத்த— மின்னோடொத்திருக்கிற
நுண்— நுண்ணிய
இடையாய்— இடையை உடையவளே!
மெய்— குற்றமற்ற
அடியேன்— சேஷபூதனான நான் செய்கிற
விண்ணப்பம்— விண்ணப்பத்தைக் கேட்டருளவேணும்;
பொன் ஒத்த— பொன்போன்ற நிறத்தை யுடைத்தான
மான் ஒன்று— ஒரு மானானது
புகுந்து— பர்ணசாலையின் முன்னேவந்து புகுந்து
இனிது— மநோஹரமாக
விளையாட— துள்ளிவிளையாட

(க) "ஸபித்ராசபரித்யக்த ஸ்ஸுரைச்சஸமஹர்ஷிபி꞉ । த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய" (உ) "தமேவசரணங்கத꞉" (௩) "ஸதம்நிபதிதம்பூமௌ சரண்யச்சரணாகதம் । வதார்ஹமபிகாகுத்ஸ்த꞉ க்ருபயாபர்யபாலயத்."

நின்— தேவரீருடைய [ பின்னே நின்று
அன்பின் வழி நின்று— ஆஜ்ஞையின் வழி
சிலை பிடித்து— வில்லை யெடுத்துக்கொண்டு
எம்பிரான்— பெருமாள்
ஏக — அத்தைப்பிடிப்பதாக நெடுந்தூர மெழுந்தருள

பின்னே— பிற்பாடு
அங்கு— அங்கே
இலக்குமணன்— இளையபெருமாள்
பிரிந்ததும்— பிரிந்துபோனதும்
ஓர் அடையாளம்.

வ்யா. ஏழாம்பாட்டு. மின்னித்யாதி, மின்னொடொத்த நிருந்துள்ள நுண்ணிய இடையையுடையாய்!. இடையினுடைய நுண்ணியமையும், விரஹதசையில் நோவுபடாநற வொண்ணுமைக்கு உடலாயிருக்குமிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறான். மெய்யடியேன் விண்ணப்பம். புரையற்ற சேஷபூதனான நான் விண்ணப்பஞ் செய்கிறத்தைத் திருவுள்ளம் பற்றியருளவேணும். மெய்யடியானாகையாவது - எதிர்த்தலையில் ஸம்ருத்தியே புருஷார்த்த மாயிருக்குமதொழிய, ஸ்வப்ரயோஜந பரனன்றிக்கேயிருக்கை. பொன்னொத்துமானித்யாதி. மாயாவியானமாரீசன் இதுக்குமுன்பு லோகத்தில் கண்டறியாததொரு வடிவையெடுத்துக் கொண்டுவந்ததாகையாலே, பொன்போலிருக்கிற நிறத்தையும் நாநாரத்நங்கள் போலிருக் கிற புள்ளியையும் மற்றுமநேகம் வைசித்ரியையுமுடைத்தாயிருப்ப தொருமானானது, எழுந் தருளியிருக்கிற ஆச்ரமத்தின் முன்னேவந்து புகுந்து மனோஹரமாம்படி நின்று துள்ளி விளையாட. நின்னன்பின்வழிநின்று. "இத்தைப்பிடித்துத்தரவேணும்" என்று பெருமா ளைப்பார்த்து தேவரீர் அருளிச்செய்தவிடத்தில், இளையபெருமாள் அருகேநின்று, "லோக த்தில் இப்படி யிருப்பதொரு மிருகமில்லை, மாரீசன் இங்ஙனே சிலமாயாரூபங்களைக்கொண்டு திரியும் என்றுப்ரஸித்தம்; ஆகையால், இது மாயாம்ருகம்" என்றுநிற்கச்செய்தேயும், தேவரீருடைய ஆஜ்ஞையின்வழியிலேநின்று. சிலைபிடித்தெம்பிரானேக. இளையபெருமாளை இங்குத்தைக்குக் காவலாக நிறுத்தியிருக்கையாலே, பிடித்தவில்லும் தாருமாய்க்கொண்டு அத்தைப்பிடிப்பதாகப் பெருமாள் நெடுந்தூரமெழுந்தருள. பின்பு தங்களையெல்லாரையும் விஷயீகரித்த உபகாரத்தை நினைத்து "எம்பிரான்" என்கிறான். பின்னேயித்யாதி. நெடு ந்தூரம் பின்பற்றிப்போன விடத்திலும் பிடிகொடாமல் அது தப்பித்திரிகையாலே "இது மாயாம்ருகம்" என்று திருவுள்ளம்பற்றி அதின்மேலே சரத்தைவிட, அது பட்டுவிழுகிற போது "ஹா! ஸீதே!, ஹா! லக்ஷ்மண!!" என்று பெருமாள் மிடற்றோசைபோலே கூப்பிட்டுக் கொண்டுவிழ, அத்தை தேவரீர்கேட்டருளி, பெருமாளுக்கேதேனும் அபாயம்வந்ததாக நினைத்து, "இத்தைச்சடக்கெனப்போய் அறியும்" என்று அருளிச்செய்யச் செய்தேயும் இங்குத்தைக்குக் காவலாக நிறுத்திப் போகையாலும், பெருமாளுடைய சௌர்யத்தையறி கையாலும் "அங்குத்தைக்கு ஒன்றும்வாராது, தேவரீர் பயப்பட்டருளவேண்டா" என்று விண்ணப்பம்செய்து, தாம்போகமாட்டாமல் சுற்றிக்கொண்டுநிற்க, அவர் நில்லாமல் போக வேண்டும்படி தேவரீர் சிலவருளிச்செய்கையாலே, பிற்பாடு அங்கே இளையபெருமாள் பிரிந்துபோனது மோரடையாளம். ... ... ... ... ௭.

மூ —மைத்தகுமாமலர்க்குழலாய் வைதேவீ விண்ணப்பம்
ஒத்தபுகழ்வானரக்கோ னுடனிருந்து நினைத்தேட
அத்தகுசீரயோத்தியர் கோ னடையாளமிவை மொழிந்தான்
இத்தகையாலடையாள மீதவன்கைமோதிரமே. ௮.

பதவுரை.

மைத்தகு— மைபோலே கறுத்து
மா— சிறந்த
மலர்— மலரை அணிந்த
குழலாய்— கூந்தலையுடையவளாய்
வைதேவீ— விதேஹராஜன் குலம்விளங்க வந்தவதரித்தவளே!
விண்ணப்பம்— அடியேன் செய்யும் விண்ணப்பத்தைக் கேட்டருளவேணும்;
ஒத்த புகழ்— ஸுகதுக்கங்களில் பெருமாளோடொத்தவர் என்கிற புகழையுடையராய்
வானரர்— வாநரர்களுக்கு
கோன்— அதிபதியான ஸுக்ரீவர்
உடன் இருந்து— பெருமாளுடன் கூட இருந்து
நினை— தேவரீரை
தேட— தேடுகைக்காக
அந்தரு— அந்தநிலைக்குத் தகுதியான
சீர்— கல்யாண குணங்களையுடையராய்
அயோத்தியர்— அயோத்யையிலுள்ளார்க்கு
கோன்— ஸ்வாமியான பெருமாள்
இவை அடையாளம்— இவ்வடையாளங்களையெல்லாம்
மொழிந்தான்— அருளிச்செய்தார்;
( ஆனபின்பு, )
அடையாளம்— அடியேன் விண்ணப்பம் செய்த அடையாளங்களித்தனையும்
‡ இத்தகையால் — இந்தப்ரகாரத்தாலே வந்தவை,
( என்று அறிவித்து )
ஈது— இது
அவன் கை— அவர்கையில் தரித்திருந்த
மோதிரம்— திருவாழிமோதிரம்
[ என்று மோதிரத்தையும் கொடுத்தானுய்த்து. ]

‡ 'இத்தகை' என்று பிரித்து— 'இவ்வண்ணமானதே' என்று பொருளாக்கி, 'ஆல்' என்னுமித்தை அசைச் சொல்லாக்குவார் சிலர்.

வ்யா. எட்டாம்பாட்டு. மைத்தகுமாமலர்க்குழலாய். மைபோலே இருண்டு ச்லாக்யமானமலரோடேகூடியிருக்கும் குழலையுடையவளே. இந்த விசேஷணங்கள் இப்போதிருக்கிற இருப்புக்குச் சேராமையாலே, இப்படியிருக்கைக்கு யோக்யமான குழலென்று சொல்லுகிறதாகவுமாம். பிரிவாற்றாமையாலே பேணாமலிருக்கையால் புழுதிபடைத்துப் பூமாறிப்போய்க் கிடக்கிறது. வைதேவீ. தேஹத்தை உபேக்ஷித்திருக்கிறபடியைக்கொண்டு சொல்லுகிறான். விண்ணப்பம். இந்த விண்ணப்பத்தைத் திருவுள்ளம் பற்றவேணுமென்கை.

ஒத்தபுகழ்வானரக்கோன். காண்பதுக்குமுன்னே (க) "ஸுக்ரீவம் நாதமிச்சதி" (உ) "ஸுக்ரீவம் சரணம் கத:" என்று இளையபெருமாள் அருளிச்செய்யும்படி தாமே பஹுமாநம் பண்ணிக்கொண்டுவந்து, கண்டபின்பு அக்நிஸாக்ஷிகமாக ஸக்யம்பண்ணி, (ங) "த்வம் வயஸ்யோஸி ஹ்ருத்யோமே ஹ்யேகம் து:கம் ஸுகஞ்ச நௌ" என்று இளையபெருமாள் அருளிச்செய்தபின்பு, "பெருமாளோடு சோகஹர்ஷங்கள் ஒத்துப்போந்தவர்" என்னும்புகழையுடையராய் வாநராதிபதியான மஹாராஜர். இப்போது, வாநராதிபதியென்றது ஸாபிப்ராயம். அதாவது— தேவரீரைத்தேடுகைக்காக (ச) "யாம் கபீநாம் ஸஹஸ்ராணி"

(க) "ஸுக்ரீவம்நாதமிச்சதி" (உ) "ஸுக்ரீவம் சரணம்கத:." (ங) "த்வம்வயஸ்யோஸிஹ்ருத்யோமேஹ்யேகம்து:கம்ஸுகஞ்சநௌ" (ச) "யாம்கபீநாம்ஸஹஸ்ராணி"

என்கிறபடியே திக்குக்கள் தோறும் திரள்திரளாகப் போகவிடத்தக்க வாநரஸேனையை யுடையவரென்கை. உடனிருந்து. மால்யவானிலும் கிஷ்கிந்தையிலுமாகப் பிரிந்திருந்துபோய் பெருமாளுடன் கூடியிருந்து. நினைத்தேட. தேவரீரைத்தேடுகைக்காக. ஸர்வதிக்குக்களிலும் ஆள்விடுகிறவளவிலே, (க) " விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவாந் " என்கிறபடியே எல்லாரையும்போலன்றிக்கே விசேஷித்து என்னை யபிமானித்து " இவன் இக்காரியத்துக்கு ஸமர்த்தன் " என்று மஹாராஜர் திருவுள்ளம்பற்றினவநந்தரம்.

அத்தகுசீரயோத்தியர்கோ னடையாளமிவை மொழிந்தான். தேவரீரைப்பிரிந்தபின்பு ஊணுமுறக்கமுமற்று கடுத்ததும் ஊர்ந்தது மறியாதே ஏதேனுமொரு போக்யபதார்த்தங்களைக் கண்டால் தேவரீரை நினைத்து ஈடுபடாநின்றுள்ள அந்தநிலைக்குத் தகுதியான ப்ரணயித்வகுணத்தை யுடையராய், ஸ்ரீபரதாழ்வான் * அடிசூடுமரசாய்த் திருவடிநிலைகொண்டு போகையாலே திருவயோத்யையி லுள்ளார்க்குத் தாமேராஜாவான பெருமாள், விண்ணப்பஞ் செய்த இந்தவடையாளங்களெல்லாம் அடியேனுக்குத் தம்முடைய திருப்பவளத்தாலே யருளிச்செய்தார். அல்லாதபோது *மல்லிகைமாமாலைகொண்டு அங்கார்த்தது அடியேனுக்கு அறியக்கூடுமோ. இத்தகையாலடையாளம். ஆனபின்பு, விண்ணப்பஞ்செய்த வடையாளமித்தனையும் இந்தப்ரகாரத்தாலே வந்ததென்று அறிவித்து. ஈதவன்கைமோதிரமே. இது அவர் திருக்கையில் திருவாழிமோதிரமென்று, (உ) " ராமநாமாங்கிதஞ்சேதம் பஶ்ய தேவ்யங்குலீயகம் " என்கிறபடியே பெருமாளுடைய திருநாமத்தாலே அங்கிதமாயிருக்கிற திருவாழிமோதிரத்தைக் கொடுத்தானுய்த்து. ... ... ... ... அ.

மூ.—திக்குநிறைபுகழாளன் றீவேள்விச்சென்றநாள்
மிக்கபெருஞ்சவைநடுவே வில்லிறுத்தான் மோதிரங்கண்
டொக்குமாலடையாள மனுமானென்றுச்சிமேல்
வைத்துக்கொண்டேந்தனளால் மலர்க்குழலாள்சீதையுமே. ௯.

பதவுரை.

மலர்— மலர்களணிந்த
குழலாள்— கூந்தலையுடையளான
சீதை— ஸீதையானவள்,
திக்கு— எல்லா திக்குக்களிலும்
நிறை— நிறைந்த [ராஜனுடைய
புகழாளன்— புகழையுடையனான ஸ்ரீஜநக
தீ— முத்தீவளர்க்கிற
வேள்வி— யாகத்திலே
சென்ற நாள் — விச்வாமித்ரரோடு எழுந்தருளின காலத்திலே
மிக்க பெரு — மிகப் பெரிதான
சவை நடுவே— ஸபையின் நடுவிலே
வில் — தனக்கு சுல்கமாகக் கற்பித்திருந்த வில்லை
இறுத்தான்— முறித்த பெருமாளுடைய
மோதிரம்— திருவாழிமோதிரத்தை
கண்டு— பார்த்து
அநுமான்— ஹநுமானே!
அடையாளம்— நீ முன்சொன்ன அடையாளங்களும், திருவாழி மோதிரத்தினடையாளமும்
ஒக்கும் என்று—ஒத்திருந்ததென்றுசொல்லி

(க) " விசேஷேண துஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவாந் " (உ) " ராமநாமாங்கிதஞ்சேதம் பச்யதேவ்யங்குலீயகம். "

| | |
|---|---|
| உச்சிமேல்— தன் தலையின்மேல் | உகந்தனள்— திருவுள்ளமுகந்தாள். |
| வைத்துக்கொண்டு— திருவாழிமோதிரத்தை வைத்துக்கொண்டு | [ ஆல் - ஆச்சர்யம். ] |

வ்யா. ஒன்பதாம்பாட்டு. திக்கித்யாதி. தத்த்வஜ்ஞாநத்தாலும், ப்ராக்ர்தவிஷய வைராக்யத்தாலும், முமுக்ஷுவாய் பலாபிஸந்திரஹிதமாக கர்மாநுஷ்டாநங்களைப் பண்ணிக் கொண்டு போருகையாலும், ஸர்வதிக்குக்களிலும் நிறைந்த புகழையுடையனான ஸ்ரீஜநகராஜனுடைய ஆஹவநீயாத்யக்நித்ரயத்தோடே பண்ணும் யாகத்திலே விச்வாமித்ரமஹர்ஷி கொண்டுசெல்ல எழுந்தருளின காலத்திலே. மிக்கபெரும் சவைநடுவே. மிகவும்பெரிய ஸபா மத்யத்திலே. வில் இறுத்தான் மோதிரங்கண்டு. தனக்கு சுல்கமாகக் கல்பித்திருந்த வில்லை முறித்த பெருமாளுடைய திருக்கையிலே அப்போது கிடந்ததாய், பின்பு பாணிக்ரஹணம் பண்ணுகிறபோது தன்கையிலே உறுத்தினதாய், ஸர்வகாலமும் பெருமாள் திருக்கையிலே கிடக்குமதான திருவாழிமோதிரத்தைக்கண்டு.

ஒக்குமித்யாதி. அநுமானே! நீமுன்பு சொன்னவடையாளங்களும் திருவாழிமோதிரத்திலடையாளமும் ஒக்குமென்று அவன் முகத்தைப் பார்த்துச்சொல்லி, (க)" க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா பர்த்து: கரவிபூஷணம்। பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதாபவத்" என்கிறபடியே - அத்திருவாழிமோதிரத்தை வாங்கி அதினுடைய கௌரவமும் தன்னுடைய ஆதரமும்தோற்றத் தலைமேலே வைத்துக்கொண்டு, பின்னை, அத்தைக் கையிலே யேந்தி, வைத்தகண்மாறாமல் பார்த்துக்கொண்டிருக்கையாலே அத்திருவாழிமோதிரத்தோடு சேர்ந்த திருவிரலையும் அத்தோடுசேர்ந்த திருக்கையையும் அத்தோடுசேர்ந்த திருத்தோள்களையும் நினையாநின்றுகொண்டு, அவ்வழியாலே திருமேனியெல்லாவற்றையும் நினைந்து, பாவநாப்ரகர்ஷத்தாலே பெருமாள் அலங்கரிக்கப் பூமுடித்து ஒருபடுக்கையிலே யிருந்தாற்போலே தோன்றி, பிராட்டி மிகவும் ப்ரீதையானளென்று ஆச்சர்யப்பட்டருளிச்செய்கிறார். ஆல் - ஆச்சர்யம். ... ... ... ... ... ... ௯.

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வாராருமுலைமடவாள் வைதேவிதனைக்கண்டு
சீராருந்திறலனுமன் றெரிந்துரைத்த வடையாளம்
பாராரும்புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான் பாடல்வல்லார்
ஏராரும்வைகுந்தத் திமையவரோ டிருப்பாரே. ௰.

பதவுரை.

| | |
|---|---|
| வார் ஆரும்— கச்சோடு கூடின | வைதேவிதனை— பிராட்டியை |
| முலை— ஸ்தநங்களை யுடையளாய் | கண்டு— கண்டு |
| மடவாள்— மடப்பத்தையுடையளான | சீர் ஆரும்— சீர்மைபொருந்திய |

(க) " க்ருஹீத்வாப்ரேக்ஷமாணாஸா பர்த்து:கரவிபூஷணம்- பர்த்தாரமிவஸம்ப்ராப்தா ஜாநகீமுதிதாபவத். "

திறல்— சக்தியையுடைய
அநுமன்— திருவடி
தெரிந்து— ஆராய்ந்து
உரைத்த— விச்வஸிக்கும்படி சொன்ன
அடையாளம்— அடையாளங்களை
பார் ஆரும்— பூமியெங்கும் பரவின
புகழ்— கீர்த்தியை யுடையராய் [ரான
புதுவை— ஸ்ரீவில்லிபுத்தூருக்குநிர்வாஹக
பட்டர்பிரான்— பெரியாழ்வார் அருளிச் செய்த
பாடல்— பாடலான விவற்றை
வல்லார்— ஓதவல்லவர்கள்
ஏர் ஆரும்— எல்லா நன்மைகளும் சேர்ந்த
வைகுந்தத்து— ஸ்ரீவைகுண்டத்திலே
இமையவரோடு— நித்யஸூரிகளோடு
இருப்பார்— இருக்கப் பெறுவர்கள்.

வ்யா. பத்தாம்பாட்டு. வாராருமித்யாதி. வாரோடுசேர்ந்திருக்கைக்கு யோக்யமாயிருக்கச்செய்தே, இப்போது வெறும்புறத்திலே பிராநிற்பதான முலையையுடையளாய், விரஹத்தால்வந்த துவட்சியையு முடையளாய், தேஹத்தில் உபேக்ஷையாலே விதேஹபுத்ரியானமை தோற்றவிருக்கிற பிராட்டியைக்கண்டு. சீராரும்திறலநுமன். முதலிகளெல்லாருமுண்டாயிருக்க "இவனேயிக்காரியம் செய்யவல்லான்" என்று பெருமாள் திருவுள்ளம்பற்றி, அடையாளங்களும் சொல்லித் திருவாழிமோதிரமும் கொடுத்துவிடும்படி ஜ்ஞாநாதிகுணங்களால் பரிபூர்ணனாய், நினைத்தது முடிக்கவல்ல சக்திமானாயிருக்கிற திருவடி. தெரிந்துரைத்தவடையாளம். பெருமாளருளிச் செய்தபடிகளில் ஒன்றும் தப்பாமல் ஆராய்ந்து பிராட்டிக்கு விச்வஸநீயமாக விண்ணப்பம் செய்த அடையாளங்களை. பாராருமித்யாதி. பூமியெங்கும் நிறைந்த புகழையுடையரான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாருளிச்செய்த பாடலான விவற்றை ஸாபிப்ராயமாக வல்லவர்கள். ஏராருமித்யாதி. எல்லாநன்மைகளும் சேர்ந்த பரமபதத்திலே, "அடியரோடிருந்தமை" என்கிறபடியே நிரந்தரபகவதநுபவபரரான நித்யஸூரிகளோடு ஒரு கோவையாயிருக்கப்பெறுவர். ௰,

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—நெறி யல்லி கலக்கிய வாரணி மான்
சித்திர மின் மைத்த திக்கு வாராரும் கதிர்.

ஆ திருமொழி-௨௯-க்கு, பாட்டு-௩௱௫.

மூன்றாம் பத்து முற்றிற்று.

(*)

## நாலாம்பத்து - முதற்றிருமொழி - கதிராயிரமிரவி ப்ரவேசம்.

அ.—க்ர்ஷ்ணாவதாரைகப்ரவணராய், திருவவதார ஸமயமேதொடங்கி அவ்வவதாரரஸமே அநுபவித்துக்கொண்டு போந்தவர், க்ர்ஷ்ணாவதார சேஷ்டிதங்களையும் ராமாவதார சேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே அநுபவிக்கவேணு மென்னும்படியா யிருப்பதொரு அபிநிவேசம் பிறந்து, அவைதன்னை ஏகாச்ரயத்திலிட்டு அநுபவிக்கப் போகாமையாலே இரண்டு வடிவுகொண்டு ஒன்றுக்கொன்று எதிரியாகப்பேசி அநுபவித்த வநந்தரம், ராமாவதாராநுகுணமாக வந்தவதரித்தருளின பிராட்டி, தன்னுடைய புருஷகாரத்வத்துக்கு ப்ரதாநகுணமான க்ர்பையை வெளியிடுகைக்காக "ராவணன்பிரித்தான்" என்று ஒருவ்யாஜத்தாலே லங்கையிலே யெழுந்தருள, அவ்வவதாரத்தின் மெய்ப்பாட்டாலே பெருமாள் அவள்போனவிடம் இன்னவிடமென்றறியாமல் தேடிக்கொண்டு திரியாநிற்க, மஹாராஜரோடே உறவு

செய்தவநந்தரம் அவருடைய ஸர்வபரிகாரத்தையும் பிராட்டி இக்குக்கள்தோறும் தேடும்படி வகைவகையாகப் போகவிடுகிறவளவிலே, பெருமாள், திருவடியினுடைய புத்திசக்த்யாதிகளைக்கண்டு “ இவனே இக்கார்யம் செய்துமுடிக்கவல்லான் ” என்று திருவுள்ளம்பற்றி, பிராட்டியைக்கண்டால் விண்ணப்பஞ் செய்யத்தக்க வடையாளங்களையு மருளிச்செய்து திருவாழிமோதிரத்தையும் கொடுத்துப்போகவிட, திருவடியும் லங்கையிலேசென்று பிராட்டியைக்கண்டு திருவடித்தொழுது, ராவணன்மாயையால்வரு மதிசங்கைதீரும்படி பெருமாளருளிச்செய்த அடையாளங்களையெல்லாம் விண்ணப்பம்செய்து, திருவாழிமோதிரத்தையும் கொடுத்து, பிராட்டி திருவுள்ளத்தை மிகவும்உகப்பித்த ப்ரகாரத்தை அநுஸந்தித்து, அந்த ஸ்ரீ புரகைங்கர்ய ரஸத்தினுண்டான ஆசையாலே பிராட்டிக்குத் திருவடிவிண்ணப்பஞ்செய்த அடையாளங்களையும், திருவாழிமோதிரம் கொடுத்தபடியையும், அதுகண்டு பிராட்டி திருவுள்ளமுகந்த படியையுமெல்லாம் அடைவேபேசியநுபவித்துப்ரீதரானார்- கீழில் திருமொழியிலே;ராமக்ர்ஷ்ணவதாரங்களோடு அவதாராந்தரங்களோடு அபதாநாந்தரங்களோடு வாசியறத்ர்மியைக்யத்தாலே எல்லாம் ஏகாச்ரயமாகையாலே “ இப்படியிருக்கிற விஷயத்தைக் கண்ணாலே கண்டநுபவிக்கவேணும் ” என்று தேடுகையாகிறவிது தமக்கு ஒருபுடை செல்லுகிறபடியையும், மாநஸாநுபவத்தினுடைய கரைபுரட்சியாலே அவ்விஷயந்தன்னை ஸாக்ஷாத்க்ருதமாகக் கண்டதாகவே ஒருபுடை தோற்றியிருக்கிறபடியையு மநுஸந்தித்து, அவையிரண்டையும், அவதாராதி விசிஷ்டனாக ஸர்வேச்வரனைக் கண்ணாலே காணவேணுமென்று தேடித்திரிகிறார் சிலரும், “ அப்படிதேடுகிறீர்களாகில் அவனை உள்ளபடி கண்டாருளர் ” என்று சொல்லுகிறார் சிலருமாகக்கொண்டு, தம்மை இரண்டுவகையாக வகுத்துநின்றுபேசி இனியராகிறார் - இத்திருமொழியில். “ நாடுதிரேல் ” என்றும், “ கண்டாருளர் ” என்றும் பன்மையாகவருளிச்செய்தது - * கட்கண்ணாற்காண்கையில் அபேக்ஷாரூபஜ்ஞாநவ்யக்திகளும், * உட்கண்ணால்கண்டு அதிலாற்றத்தாலே பாஹ்யாநுபவமும் ஸித்தித்ததென்று தோற்றும்படியான ஜ்ஞாநவ்யக்திகளும் பலவுமுண்டாகையாலே. ... ... *

மூ.—கதிராயிரமிரவி கலந்தெறித்தா லொத்தநீண்முடியன்
எதிரில்பெருமையிராமனை யிருக்குமிடநாடுதிரேல்
அதிருங்கழற்பொருதோ ளிரணியனாகம்பிளந்தரியாய்
உதிரமளைந்தகையோடிருந்தானை யுள்ளவாகண்டாருளர். க.

பதவுரை.

கதிர்— (எண்ணிறந்த) கிரணங்களையுடைய
ஆயிரம் இரவி— ஆயிரமாதித்யர்கள்
கலந்து— சேர்ந்து
எறித்தால் ஒத்த— ப்ரகாசித்தாற் போலே யிருக்கும் தேஜஸ்ஸையுடைய
நீள் முடியன்— உயர்ந்த திருவபிஷேகத்தையுடையனாய்
எதிர் இல்— ஒப்பற்ற
பெருமை— பெருமையையுடைய
இராமன் ‡ — சக்ரவர்த்தி திருமகன்
இருக்கும் இடம்— எழுந்தருளி யிருக்குமிடத்தை
நாடுதிர் ஏல்— தேடுகிறீர்களாகில் (சொல்லுகிறேன்;)
அதிரும்— ஒலியாநின்றுள்ள
கழல்— வீரக்கழலையுடையனாய்
பொரு— போர்செய்யப் பதைக்கிற
தோள்— தோள்களையுடையனான

‡ ஐ - சாரியை.

இரணியன்— ஹிரண்யாஸுரனுடைய
ஆகம்— மார்வை
அரியாய்— நரஸிம்ஹரூபியாய்
பிளந்து— இருபிளவாகப் பிளந்து
உதிரம் அளைந்த— ரக்தத்தையளைந்த
கையோடு— கையோடே
இருந்தானை— இருந்தவனை
உள்ளஆ— உள்ளபடி.
கண்டார் உளர்— கண்டவர்கள் உளர்.

வ்யா. முதற்பாட்டு. கதிராயிரமிதி. ஸஹஸ்ரகிரணங்களான ஆயிரமாதித்யர்கள் சேர ப்ரகாசித்தாற்போலேயிருக்கும் தேஜஸ்ஸையுடைத்தாய் ஆதிராஜ்யஸூசகமான ஒக்கத்தையுடைத்தான திருவபிஷேகத்தை யுடையவன். இத்தால் - ராவணவதம்பண்ணி ஸ்ரீ விபீஷணாழ்வானை லங்கைக்கு ராஜாவாக அபிஷேகஞ்செய்து பிராட்டியும் தானுமான சேர்த்தியோடே திருவயோத்யையிலே யெழுந்தருளித் திருவபிஷேகம் பண்ணியிருந்த படியைச் சொல்லுகிறது. எதிரில்பெருமையிராமனை. ரூபகுணங்களாலும் ஆத்மகுணங்களாலும் அதிமாநுஷ சேஷ்டிதங்களாலும் ஒப்பில்லாத வைபவத்தையுடையனாய், எல்லாருடைய நெஞ்சுகளையும் ஸ்வவைலக்ஷண்யத்தாலே ரமிப்பிக்கும் ஸ்வபாவதையாலே "ராமன்" என்னும் திருநாமத்தை யுடையவனை. இருக்குமிடம் நாடுதிரேல். எழுந்தருளியிருக்குமிடம் தேடுகிறீர்களாகில்.

அதிருங்கழல்பொருதோளிரணியனாகம்பிளந்தரியாய். ப்ரஹ்மலோக பர்யந்தமாக எல்லாரையும் தன்கீழாக்கி ஈச்வரனாயிருந்தவனாகையாலே, த்வநியாநின்றுள்ள வீரக்கழலையுடையனாய், தனக்கு ஒரெதிரியில்லாமையாலே யுத்தகண்டூதி வர்த்தியாநின்றுள்ள தோள்களையுடையனாயிருந்துள்ள ஹிரண்யனுடைய வரபலபுஜபலங்களாலே பூண்கட்டியிருந்த மார்வை, தேவர்கள் கொடுத்த வரத்துக்கு விரோதம் வாராதபடியாக நரஸிம்ஹ ரூபத்தைக் கொண்டு இருபிளவாக்கி. உதிரமளைந்தகையோடிருந்தானை. பிளந்தவளவில் நில்லாதே உதிரத்தையளையும் "வெஞ்சினத்தரி" என்கிறபடியே மிகுந்த சீற்றத்தாலே அவனுடைய சரீரமெங்கும் * குருதிகுழம்பி யெழும்படி கூருகிராலே குடைந்து குடலைப்பிடுங்கி யெடுக்கையாலே, உதிரமளைந்த கையோடே சீற்றந்தோற்ற விருந்தவனை. உள்ளவாகண்டாருளர். ஸம்சயவிபர்யயரஹிதமாக உள்ளபடி கண்டாருளர். உள்ளவாகாண்கையாவது - அவதார ப்ரயுக்தமான ஆகாரங்களையிட்டு வேறுபடக்காணாதே, "ராமாவதாரமாய் ராவணவதம் பண்ணினவனும், ந்ருஸிம்ஹாவதாரமாய் ஹிரண்யவதம் பண்ணினவனும் ஒருவனே" என்று வஸ்துவினுடைய படியறிந்துகாண்கை. முன்பு ஹிரண்யனானவன்றானேயிறே பின்பு ராவணனாய்ப்பிறந்தவன். ப்ரஹ்மாதிகள்பக்கல் ஹிரண்ய ராவணர்களிருவரும் கொண்டவரங்களுக்கு விரோதம் வாராதபடி நிரஸிக்க வேண்டுகையாலேயிறே ரூபபேதம் கொள்ளவேண்டிற்று. அதாவது - "தேவாதிசதுர்வித ஜாதியிலொன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொள்ளுகையாலே நரஸிம்ஹமாக வேண்டிற்று - அங்கு; "தேவர்கள் அஸுரர்கள் ராக்ஷஸர் முதலானவொருவராலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொள்ளுகையாலும், மநுஷ்யரை ஒன்றாக கணியாமற் போருகையாலும், மநுஷ்யனாய் நின்று கொல்லவேண்டிற்று - இங்கு; ஆகையால், கார்யாநுகுணமாகக்கொண்ட ரூபபேத மாத்ரமேயாய், ப்ரகாரி ஒன்றேயாகையாலே இந்த ஐக்யமறிந்து காண்கையாயிற்று - உள்ள படி காண்கையாவது. ... ... ... ... ... ௧.

அ. இரண்டாம்பாட்டு. நாந்தகமித்யாதி. கீழ்ப்பாட்டிலே ஈச்வரத்வம் தோற்றிற்றிறே; "ஈச்வரன்" என்றறுதியிட்டால் பின்னை ஸ்ரீபஞ்சாயுத தாரத்வம் சொல்லலாமிறே; ராவண

வாரத்தளவுமிறே ஈச்வரத்வந்தான் மறைக்கவேண்டுவது; ஆகையாலிறே, ராவணவதாநந்தரம் வந்த ப்ரஹ்மாதிதேவர்கள், (க) "ஸவாந்நாராயணோ தேவ: ஸ்ரீமாஞ்சக்ராயுதோ விபு:" என்றது. பின்னையும். (உ) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்று இவர்அருளிச்செய்தது - முன்பு நின்றநிலையில் புரையறுதி தோற்றுகைக்காகவிறே.

மூ.—நாந்தகஞ்சங்குதண்டு நாணொலிச்சார்ங்கந் திருச்சக்கரம்
ஏந்துபெருமையிராமனை யிருக்குமிட நாடுதிரேல்
காந்தண்முகிழ்விரற் சீதைக்காகிக் கடுஞ்சிலைசென்றிறுக்க
வேந்தர்தலைவன்சனகராசன்றன் வேள்வியிற்கண்டாருளர். உ.

பதவுரை.

நாந்தகம்— நந்தகமென்னும் வாளையும்
சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
தண்டு— ஸ்ரீகௌமோதகீ கதையையும்
நாண் ஒலி— ஜ்யாகோஷத்தையுடைய
சார்ங்கம்— ஸ்ரீசார்ங்கதநுஸ்ஸையும்
திரு சக்கரம்— திருவாழி யாழ்வானையும்
ஏந்து— தரித்துக்கொண்டிருக்கிற
பெருமை— பெருமையையுடைய
இராமன் இருக்குமிடம் நாடுதிரேல்—;
காந்தள்— செங்காந்தளினுடைய
முகிழ்— முகிழிதழ்போன்ற
விரல்— விரற்களையுடைய
சீதைக்காகி— பிராட்டிக்காக
வேந்தர் தலைவன்— ராஜாக்களுக்கெல்லாம் தலைவனான
சனகராஜன் தன்— ஸ்ரீஜநகராஜனுடைய
வேள்வியில்— யாகத்திலே
சென்று— எழுந்தருளி
கடு சிலை— வலியவில்லை
இறுக்க— முறிக்க
கண்டார் உளர்— கண்டவர்கள் உளர்.

வ்யா. நாந்தகம். திருக்கையில் பிரியாதேயிருந்து எதிரிகளை அறச்செய்யும் திருக்குற்றுடைவாள். சங்கு. வாய்கரையிலேயிருந்து தன்தொனியாலே எதிரிகளை முழுக்காயாக அவியப்பண்ணும் ஸ்ரீபாஞ்சஜந்யம். தண்டு. கைவிடாமலிருந்து எதிரிகளை நெரியஅடிக்கும் ஸ்ரீகதை. நாணொலிச்சார்ங்கம். ஜ்யாகோஷஸஹிதமாய் எதிரிகள் மேலே சரவர்ஷத்தை வர்ஷிக்கும் ஸ்ரீசார்ங்கம். திருச்சக்கரம். *கருதுமிடம்பொருது கைவந்திருக்கும் திருவாழி. ஏந்துபெருமையிராமனை. இவற்றை யழகுக்குடலாகவும் விரோதி நிரஸநத்துக் குடலாகவும் தரித்துக்கொண்டிருக்கும் பெருமையையுடையனாய், இவைமிகையாம்படி தன்வடிவழகாலே யெல்லாரையும் ரமிப்பிக்கவல்லவனை. இருக்குமிடம் நாடுதிரேல். இந்த சௌர்யாதிகளும் ஸௌந்தர்யாதிகளும் அவனிருக்குமிடத்தேசென்று காணவேணுமென்று, இருக்குமிடம் தேடுகிறீகோளாகில். காந்தளித்யாதி. செங்காந்தள் முகிழிதழ் போலேயிருக்கிற திருவிரற்களையுடைய பிராட்டிக்காக. கடுஞ்சிலைசென்றிறுக்க. விச்வாமித்ரமஹர்ஷி கொடுசெல்லச் சென்று, ரௌத்ரமாய் ஒருவரால் எடுக்கவும் வளைக்கவும் அரிது என்றுகிடந்த வலியவில்லை முறிக்க. கடுமை - திண்மை. வேந்தரித்யாதி. ராஜதர்மத்தோடே தத்த்வஜ்ஞாநத்தையுமுடையவனாகையாலே ராஜாக்களுக் கெல்லாம்தலைவனான ஸ்ரீஜநகராஜனுடைய யாகத்திலே கண்டாருளர்.

இங்கு, "இராமனைநாடுதிரேல் - வேள்வியில் கண்டாருளர்" என்கிறதில் வேறுபாடு தோன்றுதாற் போலேயிறே - "இராமனைநாடுதிரேல் - உதிரமளைந்தகையோடிருந்தானை - கண்டாருளர்" என்கிறதும். ... ... ... ... உ.

(க) "பவாந்நாராயணோதேவ: ஸ்ரீமாஞ்சக்ராயுதோவிபு:." (உ) "ஆத்மாநம் மாநுஷம்மந்யே."

மூ.—கோலையானை கொம்புபறித்துக் கூடலர்சேனைபொருதழியச்
சிலையால்மராமர மெய்ததேவனைச் சிக்கனநாடுதிரேல்
தலையாற்குரக்கினந் தாங்கிச்சென்று தடவரைகொண்டடைப்ப
அலையார்கடற்கரை வீற்றிருந்தானை யங்குத்தைக்கண்டாருளர். ௩

பதவுரை.

கொலை— ஆனைக்கண்டால் கொல்லுமதான
யானை— குவலயாபீடத்தின்
கொம்பு— கொம்பை
பறித்து— பறித்தவனாய்
கூடலர்— ஜநஸ்த்தாந வாஸிகளான ராக்ஷஸர்களுடைய
சேனை— ஸேனையானது
அழிய— அழியும்படி
பொருது— போர் செய்தவனாய்
சிலையால்— வில்லாலே
மராமரம்— மராமரங்களை
எய்த— மறுபாடுருவ எய்தவனாய்
தேவனை— தேஜஸ்ஸானவனை
சிக்கன— இன்னதாக இருந்து நாடுதிரேல்—;
குரங்கு இனம்— வாநரஸேனையானது
தலையால் தாங்கி — சிரஸாவஹித்துக் கொண்டு
சென்று— போய் [கொண்டு
தட வரைகொண்டு— பெரியமலைகளைக்
அடைப்ப— அணையாக அடைக்க
அலை ஆர்— அலை எறிகிற
கடல் கரை— கடற்கரையிலே
வீற்றிருந்தானை— எழுந்தருளியிருந்தவனை
அங்குத்தை— அந்தஸ்த்தலத்திலே கண்டார் உளர்.

வ்யா. மூன்றாம்பாட்டு. கோலையானை கொம்புபறித்து. "கவளக்கடாக்களிறு" என்கிறபடியே துர்த்வ்யங்களைப் பருகுவித்துப் பிச்சேற்றி மதஜலமொழுகும்படி நிறுத்து கையாலே, ஆனைக்காணில் கொல்லுமதான குவலயாபீடமாகிற ஆனையினுடைய கொம்புகளை அநாயாஸேந பறித்து. கூடலர்சேனைபொருதழிய. மஹர்ஷிகளை நலிகையாலே சத்ருக்களான ஜநஸ்தாநவாஸிகளான ராக்ஷஸருடைய ஸேனையானது விசேஷம் சொல்லவும் ஒருவரில்லாதபடி அழியும்படியாகப் பொருது. சிலையால் மராமரமெய்ததேவனை. (க) "ஸ ஸ்ரீமஹர்ஷி தஸ்தாஸௌ நிர்த்யம்வீரவப்ரணாமவலே" என்கிறபடியே மஹாராஜருடைய அதிசங்கையைத் தீர்க்கைக்காக வில்லாலே மராமரங்களை மறுபாடுருவவெய்து, அவரதிசங்கையைத் தீர்த்த ஹர்ஷத்தாலே திருமேனியிற்பிறந்த புகரையுடையவனை. சிக்கன நாடுதிரேல். "அதொரு வ்யக்தி, இதொரு வ்யக்தி" என்று பிரித்து ப்ரதிபத்திபண்ணாதே, தர்மியொன்று என்றே அத்யவஸித்து அவனிருந்தவிடம் தேடுகிறீர்களாகில்.

தலையித்யாதி. ஸ்ரீவாநரவீரர்களுடைய திரள்களானவை "பெருமாள் திருவடிகள் படப்புகுகிறதன்றோ" என்னும் கௌரவபுத்தியாலே சிரஸாவஹித்துக்கொண்டு சென்று, பெரியமலைகளைக் கொண்டுகடலை யூடறுத்து அணையாகவடைக்க. அலையித்யாதி. அலைமிக்கிருந்துள்ள கடற்கரையிலே அவ்வலைநீர் தெறிக்கும்படி ஆஸந்நமாக அவர்கள் செய்கிற அடிமையைப்பார்த்து உகந்துகொண்டு அவர்களை அடிமைகொள்ளுகையால் வந்த வ்யாவ்ருத்தி தோற்ற எழுந்தருளியிருந்தவனை அந்த ஸ்த்தலத்திலே கண்டவர்களுளர். ... ... ௩.

(க) "ஸுக்ரீவச்சங்கிதச்சாஸீந் நித்யம்வீர்யேணராகவே."

மூ.—தோயம்பரந்தநடுவே சூழலிற்றொல்லைவடிவுகொண்ட
மாயக்குழவியதனை நாடுறில்வம்மின் சுவடுரைக்கேன்
ஆயர்மடமகள் பின்னைக்காகி யடல்விடையேழினையும்
வீயப்பொருதுவியர்த்துநின்றானை மெய்ம்மையேகண்டாருளர். ௬.

பதவுரை.

பரந்த— பரவின
தோயம்— ஜலத்தினுடைய
நடுவு— மத்யத்திலே
சூழலின்— உபாயத்தாலே
தொல்லை— பழையதான
வடிவு— வடிவை
கொண்ட— சுருக்கிக்கொண்ட
மாயம்— ஆச்சர்யத்தையுடைய
குழவி அதனை— அந்தக்குழவியை
நாட— தேட
உறில்— ஒருப்படுவீர்களாகில்
வம்மின்— வாருங்கோள்;
சுவடு— ஓரடையாளம்
உரைக்கேன் — உங்களுக்குச் சொல்லுகிறேன்;

ஆயர்— கோபரான ஸ்ரீகும்பருடைய
மகள்— பெண்பிள்ளையாய்
மடம்— மடப்பத்தையுடையளான
பின்னைக்காகி— நப்பின்னைப் பிராட்டிக்காக
அடல்— போர்செய்ய எதிர்த்துவாரா நின்றுள்ள
விடை ஏழினையும்— ரிஷபங்களேழையும்
வீய— முடியும்படியாக
பொருது— போர்செய்து
வியர்த்து நின்றானை— அந்த வருத்தத்தாலே குறுவெயர்ப்பரும்பின வடிவும் தானுமாய் நின்றவனை
மெய்ம்மையே— உண்மையாகவே
கண்டார் உளர்.

வ்யா. நான்காம்பாட்டு. தோயம்பரந்த நடுவுசூழலில். நடுவுசூழலில் தோயம்பரந்த போது. அதாவது- சுற்றும் ஸமுத்ரமாய், அதுக்குநடுவே வர்த்துலாகாரமாயிருக்கிற பூமியெங்கும் ஜலத்தாலே வ்யாப்தமானகாலத்திலேயென்கை. "பரந்த" என்கிறதுக்குமேலே, "போது" என்கிற வித்தனையும் அத்யாஹார்யம். அன்றிக்கே, தோயம்பரந்தநடுவு- ஜலம்பரந்தநடுவே; அதாவது- பரந்த ஜலத்தினுடைய மத்யத்திலேயென்றபடி. சூழலின் தொல்லைவடிவுகொண்ட. ரக்ஷ்யவர்க்கம் ப்ரளயத்திலே யழியாதபடி ரக்ஷிக்கைக்கீடான விரகாலே, பழையதான அப்ராக்ருத விக்ரஹத்தை சுருக்கிக்கொண்ட. மேல், "குழவி" என்கையாலே வடிவைச்சுருக்கிக்கொண்ட என்று நியமித்துச் சொல்லவேணும். மாயமித்யாதி. சிறுவடிவைக்கொண்டு பெரியலோகங்களை வயிற்றிலேவைத்து ஒருபவளுன ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்யத்தால்வந்த ஆச்சர்யத்தையுடைய அந்தக்குழவியை. (க) "[illegible]" என்றாரிறே- ஆழ்வான். "குழவி" என்கிறதுக்கீடாக- "அதனை" என்கிறது. அவனையென்றபடி. நாடுறில். தேடுகையிலே அத்யவஸிக்கில். வம்மின் சுவடுரைக்கேன். வாருங்கோள் உங்களுக்கு ஓரடையாளம் சொல்லுகிறேன். சுவடாவது- அகடிதகடநாஸாமர்த்ய ஸூசகமானதொரு வ்யாபாரம். அதாவது- அஸஹ்யாவிஷ்டமான ரிஷபங்களேழையும் ஒருக்காலே ஊட்டியாக நெரித்துப்பொகட்டதிறே.

(க) "முக்தச்சிசுர்வடதளேசயிதோஸிதந்வாதந்வா ஜகந்திபிப்ருஷேஸவிகாஸமேவ- ஐசீமிமாந்தவ துசக்திமதர்கிதவ்யாம் அவ்யாஜதப்ரதயஸேகிமிஹாவதீர்ண:"

ஆயர்மடமகள் பின்னைக்காகி. கோபரான ஸ்ரீகும்பருடைய பெண்பிள்ளையாய், ஆத்மகுணமான மடப்பத்தையுடையளான நப்பின்னைப்பிராட்டியை லபிக்கைக்காக. அடல்விடையேழினையும். அஸுராவிஷ்டமாய் யுத்தோந்முகமாய் நின்ற ரிஷபங்களேழையும். வியப்போருது வியர்த்து நின்றானை. முடியும்படியாகப்பொருது, அந்த ஆயாஸத்தாலே குறுவியர்ப்பரும்பின வடிவும் தானுமாய் நின்றவனை. மெய்ம்மையேகண்டாருளர். உண்மையாகவே அவ்விடத்திலே கண்டவர்களுண்டு. இத்தால்- வடதளசயநாபதாரத்துக்கும் க்ர்ஷ்ணவதாரத்துக்கு முண்டான தர்ம்யைக்யம் சொல்லப்பட்ட தாய்த்து. “வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுள்” என்றும், “ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்” என்றும் இவ்வைக்யந்தான் இமூம் பலவிடங்களிலும் சொல்லப்பட்டதிறே. ... ... ... ... ... ச.

மூ.—நீரேறுசெஞ்சடை நீலகண்டனு நான்முகனுமுறையால்
சீரேறுவாசகஞ்செய்யநின்ற திருமாலைநாடுதிரேல்
வாரேறுகொங்கை யுருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றிச்சேனைநடுவே போர்செய்யச் சிக்கனக்கண்டாருளர். ரு.

பதவுரை.

சீர்— எம்பெருமான் ஸ்ரீபாததீர்த்தத்தை
ஏறு— தரித்த
செம் சடை— சிவந்த ஜடையையுடைய
நீலகண்டனும்— கறுத்த மிடற்றையுடைய ருத்ரனும்
நால் முகனும்— சதுர்முக ப்ரஹ்மாவும்
முறையால்— சேஷசேஷிபாவக்ரமத்தாலே
சீர் ஏறு வாசகம் செய்ய நின்ற— சிறந்த சொற்களைக்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணும்படி நின்ற
திரு மாலை— ஸ்ரீயப்பதியை
நாடுதிர் ஏல்—;
வார் ஏறு— கச்சணிந்த
கொங்கை— திருமுலைத்தடத்தையுடைய
உருப்பிணியை— ருக்மிணிப் பிராட்டியை
வலிய— பலவந்தமாக
பிடித்துக்கொண்டு— பிடித்துக்கொண்டு
தேர் ஏற்றி— தேரின்மேலேற்றி
சேனை நடுவே— ருக்மனால் எடுத்துவிடப்பட்ட ஸேனைக்கு நடுவேநின்று
போர் செய்ய— யுத்தம்பண்ண
சிக்கன— த்ர்டமாக
கண்டார் உளர்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. நீரேறுசெஞ்சடை நீலகண்டனும். (க) “[illegible]” என்கிறபடியே திருவுலகளந்தருளுகிறபோது, ப்ரஹ்மா திருவடிவிளக்கின ஜலம்விழுகிறதைக்கண்டு, பாவநார்த்தமாக அத்தை சிரஸ்ஸாலே தரிக்கையாலே அந்த ஜலத்தோடே கூடியிருப்பதாய், சிரகாலம் தபஃபரனாய்ப் பேணுதலற்றிருக்கையாலே சிவந்திருக்கிற ஜடையையுடையனாய்; (உ) “[illegible]” என்கிறபடியே ஸமுத்ரமதந ஸமயத்தில் மூண்டுறக்கிளம்பின தீவ்ரமானவிஷத்தை “நீ இத்தை க்ரஸி” என்று ஸர்வேச்வரன் நியமிக்க க்ரஸிக்கையாலும், அதுதான் ஹ்ர்தயத்திலே கருடத்யாநமும்

(க) “தத்ம்பு பதிதம் த்ர்ஷ்ட்வா ததார சிரஸா ஹரஃ - பாவநார்த்தம் ஜடாமத்யே யோக்யோஸ்மீ த்யவதாரணாத்.” (உ) “நாராயணாஜ்ஞயாதேந நீலகண்டத்வமாப்நுயாத்.”

சிரஸ்ஸிலே சந்த்ரகலையுமாகையாலே கண்டத்தளவிலே நின்றுவிடுகையாலும் கறுத்திருந்துள்ளகண்டத்தை யுடையனான ருத்ரனும். நான்முகனும். ஸ்தோத்ரம்பண்ணுகைக்கிடான பல முகத்தையுடைய ப்ரஹ்மாவும். முறையால் சீரேறுவாசகம் செய்யநின்ற. ப்ரஹ்மபாவனை தலையெடுத்து, தான் சேஷியும் தாங்கள் சேஷபூதருமான முறையால், தன்னுடைய குணங்களால் ப்ரசுரமான வசநங்களைக்கொண்டு ஸ்தோத்ரம்பண்ணும்படி நின்ற. திருமாலை நாடுதிரேல். தத்ததபீஷ்டப்ரதனான ஸ்ரீயப்பதியை, அவனும் அவளுமான சேர்த்தியோடேகாணவேணும் என்று தேடுகிறீர்களாகில்.

வாரேறுகொங்கை யுருப்பிணியை. "க்ர்ஷ்ணனுக்கு போக்யமானவிவை பிறர்கண்படவொண்ணாது" என்று, "செங்கச்சுக்கொண்டு கண்ணாடையார்த்து" என்கிறபடியே கச்சாலே மறைத்துக்கொண்டிருக்கிற திருமுலைத்தடங்களையுடைய ருக்மிணிப்பிராட்டியை. வலியப்பிடித்துக்கொண்டு தேரேற்றி. பந்துக்களையுமுடன்படுத்தி * கண்ணாலமும் கோடித்துக் கைப்பிடிப்பதாகத் திண்ணார்ந்திருந்த சிசுபாலன் லஜ்ஜாவிஷ்டனாய் அண்ணாந்திருக்கும்படியாக ஆரூடவருகிற ஸமயத்திலே சென்று, அவளுக்கும் தனக்குமுண்டான மனப்பொருத்தமே ஹேதுவாக, பந்துக்களுடன்படவன்றிக்கே பலத்திலே பிடித்துக்கொண்டு தேரிலேயேற்றி. சேனைநடுவுபோர்செய்ய. ருக்மிணிப்பிராட்டி தமையனான ருக்மன் இந்த பரிபவம் பொறாமையாலே அநேகராஜாக்களும் தானும் பஹுஸேனையோடேவந்து போகாதபடி வழிகட்டிச்சூழ்ந்துகொள்ள, அந்த ஸேனைக்குநடுவே நின்று அவர்களோடே யுத்தம்பண்ணச்சிக்கனக்கண்டாருளர். அந்த மணக்கோலத்தையும் வீரக்கோலத்தையும் த்ர்டமாகக் கண்டவர்களுளர். ... ... ... ... ... ... ... ... ... ௫.

மூ.—பொல்லாவடிவுடைப்பேய்ச்சி துஞ்சப்புணர்முலைவாய்மடுக்க
வல்லானை மாமணிவண்ணனை மருவுமிட நாடுதிரேல்
பல்லாயிரம் பெருந்தேவிமாரோடு பௌவமெறிதுவரை
எல்லாருஞ்சூழச் சிங்காசனத்தே யிருந்தானைக் கண்டாருளர். ௬.

பதவுரை.

பொல்லா— கோரரூபமான
வடிவு உடை— வடிவையுடைய
பேய்ச்சி— பூதனையானவள்
துஞ்ச— மாளும்படியாக
புணர்— தன்னில் தான் சேர்ந்திருந்துள்ள
முலை— முலையிலே
வாய் மடுக்க வல்லானை— வாயைவைத்து உண்ணவல்லவனாய்
மா மணி— நீலமணிபோன்ற
வண்ணன்— திருநிறத்தை யுடையவன்
மருவும் இடம்— பொருந்தி வர்த்திக்குமிடத்தை
நாடுதிர் எல்— தேடுகிறீர்களாகில்
பல் ஆயிரம் பெருந்தேவிமாரொடு— பதினாறுயிரம் தேவிமாரோடே கூட
பௌவம்— ஸமுத்ரத்திவலைகள்
எறி— வீசாநின்றுள்ள
துவரை— ஸ்ரீத்வாரகையிலே
எல்லாரும்— தேவிமாரெல்லாரும்
சூழ— சுற்றுஞ் சூழ்ந்துநிற்க
சிங்காசனத்து— ஸிம்ஹாஸநத்திலே
இருந்தானை— எழுந்தருளி யிருந்தவனை
கண்டார் உளர்.

வ்யா. ஆறும்பாட்டு. பொல்லாவடிவுடைப் பேய்ச்சிதுஞ்ச. வரண்டுவளைந்து நரம்பும் எலும்பும் தோன்றும்படியிருக்கையாலே பொல்லாதான வடிவையுடைய பேய்ச்சியான

ளை முடியும்படியாக. புணர்முலைவாய் மடுக்கவல்லானை. அந்த வடிவைமறைத்து "பெற்ற தாய்போல்வந்த பேய்ச்சி" என்கிறபடியே யசோதைப்பிராட்டியோடொத்த வடிவைக்கொண்டு வருகையாலே தன்னில்தான் சேர்ந்திருந்துள்ள முலையிலே, அவள் முலைகொடாவிடில் தரியாதாளாய்க்கொண்டு "முலைப்பாலுண்" என்று கொடுத்தாற்போலே, தானும் முலையுண்ணுவிடில் தரியாதானாய்க்கொண்டு பெரிய அபிநிவேசத்தோடே வாயைமடுத்து உண்ணவல்லவனை. "உள்ளத்தினுள்ளே அவளையுறநோக்கி" என்கிறபடியே வருகிறபோதே அவள் க்ர்த்ரிமமெல்லாம் திருவுள்ளத்திலே ஊன்றதர்சித்திருக்கச்செய்தே, அவள் தாயாகவேயிருந்து முலைகொடுத்தாற்போலே, தானும் பிள்ளையாகவேயிருந்து முலையுண்டு அவளைமுடித்த ஸாமர்த்த்யத்தைச் சொல்லுகிறது- வல்லானையென்று. மாமணிவண்ணனை. "விடப்பாலமுதாவமுதுசெய்திட்ட" என்கிறபடியே அவளுடைய விஷப்பாலை அம்ர்தமாகவமுது செய்து அவளை முடித்து, ஜகத்துக்கு சேஷியானதன்னை நோக்கிக்கொடுக்கையாலே, நீலரத்நம்போலே உஜ்வலமான திருமேனியை யுடையனாயிருந்தவனை. மருவுமிடம் நாடுதிரேல். திருவுள்ளம் பொருந்தி வர்த்திக்கிறஸ்த்தலம் தேடுகிறீகோளாகில்.

பல்லாயிரம் பெருந்தேவிமாரோடு. நரகவதாநந்தரம் கொண்டுவந்து பாணிக்ரஹணம் பண்ணப்பட்டவர்களாய், ஒரொருத்தரே அத்யந்த விலக்ஷணைகளாயிருக்கும் பதினாறுயிரந்தேவிமாரோடே. ஆயிரமிரண்டாயிரமன்றிக்கே, பதினாறுயிரமுண்டாகையாலே- "பல்லாயிரம்" என்கிறது. பௌவமெறிதுவரை. ச்ரமஹரமாம்படி ஸமுத்ரத்தின் திவலைகள் வீசாநிற்கும் ஸ்ரீமத்த்வாரகையிலே. எல்லாருமிதப்பாதி. தேவிமாரெல்லாருஞ்சூழ ஸிம்ஹாஸநத்திலே ரஸோத்தரனாயெழுந்தருளியிருந்தவனை அவ்விருப்பிலே கண்டவர்களுளர். ... ... ௬

மூ.—வெள்ளைவிளிசங்கு வெஞ்சுடர்திருச்சக்கர மேந்துகையன்
உள்ளவிடம் வினவிலுமக்கிறைவம்மின் சுவடுரைக்கேன்
வெள்ளைப்புரவிக் குரக்கு வெல்கொடித் தேர்மிசைமுன்புநின்று
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்கைசெய்யக் கண்டாருளர். ௭.

பதவுரை.

| | |
|---|---|
| வெள்ளை— வெண்மைநிற முடைத்தாய் | உரைக்கேன்— சொல்லுகிறேன்; |
| விளி— "அநுபவ கைங்கர்யங்களில் ருசியுடையார் வாருங்கோள்" என்று தன் த்வநியாலே அழைப்பாநிற்கிற | வம்மின்— வாருங்கோள்; |
| சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் | வெள்ளை— வெளுத்த |
| வெம்— வெவ்விதான | புரவி— குதிரை பூண்டிருப்பதாய் |
| சுடர்— ஜ்யோதிஸ்ஸையுடைய | குரக்கு— வாநரமான [ தான |
| திரு சக்கரம்— திருவாழி யாழ்வானையும் | வெல் கொடி— வெற்றிக் கொடியையுடைத் |
| ஏந்து— தரித்துக்கொண்டிருக்கிற | தேர் மிசை— ( அர்ஜுநனுடைய ) தேரின்மேலே |
| கையன்— திருக்கைகளை யுடையவன் | முன்பு நின்று— அவனுக்கு ஸாரதியாய் முன்னே நின்று |
| உள்ள இடம்— இருக்குமிடத்தை | படை— ஸைந்யத்துக்கு |
| வினவில்— கேட்கிறீகோளாகில் | கள்ளம் துணை ஆகி— க்ருத்ரிமத்துணையாய் |
| உமக்கு— உங்களுக்கு | பாரதம்— பாரதயுத்தத்தை |
| இறை சுவடு— சிறிது அடையாளம் | கைசெய்ய— கையுமணியும் வகுத்து நடத்தக் கண்டார் உளர். |

வ்யா. ஏழாம்பாட்டு. வெள்ளைவிளிசங்கு. ச்யாமளமான திருமேனிக்கு பரபாகமான வெண்மையையுடைத்தாய், அநுபவகைங்கர்யங்களில் ருசியுடையார் வாருங்கோள் என்று தன்த்வநியாலே அழையாநிற்கும் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும். வெஞ்சுடர் திருச்சக்கரம். ஆச்ரிதவிரோதிகள் விஷயத்தில், லௌகிகாக்நி, நரகாக்நி, 'தண்ணீர்' என்னும்படி வெவ்விதான சுடரையுடைய திருவாழியையும். ஏந்துகையன். அழகுக்கும் விரோதிநிரஸநத்துக்கு முடலாக ஸர்வகாலமும் பூவேந்தினாற்போலே தரித்துக்கொண்டிருக்கும் திருக்கைகளையுடையவன். உள்ளவிடம்வினவில். வர்த்திக்கிற ஸ்தலம் கேட்கிறீகோளாகில். உமக்கிறை வம்மின் சுவடுரைக்கேன். வாருங்கோள், உங்களுக்கு அவன் வர்த்திக்கிறவிடத்துக்கு அல்பமடையாளம் சொல்லுகிறேன்.

வெள்ளையித்யாதி. சரணாகதனாய் தனக்கபிமதனான அர்ஜுநனுடைய, வெளுத்த புரவிபூண்டிருப்பதாய், வாநரமான வெற்றிக்கொடியையுமுடைத்தாயிருக்கிற தேரின்மேலே அவனுக்கு ஸாரதியாய் முன்னேநின்று. கள்ளப்படைத்துணையாகி. க்ர்த்ரிமப்படைத்துணை. அதாவது- படைத்துணையாகிறவிடத்தில் இரண்டுதலையு மறியும்படி செவ்வையிலன்றிக்கே, பகலையிரவாக்கியும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும், எதிரியுடைய உயிர்நிலையைக்காட்டிக்கொடுத்தும் செய்தவை. பாரதம்கைசெய்யக்கண்டாருளர். பாரத ஸமரத்தைக் கையுமணியும் வகுத்துநடத்த அத்தசையிலேகண்டவர்களுளர். ... ... ௭.

மூ.—நாழிகை கூறிட்டுக் காத்துநின்ற வரசர்கடம்முகப்பே
நாழிகைபோகப் படைபொருதவன் றேவகிதன்சிறுவன்
ஆழிகொண்டன் றிரவிமறைப்பச் சயத்திரதன்றலையைப்
பாழிலுருளப் படைபொருதவன் பக்கமேகண்டாருளர். ௮.

பதவுரை.

நாழிகை— நாழிகையை
கூறிட்டு— விபஜித்து
காத்து நின்ற— காத்துக்கொண்டு நின்ற
அரசர்கள் தம் முகப்பே — ராஜாக்களுக்குமுன்னே
நாழிகை— பகல் முப்பது நாழிகையும்
போக—போயிற்றென்று தோற்றும்படியாக
படை— திருவாழியாழ்வானைக்கொண்டு
பொருதவன்— பொருதவனை
தேவகிதன் — தேவகிப்பிராட்டியினுடைய
சிறுவன்— பிள்ளையாய் [வன்று
அன்று—அவர்கள் காத்துக்கொண்டு நின்ற
ஆழிகொண்டு— திருவாழியைக்கொண்டு
இரவி— ஸூர்யனை
மறைப்ப— மறைக்க
சயத்திரதன்— ஜயத்ரதனுடைய
தலையை— தலையை
பாழில்— பாழி பள்ளத்திலே
உருள— உருளும்படி
படை— அம்பாலே
பொருதவன்— பொருத அர்ஜுநனுடைய
பக்கமே— அருகே
கண்டார் உளர்.

வ்யா. எட்டாம்பாட்டு. நாழிகையித்யாதி. "ஜயத்ரதனை அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்லக்கடவேன்" என்று அர்ஜுநன் ப்ரதிஜ்ஞைபண்ண, அதுக்கிடமறும்படி ஒரு புருஷப்ரமாணமன்றியே தீர்க்கனானவனை ஒருபுருஷப்ரமாணமாகக் குழிக்குள்ளே நிறுத்தி,

"நீங்கள் இன்னதனைநாழிகை காத்துக்கொள்ளுங்கோள், நாங்கள் இன்னதனைநாழிகைகாத்துக்கொள்ளுகிறோம்" என்று பகல்முப்பது நாழிகையும் இவனுக்கு ஒருநலிவு வாராதபடி காத்துக்கொண்டுநின்று அதிரத மஹாரதரான ராஜாக்கள் தங்கள்முன்னே. நாழிகைபோகப் படைபொருதவன் தேவகிதன்சிறுவன். பகல் நாழிகை முப்பதும் போய்த்தென்று தோற்றும்படியாகப் படைபொருதவனான தேவகீபுத்ரன். நாழிகைபோகப் படைபொருகையாவது- திருவாழியைக்கொண்டு ஆதித்யனைமறைக்கை. அதுதான் முன்சொல்லப்படாநின்றதிறே. கீழ்ப்பாட்டில், "திருச்சக்கரமேந்துகையனுள்ளவிடம் வினவில்" என்றாற்போலே, இங்கும், "தேவகிதன்சிறுவன்-உள்ளவிடம்வினவில்" என்று கூட்டிக்கொள்வது. அடிக்கடி- பூர்வோத்தரங்களுக்குச் சேரவேண்டுகையாலே.

ஆழிகொண்டன்றிரவிமறைப்ப. அப்படி அவர்கள் காத்துக்கொண்டு நின்றவன்று பகல்நாழிகை சென்றதாகத்தோற்றும்படி நினைவறிந்து கார்யஞ்செய்யும் திருவாழியைக்கொண்டு ஆதித்யனை மறைக்க. ஜயத்ரதனிக்யாதி. "ஆதித்யனஸ்தமித்தான்" என்று அவனைக் சூழியினின்றும் அவர்கள்கிளப்பி நிறுத்தினவளவிலே, இருள்பரப்பின திருவாழியைப்பேராநிறுத்தி, ஜயத்ரதனுடைய தலையைப் பாழியிலேகிடந்துருளும்படி அப்பாலேபொருத அர்ஜுநனுடையவருகே கண்டாருளர். நிரவதிகதேஜோரூபமான திருவாழியாலே ஆதித்யனைமறைத்தால் லோகத்துக்கு மிகவும் வெளிச்செறிப்புண்டாயித்தனையன்றோ, "ஆதித்யனஸ்தமித்தான்" என்னும்படி கண்களுக்கு இருண்டுதோற்றுவானென்னென்னில்; இந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்படி அளவுபட்டிருக்கையாலே தமஸ்ஸுப்போம்படியாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே, திருவாழியாழ்வானுடைய தேஜஸ்ஸு நேர்கொடுநேர் கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடி மிக்கிருக்கையாலே பளபளத்துக் கண்ணை யிருளப்பண்ணிற்று. இதுதான் "ஆழியாலங்கன்றாழியை மறைத்தான்" என்கிறவிடத்திலே பூர்வர்களருளிச்செய்தார்களிறே. ... ... ... அ.

மூ.—மண்ணுமலையு மறிகடல்களு மற்றுமியாவுமெல்லாம்
திண்ணம் விழுங்கியுமிழ்ந்ததேவனைச் சிக்கனநாடுதிரேல்
எண்ணற்கரியதோ ரேனமாகி யிருநிலம்புக் கிடந்து
வண்ணக்கருங்குழல் மாதரோடு மணந்தானைக் கண்டாருளர். கூ.

பதவுரை.

மண்ணும்— பூமியும்
மலையும்— மலைகளும்
மறி— அலை யெறிகிற
கடல்களும்— ஸமுத்ரங்களும்
மற்றும்— மற்றுமுண்டான
யாவும்— எல்லாப்பொருள்களுமான
எல்லாம்— இவை எல்லாவற்றையும்
திண்ணம்— நிச்சயமாக
விழுங்கி — ப்ரளயகாலத்திலே விழுங்கி
உமிழ்ந்த— பிற்பாடு வெளிப்படுத்தின
தேவனை— தேவனை
சிக்கன— ஊற்றத்துடனே
நாடுதிர் ஏல் - ;
எண்ணற்கு அரியது— நினைக்க அரிதான
ஓர்— ஒப்பற்ற
ஏனம் ஆகி— மஹாவராஹமாய்
இரு நிலம்— பெரியபூமியை
புக்கு— ப்ரளயத்திலே முழுகி
இடந்து — அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்து
வண்ணம்— அழகியதாய்
கரு— கறுத்திருந்துள்ள

| | |
|---|---|
| குழல்— கூந்தலையுடைய | மணந்தானை— திருமணம் புணர்ந்தவனை |
| மாதினோடு— ஸ்ரீபூமிப் பிராட்டியோடே | கண்டார் உளர். |

வ்யா. ஒன்பதாம்பாட்டு. மன்னுநமித்யாதி. ஸர்வாதாரையான பூமியும், அது தனக்காதாரமான பர்வதங்களும், பூமிக்குரக்ஷகமாகச் சூழ்ந்து இரைமறிகிறஸமுத்ரங்களும் மற்றுமுண்டான ஸர்வபதார்த்தங்களுமான இவையெல்லாவற்றையும். திண்ணம்விழுங்கி உமிழ்ந்ததேவனை, இந்த்ரஜாலிகரைப் போலன்றிக்கே, நிச்சயமாக ப்ரளயத்திலழியாதபடி திருவயிற்றிலுள்ளேவைத்து, ப்ரளயங்கழிந்தவாறே வெளிநாடுகாண உமிழ்ந்து, இப்படி, ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப் பண்ணுகையால் வந்தபுகர், வடிவிலே தோற்றும் படியிருந்தவனை. சிக்கனாடுதிரேல். மேலிழுத்தபடி "கண்டீரோ" என்று மீளுகை யன்றிக்கே, "கண்டேவிடவேணும்" என்னும் ஊற்றத்துடனே தேடுகிறீகோளாகில்.

எண்ணற்கரியதோரேனமாகி. அழகாலும் வடிவிற்பெருமையாலும் மநஸ்ஸாலே பரிச்சேதிக்க வொண்ணாதபடி யிருக்கையாலே, அத்விதீயமான மஹாவராஹமாய். இரு நிலம்புக்கிடந்து. மஹாப்ருதிவியை ப்ரளயத்திலேமுழுகி அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடு வித்தெடுத்து. வண்ணமித்யாதி. தன்னுடைய அபிமாநாந்தர்ப்பூதையான பூமியை, இப்படி ப்ரளயத்தினின்று மெடுத்தமையைக்கண்ட ஹர்ஷத்தாலே, அதுக்கு அபிமாநியான ஸ்ரீபூமிப்பிராட்டி வந்தணைக்க, அழகியதாய்க் கறுத்திருந்துள்ள திருக்குழலையுடைய வளோடே கலந்தவனைக் கண்டாருளர். ... ... ... ... ௯.

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—கரியமுகில்புரைமேனி மாயனைக்கண்ட சுவடுரைத்துப்
புரவிமுகஞ்செய்து செந்நெலோங்கிவிளை கழனிப்புதுவைத்
திருவிற்பொலிமறைவாணன் பட்டர்பிரான் சொன்னமாலைபத்தும்
பரவுமனமுடைப் பத்தருள்ளார் பரமனடி சேர்வர்களே. ௰.

பதவுரை.

| | |
|---|---|
| கரிய முகில்— காளமேகத்தை | திருவின்— ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயால் |
| புரை— ஒத்த | பொலி— விளங்காநிற்பாராய் [கரான |
| மேனி— வடிவையுடையனாய் | மறை வாணன்— வேதத்துக்கு நிர்வாஹ |
| மாயனை— ஆச்சர்ய குணசேஷ்டிதயுக்தனை | பட்டர்பிரான் — பெரியாழ்வார் |
| கண்ட— பார்த்த | சொன்ன— அருளிச்செய்த |
| சுவடு— அடையாளங்களை | மாலை— சொல்மாலையான |
| உரைத்து— சொல்லி | பத்தும்— இப்பத்தையும் |
| செந்நெல்— செந்நெற்பயிர்களானவை | பரவும்— பேசும்படியான |
| ஓங்கி— உயர்ந்து [தலைவணங்கி | மனம் உடை— மநஸ்ஸையுடைய |
| புரவி முகம் செய்து— குதிரைமுகம்போலே | பத்தர் உள்ளார்— பக்தராயுள்ளவர்கள் |
| விளை— விளையாநின்றுள்ள | பரமன்— பரமபுருஷனுடைய |
| கழனி— கழனிகளையுடைய [வராய் | அடி— திருவடிகளை |
| புதுவை— ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலை | சேர்வர்கள்— கிட்டப்பெறுவர்கள். |

வ்யா. பத்தாம்பாட்டு. கரியமுகில்புரைமேனிமாயனை. காளமேகம்போன்ற வடிவையுடையனாய், ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையனானவனை. கண்டதுவுமோத்து. "காணவேணும்" என்று தேடுகிறவர்களுக்கு, கண்டவடையாளங்களைச்சொல்லி. தேடுகிறவர்களுடைய அவஸ்த்தைதையையும், கண்டவர்களுடைய அவஸ்த்தைதையையு மடைந்துபேசினார் தாமேயிறே. புரவியித்யாதி. செங்நெற்களானவை யுயரவளர்ந்து கதிர்க்கநத்தாலே குதிரை முகம்போலே தலைவணங்கி விளையாநின்றுள்ள கழனிகளையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய், "பாடணைப்பயி லும் திருவுடையார்" என்கிறபடியே பகவதாலத்திருவுடையரான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயால் மிக்கிருப்பாராய், * வேதப்பயன் கொள்ளவல்லவராகையாலே வேதத்துக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த மாலையானவிப்பத்தையும். பரவுமித்யாதி. ப்ரீதிபரவசராய்க்கொண்டு அடைவுகெடப்பேசும் மநஸ்ஸையுடைய பக்தராயுள்ளவர்கள். பரமனடிசேர்வர்களே. காண்கைக்குத்தேட வேண்டாதே நித்யாநுபவம் பண்ணலாம்படி, ஸர்வஸ்மாத்பரனானவனுடைய திருவடிகளைச் சேரப்பெறுவர்கள். ... ௰

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—கதிர் நாந்தகம் கோலே தோயம் நீரேறு பொல்லா
வெள்ளே நாழிகை மனே கரிய வலம்பா.

———(*)———

ஆ திருமொழி ௩௫-க்கு, பாட்டு-௩௨௰.

———(०)———

நாலாம்பத்து - இரண்டாந்திருமொழி - அலம்பாவெருட்டா, ப்ரவேசம்.

அ. க்ர்ஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களை நெடுக அநுபவித்துக்கொண்டுபோந்து, அத்தோடேசேர ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும் அநுபவித்தவநந்தரம், "தத்ததவதாரவிசிஷ்டனான ஸர்வேச்வரனைக் கண்ணாலேகண்டு அநுபவிக்கவேணும்" என்னும் அபேக்ஷை பிறந்து தமக்கு ஒருபுடை நடந்து செல்லுகிறபடியையும், தமக்கு மாநஸாநுபவவைசத்யத்தாலே அவன்றன்னைக் கண்ணாலே கண்டாற்போலே ஒருபுடை ப்ரகாசிக்கிறபடியையுமநுஸந்தித்து, அவையிரண்டையும் "அவனைக்காணவேணும்" என்று தேடுகிறார் சிலரும், "அப்படி தேடுகிறீர்களாகில் கண்டார் சிலருளர்" என்று சொல்லுகிறார் சிலருமாக, தம்மை இரண்டுவகை யாக்கிக்கொண்டு பேசுகிறாராய் நின்றார்-கீழ்; "அவதாராந்தரங்கள்தன்னைக் கண்ணாலேகண்டநுபவிக்கவேணும்" என்னும் ஆசைபிறந்தாலும் பெருக்காறுபோலே அவை தத்காலத்திலுள்ளார்க்கு அநுபாவ்யமாய், பிற்காலத்திலுள்ளார்க்குக் கிடையாததாயிருக்கிறபடியையும், "பின்னானார்வணங்குஞ்சோதி" என்கிறபடியே அவதாரத்தில் பிற்பாடரானவர்களுக்கும் இழக்கவேண்டாதபடி ஸர்வேச்வரன் அர்ச்சாவதாரமாய்க்கொண்டு உகந்தருளின நிலங்களிலே அந்த அவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படியாக எழுந்தருளி நிற்கிறபடியையு மநுஸந்தித்து, உகந்தருளின நிலங்களிலே அவனை யநுபவிக்கக் கோலி, அவையெல்லாவற்றிலும், "தென்னாவுயர் பொருப்பும் தெய்வவடமலையு மென்னுமிவையே முலையாவடிவமைந்த" என்கிறபடியே- ஸ்ரீபூமிப்பிராட்டிக்குத் திருமுலைத்தடங்களாம்படி யிருக்கையாலே அவனுக்கு அத்யந்தாபிமத ஸ்த்தலங்களாயிருக்கிற திருமலைகளிர

ண்டிலும் வைத்துக்கொண்டு, தெற்குத்திருமலையிலே நிற்கிறநிலையிலே அநுபவிப்பதாக முந்துற இழிந்து, ராமக்ர்ஷ்ணாத்யவதார சேஷ்டிதங்களெல்லாம் அந்நிலையிலே ப்ரகாசிக்கிற படியைப் அநுபவியாநிற்கச்செய்தே, தத்விஷயத்திலும் ததீயவிஷயமே ப்ராப்யத்துக்கு சரமாவதியாக அறுதியிட்டிருக்குமவராகையாலே; * கிள்ரொளியிளமையில் ஆழ்வாரநுபவித்தாற்போலே, " அங்கேயெழுந்தருளிநிற்கிற அழகரிலுங்காட்டில் அவர் விரும்பி யெழுந்தருளிநிற்கிற திவ்யஸ்தலமான திருமலையே ப்ராப்யம் " என்று அநுஸந்தித்து, அத்திருமலையினுடைய வைபவத்தை பராமுகமாகப்பேசி யநுபவிக்கிறார் இத்திருமொழியில்:... *

மூ.—அலம்பாவெருட்டாக் கொன்றுதிரியு மரக்கரைக்
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய்நின்ற கோன்மலை
சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்க ளாடுஞ்சீர்ச்
சிலம்பாறுபாயுந் தென்றிருமாலிருஞ்சோலையே. க.

பதவுரை.

தெய்வம் மகளிர்கள்— தேவஸ்த்ரீகள்
சிலம்பு— பாதச்சிலம்புகள்
ஆர்க்க— ஒலிக்கும்படி
வந்து— பூலோகத்திலே வந்து
ஆடும்— நீராடா நின்றுள்ள
சீர்— பெருமையையுடைய
சிலம்பு ஆறு —திருச்சிலம்பாறானது
பாயும்— இடைவிடாமல் பெருகாநிற்பதாய்
தென்— அழகியதான [லையானது;
திருமாலிருஞ் சோலை— திருமாலிருஞ் சோ

அலம்பா— ப்ராணிகளை அலைத்தும்
வெருட்டா— பயப்படுத்தியும்
கொன்று— கொன்றும்
திரியும்— திரியாநின்றுள்ள
அரக்கரை— ராக்ஷஸர்களை [பாழ்க்கி
குலம் பாழ்படுத்து — ஸகுடும்பமாகப்
குலம்— இக்ஷ்வாகுவம்சத்துக்கு
விளக்காய் நின்ற— ப்ரகாசகனாய் நின்ற
கோன்— ஸர்வஸ்வாமியானவன் நித்யவா
ஸம்பண்ணுகிற
மலை— திருமலையாம்.

வ்யா. முதற்பாட்டு. அலம்பா. ப்ராணிகளையிருந்தவிடத்திலிருக்கவொண்ணாதபடி அலைத்து. அதாவது- " இவர்கள்கீழ் நமக்கு வர்த்திக்கப்போகாது, எங்கேபோவோம் " என்று நின்று தளும்பும்படி பண்ணுகை. வெருட்டா. வெருளப்பண்ணி. அதாவது- தங்களுடைய உக்ரவேஷங்களையும் உக்ரவ்யாபாரங்களையும் கண்டுபயப்படும்படி பண்ணுகை. அன்றிக்கே, " அலம்பா வெருட்டா " என்றதுக்கு- ஆரவாரித்துச் சிவிட்கைவிளைத்து அஞ்சப்பண்ணி யென்னவுமாம். கொன்றுதிரியும். அவ்வளவுமன்றிக்கே, கொலைக்கஞ்சாமல் கொன்று, அதுதானே யாத்ரையாய்த் திரியாநிற்கும். அரக்கரை. கீழ்ச்சொன்னவை யெல்லாவற்றுக்குமடியான ஜந்மத்தையுடையவர்களை. கள்ளர், பள்ளர், வலையர் முதலானோர்க்கு ப்ராணிகளை அலைக்கையும் பயப்படுத்துகையும் கொல்லுகையும் ஜந்மஸித்தமாய் வருமாபோலே, இவர்களுக்குமிது ஜந்மஸித்தமாய் வருமாய்த்து. காதூஷணாதிகளும் ராவணாதிகளுமான ராக்ஷஸர் த்ரைலோக்யத்தையும் இப்படி பீடித்துக்கொண்டிறே திரிந்தது. குலம்பாழ்படுத்து. அவர்களை நிரஸிக்கிறவிடத்தில் அவர்கள்தங்கள்ளவன்றிக்கே மறுகிளையறும்படி குட்டிக்கொலையாகவறுத்துப் பொகடுகையாலே, குலமாகப்பாழ்பட்டுப் போம்படிபண்ணி. ஸ்ரீவிபீஷணனும் அவனோடே சேர்ந்தவர்களும் அவர்களுக்குக் கூட்டல்லர்களிறே. " பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை " என்றது- " நல்லவரக்கருமுண்டு " என்று திருவுள்ளம்பற்றியிறே. " இலங்கை யரக்கர்குலம் முருடுதீர்த்தபிரான் " என்றாரிறே ஆழ்வாரும். ஜந்மமது

வானுலும் அதுக்கேடான வ்யாபாரமில்லாதபோது அவர்களில் வ்யாவர்த்தனுய்விடுமிறே. (க) "விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டிதஃ" என்றூர்களிறே- அவர்கள் தாங்களே. (உ) "ஆஜ்யாஹுதிமமந்த்ரேவ ராக்ஷஸாநாம் பலாபலம்" என்று - இக்ஷ்வாகுவம்சஜனை நினைத்து,பெருமாள் கைக்கொண்டருளினபோதே அந்தஜந்மந்தானும் மாறிப்போய்த்திறே. ஆகையால், "குலம் பாழ்படுத்து" என்னக்குறையில்லை. குலவிளக்காய்நின்ற. ராவணன் திக்விஜயம்பண்ணினவன்று தொடங்கி ஒளிமழுங்கிக்கிடந்த இக்ஷ்வாகுவம்சம், பெருமாள் திருவவதரித்து,ராவணாதிகளைக் கிழங்கெடுத்துப்பொகட்டபின்பாய்த்து ப்ரகாசமாய்த்து; ஆகையாலே, குலத்துக்கு ப்ரகாசகனாய் நின்றவென்கிறது. "வெங்கதிரோன் குலத்துக்கோர்விளக்காய்த்தோன்றி" என்றாரிறே- ஸ்ரீகுலசேகரப்பெருமாள். இவர்கள்தாம் *பேசிற்றேபேசும் ஏககண்டரிறே. கோன்மலை. ஸர்வஸ்வாமியானவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம். "குலவிளக்காய் நின்றகோன்மலை" என்கையாலே- இன்னம் அங்ஙனொத்த விரோதிகளை நிரஸித்து ஆச்ரிதரக்ஷணம் பண்ணுகைக்காக எழுந்தருளிநிற்கிற ஸ்தலமென்கிறது. ஆகையால், ஸர்வஸ்வாமித்வம் வீறுபெற்றது- இங்கேயிறே.

சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடும். முன்பு - தேவஸ்த்ரீகள் திருச்சிலம்பாற்றில் ஸ்நாநம்பண்ணவரும்போது ராவணாதிகளுக்கு அஞ்சி சிலம்பொழிந்தும் ‡ பஞ்சடையிட்டும் வருவர்களாய்த்து; இப்போது- அங்ஙனன்றிக்கே, அரக்கரைக் குலம்பாழ்படுக்கையாலே, சிலம்புகள் த்வநிக்கும்படி வந்து, தேவஸ்த்ரீகளானவர்கள் ஸ்நாநம்பண்ணுகிற்கிற. இவர்கள் ஏதுக்காக இப்படி ஸ்நாநம்பண்ணுகிறதென்னில்; ஸ்வர்க்கத்திலிருப்புக்கு ஸாதநமாக. சாலில் நீர்மாண்டாற்போலே, முன்பு ஆர்ஜித்தபுண்யம்மாண்டால், தேடிக்கொள்ளும்தேசம் இது வாய்த்து. சீர்த்யாதி. இப்படியிருந்துள்ள கௌரவத்தையுடைய திருச்சிலம்பாறானது அவிச்சிந்ந ஸ்ரோதோரூபேண ப்ரவஹியாநிற்கும்.(௩) "க்ஷுத்ருட்பரீதமாதிசீதலம்பு நதீஜலம்" என்றுதொடங்கி ஒருச்லோகத்தாலே திருச்சிலம்பாற்றினுடைய தன்மையவர்ணித்து அருளிச்செய்தாரிறே- ஆழ்வான். தென்திருமாலிருஞ்சோலையே. தென் என்று- அழகாதல்; தெற்குத்திக்கிலேயான வென்னுதல். "மால்" என்றும், "இருமை" என்றுமிரண்டும்- பெருமைக்குவாசகமாய், சோலையினுடைய ஒக்கத்தையும் பரப்பையும் சொல்லுகிறது. இப்படி இருக்கிறசோலைகளை யுடைத்தாகையாலே மாலிருஞ்சோலையென்று அத்தேசத்துக்கு நிரூபகம். * வநகிரியிறே. ... ... ... ... ... ... ... க.

மூ.—வல்லாளன்றேளும் வாளரக்கன் முடியுந்தங்கை
பொல்லாதமூக்கும் போக்குவித்தான் பொருந்துமலை
எல்லாவிடத்திலு மெங்கும்பரந்து பல்லாண்டொலி
செல்லாநிற்குஞ் சீர்த்தென்றிருமாலிருஞ்சோலையே. உ:

பதவுரை.

| | |
|---|---|
| பல்லாண்டுஒலி—மங்களாசாஸநத்வநியானது | எங்கும்— திருமலையின் பரப்பெங்கும் |
| எல்லா இடத்திலும் — எல்லாரிடங்களிலும் | பரந்து — பரவி |

(க) "விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டிதஃ." (உ) "ஆஜ்யாஹுதிமமந்த்ரேவ ராக்ஷஸாநாம் பலாபலம்." ‡ பஞ்சடையிட்டும் - சிலம்பு த்வநியாதபடி பஞ்சை அதிலே அடைத்துக்கொண்டுமென்றபடி. (௩) "க்வசித்க்வசித்தாமிதி க்வசநமந்தமந்தாலஸா"

செல்லாநிற்கும்— செல்லாநின்றுள்ள
சீர்— பெருமையையுடைத்தாய்
தென் திருமாலிருஞ்சோலை—;
வல்— வலிய
ஆளன்— ஆண்பிள்ளைத்தனத்தையுடையனும்
வாள்— ருத்ரனிடத்தில் பெற்ற வாளையுமுடையனுன
அரக்கன்— ராவணனுடைய
தோளும்— தோள்களும்
முடியும்— தலைகளும்
தங்கை— அவன் தங்கையான சூர்ப்பணகையுடைய
பொல்லாத— கொடிதான
மூக்கும்— மூக்கும்
போக்குவித்தான்— அறுப்புண்டு போம்படி பண்ணினவன்
பொருந்தும்— நித்யவாஸம்பண்ணுகிற
மலை— திருமலையாம்.

வ்யா. இரண்டாம்பாட்டு. வல்லாளன். வலிய ஆண்மையை யுடையவன்; ஆண்பிள்ளைத்தனத்தில்வந்தால் ப்ரபலனுனவனென்கை. திக்கஜங்களோடே பொருதும் திக்பாலகர்களை ஜயித்துமிருக்குமவனிறே. (க) "ஹிமவாந்மந்தரோ மேருஸ் த்ரைலோக்யம்வா ஸஹாமரை: - சக்யம்புஜாப்யா முத்தர்த்தும்" என்றவனிறே. வாளரக்கன். அதுக்கு மேலே, ருத்ரன்பக்கலிலேபெற்ற வாளையுமுடையவன். இத்தால் இந்தத் தோள்வலியும் வாள்வலியு முடையனுகையாலே ஒருவராலும் ஜயிக்கவொண்ணுதவனென்கை. இப்படியிருக்கிறவனுடைய. தோளும் முடியும். இத்தால்-அவனையழியச்செய்கிறவிடத்தில் ஓரம்பாலே அழியச் செய்துவிடலாயிருக்க, தோளைக்கழித்துத் தலையையறுத்துப் போதுபோக்காகநின்று கொன்றபடிசொல்லுகிறது. தங்கைபொல்லாதமூக்கும். "மன்னனிராவணன்றன் நற்றங்கை" என்கிற பலங்கொண்டு ஸ்வைரம் ஸஞ்சரித்துத்திரிந்த * கொல்லையரக்கியான சூர்ப்பணகையினுடைய் ஹேயமான மூக்கையும். போக்குவித்தான். அறுப்புண்டுபோம்படி பண்ணினவன். இவள் மூக்கையரிந்தவோபாதி காணும் அவனுடைய தோளும்முடியுமறுத்த அநாயாஸமும். பொருந்தும்மலை. இப்படி அவனுக்கு ப்ராணஹாநியையும் இவளுக்கு அங்கஹாநியையும் பண்ணினவன், அவதாரம்போலே ¶ தீர்த்தம் ப்ரஸாதியாதே, நித்யவாஸம்பண்ணுகிறமலை.

எல்லாவித்யாதி. அநந்யப்ரயோஜநரோடு, ப்ரயோஜநாந்தரபரரோடு, அநந்யஸாதநரோடு, ஸாதநாந்தரபரரோடு வாசியற, எல்லாருடைய விடங்களிலும் திருமலையிலுள்ளபாப்பெங்கும் வ்யாப்தமாய்க்கொண்டு மங்களாசாஸநத்வநி நடந்துசெல்லாநிற்கும். ப்ரயோஜநாந்தரபரர்க்கும் இது கூடுமோவென்னில்; அவர்களையுமிங்கேவந்து புகுரக்கொள்ள, இந்த நிலமிதிதானே தங்கள் ப்ரயோஜநத்தைமறந்து மங்களாசாஸநத்திலே மூளும்படி பண்ணுமாய்த்து. * புனத்தினைக்கிள்ளிப் புதுவவிக்காட்டுகிற குறவரும் "உன்பொன்னடிவாழ்க" என்று மங்களாசாஸநம் பண்ணும்படியிறே நிலத்தின் மிதிதானிருப்பது. சீர்த்தென்திருமாலிருஞ்சோலையே. இப்படியிருந்துள்ள திருமாலிருஞ்சோலையே. ... ... ... உ,

மூ.—தக்கார்மிக்கார்களைச் சஞ்சலஞ்செய்யுஞ் சலவரைத்
தெக்காநெறியே போக்குவிக்குஞ் செல்வன்பொன்மலை

(க) "ஹிமவாந்மந்தரோமேருஸ்த்ரைலோக்யம்வா ஸஹாமரை: - சக்யம்புஜாப்யா முத்தர்த்தும்."

¶ தீர்த்தம் ப்ரஸாதியாதே - தன்னுடைச் சோதிக்கெழுந்தருளாதே.

எக்காலமுஞ்சென்று சேவித்திருக்குமடியரை
அக்கானெறியைமாற்றுந் தண்மாலிருஞ்சோலையே. ௩.

பதவுரை.

எ காலமும் — எப்போதும்
சென்று — போய்
சேவித்து இருக்கும் — திருவடிதொழுதிரா நின்றுள்ள
அடியரை — தாஸபூதர்களை
அ கான் நெறியை — அந்தக் காட்டுவழியினின்றும்
[ காடு—பாவக்காடு. ]
மாற்றும் — தவிர்ப்பிப்பதாய்
தண் — ஸம்ஸார தாபஹரமான
மாலிருஞ்சோலை—;
தக்கார் — எம்பெருமானோடொக்க க்ருபையையொத்திருக்குமவர்களையும்
மிக்கார்களை — எப்போதுமொக்க அநுக்ரஹசீலராயிருக்கையாலே அவனிலுங்காட்டில் மேன்மையுற்றிருக்குமவர்களையும்
சஞ்சலம் செய்யும் — திருவுள்ளம் கலங்கப்பண்ணுகிற
† சலவரை — ப்ரதிகூலரை
தெக்கு ஆம் — தென்திக்கிலேயான
நெறியே — யமலோகத்தின்வழியே
போக்குவிக்கும் — போம்படி பண்ணுநின்றுள்ள
செல்வன் — ஸ்ரீய:பதி வர்த்திக்கிற
பொன் — ஸ்ப்ருஹணீயமான
மலை — திருமலையாம்.

வ்யா. மூன்றாம்பாட்டு. தக்கார். ஈச்வரனோடொக்க க்ருபையொத்திருக்குமவர்கள். தக்கார். ஈச்வரனுக்குத் தகுதியானவர்கள். அதாவது- நினைவு ஒன்றாயிருக்கை. "ஸர்வாத்மாக்களு முஜ்ஜீவிக்கவேணும்" என்கிற க்ருபை ஒத்திருக்கை. மிக்கார்களை. அவனைப்போலே ஸ்வதந்த்ரராய், அபராதங்களைக் கண்டவாறே "க்ஷிபாமி" "நக்ஷமாமி" என்கையன்றிக்கே, எப்போதுமொக்க அநுக்ரஹசீலரா யிருக்கையாலே அவனிலுங்காட்டில் அதிகராயிருக்குமவர்களை. ஆகையிறே - இவர்களைப்பற்றுமிடத்தில் புருஷகார நிரபேக்ஷமாகப் பற்றலாயிருக்கிறது. "சலிப்பின்றியாண்டெம்மைச் சன்மசன்மாந்தரம் காப்பர்" என்கிறபடியே- ஆச்ரயித்தவர்களை சலநமறநோக்குவாரும், "வருமையு மிம்மையும் நன்மையளிக்கும் பிராக்கள்" என்று இம்மைக்கும் மறுமைக்கும் ரக்ஷிப்பாரும் இவர்களேயிறே. ஆகையால், ஈச்வரனருளிலும் இவர்களருளிறே நன்றாயிருப்பது. "நல்லருளாயிரவர் நலனேந்தும் திருவல்லவாழ்" என்னக்கடவதிறே. சஞ்சலஞ்செய்யும் †சலவரை. பகவத்விஷயத்திலே வைத்த நெஞ்சைக் கலங்கப்பண்ணும் க்ருத்ரிமரை. ஸ்ரீதண்டகாரண்யவாஸிகளானரிஷிகள் பகவத்த்யாநம் குலைந்து (௧) "ஏஹிபச்யசரீராணி" என்று உடம்புக்கு மன்றாடும்படியாய்த்திறே - ராக்ஷஸர்கள் கலக்கினபடி. சலவர் - அநுகூலரைப்போலேயிருந்து ப்ராதிகூல்யம் பண்ணுமவர்கள். தெக்காநெறியே. நரகத்துக்குப்போம்வழியே. யமபுரம் தக்ஷிண திக்கிலேயாகையாலும், நரகத்துக்குப்போவார்போவது அவ்வழியாலே யாகையாலும் "தெக்கா நெறி" என்று-யாம்யமார்க்கத்தைச்சொல்லுகிறது. போக்குவிக்கும். மீட்சியில்லை. செல்வன். இப்படிபோம்படி பண்ணுகைக்குஹேது - ஸ்ரீய:பதியாகையிறே. "அசுரர்க்குத் தீங்கிழைக்கும் திருமால்" என்னக்கடவதிறே. ராவணாதிகளைக் கொல்லுகைக்கு தபஸ்ஸு பண்ணுமவனிறே. பொன்மலை. இப்படியிருக்கிறவன் வர்த்திக்கிற ச்லாக்யமான திருமலை.

† "சலவர்" என்றது- சலத்தையுடையவர் என்றபடி. சலம் - ஊழ்; கபடம், அத்தையுடையவர் - க்ருத்ரிமர். (௧) "ஏஹிபச்யசரீராணி."

எக்காலமுமித்யாதி. அநந்யப்ரயோஜநராய், புறம்பு அந்யபரதையில்லாமையாலே ஸர்வகாலமும்சென்று ஸேவித்திருப்பர்கள். ப்ரயோஜநாந்தரபரர்க்கிறே -காலநியதியுள்ளது; இவர்களுக்கு காலநியதி இல்லை; அதுக்கடி- * அடியாராகையிறே. " எழுவார் விடைகொள்வா ரீன்துழாயானை, வழுவாவகை நினைந்துவைகல், தொழுவார் " என்னக்கடவதிறே. அக்கான் நெறியைமாற்றும். அக்காட்டுவழியைமாற்றும். * பாவக்காடிறே. தண்மாலிருஞ்சோலையே. தட்பமாவது - ஸம்ஸாரதாபத்தை ஆற்றுமதாயிருக்கை. அழகர், ப்ரதிகூலரை * தெக்காநெறியே போக்குவிப்பர்; திருமலையாழ்வார், அநுகூலரை *அக்காநெறியை மாற்றுவிப்பர். " பிணிவீயுமாறுசெய்வான் திருவேங்கடத்தாயன் " "சமன்கொள்வீடுதரும் தடங்குன்றம் " என்னக்கடவதிறே. அழகரைப் பற்றுகையிலும் *அயன்மலை யடைவதுவிறே கருமம். ... ... ... ... ... ... ... ௩

மூ.—ஆனுயர்கூடி யமைத்தவிழவை யமரர்தம்
கோனார்க்கொழியக் கோவர்த்தனத்துச் செய்தான்மலை
வானாட்டினின்று மாமலர்க்கற்பகத்தோத்திழி
தேனாறுபாயுந் தென்திருமாலிருஞ்சோலையே. ௪

பதவுரை.

| | |
|---|---|
| வான்நாட்டில்—ஸ்வர்க்கலோகத்திலுள்ளதாய் | ஆயர்— இடையர்கள் |
| மா— ச்லாக்யமான | கூடி— திரண்டு |
| மலர்— பூக்களையுடைத்தான | அமைத்த – (இந்த்ரனுக்காகச்)சமைத்த |
| கற்பகம்— கல்பவ்ருக்ஷத்தின் | விழவை— ஆராதநோத்ஸவத்தை |
| தொத்தில்நின்று – பூங்கொத்தில் நின்றும் | அமரர்தம்— தேவர்களுடைய |
| இழி— பெருகாநின்றுள்ள | கோனார்க்கு— ராஜாவான இந்த்ரனுக்கு |
| தேன்— தேனானது | ஒழிய— ஆகாமல் |
| ஆறு பாயும்— ஆறாய்க்கொண்டு ஓடாநிற்கிற | கோவர்த்தனத்து- கோவர்த்தநகிரிக்காம்படி |
| தென்— அழகையுடைய | செய்தான்— செய்தவனுடைய |
| திருமாலிருஞ்சோலை–; | |
| ஆன்— பசுக்களையுடைய | மலை— திருமலையாம். |

வ்யா. நான்காம்பாட்டு. ஆனுயரித்யாதி. கோதநரான இடையர், வர்ஷார்த்தமாக வத்ஸரந்தோறும் ஒரு திவஸம் இந்த்ரனை ஆராதித்துப்போரக் கடவர்களாய், அதுக்குடலாக அவர்கள், வாசல்கள்தோறும் ஆக்கியெடுத்துச் செல்லுகிறபடியைக் கண்டு, " நீங்கள்செய்கிறதென்? " என்று கேட்க; " வர்ஷார்த்தமாக இந்த்ரனுக்குச் சோறிடுகையாயிருக்கும் " என்ன; " நாம்பிறந்து வளருகிறவூரிலே ஒரு த்ரவ்யத்தை ஒருதேவதாந்தரம் கொள்ளுகை யாவதென் " என்றுநினைத்து அத்தைவிலக்குகைக்காக, " இந்த்ரனென்கிறவனென், அவனை நீங்கள் கண்டறிவதுண்டோ, அவன்றான் நீங்களிட்டசோற்றை உண்ணக்கண்டறிவிகோளோ, ஒன்று மறியிகோளாயிருந்திகோள்; ஆனபின்பு, மேகங்களும் வந்துபடிந்து வர்ஷிக்கும்ஸ்தாநமாய், என்றுமொக்கப் பசுக்களுக்குப்புல்லும் தண்ணீருமுண்டாய், நமக்கு மழைக்கும் காற்றுக்கு மொதுங்கிடமாய், கோக்களை வர்த்திப்பிக்கையாலே " கோவர்த்தநம் " என்னும் பேரையுடைத்தாயிருக்கிற இம்மலையன்றோ நமக்குத்தெய்வம், இதின்

முன்னே நீங்கள் சமைத்தவையெல்லாம் கொண்டுவந்திடுங்கோள்" என்ன; பஞ்சலக்ஷம் குடியிலுள்ள இடையரெல்லாரும் திரண்டு இந்த்ராரர்த்தமாகக் கல்பித்த உத்ஸவத்தை, முப்பத்துமுக்கோடி தேவர்களையும் ரும்பிடுகொள்ளு மேற்றத்தை யுடையராய், தம்மைப் போசப்பொலிய நினைத்திருக்குமவர்க்கொழிய, அதிசயமாயிருப்பதொரு பர்வதமான கோவர்த்தநத்துக்காம்படி செய்தவனுடையமலை. அப்படி தன்னபிமாநத்திலே ஒதுங்கினவர்களை அநந்யசேஷமாகாதபடி நோக்கி, திருமலையாழ்வார்க்கு சேஷமாக்குகைக்காக அவனெழுந்தருளி யிருக்கிறதேசமென்கை.

வானாட்டிலித்யாதி. ஸ்வர்க்கலோகத்தில் நின்றும், பெரிய பூக்களையுடைத்தான கல்பகத்தினுடைய பூங்கொத்துக்களினின்றும் கீழ்நோக்கி ப்ரவஹியாநின்றுள்ள தேனை நூஆறாய்க்கொண்டு பரம்பி ஓடாநிற்கு மழகையுடைய திருமாலிருஞ் சோலையென்கை. ௪

மு.—ஒருவாரணம் பணிகொண்டவன் பொய்கையிற் கஞ்சன்ற
னொருவாரண முயிருண்டவன்சென் றுறையுமலை
கருவாரணந் தன்பிடிதுறந்தோடக் கடல்வண்ணனன்
திருவாணைகூறத்திரியுந் தண்மாலிருஞ்சோலையே. ரு

பதவுரை.

கரு வாரணம்— கறுத்த ஆனையானது
தன்— தன்னுடைய
பிடி— பிடியானது [பேடை]
துறந்து— தன்னைவிட்டு
ஓட— ப்ரணய ரோஷத்தாலே கடுநடையிட்டுப் போகப்புக்கவாறே
கடல்வண்ணன் திரு ஆணை கூற — "கடல் வண்ணன்மேலாணை" என்று சொல்ல,
திரியும்— அப்புறம் போகமாட்டாமே மீளாநின்றுள்ள
தண்மாலிருஞ்சோலை—;
பொய்கையில்— பெரியஸரஸ்ஸிரத்திலே

ஒரு வாரணம்— ஒப்பற்ற ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய
பணி— கைங்கர்யத்தை
கொண்டவன்— ஸ்வீகரித்தருளினவனும்
கஞ்சன் தன்— கம்ஸனுடைய [தின்
ஒருவாரணம்—ஓராணையான குவலயாபீடத்
உயிர்— உயிரை
உண்டவன்— முடித்தவன்
சென்று— எழுந்தருளி
உறையும்— வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. ஒருவாரணம் பணிகொண்டவன் பொய்கையில். சாபத்தாலே கஜயோநியிலே பிறந்திருக்கச் செய்தேயும், பூர்வஜந்ம ஸ்ம்ருதி குலையாமையாலே, மிகவும் பகவத்பக்தியை யுடைத்தாய் ¶ திருப்படித்தாமம் பறித்து இட்டுத்திரியாநிற்க, ஜகத்திலே ஒருபூமலர் கிடையாதபடி வர்ஷாபாவமாய் வரண்டவளவிலே, "எங்கேயொரு பூக்காணலாம்" என்றுதேடித் திரியச்செய்தே "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிறபடியே தூரத்திலே ஒருகுளிர்ந்த சோலையும் பூத்த பொய்கையுமாய்த் தோற்றக் கண்டு ஓடிச்சென்று "உள்ளே அஷ்டலத்ருவங் கிடக்கிறது" என்றறியாமலிழிந்து "காம

¶ "திருப்பள்ளித்தாமமென்று - திருத்துழாய்" என்று அருமபத விளக்கத்தில் காண்கிறது.

ருபொய்கை வைகுதாமரை வாங்கியவேழம்” என்கிறபடியே தன் அபிநிவேசாநுகுணமாகப் பூவைவாரிப்பறித்துக் கரையிலே யேறுவதற்கு முன்னே, நெடுங்காலமெல்லாம் “நம் சாபமோக்ஷத்துக்கு ஒரு ¶ கறையடிகாணவல்லோமே” என்று கிடக்கிறதொரு முதலைவந்து காலைப்பிடித்துக் கொள்ளுகையாலே, அது நீர்க்கிழுக்க, தான் கரைக்கிழுக்க, இங்ஙனே நெடுங்காலம் நின்றலைந்து தன்னாற்செய்ய லாவதற்றவாறே, திருவடிகளை நினைத்துக் கூப்பிட்டதோரானையை, அந்தத்வநி வழியே அதித்வரையோடே அது இடர்பட்ட பொய்கையிலே சென்று முதலையின் வாயினின்றும் ஆனையை விடுவித்து, அதின் கையிற்பூ செவ்வியழியாமல் திருவடிகளிலே இடுவித்துக்கொண்டு அடிமை கொண்டவன். கஞ்சனித்யாதி. “தீயபுந்திக்கஞ்சன்” என்கிறபடியே - துர்ப்புத்தியான கம்ஸன், ஆஸுர ப்ரக்ருதிகளை ப்ரச்சந்நரூபராக்கி வரவிட்டு பஹுமுகமாக நலியப்பார்த்தவளவில், வந்தவர்களொருவரும் விசேஷம் சொல்லவும் மீண்டுசெல்வாரைக் காணாமையாலே, “இனி இதுகொண்டு இவனை வெல்லப்போகாது” என்று விட்டு, “வில்விழவுக்கென்று அழைத்து நலியக்கடவோம்” என்று தன்னுடைய மந்த்ரிகளில் அநுகூலரான அக்ரூரரை வரவிட, அவரும் வந்தழைத்துக் கொண்டு போகாநிற்கச்செய்தே, வழியிலே நலிவதாக மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப் பிச்சேற்றி “புகுவாய் நின்றபோதகம்” என்கிறபடியே - புகுகிற வாசலிலே நிறுத்திவைத்ததோரானையை மதியாமல்சென்று அடர்த்து, அதினுடைய கொம்புகளைப் பிடுங்கி ப்ராணனை முடித்தவன். சென்றுறையும்மலை. தன்னுகப்பெல்லாம் தோற்றும்படி வந்து, “நங்கள் குன்றம் கைவிடான்” என்கிறபடியே நித்யவாஸம் பண்ணுகிறமலை. ஆநுகூல்யமுடையதோரானையை ரக்ஷித்து, ப்ராதிகூல்யம் பண்ணினதோரானையை நிரஸித்தவன் வர்த்திக்கிறதேசமாகையாலே, அநுகூலமான ஆனைகளெல்லாம் வர்த்திக்கும் தேசமாய்த்து. “மழக்களிற்றினஞ்சேர் மாலிருஞ்சோலை” என்னக்கடவதிறே.

கருவாரணம். கறுத்த நிறத்தையுடைய ஆனையானது. தன்பிடிதுறந்தோட. இந்நிறத்தைக் கண்ட தன்னுடைய பிடியானது, “நம்மையொழிய வேறேகலந்து பெற்ற நிறமாயிருந்தது” என்று ப்ரணய ரோஷத்தாலே தன்னை ஸங்கலித்துப் புரிந்து பாராமல் கடுநடையிட்டுப்போக. இப்படி இது ஓடப்புக்கவாறே, இது மீளுகைக்கீடான உபாயங்களிலே இழிந்து, “பெருகுமதவேழம்” இத்யாதிப்படியே சில உபஹாரங்களைப் பண்ணப்பார்க்க, “அத்தை உனக்குவேண்டுவார்க்குக் கொடாய்” என்று போகப்புக்கவாறே, “உபாயாந்தரம் பலித்ததில்லை, இனி சரமோபாயத்தை யநுஷ்டிப்போம்” என்று பார்த்து, கடல்வண்ணன் திருவாணைகூற. அழகர் ஸ்ரீபாதமே போவாயென்ன. திரியும். அந்த திவ்யாஜ்ஞைக்கு இளைத்து, போகமாட்டாமல்மீளும். (க)“ஸௌந்தர்யோத் திவ்யாஜ்ஞாலம்பநகாதரவஶாநுயாயிநி கரிணி । ப்ரணயஜகலஹஸமாதிர்யத்ர வநாத்ரிஸ்ஸ ஏஷ ஸௌந்தர்யோத்தம்ஸ:” என்று இவ்வர்த்தாந்தத்தையருளிச் செய்தாரிறே - ஆழ்வான். தண்மாலிருஞ்சோலையே. தட்பமாவது - ஸகல வஸ்துக்களுக்கும் நின்றநின்ற நிலைகளிலே தாபத்தை ஆற்ற வற்றாயிருக்கை.

---

¶ “‘கறையடி’ என்றது - ‘கறை’ என்று உரலாய், அதுபோன்ற அடியையுடைத்தான தென்றாய், ஆனையைச் சொல்லுகிறது.

(க) “ஸௌந்தரதோர் திவ்யாஜ்ஞாலம்பநகாதரவசாநுயாயிநி கரிணி - ப்ரணயஜகலஹஸமாதிர்யத்ரவநாத்ரிஸ்ஸ ஏஷஸௌந்தரதோத்ஷணீ.”

மூ.—ஏவிற்றுச் செய்வானேனென் றெதிர்ந்துவந்த மல்லரைச்
சாவத்தகர்த்த சாந்தணிதோட் சதுரன்மலை
ஆவத்தனமென் றமரர்களு நன்முனிவரும்
சேவித்திருக்குந் தென்றிருமாலிருஞ்சோலையே. கூ.

பதவுரை.

அமரர்களும் — ப்ரஹ்மாதிதேவர்களும்
நல் முனிவரும்— ஸநகாதி மஹர்ஷிகளும்
ஆவத்து— தங்களுடைய ஆபத்துக்கு ரக்ஷகமான
தனம் என்று— தநமென்று நினைத்து
சேவித்திருக்கும் — ஸேவித்துக்கொண்டிரா நிற்கிற
தென் திருமாலிருஞ்சோலை—;
ஏவிற்று— கம்ஸன் ஏவின கார்யங்களை
செய்வான்— செய்யும்பொருட்டு
என்று— துணிந்து
எதிர்ந்து வந்த— எதிர்த்துவந்த
மல்லரை— சாணூர முஷ்டிகரை
சாவ— சாம்படியாக
சாந்து அணி— கூனி இட்ட சாந்தையணிந்த
தோள்— தோளாலே
தகர்த்த— முறித்துப்பொகட்ட
சதுரன்— சாதுர்யமுடையவன் வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

வ்யா. ஆறும்பாட்டு. ஏவிற்றுச்செய்வானேனென் றெதிர்ந்துவந்தமல்லரை. ஸ்வதந்த்ரராய் வந்து மேல்விழிலிறே, 'முடியாது' என்று கைவாங்கலாவது; கம்ஸனுக்கு பரதந்த்ரராய் வருகையாலே, இங்குத்தோற்றார்களாகில் அவன் அங்கே தோள்களைக் கழிக்குமாய்த்து; ஆன பின்பு, கோழைகளாய்க் கொலையுண்பதில் புகழோடே முடியவமையும் என்று மேலிட்டார்கள். என்றெதிர்ந்து வருகையாவது. "பொரக்கடவோம்" என்று நெஞ்சிலே துணிந்து பிற்காலியாதே எதிரே நடந்துவருகை; இப்படியிருந்துள்ள மல்லரை. சாவத்தகர்த்த. குற்றுயிராக்கி விடுகையன்றிக்கே, பசுங்கலமுடைத்தாற்போலே அநாயாஸேந தகர்த்துப்பொகட்ட. சாந்தணிதோள்சதுரன். கூனி சாத்திவிட்ட சாந்து குறியழியாதே காணும் அவர்களோடு வ்யாபரித்தது. மல்லரோடேகூட ஸர்வாவயவங்களும் பொருந்தி வ்யாபரியாநிற்கச்செய்தே சாத்தின சாந்து குறியழிந்ததில்லை காணும். கூனிசாத்திவிட்ட வநந்தரத்திலே, பெண்கள், கண்ணாலே இலச்சினையிட்டு விடுகையாலே இவனாலழிக்கவும் போகாதிறே. அவர்கள் கண்ணாலே யிலச்சினை யிடுகையாவது- இவன்தோளிலே சேனுங்கயனும்டுகையிறே. இவன் மல்லரோடே அழித்தானாகிலும் மற்றெங்கேனு மழித்தான் என்றிறே அவர்களிருப்பது. இது அழித்துப்போனானாகில், பின்புபெண்கள் கோஷ்டிக்காளாகானே. மலை. இப்படி ப்ரதிகூலரை நிரஸித்து அநுகூலரையுகப்பிக்குமவன் வர்த்திக்கிறமலை.

ஆவத்தனமென்று. நமக்கு¶ ஆபத்துக்கு ரக்ஷகமான் தநமென்றுநினைத்து. அமரர்களும் நன்முனிவரும் சேவித்திருக்கும். உபயபாவநாநிஷ்டரான ப்ரஹ்மாதி தேவர்களும், ப்ரஹ்ம பாவநைகநிஷ்டரான ஸநகாதிமஹர்ஷிகளும்சேவித்துக்கொண்டு இராநிற்கும். "ஆவத்தனம்" என்று ஒருக்கால் நினைத்தால் அதுக்குபலம் அநவரதம் ஸேவித்துக்கொண் டிருக்கையாய்த்து. தென்திருமாலிருஞ்சோலையே. தென்னென்று- அழகாய், ஸர்வப்ரகார விலக்ஷணமான தேசமென்றபடி. ... ... ... ... ... ... ... ... சூ.

¶ "ஆபத்துக்கு" என்றது - ஆபத்துவந்த காலத்துக்கென்றபடி.

மூ.—மன்னர்மறுக மைத்துனன்மார்க் கொருதேரின்மேல்
முன்னங்குநின்று மோழையெழுவித்தவன்மலை
கொன்னவிற்கூர் வேற்கோனெடுமாறன் றென்கூடற்கோன்
தென்னன்கொண்டாடுந் தென்றிருமாலிருஞ்சோலையே. எ.

பதவுரை.

கொல் நவில்— கொலையையே தொழிலாகவுடைய
கூர்— கூரிய
வேல்— வேலையுடையனும்
கோன்—ராஜநீதியை வழுவறநடத்துமவனும்
நெடு— பெருமையையுடையனும்
மாறன்— தர்மயுத்தம் பண்ணுமவனும்
தென்— அழகிய
கூடல்— 'கூடல்' என்னும் மதுரைக்கு
கோன்— நிர்வாஹகனும்
தென்னன் — தக்ஷிணதிக்குக்கு ப்ரதானனை மலயத்வஜராஜனாலே
கொண்டாடும்— கொண்டாடப்படுமதான தென் திருமாலிருஞ்சோலை-;
மன்னர்— ராஜாக்களெல்லாரும்
மறுக — 'நாம் இவனை வெல்லவோமோ' என்று குடல் மறுகும்படியாக
மைத்துனன்மார்க்கு— மைத்துனன்மாரான பாண்டவர்களுக்காக
ஒரு— ஒப்பற்ற
தேரின் மேல்— தேரின்மேலே
முன் அங்கு நின்று— முன்புறத்திலே ஸாரத்யவேஷம் தோற்ற நின்று
மோழை எழுவித்தவன்— ‡நீர்நரம்பில்விட்ட வாருணாஸ்த்ரத்தின்வழியே கிளர்ண்டான ஜலமானது குமிழியெறிந்து கிளரும்படி பண்ணுவித்தவன் வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

வ்யா. ஏழாம்பாட்டு. மன்னர்மறுக. அர்ஜுநனுடைய தேரிலே பூண்ட குதிரைகள் தண்ணீருக்குவிடாய்த்து இளைத்தவளவிலே, கடிநஸ்தலத்திலே ‡நீர்நரம்பு அறியுமவனாகையாலே, வாருணாஸ்த்ரத்தை விடுவித்து அங்கே நீரையுண்டாக்கி, குதிரைகளைவிட்டு நீரூட்டி, புரட்டி யெழுப்பிக்கொண்டு போந்து, பூட்டிக்கொண்டு வந்து முன்னே நிறுத்தின இத்தைக்கண்ட ராஜலோகமடைய "இவனுடைய பக்ஷபாத மிருந்தபடியால் நாமிவனைவெல்லுகை யென்றொன்றுண்டோ" என்று குடல் மறுகும்படியாக. மைத்துனன்மார்க்கு. (க) "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:" என்கிறபடியே தன்னையே ஸர்வஸ்வமாகப் பற்றியிருக்கும் பாண்டவர்களுக்கு. ஒருதேரின்மேல். ஆயுத மெடுக்க வொண்ணாது என்கையாலே, "கொல்லாமாக்கோல் கொலைசெய்து" என்கிறபடியே உழவுகோலும் கையுமாய் நின்று தேரைநடத்துகிற ஸாமர்த்யத்தாலே தேர்க்காலாலே எதிரிகளை படங்கலும் நெரித்துப் பொகடும்படி தனக்கு உபகரணமாயுள்ள அத்விதீயமான தேரின் மேலே. முன்னங்குநின்று. ஸாரத்யம் பண்ணுகைக்கு அநுரூபமாக அத்தேரின் முகப்பான அவ்விடத்திலே நின்று. மோழை யெழுவித்தவன். ‡நீர்நரம்பில் விட்ட வாருணாஸ்த்ரத்தின் வழியே கிளர்ண்டான ஜலமானது குமிழி யெறிந்து கிளரும்படி பண்ணியருளினவன். மலை, இப்படி ஆச்ரித பக்ஷபாதியானவன் நித்யவாஸம்பண்ணுகிற மலை.

---

‡ நீர் நரம்பு — நீர்த்தாரை; நீரிருக்கும் மர்மஸ்த்தலம்.

(க) "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:".

கோன்னவிலித்யாதி. (உ) "மலயத்வஜ இதி க்யாதோ மாநவேந்த்ரோ மஹீபதி:" என்கிற மலயத்வஜ சக்ரவர்த்தி இத்தேசத்தை உபலாளித்துக்கொண்டு போந்தானென்னும் ப்ரீதியாலே அவனை ச்லாகிக்கிறார் மேல். கொலைக்குப் பரிகாமென்னும்படியான கூரிய வேலையுடையனாய், ராஜநீதி குலையாமல் தர்ம யுத்தமே செய்யுமவனாய், தபோபலத்தாலே நித்யம் கங்காஸ்நாநஞ் செய்து வரவல்ல பெருமையையுடையனாய், பாண்டிமண்டலத்துக்குராஜாவாய், கட்டளைப்பட்டு 'நான்மாடக்கூடல்' என்னும் பேரையுடைத்தாயிருக்கும் மதுரைக்கு நிர்வாஹகனாய், தக்ஷிணதிக்குக்கு ப்ரதாநனான மலயத்வஜ சக்ரவர்த்தியாலே கொண்டாடப்பட்ட தேசமாய்த்து.— அதாவது- அகஸ்த்யன் வர்த்திக்கிற மலய பர்வதத்திலே சென்று அகஸ்த்ய மஹர்ஷிமுன்னே "தர்மமே நடத்தக்கடவேன்" என்று மலயபர்வதத்தை யெழுதிக்கொடியெடுத்தவன், கங்கையிலே ஸ்நாநம் செய்யப்போகாநிற்கச்செய்தே, * மதிநலஞ் சூழ்மி யளவிலே சென்றவாறே, தேர் வடக்கு ஓடாமல் நின்றதாய், அவ்விடத்திலே தேரை நிறுத்தி, "இங்கே தீர்த்த விசேஷமும் தேவதாஸந்நிதியு முண்டாக வடுக்கும்" என்று இறங்கி ஆராய்ந்து பார்த்தவளவிலே, அவ்விடத்திலே அழகர் ஸந்நிதி பண்ணி, "இவ்வாற்றிலே ஸ்நாநம்செய்" என்ன; நாமம் கேட்டு ஸ்நாநம்பண்ண வேண்டுகையாலே "இதுக்குப்பேர் என்" என்று கேட்க; "முன்பே நம்மை ப்ரஹ்மா காலைக்கழுவுகிற காலத்திலே நம் சிலம்பில் நீர் இதிலே தெறித்து 'சிலம்பாறு' என்று இதுக்குப் பேராய்த்து" என்ன; அங்கே ஸ்நாநஞ்செய்து, கங்காஸ்நாநம் தவிர்ந்து இங்கே ப்ரவணனாயிருந்து, அழகர்க்கு வேண்டுமடிமைகளெல்லாம் செய்தான் என்று ஒரு ப்ரஸித்தியுண்டிறே; அத்தை அருளிச்செய்தாராய்த்து. தென்திருமாலிருஞ்சோலையே. இப்படி அவனாலே கொண்டாடப்பட்டிருப்பதாய் தெற்குத் திக்கிலேயான திருமாலிருஞ்சோலையே. ... ... ... எ

மூ.—குறுகாதமன்னரைக் கூடேலக்கி வெங்கானிடைச்
சிறுகானெறியே போக்குவிக்குஞ் செல்வன் பொன்மலை
அறுகால் வரிவண்டுக ளாயிரநாமஞ் சொல்லிச்
சிறுகாலைப்பாடுந் தென்றிருமாலிருஞ்சோலையே. அ.

பதவுரை.

அறுகால்— ஆறுகால்களையுடைத்தாய்
வரி— அழகியதாயிருந்துள்ள
வண்டுகள்— வண்டுகளானவை
சிறுகாலை— விடியற்காலத்திலே
ஆயிரம் நாமம் — எம்பெருமானுடைய ஸஹஸ்ரநாமங்களையும்
சொல்லி — ஆளத்திவைத்து
பாடும்— பாடாநின்றுள்ள
தென் திருமாலிருஞ் சோலை-;
குறுகாத— திருமலையை அணுகாத
மன்னரை— ராஜாக்களுடைய

கூடு— இருப்பிடத்தை
கலக்கி— குலைத்து [ அழித்து ]
வெம்— வெவ்விதான
கான் இடை— காட்டின் நடுவே
சிறுகால் நெறியே— சிற்றடியோடே
போக்குவிக்கும்— போம்படியாகப் பண்ணுகிற
செல்வன்— ஸ்ரீயப்பதி வர்த்திக்கிற
பொன்— சிறந்த
மலை— திருமலையாம்.

(உ) "மலயத்வஜ இதிக்யாதோ மாநவேந்த்ரோ மஹீபதி:"

வ்யா. எட்டாம்பாட்டு. குறுகாதமன்னரை. திருமலையைக் கிட்டாத ராஜாக்களை. அநுகூலராய்ச்சேர்ந்து வாழ்ந்துபோகலாயிருக்க, ப்ரதிகூலராய்ச்சேராதேயிருக்குமவர்களை. கூடுகலக்கி. இருப்பிடத்தைக் குலைத்து. அதாவது- போக்ய போகோபகரண போகஸ்தாநங்களெல்லாவற்றாலும் விலக்ஷணமாம்படி அவர்கள் பண்ணிக்கொண்டிருக்கும் நகரிகளின் இருப்பைக் குலைத்தென்கை. வெங்கானிடை. வெவ்விய காட்டினடுவே. நிலவனுக்கும் ஸஞ்சரிக்கவொண்ணாதபடியாய்த்து காட்டின் வெம்மையிருக்கும்படி;''வெம்மிஞ்ஞிளிவெயில் கானகம்'' என்கிறபடியே. சிறுகானெறியேபோக்குவிக்கும். கெட்டுப்போம்போது பின் தொடருகிறார்களென்னுமச்சத்தாலே வழியானவிடக்கிடக்க, சிற்றடிப்பாடே நுழைந்துபோம்படியாகப்பண்ணும். செல்வன். இதுக்கடி- ஸ்ரீயபதியாகை. அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமும் பண்ணுவது அவனுக்காகவிறே. பொன்மலை. இப்படியிருந்துள்ள ஸ்ரீயபதியானவன் வர்த்திக்கிற ச்லாக்யமானமலை. அறுகால்வரிவண்டுகள். ஷட்பதங்களான அழகியவண்டுகள். இத்தால்- இவற்றினுடைய ரூபகுணம் சொல்லிற்று. ஆயிரநாமம்சொல்லிச் சிறுகாலைப்பாடும். (க) ''தேவோ நாமஸஹஸ்ரவாந்'' என்கிற அவனுடைய ஆயிரந் திருநாமங்களையும் ஸத்வோத்தரமான காலத்திலே ப்ரீதிக்குப் போக்குவிட்டுப்பாடாநிற்கும். தென் திருமாலிருஞ்சோலையே. இப்படியிருந்துள்ள அழகையுடைத்தான திருமாலிருஞ்சோலை யென்கை. ... ... ... ... ... ... அ.

அ. ஒன்பதாம்பாட்டு. அந்த திவ்யர்த்திகளான ஸ்ரீவைஷ்ணவ பூதங்களினுடைய வ்ர்த்தமிருக்கும்படி சொல்லுகிறது. அழகருடைய செயல்போலேயாய்த்து- இவற்றினுடைய செயலுமிருக்கும்படி. அதாவது- ப்ரதிகூலரானவர்களைக் காணப்பொறுதாய்த்து.

மூ.—சிந்தப்புடைத்துச் செங்குருதிகொண்டு பூதங்கள்
அந்திப்பலிகொடுத் தாவத்தனஞ் செயப்பன்மலை
இந்திரகோபங்க ளெம்பெருமான் கனிவாயொப்பான்
சிந்தும்புறவிற் றென்றிருமாலிருஞ்சோலையே. கூ.

பதவுரை.

இந்திரகோபங்கள் — பட்டுப்பூச்சிகளானவை
எம்பெருமான்— ஸர்வஸ்வாமியான அழகருடைய
கனி— கொவ்வைக்கனிபோன்ற
வாய்— திரு அதரத்துக்கு
ஒப்பான்— ஒத்திருக்கைக்காக
சிந்தும் — கண்டவிடமெங்கும் சிதறிப் பறக்கிற
புறவின்— தாழ்வரையையுடைத்தாய்
தென்— அழகிதான
திருமாலிருஞ்சோலை—;
பூதங்கள்— அங்கே வர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவ பூதங்களானவை
(புஷ்டதேஹர்களான ஜநங்களைக்கண்டால்,)
சிந்த— அவயவங்கள் சிதறும்படி
புடைத்து— அடித்துக் கொன்று
செம் குருதிகொண்டு— அவர்கள் தேஹத்தினின்றும் புறப்படுகிற சிவந்த ரத்தத்தைக்கொண்டு
அந்தி— அந்திப்பொழுதில்
பலி கொடுத்து— ஆராதநம் ஸமர்ப்பித்து
ஆவத்து தனம்— தம் ஆபத்துக்கு ரக்ஷகமான தநமாகநினைத்து
செய்— ஸேவித்துக்கொண்டு போருகிற
அப்பன்— ஸ்வாமி வர்த்திக்கிற
மலை — திருமலையாம்.

(க) ''தேவோ நாமஸஹஸ்ரவாந்.''

வ்யா. சிந்தப்புடைத்து. சிதறப்புடைத்து. ஆஸ்திகராய், த்யாஜ்யோபாதேய விவேகமுடையராய், அழகராளிலும் திருமலையாழ்வாராளிலும் ப்ரேமமுடையராய் வர்த்திக்குமவர்களைக் கண்டால் அவர்கள் ஸந்நிதியில் நில்லாதே அஞ்சலிவந்தநாதிகளைப் பண்ணித் தந்தாமைக்கொண்டு மறைந்துவர்த்தித்து, நாஸ்திகராய் த்யாஜ்யோபாதேய விவேகசூந்யராய், தேஹ போஷணாதிகளைப் பண்ணி ஸ்வைரம்ஸஞ்சரித்துத்திரியும் ப்ரதிகூலஜநங்களை, தந்தாம் ஸஞ்சரிக்கிற தேசத்திலே காலத்திலேகண்டால், அவயவங்கள் சிதறவடித்துக் கொன்று பொகடாநிற்குமாய்த்து. செங்குருதிகொண்டு. தாந்தாம் அடித்துக்கொன்றவர்களுடைய தேஹத்தில்நின்றும், செவ்வியிலே சிவந்துபுறப்படுகிற ரக்தத்தைக்கொண்டு. பூதங்கள். பூதயோநியாயிருக்கச் செய்தேயும், வைஷ்ணவநாமரூபங்களோடு கூடி, பகவத்பாகவத பக்தியுக்தங்களாய்க் கொண்டுதிரியும் பூதங்களானவை. அந்திப்பலிகொடுத்து. (க) "நவமஶவமிதம் புண்யம்" என்று ஸமர்ப்பித்த கண்டாகர்ணனைப்போலே, தங்களுடையஜாத்யுசிதமாக ஜீவிக்குமத்தை, ஸந்த்யாகாலங்களிலே ஆராதநரூபேண ஸமர்ப்பித்து. ஆவத்தனம்செய். தங்களுக்கு ஆபத்துக்கு ரக்ஷகமான தநமாகநினைத்து ஸேவித்துக்கொண்டு போரும்படியிருக்கிற. அப்பன்மலை. ஸர்வகாரண பூதனானவன் நித்யவாஸம்பண்ணுகிறமலை. "அப்பன்" என்றது - இவற்றுக்கும் இப்படி கிட்டிவர்த்திக்கலாம்படி யிருக்கிறது காரண பூதனை குடற்றுடக்காலேயென்னுமிடம் தோற்ற.

இந்திரகோபங்கள். சிவந்தநிறத்தை யுடையவாய், "இந்த்ரகோபம்" என்கிற நாமத்தையுடைத்தாயிருக்கிற ஜந்துக்களானவை. எம்பெருமான்கனிவாயொப்பான். ஸர்வஸ்வாமியான அழகருடைய, கொவ்வைக்கனி போலேயிருக்கிற திருவதரத்துக்குப் போலியாம்படி. சிந்தும்புறவில். கண்டவிடமெங்கும் சிதறிப்பறக்கும் பர்யந்தத்தையுடைய. "சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் இந்திரகோபங்களேயெழுந்தும் பரந்திட்டன" என்றாரிறே - இவர் திருமகளாரும். தென்திருமாலிருஞ்சோலையே. இப்படியிருந்துள்ள அழகையுடைத்தான திருமாலிருஞ்சோலையென்கை. ... ... சு.

மூ.—எட்டுத்திசையு மெண்ணிறந்த பெருந்தேவிமார்
விட்டுவிளங்க வீற்றிருந்த விமலன்மலை
பட்டிப்பிடிகள் பகடுறிஞ்சிச்சென்று மாலைவாய்த்
தேட்டித்திளைக்குந் தென்திருமாலிருஞ்சோலையே. எ.

பதவுரை.

| | |
|---|---|
| மாலைவாய்— ராத்ரிகாலத்திலே | திளைக்கும்— களியாநின்றுள்ள |
| பட்டி— ஸ்வைரமாகத் திரியாநின்றுள்ள | தென் திருமாலிருஞ் சோலை—; |
| பிடிகள் — பெண்யானைகளானவை | எண் இறந்த — கணக்கிட முடியாதவர்களாய் |
| பகடு— ஆண்யானைகளோடே | பெரு — ரூபஸௌந்தர்யங்களால் வந்த பெருமையையுடையரான |
| உறிஞ்சி சென்று— உராய்ந்து சென்று | தேவிமார்— தேவிமார்கள் |
| தெட்டி— அப்புணர்ச்சியாலுண்டான ஆநந்தம்முற்றி | |

(க) "நவம் சவமிதம் புண்யம்."

| | |
|---|---|
| எட்டு திசையும்— எட்டு திக்குக்களிலும் | இருந்த— ஸ்ரீத்வாரகையிலிருக்கிற |
| விட்டு விளங்க— மிகவும் விளங்க (அவர்கள் நடுவே) | விமலன்— பரிசுத்தனானவன் வர்த்திக்கிற |
| வீறு— தன் பெருமைதோற்ற | மலை— திருமலையாம். |

வ்யா. பத்தாம்பாட்டு. எட்டுத்திசையும். எட்டுதிக்கிலும். எண்ணிறந்தபெருந் தேவிமார். அஸங்க்யாதராய், ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும்வந்த பெருமையையுடையராய், சாஸ்த்ரோக்தமான ப்ரகாரத்திலே பரிக்ரஹிக்கப்பட்ட தேவிமாரானவர்கள். விட்டுவிளங்க. மிகவும்ப்ரகாசிக்க. அதாவது - பார்த்த பார்த்தவிடமெங்கும் இவர்களுடைய திரளின் ப்ரகாசமேயாயிருக்கை. வீற்றிருந்த. இவர்கள்நடுவே தன்வ்யாவ்ருத்தி தோற்றும்படி ஸ்ரீமத்த்வாரகையிலே யெழுந்தருளியிருந்த. அதாவது - இத்தனைபேரோடும் பரிமாறுகிறவிடத்தில் ஒவ்வொருத்தரே"என்னையொழியவறியான், என்னையொழியவறியான்" என்னும்படி பரிமாறுகையால்வந்த வீறுடைமைதோற்ற விருந்தவனென்கை. விமலன். இப்படி பரிமாறினவிதில் ஸ்வார்த்தப்ரதிபத்தியாகிற தோஷமில்லாதவனென்கை. இவனுடைய ஸமஸ்தவ்யாபாரங்களும் ஆச்ரிதரை ரஸிப்பிக்கைக்கு உறுப்பாயிறேயிருப்பது. இப்படியிருந்துள்ள பாரதந்த்ர்யந்தான் ப்ரணயித்வ ப்ரயுக்தமாகையாலே இவன்றனக்கு ஏற்றத்துக்குடலாமித்தனையிறே. மலை. ஏவம்பூதனானவன் இந்த ஸ்வபாவமெல்லாம் ப்ரகாசிக்கும்படி வர்த்திக்கிற மலை.

பட்டிப்பிடிகள். ஸ்வைரஸஞ்சாரிகளான பிடிகளானவை. பகுறிந்துச்சென்று. *களிற்றுணையோடே ஸ்பர்சித்துச்சென்று. ஸ்பர்சத்தால் ஸம்ச்லேஷத்தைச் சொல்லுகிறது. "சென்று" என்று-அதிலுண்டான ‡ காலதைர்க்யத்தைச் சொல்லுகிறது. மாலைவாய். ராத்ரியிடத்திலே. தெட்டித்திளைக்கும். அந்த ஸம்ச்லேஷரஸம் முற்றிக்களியாநிற்கும். தெட்டல்-முற்றல். திளைத்தல்- களித்தல். தென்திருமாலிருஞ்சோலையே. இப்படி இருந்துள்ள சிறப்பையுடைய திருமாலிருஞ்சோலைமலை யென்கை. ... ... ... ... ய.

அ. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—மருதப்பொழிலணி மாலிருஞ்சோலைமலைதன்னைக்
கருதியுறைகின்ற கார்க்கடல் வண்ணனம்மான்றன்னை
விரதங்கொண்டேத்தும் வில்லிபுத்தூர் விட்டுசித்தன்சொல்
கருதியுரைப்பவர் கண்ணன்கழலிணை காண்பரே. கக.

பதவுரை.

| | |
|---|---|
| மருதம் பொழில்— மருதஞ்சோலைகளாலே | வண்ணன்— திருநிறத்தையுடைய |
| அணி— அலங்க்ருதமான | அம்மான் தன்னை— ஸ்வாமியானவனை |
| மாலிருஞ் சோலைமலை தன்னை— திருமாலிருஞ் சோலை மலையை | விரதம் கொண்டு—வாழ்த்துகையையே வ்ரதமாகக்கொண்டு |
| கருதி— விரும்பி | ஏத்தும்— திருப்பல்லாண்டு பாடுமவராய் |
| உறைகின்ற— நித்யவாஸம் பண்ணுமவனாய் | வில்லிபுத்தூர்— ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான |
| கார் கடல்— கருங்கடல் போன்ற | |

‡ காலதைர்க்யம்-அதாவது - காலத்தின் நெடுமை.

| | |
|---|---|
| விட்டுசித்தன்— பெரியாழ்வார் | கண்ணன்— க்ருஷ்ணனுடைய |
| சொல்— அருளிச்செய்த இத்தை | கழல் இணை— திருவடிகளை |
| கருதி— விரும்பி | காண்பர்— காணப் பெறுவர்கள். |
| உரைப்பவர்— அநுஸந்திக்கு மவர்கள் | |

வ்யா. மருதமித்யாதி. மருதஞ்சோலைகளாலே அணியப்பட்டிருப்பதாய், "திருமாலிருஞ்சோலை" என்னும் திருநாமத்தை யுடைத்தாயிருக்குமுள்ள திருமலைதன்னை. "தன்னை" என்கையாலே- இதினுடைய போக்யதாதிசயத்தைச்சொல்லுகிறது. கருதியுறைகின்ற. நித்யவிபூதியினுங்காட்டில் இதுவேநமக்கு வாஸஸ்தாநமென்று விரும்பி, "நங்கள் குன்றம் கைவிடான்" என்கிறபடியே நித்யவாஸம் பண்ணுகிற. கார்க்கடல்வண்ண னம்மான்றன்னை. கருங்கடல்போலேயிருண்டு ச்ரமஹரமான நிறத்தையுடைய ஸ்வாமியானவனை. விரதமித்யாதி. ஸ்வஸேஷத்வாநுரூபமான மங்களாசாஸநமே தமக்கு வ்ரதமாகக்கொண்டு திருப்பல்லாண்டுபாடி யேத்துமவரான ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாரருளிச்செய்தத்தை. அன்றிக்கே, அர்ச்சாவதாரம் "அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீர்" என்னப்படும் விஷயமாகையாலே, "இவ்விஷயத்தை யேத்துககடவோம்" என்னும் வ்ரதத்தையுடையராய்க்கொண்டு மங்களாசாஸநருபேண வத்துமென்னவுமாம். கருதியுரைப்பவர். ஸாபிப்ராயமாக புத்தி பண்ணி அநுஸந்திக்குமவர்கள். கண்ணன்கழலிணை காண்பரே. அத்யந்தஸுலபனான க்ருஷ்ணன் திருவடிகளைக் கண்டநுபவிக்கப் பெறுவர். ... ... ... ௧௧.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

அடிவரவு.—அலம் வல்லாளன் தக்கா ஏனுயர் ஒரு ஏவிற்று மன்னர் குறுகாத சிந்த வெட்டு மருத முருப்பிணி.

—(1)—

ஆ திருமொழி ௩௯-க்கு, பாட்டு-௩௩௩.

---

நான்காம்பத்து- மூன்றாந்திருமொழி- உருப்பிணிநங்கை, ப்ரவேசம்.

அ. கீழ்த்திருமொழியிலே, ராமாவதார குணசேஷ்டிதங்களும் க்ருஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களுமெல்லாம் ப்ரகாசிக்கும்படி அழகர் திருமலையிலே யெழுந்தருளியிருக்கிறபடியை அநுபவித்துக்கொண்டு, "அவரினுங்காட்டில் அவர்விரும்பி யெழுந்தருளிநிற்கிற திருமலையே பரமப்ராப்யம்" என்று அநுஸந்தித்து, திருமலையாழ்வாருடைய வைபவத்தை பஹுமுகமாகப்பேசி யநுபவித்தார்; அப்படி அநுபவித்த வளவால் தமக்கு பர்யாப்தி பிறவாமையாலே மீளவும் அவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி அழகர் திருமலையில் நிற்கிற நிலையை, கீழ்ச்சொன்ன க்ரமமன்றிக்கே, முகபேதேநபேசி திருமலை வைபவத்தையும் கீழ் உக்தப்ரகாரமன்றியே, முகபேதேந பலபடியாகப்பேசியநுபவிக்கிறார்- இத்திருமொழியில்.— கீழ்- ராமாவதாரகுணசேஷ்டிதம் முன்னாக க்ருஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களையும் அழகர்பக்கலிலே கண்டநுபவித்தார்; இதில்-க்ருஷ்ணாவதாரகுண சேஷ்டிதம் முன்னாக ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும் அவதாராந்தர சேஷ்டிதங்களையுமெல்லாம் அழகர் பக்கலிலே தர்சித்தநுபவிக்கிறார்.

முத்துக்கோக்கவல்லவன் முகம்மாறிக் கோத்தவாறே அது விலைபெறுமாபோலே, அவதாரகுண சேஷ்டிதங்களுக்கும் விசேஷஜ்ஞான விவர்சேர்த்தநுபவிக்கிற வாசியாலேநிற முமரஸமுமுண்டாயிருக்குமிறே. ததீயவிஷயத்திலும் விசேஷணபேதத்தாலே விசேஷ்யத்துக்கு ரஸவிசேஷமுண்டாகக் கடவதிறே. ஆக, இது கீழ்த்திருமொழிக்கும் இத்திருமொழிக்குமுண்டான விசேஷம். ... ... ... ... ... *

மூ.—உருப்பிணிநங்கைதன்னைமீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற
உருப்பனையோட்டிக் கொண்டிட்டுறைத்திட்ட வுறைப்பன்மலை
பொருப்பிடைக் கொன்றைநின்று முறியாழியுங் காசுங்கொண்டு
விருப்பொடுபொன்வழங்கும் வியன்மாலிருஞ்சோலையதே. க.

பதவுரை.

கொன்றை— கொன்றைகளானவை
பொருப்பிடை நின்று— மலையினிடத்திலே நின்று
பொன்— பொன்னாற் செய்யப்பட்டு
முறி — முறிந்த
ஆழியும்— மோதிரங்களையும்
பொன் காசும்— பொற்காசுகளையும்
கொண்டு— கையால்வாரி
விருப்பொடு— விருப்பத்தோடு
வழங்கும்— கொடுப்பாரைப் போலேயிருப்பதாய்
வியன்— ஆச்சர்யப்படத்தக்கதான
மாலிருஞ்சோலை— திருமாலிருஞ் சோலையென்னும் பேரையுடைத்தான

அதே— அம்மலையே, [ட்டியை
உருப்பிணி நங்கை தன்னை— ருக்மிணிப்பிரா
மீட்பான்— மீட்டுக்கொண்டு போவதாக
தொடர்ந்து— பின்தொடர்ந்து
ஓடி சென்ற— ஓடிவந்த [மனை
உருப்பனை— (அவன் தமையனான) ருக்
ஓட்டி— துரத்தி
கொண்டு— பிடித்துக்கொண்டு
இட்டு— தேர்த்தட்டில் இருத்தி
உறைத்திட்ட— (அவனை) மாநபங்கம் செய்த
உறைப்பன்— மிடுக்கையுடையவனுடைய
மலை— திருமலையாம்.

வ்யா. முதற்பாட்டு. உருப்பிணிநங்கைதன்னை. ருக்மிணிப்பிராட்டிதன்னை. "நங்கை" என்று இவளுடைய குணபூர்த்தியைச் சொல்லுகிறது. அதாவது பித்ராதிகளெல்லாம் புறம்பே கொடுப்பதாக ஸங்கல்பித்து, அதுக்கீடான உத்ஸவமும் நடத்திச்செல்லாநிற்க, அந்த அந்யசேஷத்வத்துக்கு வெருவி "இவ்வளவிலே க்ர்ஷ்ணன்வந்து கைக்கொண்டிலனாகில் நான் முடிவன்" என்று வ்யவஸிதையாயிருந்த குணபூர்த்தியிறே. இப்படி அவள் வ்யவஸிதையாயிருக்கிற வளவிலே, புறச்சோலையிலே நின்று ஸ்ரீபாஞ்சஜந்யத்தை முழக்கி அந்த த்வநியாலே அவளுக்கு ப்ராண ப்ரதிஷ்டையைப்பண்ணி, விஷ்ராந்துசென்று கைக்கொண்டு தேரிலேயேற்றிக்கொண்டு போராநிற்கச்செய்தே. மீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற. "இப்படி பலத்திலே கொண்டுபோகையாவதென்" என்று யுத்தம்பண்ணி மீட்பதாகப் பின்பற்றியோடிவந்த. உருப்பனையோட்டிக்கொண்டிட்டு. ருக்மனை ஓட்டிப்பிடித்துக்கொண்டு தேர்த்தட்டிலேயிட்டு. அதாவது- ருக்மிணிப்பிராட்டிக்குத் தமையனாகையாலே, "இவனைக்கொல்வில் இவள் முகம் கருகும்" என்று அவனைப் பிடித்துக்கொண்டுவந்து தேர்த்தட்டிலே கட்டியிட்டுவைத்தமையைச் சொல்லுகிறது. உறைத்திட்ட. சிக்கன பரிபவித்திட்ட. அதாவது- தேஜோவதமாம்படி தலையைச் சிரைக்கை முதலான பரிபவங்களைப் பண்ணுகையிறே. உறை

ப்பன்மலை. ருக்மிணிப் பிராட்டியைச் சிக்கனக் கைக்கொண்டு, மீட்கவந்த ருக்மனையும் பங்கித்துவிட்ட விக்ரமத்தையுடையவன் வர்த்திக்கிற மலை.

போருப்பிடைக் கோன்றை நின்று. கொன்றைகளானவை மலையிடத்திலே நின்று, போன் - முறியாழியும் காசுங்கோண்டே. பொன்னுண்டான முறிந்த மோதிரத்தையும் காசையுங்கொண்டு. முறிந்த பொன்மோதிரமும் பொற்காசும்போலே பூத்து - இதினுடைய பூவிலுள்ள நரம்பும் இதழுமிருக்கும்படி. விருப்போடுவேழங்கும். இவற்றை விருப்பத்தோடே கொடாநிற்கும். பொன் மோதிரங்களையும் பொற்காசுகளையும் வாரிக்கொண்டு ஆதரத்தோடே பிறர்க்குக் கொடுப்பாரைப்போலே பூத்து - இவை பூச்சொரியும்படி. வியன் மாலிருஞ்சோலையதே. இப்படி யிருந்துள்ள வளப்பத்தை யுடைத்தாகையாலே விஸ்மயநீயமாய், " திருமாலிருஞ்சோலை " என்னும்பேரை யுடைத்தாயிருக்கிற வதுவே. அதுவென்று - ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. ... ... ... ... ... ... க.

மூ.—கஞ்சனுங் காளியனுங் களிறுமருது மெருதும்
வஞ்சனையின்மடிய வளர்ந்தமணிவண்ணன்மலை
நஞ்சுமிழ்நாக மெழுந்தணவி நளிர்மாமதியைச்
செஞ்சுடர்நாவளைக்குந் திருமாலிருஞ்சோலையதே. உ.

பதவுரை.

நஞ்சு— விஷத்தை
உமிழ்— உமிழாநின்றுள்ள
நாகம்— மலைப்பாம்பானது
நளிர்— குளிர்ந்த
மா மதியை — அந்தச் சிகரத்தின்மேலே தவழுகிற பூர்ணசந்த்ரனை
( தனக்கு உணவாக நினைத்து, )
எழுந்து— கிளர்ந்து
அணவி— கிட்டி
செம்— சிவந்த
சுடர்— தேஜஸ்ஸையுடைத்தான
நா— நாவாலே
அளைக்கும்— அளையாநின்றுள்ள
திருமாலிருஞ் சோலையதே—;

கஞ்சனும்— கம்ஸனும்
காளியனும்— காளியனும் [ யும்
களிறும்— குவலயாபீடமென்னும் யானை
மருதும்— யமளார்ஜுநங்களும்
எருதும்— அரிஷ்டாஸுரனாகிற ரிஷபமும்
வஞ்சனையின்— தந்தாமுடைய வஞ்சனைகளாலே
மடிய— தாந்தாம் முடியும்படியாக
வளர்ந்த— திருவாய்ப்பாடியில் வளர்ந்தவனாய்
மணி . வண்ணன்— நீலமணிபோன்ற திருநிறத்தையுடையவனுடைய
மலை— திருமலையாம்.

வ்யா. இரண்டாம்பாட்டு. கஞ்சனித்யாதி. *சாது சனத்தை நலியும் கம்ஸனும், பசுக்களும் இடையரும் தண்ணீர் குடிக்கிற பொய்கையை விஷத்தாலே தூஷித்துக் கிடந்த காளியனும், " புகுவாய்நின்ற போதகம் " என்கிறபடியே- கம்ஸனுடைய க்ருஹத்துக்குப் புகுகிற வழியிலேநின்று நலியத்தேடின ஆனையும், தவழ்ந்துபோகாநிற்க, வழியிலே நலிவதாக நின்ற யமளார்ஜுநமும், " வம்பவிழ்கானத்து மால்விடை " என்கிறபடியே - காட்டிலே நலிவதாகவந்த அரிஷ்டனாகிற ரிஷபமும். வஞ்சனையின்மடிய வளர்ந்த. தந்தாம் வஞ்சனைகளாலே தாந்தாம் முடியும்படியாகத் திருவாய்ப்பாடியிலே வளர்ந்த. காளியனுக்கு

வஞ்சகமும் மடியும் - ஆத்மாபஹாரமும், அபிமாந பங்கமுமாகக்கடவது. மணிவண்ணன் மலை. இப்படி விரோதிகள் * தேயவளர்ந்தவன் நீலரத்நம்போன்ற வடிவோடே நித்யவாஸம் பண்ணுகிற மலை.

நஞ்சித்யாதி. * மதிதவழ்குடுமி ப்ரதேசத்திலே, நஞ்சையுமிழ்ந்து பசித்திருக்கிடக்கிற மாசுணமானது, அந்தச் சிகரத்தின்மேலே தவழுகிற குளிர்ந்த பூர்ணசந்த்ரனை, தனக்கு ஆமிஷமாகக்கருதி கிளர்ந்துகிட்டி, சிவந்த தேஜஸ்ஸையுடைத்தான நாவாலே அவனை அளையாநிற்கும் திருமாலிருஞ்சோலையாகிற வதுவே * மணிவண்ணன்மலை. ... ... ௨.

மூ—மன்னுநரகன்றன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து
கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்தகடல்வண்ணன்மலை
புன்னைசெருந்தியொடு புனவேங்கையும் கோங்குநின்று
பொன்னரிமாலைகள்சூழ் பொழின்மாலிருஞ்சோலையதே. ௩.

பதவுரை.

புன்னையொடு— புன்னையும்
செருந்தியொடு— செருந்தியும்
புனம்— புனத்திலுண்டான
வேங்கையும்— வேங்கையும்
கோங்கும்— கோங்கும்
நின்று— ஒழுங்குபட நின்று
பொன்னரிமாலைகள் சூழ்— ‡ பொன்னரிமாலைகள் சுழற்றினாற்போலே யிருக்கிற
பொழில்— சோலைகளையுடைய
மாலிருஞ்சோலை அதே—;
மன்னு— (‘ஆள்வலியாலும் தோள்வலியாலும் நமக்கழிவில்லை’ யென்று) பொருந்தியிருந்த
நரகன் தன்னை— நரகாஸுரனை
சூழ்போகி— நிரஸிக்கும்வகைகளை ஆராய்ந்து
வளைத்து— அவனைத்தப்ப வொண்ணாதபடி வளைத்து
எறிந்து— கொன்று
கன்னிமகளிர் தம்மை— அவன் கல்யாணம் செய்வதாகப் பொறுக்கித் திரட்டிவைத்த கந்நிகைகளான பதினாறாயிரத் தொருநூறு ஸ்த்ரீகளையும்
கவர்ந்த— கொள்ளைகொண்டு தேவிமாராக்கினவனாய்
கடல்— கடல்போன்ற
வண்ணன்— வடிவையுடையனானவனுடைய
மலை— திருமலையாம்.

‡ “பொன்னரிமாலை - ஓர் ஆபரணம்.” என்று தமிழர்.

வ்யா. மூன்றாம்பாட்டு. மன்னுநரகன்றன்னை. “ஆள்வலியாலும் தோள்வலியாலும் நமக்கோ ரலைச்சலில்லை” என்று ப்ரதிஷ்டிதனாயிருந்த நரகாஸுரனை. அன்றிக்கே, விபரீதத்திலே நிலைநின்ற நரகாஸுரனை யென்னவுமாம். அதாவது - தேவர்களை யடர்த்து, தேவஸ்த்ரீகளைப் பிடித்து, அதிதியினுடைய குண்டலமளவாகப் பறித்துக்கொண்டுபோந்து குடியிருக்கமாட்டாமல் இந்த்ரன்வந்து ஸ்ரீமத் த்வாரகையிலே கூப்பிடும்படி பண்ணினவனிறே. சூழ்போகிவளைத்தெறிந்து. இந்த்ரன் வந்து விண்ணப்பஞ்செய்த வநந்தரம், “இனி யிவனை நிரஸிக்கக்கடவோம்” என்றுநிரஸிக்கும் ப்ரகாரமும் திருவுள்ளத்திலே விசாரித்து ஸத்யபாமைப் பிராட்டியோடேகூடப் பெரியதிருவடியை மேற்கொண்டு திருவாழிதொடக்கமான திவ்யாயுதங்களோடே ப்ராக்ஜ்யோதிஷ புரத்திலே எழுந்தருளி, தப்பவொண்ணாதபடி அவனை வளைத்துக்கொன்று. சூழ்ச்சியாவது - விசாரம்; வளைத்தல் - போக்கறுத்தல்; எறிதல் - சேதித்தலாய், திருவாழியாலே யறுத்துப்பொகட்டமையைச் சொல்லுகிறது.

கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்த. அவன்முன் பாணிக்ரஹணம் பண்ணுவதாக அங்கு மிங்கும் ¶ தெரிந்து பொறுக்கிக்கொண்டுவந்து திரட்டிவைத்த கந்நிகைகளான பதினாறாயிரத்தொரு நூறு ஸ்த்ரீகளையும் கைக்கொண்டுபோந்து, ஸ்ரீமத் த்வாரகையிலே பாணிக்ரஹணம்பண்ணி தனக்கு தேவிமாராக்கியருளின. கடல்வண்ணன்மலை. நரகவதம்பண்ணி இந்த்ராதிதேவர்களை ரக்ஷிக்கையாலும், அவன் திரட்டிவைத்த கந்நிகைகளைக் கைக்கொண்டு திருமணம் புணர்ந்து அவர்களை உகப்பிக்கையாலுமுண்டான ஹர்ஷத்தாலே, கடல்போன்ற திருநிறத்தையுடையனாயிருந்தவன் நித்யவாஸம் பண்ணுகிற மலை.

புன்னையித்யாதி. பொற்கென்ற பூக்களையுடைத்தான புன்னையும் செருந்தியும் புனத்திலுண்டான வேங்கையும் கோங்கும் ஒழுங்குபடநின்று பூக்கையாலே, திருமலையாழ்வார்க்குப் பொன்னரிமாலைகள் சாற்றினாற்போலே யிருக்கும் பொழில்களையுடைய மாலிருஞ்சோலையாகிற வதுவே - கடல்வண்ணன்மலை. ... ... ... ... ... ௩.

௴—மாவலிதன்னுடைய மகன் வாணன் மகளிருந்த
காவலைக்கட்டழித்த தனிக்காளைகருதுமலை
கோவலர் கோவிந்தனைக் குறமாதர்கள் பண்குறிஞ்சிப்
பாவொலிபாடி நடம்பயின் மாலிருஞ்சோலையதே. ௪.

பதவுரை.

கோவலர் கோவிந்தனை — கோரக்ஷணம் பண்ணும் இடைச்சாதியிலே பிறந்து கோவிந்தாபிஷேகம் பண்ணினவன் விஷயமாக
குறமாதர்கள்— குறப்பெண்கள்
குறிஞ்சி பண் — குறிஞ்சிராகத்தோடு கூடின
பா— பாட்டுக்களாலே
ஒலி பாடி— இசைபெறப் பாடி
நடம் பயில்— பாட்டுக்கிணங்கக் கூத்தாடாநின்றுள்ள
மாலிருஞ்சோலை அதே—;
மாவலி தன்னுடைய— மஹாபலியினுடைய
மகன்— புத்ரனான

வாணன் மகள் — பாணாஸுரனுடைய மகளான உஷைக்கு
இருந்த— அவள்தகப்பனால் செய்யப்பட்டிருந்த
காவலை— காவலையெல்லாம்
கட்டு அழித்த— (தன் திருப்பேரனான அநிருத்தாழ்வான் களவிலே அவளைப் புணருகையால்வந்த சிறையைமீட்கைக்காக அரணழித்துப்பொகட்ட
தனி— ஒப்பற்ற
காளை— யௌவநத்தையுடையவன்
கருதும்— வரும்பிவர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

வ்யா. நான்காம்பாட்டு. மாவலியித்யாதி. மஹாபலிபுத்ரனான பாணனுடைய மகளான உஷை யிருந்த. இத்தால் அவளுக்கு பிதாவாய் அபிமாநியானவனுடைய பலமும், அவன் இவளுடைய வைலக்ஷண்யத்துக்கீடாக வைத்த அரணும் தோற்றுகிறது. காவலைக் கட்டழித்த. அவளிருந்த கந்யாக்ர்ஹத்தில் பிதாவானவன் செய்துவைத்த காவலையெல்லாவற்றையும், பேரனான அநிருத்தாழ்வானுக்காகச் சென்று, அரணழித்த. அதாவது அநிருத்தாழ்வானைச் சிறைவைத்த நிமித்தமாகவிறே, வாணபுரத்துக்கெழுந்தருளி வாணனைஜயித்

¶ "திரிந்து" என்று பாடாந்தரம்.

தது. அவனைஜயித்தபின்பிறே உஷை அநிருத்தனுக்கு சேஷமாய்த்து. அத்தைப்பற்ற "காவலைக்கட்டழித்த" என்கிறது. தனிக்காளை கருதும்மலை. "காமனைப்பயந்தகாளை" என்னுமாபோலே, காமனைப்பெற்றபின்பும் அத்விதீயமான யௌவநத்தையுடையனாயிருந்த வன், "பரமபதத்திலுங்காட்டில் இதுவே நமக்குவாஸஸ்தாநம்" என்று கருதி நித்ய வாஸம்பண்ணுகிற மலை.

கோவலர்கோவிந்தனை. கோரக்ஷணம் பண்ணுகிற ஜாதியிலே பிறந்து அவர்களில் ஒருவனாய், கோவிந்தாபிஷேகம்பண்ணினவனை. குறமாதர்கள். குறப்பெண்களானவர்கள். பண்குறிஞ்சிப்பாவொலிபாடி நடம்பயில்மாலிருஞ்சோலையதே. குறிஞ்சிப்பண்ணோடே கூடின பாட்டுக்களாலே ஒலிபெறப்பாடி, அப்பாட்டுக்கநுரூபமான ந்ருத்தத்தைப் பண்ணாநின்றுள்ள மாலிருஞ்சோலையாகிற வதுவே- தனிக்காளை கருதும்மலை. ... ... ௪.

மூ.—பலபலநாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்றன்னை
அலைவலைமைதவிர்த்த வழகனலங்காரன்மலை
குலமலைகோலமலை குளிர்மாமலை கொற்றமலை
நிலமலை நீண்டமலை திருமாலிருஞ்சோலையதே. ௫.

பதவுரை.

குலம் மலை — தொண்டக்குலத்துக்குத் தலையானமலையாயும்
கோலம் மலை— அழகியமலையாயும்
குளிர்— குளிர்ந்ததாய்
மா— மேன்மையையுடையதான
மலை— மலையாயும்
கொற்றம்—, வெற்றியையுடைய
மலை— மலையாயும்
நிலம்— மரம்முதலியவை முளைக்கத்தக்க மண்பாட்டையுடைய
மலை— மலையாயும்
நீண்ட— உயர்த்தியையுடைய
மலை— மலையாயுமிருந்துள்ள
திருமாலிருஞ்சோலை அதே—;
பல பல நாழம்— பற்பலகுற்றங்களை
சொல்லி— வாயாரச்சொல்லி
பழித்த— தூஷித்த
சிசுபாலன் தன்னை— சிசுபாலனை
‡ அலைவலைமை தவிர்த்த— அலைவலைத்தனத்தைப்போக்கி † ரக்ஷித்த
அழகன்— அழகையுடையனாய்
அலங்காரன்— அலங்காரத்தை யுமுடையனானவன் வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

‡ அலைவலைமை - விஷயகளாவாதிகளைப் பாராமல் தன்நெஞ்சில் தோற்றிற்றைச் சொல்லுதல்.

† சரமதசையிலே தன் அழகைக் காட்டித் தன்னளவில் த்வேஷத்தை மாற்றுகையாலே தான் என்றால் நிந்தித்துக்கொண்டு திரியும் அலைவலைத்தனத்தைப் போக்கிக்காத்தவனென்றபடி.

வ்யா. ஐந்தாம்பாட்டு. பலபலவித்யாதி. பலபலகுற்றங்களைச் சொல்லி நிந்தித்த சிசுபாலன்றன்னை. இவன் சொல்லும் தோஷங்கள் அநுகூலர்வாக்கால் சொல்லத்தக்கதல்லாமையாலே "நாழ்" என்கிறது. நாழ் - குற்றம். அதுதனக்கு ஒருஸங்க்யை யில்லாமையாலே "பலபல" என்கிறது. அதுதன்னை நெஞ்சாலநினைத்திருக்கு மளவன்றிக்கே, பிறரறியும்படி வாய்விட்டுச் சொல்லுவதே! என்று "சொல்லி" என்கிறது. "கேட்பார்செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்" என்றாரிறே- ஆழ்வார். அதாவது - பகவந்நிந்தைக்கு ஜீவநம்

வைத்துக் கேட்குமவர்களுடைய செவிக்கும் சுடும்படியான தண்ணிய வசவுகளை சொல்லி வைகை. "சேட்பால்பழம்பகைவன்" என்று அதுக்கடியும் அருளிச்செய்தாரிறே அவர் தாமே; அதாவது- ஹிரண்யராவணஜந்மங்களே தொடங்கி மிகவும் ஸ்வபாவமாய்க்கொண்டு வருகிற பழையதான பகையை யுடையவனென்றபடி. இவன் ஒரோஜந்மங்களிலேபண்ணின ப்ராதிகூல்யத்துக்கு ஓரளவில்லையிறே. அவ்வவஜந்மங்களிலுண்டான காலத்தின் மிகுதி யையும், பண்ணின ப்ராதிகூல்யத்தினுடைய மிகுதியையும், இவை யெல்லாவற்றையும் நினைக்கிறது- பகையினுடைய பழமையாலே. அந்தவாஸனையாய்த்து - இந்த ஜந்மத்தில் இவன் இப்படி நிந்தைபண்ணித் திரிகைக்குஹேது. இப்படி இவன் செய்து திரிந்த கொடுமையை நினைத்திறே "சிசுபாலனை" என்னாதே, "தன்னை" என்று இவர் ஊன்றி யருளிச்செய்தது. அலைவலைமைதவிர்த்தவழகன். சரமதசையிலே தன்னழகைக்காட்டித் தன்னளவில் த்வேஷத்தை மாற்றுகையாலே, "தான்" என்றால் நிந்தித்துக்கொண்டு திரியும் அலைவலைத்தனத்தைப் போக்கி ரக்ஷித்தவன். அலங்காரன்மலை. இப்படியிருந்துள்ள அழகருக்குமேலே * முடிச்சோதிப்படியே உண்டான அலங்காரத்தையு முடையவன் நித்ய வாஸம்பண்ணுகிற திருமலை.

குலமலை. * தொண்டக்குலத்துக்குத் தலையானமலை. கோலமலை. அழகர்க்கும் ஆச்ரிதர்க்கும் அநவாதாநுபாவ்யமான அழகையுடைய மலை. குளிர்மாமலை. ரக்ஷகனானவனுக்கு ரக்ஷ்யவர்க்கம் பெறுமையால்வரும் தாபத்தையும், ரக்ஷ்யபூதரான விவர்களுக்கு ரக்ஷகனைப் பெறுமையால்வரும் தாபத்தையும் ஆற்றும்படியான குளிர்த்திமிக்கிருக்கிறமலை. கொற்றமலை. தன்னபிமாநத்திலே ஒதுங்கினாரை ஸம்ஸாரம் மேலிடாதபடிநோக்கும் வெற்றியையுடைத்தான மலை. நிலமலை. மணிப்பாறையாயிருக்குமளவன்றிக்கே, ஸூரிகளுக்கும் முமுக்ஷுக்களுக்கும் புஷ்பபல த்ருமாதிகளாய் முளைக்கவும், "முளைக்கவேணும்" என்று ப்ரார்த்திக்கைக்கும் யோக்யமான மலை. நீண்டமலை. பரமபதத்துக்கும் ஸம்ஸாரத்துக்கும் இடைவெளியற்று ஒரு கோவையாம்படியான ஒக்கத்தை யுடையமலை. இப்படியிருக்கிற திருமாலிருஞ்சோலையாகிற வதுவே-அலங்காரன்மலை. ... ... ... ... ௫

மூ.—பாண்டவர்தம்முடைய பாஞ்சாலிமறுக்கமெல்லாம்
ஆண்டங்குநூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்தவப்பன்மலை
பாண்டகுவண்டினங்கள் பண்கள்பாடி மதுப்பருகத்
தோண்டலுடையமலை தொல்லைமாலிருஞ்சோலையதே. ௬

பதவுரை.

பாண் தரு— ஆளத்தியை வைத்துப் பாடத்தக்க
வண்டு இனங்கள்— வண்டுத்திரள்களானவை
பண்கள் பாடி— பண்களைப் பாடிக்கொண்டு
மது— தேனை
பருக— பாநம்பண்ணிச் செல்லும்படியாக
தோண்டல் உடைய— சோலைகள் வாடாமல் வளர்ந்து செல்லத்தக்க ஊற்றை உடைத்தான

மலை— மலையாய்
தொல்லை— அநாதியான
மாலிருஞ்சோலை அதே—;
பாண்டவர் தம்முடைய— பஞ்சபாண்டவர்களின் மனைவியாய்
பாஞ்சாலி — பாஞ்சாலராஜன் மகளான த்ரௌபதிபட்ட
மறுக்கம் எல்லாம் — மனக்குழப்பத்தையெல்லாம்

ஆண்டு— திருவுள்ளத்தில் வைத்துக்கொண்டிருந்து
அங்கு— அவள் பரிபவப்பட்டபோதுண்டான ( துன்பங்களையெல்லாம் )
நூற்றுவர்தம்— துர்யோதநனுடைய நூறு தம்பிமார்களின்
பெண்டிர்மேல் வைத்த— ஸ்த்ரீகள் பக்கலிலேயாம்படி பண்ணி ( த்ரௌபதிக்கு மாநபங்கம் வாராதபடி புடைவை சுரக்கும்படி பண்ணினை )
அப்பன்— உபகாரகனுடைய
மலை— திருமலையாம்.

வ்யா. ஆரும்பாட்டு. பாண்டவரித்யாதி. பாண்டுபுத்ரர்களுடைய மஹிஷியாய், பாஞ்சாலராஜ புத்ரியாயிருக்கிறவளுடைய மறுகுதலெல்லாவற்றையும். இத்தால்- இவள் புகுந்தவிடத்தின் பெருமையும் பிறந்தவிடத்தின் பெருமையும் பார்த்தால், இம்மறுக்கம் வருகைக்கு யோக்யதை யில்லாதவளென்கை. "பாண்டவருடைய" என்னாதே, "தம்முடைய" என்றது- ஒரொருத்தரே தன்னைரக்ஷிக்கைக்கீடான சக்திமான்களானவர்களை பர்த்தாக்களாக உடையவளென்று தோற்றுகைக்காக. ஆனால், இவர்கள் தான் இப்படி இவளைரக்ஷியாமல் மறுகவிட்டிருப்பானென்னென்னில்; "பொய்ச்சூதில்தோற்ற பொறையுடையமன்னர்" என்கிறபடியே க்ருத்ரிம த்யூதத்திலே இவளையும் தோற்றவர்களாகையாலே தர்மபீருக்களாய்ச் செய்யலாவதற்று, தங்கள் பொறையாலே நிலத்தைக்கீறி யிருந்தார்களித்தனையிறே. ஸந்நிஹிதரான பர்த்தாக்கள் கைவாங்கியிருக்கையாலும், பிதாவானவன் அஸந்நிஹிதனுகையாலும், தான் அபலையாகையாலும், ப்ரபலரானவர்கள் நலிகையாலும் வந்த மறுக்கமிறேயிது. "மறுக்கமெல்லாம்" என்றது- "அந்தகன் சிறுவனரசர்தமரசற்கிளையவனணி யிழையைச் சென்று எந்தமக்குரிமை செய்யென" என்கிறபடியே குருடன் பெற்ற பிள்ளையாகையாலே அறிவுகேடு வழிவழியாய், பிதாவானவன் கண்ணஞ்சவளர்க்க வளருகையன்றிக்கே, தான் கண்டபடி மூலையடியே திரிந்தவனாய், அதுக்குமேலே, ராஜராஜனான துர்யோதநனுக்குப் பின்பிறந்தவனாய், அவன் கொண்டாடி வளர்த்த செருக்காலே தீம்பிலே தகணேறின துச்சாஸநனாகிற முரட்டுப்பையல், மஹாத்ஸவமாகையாலே ஆபரணங்களாலே அலங்க்ருதையாய் ஆர்த்தவ தோஷயுக்தையாயிருக்கிறவள் பக்கலிலே கிட்டி, "சூதிலே உன்னையும் தோற்றார்கள், நீ போந்து எங்களுக்கு இழிதொழில் செய்" என்று சொல்ல; அவள் (க) "ரஜஸ்வலாஹம் ... ... ... ... நாஹம் ...ஹ" என்ற வளவிலும், விடாதேயவளை மயிரைப்பிடித்து இழுத்துக்கொண்டுபோந்து மஹாஸபையிலே நிறுத்தி, பரிபவோக்திகளைப்பேசி வஸ்த்ரத்தை அபஹரித்துச்செய்திறபோது அவள் பட்டமறுக்கங்கள் அநேகமாகையாலே.— ஆண்டு. அவை யெல்லாவற்றையும் ஒன்றொழியாமல் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருந்து. அங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல்வைத்த. அவள் பரிபவப்பட்ட அத்தசையிலே அவளைப்பரிபவிப்பித்த துர்யோதநாதிகள் நூற்றுவருடையவும் ஸ்த்ரீகள்பக்கலிலேயாம்படி பண்ணின. "சந்தமல் குழலாளலக்கண் நூற்றுவர்தம் பெண்டிரு மெய்தி" என்றாரிறே- திருமங்கையாழ்வாரும். இனி நூலிழந்ததிறே இவளில் அவர்களுக்கேற்றம். அப்பன். சரணாகதையான த்ரௌபதிக்குச் செய்த உபகாரம் தமக்குச் செய்ததாக நினைத்து "அப்பன்" என்கிறார்; ஆச்ரிதரிலே ஒருவர்க்குச் செய்தது தமக்குச் செய்ததாக நினைத்திராதவன்று பகவத்ஸம்பந்தம் இல்லையாகக்கடவதிறே. மலை. இப்படியிருக்கிற உபகாரகனானவன் ஆச்ரித ஸம்ரக்ஷணார்த்தமாக நித்யவாஸம் பண்ணுகிற மலை.

(க) "ரஜஸ்வலைக வஸ்த்ராஹம் நதுமாம்நேதுமர்ஹஸி-குருணஞ்சபுரஸ்ஸ்தாதும் ஸபாயாம் நாஹமுத்ஸஹே."

பாண்டரு வண்டினங்கள். பாண் - பாட்டு. பாட்டுக்குத்தகுதியான வண்டினங்கள். அதாவது - பிறப்பே பிடித்து பாட்டேயொழிய வேறொன்றறியாததா யிருக்கை. பண்கள் பாடி மதுப்பருக. ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே நாநாவான பண்களைப் பாடிக்கொண்டு மதுபானம் பண்ணிச் செல்லும்படியாக. தோண்டலுடைய மலை. திருச்சோலைகள் ஒருகாலும் வாடாமல் நித்யவஸந்தமாய்ச் செல்லும்படி ஊற்றுடைத்தான மலை. தொல்லைமாலிருஞ்சோலையதே. திருவனந்தாழ்வானே திருமலை யாழ்வாராய் வந்து நிற்கையாலே, அநாதியாய்க்கொண்டு பழையதாய் மாலிருஞ்சோலையென்னும் திருநாமத்தையுடைத்தாயிருக்கிற வதுவே- அப்பன் மலை, தோண்டல்- ஊற்று. ... ... ... ... ... ... ... ௬

மூ—கனங்குழையாள் பொருட்டாக்கணை பாரித்தரக்கர்தங்கள்
இனங்கழுவேற்றுவித்த வெழிற்றோளெம்மிராமன்மலை
கனங்கொழிதெள்ளருவிவந்து சூழ்ந்தகன்ஞாலமெல்லாம்
இனங்குழுவாடுமலை யெழின்மாலிருஞ்சோலையதே. ௭

பதவுரை.

கனம்— பொன்னை
கொழி — கொழித்துக்கொண்டு வாரா [நின்றுள்ள
தெள்— தெளிந்த
அருவி— அருவியிலே
அகல்— பரம்பின [ரும்
ஞாலம் எல்லாம்— பூமியிலுள்ளாரெல்லா
வந்து சூழ்ந்து— வந்து சூழ்ந்துகொண்டு
இனம் குழு— திரள் திரளாக
ஆடும்— நீராடா நின்றுள்ள
மலை— திருமலையாய்
எழில்— எல்லாநன்மைகளும் வாய்ந்த
மாலிருஞ்சோலை அதே—;
கனம்— பொன்னால் செய்யப்பட்ட
குழையாள் பொருட்டா— காதணியையுடைய பிராட்டிக்காக
கணை— திருச்சரங்களை
பாரித்து— பரப்பிப் பாரித்துக்கொண்டு
அரக்கர் தங்கள் இனம்— ராக்ஷஸகுலத்தை
கழு— அம்புகளாகிற சூலத்திலே
ஏற்றுவித்த— ஏறும்படி பண்ணின
எழில்— வீரஸ்ரீயால்வந்த அழகுமிக்கிருக்கிற
தோள்— தோளையுடையனும்
எம்— எமக்கெல்லா முபகாரகனுமான
இராமன்— ஸ்ரீராமன் வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

வ்யா. ஏழாம்பாட்டு. கனங்குழையாள் பொருட்டா. கனம் - பொன். பொன்னாலே செய்யப்பட்ட காதுப்பணியையுடையவள் காரணமாக. இவள் காதும்காதுப்பணியுமான சேர்த்தி எப்போதும் பெருமாள் திருவுள்ளத்திலே கிடக்கும்போலே காணும்; (க) "ருசிரா... ...குண்டலம் ... ஸ்ய" என்று இவர் தம்முடைய காதுப்பணியும் முகமுமான சேர்த்தியை அநுகூலர்காண ஆசைப்பட்டிருக்குமாபோலே. கணைபாரித்து. அவளைப் பிரிந்தநாள் தொடங்கி, நினைத்துநினைத்தபேசதெல்லாம் பிரித்தவர்களை நிரஸிக்கையிலுண்டான கறுவுதலாலே திருச்சரங்களைத் தெரிந்து பரப்பிப் பாரித்துக்கொண்டிருந்தென்னுதல். அன்றிக்கே, யுத்தகாலந்தன்னிலே "வாளிபொழிந்த" என்கிறபடியே திருச்சரங்களை யுத்தபூமியெங்கும் பரப்பி யென்னுதல். அரக்கர் தங்களினம் கழுவேற்றுவித்த. ராக்ஷஸ

(க) "யேசாருசுபகுண்டலம் - முகந்த்ரக்ஷ்யந்திராமஸ்ய."

ருடைய திரளை, * கூர்வாயம்புகளான கழுக்களிலே ஏற்றுவித்த. கழுப்போலே உடலைப் பிளந்து மறுபாடுருவ நிற்கையாலே, அம்பை " கழு " என்கிறது. அன்றிக்கே, "கழுவே ற்றுவித்த" என்று பாடமாகில், ராக்ஷஸருடைய திரளைக்கொன்று கழுகுகளேறி ஜீவிக்கும் படி பண்ணினவனென்கை. எழில்தோளெம்மிராமன்மலை. வீரஸ்ரீயால் வந்த அழகை யுடைத்தான தோளையுடையனாய், ஜநகியான பிராட்டிக்கு உதவுகையாலே அவளுடைய ப்ர ஜைகளான நமக்கெல்லாம் உபகாரகனாய், அழகாலும் குணங்களாலும் ஸர்வரையும் ரமிப் பிக்கையாலே " ராமன் " என்னும் திருநாமத்தை யுடையவன், அவதாரத்திற் பிற்பாடர்க் கும் உதவுகைக்காக எழுந்தருளி நிற்கிற மலை.

கனங்கோழிதெள்ளருவி. பொன்னைக்கொழித்துக்கொண்டு வாராநின்றுள்ள தெளிந்த அருவியிலே. வந்துசூழ்ந்தகல் ஞாலமெல்லாம். பரப்பையுடைத்தான பூமியிலுள்ளாரெல் லாரும் வந்து சூழ்ந்து கொண்டு. இனங்குழுவாடும்மலை. திரள் திரளாக தீர்த்தமாடாநிற் கும் மலையான. எழில்மாலிருஞ்சோலையதே. ஸர்வப்ரகாரவிலக்ஷணமாயிருந்துள்ள மாலிரு ஞ்சோலையாகிற வதுவே- இராமன் மலை. ... ... ... ... எ.

மூ.—எரிசிதறுஞ்சரத்தா லிலங்கையினைத் தன்னுடைய
வரிசிலைவாயிற்பெய்து வாய்க்கோட்டந் தவிர்த்துகந்த
அரையனமருமலை யமரரோடு கோனுஞ்சென்று
திரிசுடர்சூழுமலை திருமாலிருஞ்சோலையதே அ.

பதவுரை.

அமரரொடு— தேவர்களோடு [னும்
கோனும்— அவர்களுக்கு ப்ரபுவான இந்த்ர
திரி— இரவும்பகலும் ஸஞ்சரியாநின்றுள்ள
சுடர்— சந்த்ரஸூர்யர்களும்
சென்று— வந்து
சூழும்— ப்ரதக்ஷிணம் பண்ணாநிற்கிற
மலை— மலையாய்
திருமாலிருஞ்சோலை அதே—;
எரி— நெருப்பை
சிதறும்— சிதறாநின்றுள்ள
சரத்தால்— பாணத்தாலே
இலங்கையினை— லங்காபதியான ராவணனை
தன்னுடைய— தன்னுடைய
வரி— நீண்டிருந்துள்ள
சிலை— ஸ்ரீசார்ங்கத்தின்
வாயில் பெய்து— வாயிலே புகுவித்து
வாய் கோட்டம்— " நநமேயம் " என்று கிடக்கப்பண்ணின வாய்மதத்தை
தவிர்த்து— நீக்கி
உகந்த— திருவுள்ளமுகந்த
அரையன்— அரசனானவன்
அமரும்— பொருந்தி வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

வ்யா. எட்டாம்பாட்டு. எரிசிதறும்சரத்தால். நெருப்பைச் சிதறாநின்றுள்ள அம் பாலே. தொடுத்துவிடும்போதாய்த்து " அம்பு " என்றறியலாவது. தைக்கும்போது உடம்பிலே நெருப்பைச் சொரிந்து கொண்டாய்த்துத் தைப்பது. (க) " தீப்தபாவகஸஙகா ஸை꞉ " என்றானிறே. அதாவது - எதிரிகள் மேலேபடும்போது ஜ்வலித்த அக்நியோடு துல்யங்களாயிருக்குமென்கை. இலங்கையினை. ‡அந்தகனுங்கூட ப்ரவேசிக்க அஞ்சும்படி

(க) " தீப்தபாவகஸங்காசை꞉ " ‡ அந்தகன்-யமன்.

யான வூரை. வரங்கொடுத்த ப்ரஹ்மாதிகளும் இவ்வூரின்பேர் கேட்டால் குடல்கரிந்து கிடக்கும்படியாயிறே யிருப்பது. ஆதித்யனும், இவ்வூரில் புழுங்க வுலர்த்துகை முதலானவற்றுக்கு வேண்டுமளவு தன்கிரணங்களை ப்ரகாசிப்பித்து, நடுங்கியொடுங்கிக் கொண்டிறே போருவது; ஆகையாலிறே, ராவணன் பட்டுக்கிடக்கிறபோது, மண்டோதரி-(க)"உத்திஷ்டோத்திஷ்ட கிம் சேஷே ப்ராப்தே பரிபவே ந்ருப । அத்யைவ நிர்பயம் லங்காம் ப்ரவிஷ்டா ஸூர்யரச்மய:" என்றது. இப்படியிருக்கிற வூரைப்பாய்த்து மநுஷ்ய ரூபமாய் நின்று சரங்களாலே யழியச்செய்தது. தன்னுடைய வரிசிலை வாயில்பெய்து. தனக்கு அஸாதாரணமாய், அழகுக்குடலான வரியையுடைத்தாயிருந்துள்ள ஸ்ரீசார்ங்கத்தினுடைய வாயிலேபுகுவித்து. வில்லுக்கு வாய் - அம்பிறே. வாயான அம்பிலே புகும்படி ப்ரவேசிப்பித்து. ஸர்ப்பம் நாவாலே விழுங்குமாபோலேயாய்த்து - வில்லும் அம்பாலே க்ரஸிக்கும்படி. இத்தால் - ஈச்வரத்வப் பிடாராலன்றிக்கே, (உ) 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்கிற அவதாரத்தில் மெய்ப்பாடு தோன்ற நின்று, அம்புகளாலே அழியச்செய்தபடி சொல்லுகிறது. வாய்க்கோட்டம் தவிர்த்து. வாக்கின், கோடுதலுண்டு - விலங்குதல், அத்தைத்தவிர்த்தாய்த்து. (௩) "நநமேயம்" என்றிருந்த விருப்பைத் தவிர்த்தாய்த்து (ச) ["கஸ்யசித்"] இவர் தம்மை இதரஸஜாதீயராக்கி வைக்கையாலே "மநுஷ்யர்" என்றேயிருந்தான். "இவரேயன்றிக்கே, 'ஈச்வரன்' என்று சொல்லுகிறவனன்றோ வந்தாற்றான் வணங்குவதோ" என்றானிறே. ஸ்வரூபம் கைபுகுந்தால் (ரு) 'நமஇத்யேவவாதிந:' என்றாய்த்திருப்பது; "மம" என்றிருக்கைபாய்த்து ஸ்வரூபவிரோதி. அநுகூலபாஷணம் பண்ணுகை ப்ராப்தமாயிருக்க, "எனக்கு" என்ற பேச்சில் விலங்குதலைத் தவிர்த்தாய்த்து. உகந்த அரையன். ஈராசு தவிர்த்த பின்பு உகந்தபடி. இவன்றான் "எனக்கு" என்றிருக்குமத்தைத் தவிர்த்தேதாமாகில், இனி நம்மதேயன்றோவென்று இனியனானான்; இவன் "என்னது" என்றிருக்குமது தவிர்ந்தால், பின்பு உள்ளதடையத் திருவிடையாட்டமாயிருக்குமிறே. அரையன். இவன்பக்கல் அல்பாநுகூல்யமமைகிறது உடையவனாகையிறே. இவன் ப்ராதிகூல்யத்தினின்றும் நிவர்த்தனான வளவுகொண்டு உகக்கும்படியாய்த்து ஸ்வாபாவிக ஸம்பந்தம் இருப்பது. அமருமலை. இப்படியிருக்கிறவன், பின்பு எல்லாருடையவும் ஸ்வாதந்த்ர்யத்தைப் போக்கி ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிறமலை.

அமரரோடுகோனும். தேவர்களோடே கூட அவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரனும். திரிசுடரும். லோகோபகாரமாக பகவதாஜ்ஞையாலே இரவுபகல் வெளிச்செறிப்பைப் பண்ணிக்கொண்டு ஸஞ்சரியாநின்றுள்ள சந்த்ர ஸூர்யர்களும். கீழ்ச்சொன்ன ¶அபிசப்தம் இங்கும் கூட்டிக்கொள்ளக்கடவது. சென்று - சூழும்மலை. வந்து, தந்தாமுடைய பதஸ்த்தைர்யார்த்தமாக ப்ரதக்ஷிணம் பண்ணாநிற்கும்மலை. தங்களை நெருக்கிக்கொண்டுதிரிந்த ராவணனை நிரஸித்த உபகாரஸ்ம்ருதியாலும் வந்து ப்ரதக்ஷிணம்பண்ணா நிற்பார்களிறே. திருமாலிருஞ்சோலையதே. இப்படியிருந்துள்ள திருமாலிருஞ்சோலை யாகிறவதுவே - அரையனமரும் மலையென்கை. ... ... ... ... ... ... அ.

---

(க) "உத்திஷ்ட்டோத் திஷ்ட்டகிம் சேஷேப்ராப்தேபரிபவேநவே-அத்யைவநிர்பயம் லங்காம்ப்ரவிஷ்டாஸ்ஸூர்யாச்மய:" (உ) "ஆத்மாநம்மாநுஷம்மந்யே."
(௩) "நநமேயம்." (ச) "கஸ்யசித்." "நமஇத்யேவவாதிந:." ¶ அபிசப்தம்-உம்மை.

மூ.—கோட்டுமண் கொண்டிடந்து குடங்கையில் மண்கொண்டளந்து
மீட்டுமதுண்டுமிழ்ந்து விளையாடு விமலன்மலை
யீட்டியபல்பொருள்க ளெம்பிரானுக் கடியிறையென்
றோட்டருந்தண் சிலம்பாறுடை மாலிருஞ்சோலையதே. ௯

பதவுரை.

ஈட்டிய— பெருகிவரும்போது வாரிக்கொண்டுவருகிற
பல்— பலவகைப்பட்ட
பொருள்கள்—பொன், முத்து, அகில் முதலிய பொருள்களெல்லாம்
எம்— எமக்கு
பிரானுக்கு— ஸ்வாமியானவனுக்கு
அடி இறை என்று— ஶ்ரீபாத காணிக்கையென்று
ஓட்டரும்— ஓடிவாராநிற்பதாய்
தண்— குளிர்ந்திருந்துள்ள [புடைய
சிலம்பு ஆறு உடை— திருச்சிலம்பாற்றை
மாலிருஞ்சோலை அதே—;
மண்— ஹிரண்யாக்ஷனாலே தள்ளப்பட்டு ப்ரளயங்கதையான பூமியை
இடந்து— அண்டபித்தியில்நின்றுமொட்டு விடுவித்தெடுத்து
கோடு— தன் திரு எயிற்றிலே [றாய்
கொண்டு—(வராஹரூபியாய்க்கொண்டு) தரித்
மண்— மஹாபலியாலேதன்னதாக்கிக்கொள்ளப்பட்டபூமியை
குடங்கையில்— உள்ளங்கையில்
கொண்டு — நீரேற்றுவாங்கிக்கொண்டு
அளந்து— அளந்தும்
மீட்டும்— மறுபடியும்
அது— அந்தபூமியை
உண்டு— தம் திருவயிற்றினுள்ளேவைத்து நோக்கியும்
உமிழ்ந்து—(பின்பு) வெளிநாடுகாண உமிழ்ந்தும்
விளையாடும்— விளையாடாநின்றுள்ள
விமலன்— நிர்மலனானவன் வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. கோட்டுமண் கொண்டிடந்து. ஹிரண்யாக்ஷனாலே தள்ளப்பட்டு ப்ரளயகதையான பூமியை, நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத வராஹவேஷத்தைக் கொண்டுபுக்கு அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்துத் திருவெயிற்றிலேகொண்டு. குடங்கையில் மண்கொண்டளந்து. பின்பு மஹாபலியாலே அபஹ்ருதையாய் அந்யசேஷப்பட்டுக்கிடந்த பூமியை, சர்ணாகதனான இந்த்ரனுக்கு வாங்கிக்கொடுக்கைக்காக வாமநவேஷ பரிக்ரஹத்தைப் பண்ணி அர்த்தியாய்ச் சென்று "தன்குடங்கை நீரேற்றான்" என்கிறபடியே கொடுத்து வளர்ந்த கையைக்கொண்டு நீரேற்று பரிக்ரஹித்து, கையிலே நீர்விழுந்தவாந்தரம் திருமேனியை வளர்த்து எல்லை நடப்பாரைப்போலே திருவடிகளாலே யளந்து. மீட்டுமதுண்டுமிழ்ந்து. திரியவும் அவாந்தர ப்ரளயத்திலே அழியப்புக, "பெருவெள்ளமுண்ணுமல் தான்விழுங்கி" என்கிறபடியே அந்தபூமியைத் தன்திருவயிற்றிலே வைத்துநோக்கி ப்ரளயாநந்தரம் வெளிநாடுகாண வுமிழ்ந்து. விளையாடும். இப்படி லீலைகொண்டாடும். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் அவனுக்கு லீலையாயிறே யிருப்பது; அத்தைப்பற்ற, ஜகத்ரக்ஷணம் பண்ணின வித்தை லீலையாக அருளிச்செய்கிறார். விமலன். ஹேயப்ரத்யநீகன். அதாவது (க)"ஸமஸ்தஹேயரஹிதாய" என்கிற திவ்ய மங்கள விக்ரஹத்தை

(க) "ஸமஸ்தஹேயரஹிதாய."

இதரஸஜாதீய மாக்குவது, சிறுக்குவது, பெருக்குவதாகா நிற்கச்செய்தே, ஐச்சிகமாகவும் பாரார்த்தமாகவும் செய்கையாலே விகாராதி தோஷரஹிதனுயிருக்கை. மலை. ஏவம்பூதனுன வன் ஸம்ஸார ப்ரளயகதரை யெடுக்கைக்கும், அந்ய சேஷத்வத்தை யறுத்துத் திருவடி களின் கீழேயிட்டுக் கொள்ளுகைக்கும், மேல் ஸம்ஸார ப்ரளயத்தில் அகப்படாதபடி நோக் குகைக்குமாக எழுந்தருளி நிற்கிறமலை.

ஈட்டிய வித்யாதி. பெருகி வரும்போது திருமலையில் இரண்டருகிலுமுள்ள பாத ர்த்தங்களையும் வாரிக்கொண்டு வருகையாலே, * பொன் முத்து மரியுகிரும் புழைக்கைம்மா கரிக்கோடும் அகில் குறடும் சந்தனமும் முதலாக, தான் திரட்டின பல பதார்த்தங்களையும், என்னுடைய நாதனுனவனுக்குத் திருமுன்காணிக்கை யென்று இத்தை ஸமர்ப்பிக்கையி லுண்டான த்வரையாலே மிகவும் விரைந்து வாராநிற்பதாய், தன்பக்கல் அவகாஹித்தாரு டைய ஸகல ச்ரமங்களு மாறும்படி குளிர்ந்திருப்பதான திருச்சிலம்பாற்றையுடைய திருமா லிருஞ் சோலையாகிறவதுவே - விமலன்மலை. ... ... ... ... ஏ.

மு.—ஆயிரந்தோள் பரப்பி முடியாயிர மின்னிலக
ஆயிரம்பைந்தலைய வனந்த சயன னாளுமலை
ஆயிரமாறுகளுஞ் சுனைகள் பலவாயிரமும்
ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே. ௧.

பதவுரை.

ஆயிரம் ஆறுகளும்— பல நதிகளையும்
பல ஆயிரம்— அனேகமாயிரங்களான
சுனைகளும்— தடாகங்களையும்
பூ— அழகிய [களையும்
ஆயிரம் பொழிலும்— அனேகமான சோலை
உடை— உடைத்தாயிருக்கிற
மாலிருஞ்சோலை அதே—;
ஆயிரம்— அனேகமான
தோள்— திருத்தோள்களை
பரப்பி— பரப்பிக்கொண்டும்
முடி ஆயிரம்— ஆயிரம் திருமுடிகளும்
மின் இலக— (திரு அபிஷேகத்தின் ரத் நாதிகளாலே) ஒளிவிடவும்
பை— பரந்த
ஆயிரம் தலைய— ஆயிரம் தலைகளையுடைய
அனந்த சயனன்— அநந்தசாயியானவன்
ஆளும்— ஆளுகிற
மலை— திருமலையாம்.

வ்யா. பத்தாம்பாட்டு. ஆயிரம்தோள்பரப்பி. ஆயிரம் திருத்தோள்களையும் பரப் பிக்கொண்டு. முடியாயிரம் மின்னிலக. திருமுடிகளாயிரமும் திருவபிஷேகத்தி லுண்டான ரத்நாதிகளாலே ஒளிவிட. இவ்விடத்தில், “ ஆயிரம் ” என்றது - ஸஹஸ்ர ஸங்க்யையைச் சொன்னபடியன்று, அநேகத்வ பர்யாயம்; அல்லாதபோது, தோள்கள் ஆயிரமானுல் முடி கள் ஆயிரமாகக் கூடாமையாலே. “ தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி ” என்றாரிறே-ஆழ்வார். ஆயிரம்பைந்தலைய வனந்தசயன னாளும் மலை. இவ்விக்ரஹத்தினுடைய பரப்பெல்லாம் தன்னுள்ளே யடங்கும்படியாகக் கொண்ட வடிவாகையாலே ஆயிரம் பரந்த தலைகளையுடைய திருவனந்தாழ்வான்மேலேபள்ளிகொண்டருளுகிறவன், அந்தத்திருவனந்தா ழ்வானோபாதி, தனக்கபிமதமான வாஸஸ்த்தாநமாக அபிமாநித்தாளுகிறமலை. அத்திருவனந் தாழ்வான்றானே திருமலையாழ்வாராய் நிற்கையாலே அப்படி அபிமாநித் தருளக்குறை யில்லையிறே.

ஆயிரமித்யாதி. இங்கும் எடுத்தது ஆயிரமாகவருளிச்செய்கிறார்- தம்முடைய ப்ரேமாதிசயத்தாலும் அவற்றினுடைய பன்மையாலும். ஆயிரமாறுகளும். திருச்சிலம்பாறென்னுமிறே இதுச்சொல்லி வந்தது. "சந்தொடு மணியும் அணிமயில்தழையும் தழுவி வந்தருவிகள் நிறைந்து வந்து" என்கிறபடியே திருமலைப் பரப்பிலே பெருகிவரும் காட்டாறுகள் அநேகமாயிறே யிருப்பது. அத்தைப்பற்றச்சொல்லுகிறது. சுனைகள்பலவாயிரமும். திருமலைப்பரப்பிலே பார்த்தால், அவ்வாறுகள் நீர் தேங்கிநிற்கும் திருச்சுனைகளும் அப்படி பலவாயிறே யிருப்பது. திருநாராயணப்பொய்கை, நலந்திகழ்நாரணன், ஆராவமுது என்றாற்போலே சொல்லுகிறவை திருமலையடிவாரத்தி லுள்ளவையிறே. மேலும் இப்படி அநேக முள்ளது கண்டுகொள்வது. ஆயிரம்பூம்பொழிலும். அந்த ஆறுகளின் நீராலும் சுனைகளின் நீராலும் வளர்ந்து ஸர்வகாலமும் பூமாறாமல் செல்லும் திருச்சோலைகளும் அநேகமாயிறேயிருப்பது. "சோலைமலை" என்றிறே திருமலைதனக்கு நிரூபகம். ஆயிரமாறுகளு மித்யாதி. (க) "நதீவிஸ்ருதஸாஹஸ்ரா [illegible] ஸஹஸ்ரதஸாஹஸ்ர [illegible] நாமண்டிதா" என்கிற ப்ரமாண ப்ரஸித்தி. உடை. இவையெல்லாவற்றையு முடைத்தாயிருக்கிற திருமாலிருஞ்சோலையாகிற வதுவே-அனந்தசயனனுறும் மலை. ... ... ... ... ... ... ... ... ... ௰.

அ. நிகமத்தில், இத்திருமொழியாலே அழகருடைய வைபவத்தை, தாம் ப்ரகாசிப்பித்தமையை யருளிச்செய்து, இதுக்கு வேறொரு பலம் சொல்லாதே இத்தை யறிகைதானே பலமாகத் தலைக்கட்டுகிறார்.

மூ.—மாலிருஞ் சோலையென்னு மலையையுடைய மலையை
நாலிரு மூர்த்திதன்னை நால்வேதக் கடலமுதை
மேலிருங் கற்பகத்தை வேதாந்த விழுப்பொருளின்
மேலிருந்தவிளக்கை விட்டுசித்தன் விரித்தனவே ௧௧.

பதவுரை.

மாலிருஞ்சோலை என்னும்— 'திருமாலிருஞ்சோலை' என்னும் திருநாமத்தையுடைய
மலையை— திருமலையை
உடைய— வாஸஸ்தாநமாக உடையனாய்
மலையை— ஒருமலைசாய்ந்தாற்போலே இருக்குமவனாய்
நாலிருமூர்த்தி தன்னை— திரு அஷ்டாக்ஷர ரூபியாய்
நால்— ரிகாதிபேதத்தாலே நாலுவகைப் பட்டிருக்குமுள்ள
வேதம்— வேதமாகிற
கடல்— ஸமுத்ரத்தின் ஸாரமான
அமுதை— அம்ருதமானவனாய்
மேல்— மேலான
இரும்— பெரிய
கற்பகத்தை — கல்பவ்ருக்ஷத்தை யொத்த [வனாய்
வேதாந்தம்- வேதாந்த ப்ரதிபாத்யங்களாய்
விழு— சிரியவையான
பொருளில்— அர்த்தங்களுக்கெல்லாம்
மேல் இருந்த— மேலாயிருந்து
விளக்கை— தனக்குத்தானே விளங்குமவனை விஷயமாக
விட்டு சித்தன்— பெரியாழ்வாராலே
விரித்தன— அருளிச்செய்யப்பட்டவை.

(க) "நதீபிச்சதஸாஹஸ்ரைர் நிர்ஜ்ஜரைர் பஹுபிர்வ்ருதா- அநேகசதஸாஹஸ்ரை ருத்யானை ருபலக்ஷிதா."

வ்யா. மாலிருஞ்சோலையென்னும் மலையையுடைய மலையை. திருமாலிருஞ்சோலையென்னும் திருநாமத்தையுடைய திருமலையை. ஸ்ரீவைகுண்டம் க்ஷீராப்தி தொடக்கமான ஸ்தலங்கள் ‡ எல்லாவற்றிலும் தனக்கு அபிமதமான வாஸஸ்தலமாகவுடையவனாய், இத்திருமலையை விரும்பு ஒருநாளுந்த்யஜியாமையாலும் வடிவில்பெருமையாலும் போக்யதாதிசயத்தாலும் மலைபோலேயிட்டு யிருக்கிறவனை. நாலிருமூர்த்திதன்னை. ஷாட்குண்ய ப்ரகாசகமாயும் அதிலே இவ்விரண்டிரண்டு குணங்களுக்கு ப்ரகாசகமாயுமிருந்துள்ள வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்நாநிருத்தருடைய நாலுவகைப்பட்டிருக்கிற பெரிய வடிவுகளையுடையவனை. (க) “ [illegible] ” என்றருளிச்செய்தாரிறே- ஆழ்வான். அதவா, திருவஷ்டாக்ஷர ரூபியானவனை யென்னவுமாம். (உ) “ [illegible] ” என்னக்கடவதிறே. நால்வேதக்கடலமுதை. ருக்ஆதிபேதத்தாலே நாலுவகைப்பட்டிருந்துள்ள வேதமாகிற ஸமுத்ரத்தில் ஸாரமான அம்ருதமானவனை; “ வேதியர் முழுவேதத்தமுதத்தை ” என்னுமாபோலே. அன்றிக்கே, “ நால்வேதக்கடலமுது ” என்று ஸகல வேதஸாரமான திருமந்த்ரத்தைச் சொல்லுகிறதாய், ஸாமாநாதிகரண்யத்தாலே அத்தை இவனைச் சொல்லுகிறதாகவுமாம். ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம்-ப்ரதிபாத்யப்ரதிபாதகபாவ ஸம்பந்தம். இவ்விடத்துக்கு இப்படி பொருளாமிடத்தில், “ நாலிருமூர்த்திதன்னை ” என்கிறவிடத்துக்கு முற்பட்ட யோஜனையொன்றுமேயாகக்கடவது. மேலிருங்கற்பகத்தை. மேலான பெரிய கல்பகத்தை. இத்தால்- ஸ்வர்க்கத்தில் கல்பகத்தில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. அதாவது- அந்தகல்பகம் தன்னையொழிந்தவற்றைக் கொடுக்குமித்தனையிறே; இது தன்னையுங் கொடுக்குமிறே. அந்த கல்பகம் அபேக்ஷித்தார்க்கிறே கொடுப்பது; இது அதிகாரியையுமுண்டாக்கிக்கொடுக்கும். ஆகையாலிறே “ என்னையாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம் ” என்று ஆழ்வாரருளிச்செய்ததும். வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை. வேதாந்தப்ரதிபாத்யங்களான சிரிய அர்த்தங்களுக்கெல்லாம் மேலாயிருந்துள்ள ஸ்வயம்ப்ரகாசவஸ்துவானவனை. வேதாந்த ப்ரதிபாத்யமான சிரிய வர்த்தங்களாவன- (ங) “ [illegible] ” (௪) “ [illegible] ” (௫) “ [illegible] ” இத்யாதிகளாலே சொல்லப்படுகிற தத்த்வத்ரயமும். மேலிருந்த வென்றது- இந்த தத்த்வத்ரயத்திலும் வைத்துக்கொண்டு மேலாயிருந்துள்ளவென்றபடி. அதாவது- சேதநாசேதநங்களிரண்டும் ப்ரகாரமாக, தான் ப்ரகாரியாய் (௬) “ [illegible] ” என்னும்படி ஸர்வஸ்மாத்பரனாயிருக்கை. விட்டுசித்தன் விரித்தனவே. இப்படியிருக்கிறவனை, * அரவத்தமளிப்படியே திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்

‡ எல்லாவற்றிலும்- எல்லாவற்றைக்காட்டிலுமென்றபடி. (க) “ குணைஷ்ஷட்பிஸ்த்வேதை: ப்ரதமதரமூர்த்தி ஸ்தவபௌததஸ்திஸ்ரஸ்தேஷாம் த்ரியுகயுகளைர் ஹித்ரிபிரபூ: ”

(உ) “ வ்யக்தம்ஹி பகவாநேஷ ஸாக்ஷாந்நாராயணஸ் ஸ்வயம் - அஷ்டாக்ஷரஸ்வரூபேண முகேஷுபரிவர்த்ததே. ” (ங) “ போக்தாபோக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா. ” (௪) “ க்ஷரம்ப்ரதாநமம்ருதாக்ஷரம்ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவஏக: ” (௫) “ ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேச: ” (௬) “ நதத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே. ”

ஆகையாலே "விஷ்ணுசித்தன்" என்னும் திருநாமத்தையுடைய பெரியாழ்வார் விஸ்தரேணை அருளிச்செய்ததை. இதுக்கு பலம் சொல்லாமைக்கடி-, இவ்வர்த்தத்தை அறிகிற துதானே இது கற்கிறதுக்கு ப்ரயோஜநமாகையாலே. ... ... ... ... ... ௧௧

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

———(0)———

அடிவரவு.—உருப்பிணி கஞ்சன் மன்னு மாவலி பல பாண்டவர் கன வேரி கோட் டாயிரம் மாலிருஞ்சோலை நாவ.

ஆ திருமொழி ௧௨-க்கு, பாட்டு-௧௪௭.

நான்காம்பத்து- நான்காந்திருமொழி- நாவகாரியம், ப்ரவேசம்.

அ. கீழ் இரண்டு திருமொழியிலே- ஸாமக்ர்யத்தைப் பெரியாழ்வார் சேஷ்டி தங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி ஸர்வேச்வரன் திருமலையில் நிற்கிறநிலையை அநுபவியாநின்றுகொண்டு அவன்றன் ப்ராப்யத்தில் ப்ரதமாவதியாகையாலே தச்சரமாவதியான திருமலையாழ்வார்பக்கலிலே திருவுள்ளமூன்றி, திருமலையாழ்வாருடைய வைபவத்தை விஸ்தரேணைபேசி யநுபவித்து ப்ரீதரானார்; அவ்வளவிலே, ஸர்வேச்வரன் திருமலையில்நிற்கிற நிலையிலுங்காட்டில், *பகலிலோவிவந்த தன்சிறுவனை ப்ரஹ்லாதன், திருநாமஞ்சொன்னதுவே ஹேதுவாக, பிதாவானவன் சத்ருவாய்க்கொண்டு, பஹுமுகமாக நலிய, நலிவுபடுகிற அவஸ்தையிலே நிருபாதிக பிதாவான பக்தாஸக்தியாலே "அடுத்தோருருவாய்" என்கிறபடியே இரண்டு வடிவைச் சேர்த்துக்கொண்டுவந்து தோன்றி, ப்ரதிகூலனான ஹிரண்யனை நிரஸித்து, பாலனை ப்ரஹ்லாதனை ரக்ஷித்தருளின மஹாகுணம் தோன்றத் திருக்கோட்டியூரிலே எழுந்தருளி நிற்கிற நிலையை இவர்க்கு ப்ரகாசிப்பிக்க; அத்தைக்காண்கையாலும், திருப்பல்லாண்டிலும் * வண்ணமாடத்திலும் செல்வநம்பியோட்டை ஸம்பந்தத்தையிட்டும் (௧) க்ருஷ்ணவதாரகந்தமானது கொண்டும்தாம்விரும்பியருளிச்செய்த தேசமாகையாலும், திருக்கோட்டியூரிலே திருவுள்ளம்சென்று அங்கே யெழுந்தருளிநிற்கிறவன்படிகளை யநுபவிக்கிறவிவர், அவ்வநுபவஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே, அவன் கொடுத்த கரணங்களைக்கொண்டு அவனை யநுபவித்து வாழலாயிருக்க த்ரிவிதகரணங்களாலும் அவனோடே ஒட்டற்றுத்திரிகிற பாபகாரிகளானவர்களைநிந்தித்தும்,ஆத்மகுணோபேதராய் ஆசார்யப்ரேமயுக்தராய்அவ்வாசார்யன் உகக்கும் விஷயமென்று "இரிதந்தாகிலும்" என்கிறபடியே அவன் பக்கலிலே ப்ரவணராய் அவனை அநுபவியாநின்றுள்ள மஹாத்மாக்களை ச்லாகித்தும் செல்லுகிறார் - இத்திருமொழியில்.

திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் திருமலையிலெழுந்தருளிநிற்கிற நிலையை யநுபவித்த வநந்தரம், ¶ திருக்கோட்டியூரிலெழுந்தருளிநிற்கிற நிலையையிறே யநுபவித்தது. பெரிய திருமடலிலும், "மன்னனை மாலிருஞ்சோலைமணாளனை" என்று திருமலை

(௧) க்ருஷ்ணாவதாரகந்த: ¶ 'எங்களெம்மிறை யெம்பிரான்' என்கிறதிருமொழியால்

யில் நிற்கிற நிலையை யருளிச்செய்த வனந்தரம், "கொன்னவிலுமாழிப்படையானைக் கோட்டியூரன்னவுருவினரியை" என்று திருக்கோட்டியூரில் நிற்கிறநிலையையிறே யருளிச்செய்தது. அப்படியே இவரும், திருமலையிலெழுந்தருளிநிற்கிற நிலையை அநுபவித்தவனந்தரம், திருக்கோட்டியூரிலெழுந்தருளி நிற்கிறநிலையை யநுபவிக்கிறார்.

இவர்களிருவருமிறே திருக்கோட்டியூர் விஷயமாக ஒரொரு திருமொழி யருளிச்செய்தவர்களும். ... ... ... ... ... ... *.

மூ—நாவகாரியஞ் சொல்லிலாதவர் நாடோறும் விருந்தோம்புவார்
தேவகாரியஞ்செய்து வேதம்பயின்று வாழ்திருக்கோட்டியூர்
மூவர்காரியமுந் திருத்து முதல்வனைச் சிந்தியாதவப்
பாவகாரிகளைப் படைத்தவ னெங்ஙனம் படைத்தான்கொலோ. க.

பதவுரை.

நா அகாரியம்— நாவால் சொல்லொணாத அஸத்யங்களை
சொல்லிலாதவர்— ஒருநாளும் சொல்லியறியாத ஸ்ரீவைஷ்ணவர்கள்
( அங்கே நித்யவாஸம் பண்ணுமவர்களை, )
விருந்து — அன்று அமுதுசெய்ய எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களைப்போலே
நாள்தோறும்— நாள்தோறும்
ஓம்புவார்— ஆதரித்துக் கொண்டிருப்பாராய்
தேவகாரியம் செய்து— பகவத்ஸமாராதநம் பண்ணிக்கொண்டும்
வேதம்—வேதப்ரதிபாத்யனான பரமபுருஷனை
பயின்று — நெருங்க அநுஸந்தித்துக் கொண்டும்
வாழ்— கண்ணாலே கண்டநுபவிக்குமவர்கள் நித்யவாஸம் பண்ணுகிற
திருக்கோட்டியூர்— திருக்கோட்டியூரில்
மூவர்— ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களாகிற மூவர்க்கும்
காரியமும்— * வேதாபஹார, குருபாதக, தைத்யபீடாத்யாபத் விமோசநங்களாகிற மூன்று காரியங்களையும்
திருத்தும்— செய்தருளின
முதல்வனை— ஸர்வகாரண பூதனை
சிந்தியாத— ஸ்மரிக்கவும் மாட்டாத
அ— அப்படிப்பட்ட
பாவகாரிகளை— பாவம் செய்தவர்களை
படைத்தவன்— ஸ்ருஷ்டித்தவன்.
எங்ஙனம்— என்ன ப்ரயோஜநத்துக்காக
படைத்தான் கொல் ஓ— படைத்தானோ!
[ என்று மனம்தளர்ந்து பேசுகிறார். ]

வ்யா. ¶ முதற்பாட்டு. நாவகாரியம். நாவுக்கு அகார்யமாவது- சப்தங்கள் நாராயணனிலே பர்யவஸிக்கையும், பொய்சொல்லுகையும், பிறர்க்கு க்லேசாவஹமான ஹேதுக்களைச் சொல்லுகையும். ["நாவாயிலுண்டே" இத்யாதி.] அல்லாத திருநாமங்கள் இடையிலே இளைப்பாறவேணும்.

---

¶ "மேல் நான்குதிருமொழியளவும் ஆச்சான்பிள்ளை வ்யாக்யாநமாயிருக்கும்; அதுதான் பூர்ணமாகக் கிடையாமையாலே, ஓரோவிடங்களில் ஒருபாட்டுக்கோ, அரைப்பாட்டுக்கோ, ஓரடிக்கோ, அரைஅடிக்கோ கிடைத்த வ்யாக்யாநபங்க்திகளை ஸ்ரீஸூக்திகளாகவுந்தாலே மணவாளமாமுனிகள் சேர்த்துக்கொண்டு வ்யாக்யாநித்தருளுகிறாரென்று ஸம்ப்ரதாயார்த்தம்" என்று பெரிய அரும்பத விளக்கத்தில் பாசுரம்.

‡ கொங்கிலே திருக்குருகைப் பிரான்பிள்ளான் எழுந்தருளி ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருமாளிகையிலே விட்டவளவிலே பிறந்த வார்த்தையை ஸ்மரிப்பது. — அனந்தாழ்வான், சரமஸமயத்திலே "பட்டர் உகக்கும் திருநாமமேது" என்றுகேட்க; "அழகியமணவாளப் பெருமாளென்கிற திருநாமம்" என்றுசொல்ல; "இது †பர்த்ருநாம க்ரஹணம் பண்ணும்போலே இராநின்றது, ஆகிலும் பட்டர்விரும்பின திருநாமமன்றோ" என்று இத்திருநாமத்தைச்சொன்ன வநந்தரத்திலே திருநாட்டுக்குப்போனார். உடையவரெழுந்தருளியிருக்கிற காலத்திலே, வங்கிநம்பியருகே ஒரு ஸ்ரீவைஷ்ணவரெழுந்தருளியிருந்து "நமோநாராயணாய" என்று இத்தைச்சொல்ல; இத்தைக்கேட்ட நம்பி "நாவகாரியம்" என்று எழுந்திருந்து கடக்கப்போனார். ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் சரமகாலத்திலே உடையவரெழுந்தருளி, "இப்போது திருவுள்ளத்தி லநுஸந்தாநமேது" என்றுகேட்க; "பகவந்நாமங்களாயிருப்பன அநேகம் திருநாமங்களுண்டாயிருக்க, 'திருவரங்கம்' என்கிற நாலெழுத்து திருவக்ஷரமும் கோப்புண்டபடியே! என்று நினைத்திருந்தேன் காணும்" என்று அருளிச்செய்ய; அத்தை "ஆழ்வார்திருவரங்கப் பெருமாளரையர் விரும்பின திருநாமம்" என்று உடையவர் விரும்பியிருப்பர். (க) "ஏதத் வ்ரதம் மம" என்று ஈச்வரஸங்கல்பம்; *யாதானும்பற்றி நீங்கும் விரதம் ஸம்ஸாரிகள் வ்ரதம்; "விரதங்கொண்டேத்தும்" என்று முமுக்ஷுக்கள் வ்ரதம்; முமுக்ஷுக்களுக்குக் || கூறுயிறே அர்ச்சாவதாரமிருப்பது. "அடியோமுக்கே எம்பெருமானல்லீரோ நீர் இந்தளூரீரே" என்னக்கடவதிறே. "எண்ணாதே யிருப்பாரை யிறைப்பொழுது மெண்ணோமே" என்று கழித்து, "ஆரெண்ணும் நெஞ்சுடையா ரவரெம்மை யாள்வாரே" என்று அருளிச்செய்தாரிறே. நம்மாழ்வார், "ஒழிவில் காலமெல்லாம்" என்று அடிமையை யபேக்ஷித்து, *புகழுநல்லொருவனிலே-வாசிகமான அடிமைசெய்து, *மொய்ம்மாம் பூம்பொழிலிலே-அடிமையிலிழியாதாரை நிந்தித்து, *செய்யதாமரைக்கண்ணனிலே - பகவத்ஜ்ஞாநத்தை யுபதேசித்து, *பயிலும் சுடரொளியிலே - பண்டே திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டு உகந்தாற்போலே, இவரும், திருக்கோட்டியூரிலே யெழுந்தருளிநிற்கிற ஸர்வேச்வரனை யநுபவித்த வநந்தரம், அவன் திருவடிகளில் அடிமையிலிழியாதே அந்யபரராய்த் திரிகிறவர்களை நிந்தித்து, அவன் திருவடிகளி லடிமையையுகந்து அவனையநுபவிக்கையே யாத்ரையாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டுகக்கிறார்.

நா அகாரியம். ["வாழ்த்துவார் பலராக"] ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் திருநாமம் சொல்லுகையிறே. நாவகாரியம். நாவுக்கு அகார்யமாவது - அஸத்யம்சொல்லுகிற நாக்காலே பகவத்விஷயத்தைச் சொல்லுகை. "ஆவியைஅரங்கமாலை - எச்சில்வாயால் - தூய்மையில்தொண்டனேன்நான் சொல்லினேன் தொல்லைநாமம் - பாவியேன் பிழைத்தவாறு" என்று — "அயோக்யன் திருநாமம் சொல்லுகையும் பாபபலம்" என்றாரிறே; "திருவாகம் தீண்டிற்றுச்சென்று" என்று - அவனைப்பார்க்குமத்தனையோ, தன்னையும்பார்க்கவேண்டாவோவென்று திருவுள்ளத்தை கர்ஹித்தாரிறே. "கொடுமாவினையேன்" என்று-*பொய்ந்நின்றஞானந்தொடங்கி, *நெடுமாற்கடிமையளவும் கர்மபலமென்று அநுஸந்தித்தாரிறே; சொல்லி

‡ கொங்கு- ஓரூர். குருபரம்பராப்ரபாவத்திலே ப்ரஸித்தம். †பர்த்ருநாமக்ரஹணம்போன்றிருத்தலாவது- ஒருபெண்டுக்கு ஸ்வபர்த்தாவின்பேர் சொல்லவொண்ணாமையாலே, 'நம்பெருமாள்' 'ஸ்ரீரங்கராஜர்' என்னுமல் பெருமாளுக்கு அஸாதாரணமான 'அழகியமணவாளப் பெருமாள்' என்ற திருநாமத்தைச் சொல்லுகை.

(க) "ஏதத்வ்ரதம் மம." || கூறு- பாரம். [ஸாரம்.]

லாதவர். இவைபுகுந்து கழிபர்தவர். நாடோறும் விருந்தோம்புவார். நித்யவாஸம் பண்ணுகிற ஸ்ரீவைஷ்ணவர்களை, அப்போது அமுது செய்ய வெழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களைப் போலே ஆதரிப்பர்கள். தேவகாரியஞ்செய்து. இவர்களுக்கு உகப்பாக பகவத்ஸமாராதநம் பண்ணிப் போருமவர்கள். "திரிதந்தாகிலும்" என்னக்கடவதிறே. வேதம்பயின்றுவாழ். பகவத்பாகவத கைங்கர்யங்களுக்கு ஏகாந்தமான ப்ரதேசங்களை நெருங்க அநுஸந்தித்து, வேதப்ரதிபாத்ய வஸ்துவைக் கண்ணாலே கண்டநுபவிக்கிறவர்கள். "ஓத்தின்பொருள் முடிவுமித்தனையே உத்தமன்பேர், ஏத்தும் திறமறிமின்" என்னக்கடவதிறே. திருக்கோட்டியூர். இவற்றை நினைத்திறே இவர்தாம் "அல்வழக்கொன்றுமில்லா வணிகோட்டியர்கோனபிமானதுங்கன் செல்வனைப்போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்றது. இவரைப்போலே தம்மையும் அங்கீகரிக்கவேணு மென்னும்படியிறே இவர்கள் ஊரம்.

மூவர்காரியமும் திருத்தும். அவர்களுக்குவந்த ஆபத்துக்களைப் பரிஹரிக்கும். (க) [ "வேதாபஹார குரு பாதக தைத்ய பீடா த்யாபத்விமோசந" இத்யாதி.] மதுகைடபர்கள் கையிலே வேதத்தைப் பறிகொடுக்க அத்தை மீட்டுக்கொடுக்கையும், குருவான பிதாவினுடைய சிரச்சேதம் பண்ணுகையால் வந்த பாதகத்தைப் போக்கிக்கொடுக்கையும், மஹாபலிபோல்வார் கையிலே ராஜ்யத்தைப்பறிகொடுக்க அத்தை மீட்டுக்கொடுக்கையுமாகிற இவையிறே - மூவர் காரியமும் திருத்துகையாவது. முதல்வனே. திருத்துகைக்கடி- ஸம்பந்தம். சிந்தியாத அப்பாவகாரிகளை. தர்மாதிகளாய் எதிரிட்டுப் போருகிற இவர்கள் தன்மை பாராதே, இவர்கள் காரியம் செய்த வுபகாரத்துக்குத் தோற்று அநுஸந்தியாத பாபகர்மாக்களை. படைத்தவனெங்ஙனம் படைத்தான்கோலோ. என்ன ப்ரயோஜநத்துக்குப் படைத்தான் என்று அறிகிறிலோமீ !. "முந்நீர்ஞாலம் படைத்த வெம்முகில்வண்ணன்" என்று ஜலஸ்தல விபாகமற வர்ஷிக்குமவனிறே. "சோம்பாதிப் பல்லுருவை யெல்லாம்படர்வித்த" என்னக் கடவதிறே. ... ... ...... ... ... ... ... ... க.

மூ.—குற்றமின்றிக் குணம்பெருகிக் குருக்களுக் கனுகூலராய்ச்
செற்றமொன்றுமிலாத வண்மையினார்கள் வாழ்திருக்கோட்டியூர்
துற்றியேழுலதுண்ட தூமணிவண்ணன்றன்னைத் தொழாதவர்
பெற்றதாயர்வயிற்றினைப் பெருநோய்செய்வான் பிறந்தார்களே. உ.

பதவுரை.

குற்றம் இன்றி— ஒருவகைப்பட்ட அபராதமுமில்லாமல்
குணம்— சமதமாதிகுணங்களை
பெருக்கி— வர்த்திசெய்து
குருக்களுக்கு— தம் தம் ஆசார்யர்களுக்கு
அனுகூலர் ஆய்— அநுகூலர்களாய்
ஒன்றும்— அல்பமேனும்
செற்றம் இலாத— அஸூயை இல்லாதவர்களுமாய்
வண்மையினார்கள் — உதாரஹஸ்தருமாயிருப்பவர்கள்
வாழ்— நித்யவாஸம் பண்ணுகிற திருக்கோட்டியூரில்;
ஏழ் உலகு— ஸப்தலோகங்களையும்
துற்றி— ப்ரளயம் கொள்ளாதபடி திரளப் பிடித்து
உண்ட— அமுது செய்தருளின
தூ— பழிப்பற்ற

(க) "வேதாபஹாரகுருபாதகதைத்ய பீடாத்யாபத்விமோசந."

ளென்கை.த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டுக்கும் ஒக்குமிறேயிவர்களுக்கிது. வாழ்திருக்கோட்டியூர். இத்தேசவாஸந்தானே இவர்களுக்கு வாழ்வு. " நல்லார்கள் வாழும் நளிரரங்கம் " என்றும் " வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள் " என்றும் சொல்லக்கடவதிறே. இப்படி யிருக்கிறவர்கள் வர்த்திக்கிற திருக்கோட்டியூரில்.

துற்றியேழுலகுண்ட. ப்ரளயத்திலழியாதபடி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைக்கிறவிடத்தில் ஒரொன்றாக வன்றிக்கே, திரளப்பிடித் தமுதுசெய்த. தூமணிவண்ணன் தன்னை. இவற்றை வயிற்றிலேவைத்து நோக்கினபின்பு திருமேனியிற்பிறந்த புகரைச் சொல்லுகிறது. உண்டார்மேனி கண்டால் தெரியுமிறே. பழிப்பற்ற நீலமணிபோலேயிருக்கிற வடிவை யுடையவன்றன்னை. தொழாதவர். இவ்வுபகாரத்துக்குத் தோற்று எப்போது மொக்கத் தொழவேண்டியிருக்க, இவ்விஷயத்தில் தலைவணக்காமல் திரியும் க்ருதக்நரானவர்கள். பெற்றதாயரித்யாதி. பெற்றமாதாவினுடைய உதரத்தை மிகவும் நோவுபடுத்தப் பிறந்தார்களித்தனை. இவன் பகவத்பரனானபோதிறே, (க) " ஜநநீக்ருதார்தா " என்கிறபடியே அவளும் (௨) உத்தரிக்கைக் குறுப்பாவது; அல்லாதபோது, இவனால் ஒரு ப்ரயோஜநம் அவளுக்கு இல்லாமையாலே, ப்ரஸவகாலத்திற்பட்ட வேதனையே சேஷித்துவிடுமித்தனையிறே. ... ... ... ... ... ... ... ௨.

மூ.—வண்ண நன்மணியு மரகதமு மழுத்திநிழலெழும்
திண்ணைசூழ் திருக்கோட்டியூர் திருமாலவன் றிருநாமங்கள்
எண்ணக்கண்டவிரல்களா லிறைப்பொழுது மெண்ணகிலாதுபோய்
உண்ணக்கண்டதம் மூத்தைவாய்க்குக் கவளமுந்துகின்றார்களே. ௩.

பதவுரை.

நல் வண்ணம்— நல்லநிறத்தையுடைய
மணியும்— மாணிக்கங்களையும்
மரகதமும்— மரதகங்களையும்
அழுத்தி— ஒழுங்குபட அழுத்தினதினால்
நிழல் எழும்— ஒளிவிடாநின்றுள்ள
திண்ணை— திண்ணைகளாலே
சூழ்— சூழப்பட்ட
திரு கோட்டியூர்— திருக்கோட்டியூரிலெ ழுந்தருளியிருக்கிற
திரு மாலவன்— ஸ்ரியபதியின்
திரு நாமங்கள்— திரு நாமங்களை
எண்ண— எண்ணுகைக்காக
கண்ட— படைக்கப்பட்ட
விரல்களால்— விரற்களாலே
இறைப் பொழுதும்— க்ஷணகாலமும்
எண்ண கிலாது— எண்ணுமல்
போய்— புறம்பேபோய்
உண்ணக்கண்ட— சரீரபோஷணத்துக்கு வேண்டுவன தின்கிற
தம்— தங்களுடைய
ஊத்தை— அசுத்தமான
வாய்க்கு— வாயிலே
கவளம்— சோற்றுத்திரளைகளை
உந்துகின்றார்கள்— தள்ளாநின்றார்கள்.

வ்யா. மூன்றாம்பாட்டு. வண்ணநன்மணியும் மரகதமுமழுத்தி. நல்லநிறத்தை யுடைத்தான மாணிக்கங்களையும் அப்படி யிருந்துள்ள மரதகங்களையும் பகைத்தொடையாகக்கொ

(க) " ஜநநீக்ருதார்த்தா. " (௨) உஜ்ஜீவிக்கைக்கு.

திருநாமங்களை யெண்ணுகை கையில்விரல்களுக்கு ப்ரயோஜநமாகவுமிறே இவர் தாம் நினைத்திருப்பது. துல்யங்யாயாத் வாயும் திருநாமம்சொல்லக் கண்டதிறே. இப்படியிருக்கிறவாயை, சரீரபோஷணத்துக்கானது ஜீவிக்கைக்கே காரணமாக்கி, சோற்றை தாரகமாக்கி, கையையும் அதுபிடித்து உண்கைக்கு ஸாதநமாக்குவதே! என்று இன்னாதாகிறார். ... ௩.

மூ.—உரகமெல்லணையான் கையி லுறைசங்கம்போன் மடவன்னங்கள்
நிரைகணம் பரந்தேறுஞ் செங்கமலவயற்றிருக்கோட்டியூர்
நரகநாசனை நாவிற்கொண்டழையாத மானிடசாதியர்
பருகுநீரு முடுக்குங்கூறையும் பாவஞ்செய்தனதான்கொலோ. ௪.

பதவுரை.

உரகம்— திருவனந்தாழ்வானை
மெல்— ம்ருதுவான
அணையான்— படுக்கையாக உடையவனுடைய
கையில் உறை— திருக்கையிலுள்ள
சங்கம்போல்— ஸ்ரீபாஞ்சஜந்யம்போலே வெள்ளியதாய்
மடம்— மடப்பத்தையுடைத்தான
அன்னங்கள்— ஹம்ஸங்களானவை
நிரை— ஒழுங்குபட
கணம் பரந்து— திரளவந்து பரவி
ஏறும்— ஏறிவர்த்திக்கிற
செம் கமலம்— செந்தாமரை மலரையுடைய
வயல்— வயல்களாலே சூழப்பட்ட
திருக்கோட்டியூரிலே;
நரகம்— நரகத்தை
நாசனை— நசிப்பிக்குமவனை
நாவில் கொண்டு— நாவாலே
அழையாத— சொல்லாத
மானிடசாதியர்— பெறுதற்கரிய மநுஷ்ய ஜந்மத்தில் பிறந்தவர்கள்
பருகும்— குடிக்கிற
நீரும்— தண்ணீரும்
உடுக்கும்— உடுக்கிற
கூறையும்— வஸ்த்ரமும்
பாவம் செய்தன தான் கொல் ஓ — பாவம்செய்தனவோ தான்!.

வ்யா. நான்காம்பாட்டு. உரகமெல்லணையான். திருவனந்தாழ்வானை ம்ருதுவான படுக்கையாக வுடையவன். சைத்யமார்த்தவ ஸௌரப்யங்கள் ப்ரக்ருதியாயிருக்குமிறே-ஸர்ப்பஜாதிக்கு. ஆகையாலிறே, திருவனந்தாழ்வான்றான், சேஷியான ஸர்வேச்வரனுடைய திருமேனியின் மார்த்தவாநுகுணமாக இந்தவடிவைக்கொண்டு திருப்படுக்கையா யிருக்கிறது. அங்குப் பள்ளிகொள்ளுகிறவனுடைய திருநாமம் "உரகமெல்லணையான்" என்றிறே. கையிலுறைசங்கம்போல். "கைவண்ணந்தாமரை" என்னும்படியான திருக்கையிலே வர்த்திக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யம்போலே. மடமித்யாதி. மடப்பத்தையுடைத்தான அன்னங்களானவை ஒழுங்குபடத் திரளவந்து பரந்தேறிவர்த்திக்கிற சிவந்த கமலங்களையுடைத்தான வயலோடுசேர்ந்த திருக்கோட்டியூரிலே. இத்தால் - அன்னங்களானவை தாமரைமேலே யிருக்கும்போது, காண்பார்க்கு திருக்கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமும்போலே யிருக்குமென்கை. "செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல்" என்று - திருக்கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமுமான சேர்த்திக்கு இதுதன்னை த்ருஷ்டாந்தமாகவிறே இவர் திருமகளாரும் அருளிச்செய்தது. (௧) ஸர்வதாஸத்ருசமானவற்றில் த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்திகங்கள் மாறாடிக்கொள்ளலாயிருக்குமிறே. "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" "திணாரர்மேகமெனக் களிறுசேரும்" இத்யாதிகளிலே இது கண்டுகொள்வது.

(௧) வவ-ஃயாஸஉ௫ு௱,

நரகநாசனே. *நாவில்கொண்டழைப்பார்க்கு பூர்வகர்மாநுகுணமாக வரும் நரகத்தை நசிப்பிக்குமவனே. இவனோடு ஸம்பந்தமுண்டாகவே யமவச்யதை தன்னடையேமாறுமிறே. (க) "நகலுபாகவதா யமவிஷயம் கச்சந்தி" என்னக்கடவதிறே. நாவில்கொண்டழையாத. அவனைச் சொல்லுகைக்காக அடியிலே ஸ்ர்ஷ்டமான நாவிலே கொண்டுசொல்லாத; அன்றிக்கே, அஹ்ர்தயமாகவாகிலும் நாவிலேகொண்டு சொல்லாதவென்னவுமாம். மானிடசாதியர். பெறுதற்கரிதான மநுஷ்யஜந்மத்திலே பிறந்துவைத்து வ்யர்த்த ஜந்மாக்களாய்த் திரிகிறவர்கள், இதுக்கு யோக்யமான ஜந்மத்தைப் பெற்றுவைத்து இழந்துபோவதே! என்று வெறுத்தருளிச்செய்கிறார். பருகுநீரு முடுக்குங்கூறையும் பாவஞ்செய்தனதான்கொலோ. அவர்கள் குடிக்கும் தண்ணீரும் உடுக்கும் புடைவையும் பாபத்தைச்செய்தனவோதானென்கிறார். (உ) "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி" என்று வ்யஷ்டிஸ்ர்ஷ்டியுந்முக பகவத்ஸங்கல்பமாகையாலே நாமரூபவிசிஷ்டமான ஸகலவஸ்துக்களிலும் ஒரோஜீவாதிஷ்டாநமுண்டென்று கொள்ளவேணும். (ங) கடபடாதிகளாயிருக்குள்ள பதார்த்தங்களில் ஜீவாதிஷ்டாநமுண்டென்று தோற்றுதிருக்கிறது கர்மாநுகுணமான ஜ்ஞாநஸங்கோசாதிசயத்தாலே. (ச) "தயாதிரோஹிதத்வாச்ச சக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த்ததே" (ரு) "அப்ராணிமத்ஸு ஸ்வல்பாஸா ஸ்தாவரேஷு ததோதிகா" என்னக்கடவதிறே. ஆகையாலே, "பாவம் செய்தனதான்கொலோ" என்கிறது. அதாவது இவைபண்ணின பாபமிறே இவர்களுக்கு சேஷமாகைக்கடியென்கை. விலக்ஷணரானவர்களுக்கு சேஷமான பதார்த்தங்களுக்கு அவ்வழியாலே மேலொரு நன்மையுண்டாகவும், ஹேயரானவர்களுக்கு சேஷமானவற்றுக்கு ஒரு நன்மையின்றிக்கே பூர்வபாபபலமேயாய்ப்போமித்தனையாகவும் சொல்லாநின்றதிறே. (சா) "வேதவித்வ்ரதஸ்நாதே ச்ரோத்ரியே க்ர்ஹமாகதே க்ரீடந்த்யோஷதயஸ்ஸர்வா யாஸ்யாம: பரமாங்கதிம்" என்றும் (எ) "நஷ்டசௌசே வ்ரதப்ரஷ்டே விப்ரே வேதவிவர்ஜிதே தீயமாநம் ருதத்யந்நம் கிம்மயா துஷ்க்ர்தம்க்ர்தம்" என்றும் ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே சொல்லப்பட்டதிறே. ... ... ... ... ... ச

மூ.—ஆமையின் முதுகத்திடைக்குதிகொண்டு தூமலர்சாடிப்போய்த்
தீமைசெய்திளவாளைகள் விளையாடுநீர்த் திருக்கோட்டியூர்
நேமிசேர்தடங்கையினனை நினைப்பிலா வலிநெஞ்சுடைப்
பூமிபாரங்களுண்ணுஞ் சோற்றினைவாங்கிப் புல்லைத்திணிமினே. ரு.

(க) "நகலுபாகவதா யமவிஷயம் கச்சந்தி." (உ) "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி." (ங) கடபடாதி.

(ச) "தயாதிரோஹிதத்வாச்ச சக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா- ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த்ததே." (ரு) "அப்ராணிமத்ஸு ஸ்வல்பாஸா ஸ்தாவரேஷு ததோதிகா." (சா) "வேதவித்வ்ரதஸ்நாதே ச்ரோத்ரியே க்ர்ஹமாகதே - க்ரீடந்த்யோஷதயஸ்ஸர்வா யாஸ்யாம: பரமாங்கதிம்." (எ) "நஷ்டசௌசே வ்ரதப்ரஷ்டே விப்ரே வேதவிவர்ஜிதே- தீயமாநம் ருதத்யந்நம் கிம்மயா துஷ்க்ர்தம்க்ர்தம்."

பதவுரை.

இள— பருவத்தால் இளைய [களானவை
வாளைகள்— 'வாளை' என்னும் மத்ஸ்யங்
ஆமையின் முதுகத்திடை— ஆமையின் முதுகிலே
குதிகொண்டு— சென்றுகுதித்தும்
தூ— தூய்தான
மலர்— (அருகேமலர்ந்து கிடக்கிற) தாமரைமுதலியமலர்களை
சாடி— உழக்கிக்கொண்டும்
போய்— போய்
தீமை செய்து— க்ஷுத்ரஜந்துக்களைக் கலக்கி ஓட்டுகையாகிற தீம்புகளைச் செய்தும்
விளையாடு— விளையாடாநின்றுள்ள
நீர்— நீர்வளப்பத்தையுடைய திருக்கோட்டியூரில்;
நேமி— திருவாழியோடே
சேர்— சேர்ந்திருக்கிற
தட— பெரிதான
கையினனை— திருக்கையையுடையவனை
நினைப்பு இலா— ஒருக்காலும் நினையாத
வலி நெஞ்சு உடை— கடோரமான நெஞ்சையுடையராய்
பூமி பாரங்கள்— பூபாரமாயிருந்துள்ள பாபிகளானவர்கள்
உண்ணும்— உண்கிற
சோற்றினை— சோற்றை
வாங்கி— பிடுங்கி [புல்லைக்கொண்டு
புல்லை— அறிவிலிகளான பசுக்கள் தின்கிற
திணியின்— (அவர்கள் வயிற்றைத்) துற்று விடுங்கோள்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. ஆமையித்யாதி. ஒருகாலும் ஜலஸம்ருத்திமாறுத ஸ்தலங்களில், ஆமைகளும் மத்ஸ்யங்களும் வர்த்திக்கக்கடவதாய், தாமரை செங்கழுநீர் ஆம்பல் நெய்தல் முதலானபுஷ்பங்களு முண்டாயாய்த்திருப்பது. அதில், மத்ஸ்யங்களிலே க்ஷுத்ரமத்ஸ்யங்களும் மஹாமத்ஸ்யங்களு முண்டிறே. மஹாமத்ஸ்யமிறே-வாளையாவது. அது தன்னிலும் முதிர்ந்து வயஸ்ஸுப்புகுந்தவை பிறழவும் குதிக்கவும் மாட்டாதே திரியாநிற்கும்; இளம்பவையாய்த்து-களித்து விளையாடித்திரிவன. அப்படி பருவத்தாலிளையதா யிருந்துள்ள வாளைகளானவை, செருக்காலே உகளித்து நீருக்குள்ளே முதுகுதோற்றும்படிகிடக்கிற ஆமையின் முதுகிலே சென்றுகுதித்து, பின்பு அருகே மலர்ந்துநிற்கிற தூய்தான தாமரை செங்கழுநீர் முதலான பூக்களை உழக்கிக்கொண்டுபோய் ஒன்றோடொன்று எதிர்பொருது க்ஷுத்ர ஜந்துக்களைக்கலக்கி ஓட்டி ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுகையாகிற தீம்புகளைச்செய்து விளையாடாநின்றுள்ள ஜலஸம்ருத்தியையுடைய திருக்கோட்டியூரில். ப்ராப்யபூமியி லுள்ளதெல்லாம் ச்லாக்யமா யிருக்குமிறே யிவர்க்கு; ஆகையால், இதிலுடைய வ்யாபாரத்தை வுவர்ச்சிறப்பாக்கிக்கொண் டருளிச் செய்கிறார்.

நேமிடசேர்தடங்கையினனை. திருவாழியோடே சேர்ந்திருக்கிற பெரிய திருக்கையை யுடையவனை. வெறும்புறத்திலே, திருக்கையினழகுதானே அமைந்திருக்க, அதுக்கு மேலே திருவாழியோட்டைச் சேர்த்தியுமுண்டானால் அழகு இரட்டித்திருக்குமிறே. ஸர்வாபரணங்களும் தானேயாகப் போரும்படியிறே திருவாழிதானிருப்பது. "சக்கரத்தண்ணலே" என்று கையும் திருவாழியுமான அழகை நினைத்தால் தறைப்பட்டுக் கண்ணும் கண்ணீருமாய்க் கிடக்கும்படியாயிறேயிருப்பது. நினைப்பிலா வலிநெஞ்சுடை. இவ்விஷயத்தை ஒருகாலும் நினைத்தல் செய்யாத திண்ணிய நெஞ்சையுடைய. அநவரத சிந்தாவிஷயமான வித்தை காதாசித்கமாகவும் நினையாதொழிவதே! என்னும் இன்னாப்பாலே யருளிச்செய்கிறார். கையும் திருவாழியுமான சேர்த்திதானும், உபேயபரனானவனுக்கும் உபாயபரனானவ

னுக்கும் வேணுமிறே. உபேயபரனானவனுக்கு அழகுக்குடலாகவேணும்; உபாயபரனான வனுக்கு விரோதிநிரஸநத்துக் குடலாகவேணும். "எப்போதும் கைகழலா நேமியான் நம் மேல்வினைகடிவான்" என்னக்கடவதிறே. இப்படி யிருக்கிற விஷயத்தை ஒருகாலும் நினையா திருக்கைக்கு மேற்பட்ட நெஞ்சில் வன்மையுண்டோ. நெஞ்சில் வலிமைதான் - தானுக நினையாத வளவன்றிக்கே, ஹிதபரரானவர்கள் "ஸதாத்யேய விஷயங்காண், ஒருகாலாகி லும் நினைக்கமாட்டாயோ" என்றால், "எனக்கு நினைக்கைக்கு வேறேவிஷயமுண்டுகாண்" என்று உதறிவிடும்படியாயிறே யிருப்பது. பூமிபாரங்கள். இப்படி பகவத்ஸ்மரண கந்தரஹி தராகையாலே விச்வம்பரையான பூமியாலும் பரிக்கவொண்ணுத பாரமாயிருந்துள்ள பாபிக ளானவர்கள். தாங்களறியாதே யிருக்கச்செய்தேயும் தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாகத் தங்களை ரக்ஷித்துக்கொண்டுதிரியும் ஈச்வரவிஷயத்தில் க்ருதக்நரானவர்களையிறே - பூமிபார மென்கிறது. உண்ணும் சோற்றினைவாங்கிப் புல்லைத்திணிமினே. "மநுஷ்யயோநியிலே பிறந்துவைத்தே அறிவிலிகளாகையாலே அந்த (க) ஜந்மபலமில்லாத உங்களுக்கு மநுஷ்யர் ஜீவிக்கிறஜீவநமேதுக்கு?" என்று பழித்து, அறிவில்லாத பசுக்கள் தின்கிற ஜீவநமான புல்லைக்கொண்டுவந்து திணியுங்கோள். ஆஹாரநித்ராதி சதுஷ்டயமும் பசுக்களுக்கும் மநு ஷ்யர்களுக்கும் ஸமாநமாயிருக்க, ஜ்ஞாநமிறே பசுக்களிற்காட்டில் இவர்களுக்கு அதிகமான விஷயம்; அந்த ஜ்ஞாநமில்லாதார் பசுஸமரிறே; அத்தைப்பற்ற, மநுஷ்யர் ஜீவிக்கிற சோற் றைத் தின்னுதபடிவாங்கி பசுக்கள் தின்கிற புல்லைத் ‡திணியுங்கோ ளென்கிறார். "மிண்டர் பாய்ந்துண்ணும் சோற்றை விலக்கி நாய்க்கிடுமினீரே" என்று தங்கள் திறத்தில் அவன் செய்த உபகாரத்தை யறிந்து அவனெழுந்தருளியிருக்கிற தேசத்தை வாய்புலத்த வேண்டி யிருக்க, அது செய்யாதே க்ருதக்நராய் முண்டடித்து பலத்தாலே ஜீவித்துத்திரிகிறவர்கள் ஜீவிக்கிறசோற்றைவிலக்கி, ஒருநாள் ஒருபிடிசோற்றிட்டவன் வாசலைப்பற்றிக்கிடக்கும் க்ருத ஜ்ஞமான நாய்க்கிடுங்கோள் நீங்கள் என்றாரிறே-ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார். இவர்கள் இப்படி "திணிமின்" "இடுமின்" என்கிறது ஆரைக்குறித்தென்னில்; விசேஷஜ்ஞராய் இது செய்கைக்கீடான சக்திமான்களா யிருப்பவரைக் குறித்திறே; இப்படி இவர்கள் தானரு ளிச்செய்கிறது இதுதன்னைக் கேட்டாகிலும் லஜ்ஜாபயங்களுண்டாய் பகவத்விஷயத்தில் நெஞ்சுபுரிவர்களோ என்னும் நசையாலேயிறே. ... ... ... ரு.

அ. ஆறும்பாட்டு. கீழ் ஐந்துபாட்டாலும் - அவைஷ்ணவர்களுடைய ஹேயதை சொல்லிற்று; இப்பாட்டுத்தொடங்கி மேலைந்துபாட்டாலும் - ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஏற் றம் சொல்லுகிறது.

மூ.—பூதமைந்தொடு வேள்வியைந்து புலன்களைந்து பொறிகளால்
ஏதமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ் திருக்கோட்டியூர்
நாதனைநரசிங்கனை நவின்றேத்துவார்க ளுழக்கிய
பாததூளிபடுதலா லிவ்வுலகம் பாக்கியஞ் செய்ததே. சு.

பதவுரை.

| | |
|---|---|
| பூதம் ஐந்தொடு — பஞ்சபூதமயமான சரீரத்தாலும் | வேள்வி ஐந்து — பஞ்சமஹாயஜ்ஞங்களாலும் |

(க) ஜநநம், ‡ திணியுங்கோள் - தூற்றுவிடுங்கள்.

புலன்கள் ஐந்து— ஐம்புலன்களாலும்
பொறிகளால்— ஐம்பொறிகளாலும்
ஏதம் ஒன்றும் இலாத— குற்றமொன்றுமில்லாதவர்களுமாய்
வண்கையினார்கள்— உதாரர்களுமாயுள்ளவர்கள்
வாழ்— நித்யவாஸம் பண்ணுகிற
திருக்கோட்டியூர்— திருக்கோட்டியூர்க்கு
நாதனை— நாதரான சொக்கநாராயணராயும்
நரசிங்கனை— தெக்காழ்வாராயு மெழுந்தருளியிருக்கிறவனை
நவின்று— வாயாரச்சொல்லி
ஏத்துவார்கள்— ஸ்துதிக்குமவர்கள்
உழக்கிய— ஸஞ்சரிக்கிற
பாததூளி— திருவடித்தூள்கள்
படிதலால்— படிதலால்
இ உலகம்— இந்தலோகமானது
பாக்கியம் செய்தது— நல்லபாக்யத்தைப் பண்ணிற்று.

வ்யா. பூதமைந்தொடு. இத்தால் - பஞ்சபூதாரப்தமான தேஹத்தைச் சொல்லுகிறது. * மண்ணும் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம் புண்ணாக்கையிறே. இத்தோடே வேள்வியைந்து. பஞ்சமஹாயஜ்ஞங்கள். புலன்களைந்து. சப்தாதிகளான விஷயங்களைந்து. "புலன்" என்று - புலப்படும் விஷயங்களைச் சொல்லுகிறது. "பொறிகள்" என்று - ச்ரோத்ராதிகளான இந்த்ரியங்களைந்தையும் சொல்லுகிறது. இவற்றை "பொறி" என்கிறது - இவனை சப்தாதிகளிலே கொடுபோய் விழவிட்டு முடிக்குமதாகையாலே. "புலனைந்துமேயும் பொறியைந்து" என்னக்கடவதிறே. இவற்றால் ஏதமொன்றுமிலாத. இவற்றோடே கூடியிருக்கச்செய்தே தோஷமின்றிக்கே யிருக்கை. பூதமைந்து மேதமொன்றில்லாத. தேஹத்தைத்தனக்கு என்றிருக்கை-ஏதம்; ஈச்வரனுக்கு என்றிருக்கை - ஏதமின்றிக்கே யிருக்கை. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு என்றிருக்கை — ஏதமொன்றுமின்றிக்கே யிருக்கையாவது. வேள்வியைந்துமேத மொன்றுமிலாத. ஸ்வர்க்காதி ஸாதனமாக அநுஷ்டிக்கை - ஏதம்; மோக்ஷஸாதனமாக வநுஷ்டிக்கை - ஏதமின்றிக்கே யிருக்கை; பகவத்பாகவதப்ரீதி என்றிருக்கை- ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. புலன்களைந்து மேதமொன்றுமிலாத. சப்தஸ்பர்சரூப ரஸகந்தங்களைத் தனக்கு என்றிருக்கை- ஏதம்; இவற்றை பகவத்விஷயத்துக் கென்றிருக்கை-ஏதமின்றிக்கேயிருக்கை; பாகவதவிஷயத்துக் கென்றிருக்கை- ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. பொறிகளைந்து மேதமொன்றுமிலாத. இந்த்ரியங்களை இதரவிஷயங்களில் மூட்டுகை- ஏதம்; பகவத்விஷயத்திலே மூட்டுகை- ஏதமின்றிக்கே யிருக்கை; பாகவதவிஷயத்துக் கென்றிருக்கை - ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. வண்கையினார்கள். அதாவது- ஔதார்யம். அதாவது- "பூமிபாரங்களுண்ணும் சோற்றினை வாங்கி" என்கிறபடியே அப்பதார்த்தங்கள் நசியாதபடியாக வாங்குகையும், இவற்றை ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கொடுக்கையும். ஈச்வரனை முட்டப்பபறித்திறே பாகவதகைங்கர்யம் பண்ணிற்று- திருமங்கையாழ்வார்; அதுக்கு உபாயமாகவிறே ஈச்வரன் திருமந்த்ரத்தை யுபதேசித்தது. "துன்னுசகடத்தாற்புக்க பெருஞ்சோற்றை — தான் துற்றிய தெற்றனவும்" என்று — ஸ்ரீவைஷ்ணவர்களுக்கிடாதே தானே யுண்டானென்றிறே ஆழ்வார் கர்ஹித்தது. "பொதுவாக வுண்பதனைப் புக்குநீயுண்டக்கால் சிதையாதோ உன்னோடு" என்று ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானை முட்டக் கர்ஹித்தாளிறே பெண்மகள்; அவ்வளவுமன்றிக்கே, "சாதுகோட்டி யுட்கொள்ளப்படுவாரே" என்கிறபடியே — தங்கள் திரளில்கூட்டாதே * பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடே கூட்டிவிட்டது. அவதாரத்திலுண்டானவிழவு தீரவிறே அர்ச்சாவதாரத்தில் அமுதுசெய்தாற்போலே குறையாமல் கொடுக்

றது. வாழ். கண்ணாலேகண்டு அநுபவிக்கப்பெற்றவர்கள். திருக்கோட்டியூர்நாதனை. 'ஸ்ரீவைகுண்டநாதன்' 'திருப்பாற்கடல்நாதன்' என்பதிலும், "திருக்கோட்டியூர்நாதன்" என்பதிறேயேற்றம். நாதனையென்றது- சொக்கநாராயணனை. நரசிங்கனை என்றது- தெக்காழ்வாரை. நரசிங்கனை நவின்றேத்துவார்கள். * மாரிரண்டு கூறாகக்கீறிய கோளரியை வேறாக வேத்தி யிருக்குமவர்களிறே இவர்கள். ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானை "திருநாமம் சொல்லவொட்டேன்" என்ற வாயைத் தகர்த்திறே மார்வை இடந்தது. உழக்கியபாததூளி படுதலால். அநுபவஜநிதப்ரீதிக்குப்போக்குவிட்டு ஸஞ்சரிக்கிற தூளிபடுதலால். இவ்வுலகம். * நினைப்பிலாவலி நெஞ்சுடைப்பூமிபாரங்கள் வர்த்திக்கிற இந்தலோகம். பாக்கியம்செய்ததே. திருவுலகளந்த திருவடிகளின் தூளிபட்டதன்று பாக்யம், ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாததூளி பட்டது பாக்யம். கல்லைப் பெண்ணாக்கி சரீரத்தைப் பூண்கட்டிற்றித்தனை - அவன்றிருவடிகள்; * கடல்வண்ணன் பூதங்கள் ஸ்ரீபாததூளிபட்டால்- "போயிற்று வல்லுயிர்ச்சாபம்" என்று ஸ்வரூபத்தைப்பற்றிவரும் விரோதிகளும்போமிறே. *பேர்த்தகரம் நான்குடையான் திருவடிகள் படுவதிலும் * பேரோதும்தீர்த்தகரர் ஸ்ரீபாததூளி படுகையிறே பாக்யம். சூ.

மூ.—குருந்தமொன்றொசித் தானொடுஞ்சென்று கூடியாடி விழாச்செய்து
திருந்துநான்மறையோ ரிராப்பகலேத்திவாழ் திருக்கோட்டியூர்
கருந்தடமுகில்வண்ணனைக் கடைக்கொண்டு கைதொழும்பத்தர்கள்
இருந்தவூரி லிருக்குமானிட ரெத்தவங்கள் செய்தார்கொலோ. எ.

பதவுரை.

திருந்து— திருந்தமான
நால் மறையோர்— சதுர்வேதங்களையுமப்யஸித்த ஸ்ரீவைஷ்ணவர்கள்
ஒன்று— ஒப்பற்ற
குருந்தம்— குருந்தமரத்தை
ஒசித்தானொடும்- முறித்தக்ருஷ்ணனோடே
சென்று கூடி— சென்றுகிட்டி
ஆடி— அவன்குணங்களிலே அவகாஹித்து
விழாச்செய்து- உத்ஸாஹத்தையுடையராய்
இரா பகல்— இரவும் பகலும்
ஏத்தி— ஸ்துதித்துக்கொண்டு
வாழ்— வாழ்கிற
திரு கோட்டியூர் — திருக்கோட்டியூரிலெழுந்தருளியிருக்கிற
கரு— கறுத்து
தட— பெருத்திருந்துள்ள
முகில்— மேகம்போன்ற
வண்ணனை— வடிவையுடையவனை
கடைக்கொண்டு — தங்கள் தாழ்ச்சியை முன்னிட்டுக்கொண்டு
கை தொழும்— கைதொழாநின்றுள்ள
பத்தர்கள் இருந்த— பக்தர்கள் வர்த்திக்கிற
ஊரில்— ஊரிலே
இருக்கும்— வாஸம்பண்ணுகிற
மானிடர்— மநுஷ்யர்
எ தவங்கள்— எப்படிப்பட்ட தபஸ்ஸை
செய்தார் கொல் ஓ— பண்ணினார்களோ!.

வ்யா. ஏழாம்பாட்டு. குருந்தமொன்று. அத்விதீயமான குருந்தம். பூ முட்டாக் கிட்டாற்போலே யிருக்கையாலே க்ருஷ்ணன் விரும்பியிருக்கும். "பூங்குருந்தேறியிராதே" என்னக்கடவதிறே. "இதில் க்ருஷ்ணன்வந்து ஏறக்கூடும், பின்னை நலிகிறோம்" என்றிறே-அஸுரன் ப்ரவேசித்தது. ஒசித்தான். விரோதிநிரஸநம்பண்ணினான். ஒசித்தானொடுஞ் சென்று கூடியாடி விழாச்செய்து. விரோதிநிரஸந சீலனைச்சென்று கிட்டி இருவர்நினைவு மொன்றாய் அவன்குணங்களிலே அவகாஹித்து, அநந்தரம் இவர்களுக்கு விக்ரஹாநுபவத்தைக்

கொடுக்கும். அங்கும் *ஸதாப்ச்யந்திபிறே. திருந்துநான்மறையோர். வேதத்துக்குத் திருத்துமாவது - பகவத்ஸ்வரூபாதிகளை உள்ளபடி ப்ரதிபாதிக்கை. இதில் இவர்கள் செய்வது குணவிக்ரஹாநுபவத்துக்கு ஏகாந்தமான ப்ரதேசங்களில் சொல்லுகிறபடியே அநுஷ்டிக்கை. இராப்பகலேத்தி. வேறு அந்யபரதை யில்லாமையாலே இதுமாறாமல் நடக்கும். வாழ். அநந்யப்ரயோஜநராகையாலே இதுதானே (க) பலமாயிருக்கும். திருக்கோட்டியூர். அவர்கள் வர்த்திக்கிற தேசம். கருந்தடமுகில்வண்ணனை. கறுத்துப் பெருத்திருக்கிற முகில்போலேயிருக்கிற திருமேனியை யுடையவனை. கடைக்கொண்டு கைதொழும். தங்கள்நைச்யத்தை முன்னிட்டுத் தொழுமவர்கள். அன்றிக்கே, உத்க்ர்ஷ்டன்பக்கல் அபக்ர்ஷ்டன் செய்யுந்தொழில் என்னவுமாம். அன்றிக்கே, " கடை " என்று - முடிவாய், மேல் " கிற்கவும் பெறுவார்கள் " என்கையாலும் " ததீயசேஷத்வமே தங்களுக்கு ஸ்வரூபம் " என்றுகொண்டு அவர்களுக்கு உகப்பாக பகவத்விஷயத்தைத் தொழுமவரென்னவுமாம். பத்தர்கள். வைதமாக வன்றிக்கே, ராக(ப்ராப்த)மாகத்தொழுமவர்கள். இருந்தவூரிலிருக்கும்மானிடர் என்கையாலே மநுஷ்ய ஜந்மத்துக்கு ப்ரயோஜநம் ஸ்ரீவைஷ்ணவர்களிருந்த வூரிலிருக்கையென்னுமிடம் காட்டுகிறது. அங்குப்போகிறதும் " வானவர்நாடு " என்றிறே. " சிதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியர் " என்கையாலே - அவர்களில் இவர்களுக்கு வாசியுண்டானாற்போலே, தேசத்துக்கும் வாசியுண்டு. " இருந்தவூரிலிருக்கும் மானிடர் " என்கையாலே அவர்களல்லர் உத்தேச்யர், அவர்களிருந்த தேசம். " வைகுந்தமாகும் தம்மூரெல்லாம். "

ஆழ்வானுக்கு, " ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருவடிச்சார்ந்தார் " என்று விண்ணப்பம் செய்ய ; "பாகவதகைங்கர்யமே யாத்ரையாய்ப்போந்தவரை அப்படி சொல்லலாகாது, 'திருநாட்டுக்குப்போனார்' என்று சொல்லவேணுங்காணும் " என்றருளிச்செய்தாராம். ஸ்ரீவைஷ்ணவர்களை " நீராட " என்றும், ஆசார்யனை " திருமஞ்சனம்பண்ண " என்றும் சொல்லுகிறது - உத்தேச்ய தாரதம்யத்தை யிட்டிறே. " வடுகநம்பி திருநாட்டுக்குப் போனார் " என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர், அருளாளப்பெருமா னெம்பெருமானாருக்கு விண்ணப்பஞ்செய்ய ; சிறிதுபோது மோஹித்துக்கிடந்து உணர்ந்தருளி, அவரைப்பார்த்து " திருநாட்டுக்குப்போனார் " என்னலாகாதுகாணும், 'உடையவர் ஸ்ரீபாதத்துக்குப்போனார்' என்னவேணுங்காணும் " என்றருளிச்செய்தாராம். ஸ்ரீசபரியும் பெருமாள் திருவடிகளிலே ப்ரார்த்தித்தது இதுவிறே. ஆழ்வான், ஸம்ஸாரத்தில் ஆர்த்தியின் கனத்தாலே கலங்கி, பெருமாள் திருவடிகளிலே, " அடியேனைத் திருநாடேறப் போம்படி திருவுள்ளமாகவேணும்" என்று விண்ணப்பம்செய்ய ; பெருமாள் திருவுள்ளமாய், ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் திருமாளிகையிலே ‡புறவீடுவிட்டிருக்கிறவளவிலே, இத்தை உடையவர் கேட்டருளி பஞ்சுக்கொட்டன் திருவாசலளவாகவெழுந்தருளி, " பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்தால் விண்ணப்பம் செய்தது பெருமாளும் செய்தருளுவர், நாமடியாகப்பெருமாள் இரண்டுவார்த்தை யருளிச்செய்தாராக வொண்ணாது " என்று, மீண்டும் ஆழ்வானிருக்கிற விடத்தேற வெழுந்தருளி "ஏன் ஆழ்வான்!" என்ன; " அடியேன் மறந்தேன்" என்று விண்ணப்பம் செய்தார். மறக்கைக்கடி- ஸம்ஸாரத்தில் ஆர்த்தியின் கனம்.

---

(க) ஜ்ஷ. ‡ புறவீடுவிடல்- பரஸ்த்தாநம் பண்ணுதல்.

எத்தனங்கள் செய்தார்கோலோ. "அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச்செங்கோல் நடாவுதிர் - இவற்றின் புறத்தாளென்றெண்ணேல்" என்கிறபடியே அவன் காவலுக்குள்ளே கிடக்கிறதுதானேயிறே தவமாவது. "நீர் நிலை நின்ற தவமிதுகொல்" என்று பகவத்விஷயத்தைக் கிட்டுகைக்குத் தவம் ஒன்று; பாகவதவிஷயத்தைக் கிட்டுகைக்கு அநேகம் தபஸ்ஸு வேணுமிறே. கோலோ. பகவத்விஷயத்தைக் கிட்டுகைக்கு தபஸ்ஸு அறிவர்; பாகவதவிஷயத்தைக் கிட்டும் தபஸ்ஸுக்களிறே இவர்க்கு அறியப்போகாதிருப்பது. ... ... ... ... ... ... ... ௭.

மூ.—நளிர்ந்தசீல னயாசல னபிமானதுங்கனை நாடோறும்
தெளிந்தசெல்வனைச் சேவகங்கொண்ட செங்கண்மால் திருக்கோட்டியூர்
குளிர்ந்துறைகின்ற கோவிந்தன் குணம்பாடுவாருள்ள நாட்டினில்
விளைந்ததானியமு மிராக்கதர் மீதுகொள்ளகிலார்களே. ௮.

பதவுரை.

நளிர்ந்த சீலன் — குளிர்ந்த சீலத்தையுடையவராய்
நயாசலன் — நீதிநெறி தவறாதவராய்
அபிமானம் — பகவதநுபவத்தால் வந்தசெருக்கில்
துங்கனை — உயர்ந்தவராய்
நாள்தொறும் — நாள்தோறும்
தெளிந்த — தெளிந்துவாரா நின்றுள்ள
செல்வனை — கைங்கர்ய ஸ்ரீயையுடையவரான செல்வநம்பியை
சேவகம் கொண்ட — அடிமைகொண்டவனாய்
செம் கண் — சிவந்தகண்களையும்
மால் — பிராட்டிபக்கல் வ்யாமோஹத்தையுமுடையனான எம்பெருமான் வர்த்திக்கிற

திருக்கோட்டியூரில்;
குளிர்ந்து — திருவுள்ளம் குளிர்ந்து
உறைகின்ற — நித்யவாஸம் பண்ணுகிற
கோவிந்தன் குணம் பாடுவார் — கோவிந்தனுடைய கல்யாணகுணங்களைப்பாடுமவர்கள்
உள்ள — எழுந்தருளியிருக்கிற
நாட்டினுள் — நாட்டிலே
விளைந்த — விளைந்த
தானியமும் — தாந்யத்தையுங்கூட
இராக்கதர் — ராக்ஷஸர்கள்
மீதுகொள்ளகிலார்கள் — அபஹரிக்கமாட்டார்கள்.

வ்யா. எட்டாம்பாட்டு. நளிர்ந்தசீலன். குளிர்ந்த சீலத்தையுடைய செல்வநம்பி. ஈச்வரன்சீலம் கொதித்திருக்கும். அதுக்கடி, "வாள்கொள் நீள்மழுவாளியுன்னாகத்தான்" என்றும், "ஆராய்த்தொழுவாருமமரர்கள்" என்றும்- ஆர்யாமியான ருத்ரனும், சாவாமைக்கு மருந்துதின்னும் தேவஜாதியுமிறே இவனுக்கடிமை செய்வது. "அக்கும்புலியி னதளுமுடையா ரவரொருவர்பக்கம்நிற்க நின்றபண்பரூர்" என்றும், "தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும் சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்" என்றும் - * இரண்டுருவு மொன்றாயிசைந்து தோற்றுகையாலே, "ஏறாளு மிறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளும் தனியுடம்பன்" என்று - இவனுடம்பு தேவதாந்தரமும் இருவிடையாட்டமுமாயிறே யிருப்பது. இப்படியன்றியே, "காணிலுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்" என்றிறே - இவனிருப்பது. நயாசலன். நயமென்று - நீதியைச் சொல்லுகிறது. அங்கும், "நீதிவானவன்" என்னக்கடவதிறே. அசலன். நீதிக்குக் குலைதலில்

ஸாதவன். சேஷசேஷிபாவஸம்பந்தம், " ஒண்டொடியாள் திருமகளும்நீயும் " என்கிறபடியே அடைவுபட்டிறே அங்கிருப்பது; இங்கு மவையடைவே " யானே யென்றனதே " என்று - அடைவுகெட்டிருக்கும். உக்ரஸேநனை முடியைச்சூட்டி ஆஸநத்திலே உயரவைத்து தான் திருக்கையாலே வெண்சாமர மிடுமிடமிறே இவ்விடம். " விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறுமைம்புலன் " என்று - *மயர்வறமதிநல மருளப்பெற்றவரும் அதிசங்கை பண்ணவேண்டு மிடமிறே யிது. இந்நிலத்திலே குறையாதிருக்கை. பாபம் பண்டால் பண்ணும் க்ர்பையிறே பாபம்வந்தவாறேகுலைவது, பாபம் கிடக்கப்பண்ணும் க்ர்பையாகையாலே குலையாது. அபிமானதுங்கன். "என்னில் மிகு புகழார்யாவரே" "மாறுளதோ விம்மண்ணின்மிசையே" "யாவர்நிகரகல்வானத்தே." " யான்பெரியன் நீபெரிமையென்பதனை யாரறிவார் " என்று - பகவதநுபவத்தால்வந்த செருக்கும் கர்வமுமிறே அபிமானிக்கிறது. [ புவியுமிருவிசும்பும் நின்னகத்த ] இதுவன்றோ உன்படி. [நீயும்] சேதநாசேதநங்களை உன் திருவயிற்றிலேவைத்த, நீயும். [என்செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய்] என்று - தத்த்வத்ரயத்தையும் அணுபரிமாணனை என்னுடைய நெஞ்சுக்குள்ளே யடக்கினனானேனோ; நீயோ பெரியாரென்னு மிடத்தை, உனக்கு பக்ஷபாதியுமாய்க்கையாளுமாய்க்கைப்பட்டவனோடே விசாரி. " சிறியேனுடைச் சிந்தையுள் மூவுலகும் தன்னெறியா வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தார் " என்னக்கடவதிறே. " நளிர்ந்தசீலன் " என்று - குணம். " நயாசலன் " என்று-அநுஷ்டானம். " அபிமானதுங்கன் " என்று- இவற்றால்வந்தசெருக்குக்கடி ஜ்ஞாநகார்யமென்கிறது. நாடோறும்தெளிந்த என்று - இச்செருக்கோடே விபரீதச் செருக்கு ஒருநாளும் கலசாதென்கிறது. " கலக்கமில்லா நற்றவமுனிவர் " என்று கலங்காதிருக்கைதான் அரிதாயிறேயிருப்பது. " தெளிவுற்று வீவின்றி நின்றவர் " என்கிறபடியே - இத்தெளிவுதான் குலையாதிருக்கைதான் ஏற்றமாயிருப்பது. அன்றிக்கே, நாடோறும் தெளிந்து வாராநிற்குமவர்க்கு. செல்வனை. (க) " லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந꞉ " என்றும், (உ) " அந்தரிக்ஷகதச் ஸ்ரீமாந் " என்றும், (ங) " ஸநாகவாச் ஸ்ரீமாந் " என்றும் சொல்லுகிற மூன்று ஸ்ரீயுமிவர்க்குண்டு. (க) " லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந꞉ " என்று - பெருமாள் ராஜ்யத்தை இழந்தார்; இவர் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்றார். *சுற்றமெல்லாம் பின்தொடர எல்லாவடிமையும் பெற்றார். " ஸம்பந்ந꞉ " என்கையாலே பாகவதகைங்கர்யபர்யந்தமாகையிறே பூர்த்தி. பகவத்கைங்கர்யம் செய்தது தம்முடைய ஸத்தை பெறுகைக்காக; அந்தஸத்தையை யழியமாறியிறே பாகவதகைங்கர்யம் பண்ணிற்று. (உ) [ "அந்தரிக்ஷகதச் ஸ்ரீமாந்" ] பிராட்டியையும் பெருமாளையும் கண்டன்றிறே இவர்படைவீடுவிட்டுப் புறப்பட்டது; ஆகாசமிறே இவர்க்குள்ளது. இளையபெருமாளும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் படைவீட்டை விட்டபின்பிறே ஸ்ரீமான்களாய்த்து. பிராட்டி லங்கைக்குள்ளே எழுந்தருளியிருக்கச்செய்தேயும் ஸஹவாஸதோஷத்தாலே பிராட்டிகடாக்ஷம்பெற்றதில்லை; லங்கையைவிட்டுக் கிளம்பின பின்பிறே "ஸ்ரீமாந்"என்றது. (ங)["ஸநாகவாச் ஸ்ரீமாந்"] என்று ஸ்ரீகஜேந்த்ராழ்வான் ஸ்வரக்ஷணத்தில் ஸ்வவ்யாபாரத்தைப் போகட்டபின்பிறே ஸ்ரீமானாய்த்து. முதலையல்ல விரோதி, அஹங்காரம். இவற்றால் பலித்தது— ப்ராப்யத்தை லபித்

(க) "லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந꞉." (உ) " அந்தரிக்ஷகதச் ஸ்ரீமாந். " (ங) " ஸநாகவாச் ஸ்ரீமாந். "

வ்யா. ஒன்பதாம்பாட்டு. கொம்பினூரித்யாதி. பணைகளாலே நெருங்கின சோலையிடத்துக்குயில்கள். "குயிலாலும் வளர்பொழில்சூழ்." கோவிந்தன்குணம்பாடு. குயிலினங்களானவை, "தாழ்ந்த குலத்திலேயவதரித்துத் தாழ்ந்தார்கார்யம்செய்வதே!" என்று அவனுடைய ஸௌலப்யத்தை யநுஸந்தித்து, ப்ரீதிக்குப் போக்குவிட்டுப் பாடாநிற்கும். * கூட்டிலிருந்து கிளியெப்போதும் கோவிந்தா கோவிந்தா என்று சொல்லுவது- இவர் பயிற்றுவித்தாலிறே; அங்ஙனன்றிக்கே இவை தானேபாடாநிற்கும். "நாராயணனை வாக்கூவாயே லிங்குத்தநின்றும்துரப்பன்" என்னும்படி- இதுவொழிந்த நாமாந்தரங்கள் சொல்லுவதில் இங்குநின்றும் போகவமையும் என்னும்படியிறே இவற்றின்படி. "இன்னடிசிலொடுபாலமுதூட்டியெடுத்தவென் கோலக்கிளியை, உன்னொடுதோழமைக்கொள்ளுவன் குயிலே" என்று கைக்கூலிபெற்றாலிறே கூவுவது; இவை அப்படியன்று. சீர்ச்செம்பொனேர்மதிள்சூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர். ச்லாக்யமாய்ச்சிவந்தபொன்னாலேசமைந்த மதிள்களாலே சூழப்பட்டு அழகிய கழனிகளையுடைத்தான திருக்கோட்டியூர். உள்ளேபுக்கநுபவிக்கவேண்டாதபடி கொம்புகளாலே ஆர்ந்த சோலையும், குயில்கள் பாடுகையும், சிவந்த பொன்னாலே சமைந்த திருமதிள்களும், அழகிய கழனிக்கட்டளையும் கண்டநுபவிக்கவேண்டும்படி நிரதிசயபோக்யமாயிருக்குமுள்ள தேசம். நம்பியை. விச்வஸநீயனை. நரசிங்கனை. விச்வாஸத்துக்கடி இந்த அவதாரம். "அடுத்ததோருருவாயின்று நீவாராயெங்ஙனந்தேறுவருமர்" என்னக்கடவதிறே. ஸ்ரீப்ரஹ்லாதனுக்கு உதவினது ஸம்ஸாரிகள் விச்வஸிக்கைக்குடல். ஆழ்வார்க்குதவினதிறே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விச்வஸநீயம். "அங்கப்பொழுதே யவன் வீயத்தோன்றிய, என்சிங்கப்பிரான்" என்று ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு விச்வஸிக்கைக் கிறே தோன்றிற்று.

எம்பாரருளிச்செய்யும் வார்த்தை;— "ஈச்வரனுக்குமூன்று ஆபத்து வந்துகழிந்தது" என்றருளிச்செய்வர். அதாவது-த்ரௌபதிக்கும் ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கும் ஸ்ரீப்ரஹ்லாதனுக்கும்உதவிற்றிலனாகில், ஸம்ஸாரிகள் "ஈச்வரத்வமில்லை" என்றெழுதியெழுத்திடுவர்களிறே. ஆழ்வாரும் "எங்ஙனந்தேறுவருமர்" என்று தம்முடைய இழவிலும் "ஸ்ரீவைஷ்ணவர்கள் அத்யவஸாயம்குலைகிறதோ" என்றிறே அஞ்சுகிறது. "பிழைக்கின்றதருள்" என்றிறே அஞ்சுகிறது. "பிழைக்கின்றதருளென்று பேதுறுவன்" என்று தம்முடைய இழவுக்கு நோவையன்றியிலே, ஈச்வரனருளுக்கிறே இவர்நோவது. நவின்றேத்துவார்களைக்கண்டக்கால். ப்ரீதிக்குப் போக்குவிட்டுச் சொல்லுவார்களைக்கண்டக்கால், கண்படைத்த ப்ரயோஜநம் பெறலாம். "ஈட்டங்கண்டிடக்கூடுமேல் அதுகாணும் கண்பயனாவது" என்னக்கடவதிறே. எம்பிரான்றனசின்னங்களிவரிவரென்று.(க)சிஹ்நமென்று அவனுடைய அடையாளம். இவர்களைக் கண்டக்கால் "அவன் ஸாத்த்விகசேவ்யன்" என்று தோன்றும். "அவிநீத ப்ரத்யவர்க்கன்" என்றிறே அவனைக்கழித்தது. "கூராராழிவெண்சங்கேந்தி-வாராய்" என்று அவற்றோடு வாராதபோது "போகாய்" என்றிறே இவரிருப்பது. "என்னுவிசோம்மானுக்கு அந் தாமவாண்முடிசங்காழி நூலாரமுள" என்னக்கடவதிறே. ஆசைகள்தீர்வனே. "ஆசைகள்" என்று-காண என்றும், கிட்ட என்றும், கூடவிருக்க என்றுமிறே இவருடைய ஆசைகள். "அவனைக் காணவேணும்" என்கிற ஆசைசீரும் உகந்தருளின நிலங்களை அநுபவித்

(க) லிஹ்ந.

தால். "அடியார்கள் குழாங்களை- உடன் கூடுவதென்றுகொலோ" என்கிற இழவுகள் தீரும் இங்கே ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளைக் கண்டால். "கண்ணாரக்கண்டு கழிவதோர்காதல்" என்கிறபடியே கண்டவாறே ஆசைகள் தீருமிறே. ஈச்வரனைக்கண்டால் ஆசைகள் தீராது, இவர்களைக்கண்டால் ஆசைதீரும். [" கடிவார்தண்ணந் துழாய்க்கண்ணன்" இத்யாதி.] "அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே" என்று - பூர்ணாநுபவம் பண்ணினபின்பிறே "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்று கொலோ" என்று ப்ரார்த்தித்தது. "தோர்கடவியபெருமான் கனைகழல்காண்பதென்று கொல்கண்களே" என்று ஆசைகள் தீர்ந்தது பயிலுஞ்சுடரொளியிலேயிறே. "திருநாவாயவைபுள் புகலாவதோர்நாள்" என்று அத்திரளிறே உத்தேச்யம். "ஓணவிழவிலொலியதிரப்பேணிவரு வேங்கடவாவென்னுள்ளம் புகுந்தாய்" என்று அவன் வருமிடத்திலே அவர்களும் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு கூடவந்து புகுவர்கள். ... ... ... ... கூ.

மூ.—காசின்வாவாய்க்கரம் விற்கிலுங்கரவாது மாற்றிலிசோறிட்டுத்
தேசவார்த்தைபடைக்கும் வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர்க்
கேசவாபுருடோத்தமா கிளர்சோதியாய் குறளாவென்று
பேசுவாரடியார்க ளெந்தம்மைவிற்கவும் பெறுவார்களே. ய.

பதவுரை.

காசின்வாய்— ஓரிடங்காசுக்கு
கரம்— ஒருபிடிநெல்
விற்கிலும்— விற்கும்காலத்திலும் [ துர்ப்பிக்ஷகாலத்திலுமென்றபடி ]
கரவாது — தாம் தேடின பொருள்களை மறைத்துவையாமல்
மாறு இலி— ப்ரத்யுபகார நிரபேக்ஷமாய்
சோறு இட்டு — ( தம்மைத் தேடிவந்த விருந்தினர்க்குச் ) சோற்றை இட்டு ( அத்தாலே, )
தேசம் வார்த்தை— புகழை
படைக்கும்— பெற்றவர்களாய் [ர்கள்
வண் கையினார்கள்— உதாரராயிருக்குமவ
வாழ்— வாழுகிற
திருக்கோட்டியூரில்;
கேசவா— கேசவனே!
புருடோத்தமா— புருஷோத்தமனே!
கிளர்சோதியாய்— மிகுந்த தேஜஸ்ஸையுடையவனே!
குறளா— வாமநவேஷம் பூண்டவனே!
என்று— என்றிப்படி
பேசுவார்— பேசுமவர்களுக்கு
அடியார்கள்— சேஷபூதர்களானவர்கள்
எந்தம்மை— எங்களை
விற்கவும் பெறுவார்கள் — வேண்டினபடி விற்றுக்கொள்ளத்தக்க அதிகாரமும் பெறுவார்கள்.

வ்யா. பத்தாம்பாட்டு. காசின்வாய் கரம்விற்கிலும். *ஓரிடங்காசுக்கு ஒரு பிடிநெல் விற்குங்காலத்திலும். ஸுபிக்ஷமான காலத்தில் அதிதிஸத்காரம் பண்ணிப் போருமதுஒரேற்றமன்றிறே; துர்ப்பிக்ஷகாலத்திலும் தனக்குள்ள அம்சத்தை அதிதிகள்விஷயத்திலே ஸமர்ப்பிக்குமதிறே - ஏற்றமாவது. *காசின்வாய்கரம் விற்கிறதுக்கு மேற்பட்டதொரு துர்ப்பிக்ஷமில்லையிறே; அத்தைப்பற்ற இப்படியருளிச்செய்கிறார். கரவாது. தந்தாமுக்குள்ள தநதாந்யங்களை "பின்புத்தைக்கு நமக்குவேணும்" என்னும் நினைவாலே மறைத்துவையாதே, "இக்காலத்துக்கு இவ்விஷயங்களிலே விநியோகப்படுகைக்கன்றோ இவைகண்டது" என்று வெளியிட்டுக் கொண்டிருந்து. மாற்றிலிசோறிட்டு. ப்ரத்யுபகார நிரபேக்ஷமாகச் சோற்றையி

ட்டு. அதாவது - அதிதிஸத்காரந்தான் விஹிதமாகையாலும், பகவத்விபூதிபூதரான்றே வெ ன்னும் ப்ரதிபத்தியாலும், எதிர்த்தலையில் தைந்யதர்சநத்தால் வந்த க்ருபையாலும் இடுகை. ஸர்வாதித்யம்பண்ணுமவர்களுக்கு வீஷயவிபாகம்பண்ணவொண்ணாதிறே. ஆகையால் அப் தர்க்கும் தரித்ரர்க்கும் பசியர்க்கு மெல்லாமிடவேணுமிறே. இவர்கள்விஷயத்தில் ஒரு ப்ர த்யுபகாரத்தைக் கணிசித்தன்றிறேயிடுவது. ஆகையால் “மாற்றிலிசோறிட்டு” என்கி றது. “நாடொறும் விருந்தோம்புவார்” என்றாற்போலே இத்தையும் விசேஷவிஷய மாக்கிறேலோவென்னில்; “சோறு” என்றும், “இட்டு” என்றும் சொல்லுகையாலே, இத்தை வைஷ்ணவவிஷயங்களி லாக்கப்போகாது; ஆனபின்பு, இது ஸாமாந்யவிஷயமா மித்தனை. இதுதானும் சாஸ்த்ரஸித்தமாகையாலே தேசத்துக்கு ஒருவளப்பம் சொல்லுகை யிறே இப்போது இவர்க்கு அபேக்ஷிதம். தேசவார்த்தைபடைக்கும். யசஸ்கரமான வார்த் தைகளைப் படைக்கும். அதாவது - இருந்தாரிருந்த விடங்களிலே தங்களுடைய ஔதார் யம் க்ருபைமுதலான குணங்களைச் சொல்லிக் கொண்டாடும்படியாகை. இவர்கள், புகழை நச்சிச் செய்யாதிருந்தாலும் தன்னடையே வந்துண்டாமிறே இது. வண்கையினார்கள். உதாரமான கையை யுடையவர்கள். அதாவது - “உள்ளதெல்லாம் பரார்த்தமாகவே விநி யோகிக்கவேணும்” என்னுமௌதார்ய முடையவர்களென்கை. வாழ்திருக்கோட்டியூர். இப்படியிருந்துள்ளவர்கள் இத்தேசவாஸமே தங்களுக்கு வாழ்வாகக்கொண்டு வர்த்திக்கிற திருக்கோட்டியூர்.

கேசவா. அழகிய திருக்குழற்கற்றையையுடையவனே. புருடோத்தமா. அவ்வழகை ஆச்ரிதர்க்கு எப்போது மநுபவிக்கக் கொடுக்கும் ஔதார்யத்தையுடையவனே. கிளர்சோ தியாய். “அது தன்பேறு” என்னுமிடம் தோற்றும்படியான மிக்கதேஜஸ்ஸை யுடைய வனே. குறளா. உன்னுடைமை பெறுகைக்கு நீ இரப்பாளனுமவனே. என்றுபேசுவாரடி யார்கள். என்று இப்படி அவன் ஸ்வபாவங்களுக்குத்தோற்றுப் பேசுமவர்களுக்கு அடியா ராணவர்கள். இப்படிபேசுமவர்களையன்று நமக்குஉத்தேச்யர்; இவர்கள் இவ்வாசியறிந்து பேசுவதே! என்று அவர்கள் ஸ்வபாவத்துக்குத்தோற்று அடிமையா யிருக்குமவர்களே நமக்கு உத்தேச்யரென்கை. இவர்களுக்கு உத்தேச்யராவது எவ்வளவென்னில், எந்தம்மை விற்கவும் பெறுவார்கள் என்கிறார்; - இவர்களுக்கு சேஷமாகையே புருஷார்த்தமென்றிரு க்கும் எங்களை, தங்களுக்கு இஷ்ட விநியோகத்துக் குறுப்பாக விற்றுக்கொள்ளவும் உரிய வர்கள். (க) “தஸ்ஸ்ரீநிஷ்கிரயம் க்ருபவிக்ருயாவஹா:” என்னக்கடவதிறே. ... ௯.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—சீதநீர்புடைசூழ் செழுங்கழனியுடைத் திருக்கோட்டியூர்
ஆதியானடியாரையு மடிமையின்றித் திரிவாரையும்
கோதில்பட்டர்பிரான் குளிர்புதுவைமன் விட்டுசித்தன்சொல்
ஏதமின்றியுரைப்பவ ரிருடீகேசனுக்காளரே. ௧௧.

(க) “தத்பக்திநிக்ரமஸாம் க்ரயவிக்ரயார்ஹா:.”

பதவுரை.

சீதம் நீர்— குளிர்ந்த ஜலத்தாலே
புடை— சுற்றும்
சூழ்— சூழப்பட்டிருப்பதாய்
செழு— செழுமைதங்கிய
கழனி உடை— கழனிகளை உடைய
திரு கோட்டியூர்— திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கிற
ஆதியான்— ஆதிபுருஷனான எம்பெருமானுக்கு
அடியார்களையும் — அடிமைசெய்து போருமவர்களையும்
அடிமை இன்றி— கைங்கர்ய வ்ருத்தியில் அந்வயியாமல்
திரிவாரையும்— விஷயப்ரவணராய்த் திரியுமவர்களையும்
கோது இல்— குற்றமற்றவராய்
பட்டர்— ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு
பிரான்— உபகாரகராய்
குளிர் — ஸம்ஸாரதாபத்தைப் போக்கும் குளிர்த்தியையுடைய
புதுவை— ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
மன்— நிர்வாஹகரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
சொல்— புகழ்ந்தும் பழித்துமருளிச்செய்த சொல்லான இப்பத்தையும்
ஏதம் இன்றி— குற்றமின்றிக்கே
உரைப்பவர்— சொல்லவல்லவர்கள்
இருடீகேசனுக்கு — ஹ்ருஷீகேசனான எம்பெருமானுக்கு
ஆளர்— அடிமைசெய்யப் பெறுவர்.

வ்யா. சீதநீரித்யாதி. அகாதமாய் (க) வாதாதப ப்ரவேசத்தால் வரும் உஷ்ணம் தட்டாமையாலே எப்போது மொக்கக்குளிர்த்தி மாறாத ஜலத்தாலே சுற்றும் சூழப்பட்டிருப்பதாய். அழகியகழனிகளையு முடைத்தாயிருக்கிற திருக்கோட்டியூரிலே. பார்த்த பார்த்த விடமெங்கும் ஜலஸம்ருத்தியும் விளைகழனியுமாய்க் கிடக்குமாய்த்து. ஆதியானடியாரையு மடிமையின்றித் திரிவாரையும். கரணகளேபரங்களையிழந்து * அசிதவிசேஷிதமாய்க்கிடக்கிற தசையிலே * தயமான மனாவாய்க்கொண்டு,(க)" விசித்ராதேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும் பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா" என்கிறபடியே தன்னை ஆச்ரயிக்கைக் குறுப்பான கரணகளேபரங்களைக் கொடுத்தருளி, ஆச்ரயணீயத்வே ஸௌலப்யனாய்க் கொண்டு ஸந்நிஹிதனாய் நிற்கிற காரணபூதனானவனுக்கு, அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு வ்யபிசரியாதே சேஷபூதராய் அடிமைசெய்து வர்த்திக்கிறவர்களையும், "முதல்வனைச் சிந்தியாதவப் பாவகாரிகள்" என்கிறபடியே அவன் பண்ணின உபகாரத்தையறிந்து அநுஸந்தியாதே பாபகர்மாக்களாய் அவன்திருவடிகளிலடிமையில் அந்வயமற்று கரணத்ரயத்தையும் அந்ய பரமாக்கிக்கொண்டு திரிகிறவர்களையும். கோதிலித்யாதி. கீழ்ச்சொன்ன இரண்டு தலையையும் ச்லாகித்தும் நிந்தித்தும்சொன்ன விதுக்கு அநுரூபமான நிஷ்டையில்லாமையாகிற குற்றமின்றிக்கே யிருப்பாராய், வைதிகோபகாரகராய், ஸாம்ஸாரிக ஸகல தாபஹரமான குளிர்த்தியையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரானபெரியாழ்வாரருளிச்செய்த இப்பத்துப்பாட்டையும். ஏதமின்றியுரைப்பவர். நிர்த்தோஷமாகச்சொல்லுமவர்கள். அதாவது-இவர் திருவுள்ளக்கருத்தையறிந்து அதில் பழுதறச் சொல்லுகை. இருடீகேசனுக்காளரே. இந்த்ரியங்களை அந்யபரமாகாதபடி நியமித்து அடிமை கொள்ள வல்லவனுக்கு அடிமை செய்யுமாளாகப் பெறுவர். ... ... ௧௧.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

———(௩)———

அடிவரவு.—நாவ குற்றம் வண்ண வுரகம் ஆமை பூதம் குருந்தம் நளிர்ந்த கொம்பின் காசின் சீதநீர் ஆசை.

ஆக திருமொழி ௩௩-க்கு, பாட்டு-௩௫௮.

(க) வாதாதப. (க) "விசித்ராதேஹஸம்பத்தி ரீச்வராய நிவேதிதும்- பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா."

நாலாம்பத்து- ஐந்தாந்திருமொழி- ஆசைவாய், ப்ரவேசம்.

அ. கீழ்த்திருமொழியிலே- "ஆதியானடியாரையும் அடிமையின்றித் திரிவாரையும்" என்று ஸம்ஸாரிகள் பொல்லாங்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமுமிறே சொல்லிற்று; ஸம்ஸாரிகளுக்கும் பகவத்ஸம்பந்த மொத்திருக்க, அவர்களைக்கழிக்கைக்கடி ஸம்பந்தஜ்ஞானமில்லாமையிறே. "வணக்கொடுமொள்வது வலமே" என்று சரமஸமயத்திலே பகவத்ஸமாச்ரயணம் பண்ணுகை ச்ரேஷ்டமாகையாலே ஸம்ஸாரிகளைப்பார்த்து ஹிதோபதேசம் பண்ணியருளுகிறார்- இத்திருமொழியில். ... ... ... ... ... ... *

அ. முதற்பாட்டு. திருநாமங்களைச் சொல்லுமவர்கள் பெறும்பேறு என்றால் சொல்லப்போகாதென்கிறார்.

மூ.— ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி யன்னையத்தனென் புத்திரர்பூமி
வாசவார்குழலா ளென்றுமயங்கி மாளுமெல்லைக் கண்வாய்திறவாதே
கேசவாபுருடோத்தமாவென்றுங் கேழலாகியகேடிலீயென்றும்
பேசுவாரவ ரெய்தும்பெருமை பேசுவான்புகில் நம்பரமன்றே. க.

பதவுரை.

என் அன்னை— 'என்னுடையதாய்,
என் அத்தன்— என்தமப்பன்,
என் புத்திரர்— என்பிள்ளைகள்,
என் பூமி— என்னுடையபூமி,
வாசம் வார்— பரிமளம் வீசாநின்றுள்ள
என் குழலாள்— மயிர்முடியையுடைய என் மனைவி'
என்று— என்று வாய்வெருவும்படி
ஆசைவாய்— ஆசையின்வழியே
சென்ற— போன
சிந்தையர் ஆகி— மநஸ்ஸை யுடையராய்
மயங்கி— மோஹித்து [வில்
மாளும் எல்லைக்கண்— ப்ராணன் விடுமெல்லை
வாய் திறவாதே— அவர்கள்பேரைச் சொல்லியழையாமல்
கேசவா என்றும்— 'கேசவனே!' என்றும்
புருடோத்தமா என்றும்— 'புருஷோத்தமனே!' என்றும்
கேழல் ஆகிய— 'வராஹரூபம் கொண்டு தன்னை அழியமாறியும்
கேடு இலீ என்றும் — தன்ஸ்வரூபமொன்றும் கெடாதவனே!' என்றும்
பேசுவார் அவர்— சொல்லுமவர்கள்
எய்தும் பெருமை— பெறும் பேற்றை
பேசுவான் புகில்— பேசப்புக்கால்
நம் பரம் அன்று— நம்மால் பேசித்தலைக் கட்டப் போகாது.

வ்யா. ஆசையித்யாதி. ஸ்நேஹமிருந்தவிடத்திலே கைகழிந்த மநஸ்ஸையுடையராய். *அன்னையென்று தொடங்கி, *வாசவார்குழலாளளவும் ஆசையிருக்குமிடம். மயங்கி. இவர்கள் பேரும் சொல்லமாட்டாதே மயங்கி. மாளுமெல்லைக்கண். "வைத்தநாள் வரை எல்லை குறுகி" என்கிறபடியே சரமகாலத்திலே. வாய்திறவாதே. அவ்வளவிலே கீழ்ச்சொன்னவர்கள் பேரைச் சொல்லி அழையாதே.

அவர்கள்பேர் சொல்லவொண்ணாதாகில் பின்னையார்பேரைச் சொல்லுவதென்னில்; கேசவா. உங்கள் மரணவேதனை போகவேணுமாகில் (க) "கேஶவக்லேஶநாஶநீ"

(க) "கேசவக்லேசநாசநீ."

எண்ணப்பாருங்கோள். " கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன " என்று சொல்லக்கட வதிறே. புருடோத்தமா. ஔதார்யம். அதாவது- அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தி யும் பண்ணுகை. கேழலாகியகேடிலீயென்றும். இவர்கள் கேடுபோனால் தன்கேடு போச்சு தாக நினைத்திருக்கை. பேசுவாரவரெய்தும் பெருமை. அவர்களேற்றத்துக்குப் பாசுரமிடப் போகாது; " அவர் " என்னுமித்தனையிறே. அவர்கள் பெறும்பேற்றை நம்மால் பேசப் போகாது. பேசுவான்புகில். பேசப்புக்கோமாகில். நம்பரமன்றே. நம்மால் பேசித்தலைக் கட்டப்போகாது. கொடுக்கிறவன்றானறியுமித்தனை. அதாவது- இதரலிங்கம் குலைப்பெ றுவதாம்; சரமகாலத்தில் அவர்களை அழைபாதொழியப் பெறுவதாம்; நம்முடைய பேர்க ளைச் சொல்லப்பெறுவதாம்; " இதென்னவேற்றம்! இதென்னவேற்றம்! " என்று இதின் ஏற்றமறிந்து ஈடுபடுவானவனிறே. ... ... ... ... ... க.

அ. இரண்டாம்பாட்டு. திருநாமஞ்சொன்னவர்கள் மோக்ஷத்தைப் பெறுவர்களெ ன்கிறார்.

மூ.—சீயினாற்சிறந் தேறியபுண்மேற் செற்றலேறிக் குழம்பிருந்தெங்கும்
ஈயினாலரிப்புண்டு மயங்கி எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம்
வாயினாலமோநாரணவென்று மத்தகத்திடைக் கைகளைக்கூப்பிப்
போயினாற்பின்னை யித்திசைக்கேன்றும் பிணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே.

பதவுரை.

சீயினால்— சீயாலே
சிறந்து ஏறிய— மிகவும் நிறைந்த
புண் மேல்— புண்ணின் மேலே
செற்றல் ஏறி — ஈ இருந்து முட்டையிட்டு
குழம்பிருந்து — புழுத்துநீராய்ப் பாயும
எங்கும்— ஓரிடம் தப்பாமல் [ளவில்
ஈயினால்— ஈயாலே
அரிப்புண்டு— அரிக்கப்பட்டு [ச்சித்து
மயங்கி— அது பொறுக்கமாட்டாமல் மூர்
எல்லைவாய்— சரமகாலத்தை
சென்று சேர்வ தன் முன்னம் — சென்று கிட்டுவதற்கு முன்னே
வாயினால்— வாயாலே
நமோநாரண என்று— ' நமோநாராயணாய ' என்று சொல்லிக்கொண்டு
மத்தகத்திடை— உச்சியிலே
கைகளை கூப்பி— கூப்பினகையராய்
போயினால்— போனால்
பின்னை— பிறகு
பிணைக்கொடுக்கிலும்— நித்யமுக்தர்களை உத்தரவாதிகளாக்கினாலும்
இ திசைக்கு— இவ்வுலகத்திற்கு
என்றும்— எப்போதும்
போக ஒட்டார்— பரமபதத்திலுள்ளார், இவர்களைச் செல்லவொட்டார்கள்.

வ்யா. சீயினாற்சிறந்தேறியபுண்மேல். சீயானது விஞ்சிப்புடைபட்டபுண்ணின்மேலே. செற்றலேறி. ஈயிருந்து முட்டையிட்டு. குழம்பிருந்து. அவைபுழுத்து நீராய்ப்பாயுமளவிலே. ஈயினாலரிப்புண்டு மயங்கி. ஈயினாலே அரிப்புண்டு, அதுபொறுக்கமாட்டாமல் மூர்ச்சித்து. எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம். சரமகாலத்தைச்சென்று கிட்டுவதுக்குமுன்னே.

வாயினால் நமோநாரணவென்று. வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி. " எனக்கு நானுரியேனல்லேன், உனக்குரியேன்" என்று சொல்லுகையிறே வாய்படைத்ததுக்குப்ரயோ

ஜநம். மத்தகத்திடைக் கைகளைக்கூப்பி. தலைபடைத்த ப்ரயோஜநம் பெற்று. போயிருல். இப்படி செய்துபோனுல். போயினுமலென்றது- வழிப்போக்குத்தானே ப்ரயோஜநமென்கை. இவன் ஒருகால்தொழுதால், இதுக்கு பலம்- வழிப்போக்கில், "மற்றெல்லாம் கைதொழப் போய்" என்றும், "தொழுதனருலகர்கள்" என்றும் சொல்லுகிறபடியே இவன் பார்த்த பார்த்தவிடமெல்லாம் அஞ்ஜலிக்காடாயிறே யிருப்பது. அங்கு புக்காலும் (க) "பத்தா ஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:" என்றதிறே பலம். இவன் ஒருக்கால் ஆத்மஸமர்ப்பணம் பண்ண, "ஆண்மின்கள் வானகமாழியான்றமர்" என்று த்ரிபாத்விபூதியாக ஸமர்ப்பிப்பர்கள். ஒருக்கால் "நம:" என்ன, காலதத்த்வமுள்ளதனையும் *நமோநாராயணாயவென்று சூழ்ந்திருந்தேத்துகையிறே பலம். பின்னையித்திசைக்கென்றும் பிணைக்கோடேக்கிலும் போகவோட்டாரே. நித்யமுக்தரைப் பிணையிடிலும் போகவொட்டார்கள். அதுக்கடி- *விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும்தேசமாகையாலே. அவன்றானும் * ஏற்றிவைத்தேணியேணிவாங்குமவனிறே. இத்தால்- கர்மமடியாக மீட்சியில்லையென்றபடி. ... ... ... உ.

அ. மூன்றும்பாட்டு. ஆத்மஸமர்ப்பணம் பண்ணினுர்க்கு யமவச்யதை யில்லையென்கிருர்.

மூ.—சோர்விஞற்பொருள் வைத்ததுண்டாகிற் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து
ஆர்வினவிலும் வாய்திறவாதே யந்தகால மடைவதன்முன்னம்
மார்வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தைநாட்டி
ஆர்வமேன்பதோர் பூவிட வல்லார்க் கரவதண்டத்தி லுய்யலுமாமே. ங.

பதவுரை.

சோர்விஞல்— புத்திமறதியாலே
பொருள்— பொருள்களை
வைத்தது உண்டாகில்— புதைத்து வைத்ததுண்டானுல்
சொல்லு சொல் என்று— 'அதிருக்குமிடத்தைச் சொல் சொல்' என்று
சுற்றும்— நாற்புறத்திலும்
இருந்து— சூழவிருந்து
வினவிலும்— சுற்றத்தார் கேட்டாலும்
ஆர் (வினவிலும்) — அருமைப்பட்டுத்தேடி சுற்றத்தார் முதலானேர்க்கும் கொடாமல் மறைத்து வைத்த பொருள்கொடுத்து வேட்ட இளையாள் கேட்டாலும்,
வாய் திறவாதே— வாயைத் திறவாதபடி
அந்த காலம்— முடிவுகாலம்
அடைவதன் முன்னம்—வருவதற்குமுன்னே
மார்வம் என்பது— 'மாஸ்ஸ' என்று சொல்லப்படுமதாய்
ஓர்— அத்விதீயமான
கோ இல்— பகவத்ஸந்நிதியை
அமைத்து— உண்டாக்கி
மாதவன் என்னும்— 'ஸ்ரீய:பதி' என்று ப்ரஸித்தமான
தெய்வத்தை— அத்விதீயவஸ்துவை
நாட்டி— நிலை நிறுத்தி
ஆர்வம் என்பது— அன்பாகிற
ஓர் பூ— ஒரு புஷ்பத்தை
இட வல்லார்க்கு— ஸமர்ப்பிக்க வல்லவர்களுக்கு
அரவர்— யமபடர்களுடைய
தண்டத்தில்— தண்டனையினின்றும்
உய்யலும் ஆம்— பிழைக்கவுமாம்.

---

(க) "பத்தாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:"

வ்யா. சோர்விஞல் பொருள்வைத்த துண்டாகில். முன்பு இவன் கையில் கண்டவை யடைய “ அட்டைகள்போல் சுவைப்பர் ” என்கிறபடியே இவன் கையிலுள்ளவை நிச்சேஷமாக வாங்கிக்கொள்ளுவர்கள். இவர்களைக்காணுமல் வைத்ததுண்டாகில். சொல்லு சொல்லென்று. ஒருகாற் சொன்னுற்போலே ஒன்பதின்கால் சொல்லி. சுற்றுமிருந்து. “ இவன் ஒருத்தரை ஒருத்தரறியாமல் கொடுக்கிற்செய்வதென் ” என்று விடாதே சுற்றுமிருப்பர்கள். ஆத்ம பந்துக்களாகிலேறே – “ திருமாலைப்பாடக்கேட்டு வளர்த்ததனுல் பயன்பெற்றேன் ” என்பது. [ “துஞ்சும்போதழைமின்” இத்யாதி. ] ஆர்விஞவிலும் வாய்திறவாதே. ¶பகவத் பாகவத விஷயங்களையும் ஆசார்யனையும் ப்ரக்ருதிபந்துக்களையும் மறைத்துவைத்த அர்த்தங் கொடுத்து வேட்ட இளையாள் விஞவிலும் வாய்திறவாதே. இவர்களுக்கும் இவனுக்கும் “ இவனையிழக்கப் புகுகிறோமென்கிற பயமன்று, இவன்வைத்த அர்த்தம் ஒருவருமறியாமல் மண்தின்றுபோகிற் செய்வதென் ” என்கிறபயம். இவ்வர்த்தத்தை நச்சிவரும்போதும் அக்காலத்திலே “ அவன் முகத்திலே விழிக்கவருகிறோம் ” என்றிறேவருவது. ¶ அந்தகால மடைவதன்முன்னம். சரமகாலம் வருவதுக்குமுன்னே.

மார்வமென்பதோர் கோயிலமைத்து. ஹ்ருதயமென்று ப்ரஸித்தமாய் அத்விதீயமான ஸ்தாநத்தையுண்டாக்கி. மாதவனென்னும் தெய்வத்தைநாட்டி. ஸ்ரீயபதியென்று ப்ரஸித்தமாய் அத்விதீயமான வஸ்துவை ப்ரதிஷ்டிப்பித்து. “ திருமாலிருஞ்சோலைமலையென்றே னென்னத் திருமால்வந்தென் னெஞ்சுநிறையப்புகுந்தான் ” என்று - இவர் அஹ்ருதயமாகச் சொன்னத்தை ஸஹ்ருதயமாகக் கொண்டுவந்து புகுந்தான். இவர் இப்போதே “ அஹ்ருதயமாகச் சொன்னேன் ” என்னவும்வல்லர். அதுக்குமுன்னே இவர்நெஞ்சில் இடமறப் புகுந்துகொள்ளுங் கிடீரென்று பிராட்டியுங் கூடக்கொண்டுபுகுந்தான். இவர்நெஞ்சு திருந்துவதுக்குமுன்பிறே - அல்லாதவிடங்களில்நிற்பது; [ “நின்றதெந்தையூரகத்து ” இத்யாதி.] உகந்தருளின நிலங்களில் கண்டநுபவிக்குமாபோலே இவர் திருவுள்ளத்திலிருப்பதும் கண்டநுபவிக்கலாம்படி யிருக்குமிவர்க்கு. “ சலசயனத்துள்ளு மெனதுள்ளத்துள்ளு முறைவாரை ” என்னக்கடவதிறே. “ வந்தாயென்மனம்புகுந்தாய் ” என்றிறேபுகுந்தது. “ வந்துவந்தென்மனத்திருந்து ” என்கிறபடியே இவர் இசையாமல்; தட்டினாளுக்கு ஓர் அவதியில்லையிறே. “ அடியார்மனத்தாயோ ” “ வெள்ளத்தான் வேங்கடத்தானேலும், கலிகன்றி உள்ளத்தினுள்ளேயுளன் ” என்று - உகந்தருளினநிலங்களோடொக்குமிறே - இவர் திருவுள்ளமும். ஆர்வமென்பதோர் பூவிடவல்லார்க்கு. “ சோர்விஞல்பொருள் வைத்ததுண்டாகில் ” என்று - தேஹபந்துக்களையும் ஆத்மபந்துக்களையும் மறைத்து வைத்தபொருளையிட்டுக் கோயில்சமைத்துத் திருநந்தவநத்தையுமுண்டாக்கித் திருப்பள்ளித்தாமத்தையும் தேடுஎன்று இவனை அரியதேவைகளையிடானிறே. * நாடாதமலர் நாடிநாடோறும் நாரணன்றன் வாடாதமலரடிக் கீழ்வைக்கவிறே - இவனை †அடியிலே ஸ்ருஷ்டித்தது. இப்படி பூவோடே பூவைச் சேர்க்கவல்லார்க்கு. அரவதண்டத்திலித்யாதி. யமபடரால் வரும் க்லேசம். அதாவது - “ வெஞ்சொலாளர்கள் நமன்றமர்கடியர் கொடியசெய்வனவுள ” என்னக்கடவதிறே * நெடுஞ்சொலால் மறுத்ததுக்குபலம் கடுஞ்சொல்கேட்கையிறே. உய்யலுமாம். ப்ராப்யத்திலும் இதுபோகையிறே ப்ரதாநமென்கிறுர். ... ... ௫.

¶ அந்தகாலம்- அநுகாரமும். † “அடியிலே” என்றது பாட; ‘திருவடிகளிலே’ என்றும் ‘ ஆதியிலே ’ என்றும்.

அ. நான்காம்பாட்டு. ப்ராணவார்த்தம் நெஞ்சில்பட்டவர்கள் *அடியார்கள் குழாங்களையுடன் கூடுவரென்கிறார்.

மூ.—மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினை யுள்ளெழவாங்கிக்
காலுங்கையும் விதிர்விதிர்த்தேறிக் கண்ணுறக்க மதாவதன்முன்னம்
மூலமாகிய வொற்றை யெழுத்தை மூன்றுமாத்திரை யுள்ளெழவாங்கி
வேலைவண்ணனை மேவுதிராகில் விண்ணகத்தினில் மேவலுமாமே. ச.

பதவுரை.

மேல் எழுந்தது ஓர் வாயு } ஊர்த்வச்வாஸமானது
கிளர்ந்து— மேலெழுந்து
மேல் மிடறு ‡ — நெஞ்சு
உள் எழ வாங்கி— கீழே இடியவிழுந்து
காலும் கையும்— கால்களும் கைகளும்
விதிர் விதிர்த்தேறி - பதைபதைத்து
கண் உறக்கம் அது— தீர்க்க நித்ரை
ஆவதன் முன்னம்—உண்டாவதற்குமுன்னே
மூலம் ஆகிய ஒற்றை எழுத்தை } ஸகல வேதங்களுக்கும் காரணமான திருமந்த்ரத்தில் [ ப்ரணவத்தை ].

மூன்று மாத்திரை உள் எழவாங்கி } அளவெடுத்து உச்சரித்து
வேலை— கடல்போன்ற [ மானை
வண்ணனை — வடிவையுடைய எம்பெரு
மேவுதிர் ஆகில் — கிட்டவல்லீர்களாகில்
விண்ணகத்தினில்— பரமபதத்தை
மேவலும் ஆம்— கிட்டலாம்.

‡ 'இன்' 'ஐ' இவை சாரியைகள்.

வ்யா. மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து. மேல்மூச்செறிந்து. மேல்மிடற்றினையுள்ளெழவாங்கி. நெஞ்சு கீழேபிடியவிழுந்து. காலும் கையும் விதிர்விதிர்த்தேறி. ப்ராணவாயு மேல்நோக்கினவாறே காலும்கையும்பதைக்கத்தொடங்கிற்று. கண்ணுறக்கமதாவதன்முன்னம். தீர்க்கநித்ரைகொள்ளுவதற்குமுன்னே. மூலமாகிய ஒற்றையெழுத்தை. ஸகலவேதங்களுக்கும் காரணமான திருமந்த்ரத்தில் ப்ரதமபதத்தை உச்சாரணக்ரமம் தப்பாமல் உச்சரித்து. வேலைவண்ணனை மேவுதிராகில். ஸ்ரீவைகுண்டநாதனைக் கிட்டவல்லீர்களாகில். விண்ணகத்தினில் மேவலுமாமே. *அடியார்கள் குழாங்களுடன் கூடலாமென்கிறார். ... ச.

அ. ஐந்தாம்பாட்டு. விரோதிநிரஸநசீலனை யேத்துவார்க்கு முன்பு க்லேசப்பட்டுப் டி இனிப்போக வேண்டாவென்கிறார்.

மூ.—மடிவழிவந்து நீர்ப்புலன்சோர வாயிலட்டிய கஞ்சியுமீண்டே
கடைவழிவாரக் கண்ட மடைப்பக் கண்ணுறக்கமதாவதன்முன்னம்
துடைவழியும்மை நாய்கள்கவரா சூலத்தாலும்மைப் பாய்வதுஞ்செய்யார்
இடைவழியினீர் கூறையுமிழவீர் இருடீகேசனென் றேத்தவல்லீரே. ரு.

பதவுரை.

யமபடரைக்கண்ட பயத்தாலே,
மடி— மடியின் கண் உள்ள

நீர் புலன்வழி வந்து— லிங்கத்தின் வழியாக
சோர— சிறுநீர் பெருகவும் [ வந்து

வாயில்— வாயிலே
அட்டிய— பெய்த
கஞ்சியும்— பொரிக்கஞ்சியும்
கண்டம் அடைப்ப— கழுத்தையடைக்க
மீண்டு— மறுபடியும்
கடைவழி— கடைவழியாலே
வார— வழியாநிற்கவும்
கண் உறக்கமது ஆவதன் முன்னம்-;
இருடீகேசன் என்று— 'ஹ்ருஷீகேசன்' என்று
ஏத்த வல்லீர் (ஏல்)— துதிக்கவல்லிகோளாகில்
(யமலோகத்திலே,)

உம்மை— உங்களுடைய
துடைவழி— துடையில்
நாய்கள்— செந்நாய்களானவை
கவரா— கவ்வுதல் செய்யா;
உம்மை— உங்களை
சூலத்தால்— சூலத்தாலே
பாய்வதும்செய்யார்— யமபடர்கள் குத்தவும் மாட்டார்கள்
நீர்— நீங்கள்
இடை வழியில்— நடுவழியிலே
கூறையும்— வஸ்த்ரத்தையும்
இழவீர்— இழக்கவும் மாட்டீர்கள்.

வ்யா. மடிவழிவந்து நீர்ப்புலன்சோர. யமபடரைக்கண்ட பயத்தாலே ஓர்இந்த்ரிய விசேஷத்தாலே ஜலம்ப்ரவஹிக்க. வாயிலட்டியகஞ்சியும் மீண்டே கடைவழிவாரக் கண்டமடைப்ப. பொரிக்கஞ்சியைக் கொடுத்தால், கண்டமடைக்கையாலே உள்ளுப்புகாதே மீண்டும் கடைவழியாலே வழியாநிற்கும். கண்ணுறக்கமதாவதன்முன்னம். நிர்க்கநித்ரைகொள்ளுவதற்குமுன்னே.

துடைவழியும்மை நாய்கள்கவரா. "நாயினத்தொடும் திளைத்திட்டு ஓடியுமுழன்றும்" என்றதுக்கு பலம். சூலத்தாலும்மைப்பாய்வதுஞ்செய்யார். "உயிர்களைகொன்றேன்" என்று ஆயுதத்தாலே நலிந்ததுக்கு பலம். இடைவழியில் நீர்கூறையுமிழவீர். வழியில்நின்று சீரையுரிந்ததுக்கு பலம். என்று என்று சொல்லியிறே அவர்கள் வழியில்நலிவது. இது தப்பவேண்டியிருந்திகோளாகில் இருடீகேசனென்றேத்தவல்லீரே. இந்த்ரியங்களை நியமிக்குமவனென்று ப்ரீதியோடேகூட ஸ்தோத்ரம்பண்ணினால் இவைவாரா. யமவச்யத்தைக்கடி இந்த்ரியவச்யதையிறே. இதுக்குஸாதநமாகவிறே பரஹிம்ஸாதிகள் பண்ணுவது. அத்தைக் குலைக்குமவனென்கிறார். ... ... ... ... ... ... ... ரு.

அ. ஆறும்பாட்டு. அங்கமித்யாதி. இப்பாட்டில், ஒருக்கால் உபாயவரணம் பண்ணினார்க்கு *ஸதாபச்யந்தி பண்ணலாமென்கிறார்.

மூ.—அங்கம்விட்டவை யைந்துமகற்றி யாவிமூக்கினிற் சோதித்தபின்னைச்
சங்கம்விட்டவர் கையைமறித்துப் பையவேதலை சாய்ப்பதன்முன்னம்
வங்கம்விட்டுலவுங் கடற்பள்ளிமாயனை மதுசூதனைமார்பிற் றங்கவிட்டுவைத்து
ஆவதோர்கருமஞ் சாதிப்பார்க்கென்றுஞ் சாதிக்கலாமே. சு.

**பதவுரை.**

அவை ஐந்தும்— பஞ்சப்ராணனும்
அங்கம் விட்டு‡ அகற்றி- சரீரத்தைவிட்டுநீங்கி
அவர்— அருகிருந்தவர்கள்
மூக்கினில்— மூக்கில் கையைவைத்து

‡ 'அகன்று' என்னுமது - 'அகற்றி' என்று கிடக்கிறது.

ஆவி சோதித்த பின்னை— ஆவி இல்லை என்றறிந்த பின்பு
சங்கம் விட்டு— 'இனி இவன் பிழைக்கும்' என்கிற ஆசையைவிட்டு
( அங்கிருந்தவர்களை, ' ஆனபடியென்? ' என்று வந்தவர்கள் கேட்க; )
கையை மறித்து— கையை விரித்து
பைய— மெள்ள
தலைசாய்ப்பதன் முன்னம்— தலையைத் தொங்கவிடுவதற்கு முன்பு,
வங்கம்— மரக்கலங்களானவை
விட்டு உலவும்— இடைவிடாமல் உலாவா நின்றுள்ள
கடல்— கடலில்
பள்ளி— கண்வளர்ந்தருளுகிற
மாயனை— ஆச்சர்ய சேஷ்டிதயுக்தனாய்
மதுசூதனை— மதுவை நிரஸித்தவனான எம்பெருமானை
மார்வில்— நெஞ்சிலே
தங்கவிட்டு வைத்து— தங்கும்படி நிற்கச் செய்து
ஆவது— ப்ராப்தமுமாய்
ஓர்— ஸுகரமுமான
கருமம்— உபாயவரணம்
சாதிப்பார்க்கு— ஒருக்கால் பண்ணுமவர்கட்கு
என்றும்— காலமுள்ளதனையும்
சாதிக்கலாம்— அவனை ஸேவித்திருக்கலாம்.

வ்யா. அங்கம்விட்டவையைந்துமகற்றி. பஞ்சவ்ர்த்திப்ராணன் சரீரத்தை விட்டதென்று. ஆவிமூக்கினில் சோதித்தபின்னை. இவனுக்கு ப்ராணனில்லையென்று அறிந்தபின்பு. சங்கம்விட்டு. இனி இவன்பிழைக்குமென்கிற ஆசையைவிட்டு. " சங்கம்விட்டு " என்று - *சொல்லுசொல்லென்று சுற்றுமிருக்கிற திரள்குலைந்தென்னுதல். அன்றிக்கே, இவன்பக்கல் சிலகிடைக்குமென்கிற ஆசையை விட்டென்னுதல். கையைமறித்து. அங்கிருந்தவர்களை, " அவன்செய்ததென் " என்று வந்தவர்கள்கேட்க; கையைமறித்து. பையவேதலை சாய்ப்பதன் முன்னம். மெள்ள இவனருகுநின்று மெழுந்திருந்து விடப்போய், இவனை இழந்த இழவுதோற்ற கவிழ்தலையிட்டிருப்பர்களாய்த்து. வங்கம்விட்டுலவும் கடல்பள்ளிமாயனை. மரக்கலமுலாவா நின்றுள்ள கடலில்கண்வளர்ந் தருளுகிறவாச்சர்ய பூதனை. அன்றிக்கே, " மாயனை " என்றது - ஜ்ஞாநமாய், தன்னிச்சையாலே கண்வளர்ந்தருளுகிறவனென்றபடி. " குரைகடல்மேல் அரவணைமேல் குலவரைபோல் பள்ளிகொண்டு " என்னக் கடவதிறே. மதுசூதனை. மதுவைநிரஸித்தாற்போலே ஆச்ரிதவிரோதியைப் போக்குமவனை. " வெள்ளை நீர்வெள்ளத்தணைந்த வரவணைமேல், துள்ளுநீர்மெள்ளத் துயின்றபெருமானே, வள்ளலே உன்றமர்க்கென்றும் நமன்றமர்கள்ளர்போல் " என்னக்கடவதிறே. மார்வில்தங்கவிட்டுவைத்து. தங்கவிடுகையாவது - ஓரிடத்திலேயிருத்துகை. ஆவதோர்கருமம். ஸுகரமுமாய் ப்ராப்தமுமான ஆத்மஸமர்ப்பணம். " நமவென்னலாங்கடமை " என்னக்கடவதிறே. சாதிப்பார்க்கென்றும் சாதிக்கலாமே. உபாயம் ஸக்ருத்கர்த்தவ்யம் ; உபேயம் ஸதா ப்ராப்தவ்யம். " ஆவத்தநம் " என்று - ஸக்ருத்; " சேவித்திருக்கும் " என்று - ஸதா. ... சு.

அ. ஏழாம்பாட்டு. தென்னவனித்யாதி. இப்பாட்டில், விரோதிநிரஸநசீலனை அநுஸந்திப்பர் நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஸ்ரீவைகுண்ட நாதனோடே மன்றுடிவர்களென்கிறார்.

மூ.—தென்னவன்றமர் செப்பமிலாதார் சேவதக்குவார் போலப்புகுந்து
பின்னும்வன்கயிற்றால் பிணித்தெற்றிப்பின் முன்னாக விழுப்பதன்முன்னம்
இன்னவனினையா னென்றுசொல்லி யெண்ணியுள்ளத் திருளறநோக்கி
மன்னவன்மதுசூதனனென்பார் வானகத்துமன்றாடிகடாமே. எ.

பதவுரை.

| | |
|---|---|
| தென்னவன்— தென் திசைக்குக் கடவனான யமனுக்கு | மன்னவன்— தென்னவனுக்கு மன்னவனானவனை |
| தமர்— சேஷபூதராய் | இன்னவன் இனையான் என்று சொல்லியெண்ணி } இன்னான் என்று மதுக்கு ஏகாந்த குணங்களை அநுஸந்தித்து |
| செப்பம் இலாதார்— மூக்கரணங்களிலும் ஒரு செவ்வையில்லாதவர்கள் | உள்ளத்து இருள் அறநோக்கி } நெஞ்சில் அஜ்ஞாநாந்தகாரம் போகப் பார்த்து |
| சே— எருதுகளை | மதுசூதனன்— 'மதுவை நிரஸித்தவன்' |
| அதக்குவார் போல— அதக்கும் நீசஜாதியரைப் போலே | என்பார்— என்று சொல்லுமவர்கள் |
| புகுந்து— புகுந்து | தாமே— (அத்விதீயராய்) தாங்களே |
| பின்னும்— பின்னையும் | வானகத்து— பரமபதத்தில் |
| வன் கயிற்றால்— வலிய பாசங்களாலே | மன்றுடிகள்— நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஸ்ரீவைகுண்ட நாதனோடே மன்றாடுவர்கள். |
| பிணித்து— கட்டி | |
| எற்றி— வருந்தப்பண்ணி | |
| பின் மூன் ஆக— முகம் கீழ்ப்பட | |
| இழுப்பதன் முன்னம்— யமலோகத்தளவு மிழுக்கிறதற்கு முன்னே | |

வ்யா. தென்னவன்தமர். தெற்குத்திக்குக்குக் கடவனான யமனுடைய சேஷபூதர். செப்பமிலாதார். செவ்வையில்லாதார். கரணத்ரயமும் அடைவு கெட்டிருக்குமவர்கள். சேவதக்குவார் போலப்புகுந்து. எருதுகள் தங்கள்வசப் படுகைக்கு இவற்றின் செருக்கைக் குலைக்கும் நீசஜாதிகளைப்போலே புகுந்து து:கானுபவம் பண்ணுவிக்கை. பின்னும் வன் கயிற்றால் பிணித்தேற்றி. சேவதக்குவார் அதக்கும் ப்ரகாரம். து:கானுபவத்துக்குத் தங்கள் தர்சநமாத்ரமே யமைந்திருக்க, பின்னையும் யமபடர், பாசங்களாலே, ¶சூரியிலே வரிவாரைப்போலே வரிந்து. எற்றி. "நமன்றமர் செய்யும்வேதனை" என்கிறபடியே எற்றி. பின் முன்னாக இழுப்பதன்முன்னம். மூக்கும் முகமும் உதடும் பல்லும் தகரும்படி முகம் கீழ்ப்பட யமபுரத்தளவும் இழுப்பதற்கு முன்னே. இன்னவனினையானென்று சொல்லியெண்ணி. அவன் இன்னானென்று மதுக்கு ஏகாந்தமானகுணங்களையநுஸந்தித்து, நெஞ்சில் அஜ்ஞாநாந்தகாரம் போகப்பார்த்து. மன்னவன். தென்னவனுக்கும் மன்னவனானவன். மதுசூதனனென்பார். ஆச்ரிதவிரோதிகளைப் போக்குமவன் என்று சொல்லுமவர்கள். வானகத்து மன்றுடிகள்தாமே. பரமபதத்தில் நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஸ்ரீவைகுண்ட நாதனோடே மன்றாடுவாரிவர்களிறே. தாமே. வேறு ஸஹகாரிகளில்லை. ... ... எ.

அ. எட்டாம்பாட்டு. கூடியித்யாதி. இப்பாட்டால் - மூன்றெழுத்தை உச்சரிப்பார் ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி அவனுக்கு ஆதரணீயரென்கிறார்.

மூ.— கூடிக்கூடி யுற்றார்களிருந்து குற்றநிற்க நற்றங்கள் பறைந்து
பாடிப்பாடியோர் பாடையிலிட்டு நரிப்படைக்கொரு பாகுடம்போலே
கோடிமூடியெடுப்பதன்முன்னங் கௌத்துவமுடைக்கோவிந்தனோடு
கூடியாடிய வுள்ளத்தரானற் குறிப்பிடங்கடந் துய்யலுமாமே. அ.

---

¶ சூரி - சூரியகத்தி.

பதவுரை.

இவனுக்கு சரமகாலம்வந்தவாறே;
உற்றார்கள்— பந்துக்களெல்லாரும்
கூடிக்கூடி இருந்து— திரள்திரளாக இருந்து
குற்றம் நிற்க—இவன்பண்ணின பல ப்ராதிகூல்யம் கிடக்க
நற்றங்கள்– அநுகூலமாயுள்ளன சிலவற்றை
பறைந்து— சொல்லி
பாடிப்பாடி— ப்ரலாபித்து
ஓர்— ஒரு
பாடையில்— ஆசந்தியில்
இட்டு— இவனை இட்டு
நரி படைக்கு– நரிக்கூட்டத்துக்கு
ஒரு பாகுடம் போலே– ஒரு பாகுக்குடத்தைப் பச்சையாகக் கொடுப்பானைப்போலே
கோடி — கோடிப்புடைவையை இட்டு
மூடி— மூடி
எடுப்பதன் முன்னம்– (காட்டுக்குக்கொண்டு போவதாக) எடுப்பதற்கு முன்னே
கௌத்துவம்— ஸ்ரீகௌஸ்துபத்தை
உடை— தரித்திராநின்ற
கோவிந்தனோடு— ஸர்வஸுலபனான க்ர்ஷ்ணனோடே
கூடி— ஒரு நினைவாய்
ஆடிய– அவன் குணங்களில் அவகாஹித்த
உள்ளத்தர் ஆனால் — நெஞ்சையுடையவரானால்
குறிப்பு– அநுபவித்துப் போக்கக்கடவதான
இடம்— யமபுரத்தை
கடந்து— கடந்து [போகாமல்]
உய்யலும் ஆம்— உஜ்ஜீவிக்கவும்கூடும்.

வ்யா. கூடிக்கூடி யுற்றார்களிருந்து. இவனுக்கு சரமகாலம் வந்தவாறே, பந்துக்களெல்லாரும் திரண்டு திரள்திரளாக இருந்து. குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து. இவன் பண்ணின ப்ராதிகூல்யம் கிடக்க, அல்பாநுகூல்யங்களுள்ளவற்றைச் சொல்லாநிற்பர்கள். மஹாராஜர், வாலி பட்டவளவிலே, அவன் முன்புபண்ணின ப்ராதிகூல்யங்களை மறந்து, "நான் முற்பட அகப்பட்டபோதே என்னைக் கொல்லலாயிருக்கக் கொல்லாதே விட்டவனையிறே நான் கொல்லுவித்தேன்" என்று அழுதானிறே; அத்தைக்கண்டு, பெருமாளும் சோகித்தாரிறே. பெருமாள், ராவணன், ‡பூசல்தலையில் நிராயுதனாய் நின்றபடியைக்கண்டு கொல்லாதே "இன்றுபோய் நாளைவா" என்றாரிறே. க்ர்ஷ்ணன், கம்ஸனை நிரஸித்தவநந்தரம் அவன் ஸ்த்ரீகள் படுகிற க்லேசத்தைக்கண்டு, "நான் என்னகார்யம் செய்தேன்!" என்று வெறுத்தானிறே. இப்படி எல்லார்க்கும் க்ர்பை ஜநிக்கும்படியாயிறே அத்தசை யிருப்பது. பாடிப்பாடி. இவர்கள் ப்ரலாபிக்கும்போது, ஒரு ப்ரபந்தம் பாடினாற்போலேயாய்த் திருப்பது. ஓர் பாடையிலிட்டு. ஓர் ஆசந்தியிலே இவனை இட்டு. நரிப்படைக்கொரு பாகுடம்போலே. நரிப்படை- நரிக்கூட்டம். பாகுடம்- பாகுக்குடம். கோடிமூடியெடுப்பதன்முன்னம். கோடிப்புடைவையையிட்டு மூடியெடுத்தென்னுதல்; அன்றிக்கே, ஆசந்தியைக்கோடித்தென்னுதல்; இப்படி செய்வதற்கு முன்னே. கௌத்துவமுடைக் கோவிந்தனோடு. இவ்வாத்மவர்க்கத்தை தரித்தது நிரூபகமாக வுடையனுமாய் ஸர்வஸுலபனுமான க்ர்ஷ்ணனோடே. கூடியாடிய உள்ளத்தரானால். ஈச்வரனும் சேதநனும் ஒரு நினைவாய் அவன்குணங்களிலே அவகாஹித்த நெஞ்சை யுடையாரானால். குறிப்பிட்டங்கடந்துய்யலுமாமே. (க)"[Sanskrit quotation in Grantha script]" என்கிறபடியே அநுபவ விநாச்யமான தேசத்தைக்கடந்து. உய்யலுமாமே. "உயிரும் தரு

‡ பூசல் தலை - யுத்தரங்கம். (க) "அவச்ய மநுபோக்தவ்யம்."

மனையே நோக்கும்" என்கிற தேசத்தேறப் போகப்பெறுவர்களென்கிறார். "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்டசதிர்" என்னக்கடவதிறே. ... ... அ.

அ. ஒன்பதாம்பாட்டு. வாயித்யாதி. இப்பாட்டில் ஸர்வவித பந்துவாக அவனைப்பற்றினால், பின்னை யமவச்யதை இல்லையென்கிறார்.

மூ.—வாயொருபக்கம் வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக்கண்கள் மிழற்றத்
தாயொருபக்கந் தந்தையொருபக்கந் தாரமுமொருபக்க மலத்தத்
தீயொருபக்கஞ் சேர்வதன்முன்னஞ் செங்கண்மாலொடுஞ் சிக்கனச்சுற்ற
மாயொருபக்க நிற்கவல்லார்க் கரவதண்டத்தி லுய்யலுமாமே. கூ.

பதவுரை.

வாய்— வாயானது
ஒரு பக்கம் வாங்கி வலிப்ப— வாதவிகாரத்தாலே ஒருக்கடுத்து வலிக்கவும்
வார்ந்த— பெருகின
நீர்— நீரையுடைத்தாய்
குழி— உள்ளே இடிய இழிந்த
கண்கள்— கண்களானவை
மிழற்ற— அலமர்ந்து நிற்கவும்
ஒரு பக்கம்— ஒருபக்கத்திலே
தாய்— தாயாரும்
ஒருபக்கம்— மற்றொருபக்கத்திலே
தந்தை— தமப்பனும்
ஒருபக்கம்— இன்னொருபக்கத்திலே
தாரமும்— மனைவியும்
அலத்த— கதற
தீ— நெருப்பை
ஒருபக்கம்— ஒருபக்கத்தில்
சேர்வதன் முன்னம்— இடுவதற்கு முன்னே
செம்— சிவந்த
கண்— திருக்கண்களையுடையனான
மாலொடும் சிக்கன சுற்றம் ஆய்— ஸர்வேச்வரனை நிருபாதிகமான பந்துவாகக் கொண்டு
ஒருபக்கம்— ஸம்ஸாரிகளோடுள்ள உறவைக் கலசாதே எல்லாமவனேயாக
நிற்க வல்லார்க்கு— பற்றி நிற்கவல்லவர்கட்கு
அரவதண்டத்தில்— யமபடர்களுடைய க்ரூரமான தண்டனையில் நின்றும்
உய்யலும் ஆம்— உஜ்ஜீவித்துப் போகலாம்.

வ்யா. வாயொருபக்கம் வாங்கிவலிப்ப. வாதவிகாரத்தாலே வாயானது ஒருக்கடுத்து வலிக்க. வார்ந்த நீர்க்குழிக்கண்கள் மிழற்ற. "பந்துக்களை விட்டுப் போகிறேன்" என்று இவர்கள் பக்கல் ஸங்கத்தாலே அழுகிற வளவிலே, யமபடரைக்கண்டவாறே பயத்தின் கனத்தாலே கண் உள்ளே இடிய இழிந்து அலமாநிற்கும். தாயொருபக்க மித்யாதி. தன்னை உண்டாக்கினாரும், தானுண்டாக்கினவர்களும், ஓரோரருகே யிருந்து கதற. அநந்தரம், தீயொருபக்கம் சேர்வதன் முன்னம். ஸம்ஸ்கரிப்பதற்கு முன்னே. செங்கண்மாலொடும். நிருவாத்ஸல்யத்தையும் வ்யாமோஹத்தையு முடைய ஸர்வேச்வரனை. சிக்கனச்சுற்றமாய். நிருபாதிக ஸர்வவித பந்துவுமாகப் பற்ற வல்லாருமாய். ஒருபக்கம் நிற்கவல்லார்க்கு. ஸம்ஸாரிகளோடுள்ள உறவைக் கலசாதே அவனேயாகப் பற்றி நிற்கவல்லார்க்கு. அரவதண்டத்திலுய்யலுமாமே. யமபடரையும் அவர்கள் க்ரூரமான தண்டங்களையும் தப்பி உஜ்ஜீவித்துப் போகலாம். "மாதவனைப் பிறவைத்திருமாலை வணங்குவன்" என்றும் "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய்தந்தையுமவரே" என்றும் பற்றுவார்க்கு உஜ்ஜீவித்துப்போகலா மென்கிறார். ... ... ... கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழி அப்யஸித்தவர்கள், ஶ்ரியஃபதிபக்கலிலே பெரியாழ்வார்பெற்ற வரிசைகளைப் பெறுவரென்கிறார்.

மூ.—செத்துப்போவதோர் போதுநினைந்து செய்யுஞ்செய்கைக டேவபிரான்மேல்
பத்தராயிறந்தார் பெறும்பேற்றைப் பாழித்தோள் விட்டுசித்தன் புத்தூர்க்கோன்
சித்தநன்கொருங்கித் திருமாலைச்செய்தமாலை யிவைபத்தும் வல்லார்
சித்தநன்கொருங்கித் திருமான்மேற் சென்றசிந்தை பெறுவர்தாமே. ௰.

பதவுரை.

செத்துப்போவது ஓர் போது — இறந்து போம்போது
செய்யும் — யமபடர் செய்யும்
செய்கைகள் — செயல்களை
நினைந்து — நினைத்து
தேவபிரான் மேல் — *அயர்வறுமமரர்களதிபதி பக்கலிலே
பத்தர் ஆய் — பக்தியுக்தராய்
இறந்தார் — பின்பு இறந்தவர்கள்
பெறும் பேற்றை — பெறுகிறபேறுதன்னை
பாழி — ஸம்ஸாரத்தை வென்ற மிடுக்கையுடையனவான
தோள் — தோள்களையுடையராய்
புத்தூர் — ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
கோன் — நிர்வாஹகரான

விட்டுசித்தன் — பெரியாழ்வார்
சித்தம் — கரணத்ரயத்தையும்
நன்கு — நன்றாக
ஒருங்கி — ஒருபடிப்படுத்தி
திரு மாலை — ஶ்ரியஃபதி விஷயமாக
செய்த — அருளிச்செய்த
மாலை — சொல்மாலையான
இவை பத்தும் — இப்பத்துப் பாட்டையும்
வல்லார் — ஓதவல்லவர்கள்
(ஆழ்வாரைப் போலே,)
சித்தம் நன்கு ஒருங்கி—;
திரு மால் மேல் — ஶ்ரியஃபதி பக்கலிலே
சென்ற — குடிகொண்ட
சிந்தை — மநஸ்ஸை
பெறுவர் — உடையராவர்கள்.

வ்யா. செத்துப்போவதோர்போது- செய்யும் செய்கைகள் - நினைந்து. சரீராவஸாநஸமயத்தில் யமபடர் செய்யும் செயல்களை நினைத்து. தேவபிரான்மேல் பத்தராய். *அயர்வறுமமரர்களதிபதிபக்கலிலே ப்ரேமத்தைப்பண்ணி. இறந்தார் பெறும்பேற்றை. பக்தராய், பின்பு இறந்தார் பெறும்பேற்றை. பாழித்தோள் விட்டுசித்தன். ஸம்ஸாரத்தைவென்ற மிடுக்கையுடைய தோள்களையுடைய ஆழ்வார். புத்தூர்க்கோன். சமகாலத்திலே இவர்களைப்போலே பக்தியுண்டாகை யன்றிக்கே, ஸதா மநோரதம் பண்ணும் நித்யஸூரிகளைப்போலே யிருக்கிற ஆழ்வாரை ஸ்வாமியாகப்பற்றி யிருக்கும் ஸ்ரீவில்லிபுத்தூரையு முடையரானவர். சித்தம் நன்கித்யாதி. "ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி" என்கிறபடியே கரணத்ரயமும் புறம்புபோதல் கலந்திருத்தல் செய்யாதே ஶ்ரியஃபதிவிஷயமாகச் செய்த இப்பத்துப்பாட்டும் அப்யஸித்தவர்கள். சித்தம் நன்கொருங்கித்திருமால்மேல் சென்ற சிந்தை பெறுவர்தாமே. ஆழ்வாரைப்போலே கரணத்ரயமும் ஒரு படிப்பட உடையராய், ஶ்ரியஃபதிபக்கலிலே சென்ற மநஸ்ஸை யுடையராவர்கள். ... ... ... ... ... ...

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

அடிவரவு.—ஆசை சீ சோர்வு மேலெழு மடிவழி அங்கம் தென்னவன் கூடி வாயொரு செத்துக் காசும்.

ஆ திருமொழி ௩௪-க்கு, பாட்டு-௩௪௮.

——(௦)——

நான்காம்பத்து - ஆறுந்திருமொழி - காசுங்கரையுடை, ப்ரவேசம்.

அ. ஸ்வகாரியத்திலே, பகவத்விமுகராய்த் தம்மாலே திருத்தவொண்ணாதவர்களையும் விடமாட்டாத பரமக்ருபையாலே அவர்களைக் குறித்து ஹிதத்தை உபதேசிப்போமென்று பார்த்து, "மாநுடயோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலம்" என்கிறபடியே-ஸாமக்ரியிலே யாகிலும் பகவத்ஸமாச்ரயணத்தைப் பண்ணினல் தப்பாமல் உஜ்ஜீவிக்கலாம்படி யிருக்கையாலே, இந்தவாசியை அவர்களுக்கறிவித்தால், சேதநராகையாலே பகவத்ஸமாச்ரயணத்திலே யிழிவர்களென்று திருவுள்ளம்பற்றி, ப்ராக்ருதவிஷயங்களிலுண்டான ஆசையாலே அவைற்றின் பக்கலிலேசென்ற நெஞ்சையுடையராய் அவற்றின் பேரைச்சொல்லி, பின்னை அதுதானும்மாட்டாதே கலங்கி முடிந்து போங்காலத்திலே அவற்றின் பேர்களைச்சொல்லாமல் பகவந்நாமத்தைப் பேசுமவர்கள்பெறும் பேற்றின்கநம் நம்மால்சொல்லித் தலைக்கட்டப்போகாது என்று தொடங்கி, அந்திமதசையில்வரும் க்லேசபரம்பரைகளையும், அத்தசைவருவதற்குமுன்னே ஏதேனுமொருவழியாலேயாகிலும் பகவத்ஸமாச்ரயணத்தைப் பண்ணி சரீரத்தைவிட்டால் அதிக்ரூரமாக யமபடர்பண்ணும் தண்டங்களையும் தப்பி அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலேபோய் பகவதநுபவத்தைப்பண்ணி புநராவ்ருத்தியின்றிக்கே காலதத்த்வமுள்ளதனையும் நித்யஸூரிகள் திரளிலே கூடியிருந்து வாழலாம் என்னுமிடத்தை அவர்கள் நெஞ்சிலே படும்படியாகவூன்ற உபதேசித்தார்- கீழ்த்திருமொழியில்; இப்படி இதரவிஷய ஸங்கமற்று பகவத்ப்ரேமபூர்வகமாக அவன் திருநாமங்களைப் பேசுகைக்கு பரிபாகமில்லாதாரையும் ஒருவழியால் அவன் திருநாமத்திலே அந்வயிப்பித்து உஜ்ஜீவிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, த்ருஷ்டப்ரயோஜநங்களை நச்சி, பெற்ற பிள்ளைக்கு ப்ராக்ருதவிஷயங்களின்பேரை யிடுமவர்களைக்குறித்து, நீங்கள் இப்படி ப்ராக்ருதவிஷயங்களின்பேரிட்டால் இம்மையில் நீங்களாசைப்படுகிற க்ஷுத்ரப்ரயோஜநங்கள் தானும் ஸித்திப்பதொன்றில்லை; மறுமைக்குத்தானே யொன்றுக்குமுறுப்பன்று, ஆனபின்பு அத்தைவிட்டு பிள்ளைகளைப்புருஷ் தாகிலும்ஜீவித்துத் தன் திருநாமத்திலே அந்வயித்தாருடைய ஸகலக்லேசங்களையும் போக்கு மீச்வரனுடைய திருநாமத்தை, நீங்கள்பெற்றபிள்ளைக்கிட்டுவாயாரவாழ்த்தி ப்ரீதராயிருங்கோள்; இவ்வளவேபற்றாசாக அந்தப்பிள்ளையுடையமாதாவானவள் (க) "ஜநநீ க்ருதார்த்தா" என்கிறபடியே நரகத்திற் புகாமல்உஜ்ஜீவித்துப்போமென்று ஒருக்காற்போலே ஒன்பதின்கால் உபதேசித்து, பகவந்நாமங்களை யிடும்படியாக அவர்கள் நெஞ்சைத் தெளிவிக்கிறார் - இத் திருமொழியில். ... ... ... ... ... ... .

மூ.—காசுங்கரையுடைக் கூறைக்குமங்கோர் கற்றைக்கும்
ஆசையினு லங்கவத்தப் பேரிடுமாதர்காள்
கேசவன்பேரிட்டு நீங்கடேனித் திருமினோ
நாயகனுரணன் றம்மன்னை நரகம்புகாள். க.

பதவுரை.

| | |
|---|---|
| காசு (க்கு) ம்— காசுக்கும் [டைய | அங்கு— அங்கே |
| கரை உடை— தலைகளில் நல்லகரையையு | ஓர் கற்றைக்கும்—ஒரு நெல் கற்றைக்கும் |
| கூறைக்கும்— புடைவைக்கும் | ஆசையினால்— ஆசையாலே |

(க) "ஜநநீ க்ருதார்த்தா"

| | |
|---|---|
| அங்கு— அவர்களுடைய | பேர்— திருநாமங்களை |
| அவத்தம்— மிகத் தண்ணிதான | இட்டு— உங்கள் பிள்ளைகளுக்கு இட்டு |
| பேர்— பெயர்களை | நீங்கள்— நீங்கள் [ ராயிருங்கோள்; |
| இடும்— உங்கள் பிள்ளைக்கு இடுகிற | தேனித்து இருமின்— ஸந்துஷ்ட சித்த |
| ஆதர்காள் – அறிவுகேடர்களே! | தம் ‡ அன்னை— அந்தப் பிள்ளையின் தாய் |
| கேசவன்— ஆச்ரிதது:க்கநிவர்த்தகனும் | நரகம் புகாள்— நரகத்தை அடையமாட்டாள். |
| நாயகன்— ஸர்வசேஷியான | ‡ மாதாவைச் சொன்னது – பிதாவுக்கு |
| நாரணன்— நாராயணனுடைய | முபலக்ஷணம். |

வ்யா. முதற்பாட்டு. காசித்யாதி. பிறர்பேரிடுகிறது - அவர்களுக்கு உத்தேச்யராய், ஸ்வயம்ப்ரயோஜநமாகவன்றே; அத்ருஷ்டப்ரயோஜநத்துக்காகவுமன்றே; த்ருஷ்டப்ரயோஜநங்களில் சிலவற்றை நச்சியிறே. ஆகையால், நாலிரண்டு காசுகிடைக்கும் என்றும், தலைகளில் கரையையுடைத்தாயிருப்பதொரு சீரைகிடைக்குமென்றும், அங்கே ஒருகட்டுக்கற்றை கிடைக்குமென்றுமுண்டான வாசையாலே. உங்களுடைய ஆசையொழிய அதுதான் ஸித்திக்கினுமாம், ஸித்தியாதொழியினுமாம் என்னும்படியிறே அவர்கள் லுப்ததையாயிருக்கும்படி. அங்கவத்தப்பேரிடும் ஆதர்காள். ப்ராக்ருதரான இவர்கள்பக்கலுண்டான ஹேயமான நாமங்களையிடும் அறிவுகேடர்காள். "அங்கு" என்று இவர்கள் உபகாரமாக நினைத்திருக்கும் விஷயங்களினுடைய க்ஷுத்ரதையைச் சொல்லுகிறது. அவர்கள் க்ஷுத்ரராலும் நாமந்தான் நன்றாயிருக்கையன்றிக்கே, அதுவும் தீயதாயிருக்குமென்னுமிடம் சொல்லுகிறது – "அவத்தப்பேர்" என்று. ஆதர் – குருடரும், அறிவிலோரும். கேசவன்பேரிட்டு. (க) "கஇதி ப்ரஹ்மணோ நாம ஈசோஹம் ஸர்வதேஹிநாம் । ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்" என்கிறபடியே - ஸர்வகாரணபூதனாய், (உ) "கேசவ: க்லேசநாசந:" என்கிறபடியே - க்லேசநாசனுமாயிருக்கிறவனுடைய திருநாமத்தையிட்டு "கேசவா" என்றழைத்து. நீங்கள்தேனித்திருமினோ. நீங்கள் அந்தப் பிள்ளையளவிலே ஸ்நேஹித்து ஸந்தோஷத்தோடே யிருங்கள். தேனித்திருக்கையாவது – இனியராயிருக்கை. நாயகன் நாரணன். "நாயகன்" என்றது - ஸர்வசேஷி யென்றபடி. "நாரணன்" என்றது - ஸமஸ்த கல்யாணகுணாத்மக னென்றபடி. இத்தால் - ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்கீடான ப்ராப்தியையும் குணயோகத்தையு முடையவனென்கை. தம்மன்னை. தாயாரானவள். $"தமப்பன்" என்னுமாபோலே, "தம்மன்னை" என்கிறது. நரகம்புகாள். பிள்ளைக்கு "நாராயணன்" என்றுபேரானால் அவனைப் பெற்றவளுக்கு எங்ஙனே யமவச்யதை கூடுவது. பிள்ளைபெற்று "நாராயணன்" என்று பேரிட்டது யமவச்யதை கூடுகைக்கோ. பெற்ற வருத்தமும் பிள்ளையளவில் ஸ்நேஹம் மிக்கிருப்பதும் மாதாவுக்காகையாலே - இவளை ப்ரதானையாகச் சொல்லுகிறது. இப்படி பேரிட்டழைத்த பிள்ளையளவிலே ஸ்நேஹித்துப் போரும் பித்ராதிகளுக்கும் இப்பேறு ஒக்குமிறே. ... ... க.

மூ.—அங்கோரு கூறை யரைக்குடுப்பதனுசையால்
மங்கியமானிடசாதிப் பேரிமோதர்காள்

(க) "க இதி ப்ரஹ்மணோநாம ஈசோஹம் ஸர்வதேஹிநாம் - ஆவாம்தவாங்கேஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்." (உ) "கேசவ: க்லேசநாசந:." $ 'தம் அப்பன்' என்று பிரிப்பதில் திருவுள்ளம்.

செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால்

நங்கைகா ணாரணன்றம்மன்னை நரகம்புகாள். ௨.

பதவுரை.

அங்கு — செல்வர்களிடத்து
ஒரு கூறை — ஒரு புடைவையைப் பெற்று
அரைக்கு உடுப்பதன் ஆசையால் — அரைக்கு உடுக்கவேணுமென்னு மாசையாலே
மங்கிய — அழிந்துகிடக்கிற
மானிடசாதி — மநுஷ்யஜாதியுடைய
பேர் இடும் — பேரை இடுகிற
ஆதர்காள் — குருடர்காள்!
நங்கைகாள் — சொல்லிற்றை அறியவல்ல பூர்த்தியையுடையவர்களே!

செம் — சிவந்திருக்கின்ற
கண் — திருக்கண்களையும்
நெடுமால் என்று — மிக்கவ்யாமோஹத்தையு முடையவனே! என்றும்
சிரீதரா என்று — ஸ்ரீதரனே! என்றும் (பேரிட்டு)
அழைத்தக்கால் — அழைத்தால்
நாரணன் — நாராயணனென்னும் பேரையுடைய அந்தப் பிள்ளையின்
தம் அன்னை நரகம்புகாள்.

வ்யா. இரண்டாம்பாட்டு. அங்கோருகூறை யரைக்குடுப்பத னாசையால். அங்கே பெற்று ஒருபுடைவை அரைக்கு உடுக்கவேணுமென்னும் ஆசையாலே. இவ்விடத்திலும் "அங்கு" என்று உபகாரவிஷயத்திலுடைய க்ஷுத்ரதையைச் சொல்லுகிறது. "ஒரு கூறை" என்றும், "அரைக்குடுப்பது" என்றும் சொல்லுகையாலே, உடுக்கும் மேலைக்கு இன்னஞ்சிலரை வேறே தேடவேணுமென்கை. "ஆசையால்" என்கையாலே - அதுதானும் உங்களாசையேயுள்ளது, கிடைக்கிலுமாம், கிடையாதொழியிலுமாமென்கை. மங்கியமானிடசாதிப்பேரிடு மாதர்காள். "அஸந்நேவ" என்கிறபடியே அழிந்துகிடக்கிற மநுஷ்யஜாதியுடைய பேரையிடாநிற்கும் அறிவுகேடர்காள். "ஆன்விடையேழன்றடர்த்தாற் காளானா ரல்லாதார் மானிடவரல்லர்" என்னும்படியானவர்கள் பேரையிறே யிடுகிறது. த்ருஷ்டத்துக்கும் அத்ருஷ்டத்துக்கும் உறுப்பன்றிக்கே யிருக்கிறவர்கள்பேரை யிடுகிறது உங்களறிகேடிறே. செங்கண் நெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால். வகுத்த சேஷியானவனுடைய திருநாமத்தையிட்டு, 'செங்கணெடுமாலே!' 'சிரீதரனே!'யென்று அழைத்தால். "செங்கணெடுமால்" என்றது - வாத்ஸல்யப்ரகாசகமான திருக்கண்களையும், ஆச்ரிதவிஷயத்தில் மிக்க வ்யாமோஹத்தையு முடையவனென்கை. அன்றிக்கே, "மால்" என்றது - பெரியோனென்றபடியாய், *நெடுமைபால்-ஸர்வாதிகத்வம் சொல்லுகிறதாகவுமாம். அப்போதைக்கு, "செங்கண்" என்றது - ஐச்வர்யஸூசகம். "சிரீதரா" என்றது - மேற்சொன்ன இரண்டு யோஜனைக்கும் பொது. நீர்மைக்கும் மேன்மைக்கு முடலாயிறே லக்ஷ்மீஸம்பந்தந் தானிருப்பது. நங்கைகாள். சொன்னவை யறியத்தக்க பூர்த்தியை யுடையவர்களே. நாரணன்றம்மன்னை நரகம்புகாள். பூர்வவத். ... ... ... ... ... ... ௨

மு.—உச்சியிலெண்ணெயுஞ் சுட்டியும் வளையுமுகந்து

எச்சம் பொலிந்தீர்கா ளென்செய்வான் பிறர்பேரிட்டீர்

பிச்சைபுக்காகிலு மெம்பிரான் றிருநாமமே

நச்சுமின்னாரணன் றம்மன்னை நரகம்புகாள். ௩.

பதவுரை.

எச்சம் பொலிந்தீர்காள்— பிள்ளை பெற்று அபிவர்த்தரானவர்களே!
[ எச்சம் - ஸந்தாநம் ]
உச்சியில்— உச்சியிலே தடவத்தக்க
எண்ணெயும்— எண்ணெயையும்
சுட்டியும்— நெற்றிச் சுட்டியையும்
வளையும்— வளையையும்
உகந்து— விரும்பி
என் செய்வான்— எதுக்காக
பிறர்— எம்பெருமானை யொழிந்தவர்களுடைய
பேர் இட்டீர்— பேரை இட்டீர்? [ஐய
பிச்சை புக்கு ஆகிலும்—பிக்ஷை பண்ணி ஜீவித்தாகிலும்
எம்பிரான்— எம்பெருமானுடைய
திருநாமமே— திருநாமத்தையே (சாத்தி)
நச்சுமின்— விரும்பி அழையுங்கள்;
( இப்படி அழைத்தால், )
நம் அன்னை நரகம் புகாள்.

வ்யா. மூன்றாம்பாட்டு. உச்சியிலெண்ணெயும் சுட்டியும்வளையும். பிள்ளைக்கு உச்சியிலே தடவத்தக்க எண்ணெயையும், நெற்றியிலே அலங்காரமாகத்‡ தூங்கும்படி கட்டத்தக்க சுட்டியையும், கைக்கு அலங்காரமாக இடத்தக்க வளையையும். இத்தால்-பிள்ளை தலைகாயாமல் † தப்புகைக்கு எண்ணெய் பெறலாம், பிள்ளைப் பணிகளானவை பெற்றுப் பூட்டலாமென்றாய்த்து-பிறர்பேரிடுகையிலிழிகிறது. உகந்து. இவற்றை யாசைப்பட்டு. இவைகளாசையேயொழிய இதுதானும் கிடையாதபடியிறே எதிர்த்தலையில் அப்தத்தை பார்த்தாலிருப்பது. எச்சம்பொலிந்தீர்காள். பிள்ளைபெற்று அபிவர்த்தரானவர்களே!. எச்சம் - ஸந்தாநம். என்செய்வான் பிறர்பேரிட்டீர். இந்தப் பிள்ளையை முழுக்க ரக்ஷித்துத் தலைக்கட்ட வல்லரென்றோ; உங்கள் ||மிடி தீர்க்க வல்லரென்றோ; அத்ருஷ்டத்துக்குத்தான் உறுப்பாவரென்றோ; எதுக்காகப் பிறர்பேரிட்டீர். பிச்சைபுக்காகிலும். நாடு பரப்புண்டே, அதிலே பிக்ஷையைப் புகுந்து ஜீவித்தாகிலும். எம்பிரான்றிருநாமமே நச்சுமின். எனக்கு ஸ்வாமியானவனுடைய திருநாமத்தையே விருப்பத்தோடே சாத்தியழையுங்கோள். “ஒரு ப்ராஹ்மணன், தன்பிள்ளையைப் பேரிடுகிற ஸமயத்திலே, ‘ஐச்வர்யம் தரவல்லானொருவன் பேரிடவேணும்’ என்ன; ‘வைச்ரவணன் பேரையிடு’ என்றவளவிலே, ‘ஐனிபிளி’ என்று இட்டு அழைத்து ஜீவிப்பதில் ‘நாராயணன்’ என்கிற திருநாமத்தைச் சாத்தி, பிக்ஷைபுக்கு ஜீவிக்கவமையுமென்றான்” என்று ஆச்சான்பிள்ளை யருளிச்செய்ததாகப் ¶பிள்ளையருளிச்செய்வர். இத்தால் - பிக்ஷையைப் புகுந்தாகிலும் என்னுடைய நாதனானவனுடைய திருநாமத்தையே நான் சொன்னபடியே உங்கள் பிள்ளைக்கு விரும்பியிடுங்கோள்; பிக்ஷைபுகவேண்டாதபடி அத்ருஷ்டமும் அவன் ப்ரஸாதத்தாலே தன்னடையே ஸித்திக்குமென்று கருத்து. நாரணன் தம்மன்னை நரகம்புகாள்.. ஆகையாலே அத்ருஷ்டத்தில் தானே குறையில்லையென்கை. *.

மூ.—மானிடசாதியிற் றோன்றிற்றோர் மானிடசாதியை
மானிடசாதியின்பேரிட்டால் மறுமைக்கில்லை
வானுடைமாதவா கோவிந்தா வென்றழைத்தக்கால்
நானுடைநாரணன்றம்மன்னை நரகம்புகாள். சு.

‡ தூங்கும்படி - தொங்கும்படி. † தப்புகை - தடவுகை. || மிடி - வறுமை.
¶ பிள்ளை - திருவாய்மொழிப்பிள்ளை.

பதவுரை.

| | |
|---|---|
| மானிடசாதியில்— மநுஷ்யஜாதியில் | நானுடை— என்னுடைய |
| தோன்றிற்று— தோன்றின | நாரணன்— நாராயணன் பேரை இட்டு |
| ஓர்— ஒரு | வான் உடை— பரமபதத்தைக் கலவிருக்கையாகவுடைய |
| மானிடசாதியை— மநுஷ்யஜந்துவை | மாதவா— ஸ்ரீமானே! |
| மானிடசாதியின் — கர்மபலமநுபவிக்கப் பிறந்த மநுஷ்யஜாதியின் | கோவிந்தா— கோவிந்தனே! |
| பேர் இட்டால்— பெயரை இட்டால் | என்று— என்றிப்படி சொல்லி |
| மறுமைக்கு— மோக்ஷத்துக்கு | அழைத்தக்கால்— அழைத்தால் |
| இல்லை— உடலாகாது | தம் அன்னை நரகம்புகாள். |

வ்யா. நான்காம்பாட்டு. மானிடசாதியில் தோன்றிற்றோர் மானிடசாதியை. மநுஷ்யஜாதியில் உத்பந்நமானதொரு மநுஷ்ய ஜந்துவை. ஆத்மா கர்மாநுகுணமாக தேவாதியோநிகள்தோறும் பிறக்கக்கடவனுகையாலே, புண்யபாபங்களிரண்டையும் அநுபவிக்கைக்கும் ஆர்ஜிக்கைக்கு முறுப்பாகவாய்த்து மநுஷ்யயோநியிலே பிறந்தது. ஆகையால் இப்படியிருக்கிற மநுஷ்யஜாதியிலே உத்பந்நமானதொரு ஜந்துவை. மானிடசாதியின் பேரிட்டால் மறுமைக்கில்லை. தர்ஷ்ட ப்ரயோஜநத்தைநச்சி, கர்மவச்யமான மநுஷ்யஜாதியிலே ஒன்றின் பேரிட்டால் ஐஹிகத்தில் சில ப்ரயோஜநம் ஸித்திக்கிலும் மறுமைக்கு ஒருப்ரயோஜநமில்லை. மறுமையாவது - அத்ர்ஷ்டம். வானுடையித்யாதி. தன்னோடு ஸம்பந்தித்தாரை உத்தரிப்பிக்கும் ஸர்வேச்வரனுடைய திருநாமத்தையிட்டு, 'நித்ய விபூதியையுடைய ஸ்ரீமானே!, லீலாவிபூதியைவிரும்பி ரக்ஷிக்கிற கோவிந்தா!' என்று அழைத்தால். நானுடை நாரணன். என்னுடைய நாராயணன். "மானிடசாதி" என்று எடுத்தவதுக்கு நாலாமடியாகையாலே "என்னுடை" என்கிற ஸ்தாநத்திலே,‡ "நானுடை" என்கிறது; "ஊனுடைச் சுவர் வைத்து" என்கிறபாட்டிலே, "நானுடை" என்னுமாபோலே. பகவந்நாமமிட்ட பிள்ளையைச் சொல்லுகிறதாயிருக்கச்செய்தே, "நாயகன் நாரணன்" என்றும் "நானுடை நாரணன்" என்று மருளிச்செய்கிறது, பகவத்விஷயத்தில் தமக்குண்டான ப்ரேமாதிசயத்தாலே. தம்மன்னை நரகம்புகாள். ... ... ... ... ... ... ௪.

மூ.—மலமுடையூத்தையிற் றோன்றிற்றோர் மலவூத்தையை
மலமுடையூத்தையின் பேரிட்டான் மறுமைக்கில்லை
குலமுடைக்கோவிந்தா கோவிந்தாவென்றழைத்தக்கால்
நலமுடைநாரணன்றம்மன்னை நரகம்புகாள். ௫.

பதவுரை.

| | |
|---|---|
| மலம் உடை— மலத்தையுடைத்தாய் | மலம் ஊத்தையை— தானும் அப்படியான சரீரத்தோடே கூடியிருக்கிற ஜந்துவுக்கு |
| ஊத்தையில்— ஹேயமான சரீரத்திலே | மலம் உடை— (கீழ்ச்சொன்னபடியே) மலத்தையுடைத்தாய் |
| தோன்றிற்று ஓர்— தோன்றினதொரு | |

‡ எதுகைக்குச் சேரவேணுமென்று கருத்து.

ஊத்தையின்— ஹேயமான சரீரத்தையு டைத்தாயிருப்பதொரு ஜந்துவின்
பேர்— பேரை
இட்டால்— இட்டால்
மறுமைக்கு— அதர்ஷ்டத்துக்கு
இல்லை— ஒருப்ரயோஜந முண்டாகாது,
குலம் உடை — எல்லா உயர்த்தியையு முடைய
'கோவிந்தா! கோவிந்தா!!' என்று அழைத்தக்கால்—;
நலம் உடை நாரணன் தம் அன்னை நரகம்புகாள்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. மலமுடையூத்தையில் தோன்றிற்றோர்மல வூத்தையை. (க) "மாம்ஸாஸ்ருக்பூய விண்மூத்ர ஸ்நாயுமஜ்ஜாஸ்தி ஸம்ஹதௌ । தேஹே" என்கிறபடியே மாம்ஸாஸ்ருகாதி மலயுக்தமாய் ஹேயமாயிருக்கிற சரீரத்திலே தோன்றினதொன்றாய், தானும் அப்படியான சரீரத்தோடே கூடியிருக்கிற ஜந்துவை. காரணாநுகுணமாயிறே கார்யமிருப்பது. உத்பாதகரான மாதாபிதாக்களுடைய சுக்ல சோணிதங்களாலே பரிணதமான தாகையாலே, உத்பந்நமான ஜந்துவினுடைய சரீரமும தத்ஸ்வரூபமாயிருக்குமிறே; அத்தைத் திருவுள்ளம்பற்றியாய்த்து இப்படியருளிச்செய்தது. மலமுடையூத்தையின் பேரிட்டால் மறுமைக்கில்லை. கீழ்ச்சொன்னபடியே மலத்தையுடைத்தாய் ஹேயமாயிருந்துள்ள சரீரத்தைப் பரிக்ரஹித்துக்கொண்டிருக்கிறதொரு கர்மவச்ய ஜந்துவின் பேரிட்டால், இம்மையில் சில ப்ரயோஜநங்களுண்டாய்த்ததாகிலும், மறுமையாகிற அதர்ஷ்டத்துக்கு ஒரு ப்ரயோஜநமில்லை. குலமுடையித்யாதி. ஹேயப்ரதிபடனானவனுடைய திருநாமத்தையிட்டு, கோபகுலத்திலேபிறந்து கோவிந்தாபிஷேகம் செய்த கோவிந்தா! கோவிந்தா!! என்றழைத்தக்கால். நலமுடை நாரணன். திருநாமம் சொன்னாரை உத்தரிப்பிக்கும் நன்மையுடையனான நாரணன். அன்றிக்கே, இப்படி கோவிந்தா கோவிந்தாவென்றழைக்கும் ஸ்நேஹத்தையுடைய திருவுடையளான - நாரணன்தம்மனை என்று மேலே கூட்டவுமாம். ... ... ... ரு.

மூ.—நாடுநகருமறிய நாட்டுமானிடப் பேரிட்டுக்
கூடியழுங்கிக் குழியில் வீழ்ந்து வழுக்காதே
சாடிறப்பாய்ந்த தலைவா தாமோதராவென்று
நாடுமினாரணன் றம்மன்னை நரகம்புகாள். ௬.

பதவுரை.

நாடும்— அவிசேஷஜ்ஞரும்
நகரும்— விசேஷஜ்ஞரும்
அறிய— 'இவன் உயர்ந்தவன்' என்று அறியும்படி
நாடு மானிடர் பேர் இட்டு— க்ஷுத்ரமநுஷ்யர்கள் பெயரை இட்டு
கூடி— அவர்களோடே கூடி
அழுங்கி— அவர்கள் பக்கல் கால்தாழ்ந்து
குழியில் வீழ்ந்து — அவர்கள் விழுந்த குழியிலே விழுந்து
வழுக்காதே— தவறிப்போகாமல்
சாடு— 'சகடாஸுரன்
இற— முறியும்படி
பாய்ந்த தலைவா என்று—பாய்ந்த பெருமேன்மையை உடையவனே!' என்றும்

(க) "மாம்ஸாஸ்ருக்பூய விண்மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்தி ஸம்ஹதௌ - தேஹே"

| | |
|---|---|
| தாமோதரா என்று— 'தாமோதரனே!' என்றும் | (இங்ஙன் செய்தால்,) |
| நாடுமின்— வாழ்த்திக்கொண்டு திரியுங்கள்; | நாரணன்தம் அன்னை நரகம்புகாள். |

வ்யா. ஆறாம்பாட்டு. நாடித்யாதி. நாட்டிலுள்ளாரோடு நகரத்திலுள்ளாரோடு வாசியற எல்லாரும் "இவன் அஸாதாரணன்" என்று அறியும்படி க்ஷாத்ரமநுஷ்யர்பேரை யிட்டு, அவர்களோடேகூடி அவர்கள் பக்கலிலே கால்தாழ்ந்து அவர்கள் விழுந்த குழியிலே விழுந்து தவற வர்த்தியாதே. சாடிறவித்யாதி. ஸர்வேச்வரனுடைய திருநாமத்தையிட்டு, சகடாஸுரனைமுறியப் பாய்ந்த தலைவனே! தாமோதரனே! என்று வாயாரவாழ்த்திக்கொண்டு திரியுங்கோள். நாரணன்தம்மன்னை. நாராயணனென வவனுடைய மாதாவானவள் நரகம் புகாள். ... ... ... ... ... ... ... ... ... ... சா

மூ.—மண்ணிற்பிறந்து மண்ணாகுமானிடப்பேரிட்டங்
கெண்ணமொன்றின்றி யிருக்குமேழை மனிசர்காள்
கண்ணுக்கினிய கருமுகில்வண்ணனாமமே
நண்ணுமி னாரணன்றம்மன்னை நரகம்புகாள். எ.

பதவுரை.

| | |
|---|---|
| மண்ணில் பிறந்து— மண்ணில்நின்றுமுண்டாய் | மனிசர்காள்— மநுஷ்யர்களே! |
| மண் ஆகும்— மண்ணாய்விடுகிற | கண்ணுக்கு— கண்ணுக்கு |
| மானிடர் பேர் இட்டு— மநுஷ்யருடையபெயரை இட்டுக்கொண்டு | இனிய— இனிதாயிருந்துள்ள |
| அங்கு— அதர்ஷ்டபலத்திலே | கரு— கறுத்த |
| எண்ணம் ஒன்று இன்றி இருக்கும்— ஒரு விசாரமற்றிருக்கிற | முகில்— மேகம்போன்ற |
| ஏழை— அறிவிலிகளான | வண்ணன்— வடிவையுடையவனுடைய |
| | நாமம்— திருநாமத்தை |
| | நண்ணுமின்— நண்ணுங்கோள் |
| | நாரணன் தம் அன்னை நரகம்புகாள்—. |

வ்யா. ஏழாம்பாட்டு. மண்ணிற்பிறந்து. "மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம் புண்ணாராக்கை" என்கிறபடியே தேஹாபாதாநம் பூதபஞ்சகமேயாகிலும்ப்ராசுரமாயுள்ளது ப்ருதிவித்ரவ்யமாகையாலே அதில் நின்றும் தேஹத்துக்கு உத்பத்தியாக அருளிச்செய்கிறார். மண்ணாகும். தேஹந்தான் உருக்குலைந்தால், கார்யத்துக்குக்காரணத்திலே லயமாகையாலே, மீளவும் மண்ணாய்ப்போகக் கடவதிறே; அத்தைப்பற்ற அருளிச்செய்கிறார். மானிடப்பேரிட்டு. ஆக இப்படி மண்ணிலே பிறந்து மண்ணாய்ப்போகாநிற்கும் க்ஷாத்ரமநுஷ்யருடைய பேரையிட்டு. இத்தால் அவர்கள் பரிக்ரஹித்திருக்கிற சரீரத்தினுடையபொல்லாங்கையும் அஸ்த்திரதையையும் க்ஷாத்ரதையையும் சொல்லி, இப்படியிருக்கிறவர்கள் பேரையிடுவதே! என்கிறார். அங்கெண்ணமொன்றின்றி யிருக்குமேழைமனிசர்காள். அவ்விஷயத்திலே ஒரு விசாரமற்றிருக்கிற அறிவிலி மநுஷ்யர்காள். அதாவது - முன்பு அப்படிசெய்தால், பின்பு தத்விஷயமாக ஒரு விசாரமுண்டாய் "என்னகார்யம் செய்தோம்" என்று அநுதபிக்கலாமிறே. அதின்றிக்கே நிர்ப்பரராயிருக்கிறது உங்களறிவுகேடிறே யென்கை. கண்ணுக்கித்யாதி. வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டிருக்கும்படி தர்ஷ்டிப்ரியமான

காளமேகம்போன்ற வடிவையுடையனு யிருக்கிறவனுடைய திருநாமத்தை நண்ணுங்கோள். அதாவது - அவன் திருநாமத்தை உங்கள் பிள்ளைக்கு இட்டு அழையாநின்று கொண்டு, அத் திருநாமத்தில் செறிவுடையராய்ப்போருங்கோளென்கை. அந்தநாரணன் தம்மன்னை நரகம் புகாள். ... ... ... ... ... ... ... ... ... ...ள்.

அ. எட்டாம்பாட்டு. நம்பியித்யாதி. லோகத்தில் இன்னநம்பி இன்னநம்பிஎன்று ஒரு க்ராமத்துக்கும் ஜநபதத்துக்கும் ப்ரதாநராய் ப்ரஸித்தராயிருக்குமவர்களுடைய நாமங்களை, த்ர்ஷ்டப்ரயோஜநங்களை நச்சி, பிள்ளைகளுக்கு இட்டுத்திரியு மவர்களைப்பார்த் தருளிச் செய்கிறார்.

மூ.—நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால்
நம்பும்பிம்புமெல்லா நாலுநாளி லழுங்கிப்போம்
செம்பெருந்தாமரைக்கண்ணன் பேரிட்டழைத்தக்கால்
நம்பிகாணாரணன்றம்மன்னை நரகம்புகாள். அ.

பதவுரை.

நம்பி பிம்பி என்று — 'நம்பி' என்றும் 'பிம்பி' என்றும்
நாடு— நாட்டிலுண்டான
மானிடர்— மநுஷ்யருடைய
பேர் இட்டால்— பெயரை இட்டால்
நம்பும் பிம்பும் எல்லாம்— 'நம்பி' 'பிம்பி' என்கிற பேருக்கடியான முதன்மையெல்லாம்
நாலு நாளில்— நாலுபோதில்
அழுங்கி போம்— நசித்துப்போம்;
நம்பிகாள்— பூர்ணர்களே!,
செம்— சிவந்து
பெரு— பெருத்த
தாமரை— தாமரை மலர்போன்ற
கண்ணன்— திருக்கண்களையுடையவனுடைய
பேர் இட்டு — திருநாமத்தை இட்டு
அழைத்தக்கால்— அழைத்தால்
நாரணன் இத்யாதி.

வ்யா. நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால். பிம்பிக்கு ஒரு பொருளுண்டாகிலாய்த்து- நீங்கள் சொல்லுகிற நம்பிக்கும் ஒருபொருளுண்டாவது ! என்று க்ஷேபித்து, நம்பிக்கு எதிர்த்தட்டாக ஒருபிம்பியையருளிச்செய்கிறார். இப்படி சிலநாட்டிலுண்டானக்ஷுத்ரமநுஷ்யருடைய பேரையிட்டால். நம்பும் பிம்புமெல்லாம் நாலுநாளிலழுங்கிப்போம். 'நம்பி, பிம்பி' என்கிற பேருக்கடியான முதன்மையெல்லாம் நாலுபோதில் நசித்துப்போம். அதாவது கர்மநிபந்தநமாக வந்ததாகையாலே, " வாழ்ந்தார்கள் வாழ்ந்தேநிற்ப சென்பதில்லை " என்கிறபடியே அழிந்துபோம். பின்னை யார்பக்கலிலே நாங்கள் ஜீவநம் பெற்று ஜீவிப்பதென்ன; செம்பெருமித்யாதி. சிவந்து பெருத்த தாமரைபோலே யிருக்கிற திருக்கண்களையுடையவனுடைய திருநாமத்தை யிட்டு அழைத்தக்கால். அதாவது திருநாமம் சொன்னவர்களுக்கு ஸகலஸம்பத்துக்களு முண்டாம்படி கடாக்ஷிக்கும் திருக்கண்களையுடையவன் திருநாமத்தை உங்கள் பிள்ளைக்கிட்டு ஆதரம் தோற்ற அழைத்தக்காலென்கை. நம்பிகாள்.* அறிவினல் குறைவில்லாத பூர்ணர்காள். நாரணன் தம்மன்னை நரகம்புகாள். ... அ.

மூ.—உத்தைக்குழியி லமுதம்பாய்வது போலுங்கள்
மூத்திரப்பிள்ளையை யென்முகில்வண்ணன் பேரிட்டுக்

கோத்துக் குழைத்துக் குணலமாடித் திரிமினே
நாத்தகுநாரணன் றம்மனே நரகம்புகாள். ௯.

பதவுரை.

ஊத்தை குழியில்— அசுத்தமான குழியில்
அமுதம்— அம்ர்தமானது
பாய்வதுபோல்— பாய்ந்தாற்போலே
உங்கள்— உங்களுடைய
மூத்திரம் பிள்ளையை — சுக்லசோணித பரிணமரூபனை பிள்ளைக்கு
என்— எனக்குக்கீழ்ப்படிந்தவனாய்
முகில்— மேகம்போன்ற
வண்ணன்— திருநிறத்தையுடையவனுடைய
பேர் இட்டு— பேரையிட்டு
கோத்து— ஸர்வேச்வரனோடொரு கோவையாகக்கூடி
குழைத்து — கலந்து
குணலம் ஆடி திரிமின்— களித்துத் திரியுங்கோள்;
பிள்ளைக்குத் திருநாமத்தை இட்டு, அத்தைப்பலகாலும் சொல்லுகை,
நா— உங்கள் நாவுக்கு
தகும்— தகுந்திருக்கும்.
நாரணனித்யாதி.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. ஊத்தைக்குழியில் அமுதம் பாய்வதுபோல். அசுத்தமாய் போக்யர்க்கு ஸ்பர்சிக்கைக்கு அர்ஹமல்லாதபடி யிருக்கும் ஊத்தைக்குழியிலே, பரிசுத்தமாய் போக்யர்க்கு போக்யமாயிருக்கும் அம்ர்தமானது பாய்ந்தாற்போலே. உங்கள் மூத்திரப் பிள்ளையை. உங்களுடைய சுக்லசோணித பரிணமரூபனை பிள்ளையை. என்முகில்வண்ணன் பேரிட்டு. எனக்கு பவ்யனாய் காளமேக நிபச்யாமமான வடிவையுடையனானவனுடைய விலக்ஷணபோக்யமான திருநாமத்தையிட்டு. இத்தால் அத்திருநாமமிடுகிற விஷயத்தினுடைய வைபவமருளிச்செய்தாராய்த்து. ஊத்தைக்குழியிலே அம்ர்தம் பாய்ந்தால், தானும் அசுத்தமாய் போக்யர்க்கு போக்யமாகாதபடியாய்ப்போம்; இங்கு அத்திருநாமம் §ஸ்பர்சவேதி யாகையாலே, தனக்கு ஒரு ஸ்பர்சதோஷமின்றிக்கே, தான் புக்கவிடத்தைப் பரிசுத்தமாக்கி, விலக்ஷணபரிக்ராஹ்யமாம்படி பண்ணும். இதில், த்ர்ஷ்டாந்தமான அம்ர்தத்திற்காட்டில் தார்ஷ்டாந்திகமான திருநாமத்துக்குள்ள வாசி. கோத்துக் குழைத்துக்குணலமாடித்திரிமினே. ஸர்வேச்வரனோடே ஒரு கோவையாகக் கூடிக் குணலையிட்டுத் திரியுங்கோள். அதாவது பிள்ளைபெற்றுத் திருநாமமிட்டபோதே நீங்கள் பகவத்பரிக்ரஹமாய்விடுகையாலே, அந்த ஸம்பந்த மடியாக அவனோடே கூடிக்கலந்து களித்துத் திரியுங்கோளென்கை. நாத்தகும். பிள்ளைக்குத் திருநாமத்தையிட்டு அத்தைப் பலகாலும் சொல்லுகையாகிறவிது உங்கள் நாவுக்குச்சேரும். திருநாமம்சொல்லுகைக்கிறே நாக்கண்டது. அன்றிக்கே, "நாத்தகுநாரணன்" என்று மேலேகூட்டி (க) "வாஜிஹ்வாயா ஹரிம் ஹௌதி" என்கிறபடியே நாவுக்கு அநுரூபவிஷயம் நாராயணனென்னவுமாம். நாரணன் தம்மன்னை நரகம்புகாள். ... ௯.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—சீரணிமால் திருநாமமே யிட்டத்தேற்றிய
வீரணி தோல்புகழ் விட்டுசித்தன் விரித்த

§ ஸ்பர்சவேதி—சேரும்பொருள்தன்மையதாகை.
(க) "வாஜிஹ்வாயா ஹரிம்ஸ்தௌதி."

ஓரணியொண்டமிழொன்பதோ டொன்றும் வல்லவர்
பேரணி வைகுந்தத்தென்றும் பேணியிருப்பரே. ௰.

பதவுரை.

சீர்— கல்யாண குணங்களை
அணி— ஆபரணமாகவுடையனாய்
மால்— ஆச்ரித வ்யாமுக்தனான வனுடைய
திரு நாமமே— திருநாமங்களையே
இட— தந்தாம் பிள்ளைகளுக்கு இடும்படியாக
தேற்றிய — தெளிவித்த
வீரம்— இந்த்ரியங்களை வெல்லுகையாகிற வீரப்பாட்டை
அணி— ஆபரணமாகவுடையராய்
தொல்— அநாதிஸித்தமான
புகழ்— கீர்த்தியையுடையரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
விரித்த— விஸ்தரித்துச் சொன்னதாய்

(அப்யஸித்தவர்களுக்கு,)
ஓர்— ஒப்பற்ற
அணி— ஆபரணமாய்
ஒண்— தன் பொருளை விளக்குமதாய்
தமிழ்— தமிழ்பாஷையான
ஒன்பதோடு ஒன்றும்— பத்துப்பாட்டையும்
வல்லவர்— ஓதவல்லவர்
பேர்— பெரிய
அணி— அழகையுடைய
வைகுந்தத்து— ஸ்ரீவைகுண்டத்திலே
என்றும்— எப்போதும்
பேணி இருப்பர் — ஆதரத்தோடே வர்த்திக்கப் பெறுவர்கள்.

வ்யா. சீரணிமால். குணங்களை ஆபரணமாக வுடையனாய் ஆச்ரித வ்யாமுக்தனானவனுடைய. "சீரணி" என்றது - குணங்களினுடைய திரளையுடையவனென்றாய், அக்குணங்கள் புறம்பொரு வ்யக்தியில் கிடவாமையாலே, கல்யாணகுணங்களுக்கெல்லாம் ஆச்ரயமானவனென்னவுமாம். (க) "யாதூநாமிவ ஶைலேந்த்ரோ குணாநாமாகரோ மஹாந்" என்னக்கடவதிறே. மால் - பெரியவன்; ஸர்வேச்வரனென்னவுமாம். திருநாமமேயிடத்தேற்றிய இதரநாமங்களை மாற்றி * நாரணன்றன் நாமங்களே தந்தாம் பெற்ற பிள்ளைகளுக்குச் சாத்தும்படியாகப் பலஹேதுக்களாலும் தெளிவித்து. வீரணிதொல்புகழ் விட்டுசித்தன் விரித்த. ஜிதேந்த்ரியத்வமாகிற வீரப்பாட்டை ஆபரணமாக வுடையராய், ஸூரிகளைப்போலே அநாதிஸித்த மங்களாசாஸநப்புகழை யுடையரான பெரியாழ்வார் பரப்பின. ஓரணியித்யாதி. அப்யஸித்தார்க்கு அத்விதீயமான ஆபரணமாய், அர்த்தப்ரகாசகமாய், ஸர்வாதிகாரமான த்ராவிடரூபமாயிருந்துள்ள இப்பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். பேரணி வைகுந்தத்து. பெரிய அழகையுடைய ஸ்ரீவைகுண்டத்திலே. அதாவது - பகவதநுபவ கைங்கர்யங்களுக்கு அநுரூபமாகையாலே மிகவும் விலக்ஷணமான தேசத்திலே யென்கை. என்றும் பேணியிருப்பரே. ஸர்வகாலமும் ஆதரத்தோடே வர்த்திக்கப்பெறுவர். அதவா, பேணுகையாவது - ஈச்வரனைப்பேணுகையாய், மங்களாசாஸநபரராய் வர்த்திக்கப் பெறுவரென்னவுமாம். ... ... ... ... ... ௰.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

அடிவரவு—காசு மங்கோரு வுச்சியில் மானிட மலமுடை நாடு மண்ணில் நம்பி ஊத்தை சீரணி தங்கையை.

ஆ. திருமொழி-ருஙு-க்கு, பாட்டு-௬௭அ.

---

(க) "தாதூநாமிவ சைலேந்த்ரோ குணாநாமாகரோ மஹாந்."

நான்காம்பத்து - ஏழாந்திருமொழி - தங்கையைமூக்கும், ப்ரவேசம்.

அ. பகவத்வைமுக்யாதி தோஷமடியாகத்தம்மாலே நிந்திதரான ஸம்ஸாரிசேதநரையும் விடமாட்டாத தம்முடைய பரமக்ருபையாலே, அவர்களைத் திருத்தியாகிலும் உஜ்ஜீவிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, அவர்கள் திருந்துகைக் குறுப்பான ஹிதத்தை உபதேசித்தருளினார்- மேழிரண்டுதிருமொழியாலே; அது செய்து தலைக்கட்டின வநந்தரம், 'முன்பு திருமலை திருக்கோட்டியூரில் அநுபவித்தாற்போலே இன்னமும் அவன் உகந்தருளின நிலங்களிலே எழுந்தருளிநிற்கிற நிலையை அநுபவிக்கவேணும்'' என்னுமாசைகிளர்ந்து "வடதிசை மதுரை சாளக்கிராமம்'' இத்யாதிப்படியே தனக்கு அபிமதமான தேசங்கள் பலவற்றிலுமுள்ள விருப்பத்தை எல்லாவற்றையும் ஒருமடைகொள்ளப் பண்ணி வர்த்திக்கிற ஸ்த்தலமாய், திருவுலகளந்தருளுகிறபோது தன்திருவடிகளில்பிறந்த ஏற்றத்தாலே (க)ஸகலலோகபாவநபூதையாய்க்கொண்டு ஸர்வகாலமும் ப்ரவஹியாநிற்கிற கங்கையினுடைய கரையிலேயுள்ளதான திருக்கண்டங்கடி நகரிலே அநேகாவதார குணசேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி எழுந்தருளி நிற்கிற புருஷோத்தம சப்தவாச்யனான ஸர்வேச்வரனை அநுபவியாநின்றுகொண்டு, அவனிலுங்காட்டில் அவன் வர்த்திக்கிற தேசமே ப்ராப்யத்தில் சரமாவதியாகையாலே அத்தேசத்தினுடைய வைபவத்தையும் பஹுமுகமாகப்பேசியநுபவிக்கிறார் - இத்திருமொழியில். ... ... ... ... ... *

மூ.—தங்கையைமூக்குந் தமையனைத்தலையுந் தடிந்தவெம் தாசரதிபோய்
எங்குந்தன்புகழா விருந்தரசாண்ட வெம்புருடோத்தம னிருக்கை
கங்கைகங்கையென்ற வாசகத்தாலே கடுவினைகளைந்திட கிற்கும்
கங்கையின்கரைமேற் கைதொழநின்ற கண்டமென்னுங் கடிநகரே. க.

பதவுரை.

கங்கை கங்கை என்ற வாசகத்தாலே — (உலகத்தார் நீராடும் தீர்த்தங்களை கங்கையாக ப்ரதிபத்திபண்ணி ஸ்நாநம் செய்வார்களேயானால்,) 'கங்கை, கங்கை' என்கிற சப்தத்தைச் சொல்லுமத்தாலே
கடு வினை — அவர்களுடைய க்ரூரமான பாபங்களை
களைந்திட கிற்கும்— கழிக்கவல்ல
கங்கையின் கரைமேல்— கங்காதீரத்தில்
கை தொழ நின்ற— ஆச்ரிதர் கைகூப்பித் தொழும்படி நின்ற
கண்டம் என்னும்— 'கண்டம்' என்கிற
கடி— சிறப்பையுடைத்தான
நகர்— நகரமானது;
தங்கை— ராவணன் தங்கையான சூர்ப்பணகையின்
மூக்கும்— மூக்கையும்
தமையன்- அவள் தமையனானராவணனுடைய
தலையும்— தலையையும்
தடிந்த— அறுத்துப் பொகட்ட
எம்— நம்முடைய
தாசரதி— சக்ரவர்த்தி திருமகன்
போய்— திருவயோத்யையிலெழுந்தருளி
எங்கும்— எல்லாவிடத்திலும்
தன் புகழா— தன்கீர்த்தியேயாம்படி
இருந்து — பதினோராயிரம் ஸம்வத்ஸரமிருந்து
அரசு ஆண்ட— ராஜ்யம் நிர்வஹித்தருளின
எம்— நம்முடைய
புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு
இருக்கை— வாஸஸ்த்தாநமாம்.

(க) ஸகலலோகபாவந பூதையாய்.

வ்யா. முதற்பாட்டு. தங்கையை மூக்கும் தமையனைத் தலையுந்தடிந்த. தங்கையான சூர்ப்பணகையுடைய மூக்கையும், தமையனான ராவணனுடைய தலையையுமறுத்த. "வாளாற் றான் முடியும் தங்கை பொல்லாதமூக்கும் போக்குவித்தான் பொருந்துமலை" என்று திருமலையில் நிற்கிறநிலையில் கண்டநுபவித்த ராமாவதாரகுணத்தை, திருக்கண்டங்கடிநகரில் நிற்கிறநிலையிலும் கண்டநுபவிக்கிறார். (க) "த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா" என்று ஸர்வலோகத்துக்கும் மாதாவும் பிதாவுமாய்க்கொண்டிருக்கும் மிதுநத்தை முறையிலே விரும்பாமல் முறைகெட விரும்புவார் பெறும்பேறு இது என்னுமிடம் தோற்றவிறே *தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்தது. அதாவது- முக்யவிசேஷணபூதையான பிராட்டியை உபேக்ஷித்து, விசேஷ்யபூதரான பெருமாளை விரும்பின சூர்ப்பணகைக்கு முக்யாங்கஹாநியே பலமாய்த்து; அவளுக்கு விசேஷ்யபூதராய்க்கொண்டு ஸர்வர்க்கும் ப்ராணனாயிருக்கிற பெருமாளை உபேக்ஷித்து, விசேஷணபூதையான பிராட்டியை, விபரீத (உ) புத்யா விரும்பின ராவணனுக்குப்ராணஹாநியே பலமாய்விட்டதென்கை. இவ்வர்த்தத்தை ப்ரகாசிப்பிக்கைக்காகவாய்த்து- இவர் பலவிடங்களிலுமருளிச்செய்தது. எம்தாசரதி. "எம்" என்று ஆச்ரிதரெல்லாரையுங் கூட்டிக்கொண்டு அருளிச்செய்கிறார். இவ்வர்த்தத்தை வெளியிட்டருளினது ஆச்ரிதரெல்லார்க்கு மொக்குமிறே. "தாசரதி" என்றது ராவணவதார்த்தமாக ப்ரஹ்மாதி தேவர்கள் வந்து (ங) "பவாந்நாராயணோ தேவ:" என்றதை அஸம்மதமாய், (ச) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்று நின்றநீர்மையை ப்ரகாசிப்பிக்கைக்காக. போயெங்கும் தன்புகழா விருந்தரசாண்ட. ராவணவதாநந்தரம் லங்கையில்நின்றும்மீண்டு திருவயோத்யையிலே எழுந்தருளித் திருவபிஷேகம்பண்ணியருளி (ரு) "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா: । ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி" என்கிறபடியே நாடடங்கத் தன்னுடைய குணங்களையே வாய்புலத்தி ராமாத்வைதமாம்படி பண்ணுகையாலே எல்லாவிடத்திலும் தன்னுடைய கீர்த்தியேயாம்படி பதினோராயிரம் ஸம்வத்ஸரமிருந்து ராஜ்யம்பண்ணியருளின. எம்புருடோத்தமனிருக்கை. "எம்" என்று ஆச்ரிதரெல்லாரையும் கூட்டிக்கொண்டருளிச்செய்கிறார். "புருடோத்தமன்" என்றது ஸர்வஸ்மாத்பரனென்றபடி. (சு) "யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராதபி சோத்தம: । அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:" என்றருளிச்செய்தானிறே தானே. தாசரதியான புருஷோத்தமனென்கையாலே மநுஷ்யத்வேபரத்வம் சொல்லுகிறது. "இருக்கை" என்றது- வாஸஸ்தலமென்றபடி.

கங்கையித்யாதி. எதேனுமோரிடத்திலே ஸ்நாநம்பண்ணுமவர்கள் அவகாஹிக்கிற ஜலத்தை கங்கையாகநினைத்து, "கங்கை கங்கை" என்கிற சப்தத்தைச்சொல்ல, இந்த வாசகத்தாலே, அவர்களுடைய *அவச்யமநுபோக்தவ்யமான பாபத்தைப்போக்கவல்ல. கங்கையின்கரைமேல் கைதொழநின்ற. இப்படியிருந்துள்ள கங்கையினுடைய கரையிலே விசேஷஜ்ஞரெல்லாரும் கையெடுத்துத் தொழும்படியாய்நின்ற. கண்டமென்னும் கடிநகரே. கண்

(க) "த்வம்மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா." (உ) வைபரீத்ய. (ங) "பவாந்நாராயணோ தேவ:." (ச) "ஆத்மாநம் மாநுஷம்மந்யே ராமம் தசரதாத்மஜம்." (ரு) "ராமோ ராமோ ராமஇதி ப்ரஜாநா மபவந்கதா: - ராமபூதம் ஜகதபூத்ராமே ராஜ்யம் ப்ரசாஸதி." (சு) "யஸ்மாத்க்ஷரமதீதோஹ மக்ஷராதபிசோத்தம: - அதோஸ்மி லோகே வேதேச ப்ரதித: புருஷோத்தம:."

டமென்கிற சிறப்பையுடைத்தான நகரம். கடி - சிறப்பு. இத்தால் - ப்ராப்யபூதனான புருஷோத்தமனிலுங்காட்டில் அவன் வர்த்திக்கிற தேசமே சரமாவதியாகையாலே, அத்தேசத்தை வர்ணித்துக்கொண் டநுபவிக்கிறார். ... ... ... ... ... ... க.

மூ.—சலம்போதியுடம்பிற் றழலுமிழ்பேழ்வாய்ச் சந்திரன்வெங்கதிரஞ்ச
மலர்ந்தெழுந்தணவு மணிவண்ணவுருவின் மால் புருடோத்தமன்வாழ்வு
நலந்திகழ்சடையான் முடிக்கொன்றைமலரு நாரணன்பாதத்துழாயுங்
கலந்திழிபுனலாற்,புகர்படுகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. உ.

பதவுரை.

நலம் திகழ் - கங்கையை முடியில் தரிப்பதால் வந்த நன்மை விளங்குகிற
சடையான்— ஜடையை தரியாநின்றுள்ள ருத்ரன்
முடி— சிரஸ்ஸில் அணிந்த
கொன்றை மலரும்— (சிவந்தநிறமுடைய) கொன்றைப் பூவோடும்
நாரணன் — அவனுக்கு சேஷியான நாராயணனுடைய
பாதம்— திருவடிகளில் புனைந்த
துழாயும்— (பசுமை நிறமுடைய) திருத்துழாயோடும்
கலந்து— கலந்து
இழி— ஆகாசத்தில் நின்றும் கீழ்இழியாநின்றுள்ள
புனலால்— ஜலத்தாலே
புகர் படு— ஒளிவிடாநின்றுள்ள
கங்கை— கங்கைக்கரையிலுள்ள
கண்டமென்னும் கடிநகர்—;
சலம்— ஜலத்தை
பொதி— பொதிந்து கொண்டிருக்கிற
உடம்பின்— வடிவையுடைய
சந்திரன்— சந்த்ரனும்
தழல்— நெருப்பை
உமிழ்— உமிழாநின்றுள்ள
பேழ்— பெரிய
வாய்— கிரணங்களையுடையனாய்
வெம்— வெப்பத்தை இயல்வாகவுடைய
கதிர்— ஸூர்யனும்
அஞ்ச— அஞ்சும்படியாக
மலர்ந்து— பரம்பிக்கொண்டு
எழுந்து— கிளர்ந்து
அணவு— அவர்களிருப்பிடத்தைச் சென்று கிட்டின
மணி— நீலரத்நம்போன்ற
வண்ணம்— நிறத்தையுடைய
உருவின்— வடிவையுடையனாய்
மால்— வ்யாமுக்தனான
புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு
வாழ்வு— ப்ராப்யதேசமாம்.

வ்யா. இரண்டாம்பாட்டு. சலம்பொதி. அம்ருதகிரணனாகையாலே ஜலத்தைப் பொதிந்துகொண்டிருக்கிற வடிவையுடைய சந்த்ரனும், உஷ்ண கிரணனாகையாலே அக்நியை உமிழாநின்ற பெரிய கிரணங்களையுடையனாய் வெம்மையே ஸ்வபாவமாகவுடைய ஆதித்யனும், திருவுலகளந்தருளுகிறபோது அத்ருஷ்டபூர்வமாய் அநேக புஜாயுதமாய் அதிசீக்ரமாக வளருகிறபடியைக் கண்டு "என்னாகிறதோ!" என்று அஞ்சும்படியாக. மலர்ந்தெழுந்தணவு மணிவண்ண வுருவின். "எண்டிசையும் பேர்த்தகர நான்குடையான்" என்கிறபடியே - அதிவிஸ்த்ருதமாய்க்கொண்டு கிளர்ந்து அவர்களிருப்பிடங்களைச் சென்று கிட்டின நீலரத்நத்தின் நிறத்தையுடைத்தான வடிவையுடையவனாய். மால். "ஒண் மிதியில் புனலுருவி ஒருகால்நிற்ப" என்கிறபடியே - கீழ்மிதித்த திருவடிகளாலே பூமிமுதலாகக் கீழு

ள்ள லோகங்களெல்லாவற்றையும், [ஒருகாலுமித்யாதி.] அப்படி மேலெடுத்த திருவடியாலே ஊர்த்வலோகங்க ளெல்லாவற்றையும் பெருப்பேறு பெற்றாப்போலே பதறி யளந்துகொண்ட வ்யாமோஹத்தை யுடையவனை. புருடோத்தமன்வாழ்வு. இந்த வ்ர்த்தாந்தத்தாலே- எல்லாருடைய அந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களைப் போக்கி எல்லாஜகத்துக்கும் தானே சேஷியென்னுமிடம் தோற்ற நின்ற ஸர்வாதிகனை புருஷோத்தமனுக்கு ப்ராப்யமானதேசம்.

நலந்திகழ்சடையான் முடிக்கொன்றைமலரும். (க) "பாவநார்த்தம் ஜடாமத்யே யோக்யோஸ்மீத்யவதாரணாத்" என்கிறபடியே திருவடி விளக்கின தீர்த்தத்தை தரித்துக்கொண்டிருக்கிற நன்மை விளங்காநின்ற ஜடையையுடைய ருத்ரனுடைய சிரஸ்ஸில் கொன்றைப்பூவும். நாரணன்பாதத்துழாயும். அவனுக்கு சேஷியும் சரீரியுமான நாராயணனுடைய திருவடிகளில் திருத்துழாயும். கலந்திழி புனலால். சிவந்த நிறத்தையும் பசுத்தநிறத்தையு முடைத்தான அவை யிரண்டோடும் கலந்து ஆகாசத்தில் நின்றும் பூமியிலே யிழிந்து ப்ரவஹிக்கிற ஜலத்தாலே. புகர்படுகங்கை. ஒளியையுடைத்தா யிருந்துள்ள கங்கையினுடைய கரையில். கண்டமென்னுங்கடிநகரே. "கண்டம்" என்று - தேசத்துக்குத் திருநாமம். கடி - பெருமை. நகரென்கிறது - புருஷோத்தமனும் ததீயரும் வர்த்திக்கிறதேசமாகையாலே. "அரங்கமாநகர்" என்னுமாபோலே. ... ... ... ... உ.

மூ—அதிர்முகமுடைய வலம்புரிகுமிழ்த் தழலுமிழாழி கொண்டெறிந்தங்
கெதிர்முகவசுரர் தலைகளையிடறு மெம்புருடோத்தம னிருக்கை
சதுமுகன்கையிற் சதுப்புயன்றாளிற் சங்கரன்சடையினிற் றங்கிக்
கதிர்முகமணிகொண் டிழிபுனற்கங்கைக் கண்டமென்னுங் கடிநகரே. ௩.

பதவுரை.

(திருவடி விளக்குகிறபோது,)
சதுமுகன்— ப்ரஹ்மாவினுடைய
கையில்— கையிலும்
சதுப்புயன்— சதுர்ப்புஜனை த்ரிவிக்ரமனுடைய
தாளில்— திருவடிகளிலும்
(பின்பு,)
சங்கரன்— ருத்ரனுடைய
சடையினில்— ஜடையிலும்
தங்கி— தங்கி
கதிர்— ஒளியையுடைத்தாய்
முகம்— சிறந்திருந்துள்ள
மணி— ரத்நங்களை
கொண்டு— கொழித்துக்கொண்டு
இழி— இழிகிற
புனல்— ஜலத்தையுடைய
கங்கை— கங்கையின் கரையிலுள்ள
கண்டம் என்னும் கடிநகர்—;
அதிர்— த்வநியா நின்ற
முகம் உடைய— முகத்தை யுடைய
வலம் புரி— ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
குமிழ்த்து— திருப்பவளத்தில் வைத்தூதியும்
அழல்— நெருப்பை
உமிழ்— உமிழாநின்றுள்ள
ஆழி கொண்டு— திருவாழியைக்கொண்டு
எறிந்து— எறிந்தும்
அங்கு— அவ்விடத்திலே
எதிர்— பொருவதாக எதிர்த்த
முகம்— முகத்தையுடையரான
அசுரர்— அஸுரர்களுடைய
தலைகளை— தலைகளை

(க) "பாவநார்த்தம் ஜடாமத்யே யோக்யோஸ்மீத்யவதாரணாத்."

| | |
|---|---|
| இடறும்— உருட்டினவனுய் | புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு |
| எம்— நம்முடைய | இருக்கை— வாஸஸ்தாநமாம். |

வ்யா. மூன்றும்பாட்டு. அதிர்முகமுடைய. திருவுலகளந்தருளுகிறபோது நமுசி ப்ரப்ருதிகளான அஸுரர்கள் ப்ரதிபந்திக்கையாலே த்வநியாநின்றுள்ள முகத்தை யுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலே வைத்தூதி, நெருப்பை உமிழாநின்றுள்ள திருவாழியைக் கொண்டெறிந்து, அவ்விடத்திலே யுத்தோத்யுக்தராய்க்கொண்டு எதிர்ந்த முகத்தையுடையரான அஸுரர்களுடைய தலைகளை யுருட்டினவனுய், ஆச்ரிதரான நமக்கு ப்ராப்யபூதனுன புருஷோத்தமனுடைய வாஸஸ்தாநம்.

சதுமுகனித்யாதி. (க) " [illegible] " என்கிறபடியே- திருவடிகள் விளக்குகிறபோது, அது சதுர்முகனுன ப்ரஹ்மாவின் கையிலும், அநந்தரம் விளக்கப்பட்டது சதுர்ப்புஜனுன ஸர்வேச்வரன் திருவடிகளிலும், அநந்தரம் (உ) " [illegible] " என்கிறபடியே திருவடிகளினின்றும் விழுகிற தீர்த்தை சிரஸ்ஸாலே தரித்த ருத்ரனுடைய ஜடையிலும் தங்கி. கதிரித்யாதி. ஒளியையுடைத்தாய் ச்ரேஷ்டமா யிருக்கிற ரத்நங்களைக் கொழித்துக்கொண்டு இழிகிற புனலை யுடைத்தான கங்கையினுடைய கரையிலே. கண்டமென்னுங்கடிநகரே. ... ... ... ... ௩.

மூ—இமையவரிறுமாந் திருந்தரசாள வேற்றுவந்தெதிர்பொருசேனை
நமபுரநணுக நாந்தகம் விசிறு நம்புருடோத்தம னகர்தான்
இமவந்தந்தொடங்கி யிருங்கடலளவு மிருகரை யுலகிரைத்தாடக்
கமையுடைப் பெருமைக் கங்கையின் கரைமேற் கண்டமென்னுங்கடிநகரே.

பதவுரை.

| | |
|---|---|
| இமவந்தம் தொடங்கி— ஹிமவானுடைய உச்சிமுதல் | பெருமை— பெருமையையுடைத்தான |
| இரு— பெரிய | கங்கையின்கரைமேல் |
| கடல் அளவும்— கடல்வரைக்கு முள்ள | கண்டம் என்னும் கடிநகர்—; |
| உலகு — உலகத்திலுள்ளவர் | இமையவர்— இந்த்ரன்முதலியதேவர்கள் |
| இரு கரை— இரண்டு கரையிலும் | இறுமாந்து இருந்து— செருக்கி யிருந்து |
| இரைத்து— ஆரவாரித்துக்கொண்டு | அரசு ஆள—ராஜ்யம் நிர்வஹிக்கும்படியாக |
| ஆட— நீராட | ஏற்றுவந்து— ஏன்றுகொண்டுவந்து |
| கமை உடை — அவரவர்கள் பாபங்களைப் பொறுக்கும் பொறையுடைமையால்வந்த | (அவர்கள்மேலும், அவர்களுக்கு ரக்ஷகனுன தன்மேலும், ) |
| | எதிர் பொரு— எதிர்ந்து பொருகிற |
| | சேனை— ஸேனையானது |

(க) " ச்ரீஹீத்வா தர்மபாநீயம் பாதம் நாதஸ்ய துஷ்டயே - க்ஷாளிதம் பரயாபக்த்யா பாத்யார்க்யாதிபி ரர்ச்சிதம். " (உ) " ததம்புபதிதம் த்ருஷ்ட்வா ததாரசிரஸா ஹர:. "

| | |
|---|---|
| நமபுரம்— யமபுரத்தை | விசிறு— வீசாநின்றுள்ள |
| நணுக— கிட்டும்படியாக | நம்— நம்முடைய |
| நாந்தகம்— நந்தகவாளை | புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு |
| | நகர்— வாஸஸ்தாநமாம். |

வ்யா. நான்காம்பாட்டு. இமையவ ரிறுமாந்திருந்தரசாள. இந்த்ராதி தேவர்கள் ப்ரதிபக்ஷபயமற்று மாலையிட்டு மார்வுந்தோளும் பார்த்து கர்வோத்தராயிருந்து ராஜ்யம் பண்ணும்படியாக. ஏற்றுவந்தித்யாதி. அவர்கள் ஜீவிக்கிறதுகண்டு பொறுக்கமாட்டாமல் அழியச் செய்வதாக என்றுகொண்டுவந்து, அவர்கள் மேலும் அவர்களுக்கு ரக்ஷகனானதன் மேலும் எதிர்ந்து பொருகிற அஸுரராக்ஷஸ ஸேனையானது. நமபுரம்நணுக நாந்தகம் விசிறும். யமபுரத்தை ப்ராபிக்கும்படியாக ஸ்ரீநந்தகமென்கிற திருநாமத்தை யுடைத்தான * கொற்ற வொள்வாளைவீசும். நம்புருடோத்தமன் நகர்தான். இப்படி ஆச்ரிதரக்ஷணம் பண்ணும்ஸ்வபாவனான நம்முடைய புருஷோத்தமனுடைய நகர்தான்.

இமவந்தமித்யாதி. ஹிமவானுடைய உச்சிதொடங்கி பெரிய கடலளவும், இரண்டு கரையிலுள்ள லோகத்தாரும் ஆரவாரித்துக்கொண்டு தீர்த்தமாட. கமையுடைப் பெருமைக் கங்கையின் கரைமேல். க்ஷமாவத்தையால் வந்த பெருமையையுடைத்தான கங்காதீரத்தில். அதாவது- ஸர்வலோகரும் பாபக்ஷயார்த்தமாக வந்து தன்னுடைய ஜலத்திலே அவகாஹித்தால் அவையெல்லாவற்றையும் பொறுத்து அவர்களைப் பரிசுத்தராக்கிவிடும் பெருமையைச் சொல்லுகிறது. கண்டமென்னும் கடிநகரே. ... ... ... ச

மூ.—உழுவதோர்படையு முலக்கையும்வில்லு மொண்சுடராழியுஞ் சங்கும்
மழுவொடுவாளும் படைக்கலமுடைய மால்புருடோத்தமன் வாழ்வு
எழுமையுங்கூடி யீண்டியபாவ மிறைப்பொழு தளவினிலெல்லாங்
கழுவிடும்பெருமைக் கங்கையின் கரைமேற்கண்டமென்னும் கடிநகரே. ரு.

பதவுரை.

| | |
|---|---|
| எழுமையும்— ஏழுஜந்மங்களிலும் | ஒண்— அழகிய |
| கூடி— கூடி | சுடர்— தேஜஸ்ஸை உடைத்தான |
| ஈண்டிய— திரண்ட | ஆழியும்— திருவாழியையும் |
| பாவம் எல்லாம்— பாவங்களை யெல்லாம் | சங்கும்— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் |
| இறைப்பொழுதளவினில்- க்ஷணகாலத்திலே | மழுவொடு வாளும்—கோடாரியையும் ஸ்ரீநந்தகவாளையும் |
| கழுவிடும்— கழுவிவிடாநிற்கிற | படைக்கலம் உடைய—ஆயுதமாகவுடையனாய் |
| பெருமை—பெருமையையுடைய [நகர்—; கங்கையின்கரைமேல் கண்டம் என்னும்கடி | மால்— ஸர்வேச்வரனை |
| உழுவது ஓர் படையும்— கலப்பையையும் | புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு |
| உலக்கையும்— உலக்கையையும் | வாழ்வு— வாஸஸ்தாநமாம். |
| வில்லும்— ஸ்ரீசார்ங்கத்தையும் | |

வ்யா. ஐந்தாம்பாட்டு. உழுவதோர்படையும். கலப்பையும். உலக்கையும். முஸலமும். வில்லும். ஸ்ரீசார்ங்கமும். ஒண்சுடராழியும். அழகிய தேஜஸ்ஸையுடைத்தான திருவாழியும். சங்கும். ஸ்ரீபாஞ்சஜந்யமும். மழுவொடுவாளும். பரசுவும், நந்தகமும், படைக்கல

முடைய. இவற்றை ஆயுதமாகவுடைய. மால்புருடோத்தமன் வாழ்வு. ஆச்ரிதவிரோதிநிரஸநஸாதநங்களான இவற்றையுடையனான தானே தனக்குப் பெருமையாயிருக்கும் புருஷோத்தமனுக்கு ப்ராப்யமான ஸ்த்தலம்.

எழுமையுங்கூடி யீண்டியபாவம்-எல்லாம். அநேகஜந்மங்கூடித்திரண்ட பாபங்களெல்லாவற்றையும். இறைப்பொழுதளவினில் கழுவிடும்பெருமைக் கங்கையின் கரைமேல். தன்னுடைய ஜலத்திலே அவகாஹித்தவர்களுக்கு க்ஷணகாலமாத்ரத்திலே கழுவி விடாநிற்கும் பெருமையையுடைத்தான கங்கையினுடைய கரையின்மேல். கண்டமென்னும் கடிநகரே. ... ரு.

மூ.—தலைப்பெய்துகுமுறிச் சலம்பொதிமேகஞ் சலசலபொழிந்திடக் கண்டு
மலைப்பெருங் குடையான் மறைத்தவன் மதுரைமால்புருடோத்தமன்வாழ்வு
அலைப்புடைத்திரைவா யருந்தவமுனிவ ரவபிரதங்குடைந்தாடக்
கலப்பைகள் கொழிக்குங் கங்கையின்கரைமேற் கண்டமேன்னுங் கடிநகரே. சு

பதவுரை.

அலைப்பு உடை— கரையெறியா நின்றுள்ள
திரைவாய்— அலையினிடத்திலே
அரு— அரிய
தவம்— தபஸ்ஸுக்களை யுடையராய்
முனிவர்— மநநசீலராயிருக்குமவர்கள்
அவபிரதம் குடைந்து ஆட —அவப்ருதஸ்நாநம்பண்ண ( அத்தாலே, )
கலப்பைகள்— யாகபூமியிலுள்ள கலப்பை முதலிய கருவிகளையெல்லாம்
கொழிக்கும்- தள்ளிக்கொண்டுபோகாநிற்கிற
கங்கையின் கரைமேல் கண்டம் என்னும் கடிநகர்—;
சலம்— கடல்நீரை
பொதி— பொதிந்துகொண்டிராநின்ற
மேகம்— மேகங்களானவை [கிட்டி
தலைப்பெய்து— (திருவாய்ப்பாடியிலே)வந்து
குமுறி— இடித்து முழக்கி
சல சல— சளசளவென்று
பொழிந்திட— வர்ஷிக்க
கண்டு— கண்டு
மலை— கோவர்த்தநகிரியாகிற
பெரு— பெரிய
குடையால்— குடையாலே
மறைத்தவன்—ஒருவன்மேல் ஒருதுளிவிழாதபடி மறைத்தவனாய்
மதுரை— ஸ்ரீமதுரையில்
மால்— வ்யாமுக்தனான
புருடோத்தமன் — புருஷோத்தமனுக்கு
வாழ்வு— வாஸஸ்தாநமாம்.

வயா. ஆறும்பாட்டு. தலைப்பெய்தித்யாதி. சலம்பொதிமேகம்-தலைப்பெய்து குமுறி. இந்த்ரன் ஏவற்படியே ஸமுத்ரம் தரையாம்படி ஜலத்தையெல்லாம் தன்பக்கலிலே பொதிந்துகொண்ட மேகங்களானவை திருவாய்ப்பாடியிலே வந்து கிட்டி, கேட்டவர்கள் குடல் குழம்பும்படி யிடித்து முழக்கி. தலைப்பெய்கை - கிட்டுகை. சலசலபொழிந்திட. சலசலவென, குடமிட்டுச் சொரிந்தாற்போலே வர்ஷிக்க. சலசலவென்கிறது - அநுகாரத்வநி. கண்டு. மேகங்களினுடைய பகைப்பையும், திருவாய்ப்பாடியிலுள்ளார் எளிமையையுங்கண்டு. மலைப்பெருங்குடையால் மறைத்தவன். மலையாகிற பெரிய குடையாலே, ஒருதுளி ஒருகல் ஒரு இடி என்கிற விவை ஒருவர்மேலேவிழாதபடி மறைத்தவன். மதுரைமால். விரோதியான கம்ஸனை யழியச்செய்து மாதாபிதாக்கள்சிறையையும்விடுத்து உக்ரஸேநனை அபிஷேகம்பண்ணி அங்குவர்த்தமாநரானவர்களெல்லாரையும்வாழ்வித்து நோக்கிக்கொண்டு போரும்படி-திரு

வவதரித்ததேசமான ஸ்ரீமதுரையில் வ்யாமோஹத்தையுடையவன். புருடோத்தமன்வாழ்வு. இப்படி தான்வளர்ந்தவிடத்தோடு பிறந்தவிடத்தோடு வாசியற இரண்டிடத்திலுள்ளாரையும் ரக்ஷித்தருளின ஏற்றத்தையுடையனான புருஷோத்தமனுக்கு நிரதிசயபோக்யமான தேசம்.

அலைப்புடைத்திரைவாய். அலைகிற திரையிடத்திலே. அருந்தவமுனிவர். அரியதபஸ்ஸுக்களையுடையராய் பகவந்மநநசீலராயிருக்குமவர்கள். அவபிரதம் குடைந்தாட. பகவத்ஸமாராதநரூபங்களான யாகங்களை அவிகலமாக அநுஷ்டித்து, அதினுடைய சமதிவஸத்திலே அவப்ர்தஸ்நாநஞ்செய்ய. கலப்பைகள் கொழிக்கும். அநந்தரம் பெருக்காறும் யாகபூமியிலுண்டான கலப்பை முதலான உபகரணங்களெல்லாவற்றையும் எடுத்துத் தள்ளிக்கொண்டு போகாநிற்கிற. கங்கையின் கரைமேல் கண்டமென்னும் கடிநகரே. ... ... ...௬.

மூ.—விற்பிடித்திறுத்து வேழத்தைமுறுக்கி மேலிருந்தவன்றலைசாடி
மற்பொருதெழப்பாய்ந் தரையனையுதைத்த மால்புருடோத்தமன் வாழ்வு
அற்புதமுடைய வைராவதமதமு மவரிளம்படிய ரொண்சாந்தும்
கற்பகமலருங் கலந்திழிகங்கைக் கண்டமென்னும் கடிநகரே. ௭.

பதவுரை.

அற்புதம் உடைய— யாவருமாச்சர்யப்படத்தக்க
ஐராவதம்—'ஐராவதம்' என்னும் யானையின்
மதமும்— மதநீரும்
அவர்—ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களாலே ஆசைப்படத்தக்கவர்களாய்
இளம்படியர்—அந்தப்பதமுள்ளவளவும் யௌவநப்பருவம் குலையாத தேவஸ்த்ரீகள் அணிந்த
ஒண்— சிறந்த
சாந்தும்— சந்தநமும்
கற்பகம் மலரும்—அவர்கள் குழலில் சொருகின கல்பகப்பூக்களும்
கலந்து— சேர்ந்து
இழி— இழியாநின்றுள்ள
கங்கை— கங்கையின்கரையில்
கண்டமென்னும் கடிநகர்—;
வில் பிடித்து — வில்லைப்பிடித்து
இறுத்து— முறித்தும்
வேழத்தை முறுக்கி — குவலயாபீட கஜத்தின் கொம்பை முறித்தும்
மேல் இருந்தவன்—யானைப்பாகனுடைய
தலை— தலையை
சாடி— அந்தக்கொம்பாலே சிதறஅடித்தும்
மல் பொருது — சாணூர முஷ்டிகர்களாகிற மல்லருடல்கள் நெரியும்படி போர்செய்தும்
அரையனை— (உயர்ந்தகட்டிலிலிருந்த) ராஜாவான கம்ஸனை
(மயிரைப்பிடித்திழுத்துக் கீழேதள்ளி,)
எழப்பாய்ந்து— அவன்மேலேகுதித்து
உதைத்த— திருவடிகளாலே உதைத்தும் (இவற்றால் வந்த)
மால்— பெருமையுடையனான
புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு
வாழ்வு— அபிமதமான தேசம்.

வ்யா. ஏழாம்பாட்டு. விற்பிடித்திறுத்து. கம்ஸன் "வில்விழவுக்கு" என்று உறவிலே அழைத்துவிட, தானும் அதுக்கென்னப்போகிறானாய் மதுரையிலேசென்று அவனுடைய ஆயுதசாலையிலே புக்கு அவனுக்கு அபிமதமான வில்லைப்பிடித்து முறித்து. வேழத்தைமுறுக்கி. அநந்தரம் "புகுவாய்நின்ற போதகம்" என்கிறபடியே அவனுடைய க்ர்ஹத்வாரத்

திலே நின்று தன்மேலே படர்ந்துவந்த மத்தகஜமான குவலயாபீடத்தை சர்ங்கபங்கம் பண்ணி. மேலிருந்தவன்தலைசாடி. கொம்புமுறிந்து தளர்ந்து விழுந்தத்தை சிக்ஷாபலத்தாலே எழுப்பி அதின்மேலேயிருந்து நடத்திக்கொடுவந்த பாகனுடைய தலையை அந்த ஆனைக் கொம்பாலே சிதறவடித்து. மற்பொருது. ஆனையின் கொம்பையும் கையிலே கொண்டு உள்ளே புகுந்தவளவிலே அந்த செருக்குப் பொறுமல் வந்தெதிர்ந்த சாணூரமுஷ்டிகரான மல்லருடல்கள் நெரிந்துவிழும்படியாக அவர்களோடே பொருது. எழுப்பாய்ந்தரையனை யுதைத்த. அநந்தரம், கம்ஸனிருக்கிற மஞ்சத்தின் முற்றவெளியிலேசென்று (க) 'துங்கமஞ்சவ்யவஸ்திதம்' என்கிறபடியே உயர்ந்தமஞ்சத்திலே யிருக்கிறவனைக்கண்டு· அவனிருக்கிறவிடத்திலே கிளரக்குதித்து, ராஜாவாய்க்கொண்டு அபிஷேககமும் தானுமாயிருக்கிறவனை, (உ) "கேசேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே। ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாத ச" என்கிறபடியே அபிஷேகத்தைத்தட்டிப் பொகட்டு மயிரைப்பிடித்திழுத்து மஞ்சத்துக்குக் கீழேதள்ளி அவன்மேலே குதித்துத் திருவடிகளாலேஉதைத்த. மால்புருடோத்தமன்வாழ்வு. இப்படி ஆஸுரப்ரக்ருதியான கம்ஸனை நிரஸித்த பெருமையையுடையனான புருஷோத்தமனுக்கு அபிமதமான தேசம்.

அற்புதமுடைய ஐராவதமதமும். ஆச்சர்யமான ரூபசேஷ்டிதாதிகளையுடைய ஐராவதத்தினுடைய மதஜலமும். அவரிளம்படியரொண்சாந்தும். ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்கு அபிமதைகளாய், அந்தப்பதமுள்ளவளவும் யௌவநம் குலையாத வடிவையுடையரான தேவஸ்த்ரீகள் தங்களுக்கு அலங்காரமாகவணிந்த சாந்தும். கற்பகமலரும். அவர்கள் குழலில் சொருகின கற்பகப் பூக்களும். கலந்திழிகங்கை. இவற்றை யெல்லாம் சேர்த்துக் கொண்டு இழியாநிற்கிற கங்கையினுடைய கரைமேல். கண்டமென்னும் கடிநகரே. ... எ.

மூ.—திரைபொருகடல்சூழ் திண்மதிட்வேரைவேந்து தன்மைத்துனன்மார்க்காய்
அரசனையவிய வரசினையருளு மரிபுருடோத்தமனமர்வு
நிரைநிரையாக நெடியனயூப நிரந்தரமொழுக்குவிட்டிரண்டு
கரைபுரைவேள்விப் புகைகமழ்கங்கைக் கண்டமென்னும் கடிநகரே. அ.

பதவுரை.

நிரை நிரை ஆக— ஓரோரொழுங்காய்
நெடியன— நெடியவையா யிருந்துள்ள (பசுக்கள் கட்டப்படுகிற)
யூபம்— யூபஸ்தம்பங்களானவை
நிரந்தரம்— இடைவிடாமல்
ஒழுக்குவிட்டு— நெடுகச்சென்றிருப்பதாய்
வேள்வி புகை— யாகதூமமானது
இரண்டுகரைபுரை— இரண்டு கரையு மொத்து
கமழ்— கந்தியாநின்றுள்ள
கங்கை— கங்கைக்கரையில்
கண்டமென்னுங் கடிநகர்—;
திரைபொரு— அலையெறியாநின்றுள்ள
கடல்— கடலாலே
சூழ்— சூழப்பட்ட
திண்— திண்ணிதான
மதிள்— மதிளையுடைத்தாயிருக்கிற
துவரை— ஸ்ரீத்வாரகைக்கு
வேந்து— அரசனான கண்ணன்

(க) "துங்கமஞ்சவ்யவஸ்திதம்" (உ) "கேசேஷ்வாக்ருஷ்யவிகளத்கிரீடமவநீதலே- ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச"

தன் — தன்னுடைய
மைத்துனன்மார்க்கு — மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு
ஆய் — பக்ஷபாதியாய் நின்று
அரசனை — துர்யோதநன்முதலான அரசர்களை
அவிய — அழித்து
அரசினை — ராஜ்யத்தை
அருளும் — பாண்டவர்களுக்குக்கொடுத்தருளுமவனாய் [ளுமவனாய்
அரி — பாபஹரனான
புருடோத்தமன் — புருஷோத்தமன்
அமர்வு — பொருந்திவர்த்திக்கும் ஸ்தலமாம்.

வ்யா. எட்டாம்பாட்டு. திரைபொருகடல்சூழ் திண்மதிள் துவரைவேந்து. கடலைச் ‡செறுத்துப் படைவீடு செய்ததாகையாலே *திரைபொருகடலாலே சூழப்பட்டிருப்பதாய், திண்ணியதான மதிளையுடைத்தாயிருக்கிற ஸ்ரீமத்த்வாரகைக்கு ராஜாவானவன். * வண்டு வராபதிமன்னனிறே. தன்மைத்துனன்மார்க்காய். (க) "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:" என்கிறபடியே தன்னையே தங்களுக்கு ஆச்ரயமும் பலமும் நாதனுமாகப் பற்றியிருக்கிற தன் மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு பக்ஷபாதியாய் நின்று. அரசனையவிய அரசினையருளும். * பொய்ச்சூதிலே அவர்களைத்தோற்பித்து அவர்கள் ராஜ்யத்தைத் தாங்கள் பறித்துக்கொண்டு, பத்தூர் ஒரூர் கொடுக்கச் சொன்னவிடத்திலும் கொடோமென்று தாங்களே அடையபுஜிப்பதாகவிருந்த துர்யோதநாதி ராஜாக்கள்விளக்குப்பிணம்போலே விழுந்து போகப்பண்ணி ராஜ்யத்தைப் பாண்டவர்களுக்குக் கொடுத்தருளும். அரிபுருடோத்தமன் அமர்வு. (உ) "மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்தவ்யோ பகவாந் ஹரி:" என்று ஆபத்தசையிலே ஸ்மரிக்கப்படுமவனாக ஸ்ரீவஸிஷ்ட்டபகவானாலே த்ரௌபதிக்குச் சொல்லப்பட்டவனாய், (ங) "ஹரிர்ஹரதி பாபாநி துஷ்டசித்தைரபி ஸ்ம்ருத:" என்கிறபடியே ஸ்மரித்தவர்களுடைய ஸகலபாபங்களையும் போக்குமவனான புருஷோத்தமன் பொருந்தி வர்த்திக்கிற ஸ்தலம்.

நிரைநிரையாக நெடியனயூபம். ஒரோ ரொழுங்காய்க்கொண்டு நெடியதாயிருந்துள்ள, பசுக்கள் பந்திக்கிற யூபங்களானவை. நிரந்தரமோழுக்குவிட்டு. இடைவிடாமல் நெடுகச்சென்றிருப்பதாய். இரண்டுகரைபுரை வேள்விப்புகைகமழ் கங்கை. இருகரையுமொத்து யாகதூமம் கந்தியாநிற்கிற கங்கையினுடைய கரையில். கண்டமென்னுங்கடிநகரே. ... ...அ

மூ. — வடதிசைமதுரை சாளக்கிராமம் வைகுந்தந் துவரையயோத்தி
இடமுடைவதரி யிடவகையுடைய வெம்புருடோத்தமனிருக்கை
தடவரையதிரத் தரணிவிண்டிடியத் தலைப்பற்றிக் கரைமரஞ்சாடிக்
கடலினைக் கலங்கக்கடுத்திழி கங்கைக் கண்டமென்னும் கடிநகரே. க.

பதவுரை.

தட வரை — மந்தரம்முதலான பெரியமலைகளானவை [னவை
அதிர — சலிக்கவும்
தரணி — பூமியானது
விண்டு — பிளவுபட்டு

‡ செறுத்து — அணைகட்டி. (க) "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: ... பாண்டவா:." (உ) "மஹத்யாபதிஸம்ப்ராப்தே ..."
"ஹரிர்ஹரதிபாபாநி துஷ்டசித்தைரபிஸ்ம்ருத:"

இடிய— இடிந்துவிழவும்
தலைப்பற்றி – மரங்களினுடைய தலையளவும் செல்லக்கிளம்பி
கரை – கரையில் நிற்கிற
மரம் – மரங்களை
சாடி – மோதி முறித்தும்
கடல்—ஒன்றாலும் கலங்காத கடலுங்கூட
கலங்க— கலங்கும்படி
கடுத்து— வேகமாய்க்கொண்டு
இழி— இழியாநின்றுள்ள
கங்கை— கங்காதீரத்தில்
கண்டம் என்னும் கடிநகர்—;
வட திசை— உத்தரதிக்கிலுள்ள
மதுரை— ஸ்ரீமதுரையும்
சாளக்கிராமம்— ஸ்ரீஸாளக்ராமமும்
வைகுந்தம்— ஸ்ரீவைகுண்டமும்
துவரை— ஸ்ரீத்வாரகையும்
அயோத்தி— திருவயோத்யையும்
இடம் உடை— இடமுடைத்தாயிருந்துள்ள
வதரி— ஸ்ரீபதரிகாச்ரமமுமாகிற இவற்றை
இடம் வகை உடைய— வாஸஸ்த்தாநமாக வுடையனாய்
எம்— எமக்கு ஸ்வாமியான
புருடோத்தமன் — புருஷோத்தமனுடைய
இருக்கை— இருப்பிடமாம்.

வயா. ஒன்பதாம்பாட்டு. வடதிசைமதுரை. வடக்குதிக்கில் மதுரை. தென்திசை மதுரை உண்டாகையாலே விசேஷிக்கிறது. சாளக்கிராமம். புண்யக்ஷேத்ரங்களில் ப்ரதாநமாகஎண்ணப்படும் ஸ்ரீஸாளக்ராமம். வைகுந்தம். அப்ராக்ருதமாய் நித்யவாஸஸ்தலமான ஸ்ரீமத்வைகுண்டம். துவரை. * பதினாறுமாயிரவர் தேவிமார்பணிசெய்ய மணவாளராய் வீற்றிருந்த ஸ்ரீமத்த்வாரகை. அயோத்தி. "அயோத்திநகர்க் கதிபதி" என்கிறபடியே ராமாவதாரஸ்தலமாய் அத்யந்தாபிமதமா யிருந்துள்ள திரு அயோத்யை. இடமுடைவதரி. நராராயண ரூபியாய்க்கொண்டு திருமந்த்ரத்தை வெளியிட்டருளி உகப்புடனே யெழுந்தருளியிருக்கும் ஸ்தலமாய், இடமுடைத்தா யிருந்துள்ள ஸ்ரீபதரி. இடவகையுடைய. இவற்றை வாஸஸ்த்தாநமாக வுடையனான. எம்புருடோத்தமனிருக்கை. ஆச்ரிதரான நமக்கு இனியனான புருஷோத்தமனுடைய இருப்பிடம்.

தடவரையித்யாதி. பகீரதன் தபோபலத்தாலே இறக்கிக்கொடுவருகிறபோது வந்திழிகிற வேகத்தைச் சொல்லுகிறது.

தடவரையதிர. உயர்ந்த நிலத்தில் நின்றும் வந்திழிகிற வேகத்தாலே மந்தராதிகளான பெரிய மலைகள் சலிக்கும்படியாக. தரணிவிண்டிடிய. பர்வதத்தில் நின்றும் பூமியிலே குதிக்கிற வளவில் பூமி விண்டு இடிந்துவிழ. தலைப்பற்றிக்கரைமரஞ்சாடி. வ்ருக்ஷங்களினுடைய தலையளவும் செல்லக் கிளம்பி, கரையில்நிற்கிற மரங்களை மோதிமுறித்து. கடலினைக் கலங்கக்கடுத்திழி கங்கைக்கண்டமென்னும் கடிநகரே. ஒன்றாலும் கலங்காத கடலும் கலங்கும்படி வேகித்துக்கொண்டு இழியாநின்ற கங்கையினுடைய கரைமேலே, கண்டமென்னும் கடிநகரே. ... ... ... ... ... ௯.

மூ.—மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி மூன்றெழுத்தை
ஏன்றுகொண்டிருப்பார்க் கிரக்கநன்குடைய வெம்புருடோத்தமனிருக்கை
மூன்றடிநிமிர்த்து மூன்றினிற்றோன்றி மூன்றினில் மூன்றுருவானான்
கான்றடம்பொழில்சூழ் கங்கையின் கரைமேற் கண்டமென்னும் கடிநகரே. ௰.

பதவுரை.

கான்— நன்னாற்றம் கமழாநின்றுள்ள
தடம்— பெரிய
பொழில்— பொழில்களாலே
சூழ்— சூழப்பட்டிருப்பதாய்

கங்கையின்கரைமேல்— கங்காதீரத்திலுள்ள கண்டமென்னும் கடிநகர்—;
மூன்று அடி நிமிர்த்து — திருமந்த்ரத்தை மூன்றுபதமாகவளர்த்து
மூன்றினில் — அந்த மூன்றுபதத்திலும் தோன்றி— † ஆகாரத்ரயத்தையும் தோன்றுவித்து
மூன்றினில்— சேதநனுடைய ஆகாரத்ரயத்துக்கும் ப்ரதிஸம்பந்தியாக
மூன்று உரு ஆனுன்—சேஷித்வ, சரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயத்தையுமுடையனுய்
மூன்று எழுத்து அதனை— அகார, உகார, மகாரங்களாகிற மூன்றெழுத்துக்களை
மூன்று எழுத்து அதனல்— 'நிருக்தம்' என்னும் பேரையுடைய மூன்றெழுத்துக்களாலே
மூன்று எழுத்து ஆக்கி— மூன்றெழுத்துக்கு வாசகமாயிருக்கும் மூன்றெழுத்தாகப் பிரித்து
மூன்று எழுத்தை— அம்மூன்றெழுத்தையும்
ஏன்று கொண்டு இருப்பார்க்கு— 'நமக்குத்தஞ்சம்' என்று தங்கள் நெஞ்சிலே தரிக்குமவர்களுக்கு
நன்கு இரக்கம் உடைய— தன்பேறுகச் செய்யும் தயையை உடையனுய்
எம்— எமக்கு ஸ்வாமியான
புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு
இருக்கை— வாஸஸ்த்தாநமாம்.

† ஆகாரத்ரயம்— அநந்யார்ஹ சேஷத்வம், அநந்யசரணத்வம், அநந்யபோக்யத்வம்.

வ்யா. பத்தாம்பாட்டு. மூன்றெழுத்ததனை. (௧) "[illegible]" இத்யாதிப்படியே வேதத்ரயத்தினின்றும் வ்யாஹ்ருதித்ரயத்தையும் தோன்றுவித்து, பரிசுத்தமான வ்யாஹ்ருதித்ரயத்தையும் ஸ்வஸங்கல்பத்தாலே பொன் ஓடவைக்குமாபோலே ஓடவைத்து, அந்த வ்யாஹ்ருதித்ரயத்தினின்றும் அகார உகார மகாரங்களாகிற அக்ஷரத்ரயத்தையும் ஸம்ஹிதாகாரத்தாலே "ஓம்" என்று ஏகாக்ஷரமாக்கப்பட்டதாகையாலே அக்ஷரத்ரயாத்மகமாயிருக்கிற அந்த ப்ரணவத்தை. "அதனை" என்றது அதினுடைய கௌரவத்தைப்பற்ற. (௨) "[illegible]" என்னும்படியிறே இதினுடைய வைபவம். மூன்றெழுத்ததனுல். பதஸமுதிகமேஹனுவாய் "நிருக்தம்" என்று மூன்று அக்ஷரமான பேரையுடைத்தாயிருக்கிறவதிஞலே. மூன்றெழுத்தாக்கி. ப்ரக்ரியைபண்ணும் க்ரமத்தாலே ப்ரக்ரியை பண்ணி, மூன்றுபதமாய் மூன்றர்த்தத்துக்கு வாசகமாயிருக்கும் மூன்றெழுத்தாகப்பிரித்து. ப்ரணவந்தான் ஸம்ஹிதாகாரத்தாலே மூன்றக்ஷரமாய்மூன்றுபதமாய்மூன்றர்த்த ப்ரதிபாதகமாயிறே யிருப்பது. மூன்றெழுத்தை யேன்றுகொண்டிருப்பார்க்கு. அந்த மூன்றெழுத்தையும், 'நமக்குத் தஞ்சமான அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிறதாகையாலே நமக்கு உத்தேச்யம்' என்று தங்கள் நெஞ்சிலே தரிக்குமவர்களுக்கு. அதாவது அகாரமானது ஸ்வரூபேணவும் தாதுநிஷ்பந்நரூபேணவும் ப்ரத்யயவேஷேணவும் ஈச்வரனுடைய காரணத்வ ரக்ஷகத்வ சேஷித்வங்களையும், அர்த்தபலத்தாலே ஸ்ரீயப்பதித்வத்தையும் ஏவம்பூதனுன ஈச்வர விஷயத்தில் சேதநனுடைய சேஷத்வத்தையும் ப்ரதிபாதிக்கையாலும், உகாரமானது

(௧) "பூரிதி ருக்வேதாதஜாயத" (௨) "ஆத்யந்து த்ர்யக்ஷரம்ப்ராஹ்ம த்ரயீ யஸ்மிந் ப்ரதிஷ்டிதா - ஸகுஹ்யோந்ய: த்ரிவ்ருத்வேதோ யஸ்தம்வேத ஸவேதவித்."

அவதாரணவாசகமாய்க்கொண்டு அந்த சேஷித்வத்தினுடைய அநந்யார்ஹதையை ப்ரதிபா திக்கையாலும், மகாரமானது (க) " உ௩-ஜூரெ " என்கிற தாதுவிலே நிஷ்பந்நமாய்க்கொ கொண்டு ஜ்ஞாநவாசியுமாய், அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு ஆச்ரயமான ஆத்மாவினுடைய தேஹாதிரிக்தாதிகளை ப்ரதிபாதிக்கையாலும், அக்ஷரத்ரயமும் நமக்குத் தஞ்சமான அர்த் தத்தையே சொல்லுகிறதென்று தங்கள் நெஞ்சில் எப்போதும் அநுஸந்தித்திருக்கை. இச க்கம் நன்குடையவெம்புருடோத்தமனிருக்கை. இவர்களளவிலே தன்பேறாக க்ருபை பண்ணுமவனாய் எனக்கு ஸ்வாமியான புருஷோத்தமனுடைய வாஸஸ்தாநம்.

மூன்றடி நிமிர்த்து. இந்தப்ரணவந்தான் (உ) "ஓமி த்யெ ஹெவா்ா ஹவ்ராக" என்கிற படியே பதத்ரயாத்மகமான திருமந்த்ரத்தில் ப்ரதமபதமாகையாலே இத்தோடேகூட மேலிரண்டு பதத்தையுங் கூட்டி மூன்று பதமாக வளர்த்து. மூன்றினிற்றோன்றி. அந்த மூன்று பதத்திலும் ஆத்மாவினுடைய அநந்யார்ஹசேஷத்வம் அநந்யசரணத்வம் அநந்யபோக்யத்வமாகிற ஆகார த்ரயத்தையும் தோன்றுவித்து. " தோன்றி " என்றது - தோன்றுவித்து என்றபடி. மூன்றினில் மூன்றுருவானான். பதத்ரய ப்ரதிபாத்யனான சேதநனுடைய ஆகாரத்ரயமும் விஷயமாக தத்ப்ரதிஸம்பந்தியா, தானும் சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயத்தையு முடையனானவன். இம்மந்த்ரத்தை பதத்ரயாத்மகமாய் சேதநனுடைய ஆகாரத்ரயத்தையும் தன்னுடைய ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கும்படி அவன் ¶ அடியிலே உண்டாக்கி வைத்தான். ஈச்வரனாகையாலே இவை யெல்லாவற்றையும் அவன் செயலாக வருளிச் செய்கிறார். கான் தடம்பொழில்சூழ் கங்கையின் கரைமேல். " கான் " என்று நாற்றம். தடமென்று- பெருமை. நறுநாற்றத்தை யுடைய பெரிய பொழில்களாலே சூழப்பட்டிருப்பதாய், கங்கையினுடைய கரையிலேயான. கண்டமென்னுங்கடிநகரே....(ய).

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார். *

மூ.—பொங்கொலி கங்கைக்கரைமலி கண்டத்துறை புருடோத்தமனடிமேல்
வெங்கலிநலியா வில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன் விருப்புற்றுத்
தங்கியவன்பாற் செய் தமிழ்மாலை தங்கிய நாவுடையார்க்குக்
கங்கையிற்றிருமால் கழலிணைக்கீழே குளித்திருந்த கணக்காமே. ௧௧.

பதவுரை.

| | |
|---|---|
| பொங்கு—ஜலத்தின் கொழிப்பால்வந்தகிளர்த்தியை யுடைத்தாய் | புருடோத்தமன் — புருஷோத்தமனுடைய |
| ஒலி— கோஷத்தையுடைத்தான | அடிமேல்— திருவடிகளிலே |
| கங்கை கரை — கங்கையின்கரையிலேயாய் | வெம்— கொடிய |
| மலி— எல்லாப்படியாலுமுண்டான ஏற்றத்தையுடைத்தாயிருக்கிற | கலி— கலியால்வந்த |
| கண்டத்து — திருக்கண்டங்கடிநகரிலே | நலியா— நலிவொன்றில்லாத |
| உறை — நித்யவாஸம் பண்ணுகிற | வில்லிபுத்தூர் கோன் } ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான |
| | விட்டுசித்தன்— பெரியாழ்வார் |

(க) " மந - ஜ்ஞாநே " (உ) " ஓமித்யக்ரேவ்யாஹரேத் " ¶ மா-பா.

விருப்பு உற்று— விரும்பி
தங்கிய— நிலைநின்ற
அன்பால்— அன்பினாலே
செய்— செய்த
தமிழ் மாலை— தமிழ்த்தொடையான இது
தங்கிய— ஒருக்காலும் நீங்கா திருக்கிற
நா உடையார்க்கு—நாவைஉடையவர்களுக்கு
கங்கையில்— கங்காநதியிலே
குளித்து— நீராடி
திரு மால்— ஸ்ரீய:பதியினுடைய
இணை— ஒன்றுக்கொன்றொப்பான
கழல் கீழ்— திருவடிகளின்கீழே
இருந்தகணக்கு ஆம்—நிரந்தரஸேவைபண்ணி யிருந்ததொருப்ரயோஜநத்தோடொக்கும்.

வ்யா. பொங்கித்யாதி. ஜலத்தினுடைய கொழிப்பால் வந்த கிளர்த்தியையும் கோஷத்தையு முடைத்தான கங்கையினுடைய கரையிலேயாய், ஸர்வ ப்ரகாரத்தாலுமுண்டான ஏற்றத்தை யுடைத்தாயிருக்கிற திருக்கண்டங் கடிநகரிலே நித்யவாஸம்பண்ணுகிற புருஷோத்தமனுடைய திருவடிகளிலே. வேங்கலி நலியா வில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன் விருப்புற்று. விபரீதஜ்ஞாநாதிகளை ஜநிப்பிக்கும் க்ரூரமான கலியுகத்தால் வந்த நலிவென்பதொன்றில்லாத ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் ஆசைப்பட்டு. தங்கியவன்பால்செய் தமிழ்மாலை. நிலைநின்ற ப்ரேமத்தாலே செய்த தமிழ்த்தொடையானவிது. தங்கிய நாவுடையார்க்கு. ஒருகாலும் நீங்காதே வர்த்திக்கும்படியான நாவை யுடையவர்களுக்கு. அதாவது - எப்போதும் இத்தையே சொல்லிக்கொண்டு திரியுமவர்களுக்கென்கை. கங்கையிலித்யாதி. கங்கையில் - குளித்து - திருமால் கழலிணைக்கீழே - இருந்த கணக்காமே. அதாவது - இத்திருமொழி தங்கின நாவுடையவர்களுக்கு ஏதேனுமோரிடத்திலே இருந்தாலும், ஸர்வேச்வரன் திருவடிகளில் பிறப்பால்வந்த ஏற்றத்தையுடைய கங்கையிலே ஸ்நாநம்பண்ணி, திருக்கண்டங்கடிநகரிலே எழுந்தருளி யிருக்கிற ஸ்ரீய:பதியானவன் திருவடிகளின்கீழே நிரந்தர ஸேவைபண்ணி யிருந்தத்தோடு ப்ரயோஜநமொக்குமென்கை. பகவத்ப்ரீதியிறே அதுக்கு ப்ரயோஜநம்; அது இவர்களுக்கு மொக்குமென்றதாய்த்து. ... ... ... கக.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு.—தங்கையை சல மதிர் இமையவ ருழு தலை வில் திரை வடதிசை மூன்றெழு பொங்கொலி மாதவ.

ஆ திருமொழி-௩௲-க்கு, பாட்டு-௩அக.

—(o)—

நான்காம்பத்து - எட்டாந்திருமொழி - மாதவத்தோன், ப்ரவேசம்.

அ. “போகத்தில்வழுவாத புதுவையர்கோன்” என்கிறபடியே திருவவதார ஸமயமே தொடங்கி க்ர்ஷ்ணவதார குணசேஷ்டிதங்களையெல்லாம் முற்றூட்டாக வநுபவித்துக் கொண்டு வந்த விவர், *என்னுதன் தேவியிலே அந்தக்ர்ஷ்ணவதார சேஷ்டிதங்களோடே ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும் அநுபவிக்கையி லுண்டானவாசையாலே இரண்டையும் ஒன்றுக்கொன்று எதிராக்கிப்பேசி நின்று அநுபவித்து,பின்பு *கதிராயிர மிரவியிலே ராம

க்ர்ஷ்ணவதார குணசேஷ்டிதங்களையும் அவதாராந்தர குணசேஷ்டிதங்களையும் கலப்பிலே
அநுபவித்தவநந்தரம் இவ்வவதாரகுணசேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி உகந்தருளின
நிலங்களிலே எழுந்தருளிநிற்கிற நிலைகளை யநுபவிக்கவேணுமென்னு மாசை பிறந்து ப்ர
தமம், ராமக்ர்ஷ்ணாத்யவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி திருமலையிலே
யெழுந்தருளிநிற்கிற அழகரையும், அவரிலுங்காட்டில் ப்ராப்யத்தில் சரமாவதியான திருமலை
யாழ்வாரையு மநுபவித்து, பின்பு திருக்கோட்டியூரிலே நிற்கிற நிலையையும் அநுபவிக்கை
யிலே ப்ரவர்த்தரான விவர்; அங்கேயெழுந்தருளி நிற்கிற நிலையில் தங்களுக்கு ஆதரணீய
மன்றிக்கே அந்யபரராய்த்திரிகிற ஸம்ஸாரிகளை நிந்தித்தும், அந்நிலையின் வாசியறிந்து ப்ரவ
ணரா யநுபவிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ச்லாகித்தும், இப்படி யிருந்துள்ள செருக்கோடே
கூடியநுபவித்து, தாம்நிந்தித்தவர்களையும் விடமாட்டாத பரமக்ர்பையாலே அவர்களைக்குறி
த்து இரண்டு திருமொழியாலே பரோபதேசத்தைப்பண்ணி, மீளவும் உகந்தருளின நிலங்க
ளிலே நிற்கிற நிலையை யநுபவிக்கையிலுள்ள வாசையாலே "வடதிசை மதுரை" இத்யா
திப்படியே அநேக தேசத்திலுண்டான விருப்பத்தையெல்லாம் பண்ணிக்கொண்டு திருக்
கண்டங்கடி நகரிலே அவதாரகுண சேஷ்டிதங்கள் எல்லாம் ப்ரகாசிக்கும்படி எழுந்தருளி
நிற்கிறபடியையும், அத்தேசவைபவந்தன்னையும் அநுபவித்து இனியராய் நின்றார்- கீழ்; அ
வையெல்லாம்போலன்றிக்கே, "வடிவுடை வானோர்தலைவனே" என்றும், "கடலிடங்
கொண்ட கடல்வண்ணா" என்றும், "கட்கிலீ" என்றும், "காகுத்தா கண்ணனே" என்
றும் சொல்லுகிறபடியே- பரத்வாதிகளிலுண்டான குணங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி வர்த்
திக்கிற ஸ்தலமாய், "பொங்கோதஞ் சூழ்ந்தபுவனியும்" இத்யாதிப்படியே உபயவிபூதி
யையும் தனிக்கோல் செலுத்துகிறதும் இங்கேயிருந்தே என்று தோற்றும்படி யிருப்பதாய்
"மாலிருஞ்சோலை மணாளர் பள்ளிகொள்ளுமிடம்" என்றும், "பொன்னிசூழரங்கநகருள்
முனைவன் - திருமாலிருஞ்சோலைநின்றான்" என்றும், "பயின்றதரங்கம் திருக்கோட்டி"
"தேனார் திருவரங்கம் தென்கோட்டி" என்றும் சொல்லுகிறபடியே முன்பு அநுபவித்த
திருமலை திருக்கோட்டியூரில் நிலைகளுக்கு வேர்ப்பற்றான விடமுமாய், "ஆராமஞ்சூழ்ந்த
வரங்கம்" என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாம் பகலிருக்கை என்னும்படி ஆச்ரித
ரக்ஷணத்துக்கு ஏகாந்தமானவிடமென்று நித்யவாஸம் பண்ணுகிற ஸ்தலமான * திருவரங்
கந்திருப்பதியிலே; "வன்பெருவானகம்" இத்யாதிப்படியே ஸகல தேசத்திலுள்ளாரும்
உஜ்ஜீவிக்கும்படியாகவும், "தென்னாடும் வடநாடும் தொழநின்ற" என்றும், "யாவரும்
வந்தடிவணங்க" என்றும் சொல்லுகிறபடியே ஸகல தேசத்திலும் ருசிபிறந்தவர்களெல்லா
ரும் வந்து அநுபவிக்கும்படியாகவும் ஆச்ரயிக்கும்படியாகவும், "அன்பொடு தென்திசை
நோக்கி" என்கிறபடியே * மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி
மலர்க்கண் வைத்து, "திருவாளனினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற" என்கிறபடியே ஸ்ரிய:
பதியாகையால் வந்த பெருமை தோற்றத் திருவுள்ளத்திலுகப்புடனே கண்வளர்ந்தருளுகிற
பெரியபெருமாள்பக்கலிலே, விசேஷித்து க்ர்ஷ்ணவதாரகுணசேஷ்டிதங்களும் ராமாவதார
குணசேஷ்டிதங்களும் அவதாராந்தரகுணசேஷ்டிதங்களுமெல்லாம் ஒருமடைகொள்ள ப்ரகா
சிக்கிறபடிகளை * திருவரங்க மதனைச்சென்று அநுபவியாநின்றுகொண்டு, அவர் தம்மிலுங்
காட்டில் அவர் விரும்பிக் கண்வளர்ந்தருளுகிற தேசமே பரமப்ராப்யமாகையாலே அத்தேச
த்திலுடைய வைபவத்தையும் பஹுமுகமாகப்பேசி அநுபவித்து ப்ரீதராகிறார் - இத்
திருமொழியில். ... ... ... ... ... ... *

அ. முதற்பாட்டு. ஸாந்தீபிநிபுத்ராநயநம் பண்ணினவன் வர்த்திக்கிற தேசமிது வென்கிறார்.

மூ.—மாதவத்தோன்புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்ததக்கணையா வுருவுருவே கொடுத்தானூர்
தோதவத்தித் தூய்மறையோர் துறைபடியத் துளும்பியெங்கும்
போதில்வைத்ததேன்சொரியும் புனலரங்கமென்பதுவே. க.

பதவுரை.

தோதம்— பரிசுத்தமாய் தோய்த்து உலர்த்தின
வத்தி— வஸ்த்ரங்களை யுடுத்துமவராய்
தூய்— தூய்தான [குற்றமற்ற]
மறையோர்— வேதத்தையே தங்களுக்கு நிரூபகமாகவுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள்
துறை— காவிரியில் திருமுகத்துறை முதலிய துறைகளிலே
படிய— திரள்திரளாக நீராட
(அதனாலே)
எங்கும்— எங்கும்
துளும்பி— அலையெறிந்து
(பூக்களின் நாளங்களையலைக்க,)
போதில் வைத்த— அந்தப்பூக்களில் வைத்த
தேன்— தேனானது
சொரியும்— சொரியும்படியான
புனல்— புனலையுடைத்தாய்
அரங்கம் என்பது— 'திருவரங்கம்' என்னும் திருநாமத்தையுடைய திவ்யநகரமானது—;
மறி— திரைமறிகிற
கடல்வாய்— கடலிடத்திலே
போய்— புகுந்து
மாண்டான்— முதலைவாயிலகப்பட்டு மாண்டவனை
மாதவத்தோன்புத்திரனை } மிக்கதபஸ்ஸையுடைய ஸாந்தீபிநியின் பிள்ளையை,
ஓதுவித்த— (ஸாந்தீபிநி) தன்னை அத்யயநம் பண்ணுவித்ததுக்கு
தக்கணையா— தக்ஷிணையாக
உரு உருவே— அந்த புத்ரன் இறந்தபோதிலிருந்த வடிவின்படியே
கொடுத்தான்— கொண்டுவந்து கொடுத்தவன் நித்யவாஸம் பண்ணுகிற
ஊர்— தேசம்.

வ்யா. மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை. மஹாதபஸ்ஸையுடையனான ஸாந்தீபிநிபுத்ரன், நெடுங்காலத்திலே, திரைமறிகிற கடலிடத்திலே புகுந்து மடிந்தவனை. ஓதுவித்த தக்கணையா. அத்யயநம் பண்ணின வநந்தரம் குருதக்ஷிணை கொடுக்கத் தேடுகிறவளவிலே, இவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களை அறிந்தவனாகையாலே "காதலென்மகன் புகலிடம் காணேன் கண்டு நீ தருவாயெனக்கு" என்று முன்பே ஸமுத்ரத்தில் மாந்தனை என்புத்ரனைக்கொண்டு வந்து தரவேணும் என்று அபேக்ஷிக்க, "அப்படியே செய்கிறோம்" என்று, அவன் அத்யயநம் பண்ணுவித்ததுக்கு தக்ஷிணையாக. உருவுருவே கொடுத்தானூர். (க) "[illegible]" என்கிறபடியே பூர்வதேஹத்தில் ஒன்றும் விசேஷமறக் கொண்டுவந்து கொடுத்தவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

தோதவத்தித் தூய்மறையோர். ஸமாசாரபரராகையாலே, பரிசுத்தமாகத்தோய்த்து உலர்த்தின வஸ்த்ரங்களை தரித்துக்கொண்டிருப்பாராய், தூய்தானமறையையே தங்களுக்கு

(க) "தம்பாலம் யாதநா ஸம்ஸ்தம் யதாபூர்வசரீரிணம் - பித்ரேப்ரதத்தவாந்க்ருஷ்ணோ"

நிரூபகமாகவுடையாராயிருக்குமவர்கள். மறைக்குத் தூய்மையாவது—அபௌருஷேயமாய், நித்ய நிர்த்தோஷமாயிருக்கையாலே ஸர்வப்ரமாணவிலக்ஷணமாய், பகவத்ஸ்வரூபரூபகுண விபூதிகளை உள்ளபடி ப்ரதிபாதிக்கவற்றாயிருக்கை. இத்தை இவர்கள் நிரூபகமாகவுடையாராயிருக்கையாவது (க) "ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" என்கிற விதிப்ரகாரம் தப்பாமல் அத்யயநம்பண்ணி, அதில் அர்த்தஜ்ஞாநத்தையும் அதுக்கு அநுரூபமான அநுஷ்டாநத்தையுமுடையாராயிருக்கையாலே வைதிகர் என்றே நிரூபகமாம்படியிருக்கை. துறைபடிய. "கங்கையிற் புனிதமாய காவிரி" என்கிறபடியே * கலந்திழி புனலான கங்கையிலுங்காட்டில் பரிசுத்தமான காவேரியிலே, பெரியபெருமாளுடைய திருக்கண்ணோக்கான திருமுகத்துறை முதலான துறைகளிலே, திரள்திரளாக அவகாஹித்து ஸ்நாநம்பண்ண. துளும்பியித்யாதி. அப்படி அவர்கள் திரள்திரளாகப்புகுந்து ஸ்நாநம் பண்ணுகையாலே எங்கும்அலையெறிந்து, ஆஸந்நமான புஷ்பங்களின் நாளங்களையலைக்க, அந்தப்பூக்களில் வைத்ததேனானது சொரியும் படியான புனலையுடைத்தாய், திருவரங்கம் என்கிற திருநாமத்தையுடைத்தாயிருக்கிற திவ்யநகரி. (உ) "க்ஷீராப்தேர்மண்டலாத்பாநோ: யோகிநாம் ஹ்ருதயாதபி । ரதிங்கதோ ஹரிர்யத்ர தஸ்மாத்ரங்கமிதிஸ்ம்ருதம்" என்கிற ஏற்றத்தையுடைத்தாயிருக்கையாலே "அரங்கமென்பதுவே" என்று ப்ரஸித்திதோற்றவருளிச்செய்கிறார். ... ... க.

அ. இரண்டாம்பாட்டு. வைதிகபுத்ராநயநம் பண்ணினவன் வர்த்திக்கிற தேசமிது வென்கிறார்.

மூ.—பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்
இறைப்பொழுதிற் கொணர்ந்துகொடுத் தொருப்படுத்தவுறைப்பனூர்
மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார்
சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே. உ.

பதவுரை.

மறை— வேதத்தில் சொல்லிப்போந்தபடியே
பெரு— சிறந்த
தீ— மூன்று அக்நிகளையும்
வளர்த்து இருப்பார்— வளர்க்குமவர்களாய்
வரு— தந்தாம் திருமாளிகைக் கெழுந்தருளுகிற
விருந்தை— அதிதிகளான ஸ்ரீவைஷ்ணவர்களை
அளித்து இருப்பார்— ஆதரித்துக்கொண்டு போருமவர்களாய்
சிறப்பு உடைய— இவ்வகையான நன்மைகளை யுடையராய்
மறையவர்— வேததாத்பர்ய மறிந்திருக்குமவர்கள்
வாழ்— பகவதநுபவத்தாலே வாழாநின்றுள்ள
திரு அரங்கம் என்பது—; [யே
பிறப்பு அகத்தே— ஸூதிகாக்ருஹத்திலே
மாண்டு ஒழிந்த— மாண்டுபோய் விட்ட
பிள்ளைகள் நால்வரையும் — நாலுபிள்ளைகளையும்
இறை பொழுதில்— ஒருநொடிப்பொழுதில்
கொணர்ந்து— பரமபதத்தில் நாய்ச்சிமார் கையில் நின்றும் வாங்கிக்கொண்டு வந்து

(க) "ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" (உ) க்ஷீராப்தேர்மண்டலாத்பாநோ: யோகிநாம் ஹ்ருதயாதபி । ரதிங்கதோ ஹரிர்யத்ர தஸ்மாத்ரங்கமிதிஸ்ம்ருதம்"

கொடுத்து-தந்தைதாயர்கையிலே கொடுத்து
ஒருப்படுத்த— 'எங்கள் பிள்ளைதான்' என்று ஸம்மதிபண்ணுவித்த

உறைப்பன்— சக்தியையுடையவன் வர்த்திக்கிற
ஊர்— தேசம்.

வ்யா. பிறப்பித்யாதி. "ஒருப்ராஹ்மணனுக்கு முன்பே மூன்றுபிள்ளைகள், பிறந்த போதேகாணவொண்ணாதபடி போய்விடுகையாலே, நாலாம்பிள்ளையை ஸ்த்ரீ ப்ரஸவிக்கத் தேடுகிறவளவிலே, க்ர்ஷ்ணன்பக்கலிலே வந்து, 'இந்தவொருபிள்ளையையும் தேவரீர் ரக்ஷித்தருளவேணும்' என்று அபேக்ஷிக்க; க்ர்ஷ்ணனும், 'அப்படியே செய்கிறோம்' என்று அநுமதிசெய்த வநந்தரம், ஏகாஹதீக்ஷையானக்ரதுவிலே தீக்ஷிதராயிருக்கிறவிவர் எழுந்தருளவொண்ணாது என்னுமத்தைப்பற்ற, 'நான்போய் ரக்ஷிக்கிறேன்' என்று அர்ஜுநன் ஏன்றுகொண்டு ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய் ஸூதிகாக்ர்ஹத்தைச்சுற்றும் காற்றுமுட்பட ப்ரவேசிக்கவொண்ணாதபடி சரக்கூடமாகக் கட்டிக் காத்துக்கொண்டு நிற்கச்செய்தே, அந்தப் பிள்ளை பிறந்தவளவிலே பழையபடியே காணவொண்ணாதபடி போய்விட்டவளவிலே, ப்ராஹ்மணன்வந்து அர்ஜுநனை 'க்ஷத்ரியாதமா! உன்னாலேயன்றோ பிள்ளை போகவேண்டிற்று, க்ர்ஷ்ணனெழுந்தருளி ரக்ஷிக்கிறவித்தை நீயன்றோ கெடுத்தாய்' என்று பர்த்ஸித்து, க்ர்ஷ்ணன்பக்கலிலே தள்ளிக்கொண்டுவர; க்ர்ஷ்ணன் இத்தைக்கண்டு மந்தஸ்மிதம் பண்ணி, 'அவனை விடு, உன்பிள்ளை நாம்கொண்டுவந்து தருகிறோம்' என்று ப்ராஹ்மணனுக்கு அருளிச்செய்து, போனபிள்ளைகளை மீளக்கொண்டுவந்து கொடுத்தான்" என்கிற கதையை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும். "என்னுடைமனைவி காதல் மக்களைப் பயத்தலுங்காணாள்" என்கிறபடியே பெற்றவளுமுட்பட முகத்தில் விழிக்கப்பெறாதபடி ஸூதிகாக்ர்ஹத்திலே, "இன்னவிடத்திலே போய்த்து" என்று தெரியாதபடி மாண்டுபோய்விட்ட நாலுபிள்ளைகளையும். இறைப்பொழுதில் கோணர்ந்து கொடுத்து. தீக்ஷிதனாய்நிற்கிற காலமாகையாலே ப்ராதஸ்ஸவநம் தலைக்கட்டி மாத்யந்திநஸவநத்துக்குமுன்னான அல்பகாலத்திலே, "எல்லாவுலகுங்கழியப் படர்புகழ்ப்பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்டேர்கடவி" என்கிறபடியே ப்ராஹ்மணனையும் அர்ஜுநனையுங்கூடத் தேரிலே கொண்டேறி, அர்ஜுநனைத் தேரைநடத்தச்சொல்லி, அண்டத்துக்குள்ளுண்டான லோகங்களும் ஆவரணங்களுமாகிற எல்லாவற்றுக்கும் அவ்வருகு படும்படியாக, கார்யரூபமானதோர் காரணரூபமான தத்வங்களுக்குள்ளே போகிறவிடத்தில் உருக்குலையாமல் தேருக்குத்திண்மையைக்கொடுத்து நடத்திக்கொண்டுபோய், தமஸ்ஸளவில் சென்றவாறே தேரையும் இவர்களையும் நிறுத்தி, "சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதி" என்கிறபடியே ஜலத்திலே மத்ஸ்யமுலாவுமாபோலே தேசிகரே ஸஞ்சரிக்க வேண்டும்படி நிரவதிகதேஜோரூபமான பரமபதத்திலே, தன்னிலமாகையாலே தானேபோய்ப்புக்கு, நாய்ச்சிமார், தங்கள் ஸ்வாதந்த்ர்யம் காட்டுகைக்காக அங்கே அழைப்பித்திட்டுவைத்த அந்தப்பிள்ளைகளை அங்குநின்றுமெடுத்துக்கொண்டுவந்து மாதாபிதாக்கள் கையிலேகொடுத்து. ஒருப்படுத்த உறைப்பனூர் "தாயொடுகூட்டிய" என்கிறபடியே பூர்வரூபத்தில் ஒன்றும் குலையாமல், "என்னுடைய பிள்ளைகள்" என்று தாயார் எடுத்தணைத்து உச்சிமோந்துகொள்ளும்படி சேர்த்துவிட்ட சக்திமானானவன் வர்த்திக்கிற தேசம்.

மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார். வேதோக்தமான மஹாக்நிகளை பலஸாதநமாகவன்றிக்கே பகவத்ஸமாராதநபுத்தியாலே அவிச்சிந்நமாக வளர்த்துக்கொண்டிருக்குமவர்கள். வரு

விருந்தை யளித்திருப்பார். வரும்விருந்தினரை ரக்ஷித்துக்கொண்டிருப்பார். அதாவது தந்தாம் திருமாளிகையிலே எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களை, ஸ்வரூபாநுரூபமாக ஆதரித்து அமுது செய்யப்பண்ணுகை. சிறப்புடையமறையவர்வாழ். இப்படி வைதிககர்மாநுஷ்டாநத்தையும் பகவத்ஸமாராதநத்தையும் அநந்யப்ரயோஜநமாகச் செய்கையாகிற நன்மையையுடையாராய், இதுக்கு உடலாக வேததாத்பர்யத்தை யறிந்திருக்குமவர்கள், பெருமாளைய நுபவித்துக்கொண்டு வாழாநிற்கிற திருவரங்கமென்பதுவே. ... ... ... உ.

அ. மூன்றும்பாட்டு. கரிக்கட்டையைப் பிள்ளையாக்கியும், பாண்டவர்களுடைய தேஹம் பாரதயுத்தத்தில் அழியாதபடி நோக்கியும் செய்தவன்வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

ஙூ.—மருமகன்றன் சந்ததியை யுயிர்மீட்டு மைத்துனன்மார்
உருமகத்தேவீழாமே குருமுகமாய்க் காத்தானூர்
திருமுகமாய்ச் செங்கமலந் திருமுகமாய்க் கருக்குவளைப்
பொருமுகமாய்நின்றலரும் புனலரங்க மேன்பதுவே. ௩.

பதவுரை.

செங்கமலம்— செந்தாமரை மலரானது
திருமுகம் ஆய்— பெரியபெருமாள் திருமுகத்துக்குப் போலியாய்
கரு— கறுத்த
குவளை— உத்பலமானது
திருநிறம் ஆய்— அவருடைய திருநிறத்துக்குப் போலியாய்
பொரு— ஒன்றுக்கொன்று எதிர்பொருகிற
முகம் ஆய் நின்று— முகத்தையுடைத்தாய்க் கொண்டு
அலரும்— அலராநின்றுள்ள
புனல்— நீர்வளப்பத்தையுடைய
அரங்கம் என்பது—;
மருமகன் தன் — மருமகனான அபிமந்யுவினுடைய
சந்ததியை— புத்ரனாய், கரிக்கட்டையாய்க் கிடந்த பரிக்ஷித்தின் சரீரத்தை
(திருவடிகளாலே ஸ்பர்சித்து,)
உயிர் மீட்டு— உயிர்பெறும்படி பண்ணி
மைத்துனன்மார்— மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய
உரு— சரீரமானது
மகத்து— பாரதயுத்தமாகிற நரமேதத்திலே
வீழாமே— விழுந்து நசித்துப் போகாமல்
குரு முகம் ஆய்— குருமுகமாய் நின்று
(ஹிதோபதேசங்களைப்பண்ணி)
காத்தான்— ரக்ஷித்தவன் வர்த்திக்கிற
ஊர்— தேசம்.

வயா. மருமகனித்யாதி. மருமகனான அபிமந்யுவினுடைய புத்ரனான பரிக்ஷித்தின் ப்ராணனை மீட்டு. அதாவது- கரிக்கட்டையாய்ப்போனவனை (க) "யதிமே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ்ச திஷ்டதி । அவ்யாஹதம் மமைஶ்வர்யம் தேநஜீவது பாலக:" என்றருளிச்செய்து, (உ) 'பாதேநகமலாபேந ப்ரஹ்மருத்ரார்சிதேந ச । பஸ்பர்ச புண்டரீகாக்ஷ: ஆபாததலமஸ்தகம்' என்றபடியே திருவடிகளாலே சரீரத்தை எங்குமொக்க ஸ்பர்சித்து, மீளவும் உயிர் பெறுத்துகை. மைத்துனன்மாருருமகத்தே வீழாமே.

(க) "யதிமே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத்ஸத்யஞ்ச திஷ்டதி - அவ்யாஹதம்மமைஶ்வர்யம் தேநஜீவதுபாலக:" (உ) "பாதேநகமலாபேந ப்ரஹ்மருத்ரார்சிதேநச - பஸ்பர்ச புண்டரீகாக்ஷ: ஆபாததலமஸ்தகம்."

மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய தேஹம் பாரதயுத்தமாகிற நரமேதயஜ்ஞத்திலே விழுந்து நசித்துப்போகாமே. மகம்- யஜ்ஞம். குருமுகமாய்க்காத்தான். குருமுகமாய்நின்று ஹிதோபதேசாதிகளைப் பண்ணி ரக்ஷித்தவன். இத்தால்- "எல்லாச்சேனையு மிருநிலத்து வித்த" என்கிறபடியே உபயஸேனையிலும் பூபாரமானவர்களை எல்லாம் நசிப்பிப்பதாக ப்ரவர்த்திக்கப்பட்டதாய்,*மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனுடைய திரு வுள்ளத்துக்கு உகப்பாக விருக்குமதாகையாலே- பாரதயுத்தத்தை நரமேதயஜ்ஞமாக அருளிச் செய்தது. இதில் இவர்கள்விழுந்து நசியாமலிருந்தது- அடியேபிடித்து இவர்களை அபிமானித்துக்கொண்டு குருமுகமாய் நின்று, வநஸ்த்தானகாலத்தோடு புரஸ்த்தான காலத்தோடு வாசியற ஹிதத்தையே உபதேசித்துக்கொண்டு தீயவழிகளிலே போகாமல் விலக்கி நல்லவழிகளிலே நடத்தி இப்படி அபிமாநியாய் நின்று ரக்ஷித்துக்கொண்டு போருகையாலே என்னுமிவ்வர்த்தத்தை வெளியிட்டருளினாராய்த்து. ஊர். இப்படி குருமுகமாய் நின்று பாண்டவர்களை ரக்ஷித்தவன், தன்னபிமாநத்திலே ஒதுங்கினவர்களெல்லாரையும் தீயவழி போய் நசியாமல் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

திருமுகமாய்ச் செங்கமலம். செங்கமலமானது, பெரிய பெருமாளுடைய திருமுகத்துக்குப் போலியாய். திருநிறமாய்க்கருங்குவளை. கருங்குவளையானது அவருடைய திருநிறத்துக்குப் போலியாய். பொருமுகமாய் நின்றலரும் புனலரங்கமேன்பதுவே. பரபாகத்தாலே ஒன்றுக்கொன்று எதிர்பொருகிற முகத்தையுடைத்தாய்க்கொண்டு விகஸிக்கும்படியான ஜலஸம்ருத்தியையுடைய அரங்கமென்பதுவே. ... ... ... ... ... ... ௩.

அ. நான்காம்பாட்டு. கைகேயிவசநமடியாக நாட்டைவிட்டுக் காட்டிலேபோய் கண்டகரான ராக்ஷஸரை நிரஸித்தவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—கூன்றேழுத்தை சிதகுரைப்பக் கோடியவள்வாய் கடியசோற்கேட்
டீன்றேடுத்த தாயரையு மிராச்சியமு மாங்கோழியக்
கான்றேடுத்த நெறிபோகிக் கண்டகரைக் களைந்தானூர்
தேன்றேடுத்த மலர்ச்சோலைத் திருவரங்கமேன்பதுவே. ௪.

பதவுரை.

தேன் தொடுத்த— தேன்மாறுத
மலர்— மலர்களையுடைய
சோலை— சோலைகளாலே சூழப்பட்ட
திரு அரங்கம் என்பது—;
கூன்— கூனியாகிற
தொழுத்தை— அடியாட்டியானவள்
சிதகு— திருவபிஷேக மஹோத்ஸவத்துக்கு அழிவான கடுஞ்சொற்களை
உரைப்ப— சொல்ல
(அத்தையுட்கொண்டு பெருமாளைக் காடேற எழுந்தருளச்சொன்ன)
கொடியவள்— கொடியளான கைகேயியின்
வாய்— வாயிலுண்டான
கடிய சொல் கேட்டு— வெட்டியசொல்லைக் [கேட்டு]
ஈன்று எடுத்த தாயரையும்— பெற்றதாயான ஸ்ரீகௌஸல்யாரையும்
இராச்சியமும்— ராஜ்யத்தையும்
ஆங்கு ஒழிய— கைவிட்டு
கான் தொடுத்த— காடு அடர்ந்திருந்துள்ள
நெறி— வழியே
போகி— ஸ்ரீதண்டகாரண்யத்துக்கு எழு[ந்தருளி]
கண்டகரை— கண்டகராய் ஜநஸ்த்தானவாஸிகளான ராக்ஷஸரை
களைந்தான்— நிரஸித்தவன் வர்த்திக்கிற
ஊர்— தேசம்.

வ்யா. கூன்தோழுத்தை சிதகுரைப்ப. கூனியாகிற அடியாட்டியானவள் திருவபிஷேக மஹோத்ஸவத்துக்கு அழிவான துருக்திகளைச்சொல்ல. அதாவது (க) "[illegible] [illegible]" என்கிறபடியே ஜ்ஞாதிதாஸியானவிவள் யாத்ர்ச்சிகமாக மாளிகைத்தளத்தின்மேல் ஏறிப்பார்த்தவாறே, பெருமாளுடைய திருவபிஷேகத்துக்குத் திருப்படைவீடெல்லாம் கோடித்துக்கிடக்கிற படியையும், (உ) "[illegible]" என்கிறபடியே திரள் திரளாக வந்துகிடக்கிற ஜநஸம்மர்த்தத்தையும் மங்களவாத்ய கோஷங்களையுமெல்லாங் கண்டு ஸஹிக்கமாட்டாதே தளத்தினின்று மிறங்கிவந்து கைகேயியை பர்த்ஸித்து, "உன் மாற்றுட்டிமகன் அபிஷேகம் செய்யத்தேடுகிறான், உன்மகன் அவனுக்கு இனி இழிதொழில் செய்திருக்கு மித்தனையிறே, இத்தைப் பார்த்துக்கொண்டு நீ யிருக்கிறதேது, அவனுடைய அபிஷேகத்தைக் குலைத்து உன்மகனை அபிஷேகம் பண்ணுவிக்கும்படி ராஜாவோடே சொல்லு; அதுக்கு உபாயம்,—முன்பே உனக்குத் தந்திருப்பது இரண்டுவரமுண்டே, அவை இரண்டையும்- உன் மகனை அபிஷேகம்பண்ணுவிக்கையும், ராமனைக் காடேறப்போக விடுகையும், என்று வேண்டிக்கொள்; ஸத்ய தர்மபரரான ராஜாவால் செய்யாதொழியப்போகாதுகாண்" என்று திருவபிஷேகத்துக்கு விக்நமான துருக்திகளைச் சொன்னளிறே. கோடியவள் வாய்க் கடியசோல்கேட்டு. இப்படி குப்ஜை சொன்ன வார்த்தையாலே கலங்கி, பின்பு ராஜாவுடனே "முன்புசொன்ன விரண்டுவரமும் எனக்கு இப்போது தரவேணும்; அதாவது- என்மகனை அபிஷேகம் பண்ணுவிக்கையும், ராமனைப் பதினலு ஸம்வத்ஸரம் வநவாஸார்த்தமாகப் போகவிடுகையும்" என்ன; இத்தைக்கேட்டு ராஜா இதுக்கு இசையாமை தோற்றவிருக்க; "அறுபதினாயிரம் ஸ்ம்வத்ஸரம் ஸத்யதர்மத்தைத்தப்பாமல் நடத்திப் போந்தவன் இப்போது ஸத்யத்தை அதிக்ரமிக்கிறான், ஸகலதேவதைகளும் இத்தை அறியுங்கோள்" என்று இவள் கூப்பிட்டவாறே; அவன்செய்யலாவதற்று அநுமதிபண்ண; அவ்வளவிலே, அவள்ஸுமந்த்ரனைப் போகவிட்டு பெருமாளை அழைத்துவிட, அவர் எழுந்தருளி வந்து, சக்ரவர்த்தி கலங்கிக்கிடக்கிற படியைக்கண்டு, "இதுக்கடியென்?" என்று இவளைக்கேட்க, இச்செய்திகளை யெல்லாம் சொல்லி, "உம்மைக்காடேறப்போகவிடுவதாக அழைத்துவிட்டார், உம்மைக்கண்டவாறே சொல்லமாட்டாமல் கிடக்கிறாரித்தனை; உங்கள் ஐயர் ஸத்யதர்மத்தை நோக்கவும் நீர் அவர்க்கு ப்ரியம் செய்யவும் வேண்டியிருந்தீராகில் அவர் நினைவு நான் சொல்லுகிறேன், நீர் கடுகக் காடேறப்போம்" என்று சொன்ன கொடுமையையுடையளான கைகேயி வாயில் இந்த வெட்டிய சொல்லைக்கேட்டு. ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமு மாங்கொழிய. "ஏகபுத்ரையான நான் உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன், கூடப்போரு மித்தனை" என்று பின்றொடர்ந்த பெற்றதாயாரான கௌஸலையாரையும், ஸ்த்தாவரங்களோடு ஜங்கமங்களோடு வாசியறத் தன் குணங்களிலேயீடுபட்டு, பிரிவில் தரிக்கமாட்டாதபடியிருக்கிற ராஜ்யத்தையும் கைவிட்டு, கான்தோடுத்த நெறிபோகி. (ந) "[illegible]" என்கிறபடியே காட்டோடு காடு தொடுத்துக்கிடக்கிறவழியே, "நெய்வாயவேல் நெடுங்கண்ணேரிழையு மிளங்கோவும் பின்புபோக" என்கிறபடியே-பிராட்டியும் இளையபெருமாளும் பின்னே ஸேவித்துக்கொண்டு

---

(க) "ஜ்ஞாதிதாஸீயதோஜாதா கைகேய்யாஸ்து ஸஹோஷிதா- ப்ராஸாதம் சந்த்ரஸங்காச மாருரோஹ யத்ர்ச்சயா" (உ) "ப்ர்ந்தம் ப்ர்ந்த மயோத்யாயாம்" (ந) "தேவநேந வநக்கத்வா."

வர ஸ்ரீதண்டகாரண்யத்திலே எழுந்தருளி. கண்டகரைக் களைந்தான். (க) " வள ஹிவஸமூ ஸரீராணி " என்கிறபடியே ராக்ஷஸர் தின்ற உடம்பைக்காட்டி வந்துநின்ற தண்டகாரண்ய வாஸிகளான ரிஷிகளுக்காக, அவர்களை நித்யபீடை செய்துபோந்த கண்டகராய் ஜநஸ்த்தாந வாஸிகளான ராக்ஷஸர் முதலானாரை நிரஸித்தருளினவன். ஊர். ஏவம் பூதனானவன் இங்ஙனொத்த விரோதிகளை நிரஸித்து ஆச்ரித ரக்ஷணம் பண்ணுகைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

தேனித்யாதி. தேன்மாறாத மலர்களை யுடைத்தான சோலை. அன்றிக்கே, "தேன்" என்று- வண்டாய், வண்டுகள் மாறாமல் படிந்து கிடக்கிற புஷ்பங்களை யுடைத்தான சோலை என்னுதல்; "கோல்தேன் பாய்ந்தொழுகும்" என்கிறபடியே-கொம்புகளில் தேன் வைக்கப்பட்டிருப்பதாய்ப் பூமாறாத சோலை யென்னுதல். இப்படியிருந்துள்ள சோலைகளையுடைய திருவரங்கமென்னும் திருநாமத்தையுடைய வதுவே. ...௪.

அ. ஐந்தாம்பாட்டு. ராவணவதம் பண்ணி, இந்த லோகத்தை ரக்ஷித்தருளினவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—பெருவரங்க ளவைபற்றிப் பிழக்குடைய விராவணனை
உருவரங்கப் பொருதழித்திவ் வுலகினைக் கண்பெறுத்தானூர்
குரவரும்பக் கோங்கலரக் குயில்கூவுங் குளிர்பொழில்சூழ்
திருவரங்கமேன்பதுவே யென்றிருமால்சேர்விடமே. ரு.

பதவுரை.

குருவு— குருவுகளானவை
அரும்ப— அரும்பிச்செல்லவும்
கோங்கு— கோங்குகளானவை
அலர— அலர்ந்து செல்லவும்
குயில்— குயில்களானவை
கூவும்— களித்துக் கூவும்படியான
குளிர்— குளிர்ந்த
பொழில்— சோலைகளாலே
சூழ்— சூழப்பட்ட
திரு அரங்கம் என்பது-;
பெரு— பெரிய [வரங்களானவற்றை
வரங்கள் அவை— ப்ரஹ்மாதிகள்கொடுத்த
பற்றி— தனக்கு பலமாகக்கொண்டு
பிழக்கு உடைய—தேவர், ரிஷிகள்முதலானாரிடத்து பிழைசெய்கையையே இயல்வாக வுடைய
இராவணன்— ராவணனுடைய
உரு— ரூபமானது
அரங்க— சிந்நம் பிந்நமாம்படி
பொருது— போர்செய்து
அழித்து— ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே ப்ராணனை யழித்து
இ உலகினை— இந்தலோகத்தை
கண்பெறுத்தான்— காத்தவனுடைய
என்— என்னுடைய
திரு மால்— ஸ்ரியஃபதியானவன்
சேர்வு இடம்— விரும்பிச்சேரு மிடமான
ஊர்— தேசம்.

வ்யா. பெருவரங்களவைபற்றி. ப்ரஹ்மாதிகள் கொடுத்த பெரிய வரங்களானவற்றைத் தனக்கு பலமாகக்கொண்டு. இந்த வரபலமாய்த்து இவன் அடித்து அழிவுசெய்து

(க) " ஏஹிபச்ய சரீராணி "

திரிகைக்குறைது. பிழக்குடைய விராவணனை. "இவ்வரமுள்ள வளவும் நமக்கு ஓரழிவு வாராது" என்று நினைத்து தேவதைகள் ரிஷிகள் முதலானரெல்லாரளவிலும் செய்து திரிந்த பிழைகளை யுடையவனான ராவணனை. பிழக்கு - பிழை. "ராவணோ லோகராவண:" என்கிறபடியே லோகத்தையெல்லாம் பட அடித்துக் கிடந்து கூப்பிடும்படி பண்ணியிறே இவன் திரிவது. உருவரங்கப் பொருதழித்து. இப்படியிருக்கிறவனை அழியச்செய்யு மிடத்தில், "தோள்கள்தலை துணிசெய்தான்" என்கிறபடியே - "அகப்படாதவன் அகப்பட்டான், தப்பாமல் கொன்றுவிடுவோம்" என்று பாராதே, தோள்களைக்கழித்தும் தலையைச் சிரைத்தும் போதுபோக்காக நின்று கொல்லுகையாலே ரூபமானது அவயவங்கள் சிந்தச் சிதையும்படி பொருது, பின்பு ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே ப்ராணபர்யந்தமாக அழித்து. இவ்வுலகினைக் கண்பெறுத்தான். இந்த லோகத்தைக் கண்பெறுவித்தவன். "கண்" என்று - நிர்வாஹக வஸ்துவைச் சொல்லுகிறது. இத்தால் - விரோதியான ராவணனை நிரஸித்து, அவனாலே நெருக்குண்ட ப்ராணிகளையெல்லாம் ரக்ஷிக்கையாலே, இந்தலோகத்துக்குத் தானே ரக்ஷகனென்னுமிடத்தை யறிவித்தவனென்கை.

குரவிக்யாதி. குரவுகளானவை அரும்பிச் செல்லவும், கோங்குகளானவையலர்ந்து செல்லவும், குயில்களானவை ஹர்ஷத்தாலேயிருந்து கூவும்படியான குளிர்ந்த சோலைகளாலே சூழப்பட்டிருக்கிற. திருவரங்கமேன்பதுவே. திருவரங்கமென்று ப்ரஸித்தமாயிருக்கிறவதுவே. இத்தால் - அநேக புராண ப்ரசஸ்தமாகையாலும் ஆழ்வார்களெல்லாரும் ஒருமிடறாக அருளிச்செய்கையாலும் முண்டான ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. என்திருமால் சேர்விடமே. ராவணவதாநந்தரம் "திருமகளோடு இனிதமர்ந்த" என்கிறபடியே—பிராட்டியோடே கூடி ரஸோத்தரனாயிருந்த என்னுடைய ஸ்ரியபதியானவன் பரமபதாதிகளெல்லாவற்றிலுங்காட்டில் விரும்பி,¶ விடாயர் மடுவிலே சேருமாபோலேசேருகிற ஸ்தலம்.

"இவ்வுலகினைக் கண்பெறுத்தானை என்திருமால் சேர்விடமான ஊர் திருவரங்கமென்பதுவே" என்று அந்வயம். ... ... ... ... ... ... ௫.

அ. அரும்பாட்டு. பாதாளவாஸிகளான அஸுரர்களை, தேவர்களுக்காகத் திருவாழியை யேவி, கிழங்கெடுத்துப் போகட்டவன் வர்த்திக்கிற தேசம் இதுவென்கிறார்.

மூ.—கீழுலகிலசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே
ஆழிவிடுத்தவருடைய கருவழித்த வழிப்பனூர்
தாழைமடலூடுரிஞ்சித் தவளவண்ணப் பொடியணிந்து
யாழினிசைவண்டினங்க ளாளம்வைக்கு மரங்கமே. ௬.

பதவுரை.

| | |
|---|---|
| யாழ்— வீணையினிசைபோன்ற | வண்டு இனங்கள்—வண்டின் திரள்களானவை |
| இன்— இனிய | தாழை மடலூடு—மலர்த்தொடங்குகிற தாழம்பூ மடலினுள்ளே |
| இசை— இசையையுடைய | |

(க) "ராவணோலோகராவண:." ¶ விடாயர் - தாஹித்தவர்கள்.

உரிஞ்சி— உடம்பை உரோசிக்கொண்டு
(அதிலுண்டான)
தவள வண்ணம்—வெளுத்தநிறத்தை யுடை[த்தான
பொடி— சுண்ணத்தை
அணிந்து—உடம்பெங்கு மணிந்துகொண்டு
ஆளம் வைக்கும்— (அந்தக் களிப்பாலே)
'தென தென' என்று ஆளத்தியையா நின்றுள்ள
அரங்கம்— அரங்கமா நகரானது-;
கீழ் உலகில்— பாதாளலோகத்திலுள்ள
அசுரர்களை— அஸுரர்களை
கிழங்கிருந்து— அடிக்கிடந்து
கிளராமே— கிளராதபடியாக
ஆழி— திருவாழியாழ்வானை
விடுத்து— ஏவிவிட்டு
அவருடைய— அவர்களுடைய
கரு— கர்ப்பமளவாக
அழித்த— அழித்துப்பொகட்ட
அழிப்பன்— சத்ருநிரஸநைகஸ்வபாவனுடைவன் வர்த்திக்கிற
ஊர்— தேசம்.

வ்யா. கீழுலகிலசுரர்களை. பாதாளலோக வாஸிகளான அஸுரர்களை. பாம்புக்குப் புற்றுப்போலே, என்றுமொக்க அஸுரர்களுக்கு வாஸஸ்தாநமாயிறே பாதாளந்தானிருப்பது. இப்படியிங்கே யிருந்துவந்து தேவர்களோடே யுத்தம் செய்யாநிற்பர்களாய்த்து. அப்படி அவர்கள் வந்து தேவர்களை அடர்க்குங்காலத்தில், தேவர்களுக்காக நின்று அவர்களை அழியச்செய்யக் கடவனுமிறே ஸர்வேச்வரன்றானிருப்பது. இப்படி பலகாலும் வர, அழியவிடச்செய்தேயும், பின்னையும் அடிக்கெடாமல் கிளர்ந்து வரப்புக்கவாறே. கிழங்கிருந்து கிளராமே. அப்படி அடிக்கிடந்து கிளராதபடியாக. ஆழிவிடுத்து அவருடைய கருவழித்தவழிப்பன். * கருதுமிடம் பொரும் திருவாழியாழ்வானை யேவிவிட்டு, அவர்களுடைய கருவளவாக அழித்துப் பொகட்ட ப்ரதிபக்ஷ நிரஸந ஸ்வபாவன். ஊர். பின்பும் அங்ஙனொத்த விரோதிகளை நிரஸிக்கைக்காக நித்யவாஸம் செய்கிற தேசம்.

தாழைமடலூடுரிஞ்சி. மலரத்தொடங்குகிற தாழம்பூமடலினுள்ளே பரிமளத்தில் லோபத்தாலே உடம்பை உரோசிக்கொண்டு புகுந்து. தவளவண்ணப் பொடியணிந்து. அதிலுள்ளிலுண்டான வெளுத்த நிறத்தையுடைத்தான சுண்ணத்தை உடம்பெங்கும் அணிந்துகொண்டு. யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்கும். அந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, யாழோசைபோலே யிருக்கிற இனிய இசையை யுடைய வண்டினுடைய திரள்களானவை பாடுகைக்கு அடிக்கொண்டு "தென, தென" என்று ஆளத்தி வையாநிற்கு மரங்கமே. ...௬.

அ. ஏழாம்பாட்டு. லோகபீடை பண்ணித்திரியும் பாபரான அஸுரர்களை நசிப்பித்துப் பொகட்டவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—கொழுப்புடைய செழுங்குருதி கொழித்திழிந்து குமிழ்த்தெறியப்
பிழக்குடைய வசுரர்களைப் பிணம்படுத்த பெருமானூர்
தழுப்பரிய சந்தனங்கள் தடவரைவா யீர்த்துக்கொண்டு
தெழிப்புடைய காவிரிவந் தடிதொழுஞ் சீரரங்கமே. எ.

பதவுரை.

தட— பெரிய
வரைவாய்—மலையிடத்தில்(வளருகையாலே)
தழுப்பு அரிய— ஒருவர் இருவரால் தழுவ அரிதாம்படி யிருக்கிற

சந்தனங்கள்— சந்தநமரங்களை
ஈர்த்துக்கொண்டு—(வேரோடே பிடுங்கி) இழுத்துக்கொண்டு
தெழிப்பு உடைய— 'இத்தைக்கொண்டருளவேணும்' மென்னுமாப்போலே யிருக்கிற த்வநியை யுடைய
காவிரி— காவேரியானது
வந்து— ஆரவாரித்து வந்து
அடி— திருவடிகளை
தொழும்— தொழாநிற்கிற
சீர்— சிறப்பையுடைத்தான
அரங்கம்— திருவரங்கமானது;—
கொழுப்பு உடைய— கொழுப்பையுடைத்தாய்
செழு— செழித்திருந்துள்ள
குருதி— ரக்தமானது
கொழித்து— ஊற்றுமாறாமல் கிளர்ந்து
இழிந்து— அருவிகுதித்தாற் போலே நிலத்திலே இழிந்து
குமிழ்த்து— குமிழிகிளம்பி
எறிய— அலையெறியும்படியாக
பிழக்கு உடைய— லோகத்தை வருத்துகையாகிற பிழையையுடைய
அசுரர்களை— அஸுரர்களை
பிணப்படுத்த— நாசமாக்கிவிட்ட
பெருமான்— ஸர்வேச்வரன் நித்யவாஸம் பண்ணுகிற
ஊர்— தேசமாம்.

வ்யா. கொழுப்புடைய செழுங்குருதி. ஊட்டிப்பன்றிபோலே $நிணம் கொழுக்கும்படி போஷகபதார்த்தங்களை ஜீவித்து உடம்பை வளர்த்துக்கொண்டு திரிகையாலே,ரக்தமும் கொழுப்புடைத்தாய் அழுகிதாயிருக்குமிறே; அத்தைப்பற்ற "கொழுப்புடைய செழுங்குருதி" என்று அருளிச்செய்கிறார். கொழித்திழிந்து குமிழ்த்தெறிய. இப்படி யிருந்துள்ள ரக்தமானது ஊற்று மாறாமல் கிளர்ந்து அருவி குதித்தாற்போலே நிலத்திலே யிழிந்து குமிழி கிளம்பி அலையெறியும்படியாக. பிழக்குடைய வசுரர்களை. லோகத்தை யடைய பீடித்துக்கொண்டு திரியும் பிழைகளை யுடையரான அஸுரர்களை. இத்தால்- அஸுர யோநியில் பிறந்தாரெல்லாரையும் நிரஸிக்கவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லையிறே; அவர்கள் செய்த பிழைகளைக் கணக்கிட்டே நிரஸிக்குமென்னுமிடந் தோற்றுகிறது. பிணம்படுத்த பெருமானார். இப்படி யிருக்கிறவர்களை நிரஸிக்கிற விடத்தில், அங்கவைகல்யங்களைப் பண்ணிவிடுதல், குற்றுயிராக்கி விடுதல்செய்கையன்றிக்கே, நிரந்வயவிநாசமாக்கிவிட்ட ஸர்வேச்வரன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

தழுப்பரிய சந்தனங்கள் தடவரைவா யீர்த்துக்கொண்டு. பெரிய மலையிடத்திலே வளர்ந்து, ஒருவரிருவரால் தழுவ வரிதாம்படி யிருக்கிற சந்தநமரங்களை வேரோடே அகழ்ந்து இழுத்துக்கொண்டு. தெழிப்புடைய காவிரிவந்தடிதொழும். "இத்தைக் கைக்கொண்டருளவேணும்" என்னுமாபோலே யிருக்கிற முழங்கின த்வநியையுடைய காவேரியானது, ஆதரத்தோடே வந்து, தான் கொண்டுவந்த சாத்துப்படியையும் பெரியபெருமாளுக்கு ஸமர்ப்பித்துத் திருவடிகளைத் தொழாநிற்கும். சீரரங்கமே. இப்படி யிருந்துள்ள சிறப்பை யுடைத்தான அரங்கமே. ... ... ... ... ... ... ... ... ... ஏ

அ. எட்டாம்பாட்டு. ஸ்ரீவராஹமும் ஸ்ரீநரஸிம்ஹமுமாய் பூம்யுத்தாணமும் ஹிரண்ய விதாரணமும் பண்ணினவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

---

$ நிணம் - கொழுப்பு.

மூ.—வல்லெயிற்றுக் கேழலுமாய் வாளெயிற்றுச் சீயமுமாய்
எல்லையில்லாத் தரணியையு மவுணனையு மிடந்தானூர்
எல்லியம்போ திருஞ்சிறைவண் டெம்பெருமான்குணம்பாடி
மல்லிகைவெண் சங்கூது மதிளரங்க மென்பதுவே. அ.

பதவுரை.

இரு— பெரிய
சிறை— சிறகையுடைய
வண்டு— வண்டானது
எல்லியம்போது— அந்திப்போதிலே
எம்— ஸர்வஸ்வாமியான
பெருமான்— பெரிய பெருமாளுடைய
குணம்— திவ்யகுணங்களை
பாடி— மிக்க அன்போடே பாடிக்கொண்டு
மல்லிகை— மல்லிகைப் பூவாகிற
வெண் சங்கு— வெள்ளிய சங்கை
ஊதும்— ஊதாநின்றுள்ளதாய்
மதிள்— மதிளையுடைத்தான
அரங்கம் என்பது—;

வல்— வலிதான
எயிறு— எயிற்றையுடைய
கேழலும் ஆய்— வராஹமுமாய்
வாள்— ஒளியையுடைய
எயிறு— பற்களையுடைய
சீயமும் ஆய்— (நர) ஸிஹ்மமுமாய்
எல்லை இல்லா— எல்லையில்லாத
தரணியையும்— பூமியையும்
அவுணனையும்— ஹிரண்யாஸுரனையும்
இடந்தான்— திரு எயிற்றாலும், திரு உகிராலு மடர்த்தவன் வர்த்திக்கிற
ஊர்— தேசமாம்.

வ்யா. வல்லெயிற்றுக் கேழலுமாய். வலிதான எயிறுகளையுடைய வராஹமுமாய். * எயிற்றுக்கு வன்மையாவது - "ஊன்றியிடந்தெயிற்றிற்கொண்ட" என்கிறபடியே அண்டபித்தியிலே ஒட்டின பூமியை மறுபாடுருவக்குத்தி யிடந்தெடுத்து, தன்பக்கலிலே தரிக்கத்தக்க பலம். * கேழலாகவேண்டிற்று, ப்ரளயங்கதையான பூமியை யெடுக்கும்போது நீருக்கும் சேற்றுக்கும் இருபாதவடிவுகொண்டு எடுக்கவேண்டுகையாலே. நீரும் சேறும் காணப் பணைக்கும்படியிறே வராஹஜாதியிருப்பது. (க)" ஆய் " என்றது-அவ்வவதாரத்தில் புரையற்றிருக்கை. மாயாம்ருகத்தை மோந்துபார்த்து "ராக்ஷஸகந்தமுண்டு" என்று வெருவியோடிப் போயிற்றினவிறே மற்றுண்டான ம்ருகங்கள்; அப்படியன்றிக்கே, ஸஜாதீயங்கள் மோந்துபார்த்து "தன்னினம்" என்று விச்வஸிக்கும்படியிருக்கை. மநுஷ்யயோநியிலே அவதரித்தவிடத்தில் ஈச்வரத்வாபிமாந கந்தமற்று, (க) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றிருந்தாற் போலேயாய்த்து திர்யக்யோநியிலே அவதரித்தாலு மிருக்கும் படி. "மானமிலாப்பன்றியாம்" என்றாரிறே-இவர்திருமகளார். *மானமிலாமையாவது-ஈச்வரத்வாபிமாநம் மறந்தும் இல்லாதபடியிருக்கை. "வராஹகல்பம் வாசியாநிற்கச்செய்தே, 'ஸ்ரீவராஹநாயனார்க்கு முத்தக்காசை யமுதுசெய்விப்பது' என்று கிடந்ததாய், 'இதென்ன மெய்ப்பாடுதான்!' என்று நஞ்சீயர் வித்தராயருளுவர்" என்று ப்ரஸித்தமிறே. வாளெயிற்றுச் சீயமுமாய். ஒளியையுடைத்தான எயிறுகளையுடைய ஸிஹ்மமுமாய். கீழ், "வல்லெயிறு" என்றார் - பூமியை யெடுக்கத்தக்கபலம் சொல்லுகைக்காக; இங்கு, "வாளெயிறு" என்றார் - அழகுக்குடலாகையாலே. "அலைத்தபேழ்வாய் வாளெயிற்

(க) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே"

ஏறுர் கோளரியாய்" "ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய்" என்று இவ்வவ தாரத்துக்கு எதிர் சொல்லுமிடமெல்லாம் அழகுக் குடலாகவிறே சொல்லுவது. "ஏயம்" என்றது - நாஸிம்ஹமென்றபடி. "தேவாதிசதுர்விதஜாதியில் ஒன்றிலும் படக்கடவே னல்லேன்" என்று அவன் கொண்டவரத்துக்கு விரோதமற அழியச்செய்கைக்காகவிறே இவ்வவதாரமாகவேண்டிற்று. (க) "நபஸூரய நதேவா நஞூக்ஷா வஸி ஹூ ஸூரய நது ஹூய" என்னும்படியிறே அப்போது அவதரித்தது. ஆகையாலே கேவலம் ஸிம்ஹமென்றுலும் நாஸிம்ஹமென்னுமிடம் அர்த்தாத்ஸித்தமாய் வரும். "ஆய்" என்கிறவிது - இப்படி இரண்டுவடிவையும் சேர்த்துக்கொண்டு வந்தவிடத்தில் சேரச்சேர்த்தியா யிருக்கையன் றிக்கே, சேர்ப்பாலும் கண்டசர்க்கரையும் சேர்ந்தாற்போலே ஒன்றுக்கொன்று ரஸாவஹ மாய்ச் சேர்ந்து, அநுபவிப்பார்க்கு அத்யந்தபோக்ய மாயிருக்கையாலே. "அழகியான் தானேயரியுருவன்றானே" என்றாரிறே திருமழிசையாழ்வார். அங்காந்தவாயும் மொறாந்த முகமும் நாமடிக்கொண்டவுதடும் குத்தமுறுக்கினகையும் அதிர்ந்த அட்டஹாஸமுமாயிரு க்கிற விருப்பிறே இவர்க்கு அழகிதாய்த் தோற்றுகிறது. ஆச்ரிதவிரோதிநிரஸநார்த்த மாகக்கொண்ட வடிவாகையாலே, அவ்வடிவும் அதிலுண்டான வ்யாபாரங்களுமெல்லாம், பகவத்குணஜ்ஞாநமுடையவர்களுக்கு அழகுக்குடலாய்த் தோற்றுமிறே. எல்லையில்லாத் தரணியையு மவுணனையும். எல்லையில்லாத பரப்பையுடைய பூமியையும், எல்லையில்லாத பெருந்தவத்தை யுடையனான ஹிரண்யாஸுரனையும். பூமிக்கு எல்லையில்லாமையாவது - பஞ்சாசத் கோடி விஸ்தீர்ணையாயிருக்கை. ஹிரண்யனுடைய தபஸ்ஸுக்கு எல்லையில்லாமையாவது - த்வீபங்களும் ஸமுத்ரங்களும் போலன்றிக்கே, எல்லாம் தன்னுள்ளேயாம்படி. இவன்கொண்டவரம் ஒன்றேறே அவதி காணவொண்ணுதபடியிருக்கை. இடந்தான். திரு வெயிற்றுலும் திருவுகிராலும் இடந்தவன். திருவெயிற்றாலே பூமியை யிடக்கையாவது - அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுக்கை. திருவுகிராலே ஹிரண்யனையிடக்கையா வது - "பொன்னன் பைம்பூண்நெஞ்சிடந்து" என்கிறபடியே - தேவர்களுடைய வரபல த்தாலே பூண்கட்டியிருக்கிற மார்வை, அகவாயில் ரக்தம் குதிகொண்டு "இவ்வையமுறி பெருநீரில் மும்மைபெரிது" என்கிறபடியே எங்கும் பெருகும்படியாக "பிளவெழுவிட்ட குட்டம்" என்னும்படி இருபிளவாக்குகை. ஆக, ஹிரண்யாக்ஷனையும் ஹிரண்யனையும் ப்ரணயிநியான பூமிப்பிராட்டிக்கும் பக்தனான ப்ரஹ்லாதனுக்கும் வந்த ஆபத்துக்களை, இரண்டவதாரமாய் வந்து போக்கினபடி சொல்லிற்று. ஸ்ரீவராஹமாய் ஸ்ரீபூமிப்பிராட் டிக்குப் பண்ணின ரக்ஷணம், அல்லாத ரக்ஷணங்கள் போலன்றிக்கே முக்யமான ரக்ஷணமி றே எல்லார்க்குமேல. ஸ்ரீநரஸிம்ஹமாய் ப்ரஹ்லாதனுக்குப் பண்ணின ரக்ஷணமும், எல்லார்க்கும் கண்டு தெளியலாம்படி யிருக்குமிறே. ஊர். இப்படி நித்யாச்ரிதையான பிராட்டியோடு இன்று ஆச்ரயித்த ப்ரஹ்லாதனோடு வாசியற தன்னை அழியமாறிவந்து ரக்ஷித்தவன், பின்புள்ளாரையும் ரக்ஷிக்கைக்காகவந்து வாஸம்பண்ணுகிற தேசம்.

எல்லியம்போதிருஞ் சிறைவண்டு எம்பெருமான் குணம்பாடி. "அறுகால்வரிவண்டுக ளாயிரநாமஞ்சொல்லி, சிறுகாலைப்பாடும்" என்றாரே அங்கே; இங்கே இப்படி யருளிச் செய்கிறார். இத்தால்- திவ்யதேசங்களில் வர்த்திக்கும் வண்டுகளானவை, காலாநுகுணமாக, பண்களிலே, பகவத்குணங்களை, நியமேந பாடும்படி சொல்லுகிறது. எல்லியம்போது அந்தியம்போதிலே. இருஞ்சிறைவண்டு - பெரியசிறகை யுடைத்தான வண்டுகளானவை.

(க) "நரஸ்யார்த்தததநும் க்ர்த்வா ஸிம்ஹஸ்யார்த்தததநும்ததா."

பகவத்ப்ரவணமான விஷயங்களினுடைய ரூபகுணங்களும் உத்தேச்யமென்று இருக்குமவ ராகையாலேயிறே இவற்றினுடைய சிறகை வர்ணித்துக்கொண்டருளிச்செய்கிறார். எம்பெரு மான் குணம்பாடி. ஸர்வஸ்வாமியான பெரியபெருமாளுடைய, கீழ்ச்சொன்ன ஆச்ரிதரக்ஷ ணங்களாலுண்டான திவ்யகுணங்களை ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பாடி. மல்லிகை வெண்சங் கூதும். மல்லிகைப்பூவாகிற வெள்ளிய சங்கை ஊதாநிற்கும். அதாவது-ஸாயங்கால புஷ்ப மான மல்லிகையினுடைய பூவை அது இருந்து ஊதும்போது, அந்தப்பூவானது அலரு வதுக்கு முன்பு தலைகுவிந்து மேல்பருத்து காம்படிநேர்ந்து வெளுத்த நிறத்தையுடைத் தாய் சங்குபோலே யிருக்கையாலே, வெள்ளிய சங்கை இருந்து ஊதுமாபோலே யிருக்கு மாய்த்து. அத்தைப்பற்ற இப்படி யருளிச்செய்கிறார். மதிளரங்க மேன்பதுவே. இப்படி யிருந்துள்ள சோலைச் சிறப்பை யுடைத்தாய் அரணுகப்போரும்படியான திருமதிளையுடைத் தாயிருக்கிற திருவரங்கமென்பதுவே. ... ... ... ... ... ... அ.

அ. ஒன்பதாம்பாட்டு. அநேக த்ருஷ்டாந்தமிட்டுச் சொல்லவேண்டும்படியான விக்ரஹ வைலக்ஷண்யத்தை யுடையனாய் ஆச்ரித வ்யாமுக்தனானவன் வர்த்திக்கிற தேச மிதுவென்கிறார்.

மூ.—குன்றாடு கொழுமுகில்போற் குவளைகள்போற் குரைகடல்போல்
நின்றாடு கணமயில்போல் நிறமுடைய நெடுமாலூர்
குன்றூடு பொழில்நுழைந்து கொடியிடையார் முலையணவி
மன்றூடு தென்றலுலா மதிளரங்க மேன்பதுவே கூ.

பதவுரை.

தென்றல்— தென்றல் காற்றானது
குன்று— மலைபர்வதத்திலுள்ள
பொழிலூடு— பொழில்களினிடையிலே
நுழைந்து— நுழைந்து
கொடி— வஞ்சிக்கொடிபோன்ற
இடையார் — இடையையுடையரான ஸ்த்ரீ களுடைய
முலை— கலவைச்சாந்தணிந்த முலைகளை
அணவி— ஸ்பர்சித்து
மன்றூடு— நாற்சந்திகளினூடே
உலா— உலாவா நின்றுள்ளதாய்
மதிள் — மதிள்களையுடையதுமான அரங்கம் என்பது—;
கொழு— கழுத்தே கட்டளையாக நீரைப் பருகின
குன்று ஆடு— மலையினுச்சியிலே சார்ந்த
முகில்போல்— மேகம்போன்ற குளிர்த்தி யை யுடையனாய்
குவளைகள் போல்— கருநெய்தல்போன்ற பளபளப்பையுடையனாய்
குரை— கோஷியா நின்றுள்ள
கடல்போல்— கடல்போன்ற காம்பீர்யத் தை யுடையனாய்
நின்று ஆடு— களிப்பாலேநின்று ஆடா நின்றுள்ள
கணம் மயில் போல்— மயில்திரள்போன்ற புகரையுடையனாய்
நிறம் உடைய— அழகையுடையனுமான
நெடுமால்— ஆச்ரிதவ்யாமுக்தனான எம் பெருமான் வர்த்திக்கிற
ஊர்— தேசமாம்.

வ்யா. குன்றாடு கொழுமுகில்போல். கழுத்தே கட்டளையாக நீரைமுகந்து, போகமா ட்டாதே மலையின் உச்சியிலேசார்ந்தமேகம்போலேயும். குவளைகள்போல். கண்ணாலேமுகந்

தநுபவிக்கும் குவளைகள்போலேயும். குரைகடல்போல். அநுபவித்து முடிக்கவொண்ணாமைக்கு கோஷிக்கிற கடல்போலேயும். நின்றுகேணமயில்போல். வைத்தகண் வாங்கவொண்ணாமைக்கு ஹர்ஷத்தாலே நின்று ஆடாநின்றுள்ள மயில்திரள்போலேயும். நிறமுடைய. வடிவழகையுடைய. நிறம்- அழகு. அன்றிக்கே, திருமேனிநிறந்தன்னையே சொல்லிற்றான போது, கண்டகண் மயிர்க்குச்சிவிடும்படியான குளிர்த்திக்கு-நீர்கொண்டெழுந்த காளமேகத்தின் நிறத்தையும், நெய்ப்புக்கு-குவளைப்பூவின் நிறத்தையும், இருட்சிக்கு-கடலின் நிறத்தையும், புகர்ப்புக்கு - மயில் கழுத்தின் நிறத்தையும் த்ர்ஷ்டாந்தமாகச் சொல்லுகிறதென்று நியமித்துக்கொள்ளவேணும். ஒன்றே உபமாநமாகப் போருவதல்லாமையாலே அங்கும்இங்கும் கதிர்¶பெறுக்கிச் சொல்லுகிறார். நேமோஸ்ரர். (க) "ஸஹ்ஸ்ர நாம" என்கிறபடியே-இவ்வடிவழகை ஆச்ரிதர்க்கு முற்றூட்டாகக்கொடுக்கும் நிரதிசய வ்யாமோஹத்தையுடையவன் நித்யவாஸம்பண்ணுகிறதேசம்.

குன்றித்யாதி. "தென்னன்பொதியில் செழும் சந்தின்தாதளைந்து" என்கிறபடியே மலயபர்வதத்தில் சந்தந வ்ர்க்ஷங்களையுடைய பொழில்களூடே நுழைந்து அங்குண்டான பூக்களின் தாதுகளை அளைந்து அரிமிதியான பரிமளத்தைக் கொய்துகொண்டு போந்து. கொடியிடையார் முலையணவி. நேர்மைக்கும் நுடங்குதலுக்கும் கொடிபோலேயிருக்கும் இடையையுடையரான ஸ்த்ரீகளுடைய சந்தந குங்குமாத்யலங்கார யுக்தமான முலைகளை ஸ்பர்சித்து அங்குண்டான பரிமளத்தையும் அளைந்துகொண்டுபோந்து. மன்றூடேதென்றலுலா. அது கைபுகுந்த கர்வத்தாலே வெளிநிலத்திலே புறப்பட்டு மன்றுகளினூடே தென்றலானது உலாவாநிற்கும். மதிளரங்கமேன்பதுவே. இப்படி தென்றலுலாவுவதுமாய் அரணுகப் போரும் மதிளையுடைத்தானதுமான அரங்கமென்பதுவே. ... ... கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழியைக்கொண்டு பெரியபெருமாளை யேத்துமவர்கள் விஷயத்தில் தமக்குண்டான சேஷத்வப்ரதிபத்தியை யருளிச்செய்கிறார்.

மூ.—பருவரங்க ளவைபற்றிப் படையாலித் தெழுந்தானைச்
செருவரங்கப் பொருதழித்த திருவாளன் றிருப்பதிமேல்
திருவரங்கத் தமிழ்மாலை விட்டுசித்தன் விரித்தனகொண்டு
இருவரங்க மெரித்தானை யேத்தவல்லா ரடியோரமே. ௰.

பதவுரை.

பரு— பெரிய
வரங்கள் அவை பற்றி—ப்ரஹ்மாதிகள் கொடுத்த வரங்களை பலமாகக்கொண்டு
படை ஆலித்து எழுந்தானை—யுத்தவிஷயமாக கர்வித்துக் கிளர்ந்துவந்த ராவணனை
செரு— யுத்தத்திலே
அரங்க— அவனபிமாநமெல்லாமழியும்படி
பொருது— போர்செய்து
அழித்த அழித்துப்போகட்ட
திரு ஆளன்—வீரஸ்ரீயையுடையவனுடைய
திரு பதி மேல்—திருப்பதிவிஷயமாக
விட்டுசித்தன்— பெரியாழ்வார் [யாய்
விரித்தன—விஸ்தரித்து அருளிச்செய்தவை
திரு அரங்கம்— பாட்டுத்தோறும் 'திருவரங்கம்' என்கிற திருநாமத்தையுடைத்தாய்

¶ (பா) "கதிர்பொறுக்கி." (க) "பக்தாநாம்."

தமிழ்மாலை கொண்டு— தமிழ்த்தொடையான இப்பத்தையுங்கொண்டு

இருவர்— மதுகைடபர்களாகிற இருவருடைய

அங்கம்— சரீரத்தை

எரித்தானை— திருவனந்தாழ்வானுடைய மூச்சு வெப்பத்தாலே கொளுத்திப் பொகட்டவனை

ஏத்த வல்லார்— துதிக்க வல்லவர்களுக்கு

அடியோம்— நாங்கள் சேஷபூதர்.

வ்யா. பருவரங்களவைபற்றி. ப்ரஹ்மாதிகள் பக்கலிலே பெற்ற பெரியவரங்களான வற்றைத் தனக்கு பலமாகப்பிடித்து. படையாலித்தெழுந்தானை. "தான்போனுமேன்றெழுந்தான்" இத்யாதிப்படியே தன்னைப்போரப்பொலிய நினைத்து, யுத்தவிஷயமாக கர்வித்துக் கிளர்ந்துவந்த ராவணனை. செருவரங்கப் பொருதழித்த. யுத்தத்திலே அவனுடைய அபிமாநமெல்லாமழியும்படி பொருது முடித்துப் பொகட்ட. திருவாளன் திருப்பதிமேல். வீரஸ்ரீயையுடையவன் திருப்பதிவிஷயமாக. தேசிகரான பெருமானைச் சொன்னதெல்லாம் உபஸர்ஜநகோடியிலேயாய், அத்தேசமேயாய்த்து இத்திருமொழிக்கு விஷயம். திருவரங்கத்தமிழ் மாலையித்யாதி. பாட்டுத்தோறும் திருவரங்கமென்கிற திருநாமத்தை யுடைத்தான தமிழ்த்தொடையாக,பெரியாழ்வார் விஸ்தரேண வருளிச்செய்த இப்பத்தையுங்கொண்டு. இருவரங்கமெரித்தானை. மதுகைடபர்களாகிற இருவருடைய சரீரத்தையும் திருவனந்தாழ்வானுடைய ச்வாஸோஷ்ணத்தாலே தக்தமாக்கிப் பொகட்டவனை. "காய்ந்திருளைமாற்றிக் கதிரிலகுமாமணிகள், ஏய்ந்தபணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப, வாய்ந்த, மதுகைடபரும் வயிறுருகிமாண்டார்" என்னக்கடவதிறே. ஏத்தவல்லாரடியோமே. இத்திருமொழியைக்கொண்டு, இப்படி விரோதிநிரஸநசீலரான பெரியபெருமானை, வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி ஏத்தவல்லவர்களுக்கு அடியராயுள்ளவர்கள் நாங்களென்று தம்முடைய ஸம்பந்திகளையும் கூட்டிக்கொண்டு அருளிச்செய்கிறார். இத்தால் இத்திருமொழியைக்கொண்டு பெரிய பெருமானையேத்துமவர்கள் விஷயத்தில் தமக்குண்டான ப்ரதிபத்தி விசேஷத்தை யருளிச்செய்தாராய்த்து. ... ... ... ... ... ... ௰.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

அடிவரவு.—மாதவப் பிறப்பு மருமகன் கூன் பெருங் கீழ் கோழு வல்லெயிற்று குன்று பரு மரவடி.

—(o)—

ஆக திருமொழி-௩௭-க்கு, பாட்டு-௪௦௩.

---

நான்காம்பத்து - ஒன்பதாந்திருமொழி - மரவடியை, ப்ரவேசம்.

அ. கீழில் திருமொழியிலே-க்ர்ஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களும் ராமாவதாரகுண சேஷ்டிதங்களும் அவதாராந்தரகுணசேஷ்டிதங்களு மெல்லாம் பெரிய பெருமாள் பக்கலிலே ப்ரகாசிக்கையாலே அவற்றையடையத் தனித்தனியே பேசி யநுபவியாநின்றுகொண்டு,

தத்விஷயத்திலும் ததீயவிஷயமே உத்தேச்யமென்னும் ப்ரதிபத்தியாலே அவர் விரும்பி வர்த்திக்கிற திவ்யதேசமான திருவரங்கம் திருப்பதியினுடைய வைபவத்தை பஹுமுகமாகப் பேசி யநுபவித்தார்; இப்படி யநுபவித்திருக்கச்செய்தேயும் இவ்வளவில் தமக்கு பர்யாப்தி பிறவாமையாலே மீளவும் ததுபயவிஷயாநுபவரதத்பரராய், முன்பு அநுபவித்தப்ரகாரமன்றியே முகபேதேந பெரிய பெருமாளுடைய திவ்யசேஷ்டித ரஸவிசேஷங்களை அத்யாதரேண அநுபவித்து வித்தராகா நின்றுகொண்டு தத்ஸம்பந்திதயா பரமப்ராப்யமான திருவரங்கம் திருப்பதியினுடைய வைபவ விசேஷங்களையும், முன்பு உக்தமான ப்ரகாரமன்றிக்கே ப்ரகாராந்தரேண பேசி யநுபவித்து ப்ரீதராய்ச் செல்லுகிறார்- இத்திருமொழியில். ... *

அ. முதற்பாட்டு. மீண்டு எழுந்தருளுமதுக்கு விச்வாஸமாக ஸ்ரீபாதாழ்வானுக்குத் திருவடிநிலைகளைக் கொடுத்துப்போய், தேவர்களுக்கு விரோதியான ராவணாதிகளை நிரஸித்து மீண்டுவந்து லோகத்தையாண்டருளினவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—மரவடியைத்தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய் வானோர்வாழச்
செருவுடையதிசைக்கருமந் திருத்திவந்துலகாண்ட திருமால்கோயில்
திருவடிதன்றிருவுருவுந் திருமங்கைமலர்க்கண்ணுங் காட்டிநின்று
உருவுடையமலர்நீலங் காற்றாட்டவோசலிக்கு மொளியரங்கமே. க.

பதவுரை.

உரு உடைய— அழகையுடைய
நீலம் மலர்— கருநெய்தல் மலரானது
திரு அடிதன்— பெரிய பெருமாளுடைய
திரு— அழகிய
உருவும்— திருமேனி நிறத்தையும்
திருமங்கை— பெரிய பிராட்டியாருடைய
மலர்— விகஸிதமான
கண்ணும் — திருக்கண்களின் நிறத்தையும்
காட்டி நின்று—ப்ரகாசிப்பித்து நின்றதாய்
காற்று ஆட்ட— காற்று அசைக்க
ஓசலிக்கும்— அசையா நின்றுள்ள
ஒளி— ஒளியையுடைத்தான
அரங்கம்— திருவரங்கமானது;-
தம்பிக்கு — ( சித்ரகூடத்தில் ப்ரபத்தி பண்ணின ) தம்பியான ஸ்ரீபாதாழ்வானுக்கு
மரம் அடியை— திருவடி நிலைகளை
வான்பணயம் வைத்து — மீண்டெழுந்தருளுவர் என்று மிகவும் நம்புகைக்கு அடகாக வைத்து
வானோர்— ராக்ஷஸரால் நலிவுபட்ட தேவர்கள்
வாழ— அலைச்சலற்று வாழும்படியாக
போய்— சித்ரகூடத்தினின்றும் அவ்வருகே போய்
செரு உடைய—யுத்தம்செய்கைக்கு இடம் பிறந்த
திசை— தக்ஷிணதிக்கிலே சென்று
கருமம் திருத்தி— ராவணாதிகளை நிரஸித்து விபீஷணாழ்வானை ராஜ்யாபிஷேகம் பண்ணிவைத்து
வந்து— பிராட்டியோடேகூட திருவயோத்யைக்கு எழுந்தருளி
உலகு— லோகத்தை
ஆண்ட— ஆண்டருளின
திரு மால்— ஸ்ரீய:பதியாகிற
கோ— எம்பெருமானுக்கு
இல்— வாஸஸ்தாநமாம்.

வ்யா. மரவடியைத்தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய். கைகேயி, "[illegible]" என்று ஸ்வாதந்த்ர்யத்தை ஆரோபித்துவார்த்தை சொன்னபோதே பிடித்து தத்கதசித்தனாயிருந்து, சக்ரவர்த்திக்கு சாஸ்த்ரார்த்தங்களைப் பண்ணிவிட்ட வநந்தரம் தன்னை அபிஷேகம் செய்வதாக உத்யோகித்துக் கொண்டிருந்த ராஜலோகத்திலுள்ளாரும் பௌரஜாநபதங்களுமாயுள்ள ஸபாமத்யத்திலேவந்து, தன்னுடைய ஆற்றாமைதோற்ற ப்ரலாபித்து, புரோஹிதனான ஸ்ரீவஸிஷ்ட்ட பகவானையும் கர்ஹித்து, "பெருமாளுக்கு சேஷபூதனான நான் முடிசூடி ராஜ்யம் பண்ணுகைக்கு அர்ஹனல்லேன்" என்னுமிடத்தை யறிவித்து, பின்பு எல்லாரையுங் கூட்டிக்கொண்டு திருச்சித்திர கூடத்திலேவந்து தன்னுடைய ஆர்த்திதோற்றத் திருவடிகளிலே விழுந்து சரணம்புகுந்து, தான் விண்ணப்பம்செய்தது மாறுமல் செய்கைக்கீடான ப்ராப்திகளையெல்லாம் புரஸ்கரித்து, "தேவரீர் மீண்டெழுந்தருளித் திருவபிஷேகப்பண்ணி யருளவேணும்" என்று கண்ணும் கண்ணீருமாய்க்கொண்டு ப்ரார்த்தித்த தம்பியான ஸ்ரீபரதாழ்வானுக்கு; "பிள்ளாய்! நீ நம்மை நிர்ப்பந்திக்கக் கடவையல்லை, உன்னை ஸ்வதந்த்ரனாக்கி வார்த்தைசொன்னுரெதிரே உன் ஸ்வரூபாநுரூபமான பாரதந்த்ர்யத்தைப் பெற்று நீபோ, நாம் பதினாலு ஸம்வத்ஸரமும் கழித்தாலொழிய மீளுவதில்லை" என்று ஒருபடிப்பட அருளிச்செய்கையாலே; "திருவுள்ளக்கருத்து இது, ஆனபின்பு நாம் இனி நிர்ப்பந்திக்கக் கடவோமல்லோம்" என்று மகஸ்ஸைமீண்டு, "அடியேனுடைய ஸ்வாதந்த்ர்ய நிவர்த்திக்கும், தேவரீர் மீண்டெழுந்தருளுகிறீரென்னும் விச்வாஸத்துக்கும் ஹேதுவானதுதானேது" என்ன; "இரண்டுக்குமாக இத்தைக்கொண்டுபோ" என்று திருவடிநிலைகளைக் கொடுத்து. (௧) "[illegible]" என்கிறபடியே இத்தைப் பலகாலுமருளிச்செய்து ஸ்ரீபரதாழ்வானை உகப்பித்து மீளவிட்டு எழுந்தருளுகையாலே "மரவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய்" என்கிறார். பணயமாவது - விச்வாஸஹேதுவாயுள்ளது. "வான்பணயம்" என்கையாலே - மஹா விச்வாஸ ஹேதுவாயுள்ளதென்னுமிடம் தோற்றுகிறது. "வான்" என்று - வலியாதல்; பெருமையாதல். போய் - அவனை மீளவிட்டபின்பு திருச்சித்திர கூடத்தினின்றும் அவ்வருகே யெழுந்தருளினபடியைச் சொல்லுகிறது. இத்தால் - தண்டகாரண்யத்திலே யெழுந்தருளினது முதலாக லங்காபர்யந்தமாக எழுந்தருளின தூரமெல்லாம் சொல்லுகிறது.

வானோர்வாழ. (௨) "[illegible]" என்கிறபடியே - ராவணனாலே பீடிதராய் தத்விஷயார்த்திகளாய்ச் சரணம்புகுந்து அவதரிப்பித்த தேவர்களானவர்கள் தந்தாம் பதங்களிலே அலைச்சலற்றிருந்து வாழும்படியாக. செருவுடைய திசைக்கருமம் திருத்தி. "செரு" என்று - யுத்தம். "செருவுடைய திசை" என்று - தக்ஷிணதிக்கைச் சொல்லுகிறது. இத்திக்கிலேயிறே - ராவணாதி ராக்ஷஸரெல்லாருங் கூடிக்கொண்டிருந்தது. இங்

---

(௧) "பாதுகேசாஸ்ய ராஜ்யாய ந்யாஸம் தத்வாபுநஃபுநஃ-நிவர்த்தயாமாஸததோ பரதம் பரதாக்ரஜஃ."

(௨) "ஸஹிதேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபிஃ - அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதநஃ."

லேபாதல்; அவ்யயமாதல். "அரங்கமே" என்கிறவிடத்தில், ஏகாரம் - அவதாரணவாசகமாய், ஸ்தலாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறதாதல்; ஈற்றசையாதல். .... ... ....க.

அ. இரண்டாம்பாட்டு. புருஷகாரபூதையான பிராட்டி தானே சிதகுரைக்கிலும் அவளோடே மறுதலைத்துநின்று ஆச்ரிதரை ரக்ஷித்தருளும் பெரியபெருமாள் குணத்தை யருளிச்செய்து, இப்படி யிருக்கிற விவர்க்கொழிய வேறொருவர்க்காளாவரோ வென்கிறார்.

மூ.—தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல்
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தாரென்பர்போலும்
மன்னுடையவிபீடணற்காய் மதிளிலங்கைத்திசைநோக்கி மலர்க்கண்வைத்த
என்னுடையதிருவரங்கர்க்கன்றியு மற்றொருவர்க்காளாவரே. உ.

பதவுரை.

தாமரையாள் ஆகிலும் — புருஷகாரபூதையான பிராட்டியாரேயாகிலும்
தன் அடியார் திறத்தகத்து— தனக்கு அடிமைப்பட்டவர் விஷயத்திலே [தனக்கு - எம்பெருமானுக்கு]
சிதகு— அவர்கள் குற்றங்களை
உரைக்கும் ஏல்— கணக்கிட்டுச் சொல்லத் தொடங்கினாளேயாகில்
என் அடியார்— 'எனக்கு சேஷபூதரானவர்கள்
அது— பேர்சொல்லவுங் கூடக் கூசவேண்டும்படியான அக்குற்றங்களை
செய்யார்— செய்யமாட்டார்கள்'
செய்தார் ஏல்— (பொறுக்கைக்கு எம்பெருமானுண்டு என்னும் நினைவாலே, ப்ராமாதிகமாகச்) செய்தார்களேயாகிலும்
நன்று செய்தார்— அவை நற்றங்களே; [அவை எனக்கு போக்யங்களே என்றபடி.]
என்பர் போலும்— என்றாற்போலே சில உதாஸீநோக்திகளை அவளோடே மறுதலைத்து வாய் திறந்து சொல்லுமவராய்
மன் உடைய— செல்வம்மாறாத
விபீடணற்காய் — ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக
மதிள்— மதிளையுடைத்தான
இலங்கை திசை நோக்கி—இலங்கை முகமாக
மலர் கண் வைத்த — குளிர்ந்தகண்களும் தானுமாய்ப் பள்ளிக்கொண்டருளுமவனாய்
என்னுடைய— எனக்கு ஸ்வாமியான
திரு அரங்கர்க்கு அன்றியும் — பெரிய பெருமாளை யொழிய
மற்று ஒருவர்க்கு— வேறொருவருக்கு
ஆள் ஆவரே— அடிமை செய்வரோ?.

வ்யா. தன்னடியாரித்யாதி. †பிராட்டி சிதகுரைத்தாலும் "குணத்தை தோஷமாக ப்ரமித்தாயோ" என்றிறே அவன் பாசுரம். பெரிய பெருமாளுடைய ஆச்ரிதபக்ஷபாதாதிசயஞ் சொல்லுகிறது. இருவரும் ‡இசலி ஆச்ரிதரை நோக்கும்படி சொல்லுகிறது. "என்னடியா ரதுசெய்யார்" என்பதிலும், "சிதகுரைக்கும்" என்கிறதிறே உத்தேச்யம்;— கைக்கொள்ளுகைக்குச் சொல்லும் வார்த்தைபோலன்றிறே கைவிடாமைக்குச் சொல்லும் வார்த்தை. "அடியார்" என்று - ஸ்வாதந்த்ர்யநிவர்த்தி; "தன்னடியார்" என்று - அந்யசேஷத்வ நிவர்த்தி. "அடியார்" என்பது - சேஷியும் உபாயமும் உபேயமும் நாலுகப்

† இப்பாட்டை * சென்னியோங்கு வ்யாக்யானத்திலே பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநித்த ப்ரக்ரியைக்கிணங்க வ்யாக்யாநித்தருளுகிறாரென்று கண்டுகொள்வது.

‡ இசலி - ஸ்பர்த்தித்து.

பற்றினவர்களை. "அடியார்" என்று நிரூபகம்—இவர்களுக்கு; குல சரண கோத்ராதிகள் நிரூபகம் மற்றையார்க்கு. ஔபாதிகமுமாய் அநித்யமுமாயிருக்கும் அது; நிருபாதிகமுமாய் நித்யமுமாயிருக்கும் இது. "பலசதுப்பேதிமார்" என்று நிரூபகம் அவர்களுக்கு; "திருநாரணன் தொண்டர்" என்றிறே இவர்களுக்கு நிரூபகம். ஒரு மிதுநம் சேஷியானால் "தம்மடியார்" என்னவேண்டாவோவென்னில்; "தன்" என்கிறதுக்குள்ளே, தானும் அந்தர்ப்பூதையாகையாலே, அவன் ஸ்வரூபரூபகுணவிபூதி யித்தனையும் இவள் தோயல்வாசியிறே யென்னுதல்; "அடியார்" என்பதுக்குள்ளே அடிமையில் அந்தர்ப்பாவம் தனக்கு முண்டாகையாலே யென்னுதல்; இத்தால்—நாரகோடிகடிதையென்கை. (க) "திருமாலெவந" என்றும் "உகந்ததோழன்" என்றும் அவன்நினைவாகையாலே அவன்முன்னே "நம்மடியார்" என்னமாட்டாளே, தானும் (உ) "திருவளவயிக்ஷு" என்றுமே, அந்தாலேயென்னுதல். "அடியார்" என்கிற பஹுவசநம்—ஊர் இரண்டிட்டவாறே அடியாரு மிரண்டிட்டதே. "மேலாத்தேவர்களும் நிலத்தேவரும்" என்று—இந்நிலத்தேவர்விஷயமாகவிறே சிதகுரைப்பது. * அருள்புரிந்த சிந்தை அடியார்மேல்வைத்துப் பொருள்தெரிந்து காண்குற்றவப்போது இருள் தெரிந்துநோக்கின அடியார்விஷயமிறே இது. திறத்தகத்து—அவர்விஷயமாக. தாமரையாளாகிலும்—பெரிய பிராட்டியாரேயாகிலும். அபிசப்தம்—ஆச்ரிதவிச்லேஷம் பொறுக்கமாட்டாத மார்த்தவபரம்; "தன்னடியார்" என்னும்படி காட்டிக்கொடுக்கையாலும் சொல்லக்கூடாது. வெந்நீரைக் குளிர்நீராக்குமத்தனையல்லது தான் சுடக்கூடாதிறே; அப்படியே இவள் சிதகுரைக்கக்கூடுமோ. "தன்னுகத்திருமங்கை தங்கியசீர்மார்வன்" என்று—தான் ஸத்தைபெறவிறே அவளநுபவிப்பது; இப்படி ஸத்தைபெறும்படியான போகத்திலே புருஷகாரமாம்போது தெளிவுண்டாகவேணும்; அப்போது ப்ரணயித்வத்துக்கு நமஸ்காரமிறே. ஆனால் புருஷகாரமும் போகமும் சேரும்படி யென்னென்னில்; இவளைப்போலே அவன்றானும் "பித்தர் பனிமலர்மேற் பாவைக்கு" என்று—இவள் விஷயத்தில் ப்ரேமங்கனத்திருக்கும். இருவர்க்குமுண்டான ப்ரேமம் இவர்கள்பாசுரத்திலே தெரியுமிறே. (ஙு) "ரஜேயம் க்ஷணவி" என்னும் ஒருதலை; "இறையும்—அகலகில்லேன்" என்னும் ஒருதலை. அவன் வைச்வரூப்யமெல்லாங்கொண்டு இவளையநுபவிக்கவிழிந்தாலும், தன் குணரூப சேஷ்டிதங்களாலே குமிழிநீருண்ணப்பண்ணும்; இவ்வநுபவஜநிதப்ரீதிக்குப் போக்குவீடாக "உனக்கென்செய்கேன்" என்று ஒன்று கொடுத்தல்லது தரிக்கமாட்டாதவளவிலே, "நாம் இவன்பக்கலிலே ஒன்று கொள்ளாதபோது இவன் முடியும்" என்று பார்த்து, அவன் "உனக்குவேண்டுவதென்?" என்றவளவிலே, "சேதநரபராதத்தைப் பொறுக்கவேணும்" என்ன; தன் ஸ்வாதந்த்ர்யத்தையும் இவர்கள் அபராதத்தையும் சாஸ்த்ர மர்யாதையையும் மறந்து "பொறுத்தேன்" என்ன; "இவன் பொறுத்தது நமக்காகவோ, இவர்களுக்காகவோ, தன் போகத்துக்காகவோ" என்று ஆராய்கைக்காகச் சிதகுரைக்கத் தொடங்கினளாகில்; "என்னடியாரதுசெய்யார்" என்னும் அவன்; நீ சிதகுரைக்கக் கூடாதாப்பொலே அவர்கள் செய்யவுங்கூடாது, "ஸாக்ஷியுண்டு" என்னிலும் அவர்கள் செய்யக்கூடாது, உன் ப்ரமமாமித்தனை. என்னடியாரதுசெய்யார். ஸ்வதந்த்ரரும் அநபேக்ஷபூதரும் செய்யுமத்தை என்னடியாரும் செய்வார்களோ. "செய்தார்கள்" என்று நிர்ப்பந்தித்தாயாகில்; அவர்கள் என்னடியாராகிறார், உன்னடியாரன்றே, நீ செல்லநில்லு. அதுசெய்யார். ஆச்ரயணத்துக்கு முன்பு இவள் மன்றுமேம், பின்பு அவன் மன்றுமேம். "அன்

(க) "மித்ரபாவேந." (உ) "மித்ரமௌபயிகம்." (ஙு) "ஹ்ரீ ஷேயம் க்ஷணமபி"

றின்னாதனசெய் சிசுபாலன் " என்றாற்போலேயும், " இவள் சிதகுரைக்கும் " என்றாற்போலேயும், ஈச்வரனும் " அதுசெய்யார் " என்று அதின் பேர்சொல்லக் கூசினபடி. செய்தாரேல் நன்றுசெய்தார். " நாமுண்டு " என்றும், " ஒருப்ரமாணமுண்டு " என்றும், " நாம் பொறுப்போம் " என்றும் நினைத்துச் செய்தார்களாகில் அழகிதாகச்செய்தார்கள். ஒருதர்மமோ தர்மமும் பரலோகமுமில்லை" என்றுசெய்தார்களன்றே. "ப்ராமாதிகத்துக்கு நாமுளோம்" என்றன்றோசெய்தது. அதாவது- மடலெடுக்கையும், காமன்காலிலே விழுகையும். ["செய்யும் கிரிசைகள் " இத்யாதி.] என்பர். " நாம்நெஞ்சாலே பொறுத்து இவளுக்கு முகம் கொடுத்துக்கேட்கில் இவள் இன்னமும் குறைசொல்லக்கூடும் " என்று, வாய்திறந்தருளிச் செய்வர். போலும். " ஓங்காண், போ " என்றாற்போலே உதாஸீநோக்தி.

மன்னுடைய விபீடணர்க்காய். கீழ் அருளிச்செய்த அர்த்தத்தை முதலிக்கிறார். ஐச்வர்யம்மாறாத விபீஷணர்க்காக. பிராட்டியையும் விட்டுப் பற்றவேண்டும்படியான மஹாராஜரையும் விட்டு, " விபீடணற்கு வேறாக நல்லானை " என்னும்படியிறே விபீஷணபக்ஷபாதம். ஆகையாலே சேர்க்கைக்கீடான பாசுரங்கேட்குமித்தனை யொழிய பிரிப்பார்பாசுரங் கேளானென்கிறது. " குற்றமுண்டு " என்ற மஹாராஜரையும், " குற்றமில்லை " என்ற திருவடி இளையபெருமாளையும் பூர்வபக்ஷமாக்கி, "குற்றமுண்டு, நான்கைக்கொள்ளக்கடவேன் " என்றாரிறே பெருமாள். " சிதகுரைக்கும் " என்றது மஹாராஜர் கோடி; " என்னடியார் அதுசெய்யார் " என்றது திருவடி இளையபெருமாள்கோடி. சிதகுரைக்கை புருஷகாரக்ருத்யம்; " அடியார் அதுசெய்யார் " என்றது சரணாகத க்ருத்யம்; " நன்றுசெய்தார்" என்றது சரண்ய க்ருத்யம். மதிளிலங்கைத் திசைநோக்கி. விபீஷணனையும் லங்கையையும் மதிளையும் அத்திக்கையும் நோக்கியிறே கண்வளர்ந்தருளுகிறது. மலர்க்கண். பெரியபெருமாள் திருக்கண்கள் ஆச்ரிதரைக்கண்டவாறே மலர்ந்தபடி. மலர்க்கண். *கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவிறே திருப்பாணாழ்வாரைக் கண்டவாறே. என்னுடைய திருவரங்கர்க்கு. இச்செயலுக்குத் தோற்று அடிமைபுக்கு எழுதிக்கொடுக்கிறார். மற்றொருவர்க்காளாவரே. " மற்றொன்றினைக்காணா " என்கிறபடியே பெரியபெருமாளையொழிய வேறொருத்தர்க்கு ஆளாவரோ. ஆகையாலே, சிதகுரைத்தார் ஸ்ரீரங்கநாயகியாரும் " நன்று செய்தார் " என்று மன்றாடினார் பெரியபெருமாளாயுமிருந்ததிறே. *அன்றே தந்தையும் தாயுமாவார் - திருவரங்கத்துள்ளோங்கு மொளியுளார்தாமேயிறே. ஆளாவரே. " ஆட்கொள்வானமரும்மாரணியரங்கம் " என்று ஆட்கொள்வார் பெரியபெருமாளிறே. " அணியார்பொழில் சூழ் அரங்கநகரப்பா. " ... ... ... ... ... ... ... ௨.

அ. மூன்றாம்பாட்டு. விரோதிநிரஸநசீலனாய், அடியாரானவர்களை புநராவ்ருத்தியில்லாதபடி பரமபதத்திலே கொடுபோய் வைத்து அடிமைகொள்ளுமவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—கருளுடைய பொழின்மருதுங் கதக்களிறும் பிலம்பனையுங் கடியமாவும்
உருளுடைய சகடரையு மல்லரையு முடையவிட் டோசைகேட்டான்
இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூ டேற்றிவைத்தேணிவாங்கி
அருள்கொடுத்திட்டடியவரை யாட்கொள்வா னமருமூ ரணியரங்கமே. ௩.

## பதவுரை.

கருள் உடைய — அகவாயில், ‘இவனை நலியவேணும்’ என்கிற சீற்றத்தையுடைத்தாய்
பொழில் — (பார்த்தவர்கள் மதிமயங்கும்படி) புறம்பில் சோலைசெய்து நிற்கிற
மருதும் — இரட்டை மருதமரங்களையும்
கதம் — மிக்ககோபத்தாலே எதிர்த்துவந்த
களிறும் — குவலயாபீடத்தையும்
பிலம்பனையும் — ப்ரலம் பாஸுரனையும்
கடிய — மஹாக்ரூரமான
மாவும் — கேசியாகிற அஸுரனையும்
உருள் உடைய — உருண்டு வந்த
சகடையும் — சகடாஸுரனையும்
மல்லையையும் — சாணூர முஷ்டிகர்களாகிற மல்லர்களையும்
உடையவிட்டு — சிந்நபிந்நமாக்கி
ஓசை கேட்டான் — அவற்றை நிரஸித்த ப்ரகாரங்களை அறிவுடையார் ஸ்தோத்ரம் பண்ணும் ப்ரஸித்தியைக் கேட்டவன்

அடியவர் — சேஷபூதர்களை
இருள் — அந்தகாரத்தை
அகற்றும் — நீக்காநின்றுள்ளவனாய்
எறி — வீசுகின்ற [ த்யனுடைய
கதிரோன் — கிரணங்களையுடையனான ஆதி
மண்டலத்தூடு — மண்டலத்தூடே கொண்டுபோய்
ஏற்றி வைத்து — பரமபதத்திலே நித்யஸூரிகளோடு கூடவைத்து
ஏணி வாங்கி — தன்னுடைய உபாயபாவத்தை நிவர்த்திப்பித்து
அருள் கொடுத்திட்டு — (மறுபடி மீளாமைக்கும் கைங்கர்யலாபத்துக்கு முறுப்பாக) தன்னுடைய ப்ரஸாதத்தை இவர்களுக்குக் கொடுத்து
ஆட்கொள்வான் — அடிமைகொள்ளுமவன்
அமரும் — அமர்ந்துவர்த்திக்கிற
ஊர் — ஊராவது
அணி அரங்கம்.

வ்யா. கருளுடைய பொழில்மருதும். “கருள்” என்று - கறுப்பாய், அத்தாலே சீற்றத்தைச் சொல்லுகிறது. “கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள்” என்னக் கடவதிறே. அகவாயில் “இவனை நலியவேணும்” என்னும் சீற்றத்தையுடைத்தாய், புறம்பு ஆகர்ஷகமாம்படி சோலைசெய்துநின்ற யமளார்ஜுநங்களையும். கதக்களிறும். மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப்பிச்சேற்றி நிறுத்துகையாலே அதிகுபிதமாய்வந்த குவலயாபீடத்தையும். பிலம்பனையும். நம்பிமூத்தபிரானும்தானும் இடைப் பிள்ளைகளோடேகூடி விளையாடா நிற்கச்செய்தே அவர்களுக்குள்ளே ஒருவனாய்க் கலந்துவந்து தன்னோடொக்க விளையாடி நலியநினைத்த ப்ரலம்பாஸுரனையும். கடியமாவும். (க) “வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ர:” என்கிறபடியே ஸ்ரீப்ருந்தாவநத்துக்குப் போகிறவழியிலே நலிகைக்காக அதிக்ரூரமாய் வாயை அங்காந்து கொண்டுவந்த கேசியாகிற அஸுரனையும். உருளுடைய சகடையையும். கண்வளரா நிற்கச்செய்தே நலிவதாக உருண்டுவந்த சகடாஸுரனையும். மல்லையையும். குவலயாபீடத்தினுடைய ச்ருங்கபங்கத்தைப்பண்ணி, ரங்கமத்யத்திலே வந்துபுகுந்த செருக்குக்கண்டு பொறுக்கமாட்டாமல் மேலிட்டுவந்த மல்லையையும். உடையவிட்டு. சிதிலமாக்கி. நிரஸநப்ரகார பேதமுண்டானாலும் நிரஸநமொத்திருக்கையாலே “உடையவிட்டு” என்று ஒருசொல்லாலே யருளிச்செய்கிறார். “உடையவிட்டு” என்கையாலே - பசுங்கலமுடைத்தாற்போலே நிரஸித்த அநாயாஸத்தைச் சொல்லுகிறது. ஓசைகேட்டான். இவ

(க) “வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ர:”

ற்றை நிரஸித்த ப்ரகாரங்களைச்சொல்லி, விசேஷஜ்ஞர் ஸ்தோத்ரம் பண்ணுகிற ப்ரஸித்தி யைக் கேட்டான்.

மேலே - மோக்ஷப்ரதத்வமிறே சொல்லுகிறது. அதுதான் விரோதி நிரஸந பூர்வகமாயிறேயிருப்பது. "அவித்யா கர்மவாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்கள்" என்று - விரோதிகள்தான் அநேகமிறே. (க) "ஸவ பாவெ ஸொ ஜெ ஷயிஷ்ாமி" என்று அவற்றையெல்லாம் ஏகோத்யோகேந நிரஸித்துப் பொகட்டிறே கொடுபோவது. ஆகையால் கீழ்ச்சொன்ன ¶ விரோதிநிரஸநமதுக்கு ஸூசகம். இருளகற்று மெறிகதிரோன் மண்டலத் தூடேற்றி. திமிரஹரமாய்க்கொண்டு வீசுகிற கிரணங்களை யுடையனை ஆதித்யனுடைய மண்டலத்தூடே கொடுபோய் பரம்பதத்திலேயேற்றி. ஆதித்ய மண்டலத்தூடே; கொடு போய் என்றவிது - "அர்ச்சிராதி மார்க்கத்தாலே கொடுபோம்" என்னுமதுக்கு உபலக்ஷணம். "போம்வழியைத்தரும்" என்கிறபடியே - அங்குப்போய் அநுபவிக்கு மநுபவம் பரிச்சிந்நமென்னும்படியிறே அர்ச்சிராதி மார்க்கத்தில் அநுபவஸூசகம். ஆகையாலே முன்னுற இந்த ரஸத்தை அநுபவிப்பித்துக் கொண்டாய்த்து ப்ராப்யபூமியான பரமபதத்தில் ஏற்றுவது. வைத்து. "மாமணிமண்டபத் தந்தமில் பேரின்பத் தடியரோடிருந்தமை" என்கிறபடியே ஆநந்தமயமான திருமாமணி மண்டபத்திலே நிரதிசய ஆநந்தயுக்தராய்க் கொண்டு நித்யஸூரிகளோடே கூடியிருக்கும்படிவைத்து. ஏணிவாங்கி. ஏணியாவது - ஏறுகைக்கு ஸாதநமாயுள்ளதிறே; அத்தை வாங்குகையாவது - இவர்கள் விஷயத்தில் தன்னுடைய உபாயபாவத்தை நிவர்த்திப்பிக்கை. ப்ராப்தியளவுமிறே உபாயமாகவேண்டுவது; மேல் உபேயமாயிருந்தே அநுபவிப்பிக்கு மித்தனையிறே. அருள்கொடுத்திட்டு. புநராவ்ருத்தியபாவத்துக்கும், நித்யகைங்கர்யலாபத்துக்கு முடலான தன்னுடைய ப்ரஸாதத்தை இவர்களுக்குக் கொடுத்து. அடியவரை. சேஷத்வமே நிரூபகமாகவிருக்கிற இவர்களை. ஔபாதிகமான நிரூபகங்களெல்லாம் ஸம்ஸார தசையில்வந்து கழிந்துபோமவையிறே. ஆவிர்ப்பூதஸ்வரூபனுக்கு சேஷத்வமே நிரூபகமாகவிறே யிருப்பது. ஆட்கொள்வான். ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தி விசேஷத்தைக் கொள்ளுமவன். "அடியவரை யாட்கொள்வான்" என்கையாலே - ராஜபுத்ரன்தலையிலே முடியைவைக்குமாபோலே, சேஷபூதரான விவர்களுக்கு கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைக் கொடுக்கும்படி சொல்லுகிறது. அவன்றனக்கும் ஸ்வரூபஸித்தி - ஆட்கொள்ளுகையாலேயிறே. இவன், அடிமைசெய்து ஸ்வரூபம்பெறும்; அவன், அடிமைகொண்டு ஸ்வரூபம்பெறும். சேஷபூதனுக்கு ஸ்வரூபஸித்தி கிஞ்சித்காரத்தாலே யானாற்போலே, சேஷிக்கு ஸ்வரூபஸித்தி கிஞ்சித்கார ப்ரதிஸம்பந்திதையாலே யிறே. அமருமூர். அப்படிசெய்யுமவன், அதுக்கு உறுப்பாக சேதநரைத் திருத்தும்படி நித்யவாஸம் பண்ணுகிறவூர். அணியரங்கமே. "அணி" என்று - ஆபரணமாய், ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான தேசமென்கை. அன்றிக்கே, "அணி" என்று - அழகாய், மாடங்களும் மாளிகைகளும் திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருச்சோலைகளும் முதலானவற்றோடேகூடி தர்சநீயமா யிருக்கும்படியைச் சொல்லுகிற தாகவுமாம்.

"பிள்ளை திருநறையூரரையரும்பட்டரும் ப்ரதக்ஷிணம்பண்ணாநிற்க பின்னே ஸேவித்துக் கொண்டுபோனேன்; அல்லாதா ரெல்லாரும் கடுங்குதிரைபோலே வாராநிற்க,இவர்கள் திருக்

¶ (பா) "விரோதி நிரஸநத்துக்கு." (உ) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

கோபுரங்களையும் திருமாளிகைகளையும், கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்து வாழ்ந்து கொண்டு வருகிறபடியைக்கண்டு, 'அல்லாதார்க்கும் இவர்களுக்கும் செயல் ஒத்திருக்க இவர்களான வாசிதோற்ற விருந்தபடியென்! என்று இருந்தேன்காணும்' என்று நஞ்சீயர் நம்பிள்ளைக்கு அருளிச்செய்தார்" என்று ப்ரஸித்தமிறே. ப்ராப்யபூமியி லுள்ளவை யெல்லாம் விசேஷஜ்ஞரானவர்களுக்கு போக்யமாயிறே யிருப்பது. ... ... ௩.

அ. நான்காம்பாட்டு. ஸ்ரீமத்த்வாரகையிலே * பதினாறுமாயிரவர்தேவிமார் பணிசெய்யவிருந்தவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—பதினாறுமாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரையென்னு
மதினாயகராகி வீற்றிருந்த மணவாளர் மன்னுகோயில்
புதுநாண்மலர்க் கமல மெம்பெருமான் பொன்வயிற்றிற் பூவேபோல்வான்
பொதுநாயகம்பாவித் திறுமாந்து பொற்சாய்க்கும் புனலரங்கமே. ௪.

பதவுரை.

துவரை என்னும் அதில்— ஸ்ரீத்வாரகையென்கிற திருப்படை வீட்டிலே
பதினாறு ஆம் ஆயிரவர் தேவிமார் — கோபகந்நிகைகளான பதினாறாயிரம் தேவிமாரானவர்கள்
பணி செய்ய— நித்யகைங்கர்யம் பண்ண
நாயகர் ஆகி— அவர்களுக்கு நாயகராய்க்கொண்டு
வீறு— தன்பெருமை தோற்ற
இருந்த— எழுந்தருளியிருந்த
மணவாளர்— மணவாளரானவர் (அழகியமணவாளப் பெருமாளாய்க்கொண்டு)
மன்னு— நித்யவாஸம் பண்ணுகிற
கோ இல்— கோயிலாவது;
நாள்— அப்போதலர்ந்த
புது— செவ்வி குன்றாத
கமலம் மலர்— தாமரைப் பூவானது
எம்பெருமான்— எம்பெருமானுடைய
பொன்— ஸ்ப்ருஹணீயமான
வயிற்றில்— திருநாபியிலுள்ள
பூவே— பூவையே
போல்வான்— போன்றிருக்கைக்காக
பொது நாயகம் பாவித்து — ஸர்வ நிர்வாஹகத்வத்தை உடைத்தானதாக நினைத்து
இறுமாந்து— (அத்தாலே) கர்வித்து
பொன்— மற்றுண்டான தாமரைகளின் அழகை
சாய்க்கும்— தள்ளிவிடா நின்றுள்ள
புனல்— நீர்வளப்பத்தையுடைய
அரங்கமே— திருவரங்கமேயாம்.

வ்யா. பதினாறுமாயிரவர்தேவிமார் பணிசெய்ய. நரகாஸுரன் திரட்டிவைத்த ராஜகந்நிகைகளாய், அவனை நிரஸித்தவநந்தரம் அங்கு நின்றும் கொண்டுவந்து திருமணம் புணர்ந்தருளின பதினாறாயிரந் தேவிமாரானவர்கள் தங்களுடைய ப்ரேமாநுகுணமாகவும் ப்ராப்யாநுகுணமாகவும் நித்யபரிசர்யை பண்ண. துவரையென்னுமதில். ஸ்ரீமதுரையிலே எழுந்தருளியிருக்கச்செய்தே இங்குள்ளாரெல்லாரையும் அங்கே கொடுபோய்வைக்கத் திருவுள்ளம் பற்றி, ஸ்வஸங்கல்பத்தாலே உண்டாக்கினதாகையாலே அத்யந்தவிலக்ஷணமாய், ஸ்ரீமத்த்வாரகையென்று ப்ரஸித்தமாயிருந்துள்ள திருப்படைவீட்டிலே. நாயகராகிவீற்றிருந்தமணவாளர். அவர்களுக்குத்தனித்தனியே "என்னையொழியவறியார், என்னையொழியவறியார்" என்னும்படி நாயகராய்க்கொண்டு, தம்முடைய வ்யாவர்த்திதோற்ற எழுந்தருளியிருந்தமண

வாளரானவர். மன்னுகோயில். *எட்டிழையாய் மூன்றுசரடாயிருக்கும் மங்களஸூத்ரத்தை தரித்து, தமக்கு அநந்யார்ஹராய் அநந்யபோகராயிருக்குமவர்களோடே கலந்து அடிமை கொள்ளுகைக்காக அழகியமணவாளப் பெருமாளாய்க்கொண்டு, அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுகிற கோயில்.

புதுநாண்மலர்க்கமலம். அப்போதலர்ந்த செவ்வித்தாமரைப்பூவானது. எம்பெருமான் பொன்வயிற்றில் பூவேபோல்வான். ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரனுடைய ஸ்ப்ருஹணீயமான திருவயிற்றில் பூவையொப்பான். பூவையேபோல்வதாக வென்றபடி. பொதுநாயகம்பாவித்து. ஸர்வநிர்வாஹகத்வத்தை பாவித்து. அதாவது- ஜகத்காரணதயா ஸர்வநிர்வாஹகமாயிருக்கிற விருப்பைத் தானுமுடையதாக பாவித்தென்கை. இறுமாந்து. இந்தநினைவாலே கர்வித்து. பொன்சாய்க்கும். மற்றுண்டான தாமரைகளினுடைய அழகைத்தள்ளிவிடாநிற்கும். புனலரங்கமே. இப்படியிருந்துள்ள ஜலஸம்ருத்தியை யுடைத்தாயிருந்துள்ள திருவரங்கமே. ... ... ... ... ... ... ... ... ௪

அ. ஐந்தாம்பாட்டு. ஸ்ரீநாரதபகவானுக்குத் தன்வைபவத்தை ப்ரகாசிப்பித்த ஸர்வேச்வரன், அவன் பக்கலிலே ஸ்தோத்ரம் பண்ணி வணங்க, கண்வளர்ந்த தேசமிது வென்கிறார்.

மூ.—ஆமையாய்க் கங்கையா யாழ்கடலாயவனியா யருவரைகளாய்
நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த் தானுமானான்
சேமமுடைநாரதனார் சென்றுசென்று துதித்திறைஞ்சக் கிடந்தான்கோயில்
பூமருவிப்புள்ளினங்கள் புள்ளரையன் புகழ்குழறும் புனலரங்கமே. ௫.

பதவுரை.

புள் இனங்கள்— அன்னங்கள் முதலிய பக்ஷி ஸமூஹங்களானவை
பூ— நீர்ப்பூமுதலிய பூக்களில்
மருவி— பொருந்தி நின்று
புள் அரையன் — தங்கள் ஜாதிக்கு ராஜாவான பெரிய திருவடியினுடைய
புகழ்— கீர்த்தியை
குழறும்— அநக்ஷரரஸமாகப் பேசாநின்று [ள்ள
புனல்— நீர்வளப்பத்தையுடைய
அரங்கம்— திருவரங்கமானது;
ஆமை ஆய் — கங்காஜலத்துக் குள்ளே ஆமையாயும்
கங்கை ஆய்— அந்த ஆமைமுதலிய ஸத்வங்களுக்கு வாஸஸ்த்தலமான கங்கையாயும்
ஆழ்— அகாதமாயிருந்துள்ள
கடல் ஆய்— (கங்கைமுதலிய நதிகளுக்குப் புகலிடமான) ஸமுத்ரமாயும்
அவனி ஆய்— பூமியாயும்
அரு வரைகள் ஆய் — பெரியமலைகளாயும்
நான்முகன் ஆய்— சதுர்முகப்ரஹ்மாவாயும்
நால் மறை ஆய்— நான்கு வேதங்களாயும்
வேள்வி ஆய்— யாகங்களாயும்
தக்கணை ஆய்— (அந்தயாகங்களுக்கு வீர்யத்தைக் கொடுக்கும்) தக்ஷிணையாயும்
தானும் ஆனான் — அந்ததக்ஷிணைகள் முகமாக எல்லார்க்கும் அவரவர்கள் விரும்பின பலத்தைக் கொடுக்கும் அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனான தானுமானவன்

| | | | |
|---|---|---|---|
| சேமம் உடை— | ப்ரஹ்மபாவராநிஷ்டை யாகிற ரக்ஷையையுடைய | துதித்து— | ஸ்தோத்ரங்கள் பண்ணி |
| நாரதனார்— | ஸ்ரீநாரதபகவான் | இறைஞ்ச— | ஸேவிக்கும்படியாக |
| சென்று சென்று— | பலகாலும் வந்து | கிடந்தான்— | கண்வளர்ந்தருளுமவனுடைய |
| | | கோயில்— | வாஸஸ்தாநமாம். |

வ்யா. துர்யோதநாதிகளுடைய யாகத்தில்வந்த ராஜாக்களெல்லாரும், ஸ்ரீமத்த்வாரகையாகிற திருப்படைவீட்டிலுண்டான அரணும் அதிலுண்டான ஸம்ருத்தியும் அங்கு க்ருஷ்ணனெழுந்தருளியிருக்கிற மதிப்புமெல்லாம் துர்யோதநாதிகள் சொல்லக்கேட்டு, "க்ருஷ்ணனோடே நாம் உறவுசெய்துகொண்டு இருக்கவேணும்" என்னுமதைப்பற்ற, துர்யோதநாதிகளும் பாண்டவர்களும் தாங்களுமெல்லாரும் தந்தாமுடைய பரிவாரங்களோடே கூடவந்து "ரைவதகம்" என்கிறபர்வதத்தைச் சூழவிட்டிருந்து, தாங்கள் ஸேவார்த்தமாக வந்த செய்தியை க்ருஷ்ணனுக்கு விண்ணப்பஞ்செய்து போகவிட; க்ருஷ்ணனும், "இவர்கள் ஸபரிகராய்த்திரளவருகைக்கு ஹேதுவென்" என்று சிந்தித்து, நம்பிமூத்தபிரான், ஸாத்யகிபோல்வார், இவர்கள்முன்னாக, ஸபரிகரராய் ஸாயுதராய்க்கொண்டு இவர்களிருக்கிற விடத்திலே எழுந்தருளி எல்லாரையும் குசலப்ரச்நம்பண்ணி, அவர்களுடைய வயஸ்ஸுக்களுக்கும் பலங்களுக்கும் மதிப்புக்களுக்குமநுகுணமாக ஆஸநமிடவேண்டுவார்க்கெல்லா மாஸநமிடுவித்து, தாமும் தமக்கநுகுணமானதொரு திவ்யஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளியிருந்தருளச்செய்தே, ஸ்ரீநாரதபகவான் வந்துஸேவித்து, (க) "[illegible]" என்று விண்ணப்பம் செய்ய, (உ) "[illegible]" என்று இப்படி மஹர்ஷிசொன்னதைக் கேட்டு ஸ்மிதம்பண்ணி, மஹர்ஷியைப்பார்த்து "தக்ஷிணைகளோடேகூட, நான் ஆச்சர்யனுகவும் தந்யனுகவும் சொல்லப்பட்டவன்" என்று அருளிச்செய்ய; இத்தைக்கேட்டு ஸந்தோஷித்து, (ங) "[illegible]" என்று- "இருக்கிற ராஜாக்களுடைய மத்யத்திலே தேவரீரருளிச்செய்தவாக்யத்தினுலே நான்பர்யாப்தனுகாநின்றேன், இனிவந்தவழியே போகிறேன்" என்று விண்ணப்பம் செய்து போகப்புக; இப்படி போகத்தேடுகிற நாரதபகவானைக்கண்டு, அவராலே சொல்லப்பட்ட இந்த ரஹஸ்யத்தைத் தாங்களறியாமையாலே, க்ருஷ்ணனுடைய திருமுகமண்டலத்தைப்பார்த்து, "'ஆச்சர்யராகாநின்றீர் தந்யராகாநின்றீர்' என்று மஹர்ஷி சொன்னவளவிலே 'தக்ஷிணைகளோடேகூட, இப்படியே' என்று தேவரீரருளிச்செய்த இந்த மஹாரஹஸ்யமெங்களுக்குத் தெரிகிறதில்லை, இத்தையருளிச்செய்ய வேணும்" என்ன; 'மஹர்ஷிதன்னைக் கேளுங்கோள், அவர் உங்களுக்குச் சொல்லக்கடவர்' என்று அருளிச்செய்து, அவரையும் 'நீர் இவர்களுக்குச் சொல்லும்' என்ன; அவரும் இவர்களைப்பார்த்து, "ஆனால் கேட்கலாகாதோ" என்று சொல்லி

---

(க) "ஆச்சர்யகேனுதேவாநா மேகஸ்த்வம் புருஷோத்தம - தந்யச்சாஸி மஹாபாஹோ லோகேநாஸ்மிந் கச்சந" (உ) "ஏவமுக்த ஸ்ஸ்மிதம்க்ருத்வா ப்ரத்யுவாச முநிம்ப்ரபு:- ஆச்சர்யச்சைவ தந்யச்ச தக்ஷிணாபிஸ்ஸஹேதி:" (ங) "ஏவமுக்தோ முநிச்ரேஷ்ட்ட: ப்ராஹமத்யே மஹீக்ஷிதாம் - க்ருஷ்ணபர்யாப்த வாக்யோஸ்மி கமிஷ்யாமி யதாகதம்"

(௧) "அஹம் கதாசித் கங்காயா ஸ்தீரே த்ரிஷவணுதிபி:" என்று தொடங்கி, நான் ஒருகால்கங்கைக்கரையிலே த்ரிஷவண ஸ்நாநாதிகளைப்பண்ணி வர்த்தியாநிற்கச் செய்தே, ஒருநாள் ராத்ரிபோய், ஆதித்யனுதித்தவளவிலே, கூப்பிடுவழியகலமும் அதிலிரட்டி நீளமுமாய் நீருக்குள்ளே நனைந்து உடம்பெங்கும் பாசிபற்றி, கண்ணுக்கு ப்ரியமாயிருப்பதொரு கூர்மத்தைக்கண்டு (௨) "த்வமாச்சர்ய சரீரோஸி கூர்மதந்யோஸி மேமத: । யஸ்த்வமேவ மஹோத்வாப்யாம் கபாலாப்யாம் ஸமாவ்ருத: ॥ தோயவாஸீ நிஸ்ஸங்க: கிமிதி நோத்விஜஸே" என்று - அந்தக் கூர்மத்தைப்பார்த்து, "யாதொரு இப்படி கபாலத்வய ஸமாவ்ருதனுய்க்கொண்டு இந்தஜலத்துக்குள்ளே ஒன்றையும் சிந்தியாமல் நிச்சங்கனுய்க்கொண்டு ஸஞ்சரியாநின்றாய்; இப்படியிருக்கிற நீ ஆச்சர்யமான சரீரத்தை யுடையனுகாநின்றாய், தந்யனுகாநின்றாய் என்று எனக்கு மதம்" என்று நான்சொல்ல; அந்தக்கூர்மந்தான், என்னைப்பார்த்து, ஒருமநுஷ்யன் சொல்லுமாபோலே, "வாராய் மஹர்ஷியே! என்பக்கல் ஆச்சர்யமேது? நான் எங்ஙனே தந்யனுகாநின்றேன், யாதொன்றிலே என்னைப்போலே பதினுயிரம் ஸத்வங்களெல்லாம் ஸஞ்சரியாநின்றன, அப்படியிருக்கிற கங்கையாகிற நதியன்றோ ஆச்சர்யையும் தந்யையும்" என்றுசொல்ல; அந்த கங்கையைக்குறித்து, நான் "ஆச்சர்யையாகாநின்றாய், தந்யையாகாநின்றாய்" என்று சொல்ல; அந்தகங்கையானது ஒருவடிவுகொண்டுநின்று, "நான் ஆச்சர்யையுமல்ல, தந்யையுமல்ல; யாதொன்றிலே என்னைப்போலே அநேகமாயிருந்துள்ள நதிகளெல்லாம் சென்று புகுராநின்றன, அப்படியிருந்துள்ள ஸமுத்ரமன்றோ ஆச்சர்யமும் தந்யமும்" என்றுசொல்ல; அநந்தரம், நான் அந்த ஸமுத்ரத்தைப்பார்த்து, "லோகத்தில் வைத்துக்கொண்டு நீ ஆச்சர்யமாகாநின்றாய், தந்யமாகாநின்றாய்" என்று சொன்னவாறே; அந்த ஸமுத்ரம் என்னைப்பார்த்து, "நீசொன்ன ஆச்சர்யமும் தந்யதையும் எனக்கில்லை; நான்றான் யாதொன்றின்மேலே வஸியாநின்றேன், அப்படியிருக்கிற பூமிக்கன்றோ அவையிரண்டுமுள்ளது" என்ன; அநந்தரம், நான் பூமியைப்பார்த்து ஸ்துதித்துக்கொண்டு, "ஆச்சர்யையாகாநின்றாய், தந்யையாகாநின்றாய்" என்ன; நான்சொன்ன ஸ்தோத்ர வசநத்தாலே லஜ்ஜித்து, பூமியானது என்னைப்பார்த்து, "நான் ஆச்சர்யையுமன்று, தந்யையுமன்று; எனக்கு ஆதாரங்களாயிருந்துள்ள பர்வதங்களுக்கன்றோ அவையிரண்டுமுள்ளது" என்ன; அநந்தரம், நான் அந்த பர்வதங்களைக்கிட்டி, "லோகங்களில் வைத்துக்கொண்டு நீங்கள் ஆச்சர்யங்களும் தந்யங்களுமாகாநின்றீர்கோள்" என்ன; அந்தபர்வதங்கள், என்னைப்பார்த்து, "நாங்கள் தந்யங்களுமன்று, ஆச்சர்யங்களுமன்று; ப்ரஜாபதியான ப்ரஹ்மாவானவன் இவையிரண்டுமுடையனுகாநின்றான்" என்ன; அநந்தரம் ப்ரஹ்மாவைச்சென்றுகிட்டி அநுவர்த்திக்கும்க்ரமத்திலே அநுவர்த்தித்து ஸர்வஸ்ரஷ்டாவான அவனுடைய வைபவத்தையெல்லாம் சொல்லிக்கொண்டு, "ஆச்சர்யனும் தந்யனுமாகாநின்றாய், உன்னையொப்பார் லோகத்தில் ஒருவருமில்லை" என்ன; அந்த லோகபிதாமஹனுன ப்ரஹ்மாவானவன், என்னைப்பார்த்து, "ஆச்சர்யனென்றும் தந்யனென்றும் என்னை ஸ்துதிக்கிறதென்; ரிக்யஜுஸ்ஸாமாதர்வண ரூபங்களாய், தத்வார்த்த தர்சகங்களாய், லோகங்களையும் என்னையும் தரியாநின்றன-யாவை சிலவேதங்கள், அவற்றுக்கன்றோ இவையிரண்டுமுள்ளது" என்ன; அநந்தரம், நான் வேதங்களைக்கிட்டி,

(௧) "அஹம்கதாசித் கங்காயா ஸ்தீரேத்ரிஷவணுதிபி:" (௨) "த்வமாச்சர்ய சரீரோஸி கூர்மதந்யோஸி மேமத:-யஸ்த்வமேவ மஹோத்வாப்யாம் கபாலாப்யாம் ஸமாவ்ருத:"

அவற்றினுடைய வைபவத்தைச்சொல்லி ஸ்துதித்துக்கொண்டு, "நீங்களன்றோ தந்யரும் ஆச்சர்யபூதரும்" என்ன; அந்ததேவதங்கள், என்னைப்பார்த்து, "நாங்கள் யஜ்ஞார்த்தமாக ஸ்ருஷ்டங்களென்பதொன்று, ஆகையாலே அஸ்மத்பராயணங்களாயிருக்கிற யஜ்ஞங்களுக்கன்றோ அவையிரண்டுமுள்ளது" என்ன; அநந்தரம், நான் அந்த யஜ்ஞங்களைப்பார்த்து ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு, "லோகத்தில் உங்களிற்காட்டில் தந்யங்களுமில்லை; ஆச்சர்யங்களுமில்லை" என்ன; அந்த யஜ்ஞங்கள், என்னைப் பார்த்து, (க) "[illegible]" என்று - "ஆச்சர்யசப்தமும் தந்யசப்தமும் எங்கள்பக்கலில்லை, விஷ்ணுவாயிருக்கும் பரமமான ஆச்சர்யம்; அவனேயாயிருக்கும் எங்களுக்கு பரையான கதி; அக்நிகளில் ஹுதமாயிருந்துள்ள யாதொரு ஆஜ்யத்தை நாங்கள் புஜியாநின்றோம், அதினுடைய ‡பாத்தை யெல்லாவற்றையும், புண்டரீகாக்ஷனாய் லோகமூர்த்தியான வவனன்றோ கொடுக்கிறான்" என்ன; இத்தைக்கேட்டு, நான் பூமியிலேவந்து, உங்கள்திரளுக்கு நடுவேயிருக்கிற க்ர்ஷ்ணனைக்கண்டு ஸேவித்து, "நீர் ஆச்சர்யருமாகாநின்றீர், தந்யருமாகாநின்றீர்" என்றுகொண்டு என்னாலே விண்ணப்பம் செய்யப்பட்ட வார்த்தை யாதொன்று, அதுக்கு ப்ரத்யுத்தரமாக; (உ) "[illegible]" என்றுகொண்டு, க்ர்ஷ்ண னருளிச்செய்தவார்த்தை எனக்கு பர்யாப்தமான வசநம்.

எங்ஙனே யென்னில்; (ங) "[illegible]" என்று - எல்லா யஜ்ஞங்களுக்கும் தக்ஷிணைகளோடேகூடி யிருந்துள்ள ஸர்வேச்வரன் கதியாகையாலே, (ச) "[illegible]" என்கிற இதினாலே என்னுடைய ப்ரச்நமானது பரிஸமாப்தமாய்த்ததென்று சொல்லி; (ரு) "[illegible]" என்று கூர்மத்தாலே முன்பு சொல்லப்பட்டதாய், பாரம்பர்யத்தாலே இவ்வளவும் வந்திருப்பதாய், "ஆச்சர்யனாகாநின்றாய், தந்யனாகாநின்றாய்" என்கிற வாக்யம், ஸதக்ஷிணனான க்ர்ஷ்ணனாகிற இந்தப்புருஷன் பக்கலிலே என்னாலே ப்ரதிபாதிக்கப்பட்டது. (சா) "[illegible]" என்று இந்த வாக்யத்தினுடைய யாதொருநிர்ணயத்தை நீங்கள் ப்ரச்நம்பண்ணினீகோள், அதெல்லாம் என்னாலே சொல்லப்பட்டது; இனி நான் வந்தவழியேபோகிறேன் என்று ஸ்ரீநாரத

(க) "ஆச்சர்யசப்தோ நாஸ்மாஸு தந்யசப்தோபிவாமுநே-ஆச்சர்யம்பரமம்விஷ்ணு ஸ்ஸஹ்யஸ்மாகம் பராகதி: ॥ யதாஜ்யம் வயமச்நீமோ ஹுதமக்நிஷு பாவநம் - தத்ஸர்வம் புண்டரீகாக்ஷோ லோகமூர்த்தி:ப்ரயச்சதி" ‡ ஸாா. (உ) "தக்ஷிணாபிஸ்ஸஹிதஃ" (ங) "யஜ்ஞாநாம்ஹி கதிர்விஷ்ணு ஸ்ஸர்வேஷாஞ்ச ஸதக்ஷிண: - தக்ஷிணாபிஸ்ஸஹேத்யேவம் ப்ரச்நோமம ஸமாப்தவாந்" (ச) "தக்ஷிணாபிஸ்ஸஹேத்யேவம்" (ரு) "கூர்மேணாபிஹிதம்பூர்வம் பாரம்பர்யாதிஹாகதம் - ஸதக்ஷிணேஸ்மிந் புருஷே தத்வாக்யம்ப்ரதிபாதிதம்" (சா) "யந்மாம்பவந்த: ப்ர்ச்சந்தி வாக்யஸ்யாஸ்யச நிர்ணயம் - தயேதத் ஸர்வமாக்யாதம் ஸாதயாமி யதாகதம்"

பகவான் சொன்னதாக, ஸ்ரீஹரிவம்சத்திலே நூற்றைம்பத்தொன்பதா மத்யாயத்திலே சொல்லப்பட்டகதையை இப்பாட்டிலே இவர் ஸங்க்ரஹேண வருளிச்செய்கிறார்.

ஆமையாயித்யாதி. ஸ்ரீநாரதபகவானுக்குத் தன்னுடைய ஸர்வாதிகத்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, ப்ரதமம் கங்காஜலத்துக்குள்ளே ப்ரஹத்ரூபமாய் ப்ரியகரமாய் ஆச்சர்யமாயிருப்பதோ ராமையாய்; அநந்தரம், அந்த ஆமைக்கும் அநேகமாயிரம் ஸத்வங்களுக்கும் வாஸஸ்த்தலமாம்படியான பெருமையையுடைய கங்கையாய்; அந்தகங்கைக்கும் மற்றும்அநேகமாயிருந்துள்ள நதிகளுக்கும் புகலிடமாய்க்கொண்டு, அகாதமாயிருக்கும் பெருமையையுடைய ஸமுத்ரமாய்; அநந்தரம், அந்தஸமுத்ரந் தனக்கும் தன்னுள்ளே வாஸஸ்த்தாநமாம்படியான பெருமையையுடைய பூமியாய்; அநந்தரம், அந்தபூமிக்கும் ஆதாரங்களான பெருமையையுடைய பர்வதங்களாய்; அநந்தரம், சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவான பெருமையையுடைய சதுர்முகனாய்; அநந்தரம், அவன்றனக்கும் அந்தபதவித்திமுதலான வற்றுக்கடியான பெருமையையுடைய சதுர்வேதங்களாய்; அநந்தரம், அந்தவேதங்களும் தன்னைப்பற்றவே ஸ்ரேஷ்டங்களாய்த்தின என்னும்படியாய், ஸகலர்க்கும் பலஸாதநமான பெருமையையுடைய யாகங்களாய்; அநந்தரம், அவற்றுக்கும் வீர்யத்தைக் கொடுக்கும் பெருமையையுடைய தக்ஷிணையாய்; அநந்தரம், அந்த தக்ஷிணைகளுடைய த்வாரா, ஸர்வர்க்கும் தத்த தபேக்ஷாநுகுணமாக ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கும் பெருமையையுடையனாய் அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனை தானுமானவன். இதில் ப்ரதமோக்தமான கூர்மம், இவன்றன்னுடைய ஆவிர்ப்பாவ விசேஷமாகையாலே, இவன்றானாகச் சொல்லிற்று. நடுவேசொன்னவையெல்லாவற்றுக்கும் ஒன்றுக்கொன்று அதிகமாகச் சொன்ன மாஹாத்ம்யம் இவனுடைய புத்ய தீநமாகையால், தந்நிர்வாஹ்ய நிர்வாஹக ஸம்பந்த நிபந்தநமான ஸாமாநாதிகரண்யத்தாலே அவற்றையெல்லாம் இவனாகச் சொல்லிக்கொடு போந்தது.

சேமமுடை நாரதனார் சென்றுசென்று துதித்திறைஞ்ச இது கீழோடும் மேலோடும் அந்வயித்துக்கிடக்கிறது. சேமம் - ரக்ஷை. சேமமுடையனாகையாவது - கர்மபாவனையன்றிக்கே, ப்ரஹ்மபாவநா நிஷ்டனாயிருக்கை. "நாரதனார்" என்றது (க) "ஸவஸம்ஸய நிர்முக்தோ நாரதஸ்ஸர்வதர்மவித்"என்கிற ஜ்ஞாநாதிக்யத்தாலும், பகவத்ஸந்நிதியிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாகாநிற்கும் ப்ரேமாதிசயத்தாலுமுண்டான கௌரவாதிசயத்தாலே. "சென்றுசென்று துதித்திறைஞ்ச" என்றது- கீழோடே அந்விதமானபோது, கூர்மாதிகளான வ்யக்திகள்தோறும் சென்று அவற்றினுடைய ஆச்சர்ய தர்யதைகளைச் சொல்லி ஸ்துதித்தநுபவித்துக்கொண்டு போந்தபடி சொல்லுகிறது; மேலோடே அந்வயித்தபோது, "சென்றுசென்று" என்கிற வீப்ஸை பலகாலும்வந்து ஸேவிக்கும்படியைச் சொல்லுகிறது. "இன்பத்தும்புருவும் நாரதனும் இறைஞ்சியேத்த" என்றும், "தும்புருநாரதர்புகுந்தனர்" என்றும் இந்தஸ்தலத்திலே பலகாலும் வந்து ஸேவிக்கும்படியைச் சொல்லிற்றிறே. துதிக்கையாவது-வீணாபாணியாய்க்கொண்டு ஸந்நிதியிலேவந்து (உ) காநமுகேந ஸ்தோத்ரம் பண்ணுகை. இறைஞ்சுகையாவது- தன்னுடைய சேஷத்வத்துக்கும் எதிர்த்தலையில் சேஷித்வத்துக்கும் அநுகுணமாகத் திருவடிகளிலே ப்ரணாமாதிகளைப் பண்ணுகை. கிடந்தான் கோயில்.

---

(க) "ஸர்வஸம்சயநிர்முக்தோ நாரதஸ்ஸர்வதர்மவித்" (உ) [illegible]

இப்படி ஸ்ரீநாரதபகவான் ஸேவிக்கும்படியாகவும், ருசியுடையாரெல்லார்க்கும் கண்ணாலே கண்டு ஆச்ரயிக்கைக்கும் அநுபவிக்கைக்கு முடலாகவும், "கிடந்ததோர்கிடக்கை" என்கிறபடியே கிடையழகால்வந்த மினுக்கம் தோற்றும்படியாகக் கண்வளர்ந்தருளினவனுடைய தேசம்.

பூமருவிப்புள்ளினங்கள். "நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ" என்கிற பூக்களின் குளிர்த்தியாலும் மார்த்தவத்தாலும் பரிமளத்தாலும் மதுவாலுமுண்டான போக்யதையாலே விடமாட்டாதே பொருந்தி, அன்னங்கள் வண்டுகள் முதலான பக்ஷிஸமூஹங்களானவை தங்களுடைய ஜாதிக்கு ராஜாவான பெரியதிருவடியுடைய புகழை, அநக்ஷரரஸமாகப் பேசாநிற்கும்படியாய், அவற்றுக்கு போக்யமான புஷ்பங்கள் மிகவுமுண்டாகைக்கடியான ஜலஸம்ருத்தியை யுடைத்தாயிருக்கிற திருவரங்கமே. கீழ்ச்சொன்னபடியே ஸ்ரீநாரதபகவானுக்குத்தன்னுடைய ஸர்வாதிகத்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, கூர்மாதிகளான வ்யக்திகள்தோறும் அவன்வந்து ஸ்துதித்திறைஞ்ச பாரம்பர்யேணவந்து தானுமானவனைப், பின்பு அவனுக்கும் பலகாலும் ஸேவ்யனைக்கொண்டு கண்வளர்ந்தருளினவனுடைய கோயில்- திருவரங்கம் என்றந்வயம். ... ... ... ... ... ... ரு.

அ. ஆறும்பாட்டு. த்ரௌபதியைக் குழல்முடிப்பித்து, பாண்டவர்களையே ராஜாக்களாக்கி, உத்தராதநயனையும் உஜ்ஜீவிப்பித்தவன் நித்யவாஸம் பண்ணுகிற தேச மிதுவென்கிறார்.

மூ.—மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித் தவர்களையே மன்னராக்கி
உத்தரைதன் சிறுவனையு முய்யக்கொண்டவுயிராள னுறையுங்கோயில்
பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்தநாடும்
சித்தர்களும் தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய் நிற்கின்ற திருவரங்கமே. சு.

பதவுரை.

பத்தர்களும்— பக்தர்களும்
பகவர்களும்— ஸந்ந்யாஸிகளும்
பழ மொழி— பழமொழியாயிருந்துள்ள வேதத்தை
வாய்— வாக்கிலேயுடையரான
முனிவர்களும்— ரிஷிகளும்
பரந்த— விஸ்தீர்ணமான
நாடும்— நாட்டிலுள்ளாரும்
சித்தர்களும்— நித்யமுக்தரும்
தொழுது— அஞ்ஜலிபண்ணி [படி
இறைஞ்ச—ஸாஷ்டாங்கப்ரணமம்பண்ணும்
திசை— எல்லாதிக்குக்களுக்கும்
விளக்கு ஆய் நிற்கின்ற — விளக்காய் நிற்கிற
திரு அரங்கம்— அரங்கமாநகரானது;
மைத்துனன்மார்— மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு
காதலியை— அபிமதையான த்ரௌபதியை
மயிர் முடிப்பித்து— குழல் முடிப்பித்து
அவர்களையே— அவர்களையே
மன்னர் ஆக்கி— அரசாளவைத்து
உத்தரைதன்— அபிமந்யுவின்மனைவியான உத்தரையென்பவளுடைய
சிறுவனை— பிள்ளையாய், கரிக்கட்டையாய்க் கிடந்த பரிக்ஷித்தை
உய்யக்கொண்ட— திருவடிகளாலே ஸ்பர்சித்து, உயிர்பெற்றெழுந்திருக்கும்படி பண்ணினவனாய்
உயிர் ஆளன்— எல்லா வுயிர்களுக்கும் நாதனானவன்
உறையும்— நித்யவாஸம்பண்ணுகிற
கோயில்— ஸ்தாநம்.

வ்யா. மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித்து. மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு அபிமதையான த்ரௌபதியைக் குழல் முடிப்பித்து. (க) "ஸாஹம் கேசக்ரஹம் ப்ராப்தா பரிக்லிஷ்டாஸபாகதா" என்கிறபடியே துச்சாஸநன்வந்து மயிரைப்பிடித்திழுக்க, அன்றுமுதலாக "என்னை யிதுசெய்தவனையும் இதுக்கு ப்ரவர்த்தகரானவர்களையும் கொன்று களப்படுத்தினாலொழிய குழல் முடியேன்" என்றிறே யிவளிருந்தது. பதினாலு ஸம்வத்ஸரம் காட்டிலே திரிந்தகாலத்தோடு மீண்டு நாட்டிலே வந்தகாலத்தோடு வாசியற, இவள், விரித்ததலையுந் தானுமாய்த் திரிகிறபடியைக்கண்டு, "இவள் ஸங்கல்பத்தின்படியே கார்யம் செய்துகொடுத்து இவள் குழல்முடித்தவன்றிறே நாம் சரணாகதரக்ஷகனென்னும் பேர்படைப்பது" என்றிறே க்ர்ஷ்ணன் திருவுள்ளமிருந்தது. தூதுபோனதும், ஸாரத்யம் பண்ணிற்றும், பரமரஹஸ்யமான ப்ரபத்தியை உபதேசித்ததுமெல்லாம் இதுக்காகவிறே. எங்ஙனேயென்னில்;- தூதுபோனது, * பொய்ச்சுற்றம் பேசிச்சென்று பேதஞ்செய்தெங்கும் பிணம்படுத்துகைக்காக. ஸாரத்யம்பண்ணிற்று, "ஆயுதமெடுக்கவொண்ணாது" என்கையாலே, * கொல்லாமாக்கோல் கொலைசெய்து எல்லாச்சேனையுமிரு நிலத்து அவிக்கைக்காக. ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்று, (உ) "அஸ்தாநஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியாகுல" னாய், (ங) "நகாங்க்ஷே விஜயம்க்ர்ஷ்ண" என்று காண்டீவத்தையும் பொகட்டு யுத்தாந் நிவர்த்தனானவனை, (ச) "கரிஷ்யே வசநந்தவ" என்று யுத்தே ப்ரவர்த்தனாம்படி பண்ணுகைக்காக. ஆகையால் இவையெல்லாம் இவள் குழலை முடிப்பிக்கைக்காகச் செய்தவையென்னக் குறையில்லை. (ரு) "இதந்து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி" என்றவோபாதி. (சு) "இதந்தே நாதபஸ்காய" என்கிறவிதுவும் முன்னே சொல்லிக்கொள்ளவிறே யடுப்பது; அங்ஙன்செய்யாதே, முந்துற, அர்த்தத்தை யருளிச்செய்து வைத்து, பின்னை இத்தை யருளிச்செய்வானென்?' என்று ஜீயர் பட்டரைக்கேட்க; "த்ரௌபதி குழல் விரித்துக்கிடக்கையாலே செய்வதறியாமல், மூலையில்கிடந்தாரை முற்றத்திலே யிடுவாரைப்போலே, பரமரஹஸ்யமானத்தை வெளியிட்டுக்கொண்டு நின்றான்; பின்னை அர்த்தத்தின் சீர்மையை $ அநுஸந்தியா, 'கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே பொகட்டோம்!' என்று பதண் பதணென்றான் காணும்" என்றிறே யருளிச்செய்தது.

அவர்களையே மன்னராக்கி. கீழே, "மைத்துனன்மார்" என்கையாலே, "அவர்களையே" என்று பராமர்சிக்கிறார். "நாடுடைமன்னர்" என்கிறபடியே - ராஜ்யப்ராப்தரிவர்களாயிருக்க, * பொய்ச்சூதிலே தோற்பித்து, இவர்கள்ராஜ்யத்தைத் தாங்களே வாங்கிக்கொண்டு, இவர்களைக்காட்டிலே தள்ளிவிட்டு, மீண்டு நாட்டிலே வந்தவிடத்திலும், "இவர்களுக்கு ஒரு கோல்குத்து நிலமும் கொடோம்" என்று தாங்களே எல்லாம் ஆளுவதாக இருந்த துர்யோதநாதிகளைக் கிழங்கெடுத்துப்பொகட்டு, ராஜ்யத்துக்குப்ராப்தரான விவர்களையே ராஜாக்களாக்கி. உத்தரைதன் சிறுவனையு முய்யக்கொண்ட. கீழ் - "மருமகன்றன் சந்ததி" என்றார்; இங்கு - "உத்தரைதன் சிறுவன்" என்கிறார். அங்கு - பித்ர்ஸம்பந்தத்தை யிட்டுச்சொன்னார்; இங்கு - மாத்ர்ஸம்பந்தத்தை யிட்டுச்சொல்லுகிறார். பிதா

(க) "ஸாஹம்கேசக்ரஹம்ப்ராப்தா பரிக்லிஷ்டாஸபாகதா" (உ) "அஸ்த்தாநஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியாகுல" (ங) "நகாங்க்ஷேவிஜயம்க்ர்ஷ்ண" (ச) "கரிஷ்யே வசநந்தவ" (ரு) "இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாமி" (சு) "இதந்தேநாதபஸ்காய".
$ அநுஸந்தியா—அநுஸந்தித்து என்றபடி.

வான அபிமந்யு யுத்தத்திலே பட்டுப்போகையாலே, "இவனை யிழந்தோம்" என்னும் க்லேசம் அவனுக்கு இல்லையிறே; மாதாவிறே இருந்து க்லேசப்படுகிறவள்; இப்ப்ராஜை பிழைத்தால் உள்ளப்ரியமும் அவளுக்கேயிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறது. உய்யக்கொண்ட. கரிக்கட்டைப்பாய்ப் போனவனையும், ஸத்ய வசநத்தாலும் திருவடிகளினுடைய ஸ்பர்சத்தாலும், போனவுயிரை மீட்டு எழுந்திருக்கப்பண்ணின. உயிராளன். ஸர்வாத்ம ஸாதாரண நாதனானவன். உறையும்கோயில். அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுகிற கோயில்.

பத்தர்களும். "மாலையுற்றெழுந் தாடிப்பாடித்திரிந்தரங்க னெம்மானுக்கே, மாலையுற்றிடும் தொண்டர்" என்கிற பக்தர்களும். பகவர்களும். "சிற்றெயிற்று முற்றல்மூங்கில் மூன்று தண்டரொன்றின ரற்றபத்தர்" என்கிறஸந்யாஸிகளும். பழமொழிவாய் முனிவர்களும். அபௌருஷேயமாய் நித்யமாயிருக்கையாலே பழமொழியா யிருந்துள்ள வேதத்தை எப்போதுமொக்க வாக்கிலேயுடையரா யிருக்கும் ரிஷிகளும். பரந்தநாடும். "தென்னாடும் வடநாடும்" என்னும்படி விஸ்தீர்ணமான நாட்டிலுள்ளாரும். சித்தர்களும். நித்யவிபூதியிலே ஆநந்த நிர்ப்பரராயிருக்கும் நித்யமுக்தரும். தொழுதிறைஞ்ச. அஞ்ஜலிப்ரணாமாதிகளைப் பண்ணும்படியாக. திசைவிளக்காய் நிற்கின்ற. ஸர்வதிக்குக்களுக்கும் ப்ரகாசகமாய்க்கொண்டு நிற்கிற. ஏதேனுமோரிடத்திலே இருந்தாலும் அத்திக்கைநோக்கி வணங்கும்படியிறே இதினுடைய ப்ரகாசமிருப்பது. (௧) "தேசாந்தரகதோவாபி த்வீபாந்தரகதோபிவா । ஸ்ரீரங்காபிமுகோ பூத்வா ப்ரணிபத்ய நமஸ்ததி" என்னக்கடவதிறே. திருவரங்கமே. இப்படியிருந்துள்ள திருவரங்கமே-உயிராளனுறையுங் கோயில். ௬.

அ. ஏழாம்பாட்டு. ஸ்ரீவாமநனாய் மாவலியைக்குறும்பதக்கி ராஜ்யத்தை வாங்கி அவனைப் பாதாளத்திலே வைத்தவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—குறட்பிரமசாரியாய் மாவலியைக் குறும்பதக்கி யாசுவாங்கி
இறைப்பொழுதிற் பாதாளங் கலவிருக்கை கொடுத்துகந்த வெம்மான்கோயில்
எறிப்புடைய மணிவரைமே லிளநாயிறெழுந்தாற்போ லரவணையின்வாய்ச்
சிறப்புடைய பணங்கண்மிசைச் செழுமணிகள் விட்டெறிக்குந் திருவரங்கமே.

பதவுரை.

எறிப்பு உடைய— மிக்க ஒளியையுடைத்தாயிருப்பதொரு
மணி வரைமேல்—நீலரத்ந பர்வதத்தின்மேல்
இள நாயிறு— பாலஸூர்யர்கள்
எழுந்தால் போல் — உதித்தாற்போலே
அரவு அணையின் வாய் — திருவனந்தாழ்வானிடத்தில்
சிறப்பு உடைய— அழகிதான
பணங்கள்மிசை— படங்கள்மேலுண்டான
செழு— செழுமைதங்கிய
மணிகள்— ரத்நங்களானவை
விட்டு எறிக்கும்—மிகவும்விளங்காநின்றுள்ள
திரு அரங்கம்;—
மாவலியை— மஹாபலியிடத்திலே

(௧) "தேசாந்தரகதோவாபி த்வீபாந்தரகதோபிவா-ஸ்ரீரங்காபிமுகோபூத்வாப்ரணிபத்யநமஸ்ததி".

குறள் பிரமசாரி ஆய்— வாமநப்ரஹ்மசாரியாய்ச் சென்று

குறும்பு அதக்கி — அவனுடைய செருக்கை அடக்கி

அரசு — ராஜ்யத்தை

வாங்கி— நீரேற்று வாங்கி

இறை பொழுதில்— க்ஷணகாலத்திலே

பாதாளம்— பாதாள லோகத்தை

கலவிருக்கை கொடுத்து — அவனுக்கு இருப்பிடமாகக் கொடுத்து

உகந்த— இந்த்ரன் மநோரதத்தைத் தலைக்கட்டித் தரப்பெற்றோமென்று ஸந்தோஷித்த

எம்மான்—என்ஸ்வாமியானவன் வர்த்திக்கிற

கோயில்— கோவில்.

குறட்பிரமசாரியாய். வாமநப்ரஹ்மசாரியாய். குறள். கோடியைக் காணியாக்கினாற் போலே, பெரியவடிவைக் கண்ணாலே முகந்து அநுபவிக்கலாம்படி சுருக்கினபடி. சேர்ப்பால் சுருங்கினதனையும் ரஸிக்குமாபோலே, வடிவும் சுருங்கினதனையும் ரஸாவஹமாயிருக்குமாய்த்து. "புலங்கொள்மாணாய்" என்றாரிறே ஆழ்வார். இவ்வடிவழகாலேயிறே மஹாபலியை வசீகரித்தது. பிரமசாரியாய். அதுக்குமேலே ஒருவசீகாரஸாதநமிறேயிது. "பொங்கிலங்குபுரிநூலும் தோலுந்தாழ" என்கிறபடியே—யஜ்ஞோபவீதமும் க்ர்ஷ்ணாஜிநமும் முஞ்ஜியுமான விநீதவேஷம். இந்த்ரன், "என்னுடையராஜ்யத்தையிழந்தேன், அதைமீட்டுத்தரவேணும்" என்று கண்ணும் கண்ணீருமாய்வந்து சரணம்புகுந்து நின்றான்; "ப்ரபலனாயிருப்பானொருவனுடையராஜ்யத்தைப் பறித்துக்கொண்டான், ராவணாதிகளைப்போலே அழியச்செய்யப் போகாதாய்த்து ஔதார்யமென்றொரு குணலேசத்தை யேறிட்டுக்கொண்டிருக்கையாலே, இனிஇரண்டுக்கும் அவிருத்தமாகச்செய்வதென்" என்றுபார்த்து, "அவன் கொடுக்க உகந்திருக்குமாகில் நாம்சென்று இரக்கக்கடவோம்" என்றிறே இரப்பில் தகணேறின ப்ரஹ்மசாரியாய்த்து. மாவலியை. "கோவாகியமாவலியை" என்கிறபடியே—ஸர்வேச்வரன் இந்த்ரனுக்குக்கொடுத்த த்ரைலோக்யைச்வர்யத்தை பலத்தாலேபறித்துக்கொண்டு, ஒருத்தர்கீழடங்காமல் தன்னரசாயிருந்த மஹாபலியை. குறும்பதக்கி. கள்ளர், பள்ளிகள், ஸாதுக்களுடைய ஸ்வத்தை அடித்தறுத் தங்களதாக்கிக்கொண்டு ஒருத்தர் கீழடங்காதேயிருக்குமாபோலே, பரஸ்வாபஹாரத்தைப்பண்ணி அதில் ஒரு பயமற்று, தன்னுடைமையைத் தான்ஜீவிக்குமாபோலே ஜீவித்திருந்த, குறும்பையடக்கி-செருக்கைவாட்டி. அரசுவாங்கி. கீழ்ச்சொன்ன வடிவழகையும் விநீதவேஷத்தையும் முன்னிட்டுக்கொடுசென்று அவனை சித்தாபஹாரம்பண்ணி, "கொள்வன், நான், மாவலி, மூவடி, தா" என்று சில அநந்வித பாஷணங்களைப் பண்ணி, இந்த மௌக்த்யத்தாலும் அவன் நெஞ்சை இளகப்பண்ணி, சுக்ராதிகள், "இவன் தேவகார்யம் செய்யவந்தான், உன்ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்க வந்தான்" என்று சொல்லுகிற வார்த்தையும் அவன் செவியில் படாமல் உதகம்பண்ணித் தரும்படியாக்கி, "பொற்கையில் நீரேற்று" என்கிறபடியே கொடுத்துவளர்ந்த பொலிவையுடைத்தான கையிலே உதகத்தையேற்று, இந்த்ரன்தன் ராஜ்யத்தை அவன்பக்கல்நின்றும் வாங்கி. இறைப்பொழுதில். இதுதான் செய்கிறவளவில், காலதைர்க்யமன்றிக்கே, அல்பகாலத்திலேசெய்து. பாதாளம்கலவிருக்கைகோடுத்து. "மூன்றடி" என்று வாங்கி, இரண்டடியாலே ஸர்வலோகத்தையுமளந்து, "ஒன்றும் தருகவெனா மாவலியைச் சிறையில்வைத்த" என்கிறபடியே மற்ற ஓரடியும் தருமளவும், சிறைவைப்பாரைப்போலே, பாதாளத்தை அவனுக்கு இருப்பிடமாக்கி. பாதாளத்தே தள்ளி. "கலவிருக்கைகொடுத்து" என்றது- அவ்விருப்பு சிறையிருப்பாகவன்றிக்கே போகபூமியாகக் கொடுத்தபடியைப்பற்ற. கலவிருக்கையாவது - செ

ஞ்சு கலந்திருக்கும் இருப்பிறே. கலிருக்கையாகக் கொடுத்தென்றபடி. உகந்த. இவனுக்கு இவ்விருப்பைக்கொடுத்து, இந்த்ரனுக்கு அவனிழந்த ராஜ்யத்தைக்கொடுத்து, “ சரணாகத னவனிழவுநிரப்பிப்பெற்றோம்” என்றுப்ரீதனானன். எம்மான்கோயில். என்னுடைய ஸ்வாமியானவன் அநந்யப்ரயோஜநரானவர்களுக்குத் தன்னைக்கொடுக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிறகோயில்.

எழிப்புடையமணிவரைமேல். அதிப்ரகாசமாயிருப்பதொரு நீலரத்ந பர்வதத்தின்மேல். இளாயிறெழுந்தாற்போல். பாலாதித்யர்கள் உதித்தாற்போலே. அரவணையின்வாய் சிறப்புடைய பணங்கள்மிசைச் செழுமணிகள் விட்டெறிக்கும். திருவநந்தாழ்வானிடத்தில் அழகிய பணங்களின்மேலுண்டான பெரிய ரத்நங்களானவை மிகவும் ப்ரகாசியாநிற்கும். இத்தால்—திருவரவணையின்மேலே, * பச்சைமாமலைபோலே யிருக்கும் திருமேனியோடே பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமானை யநுபவிப்பார்க்கு அத்திருவனந்தாழ்வானுடைய ஒளிதானே ப்ரகாசமாயிருக்கும்படி சொல்லுகிறது. திருவரங்கமே. கீழ்ச்சொன்ன விதுவேயாய்த்து இத்தேசத்துக்குச் சிறப்பு. ... ... ... ... ... ... ... ... எ.

அ. எட்டாம்பாட்டு. அதிக்ரூரனான ஹிரண்யனை யடர்த்துப் பிடித்து நிரஸித்தவன் வர்த்திக்கிறதேச மிதுவென்கிறார்.

மூ.—உரம்பற்றியிரணியனை யுகிர்நுதியா லொள்ளிய மார்புறைக்கவூன்றிச்
சிரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க வாயலரத் தெழித்தான் கோயில்
உரம்பெற்ற மலர்க்கமல முலகளந்தசேவடிபோ லுயர்ந்துகாட்ட
வரம்புற்ற கதிர்ச்செந்நெல்தாள்சாய்த்துத் தலைவணக்குந் தண்ணரங்கமே. அ.

பதவுரை.

உரம் பெற்ற— செழிப்பை யுடைத்தான
கமலம் மலர்— தாமரைப் பூவானது
உலகு அளந்த — திருவுலகளந்தருளின போது உயரவெடுத்த
சே அடிபோல்— திருவடிகளைப்போலே
உயர்ந்து காட்ட—இளர வளர்ந்துப்ரகாசிக்க
வரம்பு உற்ற— வரம்பு சேர்ந்து விளைந்து நிற்பதாய்
கதிர்— கதிரையுடைத்தான
செந்நெல்— செந்நெற்களானவை
தாள் சாய்த்து— தாள்களை நீட்டி
தலை வணக்கும் — தலைவளையாநின்றுள்ள
தண்— குளிர்ந்த
அரங்கம்— திருவரங்கமானது;
உரம் பற்றி— தேவர்களால் பெற்ற வரபலத்தை யுடைய
இரணியனை— ஹிரண்யனை
உகிர் நுதியால்-திருவுகிர்களின் கூர்மையால்
ஒள்ளிய மார்பு — அவனுடைய அழகிய மார்விலே
உறைக்க— மறுபாடுருவும் படியாக
ஊன்றி— ஊன்றி
முடி— கிரீடமானது
இடிய— பொடிபடும்படியாகவும்
கண்— கண்களானவை
பிதுங்க— பிதுங்கும்படியாகவும்
வாய் அலர— வாய் அலரும்படியாகவும்
சிரம் பற்றி— தலையைப்பிடித்து நெரித்து
தெழித்தான்— ஆரவாரம் செய்தவன் வர்த்திக்கிற
கோயில்— கோயில்.

வ்யா. உரம்பற்றி யிரணியனை. தேவர்கள்கொடுத்த வரபலங்களையும் தன்னுடைய புஜபலத்தையும் நினைத்து, "ஒருவராலுமொழிவில்லை" என்று, வரங்கொடுத்த தேவர்களோடு அல்லாதாரோடு வாசியற எல்லாரையும் நெருக்கித்தன்கீழேயாக்கி, "தன்னுடைய நாமமேயொழிய பகவந்நாமம் அத்தேசத்தில் நடக்கவொண்ணாது" என்று விலக்கி, திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக, * பள்ளியிலோதிவந்த தன்சிறுவனை ப்ரஹ்லாதனை வாசாமகோசரமான பீடைகளைப்பண்ணின ஹிரண்யன், "பிள்ளாய், நீசொல்லுகிறவன் எங்கேயுளன்?" என்று கேட்டபோது, "எங்குமுளன்" என்று ப்ரஹ்லாதன்சொல்ல, "இங்குமுளனே" என்று *தானளந்திட்ட தூணிலேயடிக்க, "ஆங்கேவளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய்" என்கிறபடியே - தேவர்கள் கொடுத்த வரத்தில் அகப்படாததொரு வடிவைக்கொண்டு, அத்தூணைப் பிளந்துகொண்டு புறப்பட்டு, "அடித்தகை பிடித்தபெருமாள்" என்னும்படி அத்தூணில் அடித்தகை வாங்குவதற்கு முன்னே பலத்தாலேவந்து அமுக்கிப்பிடித்து. உகிர்நுதியால். "அஸ்த்ர சஸ்த்ரங்களொன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொள்ளுகையாலே, அவற்றால் நிரஸிக்கப்போகாமையால் திருவாழிதொடக்கமானவையும் அழகுக்குடலாயிருந்துவிட, திருவுகிரை ஆயுதமாகக்கொண்டு அதினுடைய கூர்மையாலே. ஒள்ளியமார்புறைக்கவூன்றி. ஆபரணங்காராதிகளாலே அலங்கரித்து, அவன் பலகாலும்பார்த்து அநுபவித்துக் கொண்டிருந்த அழகியமார்விலே மறுபாடுருவும்படியாக வூன்றி. சிரமித்யாதி. அபிஷேகமானது பொடிபடும்படியாகவும், கண்கள் பிதுங்கும்படியாகவும், வேதனைகள் பொறுமல் வாய் அலரும்படியாகவும், தலையைப்பிடித்து நெரித்து, "ப்ரஹ்லாதனுடைய விரோதி போகப்பெற்றோம்" என்னும் ப்ரீதியாலே ‡ ஆர்ப்பரவம் செய்தவன் இங்ஙனொத்த விரோதிகளைப்போக்கி ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

உரம்பெற்றவித்யாதி. சேற்றுவாய்ப்பாலே உரம்பெற்றிருக்கிற தாமரைப்பூவானது திருவுலகளந்தருளினபோது மேலெடுத்த திருவடிகளைப்போலே கிளரவளர்ந்து ப்ரகாசியாநிற்க. வரம்புற்ற வித்யாதி. அப்போது, (க) "ஸமேஜஸஸ்ஸராணாழ" என்கிறபடியே தேவர்கள்முதலானவர்கள் திரண்டு காலைநீட்டித் தலையைவணங்கித் தண்டனிட்டுக் கிடந்தாற்போலே, வரம்புசேர்ந்து விளைந்துநிற்கிற செந்நெற்களானவை தாள்களைநீட்டித் தலையை வணங்கும் சிறப்பையும், ஸர்வர்க்கும் தாபஹரமான குளிர்த்தியையுமுடைத்தான திருவரங்கமே. ... ... ... ... ... ... ... ... ... அ

அ. ஒன்பதாம்பாட்டு. தசாவதாரமாய்க்கொண்டு ஜகத்ரக்ஷணம் பண்ணுமவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசமிதுவென்கிறார்.

மூ.—தேவுடையமீனமா யாமையா யேனமா யரியாய்க் குறளாய்
மூவுருவி லிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான் கோயில்
சேவலோடு பேடையன்னஞ் செங்கமலமலரேறி யூசலாடிப்
பூவணைமேல் துதைந்தெழு செம்பொடியாடி விளையாடும் புனலரங்கமே. ௯.

‡ ஆர்ப்பரவம்— ஆரவாரம். (க) "ஸங்கைஸ்ஸுராணாம்."

பதவுரை.

சேவலொடு— புருஷஹம்ஸத்தோடே
பெடை அன்னம்— அன்னப் பேடானது
செம் கமலம் மலர்— செந்தாமரைப் பூவி ன்மேலே
ஏறி— ஏறியிருந்து
ஊசல் ஆடி— அத்தை அசைத்து ஊசலாடி
பூ அணைமேல்— புஷ்பசயநத்தின் மேலே
துதைந்து— ஒன்றுக்கொன்று பிணங்கி
எழு— கிளர்ந்த (அதனாலே,)
செம்பொடி— சுண்ணமாகிற சிவந்த பொ
ஆடி— மூழ்கி [டியிலே
விளையாடும்— விளையாடா நின்றுள்ள
புனல்— நீர்வளப்பத்தையுடைய
அரங்கம்— திருவரங்கமானது;

தேவு உடைய— தேஜஸ்ஸையுடைய
மீனம் ஆய்— மத்ஸ்யமாயும்
ஆமை ஆய்— கூர்மமாயும்
ஏனம் ஆய்— வராஹமாயும்
அரி ஆய்— நரஸிம்ஹமாயும்
குறள் ஆய்— வாமநனாயும்
மூ உருவில் இராமன் ஆய் } பரசுராமனாயும் ஸ்ரீராமனாயும் பலராமனாயும்
கண்ணன் ஆய்— ஸ்ரீக்ருஷ்ணனாயும்
கற்கி ஆய்— கல்கியாயும் (அவதரித்து)
முடிப்பான்— அஸுரராக்ஷஸாதிகளை முடித்த
கோ— எம்பெருமானுக்கு
இல்— வாஸஸ்தாநமாம்.

வ்யா. தேவுடைய. தேஜஸ்ஸையுடைய. இது, ஸகலாவதாரவிசேஷணம். சேதந ருடைய ஜந்மம், கர்மநிபந்தநமாய் ஸ்வார்த்தமாயிருக்கையாலே பிறக்கப்பிறக்க ஒளிமழுங்கி வாராநிற்கும்; ஈச்வரனுடைய ஜந்மம், இச்சமாய் பரார்த்தமாயிருக்கையாலே பிறக்கப் பிறக்க ஒளிபெற்று வாராநிற்கும். "பல்பிறப்பாய் ஒளிவரும்" என்றருளிச் செய்தாரிறே. (க) "ஸஉ ஷ்ரேயாந் பவதி ஜாயமாந:" என்னக்கடவதிறே. உகாரம் அவதாரண வாசகமாய், 'ஸஏவச்ரேயாந்' என்றபடி. அதாவது-அவனே ஜாயமாநனாய்க்கொண்டு ச்ரேயானாநின்றவனென்கை. அவதாரணத்தாலே சேதநனை வ்யாவர்த்திக்கிறது. மீனமாய் *வானோரளவும் முதுமுந்நீர் வளர்ந்தகாலம் வந்துய்யக்கொண்ட மத்ஸ்யாவதாரமாய். ஆமையாய். தேவகார்யார்த்தமாக அம்ருதமதநம் பண்ணுகிறபோது மந்தாநமான மந்தரத்துக்கு ஆதாரமான கூர்மாவதாரமாய். ஏனமாய். ப்ரளயங்கதையாய் அண்டபித்தியிலே சேர்ந்த பூமியை உத்தரிக்கைக்கீடான வராஹாவதாரமாய். அரியாய். "தேவாதி யோநிகளொன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொண்ட ஹிரண்யனை நிரஸிக்கைக்கீடான நரஸிம்ஹாவதாரமாய். குறளாய். மஹாபலியாலே அபஹ்ருதமான ராஜ்யத்தை இந்த்ரனுக்கு வாங்கிக்கொடுக்கைக்கீடாக வாமநாவதாரமாய். மூவுருவிலிராமனாய். அதாவது—துஷ்டக்ஷத்ரிய நிரஸநார்த்தமாக பரசுராமாவதாரமாய், ராவணவதார்த்தமாக தசரதாத்மஜ ராமாவதாரமாய், ஆஸுரப்ரக்ருதிகளான க்ஷத்ரியாதிகளை நிரஸிக்கைக்காக பலபத்ர ராமாவதாரமாய். இதில் நடுச்சொன்ன ராமாவதாரம் முக்யம்-ஸ்வரூபேணவதரித்ததாகையாலே. பூர்வோத்தரங்களிரண்டும் கௌணம்- ஆவேசாவதாரங்களாகையாலே. ஆனால் இவைதன்னை முக்யாவதாரங்களோடேகூட பரிகணிப்பானென்னென்னில்; ஸ்வரூபாவேசமாகையால் வந்த உத்கர்ஷத்தாலே; இவற்றில் பரசுராமாவதாரம், அஹங்காரயுக்தஜீவனை அதிஷ்டித்து நிற்கிறதாகையாலே, முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யம்; பலபத்ர ராமாவதாரம், அஹங்கார கந்தரஹிதமாய் ஈச்வரனுக்கு அத்யந்தாபிமத விஷயமாயிருக்கையாலே, முக்யாவதாரங்களோ

"ஸஉச்ரேயாந் பவதிஜாயமாந:"

பாதி உபாதேயம். அநுபாஸ்யமான அவதாரந்தன்னை இவரருளிச்செய்வா னென்னென்னில்; தசாவதாரமு மருளிச்செய்கிறவராகையாலும், அவ்வவதாரத்தில் பண்ணின விரோதி நிரஸநம் தமக்கு அபிமதமாயிருக்கையாலு மருளிச்செய்தார். "மன்னடங்க மழுவலங்கைக் கொண்ட விராமநம்பி" என்றிறே மேலும் இவரருளிச்செய்தது. கண்ணனாய். பூபாரநிரஸநார்த்தமாக க்ர்ஷ்ணனாய். கற்கியாய். கலிகல்கதூஷிதரான துஷ்டரை நிரஸிக்கைக்காக கல்க்யவதாரமாய். முடிப்பான். இப்படி இவ்வவதாரங்களாய்க்கொண்டு துஷ்கர்த்துக்களை முடிக்குமவன். கோயில். அவதாரத்துக்குப் பிற்பாடரானவர்களையும் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

சேவலித்யாதி. அபிமதவிஷயமான சேவலோடே கூட அதுதனக்கு அபிமதமாயிருந்துள்ள பெடையன்னமானது, சிவந்த தாமரைப்பூவின்மேலே ஏறியிருந்து, ஸ்வவ்யாபாரங்களாலே முழுகி, அத்தை யசைத்து ஊசலாடி. பூவணையித்யாதி. பூப்படுக்கையின் மேலே பரஸ்பர ஸம்ச்லேஷ கார்யரூபமான உழறுதலைச்செய்து, அத்தாலே அதினின்றும் சொரிந்த சுண்ணமாகிற சிவந்த பொடியிலே முழுகி, இப்படியிருந்துள்ள லீலாவ்யாபாரங்களைப் பண்ணும்படியான ஜலஸம்ர்த்தியையுடைய திருவரங்கமே. ... ... ...௯.

அ. பத்தாம்பாட்டு. ஸர்வநிர்வாஹகனாய் ஸ்ரிய:பதியானவன் ஸரஸமாகக் கண்வளர்ந்தருளுகிற தேச மிதுவென்கிறார்.

மூ.—சேருவாளும்புள்ளாளன் மண்ணாளன் செருச்செய்புநாந்தகமென்னு
மொருவாளன் மறையாள னோடாதபடையாளன் விழுக்கையாளன்
இரவாளன் பகலாள னென்னையாள னேழுலகப் பெரும்புரவாளன்
திருவாளனினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கமே. ௧௦.

பதவுரை.

செரு ஆளும்— தானேபோர் செய்பவல்ல
புள்— பெரிய திருவடியை
ஆளன்— ஆளுமவனாய்
மண்— லீலாவிபூதியை
ஆளன்— ஆளுமவனாய்
செரு செய்யும்—ஆச்ரித விரோதிகள்மேலே பூசல்செய்யாநிற்பதாய்
நாந்தகம் என்னும்— 'நந்தகம்' என்று பேரையுடைத்தாய்
ஒரு— ஒப்பற்ற
வாளன்— கொற்றவொள்வாளையுடையனாய்
மறை ஆளன்— நான்கு வேதங்களையு மாளுமவனாய்
ஓடாத— யுத்தத்தில் முதுகுகாட்டிஓடாத
படை ஆளன்— இப்படிப்பட்ட பரிகரத்தையுடையனாய்
விழு— சீர்மையோடேகூடின
கையாளன்— கொடையை யுடையனாய்
இரவு ஆளன் பகல் ஆளன்— இரவு பகலாகிய காலங்களுக்குத் தலைவனாய்
என்னை ஆளன்— என்னை ஆளுமவனாய்
ஏழு உலகம்— ஸப்தலோகங்களாகிற
பெரு— பெரிய
புரவு— ஸம்க்ஷேத்ரங்களை
ஆளன்— ஆளுமவனாய்
திரு ஆளன்— பெரியபிராட்டியாரை திவ்ய மஹிஷியாக உடையனுமானவன்
இனிதாக— திருவுள்ளத்தில் உகப்போடே
திரு கண்கள் வளர்கின்ற— திருக்கண் வளர்ந்தருளுகிற
(கோயில்)
திரு அரங்கமே.

வ்யா. செருவாளும்புள்ளாளன். யுத்தத்தை ஸ்வயமேவ நிர்வஹிபாநிற்கும் பெரிய திருவடியை ஆளுகிறவன். ஆச்ரித விரோதிகளான அஸுரராக்ஷஸரோடே யுத்தம்பண்ணுமிடத்தில், அந்த யுத்தத்தைப் பெரியதிருவடிதானே நடத்த, இவன் காணவந்த சோழரோபாதி அத்தைக் கண்டுகொண்டு அவன் தோளிலே இருக்குமத்தனையாய்த்து. " பாறிப்பாறி அசுரர்தம்பல்குழாங்கள் நீறெழப்பாய் பறவையொன்றேறி வீற்றிருந்தாய் " என்றாரிறே ஆழ்வார். அதாவது- அஸுரவர்க்கத்தினுடைய பலவகைப்பட்ட குழாங்களானவை; பாறிப்பாறி நீறெழுந்துபோம்படியாக,ப்ரதிபக்ஷத்தின்மேலே பாயாநின்றுள்ள அத்விதீயமான பெரியதிருவடியை மேற்கொண்டு தன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்ற விருந்தவனென்றபடி. " புகழ்கின்ற புள்ளூர்தி " என்று விரோதி நிரஸநத்தால்வந்த புகழுடங்கலும் கிடப்பது அவன்பக்கலிலே. " அவனை வாஹநமாகவுடையனென்கிறதே அவனுக்கேற்றம் " என்றருளிச்செய்தாரிறே.

மண்ணாளன். நித்யஸூரிகளில் தலையான பெரியதிருவடியை வாஹநமாகவுடையனென்கையாலே நித்யவிபூதியையாளுமவனென்னுமிடம் சொல்லிற்றாய், இத்தால் லீலாவிபூதியை ஆளும்படி சொல்லுகிறது. ஆச்ரிதாநாச்ரித விபாகமற மண்ணிலுள்ளாரெல்லாரையும் ஆளுகிறவன். ஆச்ரிதரை, " நம்மோட்டை ஸம்பந்தமறிந்தவர்கள் " என்று ஆளும்; அநாச்ரிதரை, தானறிந்த ஸம்பந்தத்தாலே ஆளும். பூமியைச்சொன்னவிது அல்லாத லோகங்களுக்கு முபலக்ஷணம். செருச்செய்யும் நாந்தகமென்னு மொருவாளன். கீழ், " புள்ளாளன் " என்று- ஆச்ரிதரக்ஷணத்துக்குடலான வாஹநத்தைச் சொல்லிற்று; இங்கு, ஆயுதத்தைச் சொல்லுகிறது. ஆச்ரிதவிரோதிகள்மேலே பூசலைச்செய்யாநிற்பதாய், நந்தகமென்னும் திருநாமத்தையுடைத்தாய், அத்விதீயமாயிருந்துள்ள கொற்றவொள்வாளை யுடையவன். திவ்யாயுதங்கள்தான் ஸர்வஜ்ஞமாய், நினைவறிந்து கார்யம்செய்யுமவையாயிறே யிருப்பது.

மறையாளன். இப்படி ஆயுதத்தாலே அழியச்செய்யவொண்ணாத பாஹ்யகுத்ருஷ்டி மதங்களை யழியச்செய்கைக்கு பரிகரமான வேதத்தை ஆளுகிறவன். சஸ்த்ரத்தாலும்சாஸ்த்ரத்தாலுமிறே ப்ரதிபக்ஷநிரஸநம்பண்ணுவது. சஸ்த்ரத்தாலே நிரஸிக்குமளவில், சரீரவிநாசபர்யந்தமாம்; சாஸ்த்ரத்தாலே நிரஸிக்குமளவில், அவர்களுடைய விபரீத ஜ்ஞாநாதிகள்போய், இச்சரீரந்தன்னோடேயிருக்கச்செய்தே திருந்தி உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாம். இது இரண்டுக்கும் விசேஷம். ஓடாதபடையாளன். யுத்தத்தில் புகுந்தால் பிற்காலியாதபடியான பரிகரத்தை யுடையவன். அன்றிக்கே, (க) " [illegible] " என்கிறபடியே லோகத்தில் வழங்காத ஆயுதவிசேஷங்களை யுடையவனென்னவுமாம். விழுக்கையாளன். (உ) " [illegible] " இத்யாதிப்படியே ஆத்மாத்மீயங்களுடைய ஆச்ரிதார்த்தமாக்கிவைக்கும் சீர்மையை யுடையவன். விழுக்கை- சீர்மை. அன்றிக்கே, விழுப்பத்தை யுடைத்தான கையையுடையவன்-சீர்மையோடேகூடின கொடையை யுடையவனென்றபடி. (ங) " [illegible] " என்னக்கடவதிறே.

---

(க) " அஸங்க்யேயநித்யநிரவத்ய நிரதிசயகல்யாண திவ்யாயுத " (உ) " பரிஜந பரிபர்ஹாபூஷணாநி " (ங) " ஸஸர்வார்த்திநோத்ர்ஷ்ட்வா ஸமேத்யப்ரதிநந்த்யச "

இரவாளன் பகலாளன். திவாராத்ரரூபமான காலத்துக்கு நிர்வாஹகனானவன். இத்தால் சேதநர்க்கு ஜ்ஞாநஸங்கோச ஹேதுவாயும் ஜ்ஞாநவிகாஸ ஹேதுவாயுமிருந்துள்ள காலங்களை ஸ்வாதீநமாக உடையவனென்கை. என்னையாளன். "எயிற்றிடை மண்கொண்ட வெந்தை யிராப்பகலோதுவித்தென்னைப் பயிற்றிப் பணிசெய்யக்கொண்டான்" என்கிறபடியே தானே திருத்தி, திவாராத்ரவிபாகமற என்னையாளுகிறவன். ஏழுலகப்பெரும்புரவாளன். ஸமஸ்தலோகங்களுமாகிற பெரிய புரவை ஆளுகிறவன். புரவு - ஸுக்ஷேத்ரம். இத்தால் ஸமஸ்தலோகங்களையும் ஆளுமிடத்தில், அல்பக்ஷேத்ரவானானவன் இரவுபகல் நோக்கி ஆளுமாபோலே ஆண்டுகொண்டு போருமவனென்கை. "பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகு மங்காதுஞ் சோராமேயாள்கின்ற" என்னக்கடவதிறே.

திருவாளன். பெரியபிராட்டியாரை திவ்யமஹிஷியாக உடையவன். கீழ்ச்சொன்ன லோகத்தையெல்லா மாளுவது இருவருமான சேர்த்தியிலேயாய்த்து. இனிதாகத்திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கமே. "க்ஷீராப்தி தொடக்கமான ஸ்த்தலங்களெல்லாவற்றிலுங்காட்டில் அபிமதவித்திக்குடலான தேசம்" என்று திருவுள்ளத்திலுகப்போடேகூடக் கண்வளர்ந்தருளுகிற கோயில், திருவரங்கமே. (க) "க்ஷீராப்தெள வைகுண்டதாமநி ஸரஸிஜே நாகஹ்ருதே யதேவாதி | ரதிம் நதாஹரிபத்தும் ஸாஹரிதிஸ்த்தலே" என்னக்கடவதிறே. ... ு.

அ. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—கைந்நாகத்திடர் கடிந்தகனலாழிப் படையுடையான் கருதுங்கோயில்
தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கத் திருப்பதியின்மேல்
மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டுசித்தன் விரித்ததமிழுரைக்கவல்லார்
எஞ்ஞான்று மெம்பெருமா னிணையடிக்கீ ழிணைபிரியா திருப்பர்தாமே. கக.

பதவுரை.

கை— பெரிய துதிக்கையையுடைய
நாகத்து— ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய
இடர்— துக்கத்தை
கடிந்த— நீக்கினதாய்
கனல்— ஜ்வலியாநின்றுள்ள
ஆழி— திருவாழியை
படை உடையான்—ஆயுதமாக வுடையவன்
கருதும்— விரும்பி வர்த்திக்கிற
கோயில் — கோயிலாய்
தென் நாடும்— தென்னாட்டிலுள்ளாரும்
வடநாடும்— வடநாட்டிலுள்ளாரும்
தொழ - தொழும்படியாக
நின்ற— நின்றருளின
திரு அரங்கம் திரு பதியின்மேல் } 'திருவரங்கம்' என்னும் திருப்பதி விஷயமாக
மெய் நாவன் — மெய்யேசொல்லும் நாவையுடையவராயும்
மெய் அடியான்—அநந்யப்ரயோஜநமாக அடிமைபூண்டவராயு மிருக்கிற
விட்டுசித்தன் — பெரியாழ்வார்
விரித்த— விஸ்தரித்து அருளிச்செய்த
தமிழ்— தமிழ்மாலையான இத்திருமொழியை
உரைக்கவல்லார்தாம்— சொல்லவல்லவர்கள்
எம் பெருமான்—ஸ்ரீவைகுண்டநாதனுடைய

(க) க்ஷீராப்தேர்மண்டலாத்பாநோ ர்யோகிநாம்ஹ்ருதயாதபி- ரதிம்கதோ ஹரிர்யத்ர தஸ்மாத்ரங்கமிதிஸ்ம்ர்தம்"

இணை— ஒன்றுக்கொன்றொப்பான
அடி கீழ்— திருவடிகளின்கீழே
எஞ்ஞான்றும்— எக்காலத்திலும்
இணை பிரியாது— *அடியார்கள்குழாங்களோடே இணைபிரியாமல்
இருப்பர்— இருக்கப்பெறுவர்கள்.

வ்யா. கைந்நாகத்திடர்கடிந்த. ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய து:க்கத்தைப் போக்கின. "ஆனைக்கும் தனக்குத்தக்க வாதம்" என்னுமாபோலே வடிவின் கநத்துக்குத் தக்கபடியிறே து:க்கத்தின் கநமிருப்பது. "ஆனையின் துயரம்" என்றாரிறே. ஆனைக்கு வாசகமான சப்தங்கள் பலவுமுண்டாயிருக்க, "கைந்நாகத்திடர்" என்றது - "கைம்மாதுன்பம்" என்கிறபடியே துதிக்கையை முழுத்தின ஆபத்தென்று தோற்றுகைக்காக. அதாவது - நெடுங்காலம் வர்ஷாபாவத்தாலே வரண்டு, லோகத்தில் ஒருபூக் காணக்கிடையாதபடியாகையாலே, "எங்கே பொரு திருப்பள்ளித்தாமம் கிடைக்குமோ" என்று தடுமாறுகிற்க, "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிறபடியே - தூரத்திலே குளிர்ந்தசோலையும் பூத்தபொய்கையுமாய்த் தோற்றக்கண்டு, பெரிய அபிநிவேசத்தோடே ஓடிச்சென்று, "உள்ளே துஷ்டஸத்த்வங்கிடக்கிறது" என்றறியாமல் பொய்கையிலே யிழிந்து பூவை வாரிப்பறித்துக் கரையிலேயேறத் தேடுகிறவளவிலே, முதலைவந்து காலைப்பிடிக்க; "ஒரு நீர்ப்புழு நிமித்தமாக ஈச்வரனை யழைக்கவேணுமோ, நாமே தள்ளிப்போகிறோம்" என்று போகப்பார்த்தவளவில்; பிடித்தமுதலை ப்ரபலமாகையாலே (க) "஗ஜ ஆகர்ஷதே தீரே [illegible] ஜலே" என்கிறபடியே இங்ஙனே ஆயிரம் தேவஸம்வத்ஸரம் சென்றவளவில்; முதலைக்கு தன்னிலமாகையாலும் அபிமதலாபத்தாலும் "முழுவலிமுதலை" என்கிறபடியே பலம் அபிவ்ருத்தமாய், ஆனைக்கு தன்னிலமல்லாமையாலும் அபிமதாலாபத்தாலும் பலம் க்ஷீணமாகையாலே துதிக்கைமுழுத்தும்படி யாய்த்ததிறே; இப்படியானவாறே தன்னாற்செயலற்று, (உ) "[illegible]" என்கிறபடியே ஸர்வேச்வரனையே ரக்ஷகனாக வநுஸந்தித்து, "நாராயணா ஓ மணிவண்ணா நாகணையாய் வாராய்" என்ன; இந்த ஆர்த்தத்வநி செவிப்பட்டவாறே, (ங) "[illegible]" இத்யாதிப்படியே, (ச) "[illegible]" என்று - அறிவுடையார் ஈடுபடும்படி பெரியத்வரையோடே மடுவின்கரையிலே வந்து, ஆனையை ஒரு கையாலும் முதலையை ஒரு கையாலுமாக எடுத்தணைத்துக்கொண்டு கரையிலேறி, கையில் திருவாழியாலே முதலையின் வாயைப் பிளந்து விடுவித்து, சாத்தியருளின திருப்பரியட்டத் தலையைச்சுருட்டித் திருப்பவளத்திலேவைத்து அதினுடைய புண்வாயை வெதுகொண்டு, நெடுநாள்பட்ட க்லேசமெல்லாம் தீரும்படி திருக்கையாலே குளிர ஸ்பர்சித்துத் திருக்கண்களாலே குளிரக்கடாக்ஷித்து, அதின் கையில் பூவைத்திருவடிகளிலே யிடுவித்துக்கொண்டு அதினுடைய து:கத்தைப் போக்கினபடியைச் சொல்லுகிறது - "இடர்கடிந்த" என்று. கனலாழிப்படையுடையான். ஜ்வலியாநின்றுள்ள திருவாழியை ஆயுதமாகவுடையவன்.

"இடர்கடிந்த கனலாழிப்படையுடையான்" என்கையாலே - கையும் திருவாழியுமாய்க் கொண்டுவந்து தோற்றியாய்த்து முதலையை விடுவித்ததும் ஆனையை ரக்ஷித்ததும்.

(க) "கஜஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே" (உ) "மநஸா சிந்தயத்தரிம்" (ங) "அதந்த்ரித சமூபதி ப்ரஹித ஹஸ்தம்" (ச) "பகவதஸ்த்வராயை நம:"

" தொழுங்காதல் களிறளிப்பான் - மழுங்காதவைநுதிய சக்கரநல் வலத்தையாய் - தோன்றினையே " என்று அறிவுடையார் ஈடுபடும்படியிறே அப்போதுவந்து தோன்றினபடி. கருதுங்கோயில். பரமபதம் க்ஷீராப்தி தொடக்கமான ஸ்தலங்களெல்லாவற்றிலுங்காட்டில், ஆச்ரிதரை அநுபவிப்பிக்கைக்கும் ரக்ஷிக்கைக்குமுடலானஸ்தலம் என்று விரும்பி வர்த்திக்கும் கோயில். தென்னாடும் வடநாடும் தொழநின்ற. த்ராவிடபாஷாப்ரதாநமான தென்னாடும், ஸம்ஸ்க்ருத பாஷாப்ரதாநமான வடநாடும், இருந்ததேகுடியாகத் தொழும்படிநின்ற. திருவரங்கத்திருப்பதியின்மேல். திருவரங்கமென்கிற திருநாமத்தையுடைத்தான திருப்பதிவிஷயமாக.

மெய்ந்நாவன். மெய்யேசொல்லும் நாவையுடையவன். அஸத்யமென்பது ஒன்றும்கலசாத நாவையுடையவனென்கை; " பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன் " என்னுமாபோலே. இத்தால்-பகவத்வைபவம் தேசவைபவம் கீழருளிச்செய்தவற்றில் ஒன்றிலும் ஒருபொய் யில்லாமை சொல்லுகிறது. மெய்யடியான். அநந்யப்ரயோஜநனுன வடியான். " அடியான் " என்று பேரிட்டு ப்ரயோஜநத்துக்கு மடியேற்குமவர்கள் பொய்யடியாரிறே; சேஷத்வம் ஸ்வரூபமானுல் சேஷிக்கு அதிசயத்தை விளைக்குமதொழிய, ஸ்வாதிசயந்தேடுகை சேராதிறே. அங்ஙனன்றிக்கே, சேஷிக்கு மங்களத்தை ஆசாஸித்துக்கொண்டு திரியும் ஸ்வபாவராகையாலே, தம்மை " மெய்யடியான் " என்கிறார். இவையிரண்டும் - தாமருளிச்செய்த வசநங்களை அப்யஸிப்பார்க்கு ஆப்திக்குடலாக வருளிச்செய்தாராய்த்து. விட்டுசித்தன். * அரவத்தமளிப்படியே - ஸர்வேச்வரனைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்கிறவர். விரித்த தமிழுரைக்கவல்லார். விஸ்தரேண ப்ரதிபாதித்த த்ராவிடரூபமான இத்திருமொழியைச் சொல்ல வல்லவர்கள். எஞ்ஞான்றுமித்யாதி. எல்லாக்காலத்திலும், எனக்கு சேஷியான ஸ்ரீவைகுண்டநாதனுடைய, ஒன்றுக்கொன்றொப்பான திருவடிகளின் கீழே விச்லேஷரஹிதராய், * அடியார்கள் குழாங்களோடே தாங்களிருக்கப்பெறுவர். ...கக.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

அடிவரவு—மரவடி தன் கருள் பதினுறு ஆமை மைத்துனன் குற னூரங் தேவு செரு கைங்காகத் துப்பு.

———(ο)———

ஆ திருமொழி-ந.கூ-க்கு, பாட்டு-சஉ0.

---

நான்காம்பத்து- பத்தாந்திருமொழி-துப்புடையாரை, ப்ரவேசம்.

அ. கீழ் இரண்டு திருமொழியிலே - பெரியபெருமாளுடைய திவ்ய வைபவத்தையும், பெரியகோயிலான திருவரங்கத் திருப்பதியினுடைய வைபவத்தையும், பெரிய அபிநிவேசத்தோடே பேசி யநுபவித்து ப்ரீதரானுர்; " தன்னடியார் " இத்யாதியில் சொன்னபடியே - புருஷகாரபூதையான பிராட்டிதானே சிதகுரைக்கிலும் அவளோடே மறுதலைத்து ஆச்ரிதரக்ஷணம்பண்ணும் வாத்ஸல்யாதிசய யுக்தராய், " இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூடேற்றி " இத்யாதிப்படியே - அநந்யப்ரயோஜநராய், திருவடிகளை ஆச்ரயித்த

வர்களை அர்ச்சிராதிமார்க்கத்தாலே அபுநராவ்ருத்திலக்ஷணமான பரமபதத்திலே கொடுபோய் * அநர்கொடுத்திட்டு அடிமைகொள்ளும் ஸ்வபாவரான பெரியபெருமாளுடைய திவ்ய குணத்தை யநுஸந்தித்தவராகையாலே, அவர்க்கும் இருந்தின சேதநரை இங்குநின்றும் கொடுபோய் அடிமைகொள்ளுகை இருவுள்ளமாகையாலே, “ நாம் இனி அங்கேபோய் அடிமைசெய்யவேணும் ” என்னும் அபேக்ஷைபிறந்து, அதுக்கு தேஹஸம்பந்தமற்றுப்போக வேண்டும்படியை அநுஸந்தித்து, இந்தப்ரஸங்கத்திலே சரீர விச்லேஷஸமயத்தில் ஸம்ஸாரிகளானவர்களுக்கெல்லாம் யமபடரால்வரும் நலிவைநினைத்து, “ அது நமக்கு வாராதொழியும்போது ஸர்வேச்வரனானவனே போக்கித் தந்தருளவேணும் ” என்று அத்யவஸித்து, “ அதுதன்னை இப்போதே அவன் திருவடிகளிலே விழுந்து அர்த்தித்து நாம் செய்வித்துக்கொள்வோம் ” என்று ஒருப்பட்டு, சரமதசையில் கர்மாநுகுணமாக யமபடர்வந்து என்னை நலியும்போது, அந்த க்லேசத்தாலே தேவரீருடைய திருவடிகளை ஒருபடியாலும் நினைக்கவும் ஒன்று சொல்லவும் க்ஷமனல்லேன் என்று அத்தைப்பற்ற அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்; ஆனபின்பு, அக்காலத்தில் அவர்கள் என்னைநலியாதபடி தேவரீர் ரக்ஷித்தருளவேணும் என்று பெரியபெருமாள் திருவடிகளிலே சரணம்புக்கு விண்ணப்பம்செய்து செல்லுகிறார் - இத்திருமொழியில்.

இதுதானிருந்தபடியென்?;— (க) “ நவெ ஃஸ ; ஶ ஃ தா யவிஷ ப ஂ ஹு ஶி ” என்று சாஸ்த்ரம் சொல்லுகையாலும், “ வேண்டாமைநமன்றமர் சென்றமரை வினவப்பெறுவாரலர் ” என்கிற பகவதுக்தியாலும், “ உன்றமர்க்கென்றும் நமன்றமர் கள்ளர்போல் ” என்று அபியுக்தர் சொல்லுகையாலும், (உ) “ வரிஹர ஃஸ ஶ ந ப்ரவஹாது ” என்று யமன்றானே சொல்லுகையாலும், பாகவதரானவர்களுக்கு யமவச்யதைவரக்கூடாதென்னுமிடம் ப்ரஸித்தமாயிருக்க, “ சரமதசையிலே யமபடர்வந்து நலிவர்கள் ” என்று பயப்பட்டுத் திருவடிகளிலே சரணம்புகுந்து, “ அத்தசையிலே என்னைரக்ஷித்தருளவேணும் ” என்று இவர் அர்த்திக்கிறவிது, கீழ்ச்சொன்ன வசநங்களோடு விருத்தமன்றோவென்னில் ; ஆழ்வார்கள் தாங்கள், * மயர்வறமதிநல மருளப்பெற்று அவனை உள்ளபடியறிந்து அநுபவியா நிற்கச்செய்தே ஓரோ தசைகளிலே வந்தவாறே, அநாதிகாலம் ஸம்ஸரண ஹேதுவாய்க்கொண்டு போந்த கர்மபலத்தையும், அந்த கர்மாநுகுணமாகவே நிர்வஹித்துக்கொண்டு போந்தவனுடைய பந்தமோக்ஷாபய நிர்வாஹகனாயிருக்கிற ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்ய பலத்தையு மநுஸந்தித்து, “ நிரங்குச ஸ்வதந்த்ரனானவன் இன்னம் நம்மை ஸம்ஸரிப்பிக்கில் செய்வதென் ” என்று, “ மக்கள்தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல் ” என்றும், “ இன்னம் ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன் ” என்றும், “ வைத்த சிந்தை வாங்குவித்து நீங்குவிக்க நீயின்னம் மெய்த்தன்வல்லை- உய்த்துநின்மயக்கினில் மயக்கலென்னைமாயனே ” என்றும் அவனைக்குறித்து விண்ணப்பம் செய்யும் ப்ரகாரத்திலே; இவரும், ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தையும், அநாதிகாலம் அவன் திருவடிகளைக் கிட்டாதபடி அகலவடித்த கர்மபலத்தையும் அநுஸந்தித்து, “ ஸ்வதந்த்ரனானவன் நம்முடைய கர்மாநுகுணமாக விட்டு உபேக்ஷித்திருக்குமாகில், முன்புபோலே யமபடரால்வரும் நலிவு நமக்குவரில் செய்வதென் ” என்று அஞ்சி, அவன் திருவடிகளிலே சரணம் புகுந்து, அத்தசையில் என்

(க) “ நகலுபாகவதாயமவிஷயம்கச்சந்தி ” (உ) “ பரிஹரமதுஸூதநப்ரபந்நாந் ”

னை ரக்ஷித்தருளவேணும் என்று அர்த்திக்கிறார். ஆகையால், இந்த பக்ஷமும் ப்ரார்த்தனையும் இவருடைய அதிசங்காமூலமான கலக்கமடியாக வந்ததாகையாலே, கீழ்ச்சொன்ன வசநங்களோடு விரோதமில்லை. ... ... ... ... ... ... ... ... *.

மூ.—துப்புடையாரை யடைவதெல்லாஞ் சோர்விடத்துத் துணையாவரென்றே
ஒப்பிலேனாகிலு நின்னடைந்தே னானைக்குநீ யருள்செய்தமையால்
எய்ப்பென்னை வந்து நலியும்போதங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன்
அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தே னரங்கத் தரவணைப்பள்ளியானே. க

பதவுரை.

'அரங்கத்து அரவு அணை பள்ளியானே!—;
துப்பு உடையாரை—அடுத்தவரைக் காக்கும் திறமுடைய உன்னை
அடைவது— அடைக்கலம்புகுவது
எல்லாம்—என்னுடைய கரணங்களெல்லாம்
சோர்வு இடத்து— சோர்ந்தகாலத்திலே
துணை ஆவர் என்று—நீ துணையாவாய்என்று'
(என்று ஆழ்வார் சொல்ல;— 'அது நான்செய்வது ஒருக்கால் ப்ரபத்தி பண்ணினார்க்கன்றோ' என்று எம்பெருமான் திருவுள்ளமாக,
ஒப்பு இலேன் ஆகிலும்-'அப்படிப்பட்ட அதிகாரிகளுக்கு நான் ஒத்தவனல்லேனாகிலும்
நின்— உன்னை
அடைந்தேன்— சரணமாகவடைந்தேன்'
('என்ன; 'நாம் ஆரை ரக்ஷிக்கக்கண்டு நம்மை வந்தடைந்தீர்?' என்ன;)
நீ— 'தேவரீர்
ஆனைக்கு— ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு
அருள் செய்தமையால்— க்ருபைபண்ணினமையாலே'
('என்ன; அப்போது வந்து ரக்ஷிக்கிறோமென்ன;)
எய்ப்பு— 'மூன்றுதோஷத்தாலு முண்டான இளைப்பானது
என்னை— என்னை
வந்து— வந்து கிட்டி
நலியும்போது—வருந்துங்காலத்திலுண்டான
அங்கு— அவ்வவஸ்தையில்
நான்— அடியேன்
ஏதும்— சற்றுமினும்
உன்னை— தேவரீரை
நினைக்கமாட்டேன்— ஸ்மரிக்கமாட்டேன்;
அப்போதைக்கு—அக்காலத்துக்காக
இப்போதே— கரணகளேபரங்கள் தெளிவு பெற்றிருக்கிற இப்போதே
சொல்லி வைத்தேன்— சொல்லிவைத்தேன்.' என்கிறார்.

வ்யா. முதற்பாட்டு. துப்புடையாரை யடைவது. துப்பு- ஸாமர்த்யம். ரக்ஷண ஸாமர்த்யமுடையாரை ஆச்ரயிப்பது. இது முன்னிலைப் படர்க்கையாய், ஈச்வரன்றன்னையே சொல்லுகிறது. பஹுவசநம்- பூஜார்த்தம். ரக்ஷண ஸாமர்த்யந்தான் வ்யக்த்யந்தரத்திலே இல்லையிறே; (க) "[illegible]" (உ) "[illegible]" என்கிறபடியே.

---

(க) "நஸம்பதாம்ஸமாஹாரே விபதாம்விநிவர்த்தநே-ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித்தம் விநா புருஷோத்தமம்" (உ) "நஹிபாலநஸாமர்த்ய ம்ருதே ஸர்வேச்வரம் ஹரிம்- ஸ்த்திதௌ ஸ்த்திதம்மஹாத்மாநம் பவத்யந்யஸ்ய கஸ்யசித்"

எல்லாம்சோர்விடத்து. இந்த்ரியங்களடைய அழிந்து மநஸ்ஸ¬ம் அழிந்தவிடத்து. அந்திம
தசையைச் சொன்னபடி. துணையாவரென்றே. * சாஷ்ட்டபாஷாண ஸந்நிபமாய்க்கிடக்கிற
தசையில் (க) "அஹம்ஸ்மராமி" என்கிறபடியே துணையாவரென்றே. அது நாம்செய்
வது, தங்களுடைய இழவு பேறுகள் நம்மதாம்படியிருக்கும் நம்மோட்டை ஸம்பந்தத்தை
யறிந்து நம்பக்கலிலே (உ) "ஸ்மர்த்தா" என்கிறபடியே ஸக்ர்த்கரண ப்ரபத்தியைப்பண்
ணினவர்களுக்கன்றோ, நீர் அவர்களுக்கு ஒப்போவென்ன; ஒப்பிலேனாகிலும் நின்னடைந்
தேன். அவர்களுக்கு ஸத்ர்சனல்லேனாகிலும், என்னுடைய து:க்காதிசயத்தாலே, அந்த
துக்கநிவர்த்திக் குறுப்பாக, எதிர்த்தலையில் யோக்யதைபாராதே ரக்ஷிக்கும் உன்னை சரண
மாக அடைந்தேன். நாம் இப்படி யாரை ரக்ஷித்ததுகண்டு நீர் நம்மை யடைந்ததென்ன;
ஆனைக்கு நீயருள்செய்தமையால். ஆர்த்தியும் அநந்யகதித்வமு மொழிய வேறொரு யோக்ய
தையு மின்றிக்கே யிருக்கிற ஆனைக்கு நீயருள்பண்ணினபடியினாலே. ஆனால் அவ்வானைபோ
லாதி, நீரும் உமக்குத் தளர்த்திவந்தபோது நினையும், அப்போது வந்து ரக்ஷிக்கிறோம் என்
ன; எய்ப்பென்னைவந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன். வாத பித்த
ச்லேஷ்ம தோஷத்ரயமும் ஒக்க உல்பணித்து நெருக்குகையாலுண்டான இளைப்பானது என்
னை வந்து நலியும் காலத்தில், அவ்வவஸ்த்தையில் ஏகதேசமும் நான் உன்னை நினைக்கமாட்
டேன். ஆனால் செய்பவடுப்பதென் என்ன; அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்.
அக்காலத்துக்கு உடலாக, கரணகளேபரங்கள் இளைப்பற்றுத் தெளிந்திருக்கிற இப்போதே
சொல்லிவைத்தேன். இப்படி நீர் சொல்லிவைத்தால் இத்தை நினைத்திருந்து உம்மை
ரக்ஷிக்கவேண்டும் நிர்ப்பந்தமேது நமக்கு என்ன; அரங்கத் தரவணைப் பள்ளியானே. இப்
படி ரக்ஷிக்கைக்காகவன்றோ,* தேசவிப்ரகர்ஷ்டமான க்ஷீராப்தியைப்போலன்றிக்கே, கோ
யிலிலே திருவனந்தாழ்வானாகிற திருப்படுக்கையின்மேலே கண்வளர்ந்தருளுகிறது. அந்த
யோகநித்ரைபோலேயோ இந்த யோகநித்ரை; தாழ்ந்தாரை ரக்ஷிக்கைக்கன்றோ. ... க.

மூ.—சாமிடத்தென்னைக் குறிக்கொள்கண்டாய் சங்கொடு சக்கரமேந்தினனே
நாமடித்தென்னை யனேகதண்டஞ் செய்வதாநிற்பர் நமன்றமர்கள்
போமிடத் துன்றிறத்தெத்தனையும் புகாவண்ண நிற்பதோர் மாயைவல்லை
ஆமிடத்தேயுன்னைச் சொல்லிவைத்தே னரங்கத் தரவணைப்பள்ளியானே. உ.

பதவுரை.

சங்கொடு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடு
சக்கரம் — திருவாழியாழ்வானையும்
ஏந்தினனே — திருக்கையிலே தரித்தவனாய்
அரங்கத்து— திருவரங்கத்திலே
அரவு — திருவனந்தாழ்வானாகிற
அணை — திருப்படுக்கையிலே
பள்ளியானே— பள்ளிகொண்டருளுமவனே!
நமன் தமர்கள்— யமபடர்கள்

நா — நாக்கை [கொண்டு
மடித்து— (மிக்ககோபத்தாலே) மடித்துக்
என்னை— மஹாபாபியான என்னை
அநேக தண்டம்— அநேகதண்டங்களை
செய்வதா— செய்யக்கடவதாக
நிற்பர்— நில்லாநிற்பர்களாய் [மளவில்
போம் இடத்து— இழுத்துக்கொண்டு போ

(க) "அஹம்ஸ்மராமி" (உ) "ஸ்மர்த்தா"

( இவ்வாத்மாவின் மநஸ்ஸானது )
உன்திறத்து— உன்விஷயத்திலே
எத்தனையும்— ஏகதேசமாயினும்
புகாவண்ணம்— உள்புகுராதபடி
நிற்பது— உன்னைக்கொண்டு மறைகையாகிற
ஓர்— ஒப்பற்ற
மாயை— வஞ்சனையில்
வல்லே— ஸமர்த்தராகாநின்றீர்;
ஆதலால்— ஆதலால்
ஆம் இடத்தே— கரணங்கள் என்வசமாய்ச் செல்லத்தக்க இக்காலத்திலேயே,
சாம் இடத்து— 'சரீரவிச்லேஷஸமயத்தில் என்னை— உன்னை நினைக்கமுடியாத என்னை குறிக்கொள் கண்டாய் — திருவுள்ளம்பற்றி யருளவேணும்'
( என்று )
உன்னை சொல்லிவைத்தேன்—உன்னைக்குறித்துச் சொல்லிவைத்தேன்.

வ்யா. இரண்டாம்பாட்டு. சாமிடத்து. சரீரவிச்லேஷ ஸமயத்திலே. கீழ் "எல்லாம் சோர்விடம்" என்றத்தை இங்கே ஸ்பஷ்டமாக வருளிச்செய்கிறார். என்னை. தோஷத்ர யௌல்பண்யத்தாலே கலங்கி, உன்னை நினைக்க க்ஷமனன்றிக்கே யிருக்கிற என்னை. குறிக் கோள்கண்டாய். நான் கலங்கிக் கிடந்தேன் என்று நீ உபேக்ஷித்திராதே திருவுள்ளம்பற்றி யருள்கிடாய். அன்றிக்கே, யமபடரால் வந்த நலிவுக்கு அஞ்சி, திருவடிகளிலே இப்போது சரணம் புகுந்த வென்னை, அப்போது திருவுள்ளம்பற்றி யருள்கிடா யென்னவுமாம். சங் கோடு சக்கர மேந்தினனே. ஆச்ரித ரக்ஷணத்தில் விளம்பாஸஹத்வத்தாலே அநவரதம் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் திருவாழியையும் திருக்கையிலே ஏந்திக்கொண்டிருக்கிறவனே. ரக்ஷ்ய ரக்ஷகபாவத்தைமாறுடி, அவனுக்குத் தாம் மங்களாசாஸநம் பண்ணும் ஸ்வபாவராய், திவ்யா யுதங்களையும் அழகுக்குடலாக நினைத்து அவற்றுக்கு மங்களாசாஸநம் பண்ணுமவர், இப் போது, ரக்ஷகனுகவும் திவ்யாயுதங்களை ரக்ஷணபரிகரமாகவும் அநுஸந்திக்கும்படியாய்த்துச் செல்லுகிற பயம். பயஹேதுதன்னை யருளிச்செய்கிறார் நாமடித்தித்யாதி. க்ரோதாதிசயத் தாலே நாவைமடித்துக்கொண்டு, என்னை கர்மாநுகுணமாக அநேக தண்டங்களைச் செய்யக் கடவதாக நில்லாநிற்பர் யமபடரானவர்கள். சரீர விச்லேஷ ஸமயத்தில் வேறொருவர்க்குத் தோற்றாமல் இச்சேதந னொருவனுக்குமே தோன்றும்படி இப்படி வந்து புகுந்து நில்லாநிற் பர்களாய்த்து.

போமிடத்து. அவர்கள் இழுத்துக்கொண்டு போமளவில். உன்திறத் தேத்தனையும் புகாவண்ணம் நிற்பதோர்மாயைவல்லே. இவ்வாத்மாவினுடைய மநஸ்ஸு உன்விஷயத்தில் ஏக தேசமும் உள்புகுராதபடி உன்னைக்கொண்டு மறைய நிற்பதொரு வஞ்சநத்தை வல்லே. ஆமி டத்தே யுன்னைச் சொல்லிவைத்தேன். ஆனபின்பு, கரணங்கள்என்வசமாய்ச்செல்லலான தசை யிலே, "சாமிடத்தென்னைக் குறிக்கொள்கண்டாய்"என்று உன்னைக்குறித்துச் சொல்லிவைத் தேன். அரங்கத்தரவணைப் பள்ளியானே. இவ்வாத்மாக்களுடைய ரக்ஷணார்த்தமாக முற் கோலி வந்து, இவற்றினுடைய ரக்ஷணசிந்தையைப் பண்ணிக்கொண்டு, திருவரங்கத்திருப் பதியிலே திருவரவணையின்மேலே பள்ளிகொண்டருளுகிறவனே. ... ... உ.

மூ.—ஏல்லையில்வாசல் குறுகச்சென்று லெற்றி நமன்றமர் பற்றும்போது
நில்லுமினென்ன வுபாயமில்லே நேமியுஞ் சங்குமேந்தினனே [ண்டென்றும்
சொல்லலாம்போதே யுன்னாமமெல்லாம் சொல்லினேனென்னைக் குறிக்கோ
அல்லல்படாவண்ணங் காக்கவேண்டு மரங்கத் தரவணைப் பள்ளியானே. ௩.

பதவுரை.

அரங்கத்தரவணைப் பள்ளியானே!-;
நேமியும்— திருவாழியையும்
சங்கமும்— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
ஏந்தினனே— திருக்கையி லேந்திக்கொண்டிருக்கிறவனே!
எல்லையில்— அடியேனுடைய ஆயுஸ்ஸின் எல்லையான சரமதசையிலே
வாசல்— யமபுரத்துக்குப் போம்வழி
குறுகச்சென்றால்— கிட்டினால்
நமன் தமர்— யமபடரானவர்கள்
எற்றி— அடித்து
பற்றும்போது— பிடிக்குங்காலத்தில்
நில்லுமின் என்ன—'கடக்கநில்லுங்கோள்' என்று தகைகைக்குத்தக்க
உபாயம்— ஒருபாயமும்
இல்லை— என்கையிலில்லை;
(ஆதலால்,)
சொல்லலாம்போதே—சொல்லுகைக்கு யோக்யதை யுண்டானகாலத்திலேயே
உன்— தேவரீருடைய
நாமம் எல்லாம்— திருநாமங்களை யெல்லாம்
சொல்லினேன்— சொன்னேன்;
என்னை— என்னை
என்றும்— எப்போதும்
குறிக்கொண்டு— திருவுள்ளம்பற்றி
அல்லல்படாவண்ணம்—யமபடர்கையி லகப்பட்டு வருந்ாதபடி
காக்கவேண்டும்— ரக்ஷித்தருளவேணும்.

வ்யா. மூன்றும்பாட்டு. எல்லையில். ஆயுஸ்ஸினுடைய எல்லையான மரணதசையில், வாசல் குறுகச்சென்றால். வாசல்-வழி. (க) யாம்யமார்க்கத்தி இனி ஆஸந்நம் என்னுமளவாகச் சென்றால். எற்றி நமன்றமர் பற்றும்போது. யமபடரானவர்கள் பிடிப்பதற்கு முன்னே மதி மயங்க எற்றிவந்து பிடிக்கும்போது. பிடித்தல்ல அடிப்பது, அடித்தாய்த்துப் பிடிப்பது. இப்படி யமபடர் வந்து கொடுபோவதாகப் பிடிக்குங் காலத்தில். நில்லுமினென்ன வுபாயமில்லை. "நில்லுமின்" என்று அவர்களைத் தகைகைக்குத்தக்க உபாயமொன்றும் என்கையிலில்லை. இத்தால் தம்முடைய ஸர்வோபாய சூந்யதையைச் சொல்லுகிறார். நேமியும் சங்கமுமேந்தினனே. விரோதி நிரஸநபரிகரமான திவ்யாயுதங்களை ஸர்வகாலமும் திருக்கையிலே ஏந்திக்கொண்டிருக்கிறவனே. இப்படி யிருக்கையாலே, *பற்றிலார்பற்ற நின்றாநயிருக்கிற தேவரீரையொழிய எனக்கொரு ரக்ஷகரில்லை யென்கை. கீழ்- "சங்கொடு சக்கர மேந்தினனே" என்றார்; இங்கே- "நேமியும் சங்கமு மேந்தினனே" என்கிறார். இதுவாய்த்து இவர் ‡கைகண்டிருக்குமுபாயம்."எப்போதும் கைகழலாநேமியான்" என்றிறே இவர்களிருப்பது. "நில்லுமுனென்ன வுபாயமில்லை" என்பானென், நம்முடைய நாமங்களை எப்போதும் சொல்லாநின்றீரே, அதுதான் உபாயமாறுமேலோவென்ன; அது நான் ஸாதநமாகச்சொன்னேனோ? சொல்லலாம்போதே யுன்னாமமெல்லாம் சொல்லினேன். கரணங்கள் வசவர்த்தியாயிருக்கிறபோதே உன் திருநாமங்களையெல்லாம் ப்ராப்யமாக வநுஸந்தித்த வித்தனையன்றோ, மங்களாசாஸந பரனாய் உன்னுடைய ஸம்ருத்தியை ஆசாஸித்துக்கொண்டு திரியும் நான் என்னுடைய ஸம்ருத்திக்கு உறுப்பாக ஏதேனுமொன்று செய்கைக்கு யோக்யதையுண்டோ, நீயறிய உன்னை ரக்ஷகனாக அநுஸந்தித்திருக்கிற விதுதானும் என்னுடைய செயலறுதியாலே இப்போது செய்கிற வித்தனையன்றோ. என்னைக் குறிக்கொண்டென்றும். இப்படியிருக்கும் ஸ்வபாவனான என்னை, ஸர்வகாலமும் திருவுள்ளம்பற்றி. அல்லல்படாவண்ணம் காக்க

(க) யாம்யமார்க்கமதி. ‡ இது வாடு.

வேண்டும். என்னுடைய புருஷார்த்தத்துக்கு விரோதியான யமபடரால் வரும் நலிவிலே அகப்பட்டு து:கப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். அரங்கத்தரவணைப் பள்ளியானே. இதுக்காகவன்றோ தேவரீர் அணித்தாக வந்து கண்வளர்ந்தருளுகிறது. ... ... கூ.

மூ.—ஒற்றைவிடையனு நான்முகனு முன்னையறியாப் பெருமையோனே
முற்றவுலகெல்லா நீயேயாகி மூன்றெழுத்தாய முதல்வனேயோ !
அற்றதுவாணு ளிவற்கென்றெண்ணி யஞ்ச நமன்றமர் பற்றலுற்ற
வற்றைக்கு நீயென்னைக் காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே ச.

பதவுரை.

ஒன்று— ஒப்பற்ற
விடையனும்— ரிஷபவாஹநனான ருத்ரனும்
நால் முகனும்— சதுர்முக ப்ரஹ்மாவும்
உன்னை— தேவரீரை
அறியா— அறியவொண்ணாத
பெருமையோனே-பெருமையையுடையனாய்
முற்ற— ஒன்றொழியாதபடி
உலகு எல்லாம்— ஸகலலோகங்களும்
நீயே ஆகி— நீயேயாய்
மூன்று எழுத்து ஆய— அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்துக்கு வாச்யனாய்க்கொண்டு
முதல்வனே— ஸர்வகாரண பூதனாயிருக்கும்வனே !

அரங்கத்தரவணைப்பள்ளியானே!;-
நமன் தமர்— யமபடரானவர்கள்
இவற்கு— ' இவனுக்கு
வாழ் நாள்— ஆயுஸ்ஸு
அற்றது என்று எண்ணி— முடிந்தது ' என்று நினைத்து
அஞ்ச—பிடிக்கிறபிடியிலே அஞ்சும்படியாக
பற்றல் உற்ற அற்றைக்கு— பிடிக்கையிலே ஒருப்பட்டவன்றைக்கு
நீ— ஆச்ரிதரக்ஷகனான நீ
என்னை— என்னை
காக்கவேண்டும்— அவர்கள்கையில் காட்டிக்கொடாதே ரக்ஷித்தருளவேணும்.

வ்யா. நான்காம்பாட்டு. ஒற்றைவிடையனும். " நுண்ணுணர்வில் நீலார் கண்டத்தம்மானும் " என்கிறபடியே ப்ரஹ்மாவனை தலையெடுத்தபோது, அல்லாதாரைப்போலன்றிக்கே, தத்வத்தை யதாவாக தர்சிக்கவல்ல ஸூக்ஷ்ம ஜ்ஞானத்தையுடையனான அத்விதீய ரிஷபவாஹநனும். " ஒற்றைவிடையனும் " என்றது - லோகவ்யாவர்த்த மானதையாலே அத்விதீயமாய் அவனுக்கு அபிமதமாயிருக்கு மென்னுமிடம் தோற்றுகைக்காக. இத்தையிறே, அவன் தனக்கு பெருத்த வுடைமையாக நினைத்திருப்பது. நான்முகனும். (க) " [grantha quotation] " என்கிறபடியே அவ்யவதாநேந திருநாபீகமலத்திலே பிறந்து, பிதாவான தேவரீர் தம்மாலே கொடுக்கப்பட்ட நாலுவேதங்களையு முடையனாய், " அமரர்க்குமறிவியந்து " என்கிறபடியே இவ்வருகுள்ளார்க்கெல்லாம் ஜ்ஞாநப்ரதனுமாயிருக்கு மேற்றத்தையுடைய சதுர்முகனும். உன்னையறியாப் பெருமையோனே. ஸர்வகாரணபூதனாய் ஸர்வரக்ஷகனாய் ஸர்வசேஷியாய் ஸர்வசரீரியாயிருக்கு முன்னை, உள்ளபடி யறியவொண்ணா திருக்கும் பெருமையையுடையவனே.

---

(க) " யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவைவேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை "

(க) "யந்நதேவா ந முநயோ ந சாஹம் ந சங்கர: ஜாநந்தி பரமேசஸ்ய தத்விஷ்ணோ: பரமம் பதம்" என்று விஷ்ணுவினுடைய பரமமான ஸ்வரூபத்தைத் தானும் ருத்ரனும் மற்றுமுண்டான தேவர்களும் ரிஷிகளும் அறியார்களென்னுமிடம் ப்ரஹ்மாதானே சொன்னானிறே. "கார்செறிந்த கண்டத்தான் எண்கண்ணான் காணான் அவன்வைத்த பண்டைத்தானத்தின்பதி" என்று - அவனெழுந்தருளி யிருக்கிற தேசத்தையுமுட்பட அவர்க ளறியமாட்டார்க ளென்றிறே திருமழிசைப்பிரா னருளிச்செய்தது.

முற்றவுலகெல்லாம் நீயேயாகி. ஸ்வ வ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் ப்ரகாரமாகத் தான்ப்ரகாரியா யிருக்கையாலே, ஒன்றொழியாதபடி ஸகலலோகங்களும் நீயேயாய். (உ) "ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம" (ங) "புருஷஏவேதம்ஸர்வம்" என்னக்கடவதிறே. மூன்றெழுத்தாய முதல்வனே. அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்துக்கு வாச்யனாய்க்கொண்டு ஸர்வகாரணபூதனா யிருக்கிறவனே. "மூன்றெழுத்தாய" என்கிற ஸாமாநாதிகரண்யம், வாச்யவாசக பாவஸம்பந்த நிபந்தநம். ப்ரணவந்தான் சப்தப்ராதாந்யத்தாலே ஜீவபரமாய் அர்த்தப்ராதாந்யத்தாலே பகவத்பரமாயிறே யிருப்பது. (ச) "ஓங்காரோ பகவாந்விஷ்ணு:" என்றும், (ரு) "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்மவ்யாஹரந்மாமநுஸ்மரந்" என்றும் சொல்லக்கடவதிறே. அதில் ப்ரதமாக்ஷரத்தில் ப்ரக்ர்த்யர்த்தமிறே ஸர்வகாரணத்வம். ஓ. இப்படி நீயே நிர்வாஹகன்என்று இருப்பாரிடத்தில் யமபடரால்வரும் நலிவு வரக்கடவதோ! என்று விஷண்ணராகிறார். அற்றதுவாழ்நா ளிவற்கென்றெண்ணி. ஜீவிக்குங் காலமெல்லாம் பொகட்டிருந்து இவனுக்கு ஆயுஸ்ஸு அற்றதென்றெண்ணி. அஞ்சநமன்றமர் பற்றலுற்றவற்றைக்கு. மேல் ஒருவேதனை செய்வதுக்குமுன்னே பிடிக்கிறபிடியிலே அஞ்சும்படியாக யமபடரானவர்கள்வந்து, பிடிக்கையிலே யொருப்பட்ட வன்றைக்கு. நீ யென்னைக் காக்க வேண்டும். ஸர்வாதிகனாய் சரணாகதரக்ஷகனான நீ, உனக்குப் பரிந்தன்றியுளேனாகாதபடி யிருக்கும் என்னை அவர்கள்கையிலே காட்டிக் கொடாதே ரக்ஷித்தருளவேணும். அரங்கத்தரவணைப் பள்ளியானே. ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்காகவன்றோ அணித்தாகவந்து கோயிலிலே சாய்ந்தருளிற்று. ... ... ... ... ... ... ... ... ...௪

மூ—பையரவினணைப் பாற்கடலுட் பள்ளிகொள்கின்ற பரமமூர்த்தி
உய்யவுலகு படைக்கவேண்டி யுந்தியிற்றோற்றினாய் நான்முகனை
வையமனிசரைப் பொய்யென்றெண்ணிக் காலனையு முடனேபடைத்தாய்
ஐயவினியென்னைக் காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே. ரு.

பதவுரை.

| | |
|---|---|
| பால் கடலுள்— க்ஷீராப்தியிலே | அரவு இன் அணை—திருவனந்தாழ்வானாகிற இனிய படுக்கையின்மேலே |
| பை— பரந்தபடங்களையுடைய | |

(க) "யந்நதேவா நமுநயோ நசாஹம்நச சங்கர: - ஜாநந்திபரமேசஸ்ய தத்விஷ்ணோ:பரமம் பதம்" (உ) "ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம" (ங) "புருஷஏவேதம்ஸர்வம்" (ச) "ஓங்காரோ பகவாந்விஷ்ணு:" (ரு) "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்மவ்யாஹரந்மா மநுஸ்மரந்"

பள்ளிகொள்கின்ற—கண்வளர்ந்தருளுகிற
பரமமூர்த்தி— பரமசேஷியானவனே !
அரங்கத்தரவணைப்பள்ளியானே !–;
உய்ய— ஸகலாத்மாக்களும்தன்னை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கைக்குறுப்பாக
உலகு— லோகங்களை
படைக்கவேண்டி— ஸ்ர்ஷ்டிக்கவிரும்பி
நால் முகனை— சதுர்முக ப்ரஹ்மாவை
உந்தியில்— திருநாபீகமலத்திலே
தோற்றினாய்— தோற்றுவித்த நீ
வையம்— பூமியிலுள்ள
மனிசர்— மநுஷ்யர்கள்
பொய் என்று எண்ணி— நம்முடைய கட்டளையான சாஸ்த்ரமர்யாதையில் நிற்கமாட்டார்கள்' என்று திருவுள்ளம்பற்றி
காலனையும்— அவர்கள்மீறி நடக்கும் காலத்தில் சிக்ஷிக்கைக்கீடான காலனையும்
உடனே— உடனே
படைத்தாய்— ஸ்ர்ஷ்டித்தாய் ;
ஐய— பரமபந்துவானவனே !
இனி— இனி [யேனை
என்னை— மங்களாசாஸநைகபரனான அடியேனை
காக்கவேண்டும்—யமபடரால் வரும் நலிவில் அகப்படாதபடி ரக்ஷித்தருளவேணும்.

வ்யா. ஐந்தாம்பாட்டு. பையரவினணைப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமமூர்த்தி. திருப்பாற்கடலிலே ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமான பணங்களையுடையனாய்,மென்மைகுளிர்த்தி நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே. "உள்ளப் பல்யோகு செய்து" என்கிறபடியே ஸம்ஸாரிகளான ஆத்மாக்களை உஜ்ஜீவிப்பிக்கைக் கீடான பல உபாயங்களையும் திருவுள்ளத்திலே சிந்தித்துக்கொண்டு கண்வளர்ந்தருளாநின்ற பரமசேஷியானவனே. மூர்த்திசப்தம்- ஐச்வர்யத்துக்கும் விக்ரஹத்துக்கும் வாசகமாகையாலே, இவ்விடத்தில் ஐச்வர்யவாசகமாய்க்கொண்டு சேஷித்வத்தைச் சொல்லுகிறது. இத்தால் இவை அறியாதிருக்க, தான் அறிந்ததாக இவற்றினுடைய ரக்ஷணோபாயசிந்தை பண்ணுகைக்கடியான ப்ராப்தியைச் சொல்லுகிறது. இப்படி ஸ்ர்ஷ்டமான ஜகத்துக்கு ரக்ஷணார்த்தமாகவந்து கண்வளர்ந்தருளின வளவன்றிக்கே, ஜகத்துக்கு, தன்னை முதலிலே ஸ்ர்ஷ்ட்டித்தருளின உபகாரந்தன்னை யருளிச்செய்கிறார். உய்யவித்யாதி. கரண களேபர விதுரராய் போகமோக்ஷசூந்யராய் *அசிதவிசேஷிதராய்க் கிடக்கிற ஆத்மாக்கள் கரணகளேபரங்களைப் பெற்று, திருவடிகளை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கைக்குறுப்பாக லோகத்தை ஸ்ர்ஷ்ட்டிக்கையிலே விருப்பத்தை யுடையனாய், வ்யஷ்ட்டி ஸ்ர்ஷ்ட்டிக்கு கர்த்தாவான சதுர்முகனைத் திருநாபீகமலத்திலே தோற்றுவித்தவனே.

வையமித்யாதி. ஜகத்ஸ்ர்ஷ்ட்டி பண்ணுகிறபோதே, "பூமியிலுண்டான மநுஷ்யர் நம்முடைய ஆஜ்ஞாரூபமான சாஸ்த்ரமர்யாதையில் நிற்பார்சிலரல்லர், க்ர்த்ரிமமாய் விபரீதப்ரவர்த்தராமவர்கள்" என்று திருவுள்ளம்பற்றி, "அப்படி அதிப்ரவர்த்தரான தசையில் அதுக்கீடாக சிக்ஷித்தாகிலும் ரக்ஷிக்கவேணும்" என்று காலனையுமுடனே ஸ்ர்ஷ்டித்தவனே. "பொய்யர்" என்கிறவித்தை, "பொய்" என்று குறைத்துக்கிடக்கிறது. ஐய. ஐயனே!;– பரமபந்து வானவனே. இத்தால்- ரக்ஷிக்கைக்கீடான ப்ராப்தியைச் சொல்லுகிறது. இனி யென்னைக் காக்கவேண்டும். அந்த வையத்திலுள்ளார் படியன்றிக்கே, உன்னுடைய அங்கீகாரவிசேஷத்தாலே வ்யாவர்த்தனாய் உனக்கு மங்களாசாஸநம் பண்ணியன்றி தரியாதபடியான பின்பு, இப்படியிருக்கிற வென்னை, என்னுடைய புருஷார்த்தத்துக்கு விரோதியான யமபடரால்வரும் நலிவில் அந்வயமில்லாதபடி ரக்ஷித்தருளவேணும். அரங்கத்தரவணைப் பள்ளியானே. ஜகத்ஸ்ர்ஷ்டியைப்பண்ணி, ஸ்ர்ஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளின வளவன்றிக்கே, இங்குவந்து சாய்ந்தருளிற்று- அநந்யகதிகளாய் ஆர்த்தராய்த் திருவடிகளிலே வந்துவிழுந்தாரை ரக்ஷிக்கைக்காகவன்றோ. ...ரு.

மூ.—தண்ணனவில்லை நமன்றமர்கள் சாலக்கொடுமைகள் செய்யாநிற்பர்
மண்ணொடுநீரு மெரியுங்காலு மற்றுமாகாசமு மாகிநின்றாய் [டென்றும்
எண்ணலாம்போதே யுன்நாமமெல்லா மெண்ணினே னென்னைக்குறிக்கொண்
அண்ணலே நீயென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே. ௬.

பதவுரை.

நமன் தமர்கள்— யமபடரானவர்கள்
தண்ணனை இல்லை— தயையில்லாதவர்களாய்க் கொண்டு
சால— மிகவும்
கொடுமைகள்— கொடியதண்டங்களை
செய்யாநிற்பர்— பண்ணாநிற்பர்கள்;
மண்ணொடு நீரும்— பூமியும் ஜலமும்
எரியும்— அக்நியும்
காலும்— வாயுவும்
ஆகாசமும்— ஆகாசமுமாகிற பஞ்சபூதங்களும் [ளும்
மற்றும்— கார்யரூபமானஜகத்துத்தானும்
ஆகி— உனக்குப்ரகாரமாக
நின்றாய்— அவற்றுக்கு ப்ரகாரியாய்க்கொண்டு நின்றவனாய்

அண்ணலே— ஸர்வஸ்வாமியானவனே!
அரங்கத்தரவணைப்பள்ளியானே!—;
எண்ணலாம்போதே— அநுஸந்திக்கயோக்யதையுண்டான காலத்திலே
உன்— உன்னுடைய
நாமம் எல்லாம்— திருநாமங்களையெல்லாம்
எண்ணினேன் — எனக்கு தாரகமாகவும் போக்யமாகவு மநுஸந்தித்தேன்;
என்னை— பல்லாண்டு பாடுமவனான என்னை
நீ— தேவரீர்
என்றும்— எப்போதும்
குறிக்கொண்டு— திருவுள்ளம்பற்றி என்னை—;
காக்கவேண்டும்— ரக்ஷித்தருளவேணும்.

வ்யா. ஆறும்பாட்டு. தண்ணனவில்லை. மெத்தனவில்லை. உக்தி வ்ர்த்திகளெல்லாம் கடிநமாயத்திருப்பது. "கடுஞ்சொலார் கடியார்" என்னக்கடவதிறே. அன்றிக்கே, தண்ணனவாவது- தண்ணிதலாய், அது இல்லையென்கையாலே- நலிகையில் ஓவுதலில்லாமையைச் சொல்லுகிறது. ஒருகால்விட்டுப் பற்றுவதில்லையென்கை. நமன்றமர்கள். ப்ரதாநனான யமன்றானாகில் கண்குழிவுகண்டவாறே ஒருக்காலாக விட்டிருக்கவுங்கூடும்; இவர்கள் அவனுடைய படராகையாலே "அவன்சொன்னதில் ஒன்றும் தப்பாதே செய்யவேணும்" என்னும் நினைவாலே கண்பாராதே க்ரூரமாக நலியாநிற்பர்களாய்த்து. சாலக்கொடுமைகள் செய்யாநிற்பர். மிகவும் கொடிதான தண்டனைகள் பண்ணாநிற்பர்கள். அதாவது- இந்த தேஹவிச்லேஷத்துக்குமுன்னே, சிவந்தமயிரும் எரிந்த விழியும் பொறிபறக்கிற முகமும் நாமடிக்கொண்ட உதடுமான உக்ரவேஷத்தோடே, * சேவதக்குவாரைப்போலே, கையும் சூலமும் பாசமும் முதலானவற்றோடே வந்துநிற்கும் நிலைதன்னாலே வயிறு எரிகொளுந்தும்படி பண்ணுகையும், "நமன்றமர் பாசம்விட்டால் அலைப்பூணுண்ணும்" என்னும்படி இந்தசரீரந்தன்னை விடுவிக்கிறஸமயத்தில் அலைச்சல்படுகையும், பின்பு யாதநாசரீரத்திலே புகுரச்சொல்லி மோதுகையும், "பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றிப் பின்முன்னாக விழுப்பதன் முன்னம்" என்கிறபடியே வலியகயிற்றால் காலிலேகட்டித் தியங்கவடித்து தலைபின்னும் கால்முன்னுமாக யாம்யமார்க்கத்தாலே யிழுத்துக் கொண்டுபோகையும், நாய்களையேவித் துடைவழிகவருவிக்கையும், சூலத்தாலே பாய்கையும், முதலாகச்செய்யுங் கொடுமைகளுக்கு ஒரு முடிவில்லையிறே. "செய்யாநிற்பர்" என்கிற வர்த்தமாநத்தாலே உத்தரோத்தரம் செய்யும் கொடுமைகளையெல்லாம் சொல்லுகிறது.

மண்ணித்பார்தி. பூமியோடே ஜலமும் அக்நியும் வாயுவும் ஆகாசமுமாகிற ஜகத்காரணமான பூதபஞ்சகமுமாய், மற்றும் கார்யரூபமான ஜகத்துக்தாலும் " நீ " என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி உனக்கு ப்ரகாரமாக இவற்றுக்கு ப்ரகாரியாய்க்கொண்டு நின்றவனே. இத்தால் ஸர்வகாரணபூதனாய் ஸர்வப்ரகாரியாயிருக்கையாலே உனக்கு விதேயமல்லாததொன்று இல்லையிறே. ஆனபின்பு இந்த யமபடரால்வரும் நலிவை நீயே மாற்றவேணும். எண்ணலாம்போதே யுன்னாமமெல்லா மெண்ணினேன். இத்தால் தம்முடைய ப்ராப்யநிஷ்டையைச் சொல்லுகிறார். கரணங்கள் விதேயமாய் அநுஸந்திக்கலானபோதே, உன்னுடைய திருநாமமெல்லாம் எனக்கு தாரகமாகவும் போக்யமாகவும் அநுஸந்தித்தேன். நாராயணசப்தத்துக்குள்ளே ஸகலநாமங்களும் மந்தர்ப்பூதமாகையாலே, அதொன்றையும் சொல்லவே எல்லா நாமங்களையும் சொன்னாராவரிறே. இவர்தாம் அதொழிய வேறொன்றறியாரிறே; " நன்மைதீமைகளொன்றுமறியேன் நாரணனென்னு மித்தனையல்லால் " என்றும், " ஓவாதே நமோநாரணா வென்பன்" என்றுமிறே இவரிருப்பது. மங்களாசாஸநத்துக்கும் இது தானேயிறே இவர்க்கு வாசகம். " நமோநாராயணாயவென்று- பரமாத்மனைச் சூழ்ந்திருந்து பல்லாண்டு- ஏத்துவர் " என்றாரிறே. ஆகையால், இத்திருநாமமொழிய ஒருக்ஷணமும் தரிக்கமாட்டார். " உண்ணாநாள் பசியாவதொன்றில்லை- நமோநாரணாவென்றெண்ணாநாள்-எனக்கு- பட்டினிநாள் " என்னுமவரிறே. ஆக, இப்படி உன்னாமமெல்லா மெண்ணினேன்.

என்னைக் குறிக்கோண்டு. இப்படி உன்திருநாமத்தைச் சொல்லி உனக்கு மங்களாசாஸநம் பண்ணுதபோது க்ஷணகாலமும் தரிக்கமாட்டாதவென்னைத் திருவுள்ளம்பற்றி. என்றும். ஸர்வகாலத்திலும். இந்நிலைதான் இவர்க்கு காதாசித்கமன்றே. அண்ணலே. ஸர்வஸ்வாமியானவனே. இத்தலையிழவுபேறுகள் உன்னதாம்படியன்றோ குடற்றுடக்கிருப்பது. நீஎன்னைக் காக்கவேண்டும். இப்படியிருந்துள்ள நீ, கீழ்ச்சொன்ன புருஷார்த்தநிஷ்டையை யுடையேனான வென்னை, இப்புருஷார்த்தத்துக்கு விரோதியாக யமபடரால் வரும் நலிவில் அகப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். அரங்கத்தரவணைப் பள்ளியானே. இதுதான் நான் இன்று விண்ணப்பம் செய்யவேணுமோ, இதுக்கு முற்கோலிவந்தன்றோ தேவரீரிங்கே வந்து கண்வளர்ந்தருளுகிறது. ... ... ... ... ... ... சு.

மூ.—செஞ்சோன் மறைப்பொருளாகிநின்ற தேவர்களுயகனே யெம்மானே
எஞ்சலிலென்னுடை யின்னமுதே யேழுலகுமுடையா யென்னப்பா
வஞ்சவுருவி னமன்றமர்கள் வலிந்து நலிந்தென்னைப் பற்றும்போது
அஞ்சலமென்றென்னைக் காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே. எ.

பதவுரை.

செம்— செவ்விய
சொல்— சொல்லையுடைத்தான
மறை— வேதத்துக்கு
பொருள் ஆகிநின்ற—ப்ரதிபாத்யனாய்க்கொண்டுநின்றவனாய்
தேவர்கள்— நித்யஸூரிகளுக்கு
நாயகனே— தலைவனாய்
எம்மானே— எனக்குஸ்வாமியானவனே!
எஞ்சல் இல்— சுருங்குதலில்லாததாய்
இன்— பரமபோக்யமாய்
என்னுடை அமுதே — அம்ருதம்போலே எனக்கு ரஸாவஹனாக நின்றவனாய்
ஏழ் உலகும் உடையாய்— ஸப்தலோகங்களுக்கும் ஸ்வாமியாய்

என்— எனக்கு
அப்பா— உபகாரகனானவனே!
அரங்கத் தரவணைப் பள்ளியானே!—;
வஞ்சம் உருவில்— ஒருவர்க்கும் தெரியாத படி மறைத்துக் கொண்டுவரும் ரூபத்தையுடைய
நமன் தமர்கள்— படர்கள்
வலிந்து— பலாத்கரித்து
நலிந்து— ஹிம்ஸித்துக் கொண்டுவந்து
என்னை— என்னை
பற்றும்போது— பிடிக்கும்காலத்திலே
அஞ்சலம் என்று— 'அஞ்சாதே கொள்' என்று
என்னை காக்கவேண்டும்.

வ்யா. ஏழாம்பாட்டு. சேஞ்சோல் மறைப் போருளாகிநின்ற. செவ்விய சொல்லையுடைத்தான வேதத்தினுடைய அர்த்தபூதனாய்நின்ற. சொல்லுக்குச் செவ்வையாவது - யதாபூதவாதித்வம். நாஸ்திகரா யிருப்பார்க்கு ஸ்வார்த்தத்தை மறைக்கையாலே, இத்தை "மறை" என்கிறது. இதுதான் பூர்வபாகமென்றும் உத்தரபாகமென்றும் இரண்டு கூறாய், அதில் பூர்வபாகம் கர்மப்ரதிபாதகமாய், உத்தரபாகம் ப்ரஹ்ம ப்ரதிபாதகமா யிருந்ததேயாகிலும், ஆராதந ஸ்வரூபத்தையும் ஆராத்யஸ்வரூபத்தையும் சொல்லுகிறதாகையாலே, (க) "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்கிறபடியே எல்லா வேதங்களுக்கும் இவனே ப்ரதிபாத்யன் என்னத்தட்டில்லையிறே. (உ) "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" என்னக்கடவதிறே. பூர்வபாகத்தில், இவனை ஸத்வாரகமாக ப்ரதிபாதியாநிற்கும்; அத்தைப் பற்றவிறே (ங) "ச்ருதி சிரஸி விதீப்தே" என்றருளிச்செய்தது. தேவர்கள்நாயகனே. (ச) "யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா:" என்கிற நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவனே. அவர்களுக்கு நிர்வாஹகனாகையாவது-(ரு) அஹ்ர்த ஸஹஜ தாஸ்யராகையாலே தன்னுடைய அநுபவகைங்கர்யங்களை யொழிய அரைக்ஷணமும் செல்லாதபடியாய், *அஸ்த்தாநே பயசங்கிகளாய்க்கொண்டு மங்களாசாஸநபரராய்ப் போருகிறவர்களுடைய ப்ரக்ருதி யறிந்து விநியோகங்கொண்டு போருகை. எம்மானே. அவர்களைப்போலே என்னையும் உன் திருவடிகளுக்குப் பரிவனாக்கி அடிமைகொண்டு போருகிறவனே. எஞ்சலி லென்னுடை யின்னமுதே. ப்ராக்ருதமான அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. எஞ்சல் - சுருங்கல். "இல்" என்பது இல்லாமை. அதாவது - தேசகாலங்களால் வரும் ஸங்கோசரஹிதமாயிருக்கை. அது எல்லாதேசத்திலு மின்றிக்கே எல்லாக் காலத்திலும் புஜிக்கவொண்ணாதபடியா யிருக்குமிறே. "என்னுடையமுது" என்கையாலே - புஜித்தார்க்கு, உடம்பைப் பூண்கட்டுமது போலன்றிக்கே உயிரைப் பூண்கட்டுமதாயிருக்கை. "இன்னமுது" என்கையாலே - புஜித்தார்க்கு, த்ருப்தியைப் பிறப்பிக்குமது போலன்றிக்கே, "அப்பொழுதைக் கப்பொழுதென்னாரவமுதம்" என்கிறபடியே-புஜிக்கபுஜிக்க மேன்மேலென த்ருஷ்ணையை விளைக்குமதாயிருக்கை. கீழ்ச்சொன்ன நித்யஸூரிகளும், "அப்பால் முதலாய்நின்ற அளப்பரியவாரமுது" என்று-இவ்வம்ருதத்தையிறே புஜிப்பது. அவ்வம்ருதந்தான் "அரங்கமேய வந்தணன்" என்னும்படி ஆஸந்நமாய்த்தே இவர்க்கு. ஏழுலகுமுடையாய். இத்தால் - லீலாவிபூதி யோகத்தைச் சொல்லுகிறது. (சா) "பதிம் விச்வஸ்ய" என்கிறபடியே - ஸமஸ்த லோகங்களுக்கும் கடவனான ஸ்வாமியானவனே. என்னப்பா. இங்கும் ஒரு கூறுண்டே இவர்க்கு. ஆந் -

(க) "வேதைச்ச ஸர்வை ரஹமேவவேத்ய:" (உ) "ஸர்வேவேதாயத்பதமாமநந்தி"
(ங) "ச்ருதி சிரஸிவிதீப்தே" (ச) "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்தி தேவா:"
(சா) "பதிம் விச்வஸ்ய."

ராகரிகராகைகயாலே இரண்டிடத்திலும் மங்வய முண்டிறே. * பொருளல்லாத வென்னைப் பொருளாக்குகையாலே எனக்கு ஸத்தாகாரணமானவனே. வஞ்சவுருவின் நமன்றமர்கள். தங்கள் வரவு ஒருவருக்கும் தெரியாதபடி ரூபத்தை மறைத்துக்கொண்டு வரும் யமபடரானவர்கள். வலிந்து நலிந்தென்னைப் பற்றும்போது. பலாத்கரித்து பிடித்துக்கொண்டுவந்து என்னைப் பிடிக்கும்போது. அஞ்சலமென்றென்னைக் காக்கவேண்டும். 'அஞ்சாதேகொள்' என்று உன் திருமிடற்றோசை கேட்கும்படி யருளிச்செய்து, கீழ்ச்சொன்னபடியே உன்னை யநுபவித்து உனக்கு மங்களாசாஸநம் பண்ணுதபோது தரிக்கமாட்டாத வென்னை, இப்புருஷார்த்தத்தைக் கலக்கும் யமபடரால்வரும் பாதையில் அங்வயியாதபடி ரக்ஷித்தருளவேணும். அரங்கத்தரவணைப் பள்ளியானே. இப்படி ரக்ஷிக்கைக்காகவன்றோ கீழ்ச்சொன்ன இரண்டு விபூதியிலும் வ்யாவர்த்தமாய்க்கொண்டு த்ர்தியவிபூதியான திருவரங்கத் திருப்பதியிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. ... ... ... ... ... ... ... ... ...எ.

மூ.—நானேதுமுன் மாயமொன்றறியே னமன்றமர்பற்றி நலிந்திட்டிந்த
ஊனேபுகேயென்று மோதும்போதங்குன்னை நானொன்று நினைக்கமாட்டேன்
வானேய்வானவர்தங்களீசா மதுரைப்பிறந்த மாமாயனேயென்
னானாய்நீ யென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே. அ.

பதவுரை.

நான்— அடியேன்
உன்— ஸர்வசக்தனான உன்னுடைய
மாயம்— மாயைகளில்
ஏதும் ஒன்றும்— யாதொன்றும்
அறியேன்— அறியமாட்டேன்;
நமன் தமர்— யமபடரானவர்கள்
பற்றி— பிடித்து
நலிந்திட்டு— இந்தசரீரத்தோடேநலியத்தக்க தெல்லாம் நலிந்து (பின்பு,)
இந்த ஊன்— 'இந்த யாதநாசரீரத்திலே
புகு என்று— ப்ரவேசி' என்று
மோதும்போது— அடிக்குங்காலத்திலே
அங்கு — அத்தசையில்
உன்னை— தேவரீரை
நான்— அடியேன்
ஒன்றும்— ஒருவகையாலும்
நினைக்கமாட்டேன் — ஸ்மரிக்கமாட்டேன்;
வான்— பரமபதத்திலே
ஏய்— பொருந்திவர்த்திக்கிற
வானவர் தங்கள்— நித்யமுக்தர்க்கு
ஈசா— தலைவனாய்
மதுரை— ஸ்ரீமதுரையிலே
பிறந்த— அவதரித்தருளின
மா மாயனே — மிக்கஆச்சர்யசக்தியையுடையனாய்
என்— எனக்கு
ஆனாய்— பரதந்த்ரப்பட்டொழுகும்ஆனை போலேவசீகர்தனாய்
அரங்கத்தரவணைப்பள்ளியானே!—;
நீ—ஸர்வரக்ஷகனான நீ
என்னை காக்கவேண்டும்.

வ்யா. எட்டாம்பாட்டு. நானேதுமுன் மாயம்... அதீதாநாகதங்களில் ஒன்றுமறியாத நான் ஸர்வசக்தியான உன்னுடைய மாயைகளிலேதேனு மொன்று மறியேன். இப்போது இவர் "உன்மாயம்" என்கிறது, "போமிடத்துன் திறத்தெத்தனையும் புகாவண்ணம்நிற்பதோர் மாயைவல்லை" என்று சொன்னதுபோலே யிருக்குமவற்றையிறே. அதாவது - கர்மாநு

குணமாக இச்சேதநர் விஷயத்தில் அவன் பண்ணிவைக்கும் வஞ்சநங்க ளநேகங்களிறே; அவையெல்லாம் அவன்றானறியு மத்தனையொழிய, எதிர்த்தலைக்குத் தெரியாதபடியிறே யிருப்பது; அத்தைப்பற்ற வருளிச்செய்கிறார். நமன்றமர்பற்றி நலிந்திட்டு. கர்மங்களைப் பத்தும்பத்தாகக் கணக்கிட்டு நலியக்கடவ யமபடரானவர்கள்,வந்து பிடிக்கிறபோதே எல்லா துக்கங்களும் விளையும்படி வந்துபிடித்து,வாசாமகோசரமாம்படி, இந்த சரீரத்தோடே நலியத்தக்கதெல்லாம் நலிந்து. இந்தவூனேபுகே யென்று மோதும்போது. அநந்தரம் யாதநாசரீரத்தைக்காட்டி "இந்த சரீரத்திலேபுகு" என்பர்களாய்த்து. "இந்தவூன்" என்று – விட்ட சரீரத்திற்காட்டில் ப்ரவேசிக்கிற சரீரத்தினுடைய கொடுமையைச் சொல்லுகிறது. அதாவது-(க)சேதநசேதநாதிகளிலும்விடக்கடவதன்றிக்கே அத்யந்ததுக்காவஹமாயிருக்குமிறே; அத்தைப்பற்றவிறே "யாதநாசரீரம் என்று பேராய்த்து. (உ) "யாதநா தீவ்ர வேதநா" என்னக்கடவதிறே. இப்படி யிருக்கிற சரீரத்தைக்காட்டி "இதிலேபுகு" என்றால், இவன் வெருவிப்பிற்காலியா நிற்குமிறே. "இதிலேபுகு" என்று கண்பாராதே மோதாநிற்பர்களாய்த்து. அதிலே ப்ரவேசிப்பிக்கவேணுமே யவர்களுக்கு, மேலுண்டான துக்கங்களையெல்லாம் இவனை யநுபவிப்பிக்க. இப்படி "இதிலேபுகு" என்று அவர்கள் மோதுங்காலத்தில். அங்குன்னை நானன்றும் நினைக்கமாட்டேன். அவ்விடத்தில், ஆபத்விமோசகனான உன்னை நான் ஒருப்ரகாரத்தாலும் ரக்ஷகனாக நினைக்கமாட்டேன். "அங்கேயும் நானுன்னை நினைக்கமாட்டேன்" என்று பாடமானபோது- அவ்விடத்தில் ஏகதேசமும் நானுன்னை நினைக்க மாட்டேனென்று பொருளாகக்கடவது. அவர்கள் நலிகிறநலிவிலே அகப்பட்டு மநஸ்ஸுகலங்குகிற தசையிலே தேவரீரை நினைக்கப்போமோ. வானேய்வானவர் தங்களீசா. பரமபதத்திலே பொருந்தி வர்த்திக்கிற நித்யமுக்தர்க்கு, ஸ்வரூபாநுரூபமான வடிமைகொள்ளும் நியந்தாவானவனே. ஏய்கை - பொருந்துகை. மதுரைப்பிறந்த மாமாயனே. அப்படி ஸர்வஸ்மாத்பரனா யிருந்துவைத்து இங்குள்ளாரை ஆட்கொள்ளுகைக்காக ஸ்ரீமதுரையிலே இதரஸஜாதீயனாய் வந்தவதரித்த ஆச்சர்யபூதனே. அங்கு நியந்தாவாய் நின்று ஆட்கொள்ளும்; இங்கு நியாம்யனாயிருந்து ஆட்கொள்ளும். "ஆட்கொள்ளத் தோன்றிய ஆயர்தம்கோ" என்றாரிறே. என்னானாய். தன்னுடைய ஸ்வாபாவிகமான பலத்தால் வந்த பெருமதிப்பைப்பாராதே, அல்பபலவிசிஷ்டனான பாகன்கையிலே வசீக்ர்தமான மத்தகஜம்போலே, மங்களாசாஸநபரனான வெனக்கு வசீக்ர்தனானவனே. நீயென்னைக் காக்கவேண்டும். ஸர்வரக்ஷகனான நீ, உனக்கு மங்களாசாஸநம் பண்ணாதபோது க்ஷணகாலமும் தரிக்கமாட்டாத வென்னை, இதுக்குவிக்நமாக யமபடர்பண்ணும் நலிவால்வந்த கலக்கத்தில் அந்வயியாதபடி ரக்ஷித்தருளவேணும். அரங்கத்தரவணைப் பள்ளியானே. பயிர்த்தலையிலே குடில்கட்டிக் கிடக்குமாபோலே, பரமபதாதிகளைவிட்டு கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது, அபிமாநாந்தர்ப் பூதரானவர்களை அழிவற நோக்குகைக்காகவன்றோ. ... ... ... ... ... ... ... அ.

மூ.—குன்றெடுத்தாநிரை காத்தவாயா கோநிரைமேய்த்தவனே யெம்மானே
அன்றுமுதலின்றறுதியா வாதியஞ்சோதி மறந்தறியேன்
நன்றுங்கொடிய நமன்றமர்கணலிந்து வலிந்தென்னைப் பற்றும்போ
தன்றங்குநீ யென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே. கூ.

(க) சேதநாசேதநாதி. (உ) "யாதநாதீவ்ரவேதநா".

பதவுரை.

குன்று— கோவர்த்தநபர்வதத்தை
எடுத்து— குடையாக எடுத்து
ஆநிரை— பசுக்களின் திரளை
காத்த— ரக்ஷித்தருளின
ஆயா— ஆயனாய்
கோ நிரை— பசுநிரையை
மேய்த்தவனே— மேய்த்தவனாய்
எம்மானே— எனக்குஸ்வாமியானவனாய்
அரங்கத்தரவணைப்பள்ளியானே!-;
அன்று முதல்— உனக்குப்பல்லாண்டுபாடு மவனாக்கிக்கொண்டநாள்தொடங்கி
இன்று அறுதியா— இன்றளவாக
ஆதி—ஸர்வகாரணபூதனான உன்னுடைய
அம்— விலக்ஷணமான
சோதி— தேஜஸ்ஸையுடைய திவ்யமங்களவிக்ரஹத்தை
மறந்தறியேன்— ஒருகாலும்மறந்ததில்லை;
நன்றும் கொடிய — மிகவும்கொடியரான
நமன் தமர்கள்— யமபடரானவர்கள்
என்னை— என்னை
நலிந்து— ஹிம்ஸித்து
வலிந்து— பலாத்கரித்து
பற்றும்போது— பிடிக்குங்காலமான
அன்று— அப்போது
அங்கு— அத்தசையிலே
நீ என்னைக்காக்கவேண்டும்.

வயா. ஒன்பதாம்பாட்டு. குன்றித்யாதி. இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தை வர்ஷித்தபோது, நின்றதொருமலையைக் குடையாகவெடுத்து, அந்த வர்ஷாபத்தில் ||ஈடுபடாதபடி பசுநிரையை ரக்ஷித்தஆயனானவனே. இதுதான், கோபகோபீஜநங்களை ரக்ஷித்ததுக்கு முபலக்ஷணம். ஆனால் அவர்கள்தன்னைச் சொல்லாதே, “ஆநிரைகாத்த ஆயா” என்று இத்தைச்சொல்லுவா னென்னென்னில்; எல்லாவற்றிலும் ப்ரதாந ரக்ஷ்யவர்க்கம் இவையேயாகத் திருவுள்ளம்பற்றி யிருக்கையாலே. ஆயா. *ஆயனாயன்றுகுன்ற மொன்றெடுத்தான் அரங்கமாநகரமர்ந்தானிறே. கோநிரைமேய்த்தவனே. ஆபத்தசையில் ரக்ஷித்தவளவன்றிக்கே, அவதாரத்தின் மெய்ப்பாட்டுக்கீடாக அல்லாத இடையரோபாதி கையிலே கோலெடுத்துப் பசுநிரைமேய்த்தவனே. “திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி” என்று பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் பசுநிரைமேய்க்க உகந்திறேயவதரித்தது. எம்மானே. இந்த குணசேஷ்டிதங்களாலே என்னை எழுதிக்கொண்டவனே. “அம்மானே” என்று பாடமாகில், ஸர்வஸ்வாமியானவனே என்று பொருளாகக்கடவது. அப்போது, கீழ்ச்சொன்ன ரக்ஷணத்துக்கடியான ப்ராப்தியைச் சொல்லுகிறது. அன்றுமுதல். *கருவரங்கத்துள் கிடந்தவன்றுமுதலென்னுதல்; திருப்பல்லாண்டுபாட ஸ்வீகரித்தவன்றுமுதலென்னுதல். இன்றறுதியா. இன்றளவாக. ஆதியஞ்சோதி மறந்தறியேன். ஸர்வகாரணமாய் விலக்ஷணதேஜோரூபமான உன்னுடைய விக்ரஹத்தை மறந்தறியேனென்னுதல்; ஸ்வகாரணபூதனான உன்னுடைய, விலக்ஷணமான தேஜஸ்ஸையுடைய விக்ரஹத்தை மறந்தறியேனென்னுதல். நன்றுங் கொடியநமன்றமர்கள். மிகவும் கொடிய யமபடரானவர்கள். “நன்றும்” என்றது- மிகவும் என்றபடி. நலிந்துவலிந்தென்னைப் பற்றும்போது. நலிந்துகொண்டு பலாத்கரித்து என்னைப் பிடிக்கும்போது. அன்றங்குநீ என்னைக் காக்கவேண்டும். அவர்கள் நலியுங்காலத்திலே, அவ்விடத்திலே சேஷியாய் ரக்ஷகனான நீ; உன்பக்கல் விஸ்ம்ருதியின்றிக்கே, மங்களாசாஸநபரனாய்க்கொண்டு போருமென்னை, இப்புருஷார்த்தத்துக்கு விரோதியானவர்கள் நலிவில் அகப்

|| ஈடுபடாதபடி - துவளாதபடி.

படாதபடி ரக்ஷித்தருளவேணும். அரங்கத்தரவணைப் பள்ளியானே. " அரவணைமேல் பேரா யற்காட்பட்டார்பேர்-நமன்றமரால்ஆராயப்பட்டறியார் " என்னும்படி "நமன்றமரென்றமவை விவப்பெறுவாரலர்" என்று அபிமானித்து நோக்கிக்கொண்டுபோரும் தேவரீருடைய அபிமானாந்தர்ப்பூதரானவர்களுக்கு இதுதான் வருகைக்கு ப்ரஸங்கமுண்டோ. என்னுமிடம் அதிசங்காமூலமான கலக்கத்தால்வந்த பயத்தாலே அடியேன் விண்ணப்பம்செய்த விதத்தையன்றோ. ... ... ... ... ... கூ.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—மாயவனை மதுசூதனனை மாதவனை மறையோர்க ளேத்தும்
ஆயர்களேற்றினை யச்சுதனை யரங்கத்தரவணைப் பள்ளியானை
வேயர்புகழ் வில்லிபுத்தூர் மன் விட்டுசித்தன்சொன்ன மாலைபத்தும்
தூயமனத்தனராகி வல்லார் தூமணிவண்ணனுக் காளர்தாமே. ௰.

பதவுரை.

மாயவனை— ஆச்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவனாய்.
மதுசூதனனை— மதுவை நிரஸித்தவனாய்.
மாதவனை— ஸ்ரியபதியாய்
மறையோர்கள்— வைதிகர்களால்
ஏத்தும்— ஸ்துதிக்கும்படியானவனாய்
ஆயர்கள்— இடையர்களுக்கெல்லாம்
ஏற்றினை— தலைவனுனமேனாணிப்பையுடையனாய்.
அச்சுதனை—அடுத்தாரை ஒருக்காலும் நழுவவிடாதவனாய்
அரங்கத்து— திருவரங்கத்திலே
அரவு— திருவனந்தாழ்வானாகிற
அணை— திருப்படுக்கையிலே
பள்ளியானை—பள்ளிகொண்டருளுகிற அழகிய மணவாளன் விஷயமாக
வேயர்— தாம் திருவவதரித்தகுடியிலுள்ளாரெல்லாரும்
புகழ்— புகழும்படியாயிருப்பாராய்
வில்லிபுத்தூர்— ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
மன்— நிர்வாஹகரான
விட்டுசித்தன்- பெரியாழ்வார்
சொன்ன- அருளிச்செய்த
மாலை- சொல்மாலையான
பத்தும்— பத்துப்பாட்டையும்
தூய- பரிசுத்தமான
மனத்தனர் ஆகி- மநஸ்ஸையுடையராய்க் [கொண்டு
வல்லார்தாம்- அப்யஸிக்கவல்லவர்கள்
தூ— பழிப்பற்ற
மணி— நீலரத்நம்போன்ற
வண்ணனுக்கு — வடிவழகையுடையவனுக்கு
ஆளர்— அடிமைசெய்யப்பெறுவர்.

வ்யா. மாயவனை. ஆச்சர்யரூபகுண சேஷ்டிதங்களையுடையவனை. இத்தால் விக்ரஹகுணமான ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களாலும், ஆத்மகுணமான வாத்ஸல்ய ஸௌசீல்ய ஸௌலப்யாதிகளாலும் ஆச்ரிதாகர்ஷணார்த்தமான மனோஹாரிசேஷ்டிதங்களாலும் அநுபவிக்குகளான ப்ரேமயுக்தர்க்கு அநவரதமங்களாசாஸநம் பண்ணவேண்டும்படியான வைலக்ஷண்யத்தையுடையவனென்கை. மதுசூதனனை. அநுபவிப்பார்க்குவரும் விரோதிகளை, மதுவை நிரஸித்தாற்போலே நிரஸித்துக்கொடுக்குமவனை. இத்தால் அநுபவவிரோதியான ஸம்ஸ்லேஷணத்துக்கு

அஞ்சவேண்டாதபடியான விஷயமென்கை. (க) " வரிஹாஸ்யே-ஸகூநவஹோ " என்று யமன்றானும் நடுங்கும்படியான விஷயமிறே. மாதவனை. ஆச்ரிதரானவர்களுக்கு உபாயதசையில் புருஷகாரபூதையாய், உபேயதசையில் ப்ராப்ய பூதையாயிருக்கும் பெரிய பிராட்டியாருக்கு வல்லபனானவனை. இத்தால் அச்சேர்த்திக்கு என்வருகிறதோ! என்று ஸர்வகாலமும் " வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு " என்று மங்களாசாஸநம் பண்ணவேண்டும்படி யிருக்குமவனென்கை.

மறையோர்களேத்து மாயர்களேற்றினை. அபௌருஷேயமாய் நித்ய நிர்தோஷமாய் பகவத்வைபவயாதாத்ம்ய ப்ரதிபாதகமாயிருந்துள்ள வேதத்தினுடைய தாத்பர்யத்தை யறிந்திருக்குமவர்கள், பரத்வத்திலுங்காட்டில் நீர்மையிலேயீடுபட்டு அநவரதம் ஸ்துதிக்கும்படி ஸ்ரீநந்தகோபர் திருமகனாய்க்கொண்டு, கோபர்க்கெல்லாம் தலைவனாகையால்வந்த மேன்மையை யுடையவனை. மேன்மைக்கு " அமரரேறு " என்னுமாபோலேயிறே, நீர்மைக்கு " ஆயர்களேறு " என்கிறவிது. பெரியபெருமாளை க்ருஷ்ணாவதாரமாகவிறே நம் பூர்வாசார்யர்கள் அநுஸந்திப்பது. " கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் என்னுள்ளங் கவர்ந்தானை " என்றாரிறே திருப்பாணாழ்வார். திருப்பவளத்தை மோந்துபார்த்தால் இப்போதும் வெண்ணெய் மணக்கு மாய்த்து. (க) " கஸ்தூரீ திலகம் லலாட பலகே வக்ஷஸ்தலே கௌஸ்துபம் நாஸாக்ரே நவமௌக்திகம் கரதலே வேணும் கரே கங்கணம் " என்று - " யசோதைப்பிராட்டி பிள்ளைப்பணியாகச்சாத்தின திருவாபரணம் இப்போதும் பெரியபெருமாள் திருக்கழுத்திலே கிடக்கிறது " என்று கண்டநுபவித்தாரிறே பட்டர். ஆகையால் இவ்விடத்தில் " மறையோர்கள் " என்கிறது - திருப்பாணாழ்வார், பட்டர் போல்வாரானவர்களை. அச்சுதனை. ஆச்ரிதரை ஒருக்காலும் நழுவவிடாதவனை. " பச்சைமாமலைபோல்மேனி பவளவாய்கமலச் செங்கணச்சுதா " என்றாரிறே - தொண்டரடிப்பொடியாழ்வார். " அச்சுதா " என்றவநந்தரம், " ஆயர்தங்கொழுந்தே " என்று மருளிச்செய்தாரிறே. அரங்கத்தரவணைப் பள்ளியானை. உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் ப்ரதாநமாய், பெரியபிராட்டியார்க்கு நர்த்த ஸ்தாநமாகையாலே, " ரங்கம் " என்கிற திருநாமத்தை யுடைத்தாயிருக்கிற கோயிலிலே, மென்மை குளிர்த்தி நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே, கீழ்ச்சொன்ன குணங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி பள்ளிகொண்டருளுகிறவனை. வேயர்புகழ் வில்லிபுத்தூர்மன் விட்டுசித்தன். தாம் திருவவதரித்த குடியிலுள்ளாரெல்லாரும், தம்முடைய வைபவத்தைச்சொல்லிப் புகழும்படியாயிருப்பாராய், ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய், ஸர்வவ்யாபகனான ஸர்வேச்வரனை, * அரவத்தமளியினோடும் * தந்திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு, * உறகலுறகல் * படியே மங்களாசாஸநம் பண்ணும் பெரியாழ்வார் சொன்னமாலைப்பத்தும் அநுபவத்துக்கும் மங்களாசாஸநத்துக்கும் விரோதியானவற்றைப் போக்கிக் கொள்ளுகைக்காக அருளிச்செய்த சப்தஸந்தர்ப்ப ரூபமான இப்பத்துப்பாட்டையும். தூயமனத்தனராகிவல்லார். ப்ராப்யாந்தரத்திலும் ப்ராபகாந்தரத்திலும் அந்வயமில்லாமையாலே நிர்தோஷாந்தக்கரணராய், இவ்வர்த்தத்திலே பொருந்தி அப்யஸிக்கவல்லவர்கள். தூமணிவண்ணனுக் காளர்தாமே.

(க) " பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் " (உ) " கஸ்தூரீதிலகம் லலாடபலகே வக்ஷஸ்தலே கௌஸ்துபம் நாஸாக்ரே நவமௌக்திகம் கரதலே வேணும் கரே கங்கணம் "

பழிப்பற்ற நீலமணிபோலேயிருக்கிற வடிவழகை யுடையவனுக்கு, "மணிவண்ணா வுன் சேவடி செவ்விதிருக்காப்பு" என்று ஸர்வகாலமும் மங்களாசாஸநம் பண்ணுமவர்கள் தாங்களாவார். இங்கிருந்த நாளும் பெரியபெருமாள் திருவடிகளிலே மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டிருந்து, சரீராவஸாநத்தில் பரமபதத்திலேபோய் நித்யஸூரிகள் திரளிலேபுகுந்து "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்கிறபடியே அங்கே யெழுந்தருளியிருக்கிற விருப்பை யநுபவித்து, காலதத்வ முள்ளதனையும் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டிருக்கப் பெறுவரென்கை. ... ... ... ... ... ... ம.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—துப்புச் சாமிடம் எல்லே ஒற்றைப் பையர தண்ணன செஞ்சோல் நானேது குன்று மாய வாக்கு.

ஆக திருமொழி-சஉ-க்கு, பாட்டு-சஉ0.

# ஐந்தாம்பத்து.

———(௦)———

கீழில் திருமொழியிலே— "சொல்லலாம்போதே யுன்நாமமெல்லாம் சொல்லினேன்" என்று திருநாமத்தின் போக்யதையை யநுபவித்து, "இத்தை அநாதிகாலம் இழக்கைக் கடியென்" என்று நிரூபித்தவாறே, அதுக்கு ஹேது, "இதரவிஷயங்களிலே 'ஆவியே யமுதே' என்று திரிகையாலே யிழந்தது" என்று வெறுத்து, இப்போது "ஆவியையரங்கமாலே" என்றும், "ஆவியேயமுதே யென்றநுருயிரனைய வெந்தாய்" என்றும், தப்பைப் பொறுத்தருளவேணும் என்று, பெரியபெருமாள் போக்யதையிலே தம்முடைய கரணத்ரயமும் மேல்விழுகிறபடியைச் சொல்லுகிறது. ... ... ... ... *

மூ.— வாக்குத்தூய்மை யிலாமையினாலே மாதவாவுன்னை வாய்க்கொள்ளமாட்டேன்
நாக்குநின்னையல்லா லறியாது நானதஞ்சுவ னேன்வசமன்று
மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலுமென் னாவினுக்காற்றேன்
காக்கைவாயிலுங் கட்டுரைகோள்வர் காரணா கருளக்கொடியானே. க.

பதவுரை.

மாதவா— ஸ்ரீய꞉பதியானவனே!
உன்னை— உன்னை
தூய்மை—ஸ்தோத்ரம்பண்ணத்தக்கபரிசுத்தி
வாக்கு— என் வாக்குக்கு
இலாமையினாலே— இல்லாமையாலே
வாய்க்கொள்ளமாட்டேன் – உன்னைஸ்தோத்ரம்பண்ண சக்தியற்றவனாயிராநின்றேன்;
நாக்கு— ரஸஜ்ஞமான நாக்கோவென்றால்
நின்னை அல்லால்—உன்னை அல்லது
அறியாது – வாய்க்கொள்ளவறியாது;

அது— அந்த நாக்கின் தோஷத்தைநினைத்து
நான்— நான்
அஞ்சுவன்— பயப்படாநின்றேன்;
என்வசம் அன்று— அந்தநாக்கானது என
-க்கு வச்யமன்று;
இவன்— ' இவன்
மூர்க்கு பேசுகின்றான் என்று — மூர்க்கர்பேசும் பாசுரத்தைப் பேசா நின்றான் ' என்று
முனிவாய் ஏலும்— கோபித்துக்கொள்வாயே யாகிலும்
என்— என்னுடைய
நாவினுக்கு— நாக்குக்கு
ஆற்றேன்— ஸஹிக்கப்போகாது;
காக்கை— காக்கையினுடைய
வாயிலும்— வாயினிடத்திலுண்டாகும்சொற்களையும்
கட்டுரை— (தங்களுக்கு) நல்லசொற்களாக
கொள்வர்—( அறிவுடையார் )கொள்ளாநின்றார்கள்;
( அப்படியே, )
காரணா— ஸர்வகாரணபூதனாய்
கருளன்— பெரியதிருவடியை
கொடியானே — த்வஜமாகவுடையவனே;
நீயுமென்சொல்லைக்கொண்டருளவேணுமென்கிறார்

வ்யா. முதற்பாட்டு. வாக்கித்யாதி. வாக்குக்கு அசுத்தியாவது-பகவத்ஸந்நிதியிலே அஸத்யம் சொல்லுகையும், ப்ரயோஜநத்தைக் ‡கணிசிக்கையும், பரஸ்தோத்ரம் பண்ணுகையும். "பாவியேன் பிழைத்தவாறு". வாக்கு- சொலவு. மாதவாவுன்னை வாய்க்கோள்ளமாட்டேன். திருநாமம் சொல்லுகைக்கு முடிந்தவதிகாரிகள் பிராட்டியும் நித்யஸூரிகளுமிறே. [''பாதனுந்தம்பி'' இத்யாதி.] உன்போக்யதைக்குத்தோற்று பெரியபிராட்டியார் தொடக்கமானார் சொல்லும் பாசுரத்தை, இதரவிஷயங்களின் போக்யதைக்குத்தோற்று ஸ்தோத்ரம் பண்ணின நாக்காலே சொல்லமாட்டேன். " மாட்டீராகில் தவிரும் " என்ன; நாக்குநின்னையல்லாலறியாது. ரஸமறிந்தநாக்கு, *.ஸர்வரஸனான நின்னையல்லாலறியாது. " அத்தால் வரும் குற்றமும் உம்மதன்றோ " என்ன; அது விஷயதோஷம். " அகலகில்லேன் " என்றது மார்வின் குற்றமானாற்போலே. "ஆனால் நீரும் நாக்கோடேகூடிச்சொல்லும்"என்ன, நானதஞ்சுவன். நாக்கின்தோஷத்தை யநுஸந்தித்து நான் அஞ்சாநின்றேன். அது ரஸஜ்ஞமாகையாலே மேல்விழாநின்றது, காணியான உம்முடைய வசமாக்கிறாலோவென்ன; அது என்வசமன்று. உன்வசம். " நாக்கு நின்னையல்லாலறியாது " என்பது, ''நானதஞ்சுவன்'' என்பதாகாநின்றீர், இது மூர்க்கர்சொல்லும் பாசுரமாயிராநின்றதீ!என்ன; மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலும். என்பாசுரத்தைப் பார்த்தால் மூர்க்கர்சொல்லும் பாசுரம்போலே தோற்றி, முனிகைக்கு யோக்யதையுண்டு; ஆகிலும் என்னாவினுக்காற்றேன். உன்முனிவுக்கு ஆற்றலாம், என்னாவுக்கு ஆற்றப்போகாது. ஆனால் அது நமக்கு அவத்யமாகாதோவென்ன; காக்கைவாயிலும் கட்டுரைகோள்வர். அறிவுடையார், குற்றமாகாதவளவன்றிக்கே குணமாகவும் கொள்ளுவர்கள். அது ஓரிடத்தேயிருந்து தனக்கு வேண்டினது பிதற்றிப்போகவும், அத்தை அறிவுடையார், " நமக்கு நன்மை சொல்லுகிறது " என்று கொள்ளுவர்களிறே. கட்டுரை- நற்சொல்லு. அப்படியே நான்வேண்டிற்றுச் சொன்னத்தையும் குணமாக்கிக்கொள்ளவேணுமென்ன: " நான் கைக்கொள்ளவேண்டுகிறதென் " என்ன; நீஸாபேக்ஷனாகையாலே|யென்கிறார் மேல்-காரணா கருளக்கோடியானே. ஜகத்தையுண்டாக்கிற்று

‡ இனிமேல்தொடங்கி பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்.

அவர்கள் பக்கலிலே ஒருகார்யங் கொள்ளுகைக்கிறே. [(க) "விசித்ராதேஹஸம்பத்தி:" "வாழ்த்துவார்பலராக" இத்யாதி.] ரக்ஷகத்வத்துக்குக் கொடிகட்டியன்றோ கிடக்கிறதென்கிறார்- காரணகருளக்கொடியானே. உடையவனுகையாலே எல்லாம் பொறுக்கவேணும். க.

மூ.—சழக்குநாக்கொடு புன்கவிசொன்னேன் சங்குசக்கரமேந்து கையானே
பிழைப்பராகிலுந் தம்மடியார்சொற்பொறுப்பது பெரியோர்கடனன்றே
விழிக்குங்கண்ணிலே னின்கண் மற்றல்லால் வேறொருவரோடென்மனம்பற்றுது
உழைக்கோர்புள்ளி மிகையன்றுகண்டா யூழியேழுலகுண்டுமிழ்ந்தானே. உ.

பதவுரை,

சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
சக்கரம்— திருவாழியாழ்வானையும்
ஏந்து— தரித்த
கையானே— திருக்கைகளையுடையவனே!
சழக்கு— உன்னையொழிந்தாரை ஸ்துதிக்கும்குற்றமுடைய
நாக்கொடு— நாக்கோடேகூட
புன்— குற்றங்கள் நிறைந்த
கவி— கவிகளை
சொன்னேன்— சொன்னேன்;
பிழைப்பர் ஆகிலும்— தப்பு செய்தார்களேயாகிலும்
தம் அடியார்— தம் அடியாருடைய
சொல்— சொல்லை
பொறுப்பது— பொறுத்துக்கொள்வது
பெரியோர்— பெருந்தன்மையுடையவர்களுக்கு
கடன் அன்றே— கடமையன்றோ;
நின்— தேவரீருடைய
கண் அல்லால்— கடாக்ஷமொழிய
மற்று விழிக்கும் கண் இலேன் — வேறொருரக்ஷகரை உடையேனல்லேன்;
(அன்றியும்,) [விலே]
வேறு ஒருவரோடு— மற்றொருவர் பக்க
என் மனம்— என்னுடைய மநஸ்ஸானது
பற்றுது— பொருந்தமாட்டாது;
உழைக்கு— புள்ளிமானுக்கு
ஓர் புள்ளி மிகை அன்று கண்டாய் — ஒரு புள்ளி ஏறினால் அதிகமாகாதுகிடாய்;
('இப்படி நீர் என்னை நிர்ப்பந்திக்கிறதென்? என்ன;)
ஊழி— ப்ரளயகாலத்தில்
ஏழ் உலகு— ஸப்தலோகங்களையும்
உண்டு— திருவயிற்றிலே வைத்து நோக்கி
உமிழ்ந்தானே— (பின்பு வெளிநாடுகாண) உமிழ்ந்தவனே!
இப்படி என்னையும் நோக்கவேணுமென்கிறார்.

வ்யா. இரண்டாம்பாட்டு. சழக்கு. பொல்லாங்கு. நாக்குக்கு தோஷமாவது - ஸ்வோத்கர்ஷம் சொல்லுகையும், பகவத்பாகவத ஸந்நிதியிலே அஸத்யஞ் சொல்லுகையும், பரஸ்தோத்ரம் பண்ணுகையும். புன்கவிசொன்னேன். ¶ கவிக்குக் குற்றமில்லை, நான்சொல்லுகையாலே குற்றம். சொன்னேன். நெஞ்சாலே நினைக்கையேபிடித்து அவத்யமாயிருக்க; சொல்லுவதுஞ் செய்தேன். சங்குசக்கரமேந்துகையானே. இப்படி அநுதபிக்கைக்கடி உன் ஸர்வாதிகத்வம்; அதுக்கு அடையாளமிறே கையிலேந்தின ஆழ்வார்கள். பிழைப்பராகிலுமித்யாதி. நம்பெருமையையும் உம்முடைய சிறுமையையும் பார்த்தால், பின்னைச்

(க) "விசித்ராதேஹஸம்பத்தி:" ¶ 'கவிக்கு' என்றது-கவிசொன்ன சொலவுக்கு என்றபடி.

சொல்லப் பெறுவீரோ வென்ன; பிழைப்புராகிலும். தப்பச்செய்தார்களேயாகிலும். தம்மடியார்சோல். அரங்கயார்ஹசேஷபூதர் சொன்ன சொல்லாகையாலே பெரியோர்க்குப் பொறுக்கைக்கு உசிதம், அடியாராகையாலும் பொறுக்கவேணும், பெருமையாலும் பொறுக்கவேணும். நாம் பொறுக்கிறோம், நம்மையொழிய ரக்ஷகர் உமக்குப் புறம்பு அற்றிருந்ததோவென்ன; விழிக்குங்கண்ணிலேன் நின்கண்மற்றல்லால். உன்னுடைய கடாக்ஷமொழிய, வேறு நோக்குகைக்கு ஒரு மறுவிழியுடையேனல்லேன்; உன்னையொழிய வேறொரு ரக்ஷகரையுடையேனல்லேன். நம்மைப்போலே ரக்ஷகருமாய் போக்யருமா யிருப்பாருண்டானல் பற்றக்குறையில்லையே என்ன; வேறொருவரோடென்மனம் பற்றுது. குணக்ர்ததாஸ்யமன்றிக்கே ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமாகையாலே, புறம்புபோகாது. உமக்குப் புறம்பு போக்கில்லையாகில், உம்மைக் கைக்கொண்டவாறே நமக்கு அவத்யமாகாதோவென்ன; உழைக்கோர்புள்ளி மிகையன்றுகண்டாய். புள்ளிமானுக்கு, ஒருபுள்ளி ஏறியென், குறைந்தென்; ஸர்வாத்மாக்களுடையவும் அபராதங்களைப் பொறுக்கிற வுனக்கு என்னுடைய அபராதம் பொறுக்கை அவத்யமாகப் புகுகிறதோ. குற்றவாளரை அங்கீகரிக்கையன்றோ உனக்கு நிரூபகம். "நாம் அப்படி அங்கீகரித்ததுண்டோ" என்ன; உண்டென்கிறார்-ஊழியேழுலகுண்டுமிழ்ந்தானே. ஸம்ஸாரிகளில் உனக்கு அபராதம் பண்ணுதிருப்பாரொருவருண்டோ, அவர்களபராதங்களைப் பாராதே யன்றோ அவர்களை வயிற்றிலேவைத்து ரக்ஷித்தது; அப்படியே என்னை ரக்ஷிக்கவேணுமென்கிறார். ... ... ... உ

அ. மூன்றும்பாட்டு. நன்மைதீமையித்யாதி. "காரணு" என்று - நம்முடைய ஸ்ர்ஷ்டிக்கு ப்ரயோஜநம் "வாழ்த்துவார் பலராக" என்றீர், அதுவும் மாருணும்படியன்றோ நம்முடைய படியென்ன; அது ஒக்கும்; அப்படியன்றே நான், "கோயிலில்வாழும் வைட்டணவன்" என்னும் வன்மைகண்டாயென்கிறார்.

மூ.—நன்மைதீமைக ளொன்றுமறியே னாரணுவென்னு மித்தனையல்லால்
புன்மையாலுன்னைப் புள்ளுவம்பேசிப் புகழ்வானன்று கண்டாய்திருமாலே
உன்னுமாறுன்னை யொன்றுமறியே னோவாதேநமோநாரணுவென்பன்
வன்மையாவதுன் கோயிலில்வாழும் வைட்டணவனேன்னும் வன்மைகண்டாயே.

பதவுரை.

திருமாலே— ஸ்ரீயப்பதியானவனே!
நாரணு என்னும் இத்தனை அல்லால் — 'நாரணு' என்கிற இதொன்றொழிய
நன்மை தீமைகள் ஒன்றும்— வேறொரு நன்மை தீமைகள் ஒன்றும்
அறியேன்— அறியமாட்டேன்;
உன்னை— தேவரீரை
புன்மையால்— ப்ரயோஜநத்தில் நசையாலே
புள்ளுவம் பேசி — வஞ்சநோக்திகளைச் சொல்லி
புகழ்வான் அன்று கண்டாய்— துதிக்குமவனன்றுகிடாய்;
உன்னை— உன்னை
உன்னும் ஆறு ஒன்றும்— நினைக்கத்தக்க வழியொன்றும்
அறியேன்— அறிகிறிலேன்;
ஓவாதே— நிரந்தரமாக
நமோநாரணு என்பன்— 'நமோநாராயணய' என்றுநின்றேன்;
(என்ன; - 'நீர் இங்ஙனே சொல்லாநின்றீர்; இது நல்லவன்மையாயிருந்ததீ!' என்ன;
வன்மை ஆவது — (எனக்குண்டான) வன்மையாவது

உன்— உன்னுடைய
கோயிலில்— கோயிலிலே
வாழும்— வாழ்கிற
வைட்டணவன் என்னும்— ஸ்ரீவைஷ்ணவன் என்கிற
வன்மைகண்டாய்— வன்மைகிடாய்என்கிருர்

வ்யா. நன்மையித்யாதி. நான் திருநாமம் சொல்லுகை அத்தலைக்கு நன்மையாய்த் தலைக்கட்டுகிறதோ, தீமையாய்த் தலைக்கட்டுகிறதோ, அறிகிறிலேன். இவனைப்பார்த்தால் தோஷமாய், அவனைப்பார்த்தால் குணமாயிருக்கும்; இத்தலையைப்பார்த்தால் அபராதமாய், அத்தலையைப் பார்த்தால் அபராதஸஹமாயிருக்கும். நாரணாவென்னு மித்தனையல்லால். "நல்கத்தானுகாதோ நாரணனைக் கண்டக்கால்" என்று - அபராத ஸஹத்வத்தைக் காட்டும் திருநாமமிறே. ஸம்ஸாரிகள் குற்றங்களைப் பொறுத்து, விடமாட்டாதே நிற்கிறவிடமிறே. புன்மையால். தண்மையாலே. உன்னை. ஸர்வாதிகனானவுன்னை. புள்ளுவம்பேசி. க்ர்த்ரிமம்சொல்லி. * என்கொள்வ னுன்னைவிட்டென்னும் வாசகங்கள் சொல்லுகிறேனல்லேன். புன்மை - ப்ரயோஜநத்தை ஆசைப்படுகை; நன்மை - மோக்ஷத்தை ஆசைப்படுகை. "பெருமக்கள்" என்று - * பேராளன் பேரோதும் பெரியோரிறே. "மாருணுவான் கோலத்தமர்கோன்." திருமாலே. "மைதிலியும் துதிசெய்ய நின்ற" என்று - ஸ்தோத்ரத்துக்கு அதிகாரி பிராட்டியிறே. ப்ரீதிக்குத்தோற்றுச் சொல்லுமவளிறே. "தன்னுகத்திருமங்கை" என்று - அவளுக்கு அநுபவம் ஸத்தாஸித்தியானுற்போலே, எனக்கும் திருநாமஞ்சொல்லுகை ஸத்தாஸித்தி. அன்றிக்கே, ஸர்வாதிகத்வம்; "வானவர்சிந்தையுள் வைத்துச் சொல்லும்செல்வன்." ப்ரயோஜநத்தோடே சொல்லில் பகவந்மந்த்ரங்களும் கழியுண்கிறதிறே, இதரபலங்களைவிட்டு மோக்ஷத்துக் குறுப்பாகச் சொல்லப்பாரும் என்ன; உன்னு மாறுன்னை யொன்றுமறியேன். சாஸ்த்ரோக்தமான நிரந்தர ஸ்ம்ர்திபண்ண வறியேன். ஓவாதே நமோநாரணாவென்பன். ப்ரயோஜநம் பெற்றவாறே குலையும் ஐச்வர்யகாமர்க்கு; அங்கி கைப்பட்டவாறே குலையும் உபாஸகர்க்கு; இதுதானே ப்ரயோஜநமாகையாலே, ப்ரபந்நர்க்குக் குலையாது. ஓவாதே. இதுமாறினுல் எனக்கு ஸத்தைகுலையும். சொல்லாத போது ஸத்தை குலையுமென்பது, சொல்லில் உனக்கு அவத்யம் என்பதாகாநின்றீர், நல்ல வன்மையாயிருந்ததி! என்ன; அவ்வன்மைக்குக் குறையென் என்கிருர்மேல் - உன்கோயிலி லித்யாதி. வன்மை - மிடுக்கு. "கோயிலில்வாழும்" என்று - புறம்புள்ள அபிமாநம் குலைகையாலும், தாம் அநந்யப்ரயோஜநராகையாலும், இவருடைய ராஜகுலமிருக்கிறபடி. கோயிலில்வாழும். (க) "ஸவஹிஷயவாஸி நஃ" "இவற்றின் புறத்தாளென்றெண்ணே" என்று - பகவதபிமாநமுள்ள தேசத்தே கிடக்கையிறே தங்களுக்குப் பேறுகனிணைத்திருப்பது. ¶ உன்னல் - நினைத்தல். ... ... ... ... ... ந.

அ.—நான்காம்பாட்டு. நேமை. கீழிற்பாட்டிலே "புன்மையாலுன்னைப் புள்ளுவம்பேசிப் புகழ்வானன்றுகண்டாய்" என்ற தம்முடைய அநந்யப்ரயோஜநத்வத்தை மேலிரண்டு பாட்டாலே யருளிச்செய்கிருர். கீழே - ப்ராப்தியையும் ரக்ஷகத்வத்தையுஞ் சொல்லிற்று; இப்பாட்டில் - அநந்யப்ரயோஜநத்வம் சொல்லுகிறது.

(க) "பவத்விஷயவாஸிநஃ" ¶ "உன்னுமாறு" என்கிறவிடத்தில்.

மூ.—நெடுமையா லுலகேழுமளந்தாய் நின்மலா நெடியாயடியேனைக்
குடிமைகொள்வதற் கையுறவேண்டா கூறைசோறிவை வேண்டுவதில்லை
அடிமையென்னுமக்கோயின்மையாலே யங்கங்கே யவைபோதருங்கண்டாய்
கொடுமைக்கஞ்சனைக்கொன்று நின்றாதைகோத்தவன்றளை கோள்விடுத்தானே.

பதவுரை.

நெடுமையால்— த்ரிவிக்ரமாவதாரத்தாலே
உலகு ஏழும்— உலகங்களையெல்லாம்
அளந்தாய்— திருவடிகளாலளந்து கொண்டவனாய்
நின்மலா— பரிசுத்தனாய்
நெடியாய்— ஸர்வாதிகனானவனாய் [னான
கொடுமை— க்ரூரகர்மங்களைச் செய்யுமவ
கஞ்சனை— கம்ஸனை
கொன்று— உயிர்க்கொலையாகக் கொன்று
நின்— உன்னுடைய
தாதை— தமப்பனான வஸுதேவருடைய
கோத்த— காலிலே பூட்டப்பட்ட
வன்— வலிய
தளை கோள்— விலங்கின் பூட்டை
விடுத்தானே— தறித்துப் போகட்டவனே!
அடியேனை— சேஷபூதனான என்னை
குடிமை கொள்வதற்கு— அடிமை கொள்வதற்கு
ஐயுறவேண்டா— ஸந்தேஹிக்கவேண்டா;
கூறை சோறு இவை— கூறையும் சோறுமாகிற இவற்றை
வேண்டுவது இல்லை— உன்னிடத்துப்பெறவேணுமென்று விரும்புகிறதில்லை;
அடிமை என்னும் — 'தாஸ்யம்' என்கிற
அக்கோயின்மையாலே— அப்படிப்பட்ட ராஜகுலம் புகுகையாலே
அவை— அந்தக் கூறையும் சோறும்
அங்கு அங்கே— அவ்வவ ஜந்மங்களிலே
போதரும் கண்டாய்— வருங்கிடாய்.

வ்யா. நெடுமையா லுலகேழுமளந்தாய். அபேக்ஷிக்கைக்குச் சிறியனானாற்போலே, அளக்கைக்கு நெடியனானபடி. ["ஓங்கியுலகளந்த" இத்யாதி.] ஏகரூபமான வடிவையிறே பரிணமிக்கப்பண்ணிற்றும், கொடுக்கும் கையைக்கொண்டு ஏற்றதுவும். நெடுமையான திருவடிகளைக் கொண்டல்லகாணும் அளந்தது, நெடுமையால். நின்மலா. பரப்ரயோஜநமாகையாலே கீழ்ச்சொன்ன விரண்டுதோஷமுமில்லை. நெடியாய். இந்நிலையிலே அநாச்ரிதர்க்குக் கிட்டவொண்ணாதே ஆச்ரிதர்க்குக் கிட்டலாயிருக்கும். [அமரர்க்கரியானைத் தமர்கட்கெளியானை] ப்ரயோஜநாந்தரபரர்க்கு அரியனாய் அநந்யப்ரயோஜநர்க்கு எளியனாயிருக்கும். அடியேனை. மஹாபலியைப்போலே ஔதார்ய மாசைப்பட்டவனல்ல, இந்த்ரனைப்போலே த்ரைலோக்யமாசைப்பட்டவனல்ல, என்ஸ்வரூபம் ஸபலமாக்கவமையும். குடிமை. அடிமைகொள்வதற்கு. என் ஸ்வரூபாநுரூபமான சேஷவ்ருத்தியைக் கைக்கொண்டருளவேணும். கொள்ளுமிடத்தில் ஐயுறவேண்டா. ஸ்வாதந்த்ர்யமும் ஸ்வப்ரயோஜநமுமுண்டென்று ஸந்தேஹிக்கவேண்டா, நான் அநந்யப்ரயோஜநன் என்ன; நீர் அநந்யப்ரயோஜநரானபடியென்? உமக்கு தேஹம் கிடந்ததாகில், அந்நபாநாதிகள் தாரகமாயிரா நின்றதாகிலென்ன; கூறைசோறிவை வேண்டுவதில்லை. நான் ராஜகுலம் புகுகையாலே, எனக்கு, அவ்வவகைங்கர்ய ரஸத்துக்குள்ளே எல்லா ரஸங்களுமுண்டு;—தன் ஸ்வரூபத்தை யாதொன்றாக நினைத்தான், அதுக்கீடாகவிறே தாரக போஷகாதிகளிருப்பது. தேஹாதிவிலக்ஷணனாகையாலே சப்தாதிகள் புருஷார்த்தமாக மாட்டாது, பாரதந்த்ர்யனாகையாலே ஸ்வாநுபவம் புருஷார்த்தமாக மாட்டாது, ஸ்வரூபம் நித்யமாகையாலே ஸ்வரூபவிச்சேதம் புருஷார்

த்தமாகமாட்டாது, நித்யஜ்ஞாந குணகனுகையாலே குணநாசம்புருஷார்த்த மாகமாட்டாது. இனி சேஷபூதனுக்கு சேஷவ்ர்த்தியே புருஷார்த்தமென்கிறார். ஆனால் நாம் உமக்குச் செய்யவேண்டுவதென் என்ன; அவற்றின் ஸங்கங்களையும் அதுக்கடியான கர்மங்களையும் போக்க வேணுமென்கிறார் மேல். இரண்டுக்கும் இரண்டு த்ர்ஷ்டாந்தம் - கோடுமைக் கஞ்ச னைக்கோன்று. * மக்களறுவரைக் கல்லிடைமோதின க்ரூரார்த்மாவைக் கொன்றாற்போலே அவற்றின் ஸங்கங்களைப் போக்கவேணும். நின் தாதை. * தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றினாற்போலே, அதுக்கடியான கர்மங்களையும் போக்கியருளவேணும். இவ்விடத் தில், கர்மங்களாவன - அவித்யா கர்ம வாஸநாருசிகளாலே கட்டுண்டிறே ப்ரக்ர்தி கிடக்கி றது, அத்தைவிடுவித்துத் தந்தருளவேணு மென்கிறார். கூறைசோறிவை வேண்டுவதில்லை. ஆசைப்படுவதில்லை யென்னுதல்; உன்னை அபேக்ஷிப்பதில்லை யென்னுதல். நீர் ஆசைப்படு வதும் அபேக்ஷிப்பதுமேதென்னில்; * அடிமையென்னுமக் கோயின்மையே ஆசைப்படுவ தும் அபேக்ஷிப்பது மென்னுதல். கோயின்மை - வேண்டப்பாடு; புருஷார்த்தம். அங்கங் கே - கூறைசோறிவை - போதரும். அங்கங்கே. எங்கேயிருக்கிலென்; தேவமநுஷ்யாதி ஜந்மந்தோறு மென்றுமாம். "அடிமை - போதரும்" என்று - யதாந்வயந்தானே பொ ருளாகவுமாம். "நின்னையேதான்வேண்டி" இத்யாதி. ... ... ௪

அ.—ஐந்தாம்பாட்டு. தோட்டமித்யாதி. கீழிற்பாட்டில் — "கூறைசோறிவை வேண்டுவதில்லை" என்று - தாரகபதார்த்தம் கைங்கர்ய ரஸத்துக்குள்ளே உண்டென்றார் இப்பாட்டில் - போஷக போக்யங்களும் உன் திருவடிகளை அநுபவிக்கிற ரஸத்துக்குள்ளே உண்டென்கிறார்.

மூ.—தோட்டமில்லவ ளாத்தொழுவோடைத் துடவையுங்கிணறு மிவையெல்லாம்
வாட்டமின்றியுன் பொன்னடிக்கீழே வளைப்பகம் வகுத்துக்கொண்டிருந்தேன்
நாட்டுமானிடத்தோடெனக்கரிது நச்சுவார்பலர் கேழலொன்றாகிக்
கோட்டுமண்கொண்ட கொள்கையினானே குஞ்சரம்வீழக் கொம்பொசித்தானே

பதவுரை.

| | |
|---|---|
| கேழல் ஒன்று ஆகி — ஒப்பற்ற வாராஹ ரூபியாய்க்கொண்டு | இல்லவள்— மனையாளும் |
| கோடு— தன் தம்ஷ்ட்ரையினாலே | ஆ— பசுக்களும் |
| மண்— பூமியை | தொழு— பசுக்கள் கட்டும் தொழுவமு |
| கொண்ட— உயர எடுத்தருளின [யனை | ஓடை— குளமும் |
| கொள்கையினானே— ஸ்வபாவத்தையுடை | துடவையும்— விளைநிலமும் |
| குஞ்சரம்— குவலயாபீடகஜமானது | கிணறும்— கிணறும் |
| வீழ— முடிந்துவிழும்படி | இவை எல்லாம் வாட்டம் இன்றி — இவற்றிலொன்று குறையாமல் |
| கொம்பு— அதன் கொம்பை | அகம்— நான் |
| ஒசித்தானே— முறித்தவனே! | வளைப்பு வகுத்துக் கொண்டு இருந்தேன் — திரளவகுத்துக் கொ ண்டிருந்தேன்; |
| உன்— தேவரீருடைய | எனக்கு— இப்படி 'எல்லாம்நீயே' எ ன்றிருக்கிற எனக் |
| பொன் அடி கீழ்— அழகிய திருவடிகளிலே, | நாடு— நாட்டிலுள்ள |
| தோட்டம்— தோட்டமும் | |

| | |
|---|---|
| மானிடத்தோடு— மநுஷ்யரோடு | பலர்— பலபேர் |
| அரிது— ஸஹவாஸம் செய்வது கஷ்டம்; | நச்சுவார்— இத்தை விரும்பா நிற்பர்கள். |

வ்யா. தோட்டம். கார்ஹஸ்த்யதர்ம மநுஷ்டிக்கைக்காக க்ர்ஷிபண்ணுந் தோட்டம். இல்லவள். க்ர்ஹிணி. ஆ. பசு. தொழு. பசு நிற்கிற ப்ரதேசம். ஓடை. குளம். துடவை. விளை நிலம். ; விளைநிலத்துக்கு ஹேதுவிறே குளம். கிணறும். தோட்டத்துக் குறுப்பாகக் கிணறும். இவையெல்லாம் வாட்டமின்றி. இவற்றிலொன்றும் குறையாமல். உன் பொன்னடிக்கீழே. நிரதிசயபோக்யமான உன்திருவடிகளிலே, இவற்றிலொன்றும் குறையாமல் திரள, வருத்துக்கொண்டிருந்தேன் - என்னெஞ்சாலே வளைத்துக்கொண்டிருந்தேன். அகம்- நான். வருத்து - பிரித்து. இனி உமக்கொரு குறையில்லையே யென்ன; ஒரு குறையுண்டு - நாட்டுமானிடத் தோடெனக்கரிது. உன்னை யொழியப்புறம்பே தாரகபோஷக போக்யங்களா யிருப்பாரோட்டை ஸஹவாஸம் எனக்கு துஸ்ஸஹம்; இத்தை ஆசைப் படுவார் பலர். கேழ்லொன்றாகிக் கோட்டுமண்கொண்ட. ஸர்வலோகங்களும் ப்ரளயத்திலே அகப்பட * ஊன்றி யிடந்தெடுத்து “ தானத்தே வைத்தானால் ” என்கிறபடியே ஸ்வஸ்தானத்திலே வைத்தானென்கை. கொள்கையினான். இதுதானே ஸ்வபாவமானவனென்கை. குஞ்சராதித்யாதி. குவலயாபீடத்தை நிரஸ்தமாம்படி கொம்பை யொசித்தவனே. இத்தால் பலித்தது - ஸம்ஸாரிகள் பக்கல் நின்றுமெடுத்து, ஸ்வஸ்தாநமான உன்திருவடிகளிலே வைத்து, அதுக்கு விரோதியான கர்மங்களையுங் கழித்துத் தரவேணுமென்கிறார். ரு.

அ. ஆறும்பாட்டு. கண்ணாவித்யாதி. கீழிற் பாட்டில்- தாரகாதிகளெல்லாம் அவன் திருவடிகளே என்றார்; ப்ரக்ர்தி கிடக்க அதுசெய்யப்போமோவென்ன; அதில் தமக்கு அந்வயமில்லாதபடியை இப்பாட்டிலே யருளிச்செய்கிறார்.

மூ.—கண்ணா நான்முகனைப்படைத்தானே காரணாகரியா யடியேனான்
உண்ணாநாள் பசியாவதொன்றில்லை யோவாதே நமோநாரணாவென்
றெண்ணாநாளு மிருக்கெசுர்ச் சாமவேதநாண்மலர்கொண்டுனபாதம்
நண்ணாநாளவை தத்துறுமாகிலன்றெனக்கவை பட்டினிநாளே. சு.

பதவுரை.

| | |
|---|---|
| கண்ணா— ஸர்வஸுலபனான க்ர்ஷ்ணனாய் | பசி ஆவது ஒன்று இல்லை— பசி உண்டாவதில்லை; |
| நால் முகனை— சதுர்முகப்ரஹ்மாவை | ஓவாதே— நிரந்தரமாக |
| படைத்தானே— ஸ்ர்ஷ்டித்தவனாய் | நமோநாரணா என்று— ‘நமோநாராயணாய’ என்று |
| காரணா— ப்ரஹ்மாவுக்கு முன்புண்டான ப்ராக்ர்த ஸ்ர்ஷ்டியைப் பண்ணினவனாய் | எண்ணா நாளும்— எண்ணாத நாளும் |
| கரியாய் — நீலமேகச்யாமளனாயிருக்குமவனே! | இருக்கு எசுர் சாமவேதம்— ரிக்யஜுஸ் ஸாமங்களாகிற வேதங்களைச்சொல்லி |
| அடியேன் நான்— உனக்கு அநந்யார்ஹ சேஷபூதனான நான் | நாள்— அப்போதலர்ந்த |
| உண்ணா நாள்— உண்ணாதவன்று | மலர்கொண்டு— புஷ்பங்களைப்பணிமாறி |

உன பாதம்— உன் திருவடிகளை
நண்ணா நாள்— நண்ணாத நாட்களும்
[ உண்ணா நாள்— (எனக்கு) உண்ணாத நாளாம்; ]
அவை — மந்த்ராநுஸந்தாநமும், புஷ்ப ஸமர்ப்பணமுமாகிற அவை
தத்துறும் ஆகில்— தட்டுப்பட்டால்
அன்று— அப்போது
அவை— அந்தநாட்கள்
எனக்கு— எனக்கு
பட்டினி நாள்—; பட்டினி விட்ட நாளாகும்.

வ்யா. கண்ணா. "க்ர்ஷ்ணனாய் வந்தவதரித்துத் தண்ணியரோடே நின்றான்" என்னும்படி ஸுலபனானவனே. நான்முகனைப் படைத்தானே. இப்படி ஸுலபனானவன் தானாரென்னில்; ப்ரஹ்மாவைத் திருவுந்தியிலே ஸ்ர்ஷ்டித்தவன். காரணா. ப்ரஹ்மாவுக்கு முன்புண்டான ப்ராக்ர்த ஸ்ர்ஷ்டியைப் பண்ணினவனே. கரியாய். காரணத்வமும் ஸௌலப்யமு மன்றிக்கே, துர்லபனானாலும் விடவொண்ணாத வடிவழகு. "காரணா-நான்முகனைப் படைத்தானே- கண்ணா- கரியாய்" என்றந்வயம். இது என்ஸ்வரூபம், உம்முடைய ஸ்வரூபமிருந்தபடி யென்னென்ன; அடியேன்நான். உனக்கு அநந்யார்ஹ சேஷபூதனானநான். ஆனாலும் தேஹங்கிடக்கையினாலே இதுக்கு தாரகமென்னென்னில்; உண்ணாநாள்பசியாவதொன்றில்லை. பசிப்பதெப்போதோ வென்னில்; ஓவாதே. மாறாதே. நமோநாராணா வென்றெண்ணாநாளும். "நமோநாராணா" என்கையாலே- தேஹாத்மாபிமாநத்தையுங் குலைத்துக்கொண்டு திருநாமத்தை யநுஸந்திக்கிறார். இருக்கெசுர்ச் சாமவேத நாண்மலர்கொண்டு. "நமோநாராணா" என்றது போராமே, பெருந்திருப்பாவாடையிலே மண்டுகிறார். திருமந்த்ரம் ஸங்க்ரஹமும், வேதம் விவரணமுமாயிறே யிருப்பது. "மாதவன்பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு." "அவைதத்துறுமாகில்" என்கையாலே அவை கூடாது. "உண்ணாநாள் பசியாவதொன்றில்லை" என்கையாலும், "ஓவாதே நமோநாராணா" என்கையாலும் கூடாது; கூடில், நாளும் அது, பட்டினியும் அது. நாண்மலர்கொண்டு நண்ணுகைக்கு ப்ரமாணம் - வேதம். "நாடாதமலர்நாடி". த்ர்ஷ்டாத்ர்ஷ்ட மிரண்டும் புறம்பே-ஸம்ஸாரிகளுக்கு; உபாயோபேயமிரண்டும் புறம்பே- ஸம்ஸாரிகளுக்கு; உபாஸகர்க்கு உபாயம் தங்கள் கையிலே; உபேயம் ஈச்வரன். உண்ணாநாள், உனபாதம் நண்ணாநாள்;- உண்ணும் நாள், உனபாதம் நண்ணும் நாள். பசிஆவது. பசிப்பதென்றபடி; ஓவாதேநண்ணும்நாள் பசிகெடுவது. ஓவாதேயெண்ணாநாள் இருக்கெசுர்ச்சாமவேத நாண்மலர்கொள்ளாநாள், அவன் கொள்ளாநாள். அவைதத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினிநாளே. தத்துறுகை- தட்டுப்படுகை. இத்தால்- மாறுமாகிலென்றபடி. தத்துறுமாகில்- மாறுபட்டப்படுமாகி லென்னவுமாம். மாறுபட்டுப்படுகையாவது-அநந்யப்ரயோஜநமாகையன்றிக்கே, ப்ரயோஜநாந்தரங்களைக் கணிசிக்கை. ... சு.

அ. ஏழாம்பாட்டு. வெள்ளைவெள்ளம். கீழிற்பாட்டில் "உண்ணாநாள் பசியாவதொன்றில்லை" என்றார்; இப்பாட்டில்- "துயிலணைகொள்ளேன்" என்கையாலே- உறக்கமுந்தானில்லை யென்கிறார்.

மூ.—வெள்ளை வெள்ளத்தின்மேலொரு பாம்பை மெத்தையாக விரித்ததன்மேலே
கள்ளநித்திரை கொள்கின்றமார்க்கங் காணலாங்கொலென் றாசையினாலே
உள்ளஞ்சோர வுகந்தெதிர்விம்மி யுரோமகூபங்களாய்க் கண்ணநீர்கள்
துள்ளஞ்சோரத் துயிலணைகொள்ளேன் சொல்லாயானுன்னைத் தத்துறுமாறே,

பதவுரை.

வெள்ளை— நிர்மலமான
வெள்ளத்தின் மேல்— ஜலத்தின் மேலே
ஒரு— ஒப்பற்ற
பாம்பை— திருவனந்தாழ்வானை
மெத்தை ஆக விரித்து — படுக்கையாக விரித்து
அதன்மேலே— அந்தப்படுக்கையின்மேலே
கள்ளம் நித்திரை கொள்கின்ற — யோகநித்ரை கொள்ளா நிற்கிற
மார்க்கம்— ப்ரகாரத்தை
காணலாம் கொல்— பார்க்கலாகுமோ
என் ஆசையினாலே— என்கிற ஆசையாலே
உள்ளம் சோர— நெஞ்சழியவும்
உகந்து— மிகக் களித்து
எதிர்— எதிரே
விம்மி— விம்மியும்
உரோம கூபங்கள் ஆய்— உடம்பெல்லாம் மயிர்க்குழி பெறியவும்
(அநுஸந்திக்கையாலே, உரு வெளித்தோற்றமாகிக் கையைநீட்டி அணைக்கத்தேடி, காணாமையால் வந்த அவஸாதத்தாலே,)
கண்ண நீர்கள்— கண்ணீரானது
துள்ளம் சோர— துளிசோர்ந்து
அணை— படுக்கையிலே
துயில் கொள்ளேன்— நித்ரைகொள்ளமாட்டாதவனாயிராநின்றேன்;
யான்— அடியேன்
உன்னை— தேவரீரை
தத்துறும் ஆறு— கிட்டும்வழி
சொல்லாய்— அருளிச்செய்யவேணும்.

வ்யா. வெள்ளைவெள்ளத்தின்மேல். நிர்மலமான ஜலத்தின்மேலே. ஒருபாம்பை. நாற்றம் மென்மை குளிர்த்தி தொடக்கமான குணங்களுக்கு ஆச்ரயமாகையாலே அத்விதீயமான பாம்பைப் படுக்கையாக விரித்து. அதன்மேலே. ப்ரஹ்ம ருத்ராதிகள், ‘படுக்கைவாய்ப்பாலே யுறங்குகிறான்’ என்னும்படியாய், “உலகெல்லாம் நன்கொடுங்கபோகணைவான்” என்னும்படி- கள்ளநித்திரைகொள்கின்ற. கண்வளராநின்ற, மார்க்கம் - வழி. அதாகிறது- இன்னது என்று அறிகிற ஜ்ஞாநம். காணலாங்கொலன் னாசையினாலே. காணவேணுமென்கிற*ஸ்நேஹத்தினாலே. உள்ளஞ்சோர. நெஞ்சழிய. “பாலாழிநீகிடக்கும் பண்பையாங் கேட்டேயுங், காலாழும் நெஞ்சழியும்.” உகந்தெதிர்விம்மி. ப்ரீத்யதிசயத்தாலே வார்த்தை சொல்லவொண்ணாதபடி எதிரே விம்மி. உரோமகூபங்களாய். உடம்பெல்லாம் மயிர்க் குழியெறிந்து இவ்வநுஸந்தாநம் ப்ரத்யக்ஷம் போலே ப்ரகாசித்து, கையைநீட்டியணைக்கத்தேடிக் காணாமையால் வந்த இழவாலே கண்ணீர் துளிசோர்ந்து. துயிலணைகொள்ளேன். படுக்கைச்சேர்த்தியை யநுஸந்தித்தேன், படுக்கையிலெனக்குப் பொருந்துகிறதில்லை. சொல்லாய் யானுன்னைத் தத்துறுமாறே. தத்துறுமாறு - கிட்டும்வழி. “கண்ணநீர்கள் துள்ளஞ்சோர” என்று அழுகைபோவது, அநுபவத்தாலே; அநுபவிப்பது, கிட்டினால். கிட்டுகைக்கு உபாயம் சிந்திக்கிற நீ, நான் கிட்டுகைக்கு சிந்திக்கிற உபாயம் சொல்லாய். நான் விமுகனானதசையிலும் என்னைச் சேர்த்துகொள்ளுகைக்கு உபாயம் சிந்திக்கிற நீ, நான் அபிமுகனான இத்தசையில் உன்னைக் கிட்டும் விரகு சொல்லலாகாதோ. “பாற்கடல்யோக நித்திரை சிந்தைசெய்த வெந்தாய் உன்னைச் சிந்தைசெய்துசெய்தே” என்று இவர் நினைவுக்கு அவன் நினைவிறே. ... ... ... ... எ.

அ.—எட்டாம்பாட்டு. வண்ணமால்வரையே. கீழிற்பாட்டிலே - கிட்டும்ப்ரகாரஞ் சொல்லாயென்றார்; இப்பாட்டில் - கிட்டிந்தனையும் ஸ்தோத்ரம் மாறாதபடி பண்ணியருளவேணுமென்கிறார்.

